# அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்...



## ...புகழ்த் தலப்பயணம்

மாண்புமிகு. **எம். ஜி. இராமச்சந்திரன்**

முதல்வர், தமிழக அரசு.

மாண்புமிகு. **இராம. வீரப்பன்**

செய்தி, அறநிலையத்துறை அமைச்சர்

தமிழக அரசு

**அறங்காவலர் குழு**

உ

முருகர் சரணம்

# அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்

(திருப்புகழ்-தலப்பயணம்)

ஆக்கியோர்

பேராசிரியர்-சேக்கிழார்தாசன்

**R. இராமசேஷன், M. A., B. Ed**

வலையப்பேட்டை R. கிருஷ்ணன், B. Com.,

முருகன் திருவருட் சங்கம், திருவல்லிக்கேணி சென்னை-5

பதிப்பு

அருள்மிகு சுவாமிநாதசுவாமி திருக்கோயில்

சுவாமிமலை :: தஞ்சை மாவட்டம்

612 302

**1981**

அச்சிட்டோர் : குருகுலம் பிரிண்டர்ஸ்,
வேதாரண்யம் 614810.

முதற் பதிப்பு : 1981

பிரதிகள் : 2000



விலை ரூ. 25-00

இந்நூல் முகப்பட்டையில் திகழும் அருணகிரி சுவாமிகள் திருவுருவம் திருச்செங்கோடு அர்த்தநாரீசர் கோயிலில் உள்ளது.

# காணிக்கை.

எம்மை ஈன்று, இறைநாட்டமும் இன்தமிழ்ச் சுவையும் ஊட்டிப் பொதுநலப்பணி புரியுமாறு ஊக்கி வாழ வைத்து மகிழும் எம் அன்னை

திருமதி. சீதாலெட்சுமி அம்மாள் அவர்களுக்கு இந்நூலைக் காணிக்கையாக்கி, எம்மையாளும் குருபரன் ஸ்ரீ சுவாமிநாதப் பெருமான் சீரடிகளில் இந்நூலைச் சமர்ப்பித்துப் பணிகின்றோம்.

ஆக்கியோர்.

# இந்நூலுள்ளே . . . . . .

**இராம. வீரப்பன்**
செய்தி - அறநிலையத்துறை
அமைச்சர்

தலைமைச் செயலகம்,
**சென்னை-600 009**
தேதி 8—8—1981

# அணிந்துரை

*

அருணகிரிநாதர் இயற்றிய 'திருப்புகழ்' தமிழ் மொழியின் பெருமைக்கு அணிசேர்க்கும் ஒரு அற்புதமான இசைத் தமிழ் இலக்கியமாகும். அதனால்தான் திருப்புகழை 'திருப்புகழ் அமுதம்' என அழைக்கிறார்கள்.

அருணகிரிநாதர், தமிழகமுழுதும் சுற்றி, தலயாத்திரை நடத்தி, ஆங்காங்கே தலப்பெருமைகளையும், அந்த அந்தத் தலங்களில் எழுந்தருளியுள்ள தமிழ்க் கடவுளாம் அழகு முருகனையும் போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளது திருப்புகழின் பெருஞ்சிறப்பாகும்.

முத்தமிழுக்கு நடுநாயகமாய் விளங்கும் இசைத் தமிழுக்கு இலக்கணம் வகுத்து, இலக்கியம் படைத்த பெருமை அருணகிரிநாதரையே சாரும். தமிழ் எத்தகைய இசையோடு இணைந்த மொழி என்பதும், தமிழ் இசை எத்தகைய தாள நயத்தோடு பிறந்தது என்பதையும் அருணகிரிநாதரின் திருப்புகழைப் போல் வேறு எந்த இசைப் பாடல்களும் இலக்கிய நயத்தோடு எடுத்துக்காட்டவில்லை. அத்தகைய அற்புத இசைத் தமிழ் இலக்கியமாம் திருப்புகழ் பாடல்களையும், அந்தப் பாடல் கள் பாடப்பட்டதற்கு அடிப்படையான திருத்தலங்களையும், அந்தத் திருத்தலங்களின் அழியாச் சிறப்புமிக்க வரலாறுகளை யும் கண்டறிந்து, திருப்புகழைப் படைத்த அருணகிரிநாதரைப் போலவே, சுற்றுப் பயணம் நடத்தி, ஒரு அருமையான ஆராய்ச்சி நூலை "அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்" என்ற பெயரில் பேராசிரியர்-சேக்கிழார்தாசன்-திரு. ஆர். இராமசேஷன் எம். ஏ., பி. எட். அவர்களும், அவர்தம் இளவல், வலயப்பேட்டை திரு. ஆர். கிருஷ்ணன், பி. காம். அவர்களும் படைத்திருப்பது பெரிதும் பாராட்டிற்குரியது.

அருணகிரிநாதரின் திருப்புகழ், நம் செந்தமிழ் மொழி யிலுள்ள கவிதை வகைகளிலேயே மிகவும் தனிச்சிறப்பான பெருமைகள் வாய்ந்தது. தாளநுட்பங்களும், சந்த பேதங்களும், மிக இனிமையான ஓசை நலன்களும், அழகிய பற்பல சொற்றொடர் அடுக்குகளும் கொண்டது. சித்திரகவித்துவம்

நிறைந்தது. வகை வகையான ஓசை நலன்கள் அமைந்து, கேட்பதற்கே இனிமையான இசைநலம் மிகுதியாகப் பெற்றது. அதனால் அவர் பாடிய திருப்புகழ், அவர் காலத்திலேயே நாடெங்கும் பரவிப் பெரிதும் போற்றப்பெற்றுள்ளது.

இந்நூலில் திருப்புகழ் பெற்ற திருமுருகன் தலங்களின் பெருமைகளும், மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பவற்றின் சிறப்புகளும் நன்கு விளக்கப்பெற்றிருக்கின்றன. அந்த அந்தத் தலங்களைப் பற்றிக் கூறும் நூல்களின் விவரங்களும், திருப்புகழ்ப் பாடல்களின் சுவைமிக்க பகுதிகளும், ஆங்காங்கே தரப் பெற்றிருக்கின்றன. திருப்புகழ்த் தலங்கள் அமைந்த மாவட்டத் தரைப்படங்கள் இணைக்கப்பெற்றிருக்கின்றன. நூலில் இடையிடையே புகழ்மிக்க தலங்களில் எழுந்தருளியுள்ள, திருமுருகனின் அழகிய சிறந்த வண்ணப் படங்கள் சேர்க்கப் பெற்றிருக்கின்றன. திருத்தமாகவும் அழகாகவும், சிறந்த முறையில் இந்நூல் அச்சிடப்பட்டிருக்கின்றது. இந்நூலைத் தொகுத்து உதவிய அருமைச் சகோதரர்கள் இருவருக்கும், தமிழ் மக்களின் அன்பும் நன்றியும் உரியனவாகும்.

பயன்மிக்க இந்த நல்ல நூலைச் சிறந்த முறையில் அச்சிட்டு வெளியிடுவதற்குத் தகுந்த ஏற்பாடுகள் செய்து உதவிய, சுவாமிமலை அருள்மிகு சுவாமிநாதசுவாமி திருக்கோயில் அறங்காவலர்குழு உறுப்பினர்களுக்கும், இதனைச் சிறப்பாக அச்சிட்டுத் தந்த வேதாரண்யம் கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுல அச்சக மேலாளர் – அறங்காவலர் திரு. வே. அப்பாக்குட்டி அவர்களுக்கும், என்னுடைய மனமார்ந்த பாராட்டுதலையும், அன்பையும் தெரிவித்துக்கொள்கிறேன். அறநெறியையும் அருள்நெறியையும் கடைப்பிடித்து ஒழுகும் அன்பர்களும், தமிழார்வம் மிக்கவர்களும், இந்நூலை வாங்கிக் கற்றுப் பயனடைய வேண்டும்.

"தமிழுக்கும் அமுதென்று பேர்" என்று பாடிய பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் இலக்கியத்திற்கு இலக்கணம் வகுத்துக் காட்டும் நூல் திருப்புகழ். இறைவனையே இசைவடிவமாகக் கண்ட தமிழ் மொழியில் இசைத் தமிழுக்கு இலக்கணம் வகுத்த நூல் திருப்புகழ். இயலும், இசையும், நாடகமும் இணைந்த முத்தமிழையும் இசைத்தமிழாய் இணைத்துக் காட்டும் நூல் திருப்புகழ்.

அந்தத் திருப்புகழுக்கு மேலும் புகழ் சேர்க்கும் பணியில் ஈடுபட்டு ஆராய்ச்சி நூலை வழங்கிய ஆசிரியர்கட்கும், வெளியிட்ட சுவாமிமலை அறங்காவலர் குழுவினர்க்கும் எனது இதயம் நிறைந்த நல்வாழ்த்துக்கள்.

(ஒ-ம்.) இராம. வீரப்பன்

# வாழ்த்துரை

திருமிகு யு. சுப்ரமணியன், இ. அ. ப.
ஆணையாளர்,
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை.

சென்னை—34
நாள்: 3—7—81

"சேக்கிழார் தாசன்" பேராசிரியர் ஆர். ராமசேஷன், எம். ஏ., பி. யிடி., அவர்தம் இளைய சகோதரர் கிருஷ்ணன், பி. காம்., ஆகிய இருவரும் சேர்ந்து எழுதியுள்ள "அருணகிரிநாதர் அடிச் சுவட்டில்" என்ற நூல் தமிழகத்தில் இந்து சமய நூல்களில் சிறப்பான இடம் பெறும் நூலாகும்.

அருளாலர் அருணகிரிநாதர் சென்று பாடிய தலங்களின் முழு விபரங்கள் இந்நூலில் அடங்கியுள்ளன. பல்வேறு திருப் பதிகங்களின் மூர்த்திகளின் திருஉருவப்படங்கள் அழகிய முறையில் இந்நூலில் சேர்க்கப்பட்டு நூலின் புனிதத்தன்மை உயர்த்தப் பட்டுள்ளது. இந்நூலை எழுதிய இரு சகோதரர்களின் புலமையை யும், சமயப்பற்றையும் நேரில் அறிவேன். இளையவராகிய திரு. கிருஷ்ணன், திருவல்லிக்கேணி முருகன் திருவருட்சங்கச் செயலாளர்களில் ஒருவராக இருந்து இந்து சமயப் பணியில் குறிப்பாக முருகக்கடவுள் வழிபாட்டில் கொண்டுள்ள ஈடுபாடு பாராட்டிற்குரியது. இசை ஞானமுள்ள திரு. கிருஷ்ணன் அருணகிரிநாதரின் தெய்வீகப் பாடல்களை மனமுருகிப் பாடுவதை கேட்க கேட்க இனிமையாக இருக்கும். நமது சமயக் காரியங்களிலும்,

தமிழ் இலக்கியத்திலும் அவர் காண்பிக்கின்ற ஆர்வமும், ஆற்றலும் வியக்கத்தக்கது. தன் வாழ்க்கை அலுவலில் உள்ள கடமைகளை யும், பொறுப்புகளையும் செவ்வனே நிறைவேற்றி, அதே காலத்தில், இச்சீரிய சமயத் தொண்டினையும் மேற்கொண்டு அவர் தன் உழைப்பின் திறனையும் இறை உணர்வையும் தெளிவு படுத்துகின்றார்.

ஆசிரியர்கள் இருவரும் பல்வேறு காலத்தில் சுற்றுப்பயணம் செய்து தமிழகத்தின் தொன்மையையும், மகிமையையும், கொண்டு நூற்றுக்கணக்கில் உள்ள ஆலயங்களுக்குச் சென்று வழிபாடு செய்து, நேரில் பெற்ற அநுபவத்தை துணைகொண்டு இந்நூலை அருமையாக எழுதியுள்ளார். பெருமைக்குரிய முயற்சியின் பலனாக உருவாகியுள்ள சிறப்புமிக்க இந்நூலை பழமையான முருகன் ஆலயங்களில் ஒன்றாக, தஞ்சைமாவட்டத்தில் விளங்கும் சுவாமிமலை ஆலயத்தின் சார்பில் வெளியிடுவது மிகவும் பொருத்தமாகும். இப் பணியை மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொண்டு நல்ல முறையில் இந்நூல் வெளிவர, இந்த ஆலயத்தின் அறங்காவலர் குழுவினரும், செயல் அலுவலரும் எடுத்துக்கொண்ட நடவடிக்கை போற்றுதற்குரியது.

சமய, இலக்கியப்பற்றுள்ள தமிழர்களுக்கு அருணகிரிநாதரின் அருட் பாடல்களால் சிறப்புற்று விளங்கும் தலங்கள் பற்றி பலனுள்ள விபரங்களை நூல் வடிவில் நமக்களித்து, தமிழகத்தின் தனிச் சிறப்பான "முருகன்" வழிபாட்டிற்கும் சமயப்புலவர் அருணகிரிநாதருக்கும், அரிய பணி செய்துள்ளனர் இந்நூலாசிரியர் கள். அவர்களை நான் உளமார பாராட்டுகின்றேன். வாழ்த்து கின்றேன். அவர்களும், அவர்களின் குடும்பத்தினரும் எல்லா நலமும் பெற்று நீடு வாழ முருகப்பெருமானின் அருள் வேண்டி வணங்குகின்றேன்.

**யு. சுப்ரமணியன்.**
**3—7—81**

# அணிந்துரை

அருள்மொழி அரசு.
திருமுருக. கிருபானந்த வாரியார் சுவாமிகள்

முருகப் பெருமானுடைய திருவருள் பெற்றவர்கள் பலர்; நக்கீரர், சிகண்டி, பொய்யாமொழி, ஔவையார், சிதம்பர முனிவர், இராமலிங்கர் முதலிய பல அடியவர்கள். ஆனால் முருகவேளின் ஞான மூறும் செங்கனி வாயால் பிரணவ ஞான உபதேசம் பெற்றவர்கள் மூவரேயாகும்; சிவபெருமான், அகத்தியர், அருணகிரிநாதர் இந்த மூவருக்கு முருகன் பிரணவத்தை உபதேசித்தருளினர்.

வேலா சரணம் சரணம் என்மேல் வெகுளாமர் இனி
மேலா யினும் கடைக்கண்பார் பருப்பத வேந்தன் மகள்
பாலா குறுமுனி யார்க்கும் திருப்புகழ் பண் ணவர்க்கும்
ஆலா லம் உண்டவர்க்கும் உபதேசித்த என் ஆண்டவனே.

தேவசிரேட்டர் சிவபெருமான்; முனிசிரேட்டர் அகத்தியர்; நரசிரேட்டர் அருணகிரிநாதர்.

ஆதலால் முருகனடியார்களில் மிகச்சிறந்தவர் அருணகிரிநாதர்

அருணகிரிநாதர் 16 ஆயிரம் திருப்புகழ்ப் பாடலால் முருகவேளை அலங்கரித்தார். திருப்புகழ் தெய்வமணங் கமழும் அற்புதமான சந்தத்தமிழ். நாற்றிசைகளில் உள்ள அடியவர்கள் இதனை மெச்சி ஓதுகின்றார்கள்.

"பூர்வ பச்சிம தெட்சிண உத்திர திக்குள பக்தர்கள் அற்புதம் என ஓதும், சித்ரகவித்துவ சத்தமிகுத்த திருப்புகழ் அடிகளால் இது புலனாகின்றது.

இத்தகைய அரிய தமிழ்மறையை ஆராய்ந்து— மக்கள் உணர்ந்து உய்யும் பொருட்டு, **"அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்"** என்ற இந்த நூல் மிகவும் அழகாக எழுதப் பெற்றிருப்பது பாராட்டுதற்குரியது. திருப்புகழ் பாடல் பெற்ற திருத்தலங்களின் மகிமையையும் அத்தலங்களின் வரலாறுகளையும், அவைகளின் வழி முதலியவைகளும் இந்நூல் தெளிவாக உணர்த்துகின்றன.

சேக்கிழார்தாசன், பேராசிரியர் என் ஆப்த அன்பர் திரு R. ராமசேஷன், M. A, B. Ed, அவர்கள் இதனை ஆய்ந்து தமது கூரிய சீரிய அறிவுத்திறனுல் எழுதியுதவியுள்ளார். வலையப்பேட்டை கிருஷ்ணன் அவர்கள் இந்த நூல் எழுதத் துணைசெய்தார்.

இந்த நூலைப் படிப்பவர்கட்குப் பலப்பல நுட்பங்கள் விளங்கும். இது ஒரு அறிவுச்சுரங்கமாகத் திகழ்கின்றது. இந்தச் சுரங்கத்தில் அநேக தத்துவ முத்துக்களும், ஞான ஒளிவீசுகின்ற உண்மை இரத்தினங்களும் கிடைக்கின்றன.

முருகனடியார்கட்கு இந்த நூல் ஒரு வரப்பிரசாதமாகவிளங்கும். இதனை எழுதி உதவிய அன்பர் ராமசேஷன் சிறந்த செம்மனச்செம்மல் ஆழ்ந்த இறையன்பும் அடக்கமும் சீலமும் உடையவர். வானேரும் போற்றும் முருகனருள் மணங்கமழும் இதனை ஏனேரும் ஓதி உய்வார்களாக.

முகாம்: புவனகிரி
26—6—81

அன்பன்,
**கிருபானந்தவாரி.**



ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிச்செய்த திருஎழுகூற்றிருக்கை

(தேர்வடிவில் அமைந்த சித்ரகவி)

அருள்மிகு சுவாமிநாதசுவாமி திருக்கோயில், சுவாமிமலை.

[illegible] சென்னை-5.

உ
முருகா சரணம்

## சாற்றுக்கவி

அருட்கவி - தவத்திரு.
**சாதுராம் ஸ்வாமிகள்,**
பொங்கி மடாலயம், நங்கைநல்லூர்
சென்னை - 600 061

முகாம்: கொடுக்கூர்
24—6—1981

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

1. *திருப்புகழ்நூல் அலங்காரம் அந்தாதி அநுபூதி*
*திருஎழு கூற்றின்*
*இருக்கைவேல் மயில்சேவல் விருத்தங்கள் திருவகுப்பென்*
*றிரண்டே டேழு*
*வருக்கநன்னூல் குஹவேட்கு நவமணிமா லைக்கிணையா*
*வனைந்து போற்றும்*
*குருக்கள்எம தருணைமுநி வாக்குக்கும் கருணைக்கும்*
*கூர்பேர் போனார்.*

2. *அன்னவர்தாம் பாரதத்தும் ஈழத்தும் பலதலங்கள்*
*அணைந்து பாக்கள்*
*சொன்னவராம் சந்தத்தில் ஸொந்தத்தில் அவர்வாக்கைத்*
*தொகுத்துச் சொன்னார்*
*பன்னரிய முருகவேள் பன்னிருமா திருமறைமுற்*
*பதுமு றைக்கண்*
*இன்னபத்துத் திருமுறைக்குள் அடங்குதுதி களைஆய்ந்தே*
*இரண்டு பேராய்*

3. ஆத்ரேயன் ராமஸே ஷப்பேர்ப்பே ராசிரியர்
அருண்மொழித்தே
ஸாஸ்த்ரியச் சேக்கிழார் தாஸன்எனும் பட்டத்தார்
தம்முன், தம்பின்
ஆத்ரேயன் வலயபேட் டைக்ருஷ்ணன் ஆம்இவர்கள்
அணைந் திணைந்தூர்
யாத்ராதி விளக் "கருண கிரிநாதர் அடிச்சுவட்டில்"
எழுதி யாத்தார்.

4. திருப்புகழ்கொள் தலப்பய்ணம் எனமறுபேர் கொளும்
அந்நூல் சிறப்பாய்ச் செய்தார்
குருப்புகழ்கொள் அருணகிரி நாதர்தரி சித்திசைத்துக்
கூறும் ஊர்பேர்
மருப்புகழ்மேன் மேன்மருவ வகைசெய்து தமதுசொந்த
வழிஆ ராய்ந்தே
கருப்புகலைக் களையவழி காண்போர்கள் அதுகண்டு
களித்துக் காண.

5. ஸோதரராம் இந்நூலின் ஆசிரியர் இவர்இருவர்
தொகுப்பும் கோப்பும்
ஆதரவாய் அடியவரைப் படிக்கவைக்கும்
பதிநடைபோம் ஆர்வம் ஊட்டும்
கோதறவே அருணகிரி யார்நூலில் பயிற்சிதந்து
கூடப்பாடப்
போதருநல் பக்தியொடு புத்திதரும் என்னில் இச்சொல்
புனைந்த தன்றே.

6. "திருப்புகழ்வேள் திருத்தலஆ ராய்ச்சிமணி"
எனராம சேஷ னுரைத்
திருப்புகழ்நூல் பெற்றதல ஆராய்ச்சித்திலகம் எனக்
க்ருஷ்ண னுரை
விருப்புறவே பட்டம்தந் துளமாரப் பாராட்டி
விளிப்போம் இன்னே-
குருப்பொருப்பன் தேவத்தா நத்தார்அச் சிட்டசெயல்
குணம்புகழ்ந்தே.

7. இந்நூலை வெளியீடு செயும்அறநி லயத்துறையோர்
இயல்பும் போற்றிக்
கைந்நூலா இதனைநம்ஆத் திகர்கூட்டம் கொள்க! எனக்
கற்க வேண்டிப்
பன்னூலைப் படிப்போரும் பாலஸுப்ரம் மண்யனது
பதிபோம் பாதை
நன்னூலாம் இந்நூலால் நயந்தறிந்து சென்றுகண்டு
நாளும்போற்ற.

8. வேண்டுவமால் உலகோரை; மேலும் வாழ்த்
துவம்வேலன் மேவும் ஊரை;
ஆண்டவனின் அடியவராம் அருணகிரி யாரை;
அவர் அருள்செய் வாக்கை;
மீண்டும்வாழ்த் துவம் "அருணகிரிநாதர்
அடிச்சுவட்டில்" மெய்ந்நூல் யாத்துப்
பூண்டபுகழ் மறைத்திருவார் ஸஹோதரரைப்
பதித்தோரைப் புகழ்ந்தி சைத்தே.

— ஸாதுராம்ஸ்வாமிகள்.
24—6—1981

உ
முருகன் துணை

# அணிந்துரை

வாகீசகலாநிதி
**கி. வா ஜகந்நாதன்,** M. A.

"காந்தமலை"
2, நார்ட்டன் முதல் தெரு,
சென்னை-600028
17—6—1981.

சிவபெருமான் எழுந்தருளிய திருத்தலங்களும் திருமால் கோயில் கொண்டுள்ள திருப் பதிகளும் தமிழ் நாட்டில் பல உள்ளன. சைவ சமயாசாரியர்களும் ஆழ்வார்களும் பாடிய தலங்கள் பெருமை பெற்று விளங்குகின்றன.

இந்த அருளாளர்களைப் போலவே முருகப் பெருமான் எழுந்தருளிய திருத்தலங்களுக் கெல்லாம் சென்று அற்புதமான திருப்புகழ்ப் பாடல்களைப் பாடியருளியவர் அருணகிரிநாதர். அவர் பாடியருளிய திருப்புகழ்ப் பாடல்கள் யாவும் இப்போது கிடைக்காவிட்டாலும், கிடைத்த பாடல்களைப் பார்த்தாலே அவர் பல தலங்களுக்குச் சென்று வழிபட்ட செய்தி விளங்கும்.

"அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்" என்ற இந்த நூல் அருணகிரிநாத சுவாமிகள் பாடிய தலங்களைப் பற்றி எழுதி யுள்ள சிறப்பைப் பெற்றது. மாவட்ட வாரியாக அத்தலங்களை வகுத்து அவற்றின் பெருமைகளை விரித்துரைக்கிறார்கள் இதனை எழுதியுள்ள ஆசிரியர்கள்.

மூலை முடுக்குகளிலுள்ள தலங்களுக்கும் சென்று அந்தத் தலங்களின் சிறப்புக்களை யெல்லாம் அறிந்தும், நூல்களின்

வாயிலாகப் பலவற்றை உணர்ந்தும் பல செய்திகளைத் தொகுத்து எழுதியிருக்கிறார்கள். ஒவ்வொரு தலத்திற்குமுரிய பல்வேறு சிறப்புக்களையும், அங்குள்ள மூர்த்தி, தலம், தீர்த்தங்களின் சிறப்பையும் விளக்கியிருக்கின்றனர். அத்தலங்களைப் பற்றிய நூல்கள் இன்னவை என்பதையும் குறிப்பிடுகின்றனர்.

இன்னதலம் என்று வரையறையாக இதுகாறும் தெரியாமல் இருந்த பல பதிகளைப் பற்றி ஆராய்ந்து காரணங்களுடன் அவற்றை எடுத்துக் காட்டுகின்றனர்.

திருப்புகழ் ஆராய்ச்சியும், தலப்பயணமும், கேட்டு அறிந்து தொகுக்கும் திறமையும் உடைய இவ்விருவருடைய முயற்சி பாராட்டத்தக்கது. தலங்களின் பெருமையைத் தெரிந்துகொள்ள விரும்பும் அன்பர்களுக்கு இது சிறந்த வழிகாட்டியாக உதவும். இன்ன தலத்துக்கு இன்ன வழியாகப் போகவேண்டும் என்ற குறிப்பும், அந்த அந்தத் தலங்கள் எந்த நிலையில் உள்ளன என்ற செய்தியும் தல தரிசனம் செய்பவர்களுக்கு மிகவும் பயன்படும். சில தலங்களில் உள்ள திருக்கோயில்கள் மிகவும் சிதிலம் அடைந்த நிலையில் இருப்பதை இந்நூலில் படிக்கும் போது மனம் வருந்துகிறது. இவ்வாறு திருக்கோயில்களைப் புறக்கணிக்கும் நிலை மாற வேண்டும். இறைவன் திருவருள் அதற்கு துணை நிற்க வேண்டும்.

இந்தநூலை நல்ல முறையில் எழுதிய அன்பர்கள் பாராட்டுதற்குரியவர்கள். அவர்கள் நலம் மேலும் மேலும் பெருக வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

கி. வா. ஜகந்நாதன்.

உ

முருகா சரணம்

*வள்ளிமண வாளன் மயிலேறும் வள்ளல்தனைப்*
*தெள்ளுதமி ழாற்புனைந்து சீர்பெறவே - உள்ளபடி*
*வைப்பாம் அருணகிரி வாழ்த்தும் திருப்புகழைக்*
*கற்பார் கரையேறு வார்.*

# முன்னுரை

*

உலக மக்கள் உய்வடைய உயர் பரம்பொருளைப் போற்றித் துதித்துப் பாடிப் பரவசமுற்று-இறைவனைத் தாமும் கண்டு, ஏனையோரும் காணுமாறு செய்த ஞானியர் வரிசையில், முருகவேளின் திருவருளைப் பருகி, அச்செந்தேனமுதை சந்தத் தமிழமுதாய் வாரி வழங்கிய அருணகிரிநாத சுவாமிகள் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றார். இந்நூற்றாண்டு செய்த தவப்பயனால் வள்ளிமலை ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள் திருப்புகழ் பரப்பும் அருட்பணி செய்துதவினார்கள். திருப்புகழ்ப் பாக்களை -சுவடிகளைத் தேடிப் பிடித்து, அச்சுவாகனமேற்றி இச்சகம் இன்புறச் செய்த வள்ளல் வடக்குப்பட்டு. த. சுப்பிரமணிய பிள்ளை அவர்களையும் முருகனடியார்கள் நன்றி கூறுவர் சிவஸ்தல மஞ்சரியையும் பிள்ளையவர்கள் பதிப்பித்து உதவினார் கள். இதைக் கண்ணுற்றதும் அருணகிரிநாத சுவாமிகள் பரவிய திருப்புகழ்த் தலங்களைத் தொகுத்து-ஏன் வெளியிடச் செய்யலாகாது என்ற எண்ணம் வள்ளி மணாளன் வான் கருணை யினால் உதித்தது.

வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்களின் திருக்குமாரராம் தணிகைமணி -டாக்டர், வ. சு. செங்கல்வராய பிள்ளையவர்கள்

திருமுறைகளுக்கும் திருப்புகழுக்கும் செய்துள்ள பணிகள் விரிக்கிற்பெருகும். அவர்களது முருகவேள் பன்னிரு திருமுறை தொகுதிகள் இப்பணிக்கு அடித்தளமாக அமைந்தது.

முருகவேள் தலங்களைச் சேகரிக்க 33 வினாக்களடங்கிய செய்தித்தொகுப்புப் படிவம் ஒன்றைத் தயாரித்து, அப்படிவத்தை நம் முருகன் திருவருட்சங்கத் தணிக்கையாளராக இருந்த திரு. K. சுப்பிரமணியன் B SC., B. L., (Incometax Officer Rtd.) அவர்களிடம் காட்டியபோது, அவர்கள் மகிழ்ந்து இப்படிவத்தினை 700 பிரதிகள் அச்சிட்டு உதவினார்கள்.

1977-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் வயலூர் சென்று, "திக்கது மதிக்கவரு குக்குடமும் ரக்ஷிதரு சிற்றடியும் முற்றிய பன்னிரு தோளும், செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்ப மொடு செப்பன எனக்கருள்கை மறவேனே" என்று நம் அருணகிரிநாதருக்குத் திருப்புகழ் பாடிட வழிகாட்டியருளிய பொய்யாக் கணபதி திருமுன்னர், அருணகிரிநாதரது அடிச் சுவட்டில் திருப்புகழ்த் தலங்களைப் பற்றிச் செய்திகளைச் சேகரித்துப் பயனுள்ள வகையில் பாரில் வழங்க வழிகாட்டி யருள வேண்டினேன்.

1977 டிசம்பர் தேனாம்பாக்கத்தில் காஞ்சி காமகோடி முனிபுங்காரைத் தரிசித்து இந்நூல் எழுதும் முயற்சிபற்றித் தெரிவித்த போது அவர்கள் நூல் இவ்வாறு அமையவேண்டு மென்று ஆசி வழங்கினார்கள். அவர்கள் காட்டிய வழியிலேயே இந்நூல் சிறப்பாக அமைந்துள்ளது குருவருள் விளைவேயாகும். 1978 டிசம்பரில் காஞ்சியில் காமகோடி பீடம் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் இந்நூல் உருவாவதற்குச் சேகரித்த செய்தித் தொகுப்புகளைத் திருக்கண் சார்த்தி மிகவும் பேரு வகை எய்தி, படித்துப் பாராட்டி, விரைவில் நூல் வெளிக் கொணர ஆசி வழங்கினார்கள். நம்மிடையே நடமாடும் தெய்வ மாக விளங்கும் காஞ்சிப் பெரியவர்களிருவரும் இந்நூல் தொடக்க முதலே ஆசி அருளியது கந்தவேள் தனிக் கருணையேயாம்.

நம் தமிழகத்தில் உள்ள பல திருப்புகழ் சங்கங்களில் முன் மாதிரியாகச் சில அரிய பணிகளை ஆற்றிவருவது நம் திருவல்லிக்கேணி முருகன் திருவருட்சங்கம் என்பதைப் பலரும் அறிவர். 1973-இல் இச்சங்கத்தில் சேர்ந்து இன்புறும் பேறு

எனக்குக் கிட்டியது. அதன்பின் பல தல யாத்திரைகளிலும் கலந்து கொண்டு வழிபடும் நற்பேற்றினால் தலக்குறிப்புகளைச் சேகரிக்கும் வழக்கத்தை மேற்கொண்டேன் அத்தொகுப்புகள் இப்பணிக்கு பேருதவி புரிந்தன.

முருகன் திருவருட் சங்கத்தினர் என்னை இப்பணியில் ஊக்குவித்தது முருகன் திருவருளே என்பதில் ஐயமில்லை. மக்கட்தொகை கணக்கெடுப்புத் துறையின் சார்பில் வெளி வந்துள்ள தமிழக-மாவட்டக் கோயில்கள் பற்றிய தொகுதி களைச் சங்கத்தில் வரவழைத்து, எனக்கு உதவினர். தமிழ்த் தாத்தா மகாமகோபாத்யாயா டாக்டர் ஐயரவர்களின் பெயரர் திரு. K. சுப்பிரமணியஐயர் B. A., அவர்கள் எனக்கு அவ்வப்போது வழிகாட்டி உதவினார்கள்.

கடந்த 27-6—1978 அன்று நம் முருகன் திருவருட் சங்க வெள்ளிவிழாவைத் தொடங்கித் தலைமையேற்ற, தமிழ்நாடு இந்து சமய அற நிலையத் துறை ஆணையர் திருமிகு U. சுப்பிரமணியன் I. A. S., அவர்களிடம் இந்நூல் எழுதுவது பற்றிக் கூறியபோது அவர்கள் மிகவும் மகிழ்ந்து இன்புற்று தமது துறையிலுள்ள கோயில் செயல் அலுவலர்களுக்கு ஆணை பிறப்பித்து மேலும் செய்திகள் தொகுக்கப் பேருதவி புரிந்தார் கள். ஆணையர் அவர்களது பேராதரவும் பெரு ஊக்கமுமே இந்நூல் வெளிவரக் காரணம் என்பதைப் பணிவுடனும் நன்றிப் பெருக்குடனும் தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூல் உருவா வதில் ஊக்குவித்தவர்கள் அனைவரும் முருகன் திருப்பெயரையே உடையவர்கள் என்பது முருகன் திருவருளைச் சிந்தித்துப் பணியச் செய்கின்றது. ஆணையர் அவர்கள் இந்நூலை முருக வேளின் நான்காவது படை வீடாகத் திகழும் திருஏரகமாம் -சுவாமிமலை அருள்மிகு சுவாமிநாத சுவாமி திருக்கோயிலின் சார்பில் வெளிவரச் செய்துள்ள பெற்றியும் நம்மை மெய் சிலிர்க்கச் செய்கின்றது.

திருப்புகழ்த் தலங்கள் பற்றி யான் சேகரித்த செய்தி களை எல்லாம் நூலாகத் தொகுத்து இவ்வடிவம் தந்தவர் எனது சகோதரர், "சேக்கிழார் தாசன்", பேராசிரியர் ஆத்திரேய ராமசேஷன், M. A., அவர்கள் ஆவார். நூறுக்கு மேலான சமய நூல்களை எழுதி சமயப்பணியிலும், நூல் எழுதும் பணியிலும் அனுபவமிக்க அவர்கள் இந்நூற் பணியையும் நன்கு செய்து உதவியுள்ளார்கள்.

அருணகிரிநாத சுவாமிகள் அருளிய பதினாராயிரம் திருப்புகழ்ப் பாக்களில் நாம் இன்று பெற்றுள்ளவை 1330 மட்டுமேயாகும். இவற்றுள் அவர் தமிழகத்தில் பரவிய நாமறிந்த தலங்கள் 182; வைப்புத்தலங்கள் 20; பிறமாநிலத் தலங்கள் 11 இலங்கைத் தலங்கள் 3.; ஆகமொத்தம் 216.

இவற்றையன்றி அருணகிரிநாதர் பரவிய தலங்களுள் அத்திக்கரை, இந்தம்பலம், எழுகரைநாடு, ஞானமலை, தனிச்சயம், மாதானை வயிரவிவனம், விநாயகமலை என்னும் எட்டுத் தலங்களின் இருப்பிடங்கள் தெரியவில்லை. பெரியமடம், சோமநாதன் மடம் என்னும் இருதலங்களும் உறுதி செய்யப்படவில்லை. ஆகவே, மேற்குறித்த 216 தலங்களும் விரிவாக வழிபடுவோர்க்கு உதவும் குறிப்புகளுடன் கூடிய வரையில் ஆராய்ந்து இந்நூல் தொகுக்கப் பெற்றுள்ளது. "முருகன் தலயாத்திரை மஞ்சரி" வரிசையில் முதல் பெரும்முயற்சியாகும். இத்தலங்கள் இருப்பிடம் பற்றி சில தலங்களில் தணிகைமணியவர்கள் கருத்தினின்றும் மாறுபட்டு காரணங்களுடன் விளக்கப் பெற்றுள்ளது இந்நூலின் மற்றொரு சிறப்பு அம்சமாகும்.

கடந்த மூன்று ஆண்டுகளுக்கு மேலாகத் தொகுத்த செய்திகளைக் கடந்த 17—1—81 அன்று நம் அறநிலையத்துறை ஆணையர் திருமிகு. U. சுப்பிரமணியன் I. A. S. அவர்கள் பார்வையிட்டு உடனே. சுவாமிமலை திருக்கோயிலின் சார்பில் இந்நூலினை வெளியிட ஏற்பாடுகளைச் செய்ததோடு நிழற்படங்களும், வரைபடங்களும் சேகரித்து இதில் இணைக்கவும் உதவியருளினார்கள். ஆணையர் அவர்களின் திருவுள்ளப்படியே இப்பணிக்குப் பேருதவிபுரிந்த தஞ்சைத் துணை ஆணையர் திருP. S. கோபாலசாமி B. SC., B. L., அவர்களும், குடந்தை உதவி ஆணையர் திரு S. மகராஜன், B. Sc., B. T., அவர்களும் இந்நூலைச் சிறப்பாக வெளிக்கொணர முன்வந்த சுவாமிமலை திருக்கோயில் மேலாளும் அறங்காவலர் திருமிகு K. இரத்தினசபாபதி அவர்களும், அறங்காவலர்கள் திரு. தங்க. ராசேந்திரன், திரு. R. கிருஷ்ணமூர்த்தி பிள்ளை, திரு. பொன். தங்கராசு ஆகியோரும் செயல் அலுவலர். திரு. K. கல்யாணம், M. A., அவர்களும் நம் பாராட்டுதலுக்கும் போற்றுதலுக்கும் நன்றிக்கும் என்றென்றும் உரியவர்கள்.

இந்நூலைச் சிறப்பாக அச்சியற்றித்தந்த வேதாரணியம் கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுல அச்சக மேலாளும் அறங் காவலர் உயர்திரு. வே. அப்பாக்குட்டி, அவர்களுக்கும் அச்சக சகோதரிகள் அனைவருக்கும் நம் உளங்கனிந்த நன்றி உரித்தாகின்றது.

தமிழ் நாட்டின் முருகனடியார்களின் அருட்பணியில் இத்தல வழிகாட்டி நூல் முதல் முயற்சியாயினும், இத்துறையில் மாபெரும் பணிகள் இன்னமும் செய்ய வேண்டியுள்ளது. இனி வரும் ஆய்வாளர்களுக்கு இந்நூல் வழிகாட்டியுதவும் என்பது வெள்ளிடைமலை.

சிவனார் மனங்குளிர உபதேச மந்திரம் இரு செவி மீதிலும் பகர் செய் குருநாதன்-ஞான வள்ளல் நம் சுவாமிநாதப் பெருமான் பொன் மலர் மணநாறு சீரடிகளில் இந்நூலைப் பணிந்து வைத்து வணங்கி அர்ப்பணிக்கின்றோம். முருகனடியார்களும், தமிழ் கூறும் நல்லுலகமும் இதனை ஏற்றுத் தண்டமிழ் நேயனான ஞானவேள் திருமுருகன் திருத்தலங்களைச் சென்று பணிந்து வழிபட்டும், இந்நூலில் இன்னும் சேர்க்க வேண்டிய செய்திகளை வழங்கியும் இனிவரும் பதிப்புகளில் இந்நூல் மேலும் மேலும் நம் சமய வாழ்விற்குப் பெருந்துணை புரியவும் உதவுமாறு வேண்டி மீண்டும் செந்தமிழ்ப் பரமனும் வள்ளி குஞ்சரி மணாளன் பொன்னடிகளைப் பணிகின்றனம்.

வேலும் மயிலும் துணை.

முருகன் திருவருட் சங்கம்,
திருவல்லிக்கேணி,
சென்னை-5
30—6—1981.

வலையப்பேட்டை கிருஷ்ணன்

# திருப்புகழ்தல அகராதி

| வ். எண் | தலம் | தற்காலப் பெயர் | பக்கம் |
|---|---|---|---|
| 96 | திருப்பெருந்துறை | ஆவுடையார் கோயில் | 283 |
| 97 | திருவானிகூடல் | பவானி | 212 |
| 98 | திருவேங்கடம் | திருப்பதி. | 554 |
| 99 | திருமலை | ஸ்ரீசைலம் | 549 |
| 100 | திலதைப்பதி | கோயில்பத்து | 409 |
| 101 | தீர்த்தகிரி | தீர்த்தமலை | 192 |
| 102 | துருத்தி | குத்தாலம் | 326 |
| 103 | துறையூர் | திருத்தளூர் | 143 |
| 104 | தென்சேரிகிரி | செஞ்சேரிமலை | 209 |
| 105 | தேவனூர் | தேவனூர் | 133 |
| 106 | நல்லூர் | ஆண்டானல்லூர் | 375 |
| 107 | நள்ளாறு | திருநள்ளாறு | 544 |
| 108 | நாககிரி | திருச்செங்கோடு | 185 |
| 109 | நாகப்பட்டினம் | நாகப்பட்டினம் | 446 |
| 110 | நாகேச்சுரம் | திருநாகேஸ்வரம் | 347 |
| 111 | நாவலூர் | திருநாமநல்லூர் | 145 |
| 112 | நிம்பபுரம் | நிம்பபுரா | 560 |
| 113 | நெடியமலை | நெடியமலை | 60 |
| 114 | நெடுங்களம் | திருநெடுங்களம் | 259 |
| 115 | நெய்த்தானம் | தில்லைஸ்தானம் | 397 |
| 116 | நெருவூர் | நெரூர் | 274 |
| 117 | நெல்வாயில் | சிவபுரி | 163 |
| 118 | பட்டாலியூர் | சிவன்மலை | 221 |
| 119 | படிக்கரை | இலுப்பைப்பட்டு | 323 |
| 120 | பந்தணைநல்லூர் | பந்தநல்லூர் | 331 |
| 121 | பரங்குன்றம் | திருப்பரங்குன்றம் | 469 |
| 122 | பராய்த்துறை | திருப்பராத்துறை | 251 |
| 123 | பழனி | பழநி | 478 |
| 124 | பழமுதிர் சோலை | அழகர்கோயில் | 474 |
| 125 | பழுவூர் | கீழப்பழுவூர் | 261 |
| 126 | பழையாறை | பழையாறை | 373 |
| 127 | பனந்தாள் | திருப்பனந்தாள் | 335 |
| 128 | பாக்கம் | பாக்கம் | 139 |
| 129 | பாகை | பாகசாலை | 49 |
| 130 | பாண்டிக்கொடுமுடி | கொடுமுடி | 219 |
| 131 | பாதிரிப்புலியூர் | திருப்பாதிரிப்புலியூர் | 151 |
| 132 | புகழிமலை | புகளூர் | 275 |

| வ. எண் | தலம் | தற்காலப் பெயர் | பக்கம் |
|---|---|---|---|
| 165 | வடவிஜயபுரம் | இந்திரசைலாத்திரி | 558 |
| 166 | வடுகூர் | வடுகூர் | 547 |
| 167 | வயலூர் | குமாரவயலூர் | 241 |
| 168 | வலஞ்சுழி | திருவலஞ்சுழி | 367 |
| 169 | வல்லம் | திருவலம் | 101 |
| 170 | வலிதாயம் | பாடி | 34 |
| 171 | வலிவலம் | வலிவலம் | 449 |
| 172 | வழுவூர் | வழுவூர் | 313 |
| 173 | வள்ளிமலை | வள்ளிமலை | 95 |
| 174 | வள்ளியூர் | வள்ளியூர் | 528 |
| 175 | வளவாபுரி | சேயூர் | 87 |
| 176 | வாகைமாநகர் | திருவாளப்பூத்தூர் | 321 |
| 177 | வாஞ்சியம் | திருவாஞ்சியம் | 417 |
| 178 | வாலிகொண்டபுரம் | வாலிகண்டாபுரம் | 263 |
| 179 | வான்மியூர் | திருவான்மியூர் | 31 |
| 180 | விஜயமங்கலம் | விஜயமங்கலம் | 215 |
| 181 | விசுவை | விசூர் | 81 |
| 182 | விராலிமலை | விராலிமலை | 277 |
| 183 | விரிஞ்சிபுரம் | விரிஞ்சிபுரம் | 106 |
| 184 | விருத்தாசலம் | விருத்தாசலம் | 159 |
| 185 | விற்குடி | விற்குடி | 435 |
| 186 | வீழிமிழலை | திருவீழிமிழலை | 413 |
| 187 | வெஞ்சமாக்கூடல் | வெஞ்சமாக்கூடல் | 272 |
| 188 | வெண்ணெய்நல்லூர் | திருவெண்ணெய் நல்லூர் | 141 |
| 189 | வெள்ளிகரம் | வெள்ளிகரம் | 62 |
| 190 | வேட்களம் | அண்ணாமலைநகர் | 174 |
| 191 | வேதாரணியம் | வேதாரணியம் | 455 |
| 192 | வேப்பஞ்சந்தி | வேப்பூர் | 156 |
| 193 | வேப்பூர் | வேப்பூர்(ஆற்காடு) | 104 |
| 194 | வேலூர் | இளையனூர்வேலூர் | 77 |
| 195 | வேற்காடு | திருவேற்காடு | 36 |

வேலும் மயிலும் துணை

# ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் பரவிய திருப்புகழ்த் தலங்கள்

தொகை அட்டவணை

திருப்புகழ் 1330

- விநாயகர்துதி (5)
  - நூல் தொடக்கம் (1)
    - கு — திருப்பரங்குன்றம் (14)
    - மா — திருச்செந்தூர் (84)
    - ரா — திருவாவினன்குடி (13) பழநி (86)
    - ய — திருவேரகம் (38) (சுவாமிமலை)
    - ந — குன்றுதோறாடல் (பொதுசி-சிறப்பு 198)
    - ம — பழமுதிர்சோலை (16)
    - ஆறுதிருப்பதி பொது (2)
      - பிற தலங்கள் (314)
        - பொது (314)
          - க்ஷேத்திரக்கோவை (1)
    - சி — காஞ்சிபுரம் (44)
    - வா — திருஆனைக்கா (14)
    - ய — திருஅண்ணாமலை (79)
    - ந — திருக்காளத்தி (8)
    - ம — சிதம்பரம் (67)

இது காலஞ்சென்ற தமிழ்ப்பேரறிஞர் டாக்டர்-தணிகைமணி ஸ்ரீ வ.சு. செங்கல்வராயபிள்ளையவர்கள் பதிப்பித்த முருகவேள் பன்னிருதிருமுறை 5 தொகுதிகளைத் தழுவியும், அண்மையில் கிடைத்துள்ள 4 புதிய பாடல்களைச் சேர்த்தும் தொகுக்கப்பட்டுள்ளது. அருள்மொழிஅரசு திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளின் (1974) திருப்புகழ்ப் பதிப்பின்படி மொத்தப்பாடல்கள் 1325. சென்னை திருமயிலை சைவசித்தாந்த மஹாசமாஜப் பதிப்பின்படி மொத்தப்பாடல்கள் 1365.

உ

முருகா சரணம்

# அருணகிரிநாதர் சிறப்பு

1. வாக்கிற்(கு) அருணகிரி வாதவூரார் கனிவில்
தாக்கில் திருஞான சம்பந்தர்—நோக்கிற்கு
நக்கீர தேவர் நயத்துக்குச் சுந்தரனார்
சொற்குறுதிக்(கு) அப்பர்எனச் சொல்.

2. காசுக்குக் கம்பன் கருணைக்(கு) அருணகிரி
ஆசுக்குக் காளமுகி லாவனே—தேசுபெறும்
ஊழுக்குக் கூத்தன் உவக்கப் புகழேந்தி
கூழுக்கிங்(கு) ஔவைஎனக் கூறு.

— தனிப்பாடல்கள்.

3. ஐயா! அருணகிரி அப்பா! உனைப்போல
மெய்யாக ஓர்சொல் விளம்பினர் யார்?—வையகத்தோர்
சற்றறிதென் றேகற்றார் தன்னையாய்! முக்கணெந்தை
நாற்றிசைக்குங் கைகாட்டி னான்.

— தாயுமானார்.

4. சும்மா இருவெனநீ சொல்லப் பொருளொன்றும்
அம்மா அறிந்தில மென்று அன்றுரைத்த—எம்மான்
அருணகிரி நாதன் அநுபவம் நாயேற்குக்
கருணைபொழி போரூரா காட்டு.

— திருப்போரூர்ச் சந்நிதிமுறை.

5. கோட்டமரும் பைங்கிளியே கூறாய் தணிகைவரைக்
கோட்டமரு நங்கள் குமரேசன்—தாட்டுணைக்கண்
அன்பாம் அருணகிரி நாதன் அறைந்தபுகழ்
இன்பாய் என்கைவந் திருந்து.

— திருத்தணிகைச் சந்நிதிமுறை.

6. அந்தாதியில்லா இறைவனுக் கந்தாதி யன்றுரைத்தும்
நந்தா வகுப்பலங் காரம் அவற்கே நனி புனைந்தும்
முந்தா தரவில் அவன் புகழ் பூதியும் முற்றும் சொன்ன
எந்தாய் அருணகிரிநாத என்னைநீ ஏன்றருளே.

7. நெடியான் உகந்த மருகன் திருப்புகழ் நித்தமுமே
படியார் படித்துப் பரகதிபற்றப் பரிந்தளித்த
அடியான் அருண கிரிநாதன் அம்பொன் னடிமலர்க்கே
அடியார் எவரோ அவரேஎம் ஆவிக் கருந்துணையே.

— தணிகைமணி வ. சு. செங்கல்வராயபிள்ளை.

8. கேட்டாற் செவிக்கினிக்கும் கேள்வியொடு பண்கலந்த
பாட்டாச் சொலற்கினிக்கும் பாவொடுநா—மாட்டார்
எழுதஇரு கைக்கினிக்கும் எண்ணமகத் துக்கெப்
பொழுதும் திருப்புகழ் உன்போல்.

— ஸ்ரீ சாதுராம் சுவாமிகள்.

9. விருப்புடன் உபய சரணமென் மலரை
வேண்டுவார் வேண்டுவ தளிக்கும்
பொருப்புகள் தோறும் நின்றருள் ஒருவன்
புகழினை அகநெகப் புகன்று
கருப்புகு தாத கதிதனைக் காட்டும்
கலையுணர் புலவர்கள் திலகம்
திருப்புகழ் அருண கிரிஎம தடிகள்
திருவடி குருவடி வாமே.

உ

முருகா சரணம்

# திருப்புகழ்ச் சிறப்பு

1. எல்லாரும் ஞானத் தெளிஞரே! கேளீர்சொல்
கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ?—பொல்லாக்
கருப்புகழைக் கேட்குமோ கான மயில்வீரன்
திருப்புகழைக் கேட்கும் செவி?

2. மாணிக்கம் பூண்பார்க்கு மற்றெருகல் வேண்டுமோ?
ஆணிப்பொன் கையுறுவார்க் கையுறவேன்?—பேணிப்பின்
செவ்வேல் விநோதன் திருப்புகழ்சிந் தித்திருப்பார்க்
கெவ்வேலை வேண்டும் இனி?

3. சீராந் திருப்புகழைச் செவ்வேள்மேல் அன்பாக
ஆராய்ந் துரைத்தான் அருணகிரி—நேராக
அந்தப் புகழை அநுதினமும் ஓதாமல்
எந்தப் புகழோது வீர்?

4. அருணகிரி நாதன் அகிலதலத் துன்னைக்
கருணையினுற் பாடுங் கவிபோற்—பிரியமுற
வேறுமோர் புன்கவிகள் வேலோனே! நின்செவியில்
ஏறுமோ? என்னே இனி?

5. ஆனைமுகவற் கிளைய ஐயா! அருணகிரி
தேனனைய சொல்லான் திருப்புகழை—யானினைந்து
போற்றிடவும் நின்னைப் புகழ்ந்திடவும் பொற்கமலஞ்
சாத்திடவும் ஓதிடவும் தா.

6. வேதம் வேண்டாம் சகல வித்தை வேண்டாம் கீத
நாதம் வேண்டாம்ஞான நூல்வேண்டாம்—ஆதி
குருப்புகழை மேவுகின்ற கொற்றவன்தாள் போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்.

7. ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்
வானம் அரசாள் வரம்பெறலாம்—மோனவீ
டேறலாம்; யானைக் கிளையான் திருப்புகழைக்
கூறினுர்க் காமேஇக் கூறு.

8. ஆறுமுகந் தோன்றும், அழகிய வேல்தோன்றும்அவன்
ஏறுமயில் தோன்றும் எழில்தோன்றும்—சீறிவரு
சூரன் முடியைத் துணித்தோன் திருப்புகழைப்
பாரில் வழுத்தினேர் பால்.

9. பொருப்பது பொடிப்பட விடுத்திடுகை வேலா
இருப்பிடம் உனக்கெது எனக்கரு ளியம்பாய்
உருக்கநல் விழுக்குலம் ஒழுக்கமில ரேனும்
திருப்புகழ் படிப்பவர் மனத்தினில் இருப்பாம்.

10. திருப்புகழ் படிக்குமவர் சிந்தைவலு வாலே
ஒருத்தரை மதிப்பதிலை உன்றனருளாலே
பொருப்புக மீகப்பொருது வென்று மயில்மீதே
தரித்தொரு திருத்தணியில் நின்றபெருமாளே!

11. ஓராறு மாமுகனும் உச்சிதமெய்ஞ் ஞானகுகன்
பேரால் அருணகிரி பேருலகில்—சீராருந்
தோத்திரம தாகத் துதிக்கும் திருப்புகழை
ஏத்தினவர் ஈடேறு வார்.

12. வள்ளிமண வாளன் மயிலேறும் வள்ளல்தனைத்
தெள்ளுதமி ழாற்புனைந்து சீர்பெறவே—உள்ளபடி
வைப்பாம் அருணகிரி வாழ்த்தும் திருப்புகழைக்
கற்பார் கரையேறு வார்.

13. அருணகிரி நாதர்பதி னாறா யிரமென்
றுரைசெய் திருப்புகழை யோதீர்—பரகதிக்க.:(து)
ஏணி; அருட்கடலுக் கேற்றம்; மனத்தளர்ச்சிக்
காணி; பிறவிக் கரம்.

14. திருப்புகழைக் கற்கத் திருப்புகழைக் கேட்கத்
திருப்புகழை நித்தம் செபிக்கத்—திருப்புகழை
அர்ச்சிக்க முத்தியெளி தாகுமே கூற்றைவென்று
கெர்ச்சிக்க லாமே கெடீ.

15. மடங்கல் நடுங்கும் தனைச்சுடும் ஈதென்று; மாதிரத்தோர்
அடங்கி நடுங்குவர் சூலாயுதமென்று; அசுரர்கடல்
ஒடுங்கி நடுங்குவர் வேலாயுதமென்று; உரகனுங்கீழ்க்
கிடங்கில் நடுங்கும்; மயிலோன் திருப்புகழ் கேட்டனவே.

16. தருப்புகழ் வல்ல சுரர்மகள் நாயகன் சங்கரற்குக்
குருப்புகழ் வல்ல குமரேசன் சண்முகன் குன்றெறிந்தோன்
மருப்புகழ் வல்ல அருணகிரிப் பெயர் வள்ளல் சொன்ன
திருப்புகழ் வல்லவர் சீர்பாதத் தூளிஎன்சென்னியதே.

உ

முருகா சரணம்

*திருப்புகழ் காமதேனு திருவகுப் பைந்தருக்கள்*
*மருவலங் காரங் கஞ்சம் வளருமந்தாதி சங்கம்*
*பெருமைசேர் சிந்தா மணியெனப் பேறுநல்கும்*
*அருண்மழை பெய்த கொண்டல் அருணையங்கிரியார் வாழி!*

— சு. வே. வேங்கடசுப்பிரமணியன்

# அருணகிரிநாதர் வரலாறு

உலகின் தொன்மையான சைவசமய நெறியினை அவ்வக் காலங்களில் மறுமலர்ச்சி பெறச்செய்த அருளாளர்கள் வரிசையில் அருணகிரிநாதர் சிறப்பிடம் பெறுகிறார். பிறசமயத் தாக்குதல் களால் நலிவுற்றிருந்த ஹிந்து பண்பாட்டினைக் காக்கின்ற பெரு முயற்சியில் வித்தியாரண்ணியரின் வழிநின்று விஜயநகர அரசர் கள் முனைந்து நின்று வெற்றிகண்ட காலத்தில் திருவண்ணாமலையில் அருணகிரிநாதர் அவதரித்தார்.

தமிழ்நாடு மாலிக்காபரின் படை எழுச்சியால் நிலைதளர்ந்து உரிமை இழந்து வாடி விஜயநகரப் பேரரசர்களது நிழலில் மேலோங்கத் தொடங்கியது. பிறர் கையில் வாடிய தமிழ் மதுரையைக் காப்பாற்றி மதுராவிஜயம் கொண்ட அரசர் காட்டிய வழிக்கு நன்றி பாராட்டியவர் அருணகிரிநாதர்.

விஜயநகரப் பேரரசர்களில் இரண்டாவது தேவராயர் (கி. பி. 1422-29) காலத்தவர் அருணகிரிநாதர் என்று வரலாற்றறிஞர்கள் வரையறுத்துள்ளனர். ஹொய்சாள மன்னன் மூன்றாவது வல்லாளனின் மகன் வீரவிஜயவிருபாட்சன் காலத்தில் கி. பி. 1299-ல் இராஜநாதர்-அபிராமியம்மை தம்பதியினரது மகனாக அருணகிரிநாதர் அவதரித்தார் என்று கூறும் சில வரலாற்றாளரது கருத்து ஏற்புடைத்தன்று.

அருணகிரி நாதரது தோற்றம், பெற்றோர்கள் பற்றி நாம் ஏதும் அறிய முடியவில்லை. அவரது தோற்றம் பற்றிப் பலபுனை கதைகள் கூறப்படுகின்றன. செந்தமிழ்க் கடவுளாம் செவ்வேள் முருகனைத் தலந்தோறும் சென்று பரவித் தம் சந்தத்திருப்புகழ்க் கவிமணிகளாலிழைத்து அலங்கரித்த அருணகிரிநாதரின் பெருமையை இப்புனைகதைகள் மாசுபடுத்துவதாயுள்ளன.

நல்ல குடிப்பிறப்பும் பண்பும்மிக்கு, இளமையிலிருந்தே சைவசமய சாத்திர அறிவும் இலக்கிய இலக்கணப் புலமையும் பெற்று முருகனது பழைய வழியடிமையாகத் திகழ்ந்த அருணகிரிநாதர் விதிவசத்தால் பரத்தையர் மயக்கிற்பட்டு, பொருளையெல்லாம் இழந்து, பொருளுள்ளவரைத் தேடிப் பாடிப் பொருள்பெற்று அவற்றையும் வேசையர்க்கே அர்ப்பணித்து-வறுமையும் பிணியும் வருத்த-தன் நிலைக்கு இரங்கி வருந்தத் தொடங்கினார். ஆறுமுகப்பரமனைத் தவநிலையில் தியானிக்குமாறு அருளாளர் ஒருவர்* உபதேசித்தும் பயன் தரவில்லை.

தம் தவறுகளுக்கு மிகவும் வருந்தி-முன்செய்த நல்வினையால் மனநிலை மாறினார் அருணகிரிநாதர். திருவண்ணாமலைத் திருக்கோயிலின் வடவாயிற் கோபுரத்தின்கீழ் தவநிலையிலமர்ந்து ஆறுமுகனைத் தியானித்தும் மாயையின் வலிமை குறையாதது கண்டு, பிறவியை வெறுத்து, உயிரை மாய்த்துக் கொள்ளக்கருதி அண்ணாமலைக் கோபுரத்திலேறி உயிர் பிரியக் குதித்தார்.

அடியார் உயிர்துறக்க ஆறுமுகன் சகியாது, அவருக்கு ஊறு வராதவண்ணம் தாங்கி, அபயமளித்து, மண்மிசை நிறுத்திக் காத்தருளினார் கந்தவேள்; மயில்மிசைத் தமது நடனகோலத்தையும் காட்டியருளினார். அருணகிரிநாதர் என்று பட்டம் சூட்டி இளநகையுடன் நயனதீட்சையும், திருவடி தீட்சையும் செய்து அவர்தம் நாவில் தமது ஆறெழுத்தைப் பொறித்து, வினையை ஓட்டி, முத்தமிழை ஊட்டினார் முருகவேள்; ஜபமாலையருளினார். மெய்ஞ்ஞானோபதேசத்தையும் அருளிச் சித்தத்தைத் தெளிவித்தார்.

குமரவேளை எப்படித் தனது குறைமதியால் பாடுவது என விண்ணப்பித்த அருணகிரிநாதருக்கு "முத்தைத் தருபத்தித் திருநகை" என வண்ணப்பாவாகவே அடியெடுத்துக் கொடுத்தார் அருந்தமிழ் நாயகன்.

எந்தவேளையும் கந்தவேளையேதொழுதுபாடும்பேறுபெற்று, தமது பிணிகளெல்லாம் நீங்கி முத்தமிழ்க் கலைவல்லமையுடன் யோகியாய், மெய்ஞ்ஞானியாய்ப் பரவசமுற்றுத் திருவண்ணாமலையிலே விளங்கிய அருணகிரிநாதருக்கு அண்ணாமலைப் பெருமான் திருநீறளித்தார்; உண்ணாமுலை அம்மையோ 'நின் பிறப்பறுக'

* இப்பெரியவர் பெயர் பெரியகுணதரர் என்பர். சிலர் அருணாசலேசுவரர் என்பர்.

என்றருளிப் பாசத்தடைகளை அகற்றினர். வள்ளியம்மை தன் ஸ்பரிசதீட்சையால் அருணகிரிநாதரை அற்புதராக்கினர்.

இவர்தம் பக்தியால், மன்னன் ப்ரவுடதேவராயனுக்குச் சம்பந்தாண்டான் செருக்குக் குலையும்படி, 'அதலசேடனாராட' என்ற திருப்புகழ்பாடி முருகவேள் நடனக்காட்சியை அரசவையில் காட்டுவித்தார்.

இறைவன் ஆணையின் வண்ணம் திருவருணையிலிருந்து தலங்கள் தோறும் சென்று ஆறுமுகனின் அருளாடல்களை அருமைமிகு திருப்புகழ்ப் பாக்களால் பாடிப் பரவினர்.

திருச்செந்தூரில் வில்லிப்புத்தூராரை வாதில் வென்றார். அப்போது பாடியது கந்தரந்தாதியாகும். திருத்துருத்தியில் வேல் மயில் பொறிகள் பொறிக்கப் பெற்றார்; தில்லை, திருவெண்ணெய் நல்லூர் முதலிய தலங்களின் முருகவேளின் நடனக்காட்சி தரிசிக்கப் பெற்றார்; திருமண்ணிப் படிக்கரையில் கனவில் கந்தவேள் அருளாணைக்கிணங்க வயலூர் வள்ளலை வழிபட்டுப் பேரின்புற்றார்; சுவாமிமலையில் (திருஏரகம்) பார்வதி பாலனின் பாததரிசனம் பெற்றார்; விராலிமலைக்கு வரப்பணித்தார் வேலாயுதப் பெருமான். திருத்தணிகையில் வழிபட்டு உய்ந்தார்-இவ்வாறாகப் பலதலங்களையும் வழிபட்டு அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ்ப் பாக்கள் பதினாறாயிரம் என்பர்.

தலயாத்திரைகளை முடித்துக்கொண்டு மீண்டும் திருவண்ணாமலையடைந்த அருணகிரிநாதர், சம்பந்தாண்டான் தூண்டுதலால் மன்னன் கோரிய வண்ணம் விண்ணுலகிலிருந்து பாரிசாதமலர் கொணரக் கிளி வடிவேற்றுச் சென்றார். சம்பந்தாண்டான் அவரது மானுட உடலை அழித்துவிட, கிளிவடிவுடனேயே இருந்து திருத்தணிகேசன் திருக்கரத்தில் தங்கி இன்பப்பேறு பெற்றார் என்று கூறுவர்.

## அருணகிரிநாதர் சிறப்பு

அருணகிரிநாதர் வடமொழிப் புலமையுடையவராயினும் செந்தமிழில் திளைத்து இசைத்தமிழில் ஒரு புதுப்பாணியை அமைத்து விட்டார். திருப்புகழ் என்பது ஒருபாட்டு வகையாகவே நிலைபெற்று விட்டது. நமக்கும் முருகப் பெருமானுக்கும் இணைப்பு

சங்கிலியாக அவர் விளங்குகிறார். சிறந்த அனுபூதிமானாகிய அவர் ஞானானந்தத்தோடு பரமனின் லீலானந்தத்தையும் அனுபவித்து நமக்கும் காட்டிய வித்தகராவார்.

முருகவேளுடைய திருவாக்கால் பிரணவ மந்திர உபதேசம் பெற்றவர்கள் மூவர்: சிவபெருமான், அகத்தியர், அருணகிரி நாதர்! வேதங்களும் காணாத வேலவன் பாதங்கள் அருணகிரி நாதரது திருப்புகழ் ஏட்டிலும் பட்டுப் புனிதமாக்கி விட்டது.

உலகியலைப் பாடியவர்களுள் அருணகிரி நாதருக்குத் தனிச் சிறப்பு உண்டு. பிறர் பேசத் தயங்கியவற்றையும், புதுமையான கருத்துக்களையும் அவர் நூல்களில் காண்கிறோம்.

ஐம்புலனை வெறுக்கவில்லை அவர்; ஐம்புலன் வழி செல்லும் அவாவினையே ஒழிக்க வேண்டுகின்றார். அவா ஒழிந்தால் சும்மா இருந்து சுகம் பெறலாம் எனக் காட்டிவிடுகிறார் கருணையில் மிக்க அருணகிரிநாதர்.

அருணகிரிநாதரது திருப்புகழ் முருகன் தோளிலும் தாளி லும் மணக்கின்றது; அனைத்துத் திசையிலுள்ளோரும் போற்றும் அற்புத மெய்ஞ்ஞானத் தேனமுது; சந்த இன்ப ஊற்று; இசைப் பெருங்கடல்.

மனிதகுலத்துக்கு வழிகாட்ட வந்த அருணகிரி நாதராம் பரமகுருவை, தாயுமான அடிகள் ஆறு இடங்களில் போற்று கின்றார்.

## திருப்புகழ் மாபெரும் மருந்து

திருப்புகழை நம்தவப்பயனால் இந்நூற்றாண்டில் பரப்ப வந்தருளிய வள்ளிமலை சச்சிதானந்த சுவாமிகள் திருப்புகழ் மகா மந்திரத்தால் பல பிணிகளையகற்றி-பல பேறுகளைப் பக்தர்கள் துய்க்குமாறு வழிகாட்டிச் சென்றுள்ளார்கள். திருப்புகழ் அடியார்களின் அனுபவப்படிக் கீழ்க்கண்ட திருப்புகழ்ப் பாடல்கள் தரும் பயன்களை நாமும் முறைப்படிப் பாராயணம் செய்து அடைந்து இன்புறத் தடையேதும் இல்லை.

| | திருப்புகழ் முதலடி | பயன் |
|---|---|---|
| 1. | நீலங்கொள் மேகத்தின்...<br>விறல் மாறனைந்து... | திருமணம் |
| 2. | ஜெகமாயையுற்றென்... | புத்திரப்பேறு |

| | | |
|---|---|---|
| 3. | இருமலு ரோகம் வலிவாத பித்தம்...<br>தீராப்பிணிதீர...தேவேந்திரசங்கவகுப்பு | நோய் நீக்கம் |
| 4. | ஐங்கரனை...சரணகமலாலய...<br>வசனமிக வேற்றி...தோரணகனக<br>பகருமுத்தமிழ்... | செல்வப்பேறு |
| 5. | நாளென் செயும் (அலங்காரம்)<br>சேயவன் புந்தி (அலங்காரம்) | கோளறும், நலம் கிட்டும். |
| 6. | சினத்தவர் முடிக்கும்...<br>வேல்வகுப்பு | நினைத்தது கைகூடும்; பகைகெடும்.<br>வெற்றி |
| 7. | தேவேந்திர சங்கவகுப்பு<br>விழிக்குத்துணை (அலங்காரம்) | வழித்துணை, மெய்க்காவல். |
| 8. | அதிருங்கழல்... | இடரகலும். |
| 9. | நினைத்ததெத்தனை... | சித்தி பெறுதல். |
| 10. | அண்டர்பதி குடியேற... | புதுமனை புகுதல். |

## அருணகிரிநாதர் அருளிய நூல்கள்

1. **திருப்புகழ்:** சொற்சுவை, பொருட்சுவை, பக்திச்சுவை இவை மூன்றும் கொண்ட தீந்தமிழ்த் தெள்ளமுது என்று போற்றும் 16,000 பாடல்கள் இதனுள் அடங்கும். ஆனால் நம் தவக்குறைவால் 1330 பாடல்களே கிடைத்துள்ளன. சைவப் பெருந்திலகமாக் விளங்கிய வ. த. சுப்பிரமணிய பிள்ளையவர்களும் அவர்கள் குமாரர் தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளையவர் களும் இப்பைந்தமிழ்ப் பனுவலைப் பதிப்பித்து அளித்த பெற்றியை ஈண்டு நன்றியுடன் போற்றக் கடமைப்பட்டுள்ளோம்.

நடுநிலைப் போக்கும், உயரிய பொதுநோக்கும் கொண்ட இப் புகழ்ப்பாக்கள் முருகவேளை நடுநாயகமான குறிக்கோள் தெய்வ மாகக் கொண்டு கணபதி, சிவபிரான், அம்பிகை, திருமால் ஆகிய பெருங்கடவுளரையும் ஒப்பிலா வகையில் உயர்த்திப் போற்றுவன. பொதுமகளிரை விலக்க வேண்டும்; காலன் வரும்போது கந்தன் வந்து காத்திட வேண்டும்; அடியார் கூட்டத்தில் சேர்த்து, திருவடி இன்பத்தில் திளைத்து பிறவாப் பெருநெறி எய்தவேண்டும் என்று பொதுவாகப்பாடும் நம் ஞானவள்ளல், தினையளவேனும் பிறருக்குக் கொடுத்து உண்ணுங்கள்; வள்ளிச் சன்மார்க்கத்தில் ஒழுகி உய்வோம் என்று உலகுக்கு உபதேசிக்கின்றார்.

**2. திருவகுப்பு:** அருணகிரிநாதர் அருளிய திருவகுப்பு பதினெட்டு என்பர்.

i. சீர்பாதவகுப்பு - முருகன் திருவடிச் சிறப்பு கூறுவது.

ii. தேவேந்திர சங்கவகுப்பு - முருகன் அடியார் பெருமை கூறுவது.

iii. வேல் வகுப்பு -
iv. வேல்வாங்குவகுப்பு - } முருகன் படை

v. வேளைக்காரன் வகுப்பு. -
vi. வேடிச்சிகாவலன் வகுப்பு.- } முருகனுக்கு உகந்த நாயகி.

vii. பெருத்தவசன வகுப்பு - முருகன் அருளிய உபதேசமொழி.

viii. பூதவேதாள வகுப்பு - முருகன் சேனை.

ix. பொருகளத்தலகை வகுப்பு -
x. செருக்களத்தலகை வகுப்பு -
xi. போர்க்களத்தலகை வகுப்பு - } முருகன் போர்வீரம்.

xii. சேவகன் வகுப்பு.

xiii. திருஞானவேழ வகுப்பு -
xiv. திருக்கைவழக்க வகுப்பு - } முருகன் உபதேசத்தால் பெற்ற ஞானப்பிரசாதச் சிறப்பு.

xv. புயவகுப்பு - முருகன் பன்னிரு புயங்களின் பெருமை.

xvi. சித்துவகுப்பு - முருகன் திருப்புகழ் பெருமை.

xvii. கடைக்கணியல் வகுப்பு - முருகன் திருநோக்கச் சிறப்பு

xviii. சிவலோக வகுப்பு - முருகன் திருவருளால் பெற்ற அன்பின் சிறப்பு.

பாராயணம் செய்பவர்களுக்குச் செவ்வேட் பரமன் தனது பொற்பாத கமலங்களையருளி ஈடேற்றுமாறு அருணகிரி நாதர் வழங்கியுள்ள இப்பைந்தமிழ்ப் பெருங்கொடையின் பெருமை அளவிடற்கரியது.

**3. கந்தரந்தாதி:** வில்லிப்புத்தூராருடன் போட்டியிட்டுப் பாடியநூலிது. பல நல்லுபதேசங்களைக் கொண்ட இந்நூலில் உள்ள நூறு செய்யுட்களின் முதலெழுத்துக்கள் "சி, சீ, செ, சே, தி, தீ, தெ, தே" என்னும் எட்டெழுத்துக்களுள் அடங்குவது தனிச்சிறப்பாகும்.

சிவபிரானுக்குத் தேவாரம் சிறந்த புகழ்நூல்; அங்ஙனமே முருகவேளுக்குச் சிறந்த புகழ்நூல் திருப்புகழ். சிவபிராற்குரிய சிறந்த அகப்பொருள் இலக்கியநூல் திருக்கோவையார்; முருக வேளுக்கு உரிய அருமை அகப்பொருள் நூல் கந்தரந்தாதி.

அருணகிரிநாதருக்கு வாதில் வெற்றி தந்த இந்நூல் வேல் மயில், சேவல், தேவசேனை, வள்ளிப்பிராட்டி, முருகர் திருவடி, முருகர் திருப்புகழ் ஆகியவற்றைச் சிந்தை செய்வதால் வரும் பெரும்பயனை நன்கு எடுத்து ஓதுவதால்-வேண்டிய வரமெலாம் தரவல்லதாய்ப் பாராயணத்துக்குகந்த பயனைத் தரும் நூலாகும்.

4 **கந்தரலங்காரம்:** அருணகிரிநாத சுவாமிகள் பக்தி நிலையிலே உன்னத நிலையில் இருந்த பொழுது பாடிய பாடல் களைத் தொகுத்துக் கந்தரலங்காரம் எனப்பெயர் சூட்டப் பெற்றுள்ளது. சிவபிரானுக்குத் திருவாசகம் எங்ஙனம் ருசிக்குமோ அங்ஙனம் கந்தனுக்கு இவ்வலங்காரம் ருசிக்கும் என்பர். இந் நூல் முருகன் திருவடியில் திடபக்தியை ஊட்டவல்லது; பக்திரசம் நிரம்பியது; செந்தமிழ்ச் சுவை ததும்புவது; ஓதிமகிழ ஒப்புயர் வற்றது.

5. **கந்தரநுபூதி**: "தமது குறைகளை எடுத்துக் கூறியும், தாம் தவநிலையால் பெற்ற பேற்றினை எடுத்து ஓதியும், தாம் அடைந்த மௌனநிலையின் பெருஞ்சிறப்பை எடுத்துக் கூறியும், நான்பெற்ற இன்பத்தை நீங்களும் வழிபாட்டால் பெற்று உய்யுங் கள் என உபதேசிக்கும் அருணகிரியார் உலகை உய்விக்கும் நூல் கந்தரநுபூதி" என்று காட்டுவார் தணிகைமணியவர்கள். மந்திர நூலாய்ப் பத்தாம் திருமுறையாகச் சைவத்தில் உள்ள திருமந்திர நூலுக்கு இணையாக ஐம்பத்தொன்று பாடல்களையே கொண்ட மந்திரநூலாகிய கந்தரநுபூதியை முருகவேளுக்குரியதாகக் கொள்வர்.

6. **வேல்விருத்தம்.**

7. **மயில்விருத்தம்.**

8. **சேவல்விருத்தம்.**

9. **திருஎழுகூற்றிருக்கை:** ரதபந்தமாகிய இச்சித்திரக்கவி திருப்புகழின் சாரமாகும். சுவாமிமலையில் பாடப் பெற்றது. சுவாமிமலைத் திருக்கோயிலில் சலவைக் கல்லில் ரதபந்தமாக அமைக்கப் பெற்றுள்ளதைக் கண்டு மகிழலாம்.

இவ்வாறு ஒன்பது மணிகளான நவமணிமாலையாக-செந் தமிழ்ப் பனுவல் மாலையைச் செந்தமிழ் செவ்வேளுக்குச் சந்தத் தமிழால் சூட்டி இன்புற்றவர் அருணகிரி வள்ளல்.

## அருணகிரிநாதர் கவித்திறம்

அருணகிரிநாதர் அருளிய பனுவல்களைத் தொகுத்துப் பார்க்குமிடத்து :

| | | | |
|---|---|---|---|
| திருப்புகழ் | 1330 | பாடல்கள். | |
| கந்தர் அலங்காரம் | 108 | ,, | |
| கந்தரந்தாதி | 102 | ,, | |
| கந்தரநுபூதி | 52 | ,, | |
| வேல்விருத்தம் | 10 | ,, | |
| மயில்விருத்தம் | 12 | ,, | |
| சேவல்விருத்தம் | 12 | ,, | |
| திருஎழுகூற்றிருக்கை | 1 | ,, | |
| திருவகுப்பு | 18 | ,, | (சிலர் 24 என்பர்.) |
| | 1645 | பாடல்கள். | |

அவர் நால்வகைக் கவியிலும் சிறந்து விளங்கியவர் என்பது புலப்படும். முத்தமிழ் அரசராய் நாற்கவிராஜராக விளங்குகிறார் அருணகிரிநாதர். அவரது நூல்களில் இன்பச்சுவை, நகைச்சுவை, கருணை, ரௌத்ரம், வீரம், பயம், குற்சை, அற்புதம், சாந்தம் என்னும் நவரசங்களும் மிளிர்வதால் அவரை நவரசநாவலர் என்று தணிகைமணி போற்றுகின்றார். சந்தக் கவித்தலைவராக விளங்கும்அருணகிரிநாதருக்கு இத்துறையில் குருவாகத் திருஞான சம்பந்தரைக் கூறலாம். இசையின் இலக்கண நுணுக்கங்களை அறிந்த இசை ஞானியாராகத் திகழ்கிறார் நம் அருணைவள்ளல். தாளபேதவகைகளையும் அவற்றின் நுணுக்கங்களையும் திருப்புகழில் அபரிமிதமாக அறிந்து இன்புறலாம். திருப்புகழ்ப் பாவகைக்கு ஆதிகர்த்தாவாகிய நம் அருணகிரிநாதர் தங்கச் சங்கிலிக்குப் பதக்கம் பிணைத்தது போன்று ''பெருமாளே'' ''தம்பிரானே'' என முடிக்கும் அழகும் அடிதோறும் தொங்கல் அழகும் அமைத்துள்ள அருட்கவித்திறம் அருமையும் பெருமையும் உடையவை.

அருணகிரிநாதரின் திருவாக்கில் ஆழ்ந்த பொருளமைப்பு, பொருளுக்கேற்ற சந்த அமைப்பு, தடைபடாநடை, இசைக்கும் தாளத்துக்கும் இலக்கியமாய் நிற்கும் சந்தக்கோவை முதலியன முற்பட்டு நிற்கும் மேம்பாட்டால்தான் "வாக்கிற்கருணகிரி" என்னும் முதுமொழி வந்தது. 1008 சந்தங்களில் கிடைத்துள்ள திருப்புகழ்ப்பாக்களைப் பார்க்கும்போது அவரியற்றிய பதினாயிர மும் கிடைத்திருப்பின் சந்தங்களின் எண்ணிக்கையை எண்ணிப் பார்க்கவே வியப்பாய் பிரமிப்பூட்டும்!

மிகச்சிறிய பாடல்களும் மிகப்பெரிய பாடல்களும் கொண்ட வியக்கத்தக்க கவியமைப்பினை நாம் அருணகிரிநாதரது படைப்புக்களில் காண்கிறோம். ஒரு திருப்புகழில் சில பாகங்களை நீக்க-வேறொரு பாடலாக வரும் அமைப்பையும் காணலாம். தலத்தின் பெயருக்கேற்பச் சந்தம் அமைந்திருக்கும். சொற் பிரயோகங்களும், பொருளமைப்பும், நடைச்சிறப்பும் விரிக்கின் பெருகும்.

கந்தரந்தாதி 54 ம் பாடலில் தகரஇன எழுத்து ஒன்றே வருமாறு அமைந்த

*திதத் தத்தத் தித்தத் திதிதாதை தாததுத் தித்தத்திதா*
*திதத் தத்தத் தித்த திதித்தித்த தேதுத் துதித்திதத்தா*
*திதத் தத்தத் தித்தத்தை தாத திதே துதை தாததத்து*
*திதத் தத்தத் தித்தித்தி தீதீ திதிதுதி தீதொத்ததே*

என்னும் பாடல் இவர் "வாக்கிற்கருணகிரி" என்பதற்கு மற்று மோர் சிறந்த எடுத்துக்காட்டு ஆகும்.

## அருணகிரிநாதர் காலத்துப் புலவர்கள்

அருணகிரிநாதரது நூல்களில் அவர் காலப் புலவர்களைப் பற்றிய சான்றுகளும் கிடைக்கின்றன. சம்பந்தாண்டான் என்னும் தேவி உபாசகருடன் அருணகிரிநாதர் போட்டியிட நேர்ந்ததை யும், வில்லிப்புத்தூராரை வாதில் வென்றதையும் வரலாற்றுச் செய்திகள் காட்டுகின்றன. வில்லிப்புத்தூரார் காலம் கி. பி. 1331-1383 என்பர். இரட்டையர் என்று புகழ்பெற்ற இருபுலவர் கள் வில்லிப்புத்தூராரது சமகாலத்தவர்கள் என்று வரலாறு காட்டுகின்றது. அருணகிரிநாதர்மீது அழுக்காறுற்ற சம்பந்தாண்டானைப் பரிகசித்து ஓர் பாடலை இரட்டையர் பாடினர். அது வருமாறு;

*மன்னுதிரு வண்ணுமலையிற் சம்பந்தாண்டாற்கு*
*பண்ணுதலைச் சவரம் பண்ணுவதேன்—மின்னின்*
*இளைத்த மடவார் இவன்குடுமி பற்றிவளைத்*
*திழுத்துக் குட்டாமலுக்கு.*

இரட்டையரும் காளமேகமும் சமகாலத்தவர் என அறிகின்றோம். திருப்புகழில் "விளம்பு காளப்புலவன்என" (காஞ்சிபுரம் திருப் புகழ்: தலைவலையத்......) என்று வருவதில் காளமேகம் குறிக்கப் பெறுகிறார் என்பர். காளக்கவி என்னும் பட்டம் ஒட்டக் கூத்தருக்கும் உண்டு என்பர்.

அருணகிரிநாதர் தமக்கு முன் வாழ்ந்து-கந்தபுராணம் பாடிய கச்சியப்பரைத் திருப்புகழில் குறிப்பிடுவதும் அருணகிரி நாதர் காலத்தை அறிய உதவும். (காஞ்சிபுரம் திருப்புகழ், வாய்ந்தப்......)

## முடிவுரை

அருணகிரிநாத சுவாமிகள் வரலாறு- தமிழ்நாட்டில் கி. பி! 14, 15-ம் நூற்றாண்டில் ஏற்பட்ட இந்து மறுமலர்ச்சிக்கால வரலாறு எனில் மிகையாகாது. சமணமும் பௌத்தமும் பெருகிச் சைவநெறியும் வைணவநெறியும் நலிவுற்றபோது திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், திருமங்கையாழ்வார் போன்றோர் அவதரித்துச் சமய மறுமலர்ச்சியைத் தோற்றுவிக்கத் தலங்கள் தோறும் சென்று திருக்கோயில்களில் பாடிப்பரவி மக்களிடையே பக்திநெறியைப் பரப்பியது போன்று, முஸ்லீம் ஆதிக்கமும் படை யெடுப்புக்களும் பெருகி-நம் ஆலயங்களையும் சமயநெறிகளையும் சிதைத்த நேரத்தில் விழிப்புற்ற இந்து உணர்வின் விடிவெள்ளி யாக அருணகிரிநாதர் ஒருவரே ஷண்மத (கணபதி, முருகன், சிவன். அம்பிகை, திருமால், சூரியன்) வழிபாட்டையும் மறு மலர்ச்சியடையுமாறு தலங்கள் தோறும் சென்றுபாடி-முருகவேளை மையமாகக் கொண்டு-காழ்ப்பில்லாத சமயநெறிகளை அவ்வச் சமயத்தோரும் பயிலுமாறு பரவி இன்புற வழியமைத்துக் கொடுத்த ஞானக்கொடையை நாம் எவ்வாறு போற்றினும் மன நிறைவு ஏற்படாது. அருணகிரி வள்ளல் என்பது இத்தன்மை யிலும் அவருக்குப் பொருத்தமே! அவர் திருமுறை நெறியொற்றி, வேதாகம நெறியொற்றி, மந்திர தந்திர நெறியொற்றி-பண்டு பாடல் பெற்ற தலங்களுக்கெல்லாம் மீண்டும் சென்று-தன் திருப் புகழ்ப் பாடல்களால் இறைவன் அருளாட்சியை அங்கே மீண்டும்

மக்கள் கண்டு தொழுமாறு துலங்கச் செய்தவர்! முருகவேளின் கருணைத்தலங்களை நம் கண்ணில் படவைத்தவர்! அவர் பாடிப் பரவிய தலங்களுக்கு உங்களை அழைத்துச் செல்லவே இந்நூல் ஒருவாறு முயல்கின்றது. திருப்புகழ்த் தலங்களைப் பார்த்து வணங்கும்போது அங்கே அருணகிரிநாதரது அற்புத அருந்தமிழும் நம் நினைவில் வரவேண்டும். நாமும் நம் சமயத்திற்கு இயன்ற அளவு தொண்டாற்ற வேண்டும். என்ற உணர்ச்சி அருணகிரி நாதரது வாழ்க்கை வரலாற்றைப் பயிலும் போது நமக்கு ஏற்பட வேண்டும். இதற்கு ஆறுமுக வள்ளலின் அருள் பூரணமாக நமக்குக் கிட்டுவதாக!

*......அறுமுகப் பெருமாளே!*

*குயில்மொழிக் கயல்விழித் துகிரிதழ்ச் சிலைநுதற்*<br>
*சசிமுகத் திளநகைக் கனகுழற் றனகிரிக்*<br>
*கொடியிடைப் பிடிநடைக் குறமகள் திருவினைப்*<br>
*புணர்வோனே!*

*சகல துக்கமுமறச் சகலசற்குணம் வரத்*<br>
*தரணியில் புகழ்பெறத் தகைமை பெற்றுனதுபொற்*<br>
*சரணம் எப்பொழுதும் நட்பொடு நினைத்திட அருள்*<br>
*தருவாயே!*

முருகா சரணம்

# அருணகிரிநாதர் சமயம்

*பிறவியலை யாற்றினிற் புகுதாதே*
*பிரகிருதி மார்க்கமுற் றலையாதே*
*உறுதி குருவாக்கியப் பொருளாலே*
*உனதுபத காக்ஷியைத் தருவாயே!*
*அறுசமய சாத்திரப் பொருளோனே!*
*அறிவுளறி வார்க்குணக் கடலோனே!*
*குறுமுனிவ னேத்துமுத் தமிழோனே!*
*குமரகுரு கார்த்திகைப் பெருமாளே!*

— திருப்புகழ்.

*சமய பத்தி வ்ருதாத்தனை நினையாதே*
*சரணபத்ம சிவார்ச்சனை தனைநாடி*
*அமைய சற்குரு சாத்திர மொழிநூலால்*
*அருளெனக்கினி மேற்றுணை தருவாயே!*

திருப்புகழ்.

நமது புராதன சனாதன தருமநெறியில் இறைவழிபாடு இன்றியமையாத அம்சமாகும். பரம்பொருளைப் பல்வேறு பெயர் சூட்டிப் பரவுவது இதன் தனிச்சிறப்பாகும். ஒவ்வொரு ஞானிக்கும் அப்பரம்பொருள் காட்டிய கோலம் வேறாக அமைந்த போதிலும் உலகினைப் படைத்துக் காத்து நிலைநிறுத்தி அழித்து மறைத்து அருளும் ஐந்தொழிலை ஒருவனே செய்கின்றான் என்பதை நம் ஆன்றோர் நன்கறிந்திருந்தனர். அவரவர் பக்குவத்திற்கேற்ப-மன ஒருமைப்பாட்டிற்கேற்ப-அப்பரம்பொருளைப் பெயரிட்டு உருவமைத்து வழிபட்டுப் பின்வரும் சந்ததியினருக்கும் வழி காட்டினர். எவரெவர் எப்பெயர் சூட்டி அழைத்தாலும் அப் பெயர் கொண்டு அவர்க்குத் திருக்கோலங்காட்டியருளும் ஒப்பரிய திருவருளை நன்கு துய்த்தவர்கள் நம் முன்னோர்.

சூரியன், விநாயகர், முருகன், சிவன், தேவி, திருமால் என்னும் ஆறு தெய்வங்களை முக்கியமாகக் கொண்டு, சௌரம் காணபத்தியம், கௌமாரம், சைவம், சாக்தம், வைஷ்ணவம் என்ற ஆறுசமயங்கள் உருவாயின. ஆதிசங்கரர் இந்து ஆறு சமயநெறிகளுக்கும் வழிவகை செய்து ''ஷண்மத ஸ்தாபகர்'' என்று பாராட்டப் பெற்றார்.

கி. பி. 14, 15-ம் நூற்றுண்டுகளில் இந்துசமயம் நலிவுற்ற போது அவதரித்த அருணகிரிநாதர் இந்த அறுவகைச் சமயத் திற்கும் ஆக்கம் தேடிச் சமய மறுமலர்ச்சியைத் தோற்றுவித்தார் என்பது குறிப்பிடத்தக்கது. ஆறு தெய்வங்களையும் அவர் பாடிய பாங்கில் ஒருதனிச் சிறப்பைக் காண்கின்றோம். நிர்க்குண உபாசனையாக அமைந்தால் "ஊரிலான், பேரிலான், உருவிலான்" என்று கூறிவிட முடியும். ஆனால் சகுண உபாசனை கொண்டநம் அருணகிரிநாதர் முருகனைத் தம்உபாசனு மூர்த்தியாகக் கொண்டு,

சூரியன் முதலான சுடர்களை நினைவுறுத்தி அவற்றுள்ஒளிர் பவனே என்று முருகனைப் போற்றினர்;

கணபதியைப் பாடி அப்பெருமானது தம்பியே என்று கந்தனைப் பரவினர்;

சிவபெருமானைத் துதித்து வருணித்து அப்பரம் பொருளின் செல்வனே, அவர்க்குக் குருநாதனே—என்று குகனைச் சிந்தித்தார்;

தேவியை-அம்பிகையைப் பலபட போற்றி அவள் தன் செல்வனே என்று செவ்வேளைப் பரவினர்;

திருமாலின் பல பராக்கிரமங்களையும் போற்றித் துதித்து அப்பெருமானின் அருமை மருகனே எனமுருகனைப் போற்றினர்!

அருணகிரிநாதர் சமயம் எது என்ற வினு எழுவது இயற்கையே! காரணம் அவர் முருகனைப் போற்றும் பாங்கில் அவரைக் கௌமாரசமயத்தினர் எனவும் கணபதியைப்போற்றும் முறையில் காணுபத்திய சமயத்தினர் எனவும், சிவனைப் போற்றும் பெற்றியில் சைவர் எனவும், தேவியைப் பாடும் சீர்மையில் சாக்தர் எனவும், திருமாலைப் பாடும் திறத்தில் வைணவர் எனவும் ஒளியைப் போற்றுவதில் சௌரமதத்தினர் எனவும் கூறத் தோன்றும்.

"ஆறுமுகம் ஆனபொருள் நீயருளல் வேண்டும்" என்று அருணகிரிநாதர் பாடும்போது இவ்வறுவகைச் சமயங்களையும் தம் திருமுகங்களாகக் கொண்டு முருகன் திகழ்கின்ற நயத்தை யும் காட்டுகின்றுரோ என ஐயுறத் தோன்றும்.

## அருணகிரிநாதரும் சைவமும்

குமரவேளையே தன் வழிபடு மூர்த்தியாகக் கொண்டு- அவரருளாலேயே எல்லா அருள் நலங்களையும் எய்தப்பெற்ற

அருணகிரிநாதர்-திருஞான சம்பந்தரை முருகவேளின் அவதார மாகக் காட்டும் பெற்றியை நாம் சிந்திக்க வேண்டியுள்ளது.

பல சமயக் கோட்பாடுகளையும் அலசி ஆராய்ந்த நம் அருணகிரிநாதர், பல்வகை யோகங்களையும் பயின்றவர் என்பதும் சைவசித்தாந்த நெறியில் மிகுந்த ஈடுபாடுடையவர் என்பதும் அவர்தம் பாடல்களால் காணக்கிடக்கின்றது. வேதசிவாகமங் களின் முடிபாக விளங்கும் சித்தாந்த சைவமே அருணகிரிநாதரது சமயம் என்பாரும் உளர். சித்தாந்த சமயம்-சமயாதீத சமய மாகும். இதனுள் அடங்காத சமயக் கருத்துக்களே இல்லை, சிவஞானம் சமயக் கலகங்களுக்கு அப்பாற்பட்டதாகும்.

*கலகல கலெனக் கண்ட பேரொடு*
*சிறுகிடு சமயப் பங்க வாதிகள்*
*கதறிய வெகுசொற் பங்கமாகிய பொங்களாவும்*
*கலைகளு மொழியப் பஞ்சபூதமும்*
*மொழியுற மொழியிற் றுஞ்சுருதன*
*கரணமு மொழியத் தந்தஞானம் இருந்தவாறுஎன்?*
*(அலகிலவுணரை)*

எனவரும் திருப்புகழ்ப்பகுதி ஈண்டு சிந்திக்கத் தக்கது. சிவஞானத் தினாலேயே குகப்பெருமானின் பராக்கிரமத்தைத் துதிக்கத் தகுதி கிட்டுகின்றது என்பதை அவர்தம் பாடல்களில் காட்டுகின்றார்.

*"சிவஞான சித்திதனை அருள்வாயே" (582)**

*"அகில வெளியையும் ஒளியையும் அறிசிவ*
*தத்வப்ர சித்திதனை முத்திசிவக் கடலையென்று சேர்வேன்"*
*(921)*

*"மதனகலை விதன மறுவித்துத் திருப்புகழை*
*யுற்றுத் துதிக்கும் வகை*
*அபரிமித சிவஅறிவ சிக்குற்றுணர்ச்சியினில்*
*ரட்சித் தளித்தருள்வது எந்தநாளோ" (906)*

சைவ சித்தாந்தத்தில் பதி, பசு, பாசம் என்ற முப்பொருளுண்மை பேசப்படுகிறது. திருப்புகழில் அருணகிரிநாதர் இவற்றை முருகனிடம் வேண்டுகின்றார் :

*"பகர்தலி லாதானை யேதுஞ் சிலதறியா வேழை நானுன்*
*பதிபசு பாசோபதேசம் பெறவேணும்" (914)*

---

*எண்—தணிகைமணியவர்களது திருப்புகழ் வரிசைப்படி அமைந்தது.

"பசுபாசமு மகிலாதிக பரிபூரண பூரணகா
பதிநேரு நினருளால் மெயுணர்ந்திடேனோ" (913)

கதிபெற விடருறுதன பதிபசு பாசமானவை
கசடற வேறுவேறு செய்தருள்வாயே'. (1217)

சிவபுராணமும் சிவத்தை அறிவிக்கும் ஞானக்கலைகளாகிய சைவ சாத்திரமும் தவிர்த்து ஏனைய நூல்களின் அறிவு வேண்டாம், எனக் கூறுகின்றார் அருணகிரிநாதர் :

"தெரியு ஞானம் ஓதிக் கரைந்து
சிவபுராண நூலிற் பயின்று
செறியுமாறு தாளைப் பரிந்து தரவேணும்" (966)

"ஒருநாலு
சுருதிவழி மொழிசிவகலை அலதினி
உலக கலைகளும் அலமலம்" (912)

"வேதமுடிவின் பரம் அருள்வாயே" (972) எனவும் "நான்மறை உபநிடதம் அதனை விளங்க நீயருள்புரிவாயே" (749) எனவும் அவர் வேண்டுவதும் ஈண்டு கருதத்தக்கது.

சிவஞானப்பேறு வேண்டும் அருணகிரிப் பெருமான் சரியை, கிரியை, யோகம் ஞானம் என்னும் நான்கு நெறிகளையும் வேண்டுகின்றார். (878, 983, 1039). தீட்சையை முக்கியமாக வற்புறுத்துவது சைவம். சிவஞானப் பேற்றுக்குத் தீட்சைமிகவும் இன்றியமையாதது. அருணகிரிநாதர் தீட்சைதர வேண்டிப் பாடுகின்றார்.

தழுவி யநுராகமும் விளைத்துமா யாக்கை
தனையு மருநாளையும் அவத்திலே போக்கும்
தலையறிவி லேனை நெறிநிற்கநீ தீட்சை தரவேணும் (827)

முருகபெருமானின் நயன தீட்சையையும், திருவடி தீட்சையையும் வள்ளிநாயகியின் ஸ்பரிச தீட்சையையும் பெற்றுத் தீட்சை செல்வராக விளங்கியவர் அருணகிரிநாதர்.

"சிவசமயஅறுமுகவ திருவேரகத்திலுறை பெருமாளே" எனவும் "திங்கள் முடிநாதர் சமயக்கார" எனவும் அவர் முருகவேளைப் பரவும் போது சைவநெறியில் திளைக்கும் முருக பக்தராகவே விளங்குகிறார். அவர் காட்டும் வள்ளிச் சன்மார்க்கமும் சிவநெறியும் ஒன்றே என்பர் சைவநெறியுணர்ந்தோர்.

# அருணகிரிநாதரும் சாக்தமும்

"சக்தி இல்லையேல் சிவனே என்றிரு" என்பது நம்நாட்டின் முதுமொழி. "எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்" என்பது சிவஞான சித்தியார் கூற்று. ஆறுசமயங் களுக்கும் ஒரே சக்தியே ஜீவாதாரம். அவள் ஆதி, பரை, இச்சை, கிரியை, ஞானம் என்னும் ஐந்து சக்திகளாகவும் திகழ்கிறாள். அருணகிரிநாதர் என்ற பெயரிலேயே அவர் சாக்தர் என்பது தெளிவாகிறது என்பர். "நாதர்" என்ற பட்டம் ஸ்ரீ வித்யையில் பூரண தீட்சை பெற்ற சாக்தர்களுக்குரிய பெயராகும் என்பர். முருகனே தேவி உபாசகர்தாம்! ஞானசக்திதரன் தானே அவர்! ஆகவே அவர் வாக்கினாலே அருணகிரிநாதர் என்று பேர் பெற்ற தில் வியப்பில்லை.

தேவியைப்பற்றி அருணகிரிநாதர் கூறும் செய்திகளை எல்லாம் தொகுத்து "அருணகிரிநாதரும் தேவியும்" என்ற ஓர் அரிய ஆராய்ச்சிநூலை அருட்கவி சாதுராம் சுவாமிகளும் அருளிசைமணி S. V. சுப்பிரமணியமும் இயற்றியுள்ளனர். இந் நூலில் அருணகிரிநாதர் ஒரு சாக்தரே என்பதை அவர்கள் பல கோணங்களில் விளக்க முற்பட்டுள்ளனர். தேவி அவதரித்தநாள், பராசக்தியின் வடிவழகு, தேவியின் வாகனங்கள், தேவியின் பிரபாவம், தேவிஐம்பூத வடிவினள், தேவிபராக்கிரமம், தேவியை வழிபடுவோர், ஆகமங்களும் தேவியும், வாமாசார நோக்கில்தேவி, தேவியும் திருமாலும், தேவியும் சிவனும், தேவியும் கணபதியும், தேவியும் சூரியனும், யந்திரசக்ர பீடேச்வரி, சாக்த சம்பிரதாயத் தில் அம்பிகை பெயர்கள், அருணகிரி அம்பிகைக்குச் சூட்டிய பெயர்கள் என்றிவ்வாறு பலதலைப்புக்களில் அருணகிரிநாதரது அருட்பனுவல்களில் அம்பிகைபற்றிவரும் அற்புதச் செய்திகளைக் கொண்டு அருணகிரிநாதர் தேவி உபாசகர் எனவும், அந்ததேவி யின் குமாரனாகவே முருகனைக் கண்டார் எனவும் அவர்கள் காட்டியுள்ளனர்.

தேவியைப் பலபட வாழ்த்தி-அத்தகு அன்னையின் அருமை செல்வனே என்று முருகனை அவர் தோத்தரிப்பதை நாம் மறந்து விடலாகாது. அம்பிகை பாகனாகிய சிவனையும், அம்பிகை பாலனாகிய முருகனையும், அம்பிகையையும் பிரித்துப் பேசுவது இயலாதன்றோ. சிவனார் மகனார், அம்பிகை மகனார், என்று முருகனைப் போற்றும்போது சிவன் பராக்கிரமும், அம்பிகை

பராக்கிரமும், வரத்தானே செய்யும். சிவபரம்பொருளும், சக்தி மான்மியமும் முருகவேளின் பரம்பரையன்றோ. சத்து சித்து ஆனந்தமாக- சோமாஸ் கந்தமூர்த்தத்தை அமைத்த நம் முன்னோர் பேரறிவை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். சிவபெருமானுக் கும் அம்பிகைக்கும் நடுவே ஞானக்குழந்தையாகிய ஸ்கந்தமூர்த்தி எழுந்தருளியிருக்கும் பாங்கில் திருப்புகழை அணுகவேண்டும்.

## அருணகிரிநாதரும் திருமாலும்

முருகவேளைத் ''திருமால் மருகனே!'' என்று பாடுவதில்தான் அருணகிரிநாதருக்குக் எத்துணைப் பரவசம்! முருகனை நினைக்கும் போதெல்லாம் கோசலைக் குமரனையும் யசோதைக் குமரனையும் அவர் நினைக்கத் தவறுவதில்லை, இராமாயணமும் பாரதமும் திருப்புகழில் பல கோணங்களில் சித்தரிக்கப் படுகின்றன. தசாவதாரங்களில் பரசுராமனைத் தவிரஏனைய ஒன்பது அவதாரங் களும் திருப்புகழில் சிறப்பித்துப் போற்றப் படுகின்றன. சர்வம் விஷ்ணு மயம் ஜகத் (856) என்ற மந்திரத்தையும் திருப்புகழில் கேட்கிறோம். திருமாலின் பராக்கிரமங்களைப் போற்றிப் பாடும் போது ஆழ்வார்களையும் விஞ்சி நிற்கிறார் நம் செஞ்சொல் அருணகிரிநாதர். அஷ்டலட்சுமி, அநுமன், திருமாலின் ஆயுதங்கள் என்று ஒன்றையும் விடாமல் காத்தற் கடவுளாகிய கண்ணனின்- கருணைராமனின் பல்வேறு பிரபாவங்களையும் ஏறத்தாழ 300 இடங்களில் அருணகிரிநாதர் அற்புதமாக-அழகாக-அருந்தமிழில் வாழ்த்தி-அவ்வளவுயர்ந்த பெருமானின் அருமை மருகனே என்று முருகனை அவர் அழைக்கும்போது நாம் மெய்ம்மறந்து திருமாலடி யாராகி முருகனைப் பணிவது போன்ற நிலையை அடைகின்றோம்.

> *''எந்தை வருக! ரகுநாயக வருக!*
> *மைந்தவருக! மகனே இனிவருக!*
> *என்கண் வருக! அரசேவருக!—அபிராம*
> *இங்குவருக! அரசேவருக! முலை*
> *உண்கவருக! மலர்சூடிட வருக!*
> *என்று பரிவினொடு கோசலைபுகல வருமாயன்''*
> *(தொந்திசரிய...)*

என்று பாடும்போது ஆழ்வார்கண்ட நாலாயிரப் பிரபந்தத் தெள்ளமுதினும் திருப்புகழ்ச் செந்தேனமுது திருமாலின்பத்தில் இன்னும் தித்திக்கின்றதன்றோ! தமிழின் பின்சென்ற (கணி கண்ணன் வரலாறு) சொன்ன வண்ணம் செய்த பெருமாள் வரலாற்றை அழகாகக் காட்டுவார் அருணகிரிநாதர். அச்சுதன்

அரிகேசவன், ஆதிநாராயணன், ஆதிமாயன், ஆதியரி, ஆதிரெகு ராம ஜெயமால் என்றெல்லாம் அவர் குறிப்பிடும்போது வைணவ உணர்வு விஞ்சி நிற்பதைக் காண்கிறோம்.

முருகனைக் காட்டும்போது அப்பெருமானது தந்தையையும் தாயையும், அண்ணனையும், மாமனையும் புகழ்ந்து அமைத்த அருணகிரிநாதரின் தனிப்பாங்குதான் இன்று அவர்தம் பெருமைக்கு அணி செய்கின்றது. வேறெந்தக் கவிஞரும் காணாத ஒரு புதுப்பாதையை அவர் அமைத்துக் கொண்டது அவர் காலத்தின் அவசியமாகவும் இருந்திருக்கலாம் என்று எண்ணத் தோன்று கின்றது. ஹிந்துசமய மறுமலர்ச்சிப் புலவராக-ஞானியாக-சமயத் தூதராகப் பல பணியாற்றிய அவர்-தலங்கள் தோறும் சென்று பாடி, ஆழ்வார்களையும் நாயன்மார்களையும் அடியொற்றிச் சென்று சமயத் தொண்டாற்றி-நம் சமய நெறிகளும் திருக்கோயில்களும் மீண்டும் தழைத்துவளர வேலியமைத்து பக்திநீர் பாய்ச்சி வழியமைத்தார். கி. பி. 14, 15-ம் நூற்றாண்டுகளில் அவரளித்த இத் தூண்டுதல் பிறகு வந்த அருளாளர்களுக்குப் பேருதவியாக இருந்தது. அதனாற்றான் தாயுமான அடிகள் அருணகிரியாரை

*"கந்தரநு பூதிபெற்றுக் கந்தரநுபூதி சொன்ன*
*எந்தையருள் நாடி இருக்கும்நாள் எந்நாளோ?"*

என்று போற்றினார்!

அருணகிரிநாதரின் சமரசப்பான்மையேஇன்றுவேண்டுவது. சமயக்காழ்ப்புக்களால் நாம் நலிவடைந்தது போதும்! இறை யுணர்வில் ஒருமைப்பாட்டைக் கண்ட ஒப்பற்ற அருணகிரிநாதர் சென்ற நெறியை **அருணகிரிநாதர் சமயம்** என்றே தனிப்பெயரிட்டு அழைக்கலாம் அல்லவா!

***"இந்திராணிதன் மாதோடு நன்குற***
***மங்கை மானையும் மாலாய் மணந்துஉல***
***கெங்கு மேவிய தேவாலயந்தொறு பெருமாளே"***

# அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்

## சென்னை & செங்கல்பட்டு மாவட்டம்

சென்னை மாவட்டம்

1. மயிலாப்பூர்.
2. திருவொற்றியூர்.
3. திருவான்மியூர்.

செங்கல்பட்டு மாவட்டம்

4. திருவலிதாயம். (பாடி)
5. திருவேற்காடு
6. கோயம்பேடு.
7. வடதிருமுல்லை வாயில்.
8. ஆண்டார்குப்பம்.
9. சிறுவாபுரி (சின்னம்பேடு)
10. பாகசாலை.
11. திருவாலங்காடு & பழையனூர்.
12. திருத்தணிகை.
13. நெடியம்.
14. வெள்ளிகரம்.
15. காஞ்சிபுரம்.
16. கோடைநகர் (வல்லக்கோட்டை)
17. திருப்போரூர்.
18. திருக்கழுக்குன்றம்.
19. இளையனூர் வேலூர்.
20. உத்திர மேரூர்.
21. விசூர்.
22. மதுராந்தகம்.
23. புலிப்பரக்கோயில். (வடதிருச்சிற்றம்பலம்)
24. மாடம்பாக்கம்.
25. சேயூர். (வளவாபுரி)
26. பெரும்பேறு.


செங்கற்பட்டு மாவட்டம்
ஆந்திரப் பிரதேசம்
பொன்னேரி
ஆண்டார்குப்பம்
நெடியம்
திருவாலங்காடு
திருவேற்காடு
திருவொற்றியூர்
சென்னை
மயிலாப்பூர்
சைதாப்பேட்டை
திருவான்மியூர்
காஞ்சிபுரம்
வல்லக்கோட்டை
வங்காள
விரிகுடா
திருப்போரூர்
செங்கற்பட்டு
வட ஆற்காடு
மதுராந்தகம்
குறிப்பு
மாநில எல்லை
மாவட்ட எல்லை
இருப்புப்பாதை
திருப்புகழ்தலங்கள்
வைப்புத்தலங்கள்
தென் ஆற்காடு

கயிலைப்பதி யரன் முருகோனே
கடலக்கரை திரை யருகேசூழ்
மயிலைப் பதிதனி லுறைவோனே
மகிமைக் கடியவர் பெருமாளே!

# வனிதை உயிர் மீளழைத்த மயிலை

மயிலைப் பெயராகக் கொண்ட பதிகள் தமிழ் நாட்டில் நான்கு உள்ளன. மயிலாக உருக்கொண்டு அம்பிகை இறைவனை வழிபட்ட தலம் இரண்டு: திருமயிலை, மாயூரம் (மயிலாடுதுறை) மயில் ஆடியதலம் மயிலாடி; மயில் உருவில் குன்றாக நின்று சூரபன்மன் தவமியற்றிய தலம்-மயிலம், இந்நான்கினுள் மயிலை, மயிலாபுரி, மயிலாப்பூர் என்றெல்லாம் புகழ்பெறும்தலம் கயிலைக்கு நிகரானது; கயிலையே மயிலை, மயிலையே கயிலை என்பர். திருக்குறள் தந்த திருவள்ளுவர் அவதரித்த பதிஇது. இத்தலத்தினை அடைவது எளிது. சென்னையின் ஒரு பகுதியான மயிலாப்பூர் அனைவரும் அறிந்த ஒரு தலமன்றோ! இத்தலத்தில் சிவநேசச் செட்டியார் என்ற சைவ நல்லன்பர் இருந்தார்; அவருக்குப் பூம்பாவை என்ற பெண். அப்பெண்ணைத் திருஞான சம்பந்தருக்கே உடைமை யாக்கியதோடு தன்னையும் தனது உடைமை அனைத்தையும் அவருக்கே அர்ப்பணித்து விட்டார் சிவநேசர். ஆனால் பூம்பாவை அரவு தீண்டி இறந்துவிட்டாள். அவளது சாம்பலைக் குடத்தில் வைத்துப் பேணித் திருஞான சம்பந்தரிடம் ஒப்படைக்கக் காத்திருந்தார் சிவநேசர். தலம்பல வழிபட்டுத் திருமயிலை நோக்கித் திருஞானசம்பந்தர் வருவது அறிந்து சிறப்பாக வரவேற்றார். சிவநேசரின் அன்பின் திறத்தை அறிந்த திருஞான சம்பந்தர், சாம்பல் உள்ள அக்குடத்தைக் கோயிலின் வாசலின் புறத்தே கொண்டுவரச் சொல்லி, "மட்டிட்ட புன்னையும்" என்ற பதிகத்தைப் பாட, படிப்படியே குடத்திலிருந்து எலும்பும் சாம்பலும் பெண்ணுருக் கொண்டு அன்று எந்த வயதினளாக பூம்பாவை வளர்ந்திருப்பாளோ-அவ்வாறு திகழ்ந்து, வணங்கி நின்றாள். எலும்பு தமிழால் பெண்ணான தலம் திருமயிலை. இவ்வற்புதம் வேறு எத்தலத்திலும் நிகழவில்லை! அத்தகு தலத்திற்கு நாம் இப்போது செல்கின்றோம்.

இறைவன்: கபாலீசர். இறைவி: கற்பகாம்பிகை. இறைவன் மேற்கு நோக்கி விளங்குகின்றார். இறைவி தெற்கு நோக்கி விளங்குகின்றார். மேற்குக் கோபுர வாயிலினுள் நுழைந்தவுடன் துவஜஸ்தம்பம் அருகில் இடப்புறம் குடத்திலிருந்து பூம்பாவை எழுந்த கோலத்தையும் திருஞான சம்பந்தரையும் தரிசிக்கின்றோம். வலப்புறம் அருணகிரிநாதர் சன்னிதி புதிதாக அமைக்கப்பட்டுள்ளது.

பிராகாரத்தில் தனிக்கோயிலில் சிங்காரவேலனாக முருகன் திகழ்கின்றார். ஆறுமுகம், பன்னிரு கரங்கள், மயில்மீது அமர்ந்த கோலம்; தேவிமார் இருவரும் யானைமீது உட்கார்ந்தநிலை. மேற்கு நோக்கிய கம்பீரமான சந்நிதி.

உற்சவமூர்த்தி சுப்பிரமணியர் என்ற பெயருடன் ஒரு முகம், நான்கு திருக்கரங்கள், பின்புறம் மயில், அருகில் தேவிமார் இருவர்சூழக் காட்சியருள்கின்றார். மற்றொரு உற்சவர் மயில் மீது அமர்ந்த ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களுடன் தேவிமார் இருவர்சூழ உள்ளார்.

காமிகாகமப்படி நாடோறும் நான்குகால வழிபாடு இங்கே நடைபெறுகின்றது. சஷ்டி, கார்த்திகை நாட்களில் சிறப்பு வழிபாடு. ஸ்கந்த சஷ்டியன்று ஏகதின லட்சார்ச்சனை நடைபெறுகின்றது, தைமாதத்தில் இருநாட்கள் முருகப்பெருமான் தெப்பக் காட்சியருள்கின்றார்.

தலவிருட்சம்: புன்னை.

இத்தலத்தில் பழனியாண்டவர் சன்னிதியும் சிறப்பாக உள்ளது. வடக்கு நோக்கிய சந்நிதி. இவருக்கு அருகில் இத் தலத்தில் தோன்றி மனத்தினாலேயே கோயில் கட்டிய வாயிலார் நாயனார் சன்னிதியும் உள்ளது.

திருஞான சம்பந்தர், வாயிலார், அருணகிரிநாதர் ஆகிய மூன்று மெய்யடியார்கள் பாடிக்களித்த தலம். அற்புதமான பத்து திருப்புகழ்ப் பாடல்கள் இத்தலத்திற்கு அருணகிரிநாதர் அருளியுள்ளார்.

பூம்பாவை உயிர் பெற்றெழுந்த நிகழ்ச்சியை

*"அளகை வணிகோர் குலத்தில் வனிதையுயிர் மீள்அழைப்ப*
*அருள்பரவு பாடல் சொற்ற குமரேசா"*

—(*களபமணி...*)

என்று அழகாகக் காட்டுகின்றார் அருணகிரிநாத சுவாமிகள். இத்தலத் திருப்புகழ்ப் பாக்களில் அற்புதமான சில பகுதிகள் சிந்தித்தற்குரியன:

*திறல் குலாவிய சேவடி வந்தித் தருள்கூடத்*
*தினமு மேமிக வாழ்வுறும் இன்பைத் தருவாயே*
—(*அறமிலதா...*)

*அகர உகரதி மகரதி சிகரதி*
*யகர அருளதி தெருளதி வலவல*
*அரண முரணுறும் அசுரர்கள் கெடஅயில் விடுவோனே*
*அழகு மிலகிய புலமையு மகிமையும்*
*வளமு முறைதிரு மயிலையில் அநுதினம்*
*அமரும் அரகர சிவசுத அடியவர் பெருமாளே*
(இகலவருதிரை...)

இத்தலத்து அம்பிகை-கற்பகாம்பிகை அருணகிரிநாதரைப் பெரிதும் ஈர்த்திருக்க வேண்டும். அதனாற்றான் "நிரைதருமணி என்ற திருப்புகழில்...

*"பரை அபிநவை சிவை சாம்பவி உமை*
*அகிலமும் அருள் அருளேய்ந்த கோமளி*
*பயிரவி திரிபுரை யாய்ந்த நூல்மறை சதகோடி*
*பகவதி யிருசுடர் ஏந்து காரணி*
*மலைமகள் கவுரி விதார்ந்த மோகினி*
*படர்சடை யவனிடம் நீங்குறுதவள் தருகோவே"*

என்று அம்பிகை பாகனாக அறுமுகனைப் பாடுகின்றார். "வருமயிலொத்தவர்" என்ற இத்தலத் திருப்புகழிலும்...

*"உரைசெயும் உத்தம வீரா நாரணி*
*உமையவள் உத்தர பூர்வா காரணி*
*உறுஜக ரக்ஷணி நீரா வாரணி தருசேயே"*

என்று பாடுகின்றார் அருணகிரிநாதர்.

திருமயிலை வீற்றிருக்கும் கற்பகச் செல்வனை அருணகிரி நாதரோடு நாமும் பாடிப் பரவுவோம்.

சிரகரகபாலர் அரிவையொரு பாகர்
திகழ் கனகமேனி யுடையாளர்
திருவளரும் ஆதிபுரியதனில் மேவு
ஜயமுருக தேவர் பெருமாளே!

# திருவொற்றியுரு மருவுநகர் ஒற்றியூர்

சென்னைக்கருகில் அமைந்த திருவொற்றியூரை அறியாதார் இலர். இங்கே விளங்கும் திருக்கோயில் பல்விதச் சிறப்புக்களைப் கொண்டது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் இங்கேசங்கிலிநாச்சியாரை மகிழ மரத்தடியின் கீழ் வாக்குறுதி கொடுத்துத் திருமணம் பூண்டதும், இத்தலம்விட்டு நீங்கியபோது இருகண் பார்வையை யும் இழந்து வருந்தியதும் பெரியபுராணத்தால் இனிது பேசப் படுகின்றன.

இங்கே சிவபெருமான் புற்றிடங் கொண்டார். வன்மீக நாதர், படம்பக்கநாதர், ஆதிபுரீசர் என்றெல்லாம் போற்றப் படுகிறார். இறைவி: வடிவுடைநாயகி என்று போற்றப் பெறுகிறாள்.

இத்தலம் பல அருளாளர்களை ஈர்த்து முக்தியளித்த சிறப்புடையது. பட்டினத்தடிகள் முக்தி பெற்ற தலம் இது அன்றோ! அருணகிரிநாதரும், அண்மையில் வாழ்ந்த வடலூர் இராமலிங்க சுவாமிகளும் இத்தலத்தினைப் பரவி இன்புற்றதை அவர்தம் அருட்பாடல்கள் காட்டுகின்றன.

இங்கு எழுந்தருளியுள்ள முருகன் அருள்மிகு மூலட்டான அருள்சோதி முருகன் என்று வழிபடப் பெறுகின்றார். ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு, நின்ற திருக்கோலத்தில், பின்புறம் மயில் தோகைவிரித்த நிலையில் புன்னகை தவழும் கம்பீரத்துடன் கிழக்கு நோக்கி விளங்கும் பெருமானை எப்படி வருணிக்க முடியும்?

உற்சவ மூர்த்தியும் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு இருதேவியரும் புடைசூழ நின்ற திருக்கோலத்தில், பின்புறம் மயில் விளங்க, தெற்கு நோக்கி விளங்குகின்றார்.

பாலசுப்பிரமணியர் திருவுருவம் 5 அடி உயரத்துடன் தனியே திகழ்கின்றது. குழந்தையீசர், ஜகந்நாதர், நால்வர், சுந்தரர், சங்கிலியார், சகஸ்ரலிங்கம், அமிருதகண்டேசர் இருபத்தேழு நட்சத்திர லிங்கங்கள், அண்ணுமலையார், ஜம்புகேசுவரர், நாகலிங்கர், மீனுட்சி சுந்தரேசுவரர், பைரவர், ஆதிசங்கரர், தியாகராஜர் முதலிய சந்நிதிகளின் சிறப்புகள் விரிக்கிற் பெருகும்.

நாடோறும் நான்குகால வழிபாடு இங்கே நிகழ்கின்றது. சித்திரை, வைகாசி, புரட்டாசி மாதங்களில் திருவிழாக்கள், நிகழ்கின்றன. ஸ்கந்தசஷ்டி விழாவும் மாசி பிரம்மோற்சவமும் சிறப்பானவை.

திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், ஆதிசங்கரர், அருணகிரிநாதர், பட்டினத்தார், வடலூர் இராமலிங்க சுவாமிகள் முதலிய அருளாளர்கள் பாடிப் பரவிய தலம் இது.

திருஒற்றியூரில் செக்கார் குலத்தில் தோன்றி திருவிளக்குத் தொண்டு செய்த கலியநாயஞர் வரலாறு சுவையானது. மிகப் பெருஞ் செல்வந்தராய்த் திகழ்ந்த கலியநாயஞர், தமது செல்வம் அனைத்தையும் இழந்த பின்னரும் திருத்தொண்டிலே உறைப்பாய் நின்று, தமது திருவிளக்குப்பணி மாளில் தாமும் மாள்வதே தகுதி என்று தமது உடலின் உதிரத்தையே எண்ணெய்யாக வார்க்கத் துணிந்தார். இறைவனுல் அதை எப்படித் தரிக்க முடியும்? பரமன் வெளிப்பட்டு தடுத்தாட்கொண்ட கருணைமிக்கத் தலம் இது. கலியநாயஞர் திருவுருவம் வழிபடப் பெறுகின்றது.

யோகநிலையில் கௌளீசுவரர் சந்நிதி உள்ளது. அவருக்கு நான்கு கரங்கள் உள்ளன. அருகில் ஆதிசங்கரர் விளங்குகின்றுர். பிற்காலத்தில் கட்டப்பட்ட திருவொற்றிசுவரர் கோயில் உள்ளது. இக்கோயிலில் இராமநாதர், பர்வதவர்த்தினி சந்நிதிகள் உள்ளன. பின்புறம் பாலமுருகன் நான்கு கரங்களுடன் விளங்குகிறுர். இவரையன்றி வள்ளி தேவயானை சூழ சுப்பிரமணியர் சந்நிதியும் உண்டு.

திருவொற்றியூர் திருக்கோயில் கலைமலிந்த சிற்பக்காட்சி கூடமாகத் திகழ்கின்றது. பலகல்வெட்டுக்கள் உள்ளன.

வசந்தமண்டபம், கஜப்பிரஷ்ட விமானம், தியாகராசர் சந்நிதியின் வேலைப்பாடமைந்த கதவுகள், நந்தி பீடத்திலிருந்து

ஆறடிக்குமேல் அமைந்த சிற்பங்கள். இப்படிப் பலசிறப்பு அம்சங்கள்.

சென்னைக்கு வடக்கே 5 கல் தொலைவில் அமைந்த இத் தலத்தின் சிறப்புகளை விரிக்கின் பெருகும்.

இத்தலத்திற்கு அருணகிரிநாத சுவாமிகள் அருளிய இரு திருப்புகழ்ப்பாக்கள் உள்ளன. "கரியமுகில் போலு", "சொருபப் பிரகாச" என்று தொடங்குவன அவை.

*திருவொற்றி யுருமருவு நகரொற்றியுர் வாரிதிரை*
*யருகுற்றிடு மாதிசிவன் அருள்பாலா*
*திகழுற்றிடு யோகதவ மிகுமுக்கிய மாதவர்கள்*
*இதயத்திடமே மருவு பெருமாளே.*

*திசைமாமு காழியரி மகவான்மு னோர்கள் பணிஅழுதேச*
*சிவநாத ராலமயில்*
*திகழ்பால மாகமுற மணிமாளி மாடமுயர்*
*திருவான்மியூர் மருவு பெருமாளே!*

# மணிமாடம் உயர் திருவான்மியூர்

சென்னை மாநகரின் ஒருபகுதியாக விளங்கும் திருவான்மியூர் பண்டைய திருத்தலங்களுள் ஒன்ருகும். இத்தலச் சிறப்பினைத் திருஞானசம்பந்தர்,

"தென்பால் வையம் எல்லாம் திகழும் திருவான்மியூர்," "வண்புரிசைத் திருவான்மியூர்", "திரிதரும் புகழ்செல்வ மல்குந் திருவான்மியூர்" என்று பலபடப் போற்றுகின்ருர். திருவான்மியூருக்கு அண்மையில் விளங்கும் குன்றத்தூரில் அவதரித்து, சோழப்பேரரசின் முதலமைச்சராய்த் திகழ்ந்து திருத்தொண்டர் மாக்கதையாகிய நாயன்மார் வரலாற்றினைப் பெரியபுராணமாகப் பாடிய சேக்கிழார் சுவாமிகளும், திருஞான சம்பந்தர் திருவான்மியூரை வழிபட வருவதை அழகாகக் காட்டும் போது

*திருவான்மியூர் மன்னுந் திருத்தொண்டர் சிறப்பெதிர*
*வருவார்மங் கலஅணிகள் மறுகுநிரைத் தெதிர்கொள்ள*
*அருகாக இழிந்தருளி அவர்வணங்கத் தொழுதன்பு*
*தருவார்தங் கோயில்மணித் த-நெடுங்கோ புரஞ்சார்ந்தார்.*

*மிக்குயர்ந்த கோபுரத்தை வணங்கிவியன் திருமுன்றில்*
*புக்கருளிக் கோயிலினைப் புடைவலங் கொண்டுள்ளணைந்து*
*கொக்கிற்கும் மதிக்கொழுந்தும் குளிர்புனலும் ஒளிர்கின்ற*
*செக்கர்நிகர் சடைமுடியார் சேவடியின்கீழ்த் தாழ்ந்தார்.*

என்று அழகாகக் காட்டுவார்.

வால்மீகி முனிவர் தவம்புரிந்து சிவபெருமான் அருள் பெற்ற தலமாதலின் வான்மீகி க்ஷேத்திரம், திருவான்மியூர் என்றெல்லாம் பெயர் பெற்ற இத்தலம் பல்வேறு சிறப்புகளைக்

கொண்டது. இறைவன்: மருந்தீசர். இறைவி: திரிபுரசுந்தரி. இறைவன் மேற்கு நோக்கி விளங்குகின்றார். இறைவி தெற்கு நோக்கி எழுந்தருளியுள்ளாள்.

கோயிலுள் நுழைந்தவுடன் அருள்மிகு பாலசுப்பிரமணிய சுவாமி திருமுன் அடைகின்றோம். ஒருமுகமும், நான்குகரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் தேவிமார் இருபுறமும் நிற்க-கிழக்கு நோக்கி விளங்குகின்றார். மிகவும் அழகான திருவுருவம். மயில் இல்லை.

உற்சவமூர்த்தி-முத்துக்குமார சுவாமி என்று வழிபடப் பெறுகிறார். ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருபுறமும் தேவிமார்சூழ-நின்ற திருக்கோலத்தில் காண்கின்றோம். மயில் பின்புறம் உள்ளது. இருபுறமும் வீரவாகு, ஸ்ரீ அருணகிரி நாதர் திருவுருவங்கள் கவினுற அமைந்துள்ளன.

தினமும் நான்குகால வழிபாடுகள் நடைபெறுகின்றன. மாதக் கார்த்திகைச் சிறப்பு வழிபாடும், ஸ்கந்தசஷ்டி பெரு விழாவும் இங்கே சிறப்பு.

இத்தலத்தில் இரு திருக்குளங்கள் உள்ளன. அவற்றுள் பஞ்ச தீர்த்தம் சிறப்புடையது. தலவிருட்சம்: வன்னி.

இங்கு சோமாஸ்கந்தர்-தியாகராஜராக விளங்குகின்றார். பிரம்மோற்சவ காலத்தில் நாடோறும் தியாகராஜருக்குத் தனி விழாவும் பவனிக்காட்சியும் உண்டு. பங்குனி பிரம்மோற்சவத்தில் அம்பிகையின் சந்நிதியில் தியாகராஜரின் 18 நடனக்காட்சிகளைக்காண இன்றும் ஆயிரக்கணக்கான அன்பர்கள் கூடுகின்றனர்.

இக்கோயிலில் 108 சிவலிங்கங்கள் பிரதிட்டை செய்யப் பட்டுள்ளன.

இங்கே பிரம்மாவுக்கு உற்சவ மூர்த்தி உள்ளது. நடராஜர் மிகப் பெரிய அமைப்புடையதாயுள்ளது. துர்க்கை, விநாயகர், அறுபத்துமூவர், நால்வர், பிட்சாடனர், சதலிங்கம், மகாவிஷ்ணு தட்சிணாமூர்த்தி சந்நிதிகள் சிறப்பானவை. தட்சிணாமூர்த்தி தலை சற்று இடப்புறம் சாய்ந்து அழகுடன் விளங்குகின்றார்.

அப்பைய தீட்சிதருக்குக் காட்சி கொடுத்த சுவாமி சந்நிதி மேற்கு நோக்கி உள்ளது.

துர்க்கை சந்நிதியில் மகிடன் வாயருகில் தண்ணீர் ஊற்று வருவது இன்றும் காணக்கூடிய அற்புதமாகும்.

கோயிலுக்கு 1½ பர்லாங் தூரத்தில் கமலவிநாயகரைத் (ஒண்டிமர விநாயகர்) தரிசித்த பின்னரே அருணகிரிநாதர் இக் கோயிலுக்கு வந்து வழிபட்டதாகக் கூறப்படுகின்றது. கோயிலின் பின்புறம் வால்மீகி கோயில் உள்ளது.

அப்பைய தீட்சிதர், தாம் யாகம் செய்வதற்கு ஏற்ற இடமாகக் கொண்ட வேதச்ரேணி என்ற வேளச்சேரியில் தங்கியிருந்த போது, திருவான்மியூரே சிறந்ததலம் என்று கண்டு நடோறும் இங்கு வந்து தரிசனம் செய்தார் என்று கூறுவர்.

பாம்பன் சுவாமிகள் என்று போற்றப் பெறும் ஸ்ரீமத் குமர குருநாத சுவாமிகள் (1853–1929) இத்தலத்தில் சமாதி அடைந்தார். அவர்கள் தோற்றுவித்த மயூரவாகன சேவை விழாவும், அவருடைய குருபூசையும் ஆண்டுதோறும் சுவாமிகள் மடாலயத்தில் சிறப்பாக நடைபெறுகின்றன.

திரிபுரசுந்தரி என்று போற்றப்பெறும் இத்தல அம்பிகை சொக்கநாயகி என்றும் போற்றப் பெறுகின்றாள். இக்கோயிலில் கி. பி. 11-ம் நூற்றாண்டில் தமிழகத்தை ஆண்ட முதலாம் இராசேந்திர சோழன் (1012–44), இராசாதிராசன் (1018-54) இராசேந்திர தேவன் (1051–63) ஆகியோர் காலத்துக் கல்வெட்டுக் கள் காணப்படுவதால் இக்கோயிலின் தொன்மை புலப்படும்.

முதலாம் இராசேந்திரன் தனக்கு ஏற்பட்டிருந்த நோய் நீங்க வேண்டி இத்தலத்தில் சிலகாலம் தங்கி மருந்தீசரை வழி பட்டு நோய்நீங்கப் பெற்றான் என்று கல்வெட்டுச் செய்தி ஒன்று கூறும்.

தியாகராஜர் திருக்கலியாண மண்டபம் இங்கே உள்ளது. உணவு விடுதிகள் உள்ளன.

இத்தலத்திற்கு அருணகிரிநாத சுவாமிகளின் திருப்புகழ்ப் பாடல் ஒன்று மட்டுமே கிடைத்துள்ளது. (குசமாகியாரு...)

இன்றும் இத்தலத்திற்குப் பெருமை சேரும் வகையில் கலாக்ஷேத்திரமும், மகாமஹோபாத்தியாய டாக்டர் உ. வே. சுவாமிநாதய்யர் நூல்நிலையமும் அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

# திருவல்லிதாயமதில் உறைவோன்

சென்னையிலிருந்து அம்பத்தூர் செல்லும் வழியில் திருவள்ளூர் சாலையில் பாடி என்றழைக்கப்படும் தலமே திருவலிதாயம் ஆகும். கொரட்டூர் இரயில் நிலையத்திலிருந்து 4 பர்லாங் தொலைவில் இத்தலத்தை அடையலாம்.

இங்கே தேவாரம் பெற்ற திருக்கோயில் அமைந்துள்ளது. இறைவன் : திருவலிதாயநாதர் (ஸ்ரீவல்லீசர்): இறைவி தாயம்மை, (ஸ்ரீஜகதாம்பிகை). பரத்துவாஜ முனிவர் வலியன் என்னும் கருங்குருவியாகவந்து வழிபட்டுப் பேறுபெற்றமையால் இத்தலம் திருவலிதாயம் என்ற பெயர் பெற்றது. $4\frac{1}{2}$ அடி உயரமுடைய இலிங்கம். இலிங்கத்திற்கு வலப்பால் அம்பிகை நின்ற கோலமாகக்காட்சியருளுகின்றாள். கஜப்பிரஷ்ட விமானச் சிறப்புடையது.

இங்கே முருகப்பெருமான் சுப்பிரமணியராக ஒரு முகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் விளங்குகின்றார். பின்புறம் மயில். மயிலின் முகம் வலப்பக்கம் அமைந்துள்ளது 3 அடி உயரமுடைய முருகப்பெருமானுக்கு இருபுறமும் தேவிமார் விளங்குகின்றனர். கிழக்குநோக்கிய சந்நிதி.

உற்சவ சுப்பிரமணியரும் மூலவரைப் போன்றே விளங்குகின்றார். உயரம் $1\frac{1}{2}$ அடி.

அனுமன் பூசித்த இலிங்கமும், இந்திரன் சாபம் நீக்கிய மீனாட்சி சுந்தரேசரும், பரத்துவாசர் பூசித்த இலிங்கமும், இத்தலத்தில் சிறப்பாக உள்ளன.

பிட்சாடனர், மோகினி, குண்டோதரன் முதலிய பஞ்சலோக வடிவங்கள் அற்புதச் சிற்பங்களாகும்.

திருஞானசம்பந்தர்; பரத்துவாஜர், சிவபாதஇருதயர் சித்தி, புத்தி உடனுறைய கணபதி திருவுருவங்களும் காணவேண்டியவை.

தினமும் இரண்டுகால வழிபாடுகள் நிகழ்கின்றன. சித்திரா பௌர்ணமி, வைகாசிமூலம், திருஞானசம்பந்தர் திருநாள், தைப்பிரமோற்சவம் தேர்த்திருவிழா முதலியன இங்கு சிறப்பாக நடைபெறுகின்றன. கார்த்திகைதோறும் சிறப்பு வழிபாடு உண்டு.

பிரம்மாவின் மக்களான கமலை, வல்லி என்ற இருவரையும் இத்தலத்தில் விநாயகர் திருமணம் புரிந்து கொண்டதாகத்தல மான்மியம் கூறும்.

பரத்துவாஜ தீர்த்தம் – திருக்குளம். பாதிரிமரம் – தல விருட்சம்.

பரத்துவாஜர், ராமர், ஆஞ்சநேயர், சூரியன், சந்திரன், இந்திரன், வலியன் (கருங்குருவி) முதலியோர் வழிபட்ட இத்தலத்தைப் பௌர்ணமிதோறும் வழிபட்டோர் எல்லா நன்மைகளும் எய்தப் பெறுவர்.

திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும், அருணகிரிநாதர் திருப்புகழ் ஒன்றும், வடலூர் இராமலிங்கர் பாடல்களும் இத் தலத்திற்கு உள்ளன.

இத்தலத்தில் கல்வெட்டுகள் உள்ளன. ஜயங்கொண்ட சோழமண்டலத்து விக்கிரமசோழவளநாடு என்று இங்குள்ள கல்வெட்டில் பேசப்படுகின்றது.

இங்குள்ள வாகனங்கள் சிறப்புடையன. சென்னை முருகன் திருவருட்சங்கத்தினர் இத்தலத்திருப்புகழைக் கல்வெட்டில் பொறித்துள்ளனர்.

இங்கே உணவு விடுதிகள் உள்ளன. பஸ் வசதிகள் உள்ளன

மருமல்லி யார்குழலின் மடமாதர்
  மருளுள்ளி நாயடியன் அலையாமல்
இருநல்ல வாகுமன தடிபேண
  இனவல்ல மானமன தருளாயோ
கருநெல்லி மேனியரி மருகோனே
  கனவள்ளி யார்கணவ முருகேசா
திருவல்லி தாயம்அதில் உறைவோனே
  திகழ்வல்ல மாதவர்கள் பெருமாளே.

—அருணகிரிநாதசுவாமிகள்.

வேற்காடவல் வேடர்கன் மாமக
ளார்க்கார்வ நன் மாமகிழு தீகு
வேற்காடுறை வேதபுரீசுரர் தருசேயே
வேட்டார்மக வான்மக ளானவ
ளேட்டார்திரு மாமணி வாபொளி
ஊட்டார்பெரு வாழ்வெனவேவரு பெருமாளே.
(கார்ச்சார்குழ,,,-திருப்புகழ்,)

# அருள்பரவு வேலங்காடு

சென்னையிலிருந்து பூவிருந்தவல்லி செல்லும் வழியில் திருவேற்காடு என்ற திருத்தலம் உள்ளது. திருவேற்காடு என்றவுடன் அங்கு கருமாரியம்மன் திருக்கோயில் பலருக்கும் நினைவிற்கு வரும். ஆனால் அத்தலத்தில் தொன்மையானதொரு சிவாலயம் அமைந்துள்ளது சிலருக்கே நன்கு புரிந்திருக்கும். தொண்டை நாட்டில் அமைந்துள்ள 32 தேவாரத் தலங்களுள் ஒன்று திருவேற்காடு ஆகும் இப்பதி அருணகிரிநாதரின் திருப்புகழும் கொண்டது என்னும்போது அதன்சிறப்பு மேலும் மிகுகின்றது.

வடவேதாரணியம், வேற்காடு (வேலங்காடு) விஷம் தீண்டாப்பதி என்றெல்லாம் வழங்கப்பெறும் இத்தலத்தில் விளங்கும் சிவபெருமான் : வேதபுரீசர், இறைவி : பாலாம்பிகை வேற்கண்ணியம்மை. அகத்திய முனிவருக்குத் திருக்கலியாண காட்சியைக் காணச் செய்ததலம். மூலத்தானத்தில் இலிங்கத்திற்குப் பின்னால் இறைவனும் இறைவியும் திருமணக் கோலத்தில் (சிலாவடிவில்) நமக்கும் காட்சியருள்கின்றார்கள். இறைவி தனி சந்நிதியாகத் தெற்கு நோக்கி வீற்றிருக்கின்றாள்.

பிராகாரத்தில் வெள்வேல மரத்தடியில் முருகவேள் சிவபெருமானை வழிபட்டதாகத் தலமான்மியம் கூறும். முருகப் பெருமான் சந்நிதியில் வண்ண ஓவியமாக இது சித்தரிக்கப் பட்டுள்ளது. திருஞான சம்பந்தரும், அகத்தியரும், அருணகிரி நாதரும், இத்தலத்தில் தோன்றி சிறப்புற்ற மூர்க்க நாயனாரும் வழிபட்டது சித்தரிக்கப்பட்டுள்ளன.

இங்கே முருகப் பெருமான் பாலசுப்பிரமணியராக-ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் விளங்குகின்றார். சுமார் 2½அடி உயரமுள்ள அப்பெருமான் முன் அவரால் வழிபடப் பெற்ற சதுர வடிவமுடைய இலிங்கமும் உள்ளதைக் காண்கிறோம்.

உற்சவ மூர்த்தியாக முருகப் பெருமான் வள்ளி தேவயானையுடன், ஒருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு விளங்கு

கின்றார். பக்கத்தில் மயில் இல்லை. மற்றொரு உற்சவ மூர்த்தி உள்ளது. வலதுகாலை மயில்மீது வைத்து இடதுகாலைக் கமல பீடத்தில் வைத்த நிலையில் வில்லேந்திய வேலனாக நான்கு திருக் கரங்களுடன் ஒரு கையில் வேலும், ஒரு கையில் வில்லும், மற்ற இரண்டில் வஜ்ஜிரமும், சத்தியும் கொண்டு திகழ்கின்றார். வட புறம் மயில்; அதன்கீழ் சிம்மம். அற்புதமான படைப்பு இது.

இங்கே அகத்தியர், மூர்க்கநாயனார், சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், பிரதோஷ நாயகர், சண்டிகேசர், அம்பிகை, நால்வர், வலம்புரி விநாயகர், அறுபத்துமூவர், தட்சிணாமூர்த்தி, சூரியன், துர்க்கை, லிங்கோற்பவர், நவக்கிரகங்களின் சந்நிதிகள் சிறப்பாக அமைந்துள்ளன.

தினமும் மூன்றுகால வழிபாடு இங்கே நிகழ்த்தப் பெறுகிறது. சஷ்டி, கார்த்திகை நாட்களில் சிறப்பு வழிபாடு கள் நிகழ்கின்றன.

கந்தவேள் தனது வேலாயுதத்தால் தோற்றுவித்த வேலாயுதத் தீர்த்தம் புண்ணியப் புனலாகும. தலவிருட்சம்: வெள்வேல மரம்.

இத்தலத்தில் திருஞான சம்பந்தர் அருளிய தேவாரப் பதிகம் மட்டுமே கிடைத்துள்ளது. அருணகிரிநாதர் பாடிய "ஆலம்போல் எழு"... "கார்சசார்குழல்" என்ற இரு திருப்புகழ் பாக்கள கிடைத்துள்ளன.

கஜப்பிரஷ்ட விமான அமைப்பு இங்கே சிறப்பு. இறைவன் சந்நிதியின் பின்புறம் பிரகாரத்தில் சேக்கிழார் திருவுருவமும் அநபாய சோழன உருவமும் காணப்படுகின்றன.

முருகப்பெருமான் வேல்பெற்று, அவ்வேலால் தோற்றுவித் துள்ள இத்தலத்தின் புண்ணிய தீாத்தம் சகல நோய்களையும போக்கவலலது. அருகிலுளள சப்த ஸதலங்களிலிருந்தும் உமா ஈஸ்வரர் அம்சமாக எழுந்தருளி இத்தலத்தில் திருவூரல (ஆற்று) திருவிழாக்கள் நடைபெறறதாக மயிலைத் தலபுராணம் கூறு கின்றது. இத்தலத்தில் இரண்டாம் இராசேந்திரன் கல்வெட்டுக கள் பலஉள்ளன.

இங்கே முருகன் சந்நிதியில் குமாரஸ்தவமும் திருப்புகழும் அண்மைக்காலததில் சலவைக் கல்லில் பொறிக்கப்பட்டுள்ளன.

உணவு விடுதிகள் உள்ளன. சென்னைக்கருகில் உள்ளதால் பஸ் வசதிகள் அதிகம்.

*வேலம்பாா குறமாதும் மேலும்பார் தருமாதும்*
*வீறங்கே இருபாலும் உறவீறு*
*வேதந்தா வயிராம நாதந்தா வருள்பாவு*
**வேலங்காடுறைசீல** *பெருமாளே.*

என்று அருணகிரிநாதருடன் நாமும் சேர்ந்து பரவுவோம்.

# கோசைநகர் வாழ வரும் ஈசர்

சென்னையிலிருந்து பூவிருந்தவல்லி பஸ் வழியில் 12 கி. மீ. தொலைவில் அரும்பாக்கத்தை அடுத்து இத்தலம் உள்ளது. குசலவாபுரீசர், வால்மீகி பூசித்த வைகுண்டவாசர், குசலவர் பூசித்த குறுங்காலீசுவரர் என்று பலவாறாக இங்குள்ள சிவ பெருமான் போற்றப் பெறுகிறார். இறைவி: தருமசம்வர்த்தனி (அறம் வளர்த்த நாயகி).

இங்கே முருகப்பெருமான் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு, இருபுறமும் தேவிமார்சூழ, மயில் பின்புறம் விளங்க நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கிக் கம்பீரமாக விளங்குகின்றார். முருகன் சந்நிதியில் அருணகிரிநாதர் திருவுருவம் உள்ளது.

உற்சவர் மயில் மீதமர்ந்து, ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருபுறமும் தேவிமாருடன் அமர்ந்த கோலம் சிறப்புடையது.

தினமும் இரண்டுகால பூசை நிகழ்கின்றது. சஷ்டி, கார்த்திகை நாட்கள் சிறப்பு. கந்தசஷ்டி, ஆடிக்கிருத்திகை சிறப்பு விழாக்கள். சந்தனக்காப்பு, விபூதி அலங்காரம் காண மிக இன்பமாயிருக்கும்.

கணேசர், பிரம்மா, தட்சிணாமூர்த்தி, சாஸ்தா, பாலசுப்பிர மணியர் (ஜபமாலை, கிண்டியுடன்), திருமால், நால்வர், கலைமகள் விஷ்ணு, துர்க்கை முதலிய சந்நிதிகளும் உள்ளன.

அதிகார நந்தியின் அற்புதக் கோலம் கண்டு இன்புறத் தக்கது.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ள இக் கோயில் சிற்பச் சிறப்புகள் மிகுந்துள்ளன.

அருணகிரிநாதர் இத்தலத்தைக் கோசைநகர் என்று ஒரு திருப்புகழில் பரவியுள்ளார். கோயம்பேட்டை, கோயம்பேடு, கோசைநகர் என்று பலவிதமாக இத்தலம் குறிக்கப் பெறுகின்றது. "ஆதவிதபாரமுலை" என்று தொடங்கும் இத்தலத் திருப்புகழில்

"கோதைகுற மாதுகுண தேவமட மாதுமிரு
பாலுமுற வீறிவரு குமரேசா
கோசைநகர் வாழவரு மீசடியர் நேசர்சரு
வேசமுருகா அமரர் பெருமாளே"

என்று அருணகிரிநாதருடன் நாமும் வழிபட்டுய்வோம்.

ம்ணமொல்லை யாகி நகர்கள்
தனவல்லி மோகன மோடமர்
மகிழ்தில்லை மாநட மாடினர் அருள்பாலர்
மருமல்லி மாவன நீடிய
பொழில் மெல்லி காவன மாடமை
வடமுல்லை வாயிலின் மேவிய பெருமாளே
– திருப்புகழ்.

# மாசிலாமணி ஈசர் மகிழ்ந்தருள் முருகன்

சென்னையிலிருந்து ஆவடி செல்லும் வழியில் உள்ளது வடதிரு முல்லை வாயில் என்னும் இத்தலம். தொண்டைநாட்டில் தேவாரத்திருப்பதிகம் பெற்ற தலங்களில் இதுவும்ஒன்று. இங்கே சுயம்பு லிங்கமாகச் சிவபெருமான் மாசிலாமணி ஈசனாக விளங்குகின்றார். இவருக்கு அபிஷேகம் இல்லை. சுவாமிசந்நிதிக்கு வலப்புறம் கிழக்கு நோக்கி இறைவி 'கொடியிடை நாயகியாக எழுந்தருளியுள்ளாள்.

இறைவருக்குச் சித்திரைச் சதயத்தில் சந்தனகாப்பு கலைத்து புதுச்சந்தனகாப்பு சாற்றுகிறார்கள்.

இக்கோயிலில் உட்பிராகாரத்தில் வடக்குமூலையில் முருகப் பெருமான் சந்நிதி விளங்குகின்றது. ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் முருகன் விளங்குகின்றார். தேவிமார் இருவரும் மருங்கே உள்ளனர். மயில் பின்புறம் உள்ளது. வடக்குநோக்கிவிளங்கும் இம்முருகவேள் '2' அடிஉயரமுடையவர்: சுயம்புமூர்த்தி, உற்சவரும் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு தேவிமார் இருவருடன் விளங்குகின்றார்.

நைமிசாரணிய முனிவர்கள், பிரம்மா, பிருகு, வசிஷ்டர்' சந்திரன், சூரியன், இராமர், லட்சுமணர், லவன், குசன், துர்வாசர் ஐராவதம், இந்திராணி, கிருஷ்ணன், அர்ச்சுனன், தேவமித்ரன் சித்ரவர்மன், நட்சத்திரங்கள் முதலியோர் இத்தலத்தை வழிப் பட்டுய்ந்ததாகத் தலமான்மியம் கூறும்.

நடராசர், பிட்சாடனர், நர்த்தனகணபதி, தட்சிணாமூர்த்தி, விஷ்ணு, பிரம்மா, துர்க்கை, சோழபுரீசர், குசலவபுரீசர் சந்நிதிகள் உள்ளன. கோயிலின் அர்த்தமண்டபத்தில் இருவெள்ளெருக்குத் தூண்கள் உள்ளன. ஒவ்வொன்றின் உயரம் 11அடி. சுற்றளவு 2¼அடி. விமானம் கஜப்பிரஷ்ட அமைப்புடையது.



## அறிவருளும் ஆனை முகவோன்

குஞ்சர மாமுக விக்கிநப்ரபு
அங்குச பாசக ரப்ரசித்தனோர்
கொம்பன்ம கோதரன் முக்கண் விக்ரமகணராஜன்

குப்பிடுவார் வினை பற்றறுப்பவன்
எங்கள் விநாயக னக்கர் பெற்றருள்
குன்றைய ரூபக கற்பகப்பிள்ளை.

—அஞ்சனவேல்.

சிறுவாபுரி ஸ்ரீ பாலசுப்ரமண்யர் கோயில்



அருணகிரிநாதர்

உலகதனை ஒருநொடியில் ஓர்கனிக்காய் உலவிவந்த
குமரன் கீர்த்தி
உலகதனிற் சீவர்களுக் குறுதுணை யாயுதவி யருள்
உயர் மெய்ஞ்ஞான
உலகதனிற் சிவஞான பராபரை யாள்தன் கரத்திற்
பொருந்தி மோன
உலகதனிற் ருஞெளிரும் விஞ்ஞானி அருணகிரி
பாதம் போற்றி.

—திருப்புகழ்ச்சாமி தா. ப. வேங்கடசுப்ரமண்யன்.

குமாரவயலூர் ஸ்ரீ சுப்ரமண்யர் கோயில்.

எழுதரிய அறுமுகமும் மணிநுதலும் வயிரமிடை
இட்டுச் சமைந்தசெஞ் சுட்டிக் கலன்களுந்
துங்கநீள்பன்

னிருகருணை விழிமலரும் இலகுபதி னிருகுழையும்
ரத்னக் குதம்பையும் பத்மக் கரங்களுஞ்
செம்பொனூலும்

மொழிபுகழும் உடைமணியும் அரைவடமும் அடியிணையும்
முத்தச் சதங்கையுஞ் சித்ரச் சிகண்டியுஞ்
செங்கைவேலும்

முழுதும்அழ கியகுமர கிரிகுமரி உடனுருகு
முக்கட் சிவன்பெறுஞ் சற்புத்ர உம்பர்தந் தம்பிரானே.

(—விளையுமணி)

இத்தலத்தினைச் சுந்தரமூர்த்திசுவாமிகளும், அருணகிரி நாதரும், வடலூர் இராமலிங்கசுவாமிகளும் பாமாலைசூடி வழி பட்டுள்ளனர். அருணகிரிநாதர் அருளிய மூன்று திருப்புகழ்ப் பாக்கள் கிடைத்துள்ளன.

திருக்குளமும், தலவிருட்சமான முல்லைக்கொடியும் சிறப்பாக அமைந்துள்ளன.

தைக்கிருத்திகைச் சிறப்பு விழாவாகும்.

தெற்குப் பிராகாரத்தில் திருக்கலியாணமண்டபம் உள்ளது. ஊரில் உணவுவிடுதிகள் உள்ளன.

இக்கோயிலுக்கு அருகில் ஸ்ரீவைஷ்ணவி ஆலயம் அமைக்கப் பெற்று, இக்காலத்தில் இவ்வூருக்குப்புகழ்தேடித்தந்து கொண்டிருக் கின்றது.

இத்தலத்தில் 1922ல் சிவசுப்பிரமணியசுவாமி சந்நிதி ஒன்று — தனிமுருகன் கோயிலாக வடக்குப் பிராகாரத்தில் மாசிலாமணி என்றபக்தரால் கட்டப்பெற்றுளள்து. கிழக்குநோக்கி விளங்கும் இப்பெருமான் ஒருமுகமும் நான்குதிருக்கரங்களும் கொண்டுள்ளார். ஸ்ரீ அருணகிரிநாதர் திருவுருவமும் திருப்புகழ்க் கல்வெட்டும் உள்ளன.

இத்தலத்தில் கல்வெட்டுக்களும் பல உள்ளன.

*வாதி னுல்வரு காளியை வென்றிடும்*
*ஆதிநாயகர் வீ றுதயங்குகை*
*வாரி ராசனு மேபணியுந்திரு நடபாதர்*
*வாசமாமல ரோனெடு செந்திரு*
*மார்பில் வீறிய மாயவனும் பணி*
*மாசிலாமணி யீசர் மகிழ்ந்தருள் பெருமாளே.*

**(சோதிமாமதி–திருப்புகழ்)**

*துன்னி யெதிர் சூரர் மங்கிட*
*சண்முகம தாகி வன்கிரி*
*துள்ளிட வெலாயுதந்தனை விடுவோனே*
*சொல்லுமுனி வோர் தவம்புரி*
*முல்லைவட வாயில் வந்தருள்*
*துல்யபர ஞான வும்பர்கள் பெருமாளே.*

**(மின்னிடை–திருப்புகழ்)**

## தச்சூர் வடக்காகு மார்க்கத்தமர்ந்த பெருமாள்

சென்னையிலிருந்து பொன்னேரி பஸ் பாதையில் தச்சூர் கூட்டுச்சாலையிலிருந்து 7 கி. மி. தொலைவில் இத்தலம் உள்ளது. தற்காலத்தில் ஆண்டார்குப்பம் என இத்தலம் வழங்கப்படுகிறது

இங்கே முருகன் தனிக்கோயில் கொண்டு திகழ்கின்றார். முருகனுக்கு அருகிலேயே விசுவநாதர் சந்நிதி உள்ளது.

முருகப்பெருமான் மூலஸ்தானத்தில் ஒருமுகமும் இரு கரங்களும் கொண்டு நின்ற கோலம்; பிரம்மனிடம் பிரணவத்திற்குப் பொருள்கேட்ட கோலம். முருகனுக்கு எதிரில் பிரம்மா விளங்குகின்றார்.

பிரமனைக்குட்டிச் சிறைசெய்யும் முருகப்பெருமான் சிற்பம் இங்கு உள்ளது.

இங்குள்ள முருகவேளை அருணகிரிநாதர் "தச்சூர் வடக்காகும் மார்க்கத்தமர்ந்த பெருமாளே" என்று அடையாளங்காட்டிப் பாடுகின்றார். அவர் காலத்தில் இக்கோயில் நாற்றிசையிலும் சிறப்புற விளங்கியது என்பதை "அச்சாயிறுக்காணி........." என்று தொடங்கும் இத்தலத் திருப்புகழில்

"இப்பூர்வ மேற்குத்தரங்கள் தெற்காகும் இப்பாரில் கீர்த்திக்
கிசைந்த தச்சூர் வடக்காகுமார்க்கத்தமர்ந்த பெருமாளே"

என வரும் வரிகள் இனிது காட்டுகின்றன. தமக்குப் பெரும் பொருளை உபதேசித்த முத்தன் ("எட்டாமெழுத்து ஏழையேற்குப் பகர்ந்தமுத்தர்") என்றும் நன்றி பாராட்டினார் அருணகிரிநாதர். பின்னும் வேடிக்கையாக—"முருகா! நீ ஒரு நல்ல தச்சன். எந்தக்

காலத்திலும் மக்கிப் போகாத சூரன் என்னும் ஒரு மாமரத்தைப் பார்த்தாய்; அதை வேலாற்பிளந்தாய்; அதனின்றும் மயில், சேவல் இரண்டும் செய்தாய் ஆதலால் நீ ஒரு சித்தன். அத்தகைய வனுயிருந்தும் நீ ஒரு குறப்பொம்மையின் தாளின் கீழ்ப் படிந் தாயே'' என்று பாடுகிருர்:

*''எக்காலும் மக்காத சூர்க் கொத்தரிந்த சினவேலா*
*தச்சா! மயிற்சேவலாக்கிப் பிளந்த*
*சித்தா! குறப்பாவைதாட்குட் படிந்து...அமர்ந்தபெருமாளே''*

பத்மத் தச்சனுகிய பிரம்மாவைவிடக் குமரத்தச்சனின் ஆற்றல் எத்துணை இன்பமூட்டுவது என நம்மை எண்ணிப் பணியச் செய்கிருர் இத்தலத்தில் அருணகிரிநாதசுவாமிகள்.

## சிந்தையில் குடிகொண்ட சிறுவை முருகன்

திருத்தொண்டர் புராணம் பாடி அடியார்களின் பெருமையை உலகறியச் செய்த சேக்கிழார் பெருமான் தோன்றிய இடம் தொண்டைமண்டலம். தொண்டை மண்டலம் என்றாலே தொண்டர்களாகிய அடியார்களுக்கு மிகவும் தொடர்புண்டு. அதனால்தான் கந்தவேள் திருவருளைப் பருகி அதன் இன்பத்தை நமக்கு வாரி வழங்கிய வள்ளலான ஸ்ரீஅருணகிரிநாத ஸ்வாமிகள் 'சிறுவாபுரி' என்ற தலத்தில் 'சந்ததமும் அடியார்கள் சிந்தையது குடியான தண்சிறுவை தனில் மேவும் பெருமாளே' என்று பாடு கிறார். இன்று நமக்குக் கிடைத்த ஆயிரத்து முன்னூற்று முப்பது அற்புத திருப்புகழ்ப் பாடல்களில் இந்த ஒரு தலத்தில் தான் எப்பொழுதும் அடியார்களின் மனதை இடமாகக் கொண்டவன் குளிர்ச்சி பொருந்திய சிறுவை என்னும் தலத்தில் வீற்றிருக்கும் பெருமாள் என்று மகிழ்ச்சியோடு புகழ்கிறார். அந்தச் சிறுவாபுரி தொண்டை மண்டலத்தைச் சார்ந்தது என்றால் பெருமைதானே! ஆம். அந்தச் சிறுவை முருகனைப் பார்த்தால் உள்ளம் எல்லாம் குளிரும். இன்று நமக்குக் கிடைத்துள்ள திருப்புகழ்ப் பாடல்களில் மிகவும் மங்களகரமான–மகிழ்ச்சிகரமான திருப்புகழ் இத்தலத்தில் பாடிய திருப்புகழ்களாகும்.

'அண்டர்பதி குடியேற மண்டசுரர் உருமாற
அண்டர் மன மகிழ் மீற அருளாலே
அந்தரியொ டுடனாடு சங்கரனு மகிழ்கூர
ஐங்கரனும் உமையாளும் மகிழ்வாக
மண்டலமும் முனிவோரும் எண்டிசையில் உளபேரும்
மஞ்சினனும் அயனாரும் எதிர்காண
மங்கையுடன் அரிதானும் இன்பமுற மகிழ்கூற
மைந்துமயில் உடனாடி வரவேணும்,' என்று

சந்தப்ரவாகம்செல்கிறது.'தேவேந்திரன் தனது பொன்னுலகத்தில் குடியேறவும், அசுரர்கள் உருமாறவும், தேவர்கள் மனத்தில் மகிழ்ச்சி அதிகமாகக் கொள்ளவும், அருளோடு காளியுடன் ஆடின சங்கரன் மகிழ்ச்சி அடையவும், பூமியில் உள்ளோரும், முனிவர் களும், எண்திக்கில் உள்ளவர்களும், இந்திரனும், பிரமனும் எதிர் காணவும், லக்ஷ்மியும் திருமாலும் இன்பத்துடன் தனது மகிழ்ச்சியை எடுத்து ஓதவும், வலிமை வாய்ந்த மயிலுடன் ஆடி (என்முன்னே) வரவேணும் என்று பாடுகிறார் 'மகிழ்கூற,' 'மகிழ்கூர,' 'மகிழ்வாக' என்ற சொற்பிரயோகங்களைப் பார்த்தால் இத்தலத்து முருகனைத் தரிசித்தவுடன் அருணகிரியார் எத்தகைய மகிழ்ச்சியை அடைந் திருப்பார் என்று சொல்லவும் வேண்டுமா?

அடியார்களது சிந்தையிலே எப்போதும் குடிகொண்ட அந்த அழகன் வாழும்பதி சிறுவாபுரி அல்லது சிறுவை–செங்கற்பட்டு மாவட்டம், பொன்னேரி தாலுகாவில் பொன்னேரிக்கு மேற்கே 6 மைலிலும், சென்னைக்கு கிழக்கே சுமார் 20மைலிலும் உள்ளது. சென்னையிலிருந்து பஸ் எண் 131, 131A, 132, 133 ஆகிய பஸ்களில் (பெரியபாளையம் ஆரணி வழியில்) சென்று அகரம் என்ற இடத்தில் இறங்கி 1கி.மீ சென்றால் சிறுவாபுரி முருகன் கோயில் வாயிலை அடையலாம். கோயில்வாயில் வரை கார், பஸ் முதலியன செல்ல லாம். தற்போது இவ்வூர் சின்னம்பேடு என்றும் சிறுவரம்பேடு வழங்கப்படுகிறது. இந்தஊர் பெயரேமிகவும் சுவையானவரலாறு உடையது.

இங்கே சிறுவர்களான லவன், குசன் இருவரும் பெரிய படையுடன் (தனது தந்தை என்று அறியாமல்) வில் ஏந்திய, ஸ்ரீராமபிரானோடு எதிர்த்து போர்செய்து வெற்றி கொண்ட நகரம். சிறுவர் + அம்பு + எடு என்பது சிறுவரம்பேடு ஆயிற்று. சிறுவரம்பேடு என்பது சின்னம்பேடு என்று மருவியுள்ளது. ஸ்ரீராமபிரானின் புனித பாதம் பதிந்த இடம் என்று இவ்வூர் புராணம் தெரிவிக்கின்றது. அருணகிரிப்பெருமான் இச்செய்தியை மற்றொருத் திருப்புகழில் சுவைபடச் சொல்கிறார்.

> *"சிறுவ ராகி இருவரந்த கரிப*
> *தாதி கொடு பொருஞ்சொல்*
> *சிலையி ராமன் உடனே தீர்ந்து சமராடிச்*
> *செயம தானநகர மர்ந்த அளகை போல வளமிகுந்த*
> *சிறுவை மேவி வரமி குந்த பெருமாளே."*

இச்சிறிய தலத்தில் பல பெரிய ஆலயங்கள் மிகுந்துள்ளன. இதற்குச் சான்று வேலிரண்டெனும் என்ற இவ்வூரின் மற்றொரு திருப்புகழில் அருணகிரியார் கூறுகிறார். "ஆடகம் பயில்கோபுர

மாமதில் ஆல யம்பல வீதியு மே நிறைவான தென்சிறு வாபுரி மேவிய பெருமாளே.'' உண்மை தான்! செல்வம் நல்கும் சிறுவை முருகன் கோயிலைத்தவிர ஸ்ரீ அகஸ்தீசுவரர் கோயில், திருவூரகப் பெருமாள் என்ற ஸ்ரீவரதராஜர் கோயில், திரௌபதியம்மன் கோயில், ஐயப்பன் கோயில்களும், ஜைனர் 22வது தீர்த்தங்கரர் பார்ஸ்வ நாதரின் ஜைனக் கோயிலும் உள்ளது.

புத்தம் புதுப் பொலிவுடன் அழகான கோபுரத்துடன் சீரும் சிறப்பும் பெற்ற சிறுவாபுரி முருகன் கோயிலில் நுழைந்தவுடன் நம் கண்ணை விட்டு அகலாததது, அங்குள்ள மிக அழகிய மயில் மண்டபம். சிற்பி தத்ரூபமாக கல்லில் வடித்த அற்புதமான மயில் உருவம் அனைத்திந்தியாவிலும் காண்பது அரிது.

சிறுவை முருகன் காட்சி நமது சிந்தையை ஈர்க்கும் காட்சி அவன் புண்டரிகவிழியாளன், தண் தரளமணிமார்பன், செம்பொன் எழில் செறிருபன், தண் தமிழின் மிகு நேயன். அவன் ஒரு முகம். நான்கு கரங்களோடு நின்ற கோலத்தில் பால சுப்ரமணியனாக காட்சி தரும் அழகைச் சிந்தை குளிர்விக்கும் சந்தத் தமிழால் அருணகிரிப் பெருமான் அர்ச்சிக்கிறார்.

*"சீதள வாரிஜ பாதா நமோநம,*
*நாரத கீதவி நோதா நமோநம,*
*சேவல மாமயில் ப்ரீதா நமோநம, மறைந்தேடுஞ்*
*சேகர மானப்ர தாபா நமோநம,*
*ஆகம சாரசொ ரூபாநமோநம,*
*தேவர்கள் சேனைம கீபா நமோநம, கதிதோயப்*
*பாதக நீவுகு டாரா நமோநம*
*மாவசு ரேசக டோரா நமோநம,*
*பாரினி லேஜய வீராநமோநம மலைமாது*
*பார்வதி யாள் தரு பாலா நமோநம,*
*நாவல ஞானம னோலா நமோநம,*
*பாலகு மாரசு வாமி நமோநம அருள்தாராய்"*

என்று அர்ச்சனைப் பாட்டாக அது வெளிவருகிறது.

அர்த்த மண்டபத்தில் அருணகிரிப் பெருமான் சன்னிதி உள்ளது. உற்சவ மூர்த்திகளை இடதுபுறம் வைத்துள்ளார்கள். உற்சவமூர்த்திகள் அற்புதமான படிவங்கள். சுப்ரமணியர் மயில் மேல் அமர்ந்து வலது காலை பாம்பினுடைய தலை மீதும், இடது காலை மடித்தும் கம்பீரமாக உள்ளார். இருபுறமும் வள்ளி தேவயானை இருக்கிறார்கள், மற்றொரு ஷண்முக விக்ரஹமும் தேவிமாருடன் கூடிய அமைப்பும் வீரபாகு தேவரது விக்ரஹமும் உள்ளன.

முருகனுக்கு வலப்புறம் உள்ள மண்டபத்தில் நினைத்தாலே முத்தியளிக்கும் அண்ணாமலைப் பெருமானும் உண்ணாமுலை அம்பிகை யும் தனித்தனி சன்னிதிகளில் அழகான கோலத்தில் காட்சியளிக் கிறார்கள். இந்த அம்பிகையைத் தரிசித்த போது அருணகிரிப் பெருமானுக்கு அளவிலா மகிழ்ச்சி. 'வேலிரண்டெனு' என்று தொடங்கும் இத்தலத்து நான்காவது திருப்புகழில், நீலசுந்தரி, கோமளி, யாமளி, நாரணி, பூரணி, பஞ்சவி, சூலினி, மாலினி, உமை, காளி, மாதவி, சிவகாமசுந்தரி என்று பாடிச் செல்கிறார். இத்தலத்தில் மிக அதிசயம் என்னவென்றால் இங்குள்ள மயில் நந்தி, விநாயகர், சுவாமி, அம்பாள் ஆகிய எல்லாத் திருவுருவங் களும் ஒருவிதப் பச்சைக்கல்லால் ஆன தனிச் சிறப்பாகும். மகா மண்டபத்தில் இத்தலத்து நான்கு திருப்புகழ் பாடல்களையும் சென்னை திருவல்லிக்கேணி முருகன் திருவருட் சங்கத்தார் கல் வெட்டில் பதித்துள்ளார்கள்.

வெளிப்பிராகாரத்தில் சண்டிகேசுவரர், நாகேந்திரர் பைரவர், வேங்கடராயர் ஆகியோரது சன்னிதிகள் உள்ளன. எல்லா உருவங்களும் கைதேர்ந்த சிற்பிவடித்த அழகான உருவங்கள். கொடி மரத்துடன் எல்லா அமைப்புக்களும் முறையாக அமைந்த இக்கோயிலை ரூபாய் இரண்டரை லஞ்சம் செலவில் அழகான முறையில் புதுப்பித்துச் சென்ற 19–6–78ஆம் தேதியன்று கும்பாபிஷேகம் செய்துள்ளார்கள்.

புதிதாக வீடு கட்டி கிரகப்பிரவேசம் செய்வோர்கள்– முதலில் சிறுவாபுரி முருகனுக்கு அபிஷேகம் செய்வித்து புது வீட்டில் குடிபுகுந்தால் அவர்களுக்குச் சகல செல்வங்களும் அருளிச் செய்வான் என்பது அநுபவ உண்மை.

இவ்வூரில் அமைந்துள்ள மற்றொரு ஆலயம் ஸ்ரீஆனந்தவல்லி சமேத அகஸ்தீசுவரப் பெருமான் கோயில். மிகவும் பழுதடைந்துள் ளது. கம்பீரமான கஜ ப்ருஷ்ட விமானத்துடன் கூடிய இக் கோயிலில் வெளி மதில் சுவர்கள் இடிந்தும் மண்டபங்கள் ஆங்காங்கேசிதைவுற்றும் பார்ப்பதற்கு மிகவும் வருத்தமாயுள்ளது. அகஸ்தீசுவரப் பெருமானுக்கு அருகில் வலப்புறத்தில் தனிச் சன்னிதியில் ஸ்ரீவிஸ்வநாதர் உள்ளார். வெளியே ஆனந்தவல்லி அம்பிகைக்குத் தனிச் சன்னிதி உள்ளது. அம்மண்டபத்தில்அழகான சிற்பங்கள் உள்ளன. அம்பிகையின் ஆனந்தமான தோற்றத்துடன் மூக்கில் மூக்குத்தி அணிவதற்குஏதுவாக அமைப்பு உள்ளதென்றால் அதன் அழகை எடுத்து இயம்ப இயலுமா?

இங்கு அமைந்துள்ள இதர மூர்த்திகளான ஹரிஹரபுத்திரர் சண்டிகேசுவரர், நாகேந்திரர், சூரியன், நவக்ரஹங்கள் ஆகிய அனைத்தும் சிறப்பாக அமைந்தவை. ஆனல் கோயிலை உடனே கட்டி, கும்பாபிஷேகம் செய்ய வேண்டும். அடுத்துநாம் திருவூரகப் பெருமாள் என்னும் ஸ்ரீவரதராஜர் கோயிலுக்குச் செல்கிறோம். இத்தலத்துப்பெருமாளை "ஆயனந் திருவூரகமால் திருமருகோனே" என்று அருணகிரியார் திருப்புகழில் குறிப்பிடுகிறார். இங்கு குசலவர் வழிபட்டதால் குசலவபுரி என்றும் பிருந்தாவன க்ஷேத்ரம் என்றும் பெயர். அருகில் தெற்கே திருமுக மண்டலத்துடன் கூடிய ஸ்ரீலட்சுமிநாராயணப் பெருமாள் தனிச் சந்நிதியில் மிக அற்புதமாக அமைந்துள்ளார். வெளியே உள்ள மண்டபத்தில் ஸ்ரீனிவாசப் பெருமாளுகிய திருவூரகப் பெருமாள் தேவியர் புடைசூழக் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் சேவை சாதிக்கிறார். பெருந்தேவித் தாயார் சன்னிதி தனியே கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. மற்றும் சக்கரத்தாழ்வார், ஆஞ்சநேயர் ஆண்டாள் நாச்சியார் ஆகியோரது சன்னிதிகளும் உள்ளன.

கோயிலின் மதிற் புறத்திற்கு வெளியே ஸ்ரீ வரதராஜப் பெருமானுக்கு நேராகச் சற்று உயரமான ஓர் மண்டபத்தில் ஸ்ரீவைஷ்ணவி தேவி சன்னிதியுள்ளது. மண்டபம் சிதிலமாகி அம்பிகை மட்டும் தனியே இருக்கிறாள். பெருமாளுக்கு ரௌத்ரத்தைத் தணிக்க துர்க்கை இங்கே வைஷ்ணவியாக இருப்ப தாகக் கூறப்படுகிறது. இக்கோயில் 1930ல் கும்பாபிஷேகம் நடைபெற்றதாகத் தெரிகிறது. கோயில் சுமாராக உள்ளது.

இத்தலத்தைப்பற்றி ஸ்ரீ அருணகிரியார் பாடிய நான்கு திருப்புகழ்ப் பாடல்களுடன் திருத்துருத்தி, இந்திர பீடம், கரபாத்ர சுவாமிகள் ஆதீனம் ஈசூர் சச்சிதானந்த சுவாமிகள் பரம்பரை– புலியூர் திரு சிவராஜ சுவாமிகள் இயற்றிய அகஸ்தீசுவரர் பதிகம், ஸ்ரீவரதராஜப் பெருமாள் பதிகம் ஆகிய நூல்களும் உள்ளன.

> "வானவரூரினும் வீறுகி வீறள
> காபுரி வாழ்வினு மேலாக வேதிரு
> வாழ்சிறு வாபுரி வாழ்வேசுராதிபர் பெருமாளே!

# பாகை மேவிய பெருமாள்

*"பவள மரகத கனக வயிரக*
*பாட கோபுர அரிதேரின்*
*பரியு மிடறிய புரிசை தழுவிய*
*பாகை மேவிய பெருமாளே!*
*(குவளைபொரு-திருப்புகழ்)*

திருப்புகழில் 'பாகை'' என்று அருணகிரிநாதசுவாமிகள் போற்றும் தலம் சென்னை-அரக்கோணம் இரயில் வழியில் திருவள்ளூரை அடுத்த மணவூர் நிலையத்தின் தெற்கே 4 கி.மீ. தொலைவிலுள்ள பாகசாலை என்ற பெயரில் தற்போது வழங்கப் பெறுகின்றது. பஸ்வசதி இல்லை. நடந்து செல்லவேண்டும். கோயிலைச்சுற்றி ஏரிகள் பரந்து காணப்படுகின்றன. தற்போது மணவூர்ஏரி, லட்சுமிவிலாசபுரஏரி, பாகசாலைஏரி என அவை அழைக்கப்படுகின்றன. இவ்வேரிகளைக்கண்டு கடலெனக் காட்டினார் நம் அருணகிரிநாதரும் என்றெண்ண வேண்டியுள்ளது.

*"பாளை நறுங்கமழ் பூக வனந்தலை*
*சாடி நெடுங்கடல் சுழிபாயும்*
*பாகை வளம்பதி மேவி வளஞ்செறி*
*தோகை விரும்பிய பெருமாளே (ஈளைசுரம் ...)*

என்று திருப்புகழ் பேசுகின்றது.

இங்கே முருகனுக்குத் தனிக்கோயில் அமைந்துள்ளது. கோயில் சிறிதாயினும் மூர்த்தி பெரியவர். புராதனமான இக் கோயிலை இருபதாண்டுகட்கு முன்பு திருப்பணி செய்துள்ளனர். கோயிலின் அருகே குசஸ்தலை என்ற ஆறு ஓடுகின்றது. கோயில் கிழக்குநோக்கி அமைந்திருப்பினும் சந்நிதிக்குள் நுழையும் வாயில் தெற்குநோக்கி உள்ளது.

நின்ற திருக்கோலத்தில் முருகவேள் ஒருமுகமும், நான்கு கரங்களும் கொண்டு, (அபயம், கண்டிகை, அக்கமாலை, குறங்கம்) யோகமூர்த்தியாகத் திகழ்கின்றார். இத்தலவாசிகள் "பாதிரிஐயா" என்று இம் முருகனைப்பணிக்கிறார்கள். இப்பெயருடையவர்கள் இங்கு அதிகம். தற்போது பாதிரி மரங்கள் இல்லை. இலுப்பை மரங்களே இங்குள்ளன.

நீலப்பட்டா, கார்வேட்நகர சமஸ்தானங்களாலும், திருப்பதி தேவஸ்தானத்தாலும் இத்தலம் பரிபாலிக்கப்பட்டு வந்த காலத்தில் இக்கோயில் ஸ்ரீபாலசுப்பிரமணியசுவாமிகோயில் என்றழைக்கப்பட்டு அதுவே இன்றும் பெயராயுள்ளது. மூலவருக் கருகில் தேவியர் இல்லை. உற்சவமூர்த்தி ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவியருடனும் விளங்குகின்றார்.

தினமும் 2கால பூசை நிகழ்கின்றது. வழிபடுவோர்விடுதி, உணவு விடுதிகள் இல்லை. இவ்வூர் சைவத்திருவாளர் V.சிவராஜ முதலியார் இத்தலத்திற்கு வருவோரை உபசரிக்கும் பெருமனம் படைத்தவர்.

கார்த்திகை, கந்தசஷ்டி விழாக்கள் நிகழ்கின்றன. அருணகிரி நாதர் இத்தலத்திற்கு மூன்று திருப்புகழ்ப்பாக்களை அருளியுள் ளார். (ஆடல்மாமத..., ஈளைசுரங்..., குவளைபொருதிரு......) இத்தலத்தில் ஸ்ரீதிருவுடையநாயகி சமேத ஸ்ரீதிருமூலநாதசுவாமி கோயில் உள்ளது. இங்கே பரகேசரிவர்மன் கால்க்கல்வெட்டுக் கள் உள்ளன மற்றும் விநாயகர், திரௌபதி, மாரியம்மன் கோயில்களும் உள்ளன. மிகவும் சிதிலமடைந்த திருமால் கோயி லொன்றும் உள்ளது.

*பாக நாண்மலர் சூடுஞ்சேகரா மதில் சூழ்தென்*
*பாகை மாநக ராளுங் குமரேசா!*

(ஆடல்மாமத...)

# காளியொடாடிய ஆலங்காடு

துஞ்ச வருவாரும் தொழுவிப்பாரும் வழுவிப் போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப்பாரும் முனைநட்பாய்
வஞ்சப்படுத் தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்(டு)
அஞ்சும் பழையனூர் ஆலங்காட்(டு)எம் அடிகளே.

—திருஞானசம்பந்தர்.

ஒன்றா உலகனைத்தும் ஆனார்தாமே! ஊழிதோறூழி உயர்ந்தார் தாமே!
நின்றாகி எங்கும் நிமிர்ந்தார் தாமே! நீர் வளி தீ ஆகாசம் ஆனார் தாமே!
கொன்றாடுங் கூற்றை உதைத்தார் தாமே! கோலப்பழனை உடையார் தாமே!
சென்றாடு தீர்த்தங்கள் ஆனார்தாமே! திருவாலங்காடுறையும் செல்வர் தாமே!

—திருநாவுக்கரசர்

முத்தா முத்திதரவல்ல முகிழ்மென் முலையாள் உமைபங்கா
சித்தா சித்தித்திறங் காட்டும் சிவனே தேவர்சிங்கமே
பத்தா பத்தர்பலர் போற்றும் பழையனூர் மேய
அத்தா ஆலங்காடா உன்அடியார்க்கு அடியேன் ஆவேனே.

—சுந்தரர்

துத்தம் கைக்கிள்ளை விளரி தாரம்
உழை இளி ஓசை பண் கெழுமப்பாடி
சச்சரி கொக்கரை தக்கை யோடு
தகுணிதம் துந்துபி தாளம் வீணை
மத்தளம் கரடிகை வன்கை மென்தோல்
தமருகம் குடமுழா மொந்தை வாசித்(து)
அத்தனை விரவினோ(டு) ஆடும் எங்கள்
அப்பன்இடம் திரு ஆலங்காடே.

—காரைக்காலம்மையார்.

சென்னையிலிருந்து பெங்களூர் செல்லும் இரயில்பாதையில் திருவாலங்காடு இரயில் நிலையம் உள்ளது. அதிலிருந்து வடக்கே 4கல் தொலைவில் இத்தலம் உள்ளது. சென்னை, அரக்கோணம், வேலூர், திருவள்ளூர் முதலிய ஊர்களிலிருந்தும் பஸ் வழியே இத்தலத்தை அடையலாம். சென்னையிலிருந்து 64கி.மீ. தூரம் உள்ளது.

ஆடல் வல்லானின் ஐந்து சபைகளுள் இரத்தினசபையை உடையதலம் இது. நடராசர் ஒருகாலை மேலே தூக்கியாடும் ஊர்த்துவ தாண்டவமூர்த்தி இங்கு தனிச்சிறப்பு. ஆடுங்கூத்தப் பிரான் அடிக்கீழ் காரைக்காலம்மையார் அமர்ந்துள்ள அற்புதக் காட்சியை இங்குமட்டுமே காணமுடியும். இத்தலத்திற்குக் கிழக்கே பழையனூர் உள்ளது.

வடஆரணியம் எனவடமொழியிலும் ஆலங்காடு என்று தமிழிலும் அழைக்கப்படும் இத்தலத்தின் மிகப்பெரிய கோயில் சைவர்களின் கருவூலங்களில் ஒன்றாகும். மூன்று திருமதில்கள் சூழ ஆலயம் அமைந்துள்ளது. பழையனூர் நீலி வரலாறு பெரிய புராணத்தில் விரிவாகப் பேசப்படுகிறது.

*இறைவன்: ஆலங்காட்டு அப்பர், தேவர்சிங்கப்பெருமான்*

*இறைவி: வண்டார்குழலியம்மை,* (பிரமராம்பாள்.)

இத்தலத்தில் முருகப்பெருமான் ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்து இருபுறமும் தேவிமார் விளங்க வடக்குநோக்கிக் காட்சியருள்கின்றார். பன்னிருகரங்களி லும் ஆயுதங்கள் அமைய மிக நுண்ணிய அற்புத வேலைப்பாட மைந்த அழகிய மூர்த்தம். ஒரு உற்சவர் நின்ற திருக்கோலத்தில் இருதேவியர்சூழ, ஒருதிருமுகத்துடன் விளங்குகின்றார். மற்றொரு மூர்த்தி—ஆறுதிருமுகங்களுடன் மயில்மீது அமர்ந்த திருக்கோலம் தனியே அம்பிகை இருவரும் நிற்கின்றனர்.

இங்கே சிவபெருமானுக்கு 4 கால வழிபாடுகளும், முருக னுக்கு 2 கால வழிபாடுகளும் தினமும் நிகழ்கின்றன.

ஆடிமாதத்தில் தாண்டவக்காளியம்மைதிருவிழா, ஆவணி- விநாயகசதுர்த்தி, புரட்டாசி-நவராத்திரி, ஐப்பசி-ஸ்கந்தசஷ்டி, மார்கழி-திருவெம்பாவைவிழா, திருவாதிரை விழா, பங்குனி-பிர மோற்சவவிழா என்று பலதிருவிழாக்கள் இங்கே சிறப்புடையன,

கோயிலின் பின்புறம் பெரிய திருக்குளம்- கார்க்கோடகன் உய்வுபெற்ற திருக்குளம் இது. தலவிருட்சம்: ஆலமரம்.

தேவாரம் பாடிய மூவரும், காரைக்காலம்மையார், பட்டினத்தார், அருணகிரிநாதர், கச்சியப்பசிவாச்சாரியார், இராமலிங்கசுவாமிகள், பாம்பன் சுவாமிகள் முதலிய பல அருளாளர்களும் பாடிப்பரவிய தலம் இது.

மிகவும் தொன்மையான கோயில்; ஏராளமான கல்வெட்டுக்கள் உள்ளன. திருவிளையாடற்புராணம், பெரியபுராணம், திருக்கை வழக்கம், தொண்டைமண்டலசதகம், பெருந்தொகை என்ற இன்னோரன்ன இலக்கியங்களால் போற்றப்பெற்றதலம் இது.

திருத்தணி திருக்கோயிலுடன் இணைந்த கோயிலாக அறநிலைய ஆட்சித்துறையினரால் இக்கோயில் நிர்வாகம் செய்யப் படுகின்றது.

இத்தலத்திற்கு அருணகிரிநாதர் பாடிய நான்கு திருப்புகழ்ப்பாக்கள் கிடைத்துள்ளன; "கனவாலங்," "பொன்று மன்றுக்கும்," "புலிபுனல்", "வடிவதுநீலம்" என்பன அவற்றின் தொடக்கமாம்.

"திகழ் வேடங் காளி யொடாடிய
ஜெகதீசங் கேச நடேசுரர்
திருவாலங் காடினில் வீறிய பெருமாளே."

"அன்றுலங் காட்டண் டருமுய
நின்றுடுங் கூத்தன் திருவருள்
அங்கா கும்பாட்டின் பயனினை யருள்வாழ்வே"

"குவலயம் யாவும் போற்ற பழனையிலாலங்காட்டில்
குறமகள் பாதம் போற்று பெருமாளே"

"முடிமிசை சோமன் சூட்டி வடிவுள ஆலங்காட்டில்
முதிர்நட மாடுங்கூத்தர் புதல்வோனே"

எனவரும் பகுதிகள் இன்புற்று ஓதற்குரியன.

இறைவனால் அம்மையே என்று போற்றப்பட்ட காரைக்காலம்மை விளங்கும் இத்தலம் வள்ளிமணாளனின் வான் கருணை சுரக்கும் தலங்களிலும் சிறந்ததொன்றாகத் திகழ் கின்றது.

# தணிகையில் இணையிலி

*கோடாத வேதனுக்கு யான் செய்த குற்றமென்? குன்றெறிந்த*
*தாடாளனே!தென் தணிகைக் குமர!நின் தண்டையந்தாள்*
*சூடாத சென்னியும் நாடாத கண்ணும் தொழாத கையும்*
*பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே.*

—கந்தரலங்காரம் : 76.

செங்கற்பட்டு மாவட்டத்தில் அமைந்த குன்றுதோருடல் பதியான திருத்தணிகையைச் சென்னை, அரக்கோணம், காஞ்சிபுரம் ஆகிய நகரங்களிலிருந்து பஸ்மூலம் அடையலாம். சென்னை–ரேணிகுண்டா, இரயில் வழியில் திருத்தணிகை அமைந்துள்ளது. திருத்தணி இரயில் நிலையத்திலிருந்து ஒருகல் தொலைவில் கோயில் உள்ளது.

ஊரின் நடுவில் 400 அடி உயரத் தணிகைமலைமீது நான்கு பிரகாரங்களுடன் அழகுமிகுந்த ஆறுமுகன் அருட்கோயில் அமைந்துள்ளது. மலையின் மீது கார் செல்ல நல்ல சாலையுள்ளது. தணிகைமலைக்கு வடக்கில் பச்சரிசிமலையும் தெற்கில் பிண்ணாக்கு மலையும் உள்ளன.

மலையடிவாரத்தில் அமைந்துள்ள சரவணப் பொய்கையைச் சிவவழிப்பாட்டிற்காக முருகவேள் வரவழைத்த கங்கை என்பர். குமாரதீர்த்தம் எனவும் தலபுராணம் இதனைக் காட்டுகின்றது. மலையில் 365 படிகளை ஏறி மலைக்கோயிலை அடைகிறோம்.

அடிவாரத்தினின்றும் மலை ஏறும் பாதையில் வடபுறம் பிரம்மசுனை (பிரம்ம தீர்த்தம்)யும் அதனருகே விநாயகர், பிரம்மலிங்கக்கோயிலும் உள்ளன. பிரணவத்திற்குப் பொருள்தெரியாது முருகனால் குட்டுப்பெற்றுச் சிறைப்பட்டிருந்த பிரமன். முருகப்

பெருமானை வழிபட்டு மீண்டும் படைப்புத்தொழிலை இங்கே பெற்றதாகத் தலபுராணம் கூறுகின்றது.

மலையின் உச்சியினை அடைகிறோம். நான்காவது பிரகாரமான இரதவீதியினை அடைகிறோம். இங்கே கார்த்திகை நாட்களில் எரியும் கற்பூரக் கொப்பரையும் நாள்தோறும் வழிபாட்டுக் காலங்களில் இஸ்லாமியர் வாத்தியம் வாசிக்கும் நவாப்வாத்திய மண்டபமும் அமைந்துள்ளன. காதர் என்ற நவாப்பின் துன்பத்தைப் பெருமான் போக்கியதற்கு அடையாளமாக அவன் அமைத்த இவ்வாத்திய மண்டபமும், அவன் வழிபட்டு நிறுவிய பிரசன்ன காதர் ஈஸ்வரர் என்ற சிவன் கோயிலும் விளங்குகின்றன. இங்குள்ள முருகப்பெருமான் வள்ளிமலை ஸ்ரீசச்சிதானந்த சுவாமிகளுக்கு ஓர் முகமதியர் உருவில் காட்சியருளியதாகக் கூறுவர். நான்காவது பிராகாரத்தில் இந்திர நீலச்சுனை, விஷ்ணு தீர்த்தம், நாகதீர்த்தம் ஆகியனவும் உள்ளன.

நான்காவது பிராகாரத்திலிருந்து கிழக்குவாயில் வழியே சிலபடிகளைக்கடந்து மூன்றாவது பிரகாரம் அடைந்தவுடன் துவஜஸ்தம்ப விநாயகரையும் ஐராவதத்தையும், தெற்குப்பாகத்தில் உமாமகேசுவரர் சந்நிதியையும், மேற்குப்பாகத்தில் உச்சிப் பிள்ளையார் சந்நிதியையும் வழிபடுகிறோம்.

அடுத்து இரண்டாவது பிராகாரத்தை அடைந்து ஏகாம்பரேசர், ஆறுமுகசுவாமி, குமரேசலிங்கம், தேவயானைக்கு இந்திரன் சீதனமாகத்தந்த சந்தனக்கல், மற்றும் உருத்திராக்க விமானத்தில் வீற்றிருக்கும் பெரிய உற்சவமூர்த்தி ஆகியோரைத் தரிசிக்கிறோம்.

பஞ்சாக்கரப் (ஐந்து) படிகள் நம்மை முதற்பிராகாரத்திற்கு அழைத்துச் செல்கின்றன. இங்கே வள்ளி, தெய்வானை, பாலசுப்பிரமணியர், சண்டேகர், பைரவர் சந்நிதிகள் உள்ளன.

உள்ளே கருவறையில் திருத்தணிகேசன்-சுந்தரவடிவுடன் இடக்கரத்தைத் தொடையில்வைத்து, வலக்கரத்தில் வேல் தாங்கித் தனித்து நின்று அருட்காட்சி நல்குகின்றார். இங்கே முருகப்பெருமான் ஞான சக்திதரராகத் திகழ்கிறார்.

அழகானத்தணிகைமலை. அழகான் தணிகை ஆண்டவர். எங்கும் அழகு. எதிலும் அழகு. வள்ளிமலையை வழிபட்டு நேரே திருத்தணிகையை அடைந்த அருணகிரிநாதர், இதுகாறும் இப்பெருமானை வந்து வணங்காது போயினேனே என்று வருந்துகிறார்,

பாடுகிறார். "கோடாதவேதனுக்கு நான் என்ன குற்றம் செய்தேன். உனது தண்டையந்தாள்களைச்சூடாத சென்னியை யும் நாடாத கண்ணையும், பாடாத நாவையும் எனக்கென்றே தெரிந்து அமைத்தனனே என்று புலம்புகிறார். (கந்தரலங்காரம்76.) பலநாள் இத்தலத்தில் தங்கித் தணிகேசனைப் பலவாறு புகழ்ந்து அற்புதமான 66 திருப்புகழ்ப் பாக்களால் பரவினார்,

"தணிகைமலை அப்பனே அழகிய பெருமாளே" "தணிகை மாமலை மணிமுடி அழகியல் பெருமாளே" "தணிகையில் இணையிலி" எனவரும் அருணகிரிநாதர் வாக்கு கருதத்தக்கது. பலதிசையிலுள் ளோரும் நாடிநெருங்கி வரும் சரவணப்பொய்கை என்னும் திருக்குளத்தை உடையது; தமிழ்மொழி வழங்கும் நாட்டின் வட எல்லையாக விளங்குவது; முருகவேளின் திருப்புகழை ஓதும் கருத்தி னர் சேரும்பதி; உத்தம சிவனடியார்கள், முனிகணத்தவர், இமையவர், ஐந்துதலைநாகம் வழிபடும்பதி, தூரத்தொழுவார் வினைசிந்திடும் பெருந்தலம்; வள்ளியம்மையை மயக்கி அணைத்த பின் முருகவேள் அவ்வம்மையுடன் மகிழ்ந்து என்றும் அகலாது வீற்றிருந்தருளும் மங்கலநகரம்; தமது தந்தையாகிய சிவபிரான் தமது கழலைத் தியானிக்க அவருக்குச் (சுவாமி மலையிற் போல) சுவாமிநாதனாய் முருகப்பிரான் உபதேசித்த உயர்பதி; திரைக் கடல் சூழும் புவிக்கு உயிராகும் திருத்தணி; பூவின் நடுவினில் வீறு தணிகைமலை; பவரோக வயித்தியநாதப்பெருமாள் விளங்கும் பதி என்றெல்லாம் அருணகிரிநாதசுவாமிகள் போற்றுகின்றார் இப்பதியை!

சிவபெருமான் திரிபுரத்தைச் சிரித்து எரித்தனர்; மன்மதனை விழித்து எரித்தனர் என்பது புராணம். இத்தலத்திருப்புகழில் திரிபுரத்தைச் சிவபெருமான் விழித்துஎரித்தார்; மன்மதனைச் சிரித்து எரித்தார் என்று அருணகிரிநாதசுவாமிகள் அழகாகப் போற்றுகின்றார்.

இத்தலத்தில் அருணகிரிநாதருக்குக் கந்தவேள் தமது தேவிமார்களுடன் மயில்மீதமர்ந்து நிர்த்தத்தரிசனத்தைத் தந்தருளியதை

"விண் அமரர் கொடுத்திடும் அரிவை குறத்தியொ(டு)
அழகு திருத்தணி மலையில் நடித்தருள் பெருமாளே"
"தணிகை மலைதனில் மயிலில் நிர்த்தத்தில் நிற்கவல
பெருமாளே"

சின்வரும் திருப்புகழ் வரிகள் சான்று பகருகின்றன. அறிவை அறியும் தத்துவத்தையும் அபரிமிதவித்தைகளையும் அருணகிரி நாதருக்கு அறுமுகப் பரமன் அருளிய ஐந்து தலங்களுள் திருத்தணிகையும் ஒன்று ஆகும். இத்தலத்தில் அருணகிரிநாதர் பாடிய "இருமலுரோக" என்னும் திருப்புகழ் எவ்வித நோயை யும் போக்கும் மகாமந்திரமாகும். நினைத்த காரியம் அனுகூல மாக வெற்றிபெறவேண்டுமானால் "சினத்தவர் முடிக்கும்" என்ற திருப்புகழ்ச் சிறந்த தந்திரமாகும்.

இத்தலச்சிறப்பினைக்கூறும் சந்தபுராணப்பகுதிகள் எண்ணி இன்புறற்குரியவை. மலர்களில் சிறந்தது தாமரை; நதிகளில் சிறந்தது கங்கை; பதிகளில் சிறந்தது காஞ்சி, மலைகளில் சிறந்தது தணிகை என்பார் கச்சியப்ப சிவாச்சாரியார்.

*"விரையிடங்கொளும் போதினுள் மிக்கபங்கயம் போல்*
*திரையிடங்கொளும் நதிகளிற் சிறந்தகங்கையைப் போல்*
*தரையிடங்கொளும் பதிகளிற் காஞ்சியந்தலம் போல்*
*வரையிடங்களில் சிறந்தது இத்தணிகைமால் வரையே."*

— **கந்தபுராணம்.**

கயிலையைப் போன்ற திருத்தணிகையில் முருகப்பெருமான், சூரபன் மன் முதலிய அவுணர்களைப்பொருது வெற்றிகொண்டு செருத் தணியுமாறு வந்து தங்கினர். "செருத்தணிகை"யே திருத் தணிகையாயிற்று என்பர்.

திருத்தணிகையின் சிறப்பினை முருகப்பெருமானே வள்ளி நாயகிக்குக் கூறுகின்றார்.

*"பாதகம் பல செய்தவர் ஆயினும் பவங்கள்*
*ஏதும் வைகலுந் புரிபவர் ஆயினும் எம்பால்*
*ஆதரங் கொடு தணிகைவெற்பு அடைவரேல் அவரே*
*வேதன் மாலினும் விழுமியர் எவற்றினும் மிக்கார்."*

— **கந்தபுராணம்.**

வள்ளிநாயகியை மணங்கொண்டு தணிகைமலையில் வந்து தங்கித் தம்மை நாடிவரும் அன்பர்கட்குத் திருவருள் புரிகின்றார் ஆறுமுகப்பெருமான். தணிகைமலையைச் சாரேனே! அதன் அழகைப் பாரேனே! என்று வடலூர் வள்ளல் இராமலிங்கசுவாமி கள வியந்துபரவியதலம்இது. முத்துசுவாமி தீட்சிதருக்கு அருளிய தலம் இது.

இக்கோயிலில் நடைபெறும் கந்தசஷ்டிப்பெருவிழாவில் சூரசம்ஹாரம் கிடையாது. ஆடிக்கிருத்திகையன்று இலட்சக் கணக்கான மலர்க்காவடிகள் வரும். ஏனைய ஊர்க்காவடிகட்கும் இம்மலர்க்காவடிகட்கும் வேறுபாடு உண்டு. குச்சியின் இருபுற நுனிகளில் ஒன்றில் மலர்களும் மற்றொன்றில் அர்ச்சனைக்குரிய பொருள்களும் இருக்கும், ஏனைய காவடிகள் போன்று குச்சிக்கு மேல் பட்டுத்துணி அரைவட்டத்தில் இராது.

நான்முகனும், அகத்தியரும், நாரதரும் முத்திபெற்றதலம்.

தணிகைநாதனுக்கு முன்னே மயிலுக்குப்பதிலாக யானை உள்ளது இங்கு மற்றொரு சிறப்பு.

கணிகவெற்பு, கல்லாரவெற்பு, சீபரிபூரணம், செருத்தணி, தணிகாசலம், நீலகிரி, காவியங்கிரி என்றெல்லாம் இத்தலம் போற்றப்படுகிறது.

தணிகேசனுக்குச் செங்கல்வராயன் என்ற சிறப்புப் பெயர் உள்ளது. மூலவர் நவபாஷாணத்தினால் ஆனவர். கிழக்குநோக்கி ஒரு திருமுகத்துடன் விளங்குகின்றார். உற்சவமூர்த்தி உருத்தி ராக்க மண்டபத்தில் ஒருமுகம் நான்கு கரங்களுடன் வள்ளி தேவயானையுடன் விளங்குகிறார். முன்னே நவவீரர்கள் விளங்கு கின்றனர். மற்றொரு உற்சவர் ஆறுமுகம்-பன்னிரு கரங்களுடன் இருதேவிமாருடன் மயில்மீது விளங்குகின்றார்.

ஸ்தலவிநாயகர்-உச்சிவிநாயகர்; மற்றும் உமாமகேசுவரர், ஏகாம்பரநாதர், காமாட்சி, பாலசுப்பிரமணியர், அருணகிரிநாதர் சந்நிதிகள் சிறப்பானவை.

நாள் தோறும் நான்கு கால வழிபாடுகள் நிகழ்கின்றன. காமிகாகம முறையில் பூசை நிகழ்கின்றது.

புஷ்பக் காவடி, பால்காவடி, அங்கப்பிரதட்சிணம் முதலிய பிரார்த்தனைகள் இங்கு உண்டு.

சித்திரையிலும்மாசியிலும் பிரம்மோற்சவம் கொண்டாடப் பெறுகின்றது. மாசிமகம் தீர்த்தவாரி, வள்ளி கல்யாணம், சித்திரையில் தேவயானை கல்யாணம் சிறப்பாகும்.

மாதக் கார்த்திகையும் ஆடிக்கார்த்திகைத் தெப்ப விழாவும் வழிபடுவோர்களை ஏராளமாக ஈர்க்கின்றன.

ஏராளமான வழிபடுவோர் விடுதிகள் உள்ளன. தொன்மை யான இத்தலத்தில் பல கல்வெட்டுக்கள் உள்ளன அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ள இக்கோயிலுக்கு ஆண்டுக்கு ஒரு கோடி ரூபாய்க்கு மேல் வருவாய் உள்ளது.

இத்தலத்திற்கு அருகே வெள்ளிகரம், புத்தூர், நெடியமலை, பொதட்டூர், வீராணம், உத்திரமேரூர், ஆண்டார் குப்பம், காளத்தி முதலிய தலங்கள் உளளன.

திருமால் கோயிலில் சடகோபம் சாதிப்பது போன்று இத்தலத்தில் முருகன் திருவடி அடியவர்களுக்கு சார்த்தப் படுகிறது. இத்தலத்தில் அரைக்கப்படும் சந்தனம் சர்வரோக நிவாரணியாகும். தணிகேசனின் மார்பில் ஒரு குழி உள்ளது அதில் சார்த்தப் பெறும் சந்தனம எல்லா வியாதிகளையும போக்க வல்லது. சப்தரிஷிகள் முருகனை இங்கு வழிபட்டதன் நினைவாக ஏழு சுனைகள் இங்கு உளளன.

ஆண்டுதோறும் ஆங்கில ஆண்டின் இறுதிநாள் திருப் புகழ்த் திருப்படித் திருவிழா தொடங்கி, மறுநாளான ஆங்கிலப் புத்தாண்டு முதல் நாள்வரை சிறப்பாக நடைபெறுகின்றது.

வழிபடுவோரின் பிரார்த்தனைக் கிணங்கவும் தேர்த் திரு விழா முதலியன நிகழ்கின்றன. ரூ. 700 செலுத்தினல் தங்க ரதமும் ரூ 303 கட்டினுல் வெள்ளி ரதமும் ஓடும்.

முருகப் பெருமானின் சந்தனக் காப்பு விபூதி அபிஷேகங் கள் கண்கொள்ளாக் காட்சியாகும்.

இந்திய ஜனதிபதியாக விளங்கிய டாக்டர். இராதா கிருஷ்ணன் இத்தலத்தில் பிறந்தவரே என்பதும் குறிப்பிடத் தக்கது. அவர் நினைவாக இங்கு ஒரு நூலகம் உள்ளது

உணவு விடுதிகள் உள்ளன.

இத்தலம் பற்றிய பல நூல்கள் உள்ளன; அவற்றுள் திருத்தணிகை சந்நிதி முறை என்ற நூலில் பல பிரபந்தங்கள் கள் உள்ளன.

*நினைத்த தெத்தனையிற் றவறாமல்*
*நிலைத்த புத்திதனைப் பிரியாமற்*
*கனத்த தத்துவமுற் றழியாமற்*
*கதித்த நித்தியசித் தருள்வாயே*
*மனித்தர் பத்தர்தமக் கெளியோனே*
*மதித்த முத்தமிழிற் பெரியோனே*
*செனித்த புத்திரரிற் சிறியோனே*
*திருத்தணிப் பதியிற் பெருமாளே.*

—அருணகிரிநாத சுவாமிகள்.

## சித்ர நெடிய குன்றம்

திருத்தணி வட்டத்தில் அமைந்த மற்றொரு சிறந்த முருகன் தலம் நெடியம் அல்லது நெடியமலை ஆகும். நெடியம் என்றே ஊரின் பெயர் வழங்குகின்றது. நகரிலிருந்து . டள்ளிப்பட்டு வழியே செல்லும் பஸ் மூலம் இத்தலத்தை அடையலாம். நகரிவரை இரயில் வழி உள்ளது. நல்லசாலை அமைந்துள்ளது.

யானை படுத்துக் கொண்டிருப்பது போன்று இங்குள்ள மலை உள்ளதால் யானைமலை, கஜகிரி என்ற பெயர்களும் வழங்குகின்றன. மலைமீது தனிக்கோயிலில் குமரவேள் விளங்கு கின்றார். சுமார் 600 படிகள் ஏறிக் கோயிலை அடையவேண்டும். படிகள் சீராக இல்லை. கோயில் திருப்பணி செய்ய வேண்டிய நிலையிலுள்ளது.

இங்கே இந்திரன் ''செங்கழுவ'' என்னும் நீலோற்பல மலரால் இறைவனை வழிபட்டதால் ''செங்கல்வராய சுவாமி'' என்று போற்றப் பெறுகிறார். ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருபுறமும் தேவிமார் சூழ கடிஹஸ்தத்துடன் நின்ற கோலத்தில் எழிலொழுகும் அருட்கோல காட்சியருள்கிறார் இங்கே முருகப் பெருமான்.

உற்சவரும் மூலவரைப் போன்றே நின்ற கோலத்தில் இருதேவிமாருடன் அருகில் மயில் விளங்க எழுந்தருளியுள்ளார்.

வள்ளி, தேவயானையுடன் ஆறுமுக சுவாமி, வள்ளி, தேவ யானையுடன் பாலசுப்பிரமணியர், விநாயகர், காலபயிரவர், திருமால், திருமகள், கருடன், சூரியன், திரிபுரசுந்தரி, திருக் குமாரேஸ்வரர், சுமித்ரேசுவரர், சண்டேசர் சன்னிதிகளும் உள்ளன.

ஆறுமுக சுவாமி, கஜவல்லி உற்சவமூர்த்திகள் மிக அழகானவை.

காலை 9 மணிமுதல் 11 மணிக்குள் ஒருகால பூசையே நாடோறும் நடைபெறுகின்றது. ஆடிக்கிருத்திகையில் புஷ்பக் காவடிகள் சிறப்பாக இருக்கும் பங்குனி உத்திரத்தில் பிரம் மோற்சவம் நடைபெறுகிறது. ஜனவரி 1-ம் நாள் சந்தனக் காப்புக் கண்கொள்ளாக் காட்சியாகும்.

முருகப்பெருமான், வேடர்கள் அறியாமல் வள்ளியைக் கவர்ந்துவர, வேடர்கள் அவருடன் போருக்குவர, போர் செய்து சினம் அடங்காமல் நின்ற இடம் என்று இத்தலத்தைக் கூறு கிறார்கள். அவரது சினத்திற்கு இம்மலை தாங்காமல் ஆடவே அருகிலுள்ள தணிகைமலையில் சென்று கோபம் தணிந்தார் என்று கூறுவர்.

பழமையான கோயில்; கல்வெட்டுச் சிறப்புகள் உள்ளன தங்குவதற்கு வசதி இல்லை.

செங்கல்வ தீர்த்தம், நீலோத்பல தீர்த்தம் முதலிய புண்ணியப் புனல்கள் உள்ளன. மூன்று சுனைகள் உள்ளன.

"எனையடைந்த குட்டம்" எனத் தொடங்கும் திருப் புகழினால் இத்தல முருகனை அருணகிரிநாதர் பாடிப் பரவி யுள்ளார்

"நிலைபெறுந் திருத்தணியில் விளங்கு சித்ர
நெடிய குன்றில் நிற்கும் முருகோனே"

என்று திருத்தணியையும் இணைத்துப் பாடுவார் அருணகிரி நாதர். அறநிலைய ஆட்சித் துறையின் கீழ் இக்கோயில் அமைந்துள்ளது. தணிகையைத் தரிசிக்குமுன் இத்தலத்தைத் தரிசிக்க வேண்டுவது அவசியம்.

மெல்லு மயிலேறு வல்லகும ரேச
வெள்ளிலுட னீபம் புனைவோனே
வெள்ளிமணி பாட மல்கு திரு வீதி
வெள்ளிநகர் மேவும் பெருமானே!

# அணிவயல் சூழ் வெள்ளிநகர்

திருத்தணி வட்டத்தில் வெள்ளிகரம் என்ற தலம் உள்ளது. திருத்தணியிலிருந்து 36 கி. மீ; பஸ் வசதி உள்ளது. பள்ளிபட்டு என்ற ஊரிலிருந்து 2 கி. மீ. தூரத்தில் இத்தலத்தை அடையலாம்.

இங்கே மலைமீது ஒரு சிவன் கோயில் உள்ளது. இறைவன் சோமநாதர்; இறைவி: மரகதவல்லி. படிகள் அவ்வளவு சீராக இல்லை.

அடிவாரத்தில் ஒரு சிவன் கோயில் உள்ளது. இறைவன் பிருதிவீசுவரர்; இறைவி: புவனேசுவரி. இக்கோயிலும் மிகவும் சிதிலம் அடைந்துள்ளது. இக்கோயிலில் உள்ள முருகப் பெருமான் திருவுருவம் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு, அருகில் மயில் நிற்க, வள்ளி தேவயானையுடன் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். மலைக்கோயிலில் முருகன் சந்நிதி இல்லை.

அடிவாரத்தில் உள்ள கோயிலில் தினமும் ஒருகால வழிபாடுதான் நிகழ்கின்றது. கார்த்திகை நாட்களில் சிறப்பு வழிபாடு உண்டு. அருகில் நகரி ஆறு (குசஸ்தலை) ஓடுகின்றது. தாமரைக்குளம் ஒன்றுள்ளது. தலவிருட்சம்: நெல்லி. காமிகாமம் முறையில் பூசை நடைபெறுகின்றது.

இத்தலத்திற்கு 4 கி.மி. தொலைவில் நெடியம் முருகப் பெருமான் கோயில் உள்ளது.

தணிகையில் இணையிலி...பதயுக மலர்தந்த பேரருள் கனவிலும் நனவிலும் மறவேனே எனக்கூறி, தணிகையினின்றும் புறப்பட்டு வெள்ளிகரம் வருகிறார் அருணகிரிநாதசுவாமிகள்; "எனதுஊராகிய திருத்தணி உனது ஊராகிய வள்ளிமலையினின்றும்

காதம், காதம், அரைக்காதம் (10 + 10 + 5 = 25மைல்)தான்'' என்று வள்ளிப்பிராட்டியிடம்; கூறி அவ்வம்மையார்மீது ''மால்கொண்ட எம்பிரானே'' எனவும், ''கண்ணப்பர் எச்சிலை உண்ட சிவனளித்த குமரனே'' எனவும், ''என்றும் இளையோனே'' எனவும், ''மலைகிழவோனே'' எனவும், ''நாள்தோறும் நாம் கூறினால் நூறாயிரக் கணக்கான நமது பிறவி ஒழியும்'' எனப்பொருள்தரும் ''வதன சரோருக'' என்னும் மிக அருமையான திருப்புகழைக் கலவைச் சந்தத்திற்பாடியும், மயில், கடம்பு, சிறுவாள், வேல், திருமுருக சமுகம், சேவற்கொடி இவற்றைப் பரவித் தினைப்புனங்காத்த வஞ்சியின்கணவா எனத் துதித்தால் தான் முருகவேளின் பொற்பதங்களைப் பெறலாகும் என்னும் உபதேசத்தை எடுத்துரைத்தும், ''மெய்யர் மெய்ய! பொய்யர் பொய்ய!'' என ஆண்டவனை வாழ்த்தியும் பாடினர். வெள்ளிகரத்துத் திருப்புகழ் ஒன்பதும் ''தய்ய'' சந்தங்கலந்தனவாய்ச் சொல்லழகும் பொருளழகும் நிரம்பி நவரத்தினங்கள் போலவிளங்கி, ''நவரத்தினத்திருப்புகழ்'' என்னும்படிப் பொலிகின்றன.

இத்தலத்திருப்புகழ்ப்பாக்கள் 'அடலரி'நகவு' 'கள்ளமுள்ள' 'தொய்யில் செய்யில்', 'இல்லையென', 'பையரவுபோலு', 'வதனசரோருக,' சிகரிகளிடிய,' 'குவலயமல்கு,' 'பொருவனகள்ள' எனத்தொடங்குவன. இவை பயிலப்பியில மயிலூர்தியான் அருள் நலம் சுரப்பன. அருணகிரிநாத சுவாமிகள் வெள்ளிகர வேலன்பால் கொண்ட பக்தித்திறம் இவற்றால் இனிது புலப்படும். இவற்றை ஓதி வெள்விகரத்தமர்ந்த வள்ளலைப் பணிவோம்.

*வெகுமுக ககன நதிமதி இதழி*
*வில்வ முடித்த நம்பர் பெருவாழ்வே*
*விகசித கமல பரிமள கமல*
*வெள்ளிகரத் தமர்ந்த பெருமாளே!*

அற்றைக் கிரைதேடி - அந்தத்திலும் ஆசை
பற்றித் தவியாத - பற்றைப் பெறுவேனோ
வெற்றிக் கதிர்வேலா—வெற்பைத் தொளை சீலா,
கற்றுற் றுணர்போதா—கச்சிப் பெருமானே!

# பச்சைத் திரிவுமை இச்சித்தருளிய கச்சிப்பதி

காஞ்சிப்பதி பல்லவர் தலைநகரம். பண்டுதொட்டு கற்றறிந்தோர் போற்றும் கவின்பெரும் கோயில் மாநகர்; நகரங்களில் சிறந்தது காஞ்சிமாநகரம் என்பார் காளிதாசர். உமையம்மை கம்பை நதிக்கரையில் சிவபெருமானை மணலால் இலிங்கம் செய்து பூசித்து முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்தருளிய திருத்தலம். பஞ்சபூதத் தலங்களுள் இது பிருதிவித்தலம் (மண்). ஐயடிகள் காடவர்கோன் ஆட்சி செய்த தலம். சுந்தரர் தமது இடக்கண் பார்வை பெற்ற தலம். திருக்குறிப்புத் தொண்ட நாயனாரும் சாக்கிய நாயனாரும் முத்தியடைந்த தலம் கந்தபுராணம் அருளிய கச்சியப்ப சிவாசாரியார் பூசித்தருள் பெற்ற குமரக் கோட்டமும் ஆதிசங்கரர் வழிபட்டுக் காமகோடிபீடம் நிறுவிய காமகோட்டமும் இத்தலத்தில் வரலாற்றுச் சிறப்பு மிக்கன. மூவர் தேவாரம் பெற்ற ஏகாம்பரநாதர் கோயில், காமாட்சியம்மை அருட்கோயில் ஊரின் நடுவே பொலிவுடன் திகழ்வன.

காஞ்சியின் மேலைப் பகுதியாகிய பிள்ளைப் பாளையத்தில் திருக்கச்சிமேற்றளி—திருமேற்றளி என்னும் பாடல் பெற்ற தலம் உள்ளது. அப்பரும் சுந்தரரும் பரவிய தலம் இது. திருஞான சம்பந்தர் பதிகத்தால் திருமால் சிவனுரு பெற்ற தலம் இது. ஓத உருகு ஈசர் சந்நிதி ஒப்பற்றது. சம்பந்தர் பதிகம் கிடைத்திலது.

ஏகாம்பரேசர் கோயிலுக்கு மேற்கே சர்வ தீர்த்தத்திற்கு வடக்கில் சுந்தரர் பதிகம் பாடிப் பொன் பெற்ற தலம் ஒன்று உண்டு. ஓணன், காந்தன் என்ற இரு அசுரர்கள் பூசித்த இதனை ஓண காந்தன் தளி என்பர்.

காஞ்சியின் வடமேற்கில் வயல்களின் நடுவே திருக்கச்சி அனேகதங்காவதம் என்ற கோயில் உள்ளது. சுந்தரர் பரவிப்

பாடிய தலம் இது. கணபதியும் குபேரனும் பூசித்த மாண்புடையது.

காஞ்சியின் வடகிழக்கில் வயல்வெளியில் திருக்கச்சி நெறிக்காரைக்காடு (திருக்காலீசுவரன் கோயில்) என்ற தலம் உள்ளது. புதனும் இந்திரனும் பூசித்த இத்தலத்தைச் சம்பந்தர் பாடிப் பரவினர்.

இத்தகு சிறப்புகள் மிக்கப் பல திருக்கோயில்கள் கொண்டது காஞ்சி மாநகரம். அருணகிரிநாத சுவாமிகள் இத்தலத்தில் கந்தவேளைத் துதித்துப் பாடிய 44 திருப்புகழ்ப் பாடல்கள் உள்ளன. அருணகிரிநாதர் பலநாட்கள் இத்தலத்தில் தங்கியிருந்தார் என்று உணர முடிகின்றது. அவர் இங்கு வணங்கிய முருகவேள் தலங்களை நாமும் அவருடன் சிந்திப்போம்.

குமரக்கோட்டம்: இது காமாட்சியம்மை கோயிலுக்கு அண்மையில் உள்ளது. கச்சியப்ப சிவாசாரியார் நாடோறும் புசித்தது; கந்தபுராணம் எழுத நிலைக்களமாயிருந்த தலம் இதுவே. குமரக்கோட்டம் முருகனது தனிக் கோயில் ஆகும் இங்குள்ள குமரன் (பாலசுப்பிரமணியர்) ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு 4 அடி உயரமுடையவராக வடமேற்குத் திசை நோக்கி-நின்ற திருக்கோலத்தில் விளங்குகின்றார்.

இங்கு இரு உற்சவ மூர்த்தங்கள் உள்ளன. ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு இரு தேவிமாருடன் நின்ற கோலம் ஒன்று. சர்ப்பம் குடைபிடிக்க ஒருமுகத்துடன் தேவிமார் இருவருடன் உடுப்பி சுப்பிரமணியராகக் காட்சி தரும் மற்றொரு வடிவம்.

சண்முகர், தண்டபாணி, சந்நிதிகளும் இங்கு உள்ளன உற்சவர் சண்முகர் மயில்மீது அமர்ந்த கோலம்; முத்துக்குமார சுவாமி ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு இடது காலை மயில்மீது வைத்துக்கொண்டு நின்ற கோலத்தில் வில் அம்புடன் கொண்ட காட்சியும் அற்புதமானது.

இங்கே அருணகிரிநாதர், கச்சியப்பர், வள்ளலார் திரு உருவங்கள் உள்ளன, கச்சியப்பருக்குப் பின் வாழ்ந்தவர் அருணகிரிநாதர் என்பது திருப்புகழ் வரிகளால் இனிது புலப்படும். கந்தபுராண அரங்கேற்ற காலத்தில் முருகனே புலவனாக வந்து இலக்கணவிதி கூறியதை அருணகிரிநாதர் இங்கே அழகாகக் காட்டுகிறார்:

"மருவு புலவனுர் கவிக்குளே சிறு
வழுவ தறைமகா சபைக்குளேகியெ
வகைய பெயரதா இலக்கணவிதி மொழிவோனே."
(குதலை மொழியினுர்......)

"முற்பட்ட இலக்கண நூலிடை
தப்புற்ற கவிக்கெனவே அவை
முற்பட்டு புதுத்துறை மாறிய புலவோனே"
(தீத்தித்த மொழிச்சிகள்.... )

குமரக் கோட்டத்தில் எங்கு நோக்கினும் முருகன் பனுவல்கள் சலவைகற்களால் பதிக்கப் பெற்றுள்ளன. கந்தபுராணம் அரங் கேற்றிய மண்டபமும் உள்ளது. "அறிவிலார் பத்தர்" என்ற திருப்புகழ் இத்தலத்திற்குரியது.

**ஏகாம்பரேசுவரர் கோயிலில்** "மாவடிக் கந்தன்" சந்நிதி உள்ளது. ஆறுமுகங்களுடனும் திருவாசியுடன் அற்புதமான ஒரே அமைப்பு: பன்னிரு கரங்களுடன் தேவிமார் இருபுறமும் சூழ மயில்மீது அமர்ந்த திருக்கோலம். காஞ்சி மாவடிக்கருகில் இப்பெருமானைத் தரிசிக்கிறோம்.

இங்குள்ள உற்சவர் ஒரு முகமுடையவராய் விளங்குகிறார். மற்றொரு மூர்த்தம் ஆறுமுக சுவாமியாக இருதேவிமாருடனும் மயில் பின்புறம் விளங்க, அதன் முகம் இடப்புறம் நோக்கச் சுமார் 4 அடி உயரமுடைய கம்பீரமான திருக்கோலம்.

ஏகாம்பரேசர் சந்நிதிப் பிராகாரத்தில் ஆறுமுகன் சந்நிதி யும்உள்ளது மயில்மீது அமர்ந்த ஆறுமுகன்; இருபுறமும் தேவிமார் விளங்குகின்றனர்.

நடராசர், விகடசக்கர விநாயகர் சந்நிதிகள் ஆயிரங்கால் மண்டபத்தில் உள்ளன. விகடசக்கர விநாயகர் துதியே கந்த புராணத்தின் முதல் துதியாகும்.

**கச்சபேசுவரர் கோயிலில்** உள்ள ஆறுமுக சுவாமி பன்னிரு கரங்களுடன் மயில்மீது அமர்ந்த கோலம். தேவிமார் இருபுறமும் சூழ ஒரே அமைப்பில் திருவாசியுடன் கிழக்கு நோக்கிய கோலம். உற்சவர் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவி மாருடன் விளங்குகின்றார். நவவீரர் சந்நிதி உள்ளது.

மூலவருக்கு இங்கே கார்த்திகை மாத ஞாயிற்றுக் கிழமையில் மண்டை விளக்கு (மண்சட்டியில் மாவிளக்கு ஏற்றித் தலையில் வைத்து வலம் வரும்) பிரார்த்தனை செலுத்துவர். தலை பற்றிய நோய்கள் இதனால் நீங்குவது அனுபவ உண்மையாகும். தலவிருட்சம்: முருக்கமரம், பிலாசம்.

“வீங்கு பச்சிள” என்ற திருப்புகழ் இக்கோயில் முருகனுக்கு உரியது.

இக்கோயில் பிராகாரத்தில் திருப்பரங்குன்ற முருகன் சந்நிதி உள்ளது. மயில் மீதமர்ந்த ஆறுமுக சுவாமி கோலம் திருவாசியுடன் ஒரே கல்லில் அமைந்த அற்புத சிற்பமாகும். இடப்புறம் மயில் உள்ளது. இடப்புறம் தேவயானை மட்டும் இங்கே விளங்குகின்றார்.

**திருக்கச்சி மேற்றளியில்** விளங்கும் முருகன் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்த கோலமுடையவர். மயிலின் அமைப்பு-வியப்புக்குரியது; இருபுறமும் தோகை உடையது!

அருணகிரிநாதர் காஞ்சியை அடைந்துகுமரக் கோட்டப் பெருமானைப் பணிந்து காமக் கோட்டத்தில் (காமாட்சியம்மன் கோயிலில் உள்ள) கடம்பனைப் பணிந்து, கச்சபேசுரர் கோயிலில் உள்ள கந்தனைப்பரவி மற்றும் காஞ்சியிலுள்ள ஆலயங்கள் அனைத்திலும் உள்ள முருகப் பெருமான் திருக் கோலங்களைக் கும்பிட்டுத் தலம் கச்சிப்பதியாதலின் வல்லெழுத்து ஓசை செறிந்தனவும், பக்திச்சுவை மிக்கனவும், மிக அருமையான சொல்லழகு பொலிவனவுமான சந்தப்பாக்கள் பல பாடி இன்புற்றுப் பரவினார்.

காஞ்சி மாநகர் முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்த காமாட்சியின் தலமாதலின் இத்தலத்துத் திருப்புகழ்ப் பாக்களில் தேவியின் பெருமை சிறப்பாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

குமரக் குழந்தையின் கையைப் பற்றி விநாயகர் நடத்துகிறார். “பெரிய தும்பிக்கைக் கற்பக முற்றங்கரதலம் பற்றப் பெற்ற ஒருத்தன்” என்று வருகின்றது திருப்புகழ்.

திருஞான சம்பந்தர் திருமாலுக்குச் சிவசாரூபம் அளித்த லீலையைக் காட்டுகின்றார்.

வந்தித்தலே அறியாத தமது பிழைகளைப் பொறுத்து முருகவேள் தம்மை ஆட்கொண்ட அருமையான பொறுமைக்கு ஒப்பு உளதோ என்று போற்றுகின்றார்.

தேவி கம்பையாற்றில் தவம் புரிந்ததும், தேவி தழுவ ஈசன் குழைந்ததும், தேவி 32 அறங்களை வளர்த்ததும் பேசப் படுகின்றன.

"தத்தித்" என்ற திருப்புகழ் காஞ்சித் தலத்தைச் சிறப் பித்து "சொர்க்கத்துக்கு ஒப்புற்ற காஞ்சி" என்று போற்று கின்றது.

பிரமனைப் "பத்மத் தச்சன்" எனவும், சிவனை "திரிபுரஞ் சுட்டுக் கொட்டை பரப்பு குரிசில்" என்றும் தேவயானையைச் "சித்ரச் சொர்க்கச் சொர்க்கத் தத்தை" என்றும் கூறுவது கவியின்பமாகும்.

காஞ்சி மாநகரைப் பற்றி வரும் நூல்கள் வருமாறு:

1. காஞ்சிப் புராணம் (மாதவச்சிவ ஞான யோகிகள்)
2. திருஏகம்பர் அந்தாதி (மாதவச்சிவ ஞானயோகிகள்)
3. கச்சி ஆனந்த ருத்ரேசர் பதிகம் (மாதவச்சிவ ஞான யோகிகள்.)
4. திருஏகம்பர் ஆனந்தக் களிப்பு (மாதவச்சிவஞான யோகிகள்)
5. கச்சி ஆனந்த ருத்ரேசர் வண்டு விடுதூது (கச்சியப்ப கவிராட்சச முனிவர்)
6. ஆனந்த ருத்ரேசர் பதிற்றுப் பத்தந்தாதி (கவிராட்சச கச்சியப்ப முனிவர்)
7. ஆனந்த ருத்ரேசர் கழிநெடில் (கவிராட்சச கச்சியப்ப முனிவர்)
8. காஞ்சி புராணக் கலித்துறை.
9. தெய்வீக உலா (இரட்டையர்)
10. திருஏகம்பமாலை (பட்டினத்தார்)
11. திருக்கச்சி அகவல் (பட்டினத்தார்)
12. திருஏகம்பமுடையார் அந்தாதி (பட்டினத்தார்: 11-ம் திருமுறை)

13. திருஏகம்பர் யமக அந்தாதி (அச்சாகவில்லை)

14. சிவாகமக் கச்சிமாலை (சிவஞான வள்ளல்)

15. மகிழமாக் கலம்பகம் (தொழூர் வேலாயுத முதலியார்

16. கச்சிக்கலம்பகம் (பூண்டி அரங்கநாத முதலியார்)

17. காமாட்சி அம்பாப்பாட்டு (அச்சாகவில்லை)

18. காமாட்சியம்மன் சந்தவிருத்தம் (நல்லதம்பி முதலியார், அச்சாகவில்லை)

19. காமாட்சியம்மன் பிள்ளைத்தமிழ் (காஞ்சி குப்புசாமி)

20. காமாட்சியம்மன் அந்தாதி

21. மூகபஞ்சசதீ (மூககவி)

22. அத்திகிரிவரதர் கலித்துறையந்தாதி

23. அத்திகிரி மான்மியம் (வேதாந்த தேசிகர்)

24. திருக்கச்சித் தேப்பெருமாள் அந்தாதி

25. காஞ்சிப் புராணம் (கம்பர் புராணம்-அச்சாகவில்லை)

"குலசயி லத்துப் பிறந்த பெண்கொடி
யுலகடை யப்பெற் றவுந்தி யந்தணி
குறைவற முப்பத் திரண்டறம்புரி கின்றபேதை

குணதரி சக்ரப் ப்ரசண்ட சங்கரி
கணபண ரத்னப் புயங்க கங்கணி
குவடு குனித்துப் புரஞ்சு டுஞ்சின வஞ்சிநீலி

கலப விசித்ரச் சிகண்டி சுந்தரி
கடிய விடத்தைப் பொதிந்த கந்தரி
கருணை விழிக்கற் பகந்திகம்பரி எங்களாயி

கருதிய பத்தர்க் கிரங்கும் அம்பிகை
சுருதி துதிக்கப் படுந்த்ரியம்பகி
கவுரி திருக்கொட்டமர்ந்த இந்திரர் தம்பிரானே!'

(தலைவலி...திருப்புகழ்)

கோதைமலை வாழுகின்ற நாதரிட பாகநின்ற
கோமளிஅநாதி கந்த குமரேசா
கூடிவரு சூரர்தங்கள் மார்பையிரு கூறுகண்ட
கோடைநகர் வாழவந்த பெருமாளே!
(ஆதிமுத...திருப்புகழ்)

# கோடைக்குள் வாழும் குமரன்

செங்கற்பட்டு மாவட்டத்தில் ஸ்ரீபெரும்புதூர் வட்டத்தில் வல்லக்கோட்டை என்றழைக்கப்படும் கோடைநகர் என்னும் தலம் உள்ளது. ஸ்ரீபெரும்புதூருக்குத் தெற்கில் 10 கி. மீ. தூரத்திலும், காஞ்சிபுரத்திலிருந்து கிழக்கே 32 கி.மீ. தூரத்திலும், சிங்கப்பெருமாள்கோயில், திருக்கச்சியூருக்கு வடக்கே 16 கி. மீ. தூரத்திலும் அமைந்த இத்தலத்திற்கு சென்னை, காஞ்சி, செங்கற்பட்டு, திருவள்ளூர் முதலிய ஊர்களிலிருந்து பஸ்வசதி உள்ளன.

கிராமச்சூழலில் குன்றுக்கு அருகில் முருகன் கோயில் இங்கே அமைந்துள்ளது.

இத்தலமுருகன்: கோடையாண்டவர், முத்துக்குமரன் என்று போற்றப்படுகிறார். ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு இருபுறமும் தேவிமாருடன் கிழக்குநோக்கி நின்ற திருக்கோலம் அருகில் நெருங்கியவுடன் நம்மை மெய்சிலிர்க்கச் செய்கின்றது. முருகன் தலங்களுள் வேறு எங்கும் காண இயலாத அளவிற்கு 6 அடி உயரமுடைய இப்பெருமான் திருவுருவம் சரணாகதி காட்டும் கர அமைப்பும், கருணை பொழியும் முகக்குறிப்பும் கொண்டு திகழ்கின்றது.

மூலவர் போன்றே உற்சவரின் அமைப்பும் உள்ளது. வேறு சந்நிதி எதுவும் இங்கு இல்லை. கோயில் மேல்தளம் சிதிலம் அடைந்தும், மதில் இடிந்தும், மயில் மண்டபம் கிலமடைந்தும், துவஜஸ்தம்பமும் வாயில் கோபுரமும் தொடக்க நிலையிலமைந்தும் இருப்பது வேதனை தருவதாயுள்ளது. தினமும் மூன்றுகால வழிபாடு நிகழ்கின்றது. முருகனடியார்கள் திருப்பணி செய்ய முன் வர வேண்டும்.

இப்பகுதி மக்களின் கண்கண்ட தெய்வமாக இப்பெருமான் அருள் பாலிக்கின்றார். தீராத நோய்தீர்த்து வெள்ளிவேல்

பிரார்த்தனை செலுத்தியுள்ளார் ஒருவர். தன் கணவனுக்கு உயிர் பிச்சை அளித்ததால் திருமாங்கல்யப் பிரார்த்தனை செய்துள் ளாள் ஒரு பெண்மணி. சித்திராபௌர்ணமி, ஆடிக்கிருத்திகை, கார்த்திகைப்பெருநாள், தைக்கிருத்திகை விழாக்களும், தைப்பூசம் குன்றுஏறி பரிவேட்டை விழாவும், மாசி சஷ்டி விசாக நந்தவன விழாக்கள் போன்றனவும் நிகழ்கின்றன. மாதந்தோறும் கார்த்திகை நாள் சிறப்பானது. ஆடிக்கிருத்திகை சந்தனக்காப்பு அற்புதமாயிருக்கும்.

வியாழபகவான் (பிரகஸ்பதி) கூறிய வண்ணம் இந்திரன் வச்சிராயுதத்தை அழுத்தி ஒரு குளமுண்டாக்கினன்; அதுவே வச்சிர தீர்த்தமாகக் கோயிலுக்கு முன்பு உள்ளது. தலவிருட்சம்: பாதிரிமரம்.

சலங்கொண்டபுரம் ஆண்ட பகீரதன் சுக்கிரவாரவிருதம் இருந்து பாதிரிமரத்தின் கீழ் இங்கே முருகனை வழிபட்ட செயதி கந்தபுராணத்தில் பேசப்படுகின்றது.

சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அமைக்கப்பெற்ற இவ்வாலயம் பல அரசர்களின் திருப்பணி கொண்டது. அச்சிறு வாக்கம் புராணிகர் திருச்சிற்றம்பலம்பிள்ளை இயற்றிய தல புராணம் (9படலம்-2ı1 பாடல்கள்)இத்தலத்திற்கு உளளது.

அருணகிரிநாதப்பெருமான் இத்தலத்திற்கு வந்து வழிபட்டு 7 திருப்புகழ்ப்பாக்கள் பாடிப்பரவினர். அவை 'ஆதிமுத', 'சாலநெடு', 'ஏருனலே', 'ஞாலமெங்கும்', 'தோழமைகொண்டு' 'தோடப்பாமற்', 'வாசித்த நூல்', என்று முறையே தொடங்கு கின்றன. இத்தலத்திருப்புகழில் இன்ன இன்ன பாவம் செய்தோர் நரகில் வீழ்வர் என அருணை வள்ளல் கருணையோடு உலகுக்கு உபதேசித்துள்ளார்.

"தோழமை கொண்டு சலஞ்செய் குண்டர்கள்
ஓதிய நன்றி மறந்த குண்டர்கள்
சூழ் விரதங்கள் கடிந்த குண்டர்கள் பெரியோரைத்

தூஷண நிந்தை பகர்ந்த குண்டர்கள்
ஈவது கண்டு தகைந்த குண்டர்கள்
சூளுற வெஞ்ச தொழிந்த குண்டர்கள் தொலையாமல்

வாழ நினைந்து வருந்து குண்டர்கள்
நீதியறங்கள் சிதைந்த குண்டர்கள்
மான அகந்தை மிகுந்த குண்டர்கள் வலையாலே

மகயையில் நின்று வருந்து குண்டர்கள்
தேவர்கள் சொங்கள் கவர்ந்த குண்டர்கள்
வாதை நமன்றன் வருந்திடும் குழி விழுவாரே."

இத்தலத் திருப்புகழ்ப்பாக்கள் அனைத்தும் சுவைமிக்கன.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் விளங்குகின்றது. இவ்வூரில் உணவுச் சாலைகள் இல்லை. ஸ்ரீபெரும்புதூரில் தான் அவற்றைக் காணலாம்.

"சீரு விரு ஏரேழ் பார்சூழ்
சீரார் தோகைக் குமரேசா
தேவா சாவா மூவா நாதா
தீரா **கோடைப்** பதியோனே
வேறாய் மாறு யாரு மாசூர்
வேர்போய் வீழப் பொருதோனே
வேதா போதா வேலா பாலா
வீரா வீரப் பெருமாளே!"

(ஏருறலே...திருப்புகழ்.)



திருப்போரூர் (வில்லேந்திய முருகன்)

போரு லாவிய சூரனை வாரி சேறெழ வேல்விடு
பூப சேவக மாமயில் மிசையோனே
போதன் மாதவன் மாதுமை பாதியாதியு மேதொழு
போரிமாநகர் மேவிய பெருமானே.



**அகத்தியருக்கு உபதேசித்தல்**

இயலும் இசைகளும் நடனமும் வகைவகை
சத்யப் படிக்கினித கஸ்தியர்க்கு ணர்த்தியருள் தம்பிரானே.

(விகடபரிமள...)

திருப்போரூர் கந்தசுவாமிக் கோயில்

நன்றி: *French Institute of Indology, Pondicherry.*



**வள்ளிகல்யாணம்**

மரகத வித நேர்முத் தார்நகை
குறமகளதி பாரப் பூண்முலை
மருவியமண வாளக் கோலமும் உடையோனே.

(கருமுகில்...திருவானைக்கா)

திருப்போரூர் கந்தசுவாமி கோயில்

நன்றி: *French Institute of Indology, Pondicherry.*



உத்தரமேரூர்

வீர மங்கை வாரி மங்கை பாரின் மங்கை மேவு கின்ற
மேரு மங்கை ஆள வந்த பெருமாளே
ஆன னங்கள் மூவி ரண்டும் ஆறிரண்டு தோளும் அங்கை
ஆடல் வென்றி வேலும் என்று நினைவேனே!

நன்றி: *French Institute of Indology, Pondicherry.*

## திருத்தேர் சூழ் மதில் திருப்போரூர்

சென்னையிலிருந்து 27கல் தொலைவிலுள்ளது இத்தலம். செங்கற்பட்டிற்கு வடகிழக்கே 15கல். சென்னை செங்கற்பட்டு, காஞ்சிபுரம் முதலிய ஊர்களிலிருந்து பஸ்வசதி உள்ளது.

இத்தலத்தில் பெண்பனை மரத்தடியில் சுயம்புவாக முருகப் பெருமான் எழுந்தருளியுள்ளார். மூலவருக்குப் புனுகுச்சட்டம் சார்த்தப்பெறுகின்றது. மூலவருக்குக்கீழே வள்ளி, தேவயானை யுடன் சிறுவுருவில் எழுந்தருளியுள்ள முருகனுக்கே அபிஷேகம் நடைபெறுகிறது, கிழக்குநோக்கிய சந்நிதி இது.

ஸ்ரீலஸ்ரீசிதம்பரசுவாமிகள் அருளியுள்ள திருப்போரூர்ச் சந்நிதிமுறை (726பாடல்கள்) இத்தலமாண்பினை இனிது எடுத்து இயம்புகின்றது. இக்கோயிலில் வில் லேந்திய வேலனையும், குருவாய்த்தந்தைக்கு உபதேசித்த சுவாமிநாதனையும் அற்புத மான சிற்பச்சிறப்புடன் ஐம்பொன்னுலாகிய வடிவில் காண் கிறோம். கோயிலின் முன்பு திருக்குளம் உள்ளது.

இத்தலம் யுத்தபுரி எனவும் அழைக்கப்படும். அருணகிரிநாத சுவாமிகள் திருக்கழுக்குன்றத்திலிருந்து இத்தலத்திற்கு வந்து தொழுகின்றார். மூவரும் தொழும் தலம் என்று இதனைப் போற்றி, வேண்டுகோள் இல்லாத துதிப்பாடலாக ''திமிர...'' என்று தொடங்கும் திருப்புகழைப்பாடி,''முருகா பெண்ணாசை ஒழியவும், உன்னைப் புதுமலர் கொண்டு பூசித்து உன்தாளில்விழும் ஆய்ந்த அறிவு கூடிடவும் அருள் புரிவாய்'' என வேண்டுகிறார். இத் தலத்திற்கு நான்கு திருப்புகழ்ப் பாடல்கள் கிடைத்துள்ளன. இத் தலத்தைப் போரிமா நகர், சமரபுரி என்று அருணகிரிநாதர் போற்றுகின்றார்:

"திருத்தேர் சூழ்மதி ளோரார் தூபிசள்
அடுக்கார் மாளிகையே நீளேருள
திருப்போருருறை தேவாதேவர்கள் பெருமாளே."

—("அனுத்தே.......")

"திணைக்கோர் காவல் கொண்ட குறத்தேன் மாதுபங்க
திருப்போரூர் அமர்ந்த பெருமாளே"

—("உருக்கள் ")

"போதன் மாதவன் மாதுமை பாதி யாதியு மேதொழு
போரி மாநகர் மேவிய பெருமாளே."

—("சீருலாவிய ...')

"சகல லோகமு மாசறு சகல வேதமுமேதொழு
சமரமாபுரி மேவிய பெருமாளே"

—("திமிரமாமன ...)

—திருப்புகழ்ப்பகுதிகள்.

ஏதுபிழை செய்தாலும் ஏழையே னுக்கிரங்கி
தீது புரியாத தெய்வமே—நீதி
தழைக்கின்ற போரூர்த் தனிமுதலே நாயேன்
பிழைக்கின்ற வாறுநீ பேசு.

—திருப்போரூர்ச்சந்நிதிமுறை.

# கழுகு தொழு வேதகிரி

*பிணக்கிலாத பெருந்துறைப் பெருமான் உன் நாமங்கள்*
*பேசுவார்க்(கு)*
*இணக்கிலாத தோர்இன்பமேவரும் துன்பமேதுடைத் தெம்பிரான்*
*உணக்கிலாத தோர்வித்துமேல் விளையாமல் என்வினை யொத்தபின்*
*கணக்கிலாத் திருக்கோல நீவந்து காட்டினாய் கழுக்குன்றிலே.*

—திருவாசகம்.

மூவர் தேவாரமும், திருவாசகமும் போற்றும் திருக்கழுக் குன்றம், செங்கற்பட்டு இரயில் நிலையத்திலிருந்து தென்கிழக்கே 9கல் தொலைவிலுள்ளது. நிறைய பஸ் வசதி உள்ளது. வேதங் களே மலையாய் நிற்றலின் இதற்கு வேதகிரி என்றும் பெயர். நாள்தோறும் உச்சிக்காலத்தில் இரண்டு கழுகுகள் வந்து அர்ச்ச கராற் கொடுக்கப்பெறும் அன்னத்தைப் புசித்துச் செல்வதால் 'கழுக்குன்றம்' என்றபெயர்வந்தது. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை இந்திரன் "இடிபூசை" செய்யும் தலம் இது. பன்னி ரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை சங்கு பிறக்கும் மகிமையுடைய சங்கு தீர்த்தம் இங்கு உள்ளது. குருவடிவாகச் சிவபெருமான் இத்தலத்தில் மணிவாசகருக்குக் காட்சியருளியதலம். மலையின் மேலும் கீழும் கோயில்கள் உள்ளன.

பக்குவப்பட்ட நிலையில் முருகனை அறிவது என்ற நிலையை "குகன்" என்ற சொல் குறிக்கின்றது. மனக்குகையில் அப் பெருமானை விளங்கச் செய்வது சிறப்புடையதாம். திருக்கழுக் குன்றம் அத்தகைய நுகர்வு முதிர்ச்சித் தலமாதலின் 'குகக்கோட்டம்' என்று வழங்கப்படும்.

இத்தலத்தில் முருகப்பெருமான் ஆறுமுகம் கொண்டு மயில்மீது அமர்ந்த அருட்கோலத்தைக் காண்கின்றோம். திருவாசியுடன் ஒரே கல்லில் அமைந்த அற்புதச் சிற்பம். மயிலின்முகம் வடக்கு நோக்கிஉள்ளது. இருபுறமும் தேவிமார்கள் விளங்குகின்றனர்.

இங்கே மற்றொரு முருகன் சந்நிதி உள்ளது. இதனுள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு நின்றகோலத்தில் இருபுறமும் தேவிமார் சூழ மயில் பின்புறம் நிற்க முருகவேளைக் காண்கின்றோம். இங்கே மயிலின்முகம் வலப்புறம் அமைந்துள்ளது.

இத்தலத்து முருகப்பெருமானை 'அகத்தினைக', 'எழுகுநிறை', 'ஓலமிட்ட', 'வேதவெற்பிலே' எனத் தொடங்கும நான்கு திருப்புகழ்ப்பாக்களால் பரவிப்போற்றுகின்றார் அருணகிரிவள்ளல். உததிரமேரூர் வணங்கிப்பின் இத்தலம் வருகிறார் நம் சந்தக் கவிராஜர். அமராவதிக்கு ஒப்பான பெருமையுற்று அழகுவாய்ந்த தலம இது; கழுகு தொழுமகிரி; வேதகிரி; கதலிவனம்; கடலொலி போல மறையும் தமிழும் ஓதபபடும் தலம் என்றெலலாம் துதித்துப்பாடுகின்றார். ஆறெழுததின் உண்மை அனைததும் ஓமெழுத்திலேயே அடங்கியுள்ளது என்பதை இங்கே முருகன் விளக்கிக் காட்டினார் என்பதைத் தீர்த்தகிரிப் புராணத்தின் கந்த தீர்க்கச்சருக்கததில் கூறப்பட்டுள்ளது. இவ்வரிய செய்தியை "ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே" என்று இங்கே பாடுகின்றார் அருணகிரிநாதர். இத்தலத்திருப்புகழில்வரும் "ஆறெழுத்தை நினைந்து குகாகுகா எனவகைவராம்தா" என்பதை மனப்பாடமாக ஓது அநுட்டிபபது பெரும்பயன் விளைவிக்கும்.

> வேத வெற்பி லேபு னத்தில் மேவிநிற்கும் அபிராம
> வேடுவச்சி பாதபத்ம மீது செச்சை முடிதோய
> ஆத ரித்து வேளை புகக ஆறிரட்டி புயநேய
> ஆதரத்தொ டாதரிக்க ஆன புத்தி புகல்வாயே!
> காதுமுக்ர வீர பத்ர காளி வெட்க மகுடாமா
> காசமுட்ட வீசிவிட்ட காலர் பத்தி யிமையோரை
> ஓதுவித்த நாதர் கற்க வோதுவித்த முனி நாண
> ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே!

## புல்வர் போற்றிய வேலூர்

செங்கற்பட்டு மாவட்டம்- காஞ்சிபுரம் வட்டத்தில் செய் யாற்றின் வடகரையில் இத்தலம் உள்ளது. காஞ்சிபுரத்திலிருந்து 15கல் தொலைவிலுள்ளது. பஸ்வசதி உள்ளது. மலையன், மாகரன் என்னும் இரு அரக்கர்களை முருகன் வேல்பாய்ச்சி அழித்ததலம். வேல்மூலவேலாக இங்கு பிரதிட்டை செய்யப்பட்டுள்ளது. முருகன் வேல் சம்ஹாரத்திற்குப் பூமியில் ஊன்றி வேலாயுத மூர்த்தியாக தரிசனம் அளிப்பது தனிச்சிறப்பாகும்.

இங்குள்ள முருகப்பெருமான் மூலவர் பாலசுப்ரமணியர், ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டுநின்ற திருக்கோலம்; கிழக்குநோக்கிய சந்நிதி; புராதன மூர்த்தியாகும்.

உற்சவமூர்த்தி வள்ளி தெய்வயானையுடன் அமைந்த உன்னதக் கோலமாகும்.

நாள்தோறும் மூன்றுகால பூசை காமிகாகமம்முறையில் நிகழ்கின்றது.

கார்த்திகைதோறும் முடிகாணிக்கை, பால்காவடி, புஷ்பக் காவடிப் பிரார்த்தனைகள் செலுத்தப்படுகின்றன.

சித்திரைபிரம்மோற்சவமும், மாசிமாத சஷ்டி லட்சார்ச் சனையும், தைக்கிருத்திகையும் சிறப்பு விழாக்களாகும்.

இத்தலத்திற்கு அருணகிரிநாதர் அருளிய இருதிருப்புகழ்ப் பாக்கள் உள்ளன. "அதிகராய்," "சேலாலமொன்று" என்று

தொடங்குவன அவை. இத்தலத்தை வழிபட்டபின்பு காஞ்சியை வழிபடச்செல்கின்றார் அருணகிரிநாதர்.

இத்தலத்திருப்புகழில், மதுரையில் திருஞானசம்பந்தர் சமணரை அனல்வாதம் புனல்வாதங்களில் வென்று பாண்டியனை நின்றசீர் நெடுமாறனுக்கிய அரியவரலாற்றை அற்புதமாகக் காட்டுகிறார் நம் அருணை வள்ளல்,

''மதுரை நாட்டினி லேவாழ் வாகிய
அருகர் வாக்கினி லேசார் வாகிய
வழுதி மேற்றிரு நீறே பூசிநி மிர்ந்துகூனும்

மருவு மாற்றெதிர் வீறே டேறிட
அழகி போற்றிய மாறுலாகிய
மகிமையாற் சமண்வே ரோடேகெட வென்றகோவே!''

**(அதிகராய்...திருப்புகழ்)**

தொன்மையான கோயில் இது. கடம்பநாதபுராணத்தில் இத்தலச்செய்திகள் இடம்பெற்றுள்ளன. அருகில் காஞ்சிக்குமரக் கோட்டமும், உத்திரமேரூரும் உள்ளன.

''புகழினுற் கடல் சூழ்பார் மீதினில்
அளகை போற்பல வாழ்வால் வீறிய
புலவர் போற்றிய **வேலூர்** மேவிய தம்பிரானே''

''வேய் போலவுந்திரண்ட தோள்மாதர் வந்திறைஞ்சு
வேலூர் விளங்க வந்த பெருமாளே''

என்று அருணகிரிநாதருடன் நாமும் வாழ்த்துவோம்.

*வேலை யன்பு கூரவந்த ஏகதந்த யானைகண்டு*
*வேடர்மங்கை யோடியஞ்ச அணைவோனே*
*வீரமங்கை வாரிமங்கை பாரின்மங்கை மேவுகின்ற*
*மேருமங்கை யாளவந்த பெருமாளே!*
*(தோலெலும்பு...திருப்புகழ்)*

# தமிழ் மறையோர் வாழ் மேருமங்கை

செங்கல்பட்டு மாவட்டத்திலமைந்த உத்திரமேரூர் என்னும் இத்தலத்திற்குச் சென்னை, மதுராந்தகம், வந்தவாசி, செங்கல்பட்டு, காஞ்சீபுரம் போன்ற ஊர்களிலிருந்து பஸ்வசதி உள்ளது. இரயில் பாதை இல்லை.

இங்கே முருகனுக்குத் தனிக்கோயில் உள்ளது. கருவறையின் மூலையில் சிவபெருமான், உமையம்மை, சந்நிதிகள் உள்ளன. முருகன் மூலவர் ஸ்ரீபாலசுப்ரமணியசுவாமி-6அடி உயரமுடையவராய் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு சாய்வாகச் சிவபெருமானைப் பூசை புரிவது போன்று நின்றகோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். முருகப்பெருமான் உத்திராக்கம் அணிந்து, கைகளில் நாகாபரணம் பூண்டு, சடைமுடியுடன், காதுகளில் குண்டலமணிந்து விளங்குகின்றார்.

உற்சவரும் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு தேவிமார் இருவருடன் நின்றத் திருக்கோலம்.

நாள்தோறும் இருகால வழிபாடு. காமிகாகமம்-குமார தந்திர முறைப்படி நிகழ்கின்றது.

வருடப்பிறப்பு, சங்காபிஷேகம், பவித்ரோற்சவம், கார்த்திகைப்பெருவிழா போன்றவை சிறப்பு நாட்களாகும்.

கோயிலின் வடகிழக்கில் இந்திரதீர்த்தம் என்ற திருக்குளம் உள்ளது. கோவிலைச்சுற்றி மலைகள் உள்ளன. குடவோலைமுறையில் கிராமநிர்வாகம் செய்யப்பட்ட முறையைக் காட்டும் உத்திரமேரூர்க் கல்வெட்டுச் சிறப்பு இங்குதான் உள்ளது. பரம்பரை அறங்காவலர்கள் அறநிலைய ஆட்சித்துறையின் கீழ்க்கோயிலை நிர்வாகம் செய்துவருகின்றனர்.

இத்தலத்திற்கு அருகே இளையனூர்வேலூர், சாஞ்சி, திருப் போரூர் ஆகிய தலங்கள் உள்ளன.

உத்திரமேரூர் முருகப்பெருமானைப் போற்றி நான்கு ஒப்பற்ற திருப்புகழ்ப்பாக்களை அருணகிரிநாதசுவாமிகள் அருளி யுள்ளார். "தமிழ் மறையோர் வாழ் மேருமங்கை" எனவும் திருமால், பிரமன், விநாயகர், சிவபிரான் முதலிய யாவரும், ஞானிகளும், ஆயிரத்திருநூறு மறையோர்களும் வாழும் தலம் என்றும், "ஆயிரம் கலைகர்த்தா" என்று இத்தல முருகனைப் போற்றியும் பாடிய அப்பாக்களுள்,

*"அறிய அறிய அறியாத அடிகளறிய அடியேனும்*
*அறிவுள் அறியும் அறிவூற அருள்வாயே"*

*"ஆனனங்கள் மூவிரண்டும் ஆறிரண்டு தோளும் அங்கை*
*ஆடல்வென்றி வேலும் என்று நினைவேனோ"*

என்பன மனப்பாடஞ்செய்து இன்புறத்தக்கனவாம்.

*ஆழியிற் றுயில்வோனும் மாமலர்ப் பிரமாவும்*
*ஆகமப் பொருளோரும் அணைவோரும்*
*ஆனைமத் தகவோனும் ஞானமுற் றியல்வோரும்*
*ஆயிரத் திருநூறு மறையோரும்*
*வாழும் உத்தர மேரூர் மேவியற் புதமாக*
*வாகுசித் திரதோகை மயிலேறி*
*மாறெனப் பொருசூர னீறெழப் பொரும்வேல்*
*மான்மகட் குளனான பெருமாளே!*

**(நீள்புயற்...திருப்புகழ்.)**

*"மேருமங்கையில் அத்தா! வித்தக*
*வேலொடும்படை குத்தாவொற்றிய*
*வேடர்மங்கைகொள் சித்தா பத்தர்கள் பெருமாளே!"*

## விசுவை விளங்கவருவிசாகன்

*வரையை முனிந்து விழவெ கடிந்து*
*வடிவெ லெறிந்த திறலோனே*
*மதுரித செஞ்சொல் குறமட மங்கை*
*நகிலது பெரங்க வரும்வேலா*
*விரைசெறி கொன்றை யறுகு புனைந்த*
*விடையரர் தந்த முருகோனே*
*விரைமிகு சந்து பொழில்கள் துலங்கு*
*விசுவை விளங்கு பெருமாளே.*

(திருகுசெறிந்த ......திருப்புகழ்)

அருணகிரிநாத சுவாமிகள் வழிப்பட்ட விசுவை என்றபதி எதுஎன்பது இந்நாள்வரை புதிராகவே இருந்து வந்துள்ளது. ஆனல் முருகனருளால் நாம் இப்போது இத்தலத்திற்குச் செல்கின்றோம் செங்கற்பட்டு மாவட்டத்தில் உத்திரமேரூர் வட்டத்தில்–உத்திர மேரூரிலிருந்து 11 கி. மீ. தொலைவிலுள்ள மானும்பதியிலிருந்து 1 கி. மீ. தொலைவில் தற்காலத்தில் விசூர் என்றழைக்கப்படும் இத்தலம், அருணகிரிநாதர் "விசுவை" என்று போற்றிய தல மென்பதில் ஐயமில்லை.

அம்பிகை இத்தலத்தில் விசுவரூபம் எடுத்ததாகத்தல மான்மியம் கூறுவதால் விசுவமாநகர் என்று இத்தலப்பெயர் வந்தது என்பர். இங்கே இறைவியின் திருப்பெயர்: அகிலாண்டேஸ்வரி. இறைவர்: அகஸ்தீஸ்வரர்.

இங்கு முருகப்பெருமான் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் மயில் பின்புறம் நிற்க விளங்கு கின்றார். இருபுறமும் வேழமங்கையும் வேடமங்கையும் விளங்கு கின்றனர்.

காமிக ஆகமப்படி தினமும் ஒருசாலவழிபாடு இங்கே நிகழ்கின்றது.

புண்ணியப்புனல்: அகஸ்தீஸ்வரர் தீர்த்தம்; தலவிருட்சம்-மந்தாரமரம்.

சித்திராபௌர்ணமி, மார்கழிதிருவாதிரை, தைப்பூசம், மாசிமகம் முதலிய திருவிழாக்கள் இக்கோயிலில் நிகழ்கின்றன.

முதலாம் ராஜராஜன்காலக் கல்வெட்டு (387 of 1923) ஒன்று உள்ளது

அருணகிரிநாதர் உத்திரமேரூர் வழிபட்டபின் இத்தலம் அடைந்து வழிபட்டு அதன் பின் திருவோத்தூர் சென்றிருக்கலாம் என்று கருத இடமுண்டு.

அறநிலைய ஆட்சித்துறையினரால் இக்கோயில் நிர்வகிக்கப் படுகிறது.

தைப்பூசத்தன்று இத்தலத்திற்கு 4 கி. மீ. தொலைவிலுள்ள செய்யாற்றில் இருபது கோயில் மூர்த்திகள் எழுந்தருளுவதும், மாசிமகத்தில் பத்து திருக்கோயில் உற்சவமூர்த்திகள் எழுந்தருளு வதும் குறிப்பிடத்தக்கன.

புலவர் மாணிக்கம் 'விசுவநகர் வேலவர் வெண்பா' பாடியுள்ளார்.

# மதுராந்தகம் திகழ்முருகன்

*முனவாம்பத முடிக வந்தன*
*முயல்வான் பிடிமாடிமை யைங்கரர்*
*முகதாம்பின மேவுறு சம்ப்ரம சங்கணுறு*
*முககாம்பிர மோடமர் சம்பன*
*மதுராந்தக மாநகரந்திகழ்*
*முருகா அம்திரமோடமர் உம்பர்கள் பெருமாளே!*

**—(மனைமாண்...திருப்புகழ்)**

மதுராந்தகம் பஸ் நிலையத்தருகிலுள்ள வயல்மேட்டில் உள்ள சிறிய கோயிலில் உள்ள ஆறுமுகப்பெருமானை அருணகிரி நாதர்பாடிப்பரவியுள்ளார். இக்கோயில் பாண்டீசுவரர் கோயில் என அழைக்கப்படுகிறது. ஆறுமுக சுவாமி கோயில் எனவும் கூறுவர். இங்கே பாண்டியன் பிரதிட்டை செய்த சிவபெருமானைக் காண்கிறோம். இத்தலத்தில் 'ஆறுமுகப்பெருமான் அமர்ந்த கோலத்தில் அற்புதமாக விளங்குகின்றார். தினமும் இருகால வழிபாடு இங்கே நிகழ்கிறது.

மதுராந்தகம் என்று நினைத்தவுடன் ஏரிகாத்த இராமனை யும், வடசிற்றம்பலத்து ஈசனையும், கடப்பேரி கந்தனையும் எண்ணிப் பணியவேண்டும்.

மதளுந்த கர்க்கு மகவெனப்பத்
மந்தனிற் பிறந்த குமரேசா
மதுராந்த கத்து வடதிருச்சிற்
றம்பலத்தமர்ந்த பெருமாளே

# மதுராந்தகத்து வடசிற்றம்பலம்

அருணகிரிநாதசுவாமிகள் மதுராந்தகம் அடைந்து அங்கு வடசிற்றம்பலத்தில் வீற்றிருக்கும் வடிவேலனைப் போற்றி இரு திருப்புகழ்ப்பாக்களைப் பாடினர். "சிவபிரானுக்கு நீ செய்த உபதேசத்தைச் சிறியேன் தனக்கும் உரை செய்தால் உனது குருத்துவம் சற்றேனும் குறைந்து விடுமா என்ன?" என்று மன்றுடி துதித்து வணங்கினர்.

செங்கற்பட்டு மாவட்டத்தில் மதுராந்தகம் என்ற தலத்தை அனைவரும் அறிவர். அங்கே ஏரிகாத்தஇராமர் திருக்கோயிலை அறியாதார் இலர். ஆனல் மதுராந்தகம் வடசிற்றம்பலம் எங்குள்ளது என்பது இன்றுவரை ஆய்வு செய்யப்படவேண்டியதொன்ருக அமைந்துவிட்டது. மதுராந்தகம் அருகில் படாளம் சர்க்கரை ஆலையிலிருந்து 1கல் (ஆம்! படாளம் இரயில் நிலையத்திலிருந்து ஒருமைல்) சென்ருல் புலிப்பரக்கோயில் என்று தற்போது வழங்கப் பெறும் திருக்கோயிலை அடையலாம். இதுவே மதுராந்தகத்துவட சிற்றம்பலம் என்று கருத இடமளிக்கின்றது.

திருக்கழுக்குன்றத்தலபுராணம் (வடமொழி) 22-வது அத்தியாயம் பின்வருமாறு கூறுகின்றது. "திருக்கழுக்குன்றத்துக்கு மேற்கே 7கல் தொலைவில் பாலாற்றுக்கு மேல்கரையில் வியாக்கிரபாத முனிவரால் ஆலயம் அமைக்கப்பட்டும் பின்னர்க் கரிகாற்சோழனல் ஆலயம் அமைக்கப்பட்டும், முன்னர் சிதம்பரகனகசபாபதிமூர்த்தியின் திருநடனங்கண்டு உண்ணும் நியமம் பூண்ட வியாக்கிரபாத முனிவருக்கு-அச்சிதம்பரம்போல் கனகசபையோடு ஆனந்ததாண்டவ நிருத்ததரிசனம் கொடுத்ததும், வியாக்கிரபாத முனிவர் அவ்விடத்தே தங்கப்பெற்றுச்சிவ பெருமானல் வியாக்கிரபாதபுரம் என அருளிய பெயருடனும்,

வியாக்கிரபாத முனிவருக்குக் கனகசபா தரிசனம் கொடுத்தருளி யதால் அப்பெருமான் ஹேமசபேசர் எனவும் தமிழில் வடபொன னம்பலம் எனவும் வழங்கப்படும் புலிப்பரகக் கோயில் தலத்தில் ஸ்ரீபாலகுஜாம்பாள்சமேதஸ்ரீ வியாக்கிரபுரீசுவர சுவாமி வீற்றி ருக்கிறார்.''

இவ்வரலாற்றுச் செய்தி மதுராந்தகம் வடசிற்றம்பலம் பற்றி இதுகாறும் நாம் பெறமுடியாதிருந்த குறிப்பைநல்கி-இதுவே அத்தலம் என்பதை இனிது காட்டுகின்றது. இங்கு சிவ பெருமான் வியாக்கிரபுரீசுவரர் (புலிசுவரர்) இறைவி: பால குஜாம்பிகை. (மனோன்மணிவடிவம்)

இங்குள்ள முருகப்பெருமானே அருணகிரிபரவிய வட சிற்றம்பலப்பெருமான் ஆவார். ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு அருகில் மயிலுடன் நின்ற திருக்கோலம் கருவறை யிலேயே உள்ளது.

இத்தலத்தில் தனியே மண்டபம்போல அமைந்த ஒருசிறு கோயிலில் முருகன் சன்னிதி உள்ளது. ஒருமுகமும் நான்குகரங் களும் கொண்டு பின்புறம் மயிலுடன் நின்ற கோலத்தில் இரு புறமும் விநாயகருடன் விளங்குகின்றார். வெளியில் யானை வாகனம் விளங்குகின்றது.

இவ்வூருக்கு நேரே பாலாற்றின் எதிர்கரையில் ஆனூர் என்ற ஊரில் ஒரு முருகன்கோயில் உள்ளது. பாலசுப்பிரமணியனாக 4 அடி உயரமுடன் அற்புதமான கோலம். நான்கு கரங்கள்; வலதுகரம் ஒன்றில் தாமரைப்பூ; இடதுகை தொடையில் வைத்து நின்றகோலம். யானைவாகனத்துடன் அரியதோர் அமைப்பு இது.

புலிப்பரக்கோயிலின் தொன்மை, சூழல் ஆகியவை இத் தலமே வடசிற்றம்பலம் என்பதை உறுதியாக்கும் "குதிபாய்ந்து" "சயிலாங்க" இருதிருப்புகழ்ப்பாக்கள் இங்கு சிந்தித்தற்குரியன.

வாட யங்கிய வேலா லேபோகு
தூர்த டிந்தருவ் வீரா மாமயி
லேறு கந்தவி நோதா கூறென அரனர் முன்
வாச கம்பிற வாதோர் ஞானசு
கோத யம்புகல் வாசா தேசிக
மாடையம்பதி வாழ்வே தேவர்கள் பெருமாளே!

# மாடையம்பதி மயிலாளி

செங்கற்பட்டு மாவட்டம்- சைதாப்பேட்டை வட்டம்-தாம்பரத்திற்கருகில் உள்ள வண்டலூருக்குக் கிழக்கே 7கல் தொலைவில் அமைந்த இத்தலம் மாடையம்பதி என்றழைக்கப் படும் மாடம்பாக்கம் ஆகும். தாம்பரத்திலிருந்து நூத்தஞ்சேரி செல்லும்பஸ் இத்தலம் வழியே செல்கின்றது திருமாடநகர், கபிலக்ஷேத்திரம் எனவும் இத்தலம் அழைக்கப்படும். மகேந்திரவர்மன் காலத்திருக்கோயில் இது.

இங்கே சிவபெருமான் தேனுபுரீசர்; இறைவி: தேனுகாம் பிகை என்று பெயர் கொண்டு விளங்குகின்றார். கல்வெட்டில் உலகம் உய்யவந்த சிற்றேறிநாயனார் என்று இத்தலச்சிவபெரு மான் குறிப்பிடப்பெறுதல் காணலாம்.

இங்கு எழுந்தருளியுள்ள முருகன் சிவசுப்பிரமணியசுவாமி என்ற பெயர் சூடியுள்ளார். ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு மயிலருகில் நின்ற கோலம்; இருபுறமும் தேவிமார் இரு வரும் விளங்குகின்றனர். உற்சவரும் மூலவர் போலவே விளங்கு கின்றார்.

நாள்தோறும் காரண ஆகமப்படி இரண்டுகால பூசை நடைபெறுகின்றது.

நவராத்திரி, மார்கழி-திருவாதிரை, பங்குனிஉத்திர நாட் களில் சிறப்பு விழாக்கள் நிகழ்கின்றன.

''இத்தலத்தில் முருகனை வழிபட்ட அருணகிரிநாதர் தனக்கு மனோலயம் வரும்படி உதவிய நாத எனத்துதித்து அருமையான சந்தத்தில் ''தமனியப்பதி இடங்கொண்டு இன்புறுஞ்சீர் இளைய நாயகனே'' என முருகனை வாழ்த்துகின்றார். தமனியம் = பொன். மாடை = பொன். தமனியப்பதி-மாடையம்பதி-மாடம்பாக்கம் ஆகும் என்பார் வ. சு. செஙகல்வராயப்பிள்ளை இத்தலத்திற்கு இரு திருப்புகழ்ப் பாடல்கள் உள்ளன என்பார் அவர்; ''தோடுறுங் குழை...''''விலையறுக்கவும்''. ஆனால் தமனியப்பதி என்பதுமாயூரம் அருகிலுள்ள பொன்னூர் என்றும் கொளற்குரியது என்று அவர் காட்டுகின்றார். ஆதலின் ''தோடுறுங்குழை'' என்ற ஒருதிருப் புகழ் மட்டுமே இத்தலத்திற்குரியது எனக்கொள்ளல் நன்றாம்.

# வளவாபுரி வாழ் மயில்வாகனன்

"சேய்" என்ற பெயரோடு கூடிய தலங்கள் நம் நாட்டில் இரண்டு உள. அவற்றுள் சேயூர் ஒன்று, மற்றொன்று சேய்ஞலூர் (தஞ்சை மாவட்டத்தில் திருப்பனந்தாள் அருகில் உள்ளது); 63 நாயன்மார்களில் ஒருவராகிய ஸ்ரீ சண்டேசுவர நாயனார் அவதரித்த தலம்.

சேயூர்-செங்கற்பட்டு மாவட்டத்தில் மதுராந்தகத்திற்குக் கிழக்கே 16மைலிலுள்ள ஒரு சிற்றூர். தற்போது 'செய்யூர்' என வழங்கப் படுகின்றது. சேயூர் என்பது முருகனுடைய ஊர் என்றும் சேய் வாழும் ஊர் என்றும் பொருள் கொள்ளலாம். சென்னையிலிருந்து சேயூருக்குப் பஸ்வசதிகள் உள்ளன. இவ்வூருக்கு செய்கையம் பதி, வளவநகர் என்ற பெயர்கள் இருந்தனவாம். வளவநகர் என்பதற்கு சோழனுடைய நகரமென்பது பொருள். கி. பி. 11-ம் நூற்றுண்டின் இறுதியிலும், 12-ம் நூற்றுண்டின் முற்பகுதியிலும் அதாவது 800 ஆண்டுகட்கு முன்பு அரசாண்ட குலோத்துங்க சோழன் மகனுகிய ஆதொண்டைச் சக்கரவர்த்தி சோழ மண்டலத்தை விட்டுக் காஞ்சிமண்டலத்தைப் பெற்று அக்காலத்து செங்கழுநீர்ப்பேட்டைக்(செங்கற்பட்டு)கருகிருந்த அடங்கா முடிகளாகிய குறும்பர்களை ஜெயித்து, எதிர்த்து நின்றவரைத் தொலைத்து தன்னுடன் அழைத்து வந்த வேளாளர்களை பற்பல இடங்களிலும் குடியேற்றினன் என்று கூறப்படுகிறது. இதற்குப் பிறகுதான் இவ் வேளாளர்களுக்குத் தொண்டை மண்டல வேளாளர் என்ற பெயர் வழங்கலாயிற்று. சேயூரில் வாழ்ந்த வேளாளர்கள் சிலர் சோழ அரசனுக்குப் பிரதிநிதியாயிருந்து சேயூர் கோட்டத்தையும் பல கோட்டங்களையும் ஆண்டு வந்தனர். இவர்களே 'வளவதிரையர்' என்று அழைக்கப் பெற்றனர்.

சீர்சனங்களில் செய்யூர் என்பது ஜயங்கொண்ட சோழ மண்டலத்திலே, செய்யூர் கோட்டத்தில் பிறையூர் நாட்டைச் சேர்ந்தது என்றும், வீர ராஜேந்திர நல்லூர் என்று பெயர் பெற்றிருந்தது என்றும் தெரிய வருகிறது.

சிவப்பிரகாச சுவாமிகள் தாம் இயற்றிய சிவஞான பாலைய தேசிகர் நெஞ்சு விடுதூதில்,

> *"................. நல்ல வளம்–*
> *மிக்கெலா நாளும் விழா வரு வீதியணி*
> *திக்கெலாம் ஏத்து மலி சேயூரும்"*

என்று சேயூரின் செழிப்பையும், பெருமையையும் அழகாகச் சிறப்பிக்கிறார்.

இத்தகைய வரலாற்றுச் சிறப்பு பொருந்திய சேயூரில் முருகப் பெருமான் ஊருக்கு நடுவில் கோயில் கொண்டுள்ளார். கோயிலின் வாயிற்புறத்தே கோபுரம் இல்லை. மூலஸ்தானத்துக்கு மேலே விமானமும், அம்மன் கோயிலுக்கு மேல் அழகிய சிறிய கோபுரமும், உள்ளன. இரண்டு பிராகாரங்கள் உள்ளன. உட் பிராகாரத்தில் தென்மேற்கு மூலையில் சம்ஹார மூர்த்தி என்னும் ஸ்ரீமுத்துக்குமாரசுவாமி சன்னிதி உள்ளது. வடக்குக்கோடியில் ஸ்ரீஆறுமுகசுவாமி மிகவும் கம்பீரமாக விளங்குகிறார். வெள்ளிக் கவசம் சார்த்திய நிலையில் கண்கொள்ளாக் காட்சியாக உள்ளது. மற்றும் சண்டேசுவரர், விநாயகப் பெருமான், கழுக்குன்றன், கைலாசநாதர், சிவாநந்த வல்லி, ப்ரும்மா, விஷ்ணு, வீரபாகு தேவர், சந்திரதேவர், ஸ்ரீபலநாயகர், தண்டபாணி முதலியோர் சந்நிதிகள் உள்ளன.

செய்கைக் கந்தன் எனவும், கந்தஸ்வாமி எனவும் போற்றப் படும் சேயூர் முருகப் பெருமான் மூலஸ்தானத்தில் சுமார் 2½அடி உயரத்தில் நான்கு கரங்களுடன் நின்ற திருக்கோலத்தில் ஆராத காதல் வேடர் மகளாகிய வள்ளியம்மையையும், தெய்வ யானையம்மையையும் இருபுறமும் கொண்டு ஆராயுநீதி வேலு மயிலு மெய்ஞானபிராம தாப வடிவமாகிய சந்திரனைப் போன்ற அழகிய திருமுகத்துடன் பக்தர்களுக்குப் பரவசமூட்டி மயிர் கூச்செறியச் செய்து ஊனும் உயிரும் உருகும் வண்ணம் அருள் காட்சியளிக்கிறார். விருது கவிராஜசிங்கம் ஸ்ரீ அருணகிரிநாதரின் சந்த வெள்ளம் கடல்மடை திறந்த தென இங்கே பாய்கிறது.

முகிலா மெனும் வார்குழ லார்சிலை
புருவார்கயல் வேல்விழி யார்சசி
முகவார் தர ளாமென வேநகை புரிமாதர்

முலைமாலிணை கோபுர மாமென்
வடமாடிட வேகொடி நூலிடை
முதுபாளித சேலைகு லாவிய மயில்போல்வார்

அகிசேரல்குலார் தொடை வாழையின்
அழகார் கழலார்தர வேய்தரு
அழகார் கன நூபுர மாடிட நடைமேவி

அனமாமென யாரையு மால்கொள
விழியால் சுழலாவிடு பாவையர்
அவர் பாயலி லேயடி யேனுடல் அழிவேனோ

ககனர்பதி யோர்முறை கோவென
இருள்காரசு ரார்படை தூள்பட
கடலேழ்கிரி நாகமு நூறிட விடும்வேலா

கமலாலய நாயகி வானவர்
தொழுமீசுர னரிட மேவிய
கருணாகர ஞானப ராபரை யருள்பாலா

மகிழ்மாலதி நாவல்ப லாகமு
குடனுடறி லாமயில் கோகில
மகிழ் நாடுறை மால்வளி நாயகி மணவாளா

மதிமாமுக வாஅடி யேனிரு
வினைதூள்பட வேஅயி லேவிய
வளவாபுரி வாழ்மயில் வாகன பெருமாளே."

மூலஸ்தானத்திற்குத் தெற்கே உற்சவ மண்டபம் உள்ளது அங்கே ஸ்ரீ சோமநாதஸ்வாமி, மீனாக்ஷியம்மையுடன் வீற்றிருக்கிறார். கிழக்கு நோக்கிய சர்வ வாத்ய மண்டபத்தில் அம்மன் கோயில் உள்ளது. அங்கே தேவ சேனை, வள்ளி அம்மையின் விக்ரகங்கள் உள்ளன.

கோயிலுக்கு மேற்கே சற்று தூரத்தில் செட்டிகுளம் என்ற தடாகம் உள்ளது. இதுவே அருந்துவதற்கும் உபயோகிக்கப் படுகிறது. விசேஷ நாட்களில் சுவாமி அபிஷேகத்திற்கு திருமஞ்சனம் இதிலிருந்து தான் கொண்டு வருவது வழக்கம். சஷ்டியின் ஆறுவது நாள் தீர்த்தவாரியும் இங்குதான் நடைபெறும். வேடர்பறி உற்சவத்தில் முருகப்பெருமான் தினைமா உண்டு தாகம் தீர்த்துக் கொண்ட ஐதீகம் கொண்டாடுவதும் இப்பொய்கை யில் தான். செட்டி என்பது முருகனுக்குப் பெயர். செட்டிகுளம்— முருகன் குளம்.

ஐப்பசி மாதத்தில் ஆறுநாட்கள் ஸ்கந்தஷஷ்டி உற்சவமும் பங்குனியில 12 நாட்கள் ப்ரம்மோறசவமும விமரிசையாக நடை பெறுகின்றன. முற்காலத்தில வேடற்பறி உற்சவத்தில் 12ம் நாள் கோயில் கணிகையர், வேஷம் பூணடு வள்ளிநாயகியின் திருமணத்தைப் பழைய முறையில் நாடகம் போல் நடித்து சிறப்பிப்பார்கள். இநத நாடகம் மைதானத்தில் நிலவில் நடை பெறும் என்றும் ஏராளமான பேரகள் கண்டு களிப்பார்களென் றும் தெரிய வருகிறது.

"உப்பள மெங்கும் நிரப்பு சேயூர்"

'உமணர் அமைத்த உப்பளமும்' என்பதால் இங்கு உப்பு வளங்கள அதிசம் எனததெரிய வருகிறது. அக்காலத்தில உப்பளங் களையே கோயிலுக்கு மானியமாகக கொடுத்தார்களாம்.

தேவதானங்களில் சந்தி விளக்குவைப்பதற்காக ஆடு, பழங் காசு புதுக்காசு, நிலம் முதலியவைகளையும் நந்தா விளக்கிற்காக பசுக்களையும், நைவேத்தியத்திற்காக நிலத்தையும் ஆபரணங் களுக்காகக் காசுகளையும், திருவிழாவில் பதிகங்கள் படிக்க, பள்ளி எழுந்தருள உப்பளங்களும் தானமாக அக்காலத்தில் கொடுப் பார்களாம்.

சேயூர் முருகன் புகழ் பாடும் நூல்கள் பல உள்ளன. அந்தகக் கவி வீரராகவ முதலியார் இயற்றிய சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ், சேயூர் கலம்பகம், சேறைக் கவிராஜப்பிள்ளை இயற்றிய

சேயூர் முருகன் உலா, ஸ்ரீ முருகதாசசுவாமிகள் இயற்றிய சேயூர் முருகன் பதிகக் கோவை முதலியனவாகும்.

இவ்வூரில் முருகன் கோயிலைத் தவிர ஊருக்கு வடக்குப் புறத்தில் வன்மீகபுரம் எனப்படும் வன்மீக நாதர் கோயில் உள்ளது. சுவாமி புற்றிடம் கொண்டபெருமான் என்றும் அம்பிகை முத்தாம்பிகை (முத்துவாளியம்மை) எனவும் அழைக்கப் படுகிறார். இந்திரன் பூஜித்த மூர்த்தியான இக்கோயில் நல்ல முறையில் உள்ளது. மேலும் பெருந்தேவி சமேதராகிய மாணிக்கப் பெருமாள் கோயிலும், ஸ்ரீ ஆஞ்சநேயர் கோயிலும் உள்ளன. செய்யூர் முத்தையா முதலியார் என்பவரால் 1944ல் தலபுராணம் வெளிவந்ததாகத் தெரிகிறது.

# பேறைநகர் வாழவந்த பெருமாள்

*பீலிமயில் மீதுறைந்து சூர்தமையே செயங்கொள்*
*பேர்பெரிய வேல்கொள் செங்கை முருகோனே*
*பேடைமட வோதிமங்கள் கூடிவிளையாடுகின்ற*
*பேறைநகர் வாழவந்த பெருமாளே!*

(நீலமயில்சேரு....திருப்புகழ்)

நாம் பெரும்பேறு பெற்றவர்கள். நாம்பெறும்பேறு எப்படி யிருக்கும் என்பதையும் அறியும் பேறுபெற்றவர்கள், ஏனெனில் கந்தவேள் தலங்களைக்கண்டு பரவும் பேறுபெற்றுள்ளோம். ஆகவே கந்தனது ஒருதலம் "பெறும்பேறு" என்றேபெயர் கொண்டுள்ள தில் வியப்பேதுமில்லை.

செங்கற்பட்டு-விழுப்புரம் இரயில் வழியில் தொழுப்பேடு நிலையத்தில் இறங்கி ஒருகல்தொலைவில் பெறும்பேறு தலத்தை அடையலாம். விழுப்புரத்திலிருந்து 43கல் தொலைவிலுள்ள இத் தலம் தற்காலத்தில் பெறும்பேறுகண்டிகை என அழைக்கப்படு கின்றது.

வளமானஊர்; ஆனல்சிறியஊர். சிறிய குன்றின்மீது குமரன் கோயில் உள்ளது. கீழே எல்லையம்மன்கோயிலும், தான்தோன் றீசுவரர்கோயிலும் உள்ளன, இச்சிவன்கோயில் தொன்மையானது. இங்கே அகத்தியருக்கு இறைவன் இறைவியுடன் திருமணக்கோலக் காட்சி நல்கியதை இன்றும் நாமும் காணலாம்.

மலைமீதுள்ள முருகனைக்காண 225 படிகள் ஏறவேண்டும். படிகளின் தொடக்கத்தில் பாறையடிப்பிள்ளையாரும், சிலபடிகளைக் கடந்தபின் நவக்கிரக சந்நிதியும், உள்ளே நுழையும்போது விநாய கரும் உள்ளனர். மலைமீது மூலத்தானத்தில் மயிலின்மீது முருகன்

ஆறுமுகங்களுடன் தேவியருடன் தெற்குநோக்கி எழுந்தருளியுள்ளார். அற்புதமான அமைப்பு. எட்டிக்குடி முருகனைப்போன்று இத்திருவுருவம் உள்ளதெனினும் அப்பெருமானைத் தாங்கி நிற்கும் மயிலின்கால்கள் தனித்து இல்லை.

இங்கே தினமும் சிறப்பாக வழிபாடுகள் நிகழ்கின்றன. சித்திரைக்கார்த்திகையில் திருப்படிவிழா; வைகாசிவிசாகப்பெரு விழா; மாதக்கார்த்திகைகளில் சிறப்பு வழிபாடு நிகழ்கின்றது.

அருணகிரிநாதர் வழிபட்டு ‘‘நீலமயில் சேரும்’’ என்று தொடங்கும் திருப்புகழால் இங்கே முருகனைப் பரவிப்போற்றியுள்ளார். திண்டிவனத்தை மையமாகக்கொண்டு, இத்தலத்தையும் மயிலத்தையும் வழிபடலாம்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளது இத்தலம். இங்கு வழிபடுவோர்வசதி, உணவு வசதிகள் இல்லை.

## வட ஆற்காடு மாவட்டம்

1. வள்ளிமலை
2. திருவலம்
3. வேப்பூர்
4. விரிஞ்சிபுரம்
5. கரபுரம் (திருப்பாற்கடல்)
6. முள்வாய்
7. காமக்கூர்
8. தேவிகாபுரம்
9. திருவோத்தூர்
10. ஒடுக்கத்தூர்
11. குறட்டி
12. திருவண்ணாமலை

## வள்ளிமலைமேவு வள்ளிமணவாளன்

வடஆற்காடு மாவட்டம் வள்ளியம்மையைப்பெற்றுக் கந்த வேளுக்குத்தந்த சிறப்புடையது. காட்பாடியிலிருந்து 7கல் தொலைவிலுள்ளது திருவலம். திருவலத்திற்கு வடக்கே 9கல் தொலைவில் உள்ளது வள்ளிமலை. அரக்கோணத்திலிருந்து வள்ளிமலை 30கல். வேலூரிலிருந்து வள்ளிமலைக்கு ஏராளமான பஸ்வசதி உள்ளது. திருவலம், காட்பாடி-அரக்கோணம் இரயில் பாதையில் உள்ளது. திருத்தணி, சோளிங்கபுரம் முதலிய ஊர்களிருந்தும் வள்ளிமலைக்கு பஸ்வசதி உண்டு.

மலை அடிவாரத்திலும் மலைமேலும் கோவில்கள் உள்ளன. சரவணப்பொய்கையைக் கடந்து அடிவாரக்கோயிலுக்குச் செல்ல வேண்டும். அடிவாரக்கோயிலில் ஆறுமுகங்களுடன் வள்ளி தேவயானையுடன் நின்ற திருக்கோலத்தில் கிழக்குநோக்கி எழுந்தருளியுள்ளான் முருகன்.

அடிவாரக்கோயிலைவணங்கி மலைக்கோயிலுக்குச் செல்ல வேண்டும். ஒரேபாறையில் 445 படிகள் உள்ளன. மலையைக் குடைந்து கோயில் அமைக்கப்பட்டுள்ளது. மேல்படியை அடைந்ததும் இடது, வலது பக்கங்களில் பாதைகள் பிரிகின்றன. இடது கைப்பக்கம் செல்கிறோம். தூபஸ்தம்பத்தை வலம்வந்து குடவரையாக உள்ள மண்டபத்துள் நுழைகின்றோம். ஒரு நீண்ட பெருங்கல்லே மண்டபத்தின் மேல்தளமாக உள்ளது. அம்மண்டப நுழைவாயிலில் இடதுகையில் கல்லும் வலதுகையில் கவணும் கொண்டு தினைப்புனங்காக்கும் வள்ளியம்மையின் திருக்கோலத்தைக்கண்டு வணங்குகிறோம். மண்டபத்தினுள் நவவீரர்கள், அருணகிரிநாதர், விநாயகர் முதலியோரைப் பணிந்து உட்செல்கிறோம். உள்ளே சிறுமண்டபத்தில் சிவபெருமான், இறைவி,

நந்தி, சண்டேஸ்வரர் முதலியோரைப் பணிந்து இருபடிகளைக் கடந்து வள்ளியை மணம்புரிந்த முருகனைக்கண்டு பரவுகிறோம்.

ஒரு திருமுகமும், இருகரங்களும் கொண்டு அபயவரதமுடன் நின்றதிருக்கோலத்தில் வள்ளி, தெய்வயானையுடன் தென்திசை பார்த்து முருகன் மூலத்தானத்தில் விளங்குகிறார்.

இங்கு மூன்று உற்சவமூர்த்திகள் உள்ளனர். மூலவர் போன்று ஒருமூர்த்தம்; ஆறுமுகங்களுடன்கூடிய மூர்த்தம்; பால சுப்ரமணியராக ஒருமூர்த்தம்.

முருகனின் சந்நிதிக்குக் கிழக்கே உள்ள சுவரில் சதுரவடிவ மான சன்னல் போன்ற அமைப்பு உள்ளது. அது ஒரு குகை எனவும் திருத்தணிவரை செல்வதாகவும் கூறுவர். அங்குதான் எம்பெருமான் வள்ளியைக் களவுக்கொண்டு போனார் என்பர். மண்டபத்தினின்றும் வலமாக வருகிறோம். முன் சந்தித்த வலது பக்கப்பாதையை அடைகிறோம். இப்போது நாம் வந்த பாதை ஓம்காரமாக இருப்பதைக்காணலாம். உடலுள் மனம்போல மலையைக்குடைந்து உள்ளே முருகன் இருக்கும் குகதத்துவம் வெளிப்படுகிறது.

இப்போது வலப்பக்கப்பாதைவழியே 2கல்தொலைவு கரடு முரடான பாதை வழி சென்றால் வள்ளிமலை சுவாமிகளின் ஆசிரமத்தை அடையலாம். திருப்புகழ்சுவாமிகள் என்று போற்றப் பெறும் ஸ்ரீலஸ்ரீசச்சிதானந்த சுவாமிகள்தான் வள்ளிமலை சுவாமிகள் என்று எல்லோராலும் தொழப்படுவர். இம்மலை யில்தான் வள்ளியம்மை ஓர் குழந்தை வடிவில் வந்து "விரகற நோக்கியும்" என்னும் அற்புதமான திருப்புகழை மோகன ராகத்தில்பாடி வள்ளிமலை சுவாமிகளுக்கு அருளியதாக வரலாறு கூறுகின்றது. திருப்புகழ் இன்று பரவியுள்ளதென்றால் அதற்குக் காரணம் நம் சுவாமிகளே என்பது உலகறிந்த செய்தியாகும். ஆசிரமத்தில் சுவாமிகளின் திருமேனிபோல் சிலையமைத்துப் பூசித்து வருகின்றனர். சுவாமிகளின் சமாதி அருகிலேயே உள்ளது.

இதனருகே ஒருகுகை உள்ளது. இங்குதான் வள்ளி யம்மையை முருகன் கந்தர்வ மணம்புரிந்து கொண்டார். எதிரே உள்ள மலையின்மீது முருகன் அம்பினை ஏவி அக்குகைக்குக்கூரை அமைத்தாராம். வள்ளிமலை சுவாமிகள் தங்கித்தவமியற்றின சில குகைகள் இங்கே உள்ளன.

மலையில் காலடிச்சுவடுகள் பதிந்துள்ளன. அவை வள்ளி யும் முருகனும் ஓடியதால் ஏற்பட்ட சுவடுகள் என்று கூறப் படுகிறது.

மலையில் ஓர் சுனை உள்ளது. இங்குதான் வள்ளியம்மை யார் முருகனுக்குத் தேனும் தினைமாவும் தந்தார் என்பர்.

தம்பிக்காக விநாயகர் யானையாக வந்த இடமும் இங்கு உள்ளது. மலைஉச்சியில் நான்கு தூண்களுடன் கூடிய மண்டபம் உள்ளது. மலையில் படியில்லாததால் கவனமாகச் செல்லவேண் டும். இம்மண்டபத்தில் சிவலிங்கம் ஒன்றுள்ளது. அருகில் இரு சுனைகள் உள்ளன. இவற்றுள் ஒருசுனை-வள்ளியம்மையார் மஞ்சள் அரைத்துக்குளித்த அடையாளங்கொண்டது. நமது துணியை அச்சுனையில் நனைத்து அக்கல்லில் தேய்த்தால் துணி மஞ்சளா கின்றது.

இன்றுவள்ளிமலை திருக்கோயிலில் நான்குகால பூசை நாடோறும் நடைப்பெறுகின்றது.

மலர்க்காவடி, முடிகாணிக்கை சிறப்புடையதலம்.

ஆடிக்கிருத்திகை, கந்தசஷ்டி, மாசிபிரமோற்சவம் முதலிய விழாக்கள் சிறப்பாக நிகழ்கின்றன.

தமிழ்ப்புத்தாண்டு நாளில் (ஏப்ரலில்) திருப்புகழ்ப்படி விழா நடைபெறுகின்றது.

ஒவ்வொருமாத கார்த்திகையும் சிறப்புநாளாகும் வள்ளிக்கு மஞ்சள்காப்பு (பிரார்த்தனை)'ர். முருகன் சன்னிதியில் சடாரி வைத்துத் தீர்த்தம் அளித்தலும், வள்ளி, திருமாலை வழிப்பட்ட தும் இங்கு குறிப்பிடத்தக்கது.

இக்கோயில் மத்திய தொல்பொருள் ஆய்வுத்துறையின் கீழ்நன்கு பரிபாலிக்கப்படுகிறது. அறநிலைய ஆட்சித்துறையால் நிர்வகிக்கப்படுகின்றது. இக்கோயில் கட்டப்பெற்ற காலம் கி. பி. 614 என்பர்.

அருணகிரிநாதசுவாமிகள் வள்ளிமலைக்குவருகிறார், மலையை வலம்வந்து மலைமுழுதும் முற்றும் ஆய்ந்து தரிசித்து, வள்ளி யம்மையை மணக்க முருகன் தணிகையினின்றும் தாமே வள்ளி

மலைக்கு வந்து வள்ளியொடு பல லீலைகள் செய்து விளையாடிய தலமென மகிழ்ந்து "முருகா! நீ எனக்கு இரகசியம் என உபதேசித்ததை நான் வள்ளிமலையைக்கண்ட உடனேயே விளங்கி விட்டது ஆம்! யாரொருவர் யான் எனது என்னும் ஆணவநிலை அற்று என்னை வழிபடுகின்றார்களோ அவர்களுக்கு நான் எளியன்—குற்றேவல் செய்பவன் என்பதல்லவா! அவ்வகையில் உண்மை வழிபாடு செய்த பிராட்டி வள்ளிபிராட்டி. ஆதலாலன்றோ நீயே தணிகையினின்றும் வள்ளிமலைக்குத் தனியேசென்று, வள்ளியின் சன்மார்க்கத்தை உகந்து மெச்சி வள்ளியின் பொருட்டுப்பல குற்றேவல்களைச்செய்து, அருளாடல் பலபுரிந்து, அந்நங்கையைத் திருமணமும் செய்து உனக்குகந்த தேவியாகத் திகழும்படி வலப் பாகத்தேவைத்தாய்!" என்று பாடினார்.

*"கின்னங் குறித்தடியேன் செவி நீயன்று கேட்கச்சொன்ன*
*குன்னங் குறிச்சி வெளியாக்கிவிட்டது; கோடுகுழல்*
*சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை*
*முன்னங் குறிச்சியிற் சென்று கல்யாணம் முயன்றவனே!"*

— கந்தரலங்காரம்: 24.

(குன்னம்-ரகசியம்; குறிச்சி-வள்ளிமலை; சென்று—தானே சென்று) மற்றுமொரு ரகசியத்தையும் அருணகிரிநாதர் வெளிப்படுத்து கின்றார். 'முருகா! நீ சிவபிரானுக்கு உபதேசித்த ரகசிய உபதேசம்வள்ளிச்சன்மார்க்கமே எனத்தெரிந்து கொண்டேன்'.

*"வள்ளிச் சன்மார்க்கம் விள்ளைக்கு* நோக்க*
*வல்லைக்குள் ஏற்றும் இளையோனே*
*வள்ளிக்குழாத்து வள்ளிக்கல் காத்த*
*வள்ளிக்கு வாய்த்த பெருமாளே."* (கள்ளக்கு ...)

என்னும் வள்ளிமலைத் திருப்புகழில் இதனை எடுத்துக்காட்டுகின்றார்.

---

* விள்-ஐக்கு=விளவிய சிவபிரானுக்கு. நோக்கவல்லைக்குள்-க்ஷணநேரத்தில் இங்ஙனம் க்ஷணநேரத்தில் சிவபிரானுக்கு முருகன் உபதேசித்தத்தலம் திருத்தணிகை. அதனால் அத்தலம் க்ஷணிகாசலம் என்று பெயர்பெற்று அதுவே மருவித்தணிகாசலம் ஆயிற்று என்பர். அங்கு சிவபெருமான் மகிழ்ந்து அட்டகாசம் செய்ததால் வீராட்டகாசர் என்று பெயர்பெற்றார். வீராட்டகாசர் கோயில் தணிகையில் நந்தி யாற்றுக்கு வடக்கில் உள்ளது. சுவாமிநாதர்கோயில் தணிகையின் வடகீழ்ப்பக்கத்தில் உள்ளது.

இத்தலத்தில் அருணகிரிநாதர் பாடிப்பரவிய பதினொரு திருப்புகழ் பாக்கள் கிடைத்துள்ளன.

*வள்ளிமண வாளப் பெருமாளே!*

*வள்ளிக்கு வேடைகொண்ட பெருமாளே!* (வள்ளி மானை அடைய வேட்டையாடிய பெருமாளே)

*வள்ளிக்கு வாய்த்த பெருமாளே!*

*வள்ளிமலை* **சென்று** *வள்ளியை மணந்தபெருமாளே!*

**என்றுவரும் இத்தலதிருப்புகழ்ப்பாக்களின் இறுதி அடிகள் எண்ணி இன்புறத்தக்கன.**

"*அல்லசலடைந்த*" எனத்தொடங்கும் இத்தலத்திருப் புகழில் வரும்,

"*கல்லசல மங்கை எல்லையில் விரிந்த*

*கல்வி கரைகண்ட புலவோனே!*"

(*கல் அசலமங்கை-இமவான்மகளான பார்வதி.*)

**பார்வதி எல்லைமட்டும் எட்டின கல்வி யாது? இதன்வரலாறு சுவையானது.**

"ஒருமுறை சகல கலைகளும் வல்லவர் யார் என்று தேவர் முனிவர்களுக்குள் ஒரு கேள்வி நிகழ்ந்தது. யாவரும் ஔவைப் பிராட்டியாரே சகல கலைகளும் வல்லவர் எனத் தீர்மானித்து வித்யா தாம்பூலத்தை ஔவையாரிடம் அளிக்க, ஔவையார் எனக்கு இதை வாங்கும் தகுதியில்லை· ஐந்திர வியாகரணம், இயற்றியுள்ள இந்திரனே இதற்குத்தக்க பாத்திரம் என்ன இந்திரனை அவர்கள் அடுத்தபோது, இந்திரன் அகத்தியமுனிவரே இத்தாம்பூலத்தைப் பெறுதற்குஉரியர் என, யாவரும் அகத்தி யரை அண்டியபோது, அம்முனிவர் கலைமகளே இப்பரிசைப் பெறுதற்கு உரியவள்என, அவர்கள் கலைமகளை அணுகக் கலைமகள் நான் கற்றது கைமண் அளவு, நான் கல்லாதது எஞ்சி நிற்பது உலகளவு, இப்பரிசுக்கு நான் சற்றும் தகுதியில்லாதவள்–வாகீசு வரியாம் உமாதேவியே இப்பரிசுக்கு உரியவள் என விண்ணப்பிக்க– அவர்கள் அங்ஙனமே சென்று தேவியை வணங்கித் தாம்பூலத்தை

நீட்டத், தேவி! என்புதல்வன் முத்துக்குமரன் ஒருவனே சகலகலா வல்லவன். அவனிடம் செல்லுங்கள் எனத்தேவரும் முனிவர்களும் கந்தபுரம் சென்று முருகவேளைத்தரிசித்து, நிகழ்ந்ததை விவரித்துத் தாம்பூலத்தை அளிக்க, கந்தவேளும் மந்தஹாசம், புரிந்து அவ்வித்யா தாம்பூலத்தைப் பெற்றுக்கொண்டார். இதனால் அருணகிரிநாதர் 'கல்வி கரைகண்ட புலவோன்' என்று முருகனுக்குப் பட்டம்சூட்டி மகிழ்கின்றார் ஆம்! ஞானசக்தி தரனாகிய முருகவேள் "சகலகலா வல்லபமூர்த்தி" என்ற பெயரும் கொண்டவர் தானே!

அருணகிரிநாதர் வள்ளிமலையைத் தரிசித்தபின் திருத் தணிகையை அடைந்தார் என்பது தணிகைமணி எழுதியுள்ள வரலாற்றுக்குறிப்பில் காண்கிறோம்.

*வகுளமு முகுளித வழைகளு மலிபுன*
*வள்ளிக் குலாத்தி கிரிவாழும்*
*வனசரர் மரபினில் வருமொரு மரகத*
*வள்ளிக்கு வாய்த்த பெருமாளே!*

# மூதூர் திருவலம்

தொண்டை நாட்டில் தேவாரப்பாடல் பெற்ற 32 தலங்களில் திருவல்லமும்ஒன்று. தற்போது திருவலம்என்று அழைக்கப்படுகிறது திருவல்லம் ரயில்நிலையத்திலிருந்து 1½ மைல் தூரத்தில் உள்ளது. வடஆற்காடு மாவட்டம் குடியாத்தம் வட்டத்தில் வேலூருக்கு அருகில் உள்ளது இத்தலம். சென்னையிலிருந்து 75 மைல் தூரத்தில் சென்னை-பங்களூர் நெடுஞ்சாலையில் உள்ளது இத்தலம் பாலாற்றின் கிளைநதியான பொருனை என்றநீவா நதிக்கரையில் உள்ளது. இத்தலத்தின் பழமையான பெயர்கள் தீக்காலிவல்லம், வாணபுரம் என்பவையாம். தமிழ் நாட்டில் வல்லம் என்ற பெயருடைய ஊர்கள் பல உள்ளதால் பெரிய புராணம் பாடிய சேக்கிழார் இத்தலத்தின் சிறப்பையும், பெருமையையும் குறிப்பிடும்போது தீக்காலிவல்லம், என்று மற்றவல்லம் என்ற பெயருடைய ஊர்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றார். தீக்காலி என்று ஒரு பிராமண பக்தர் இப்பெருமானை வழிபட்டு முக்தி பெற்றதால் தீக்காலி வல்லம் என்று பெயர் ஏற்பட்டது.

கோயிலின் பிரதானவாயில் தென்புறம் பெரியகோபுரத்துடன் அமைந்துள்ளது. சுவாமி, அம்பாள் சன்னிதி கிழக்கு நோக்கி உள்ளது. கோயில் உட்புறம் இரண்டு பிராகாரங்கள் உள்ளன கோயிலில் நுழைந்த உடன் வலப்புறம் காணப்படுவது கௌரிதீர்த்தம் என்ற திருக்குளம். உட்புறம் ஒரு சிறு கோபுரம்; இடப்புறம் ஸ்ரீநாகேஸ்வரர் சன்னிதிஉள்ளது தென்மேற்குபுறம் உற்சவமூர்த்திகள் சன்னிதி உள்ளது. மேற்கு பிராகாரத்தில் சகஸ்ரலிங்கம் சந்நிதி உள்ளது. அதற்கு அருகில் திருவலம் முருகன் சன்னிதி அமைந்துள்ளது. இங்கே அருணகிரியார் இம்முருகப்பெருமானை வழிபட்டுப் பாடுகின்றபோது,

*'திசைமுக ருைந் திசைபுவி வானுந்*
*திரிதர வாழுஞ் சிவன்மூதூர்*
*தெரிவையர் தாமவந் தருநடமாடுந்*
*திருவல மேவும் பெருமாளே*
*விழுமடி யார்முன் பழுதல வேள்கந்*
*தனு மென வோதும்' விறல்தாராய்*

திருமாலும், பிரமனும், திசைகளில் உள்ளோரும், மண்ணுலகத்தவரும், வானுலகத்தவரும் வலம் வந்துசூழ வாழ்கின்ற சிவபெருமானது பழைய ஊரும், மாதர்கள் இங்கே அரிய நடனங்களை ஆடுகின்ற தலமான திருவலத்தில் வாழும் பெருமாளே! உனது திருவடியில் விழுந்து வணங்கும் அடியார்களின் முன்னிலையில என் குற்றங்களெல்லாம் அழிய கந்தவேளே! என ஓதும் சக்தியைத் தந்தருள்வீராக! (நசையோடு....திருப்புகழ்.)

முருகனைத் தரிசித்துவிட்டு வடபுறம் வந்தால் அங்குள்ள அம்பிகை சன்னிதியையும் ஸ்ரீ மீனுக்ஷி சுந்தரேஸ்வரர் சன்னதியையும் தரிசிக்கலாம். வடகீழ் மூலேயில் பைரவர், சூரியன் சன்னிதிகள் உள்ளன.

சுவாமி சன்னிதிக்கு உட்புறத்தில் ஸ்ரீ ஜலகண்டேஸ்வரர் என்னும் ஸ்ரீ பாடலீஸ்வரர் சன்னிதி உள்ளது. இத்தலத்து மூலவர் ஸ்ரீ வல்லநாதேஸ்வரர் என்னும் ஸ்ரீபில்வநாதர்; அம்பிகை வல்லாம்பிகை என்னும் ஸ்ரீ தனு மத்யாம்பாள் அம்பிகைக்கு கிழக்கு, மேற்கு இருபுறங்களிலும் மஹாவிஷ்ணு நின்றும், அமர்ந்தும் காட்சி அளிக்கிருர்.

தலவிருக்ஷம் வில்வமரம்; தீர்த்தங்கள் நீவா நதியும்கௌரி தீர்த்தமும் ஆகும். திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகமும் ஒன்றுள்ளது. அப்பர் சுவாமிகள் இத்தலத்தை வைப்புத்தலமாகக் குறிப்பிடுகின்ருர்.

வில்லாலி அரசனும் நவக்ரஹங்களும் இத்தல எம்பெருமானைக் வழிபட்டுப் பேறு பெற்ருர்கள் எனக்கூறுகிருர்கள்.

இங்கிருந்து 3 மைல் தூரத்திலுள்ள கஞ்சன்கிரி திருக்குளத்திலிருந்து ஒரு அடியவர் தினமும் திருமஞ்சனத்திற்கு நீர் எடுத்து வருவாராம். கஞ்சன் என்ற ஒரு பயங்கர அசுரன் அடியார்களுக்குப் பெருங்கேடு விளைவித்து வந்தான்.

இதனால் வருந்திய அடியவர் இறைவனிடம் முறையிட இறைவன் நந்தி எம்பெருமானை அனுப்பி அசுரனை அழிக்கச் சொன்னார். நந்தியெம்பெருமான் தனது கொம்புகளினால் அந்த அசுரனைக் கொன்றார். அசுரனின் உடலிலிருந்து பீறிட்ட இரத்தம் இங்குள்ள மலையின் பல இடங்களில் பட்டது; அங்கங்கே சிவ லிங்கங்கள் தோன்றின. ஒவ்வொரு பௌர்ணமியிலும் இரவு 11 மணி அளவில் ஒரு ப்ரகாசமான ஜோதி இந்த லிங்கங்களில் தோன்றுமாம். குறிப்பாக சித்திரையிலும், தை மாத பௌர்ணமியிலும் மிகப் ப்ரகாசமான ஜோதி பல முறை தோன்றுமாம். இத்தலத்தில் நந்தி கிழக்கு பார்த்த நிலையிலும், பலிபீடம் ஆமை வடிவிலும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கவை.

பல்லவர் காலத்து அமைப்பில் அமைந்துள்ள கோயில் இது அற்புதமான துவார பாலகர்கள், திருமால் சிற்ப அமைப்பு சிறப்பாகவுள்ளது. பலிபீடம் அருகில் சுரங்கப்பாதைகள் உள்ளதாம். தமிழிலும், சமஸ்க்ருதத்திலும் அமைந்த பல கல்வெட்டுகள் உள்ளன.

திருவலம் மௌன ஸ்வாமிகள் என்ற மகான் இங்கு பல திருப்பணிகள் செய்துள்ளார். கோயிலின் மிகத் தூய்மையான அமைப்பும், அருகிலேயே உள்ள அமைதியான நீவா நதிக்கரையும் நம்மை நீவா! நீவா! என்று அழைக்கும்.

# வேப்பூரமர்ந்த பெருமாள்

*திரள்வரை பகமிகு குருகுல வேந்து*
*தேர்ப்பாகன் மைந்தன் மறையோடு*
*தெருமர நிசிசரர் மனைவியர் சேர்ந்து*
*தீப்பாய இந்த்ர புரிவாழ*
*விரிதிரை யெரியெழ முதலுற வாங்கு*
*வேற்கார கந்த புவியேழும்*
*மிடிகெட விளைவன வளவயல் சூழ்ந்த*
**வேப்பூர்** *அமர்ந்த பெருமாளே!*

(துரைகடலு...திருப்புகழ்)

தமிழ் நாட்டில் "ஆற்காடு" என்ற ஊர் வரலாற்றுச் சிறப்புடையது. ஆற்காடு நவாப் என்றும், வடஆற்காடு, தென் ஆர்க்காடு என்றும் அழைக்கும் அளவிற்கு அப்பெயர் புகழடைந்துவிட்டது. ஆறுகாடுகள் (ஷடாரணியம்) இருந்ததால ஆற்காடாயிற்று என்பர் ஆன்றோர். ஆற்காட்டினைச் சூழ்ந்து ஆறுமுனிவர்கள் ஆச்ரமம் அமைத்திருந்தனர்: காச்யபர்-நவ்லாச்; அத்திரி-குடிமல்லூர்; பாரத்வாஜர்-புதுப்பாடி; அகஸ்தியர்-இலுப்பை; வால்மீகி-மேல்விஷாரம்; வசிஷ்டர்-வேப்பூர் என முறையே அவ்விடங்கள் தற்காலத்தில் அழைக்கப்படுகின்றன. ஆர்-ஆத்தி மரங்கள் மிகுதியால் ஆர்க்காடு என வந்தது என்பாரும் உளர்.

வசிஷ்டர் ஆச்ரமம் அமைத்து வழிபட்ட வேப்பூர் வசிஷ்டேசுவரர் கோயில் பாலாற்றங்கரையில் அமைந்துள்ளது. ஆற்காட்டிலிருந்து வேலூர் செல்லும் வழியில் ஆற்காட்டி லிருந்து 1 கி. மீ. தொலைவில் இக்கோயிலை அடையலாம்.



குருநாதன்

அரவு புனைதரு புநிதரும் வழிபட
மழலை மொழிகொடு தெளிதர ஒளிதிகழ்
அறிவை அறிவது பொருளென அருளிய பெருமாளே.

திருப்போரூர் ஸ்ரீ கந்தசாமிக் கோயில்.



**திருவேற்காடு (வில்லேந்திய முருகன்)**

வேற்காடவல் வேடர்கள் மாமக
ளார்க் கார்வநன் மாமகிணுதிரு
வேத்காடுறை வேதபுரீசுரர் தருசேயே.



சிறுவாபுரி

சந்ததமும் அடியார்கள் சிந்தையது குடியான
தண் சிறுவை தனில்மேவு பெருமான்.



## திருத்தணிகை

திருப்புகழ் ஓதுங் கருத்தினர் சேருந்
திருத்தணி மேவும் பெருமாளே
கலைப்புல வோர்பண் படைத்திட ஓதுங்
கழற்புகழ் ஓதுங் கலைதாராய்.

நன்றி: ஸ்ரீ குமாரதநுமவர் திருக்கை திருப்புகழ்ச் சங்கம்.

பாலாற்றின் படுகையில் கம்பீரமாக எழுந்துள்ள பெரிய கோயிலில் வசிஷ்டேசுவரர் விளங்குகின்ருர். இங்கே விநாயகர், தட்சிணுமூர்த்தி, வீரபத்திரர், வசிஷ்டர் திருவுருவங்கள் உள்ளன.

அருணகிரிநாதர் போற்றிய முருகவேள் இத்தலத்தில் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவியர் சூழ நின்ற திருக்கோலத்தில் விளங்குகின்ருர்.

தினமும் இரண்டுகால பூஜை நிகழ்கிறது. சஷ்டி, கார்த்திகை நாட்கள் சிறப்பானவை.

இக்கோயிலின் கல்யாண மண்டபத்தில் நரசிம்மாவதாரக் காட்சிகள், கருடன், பிட்சாடனர், காளி, ஹனுமான், நடன மூர்த்தி, விநாயகர் சிற்பங்கள் சிறப்பாக உள்ளன. காஞ்சியில் ஏகம்பரைத் தழுவிய கௌரி, அஷ்டபுஜக்காளி சிற்பங்களும் சிறப்பானவை.

இத்தலத்து அம்பிகை-மஞேன்மணிவடிவில்பாலகுசாம்பாள் என்னும் திருப்பெயருடன் அதி சௌந்தர்ய ரூபிணியாகத் திகழ்கின்ருள்.

இக்கோயில் சிற்பமொன்று மூன்று மனிதர்களே நான்கு கால்களில் காட்டுகிறது.

விஜய நகர மன்னரான – பிரதாபதேவராஜ மகாராயரது கல்வெட்டுக்கள் இங்கு உள்ளன.

அறநிலேய ஆட்சித்துறையின் நிர்வாகத்திலுள்ளது இக் கோயில். ஆற்காட்டில் தங்கவும் உண்ணவும் வசதிகள் உள்ளன.

# திசை முகன் பராவிய திருவிரிஞ்சை

வட ஆற்காடு மாவட்டம் வேலூரிலிருந்து 10. கி. மீ. தொலைவில் அமைந்துள்ள விரிஞ்சிபுரம் தொன்மையான தோர் தலமாகும். வேலூரிலிருந்து பஸ்வசதி உள்ளது. அருமையான சிவாலயம் உள்ளது.

பிரம்மா, சிவசர்மாவாக அவதரித்து இறைவனது முடி கண்டதால் **விரிஞ்சிபுரம்** எனவும், பிரம்மா அவதார வழிஅறிந்து, சிருட்டி தந்திரம் அறிந்து உலகியற்றியதால் **பிரம்மபுரம்** எனவும், திருமால் சிவபெருமானிடமிருந்து சக்கராயுதம் பெற ஆயிரம் மலர்களால் வழிபாடு செய்ததால் **விஷ்ணுபுரம்** எனவும், கரன் என்னும் யக்ஷன் சாப விமோசனம் பெற்றதால் **கரப்புரம்** எனவும், சும்பன், நிசுமபன் என்னும் இரு அரக்கர்களையும் கொன்ற பாவம் நீங்க இறைவி பாலியாற்றில் நீராடி வழிபட்டதால் **கௌரிபுரம்** எனவும், இறைவன் வழித்துணை நாதராக இருந்ததால் **மார்க்க பந்தீசுவரம்** எனவும் இத்தலத்திற்குப் பலபெயர் உள்ளன.

சிவபெருமான் வழித்துணைநாதர் (மார்க்கபந்து) எனவும் இறைவி மரகதவல்லி எனவும் பெயர் கொண்டு அருள்புரி கின்றனர்.

இத்தலத்தில் இருமுருகன் சந்நிதிகள் உள்ளன. சிவன் கோயிலில் முருகன் கிழக்கு நோக்கியும், தனிக் கோயிலில் தெற்கு நோக்கியும் விளங்குகின்றார். தனிக் கோயில முருகன் தொன்மை யான வடிவம்; உக்ரரூபம் உடையவர். சிவன் கோயில் முருகன் போர்க்கோலம் பூண்டு வெற்றிச் சிறப்புடன் விளங்குகின்றார்.

தனிக்கோயில் முருகனைத் தரிசிக்க 50படிகள் ஏற வேண்டும். தினமும ஒரு வேளை பூசையே நிகழ்கின்றது.

ஆறுமுகமும் பன்னிருகரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்து இருதேவியர் அருகில நிற்க, போர்க்கோலங் கொண்ட விசுவரூபக் காட்சியுடையவராக தனிக் கோயிலில் விளங்குகின்றார்.

சிவன் கோயிலுள் விளங்கும் முருகனும் ஆறுமுகம் பன்னிருகரங் களும் கொண்டு 6' உயரமுடையவராய் சீறும்பாம்பினை அடக்கும் வளைந்த திருக்கழுத்துடன் தூக்கிய ஒற்றைக்கால் கொண்டமயில் வாகனத்தில் அமர்ந்து வெற்றிப்புன்னகையுடன் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். தனிக்கோயிலில் நவவீரர் சன்னிதியும் உண்டு.

சிவன் கோயில் முருகனுக்கு நான்கு கால பூசைநாடோறும் நிகழ்கின்றது காமிகாகமம்.

சிவன் கோயில் முருகனுக்குக் கார்த்திகைநாட்களில் சிறப்பு வழிபாடுகள்உண்டு தனிக்கோயில்முருகனுக்குக் கந்தசஷ்டிவிழா செங்குந்த மரபினரால் நிகழ்த்தப்படுகின்றது.

பாலாறு, சிம்மதீர்த்தம், திரிசூலதீர்த்தம், சோமதீர்த்தம், எண்கோணவடிவுடையபிரம்மதீர்த்தம்,முதலியபுண்ணியப்புனல் கள் உள்ளன. குளக்கரையில் நாகேசர் கோயில் பூசையின்றிப் பழுதடைந்துள்ளது.

அப்பைய தீட்சிதர் வழிபட்ட தலம் இது. அவரால் பிரதிட்டை செய்யப்பெற்ற மீனாட்சி சுந்தரேசர் கோயில் உள்ளது. சைவ எல்லப்ப நாவலர் பாடிய விரிஞ்சைப் புராணம் இத்தலச் சிறப்பினைப் பேசுகின்றது. மார்க்க சகாய தேவரி யற்றிய திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் புகழ் மிக்கது.

சோழர் பல்லவர், விஜயநகர திருப்பணிகள் கொண்ட தலம் சிற்பங்கள் ஒப்பற்றவை தங்கும்வசதி, உணவு விடுதி உள்ளது. கீழ்விளாசூர் முருகன் கோயில் அருகில் உள்ளது. அற நிலையஆட்சித்துறையின் கீழ் உள்ளது.

இத்தலத்திற்கு அருணகிரி வள்ளல் அருளிய இரு திருப் புகழ்ப் பாக்கள் உள்ளன. ''நிகரில் பஞ்ச'', ''மருவுமஞ்சு'' என்று அவை தொடங்குகின்றன.

உருகி யன்பினோடு உனைநி னைந்து நாளும்
உலக மென்று பேச அறியாத
உருவ மொன்றி லாத பருவம் வந்துசேர
உபய துங்க பாதம் அருள்வாயே.

(மருவுமஞ்சு...)

என இத்தலத்தில் நம் அருணகிரி வள்ளல் வேண்டுகிறார்.

இத்தலக் கல்வெட்டொன்று (S. I. I. Vol. I, பக். 84) வரதட்சிணை கொடுப்பதும் வாங்குவதும் குற்றம் என்று சாற்று கின்றது. கி. பி. 1426-ல் விஜயநகர மன்னர் வீரப்பிரதாப தேவ மகாராயரின் இச்சட்டம் இன்றைய அரசின் பார்வையில் நன்கு படவேண்டும்!

திசைதொறும்ப்ர பூபதி திசைமுகன் பராவிய
திருவிரிஞ்சை மேவிய பெருமாளே. (நிகரில்..)

# கரபுரத்தறுமுகப் பெருமாள்

*கலின்வடிவமான அகலிகை பெணுன*
*கமலமத மாயன் மருகோனே*
*கழனி நெடுவாளை கமுகொடிய மோதும்*
*கரபுரியில் வீறு பெருமாளே!*

(ருலியமயி) — திருப்புகழ்

நீர்வளமும் நிலவளமும் மிகுந்த கரபுரத்தில் வீறுபெற விளங்குகின்றார் ஆறுமுகப் பெருமான் என்று அருணகிரி வள்ளல் காட்டும் தலம் எது என்ற விஞ அறிஞர்களிடையே நீண்டகால மாக விளங்காத புதிராக இருந்து வந்துள்ளது வட ஆர்க்காடு மாவட்டத்தில் விரிஞ்சிபுரம் என்னும் தலத்தைக் கரபுரம் என் பாரும், சேலம் மாவட்டம் உத்தமசோழபுரத்தைக் கரபுரம் என் பாரும் உளர். ஆனுல் வடஆற்காடு மாவட்டம் காவேரிபாக்கத் திற்கு ஒரு கி மீ. தொலைவிலுள்ள தற்காலத் திருப்பாற் கடல் என்னும் ஊரே அருணகிரிநாதர் பரவிய "திருக்கரபுரம்" என்று அறியும் போது சிலருக்கு வியப்புத் தோன்றும்.

சென்னை-வேலூர் பஸ் வழியில் காவேரிப் பாக்கத்தில் இறங்கி ஒரு கிலோமீட்டர் சென்று இத்தலத்தை அடையும் போது இங்கே இரு சிவன் கோயில்களும் இரு திருமால் கோயில் களும் இருப்பது கண்டு திகைக்கிறோம். சிதிலமடைந்துகாணும் கரபுரீசர்-அபீதகுசாம்பாள் திருக்கோயிலும், நன்றாக அமைந் துள்ள சிவன்கோயிலும், பள்ளி கொண்ட பெருமாள் (ரங்கநாதர்) திருக்கோயிலும், பிரசன்ன வேங்கடேசர் கோயிலும் நம் கண் களையும் கருத்துக்களையும் ஈர்க்கின்றன.

இவற்றுள் அருணகிரிநாதர் பரவிய கரபுரீசர் கோயிலுக் குள் நுழைகின்றோம். இங்கே ஆறுமுகமும் பன்னிருகரங்களும்

கொண்டு மயில்மீதமர்ந்து கிழக்கு நோக்கி விளங்கும் அற்புதக் கோலம் நம்மைச் சிலிர்க்கச் செய்கின்றது. இருபுரமும் தேவி மார்கள் விளங்குகின்றனர் ஒருகால பூசை தான் நடந்து வரு கின்றது.

இங்குள்ள கல்வெட்டொன்று இரண்டாம் பராந்தகனது படைத்தலைவனான பார்த்திவேந்திராதிவர்மனின் (கி பி. 957-970) காலத்தது. இதில் கரபுரத்துப் பெருமான் அடிகள் என்று சிவ பெருமான் குறிக்கப் பெறுகின்றார் (S. I I Vol VIII. Part III. No. 156. pp 327, 330)

இக்கோயிலில் தட்சிணாமூர்த்தி, திருமால், பிரமன் திருவுரு வங்கள் சிறப்பாக உள்ளன. வள்ளிதெய்வயானையுடன் முருகன் உற்சவ மூர்த்தியும் சிறப்புடையது.

இத்தலத்தின் நிலவளத்தையும் அருள் வளத்தையும் அருணகிரிநாதர் மூன்று திருப்புகழ்ப் பாக்களில் (பரவியுனது—, ஒருவரைச் சிறு..., குலையமயிரோதி...) பாடிப்பரவியுள்ளார்.

இத்தலத்தில் ஒரு காலத்தில் சிவன் கோயிலாயிருந்த தூஷணேசர் கோயில் தற்போது பிரசன்ன வெங்கடேசர் கோயிலாயிற்று என்று இப்பகுதியில் கூறுகிறார்கள்

கரபுரம் திருக்கோயில் திருப்பணி செய்யவேண்டும். சிவாச்சாரியார் மட்டுமே சென்று நாளும் வழிப்படும் இக்கோயி லுக்கு முருகன் அடியார்களும் சிவனடியார்களும் சென்று வழி படக் கரபுரீசர் கருணைகாட்ட வேண்டும்.

*சகல துக்கமுமறச் சகல சற்குணம்வரத்*
*தரணியிற்புகழ் பெறத்தகைமை பெற்றுனதுபொற்*
*சரணம்எப்பொழுது நட்பொடு நினைத்திடஅருள்தருவாயே*

*கமுகினிற் குலையறக் கதலியிற் கனியுகக்*
*கழையின் முத்தமுதிரக் கயல் குதித்துலவுநற்*
*கனவயற் றிகழ் திருக்கரபுரத்தறுமுகப் பெருமாளே!*
(ஒருவரைச்...)

*இசையும் அருமறைப் பொருள்கள் தினமுரைத்*
*தவனி தனிலெழிற் கரும முனிவருக்*
*கினிய கரபுரப் பதியில் அறுமுகப் பெருமாளே*
(பரவியுனது...)

# முள்வாய் நின்ற முருகன்

*மின்னூர் பயந்த மைந்தா தன்னு டினங்கு விந்து*
*வெவ்வே றுழன்று ழன்று மொழிகூற*
*விண்மேல் நமன்க ரந்து மண்மே லுடம்பொருங்க*
*மென்னு ளறிந்த டைந்து உயிர்போமுன்*

*பொன்னூர் சதங்கை தண்டை முந்நூல் கடம்பணிந்து*
*பொய்யார் மனங்கள் தங்கு மதுபோலப்*
*பொல்லே னிறைஞ்சி ரந்த சொன்னீ தெரிந்தழுங்கு*
*புன்னு யுளுங்க வின்று புகுவாயே*

*பன்னு ளிறைஞ்சு மன்பர் பொன்னு டிறங்கை தந்து*
*பன்னு கணைந்து சங்க முறவாயிற்*
*பன்னூல் முழங்க லென்று விண்ணோர் மயங்கநின்று*
*பண்ணூது கின்ற கொண்டல் மருகோனே*

*முன்னாய் மதன்க ரும்பு வின்னேர் தடந்தெரிந்து*
*முன்னோர் பொருங்கை யென்று முனையாட*
*மொய்வார் நிமிர்ந்த கொங்கை மெய்ம்மாதர் வந்திறைஞ்சு*
*முள்வாய் விளங்க நின்ற பெருமாளே.*

—திருப்புகழ்

அருணகிரிநாதசுவாமிகள் "முள்வாய்" என்று போற்றும் தலம் எது? தணிகைமணியவர்கள் இதனை இடம் விளங்காத் தலமாகவே காட்டியுள்ளார். ஆனால் முருகவேள் முன்னின்று உணர்த்தினால் புலப்படாததொன்றும் உளதோ!

வடஆற்காடு மாவட்டத்தில் அரக்கோணம் அருகே கோணலம் என்ற ஊர் உள்ளது. அங்கிருந்து 3 கல் நடந்து சென்றால் முள்வாய் என்ற கிராமத்தை அடையலாம். இதனை

முள்வாய்ப் பாளையம் என்று அழைக்கிறார்கள். திருவாலங்காட்டிலிருந்து அரக்கோணம் செல்லும் பஸ்வழியில் முள்வாய்ப்பாளையம் கைகாட்டியில் இறங்கி 3 கல் நடந்தும் இவ்வூரை அடையலாம். மனிதர்களின் காலடிப் பாதைதான் இவ்வூருக்கு இருக்கிறது. சரியான வண்டிப்பாதை கூட இல்லை. வழி நெடுகிலும் கூழாங்கற்கள் தாம் தென்படும்.

இவ்வூரில் தற்போது ஒரு பெருமாள் கோயில் மட்டுமே உள்ளது. சுமார் 150 ஆண்டுகளுக்குட்பட்ட காலத்தைச் சார்ந்தது அது. சில ஆண்டுகளுக்குமுன் ஒரு குளம்வெட்ட இவ்வூரில் முயன்றனர். சிறிது தோண்டியபின் நீளவடிவில் பாறைக்கற்கள் இருந்தனவாம். அவ்விடத்தில் கோயில் இருந்திருக்கக்கூடும் என ஊகிக்க முடிகிறது. மேற்கொண்டு அங்கே தோண்டமுடியவில்லை.

பாளையக்காரர்கள் ஆண்டதால் இவ்வூர் முள்வாய்ப் பாளையம் எனப் பெயர் கொண்டது என்பர். இவ்வூரின் அருகில் பால்வாய்ப்பாளையம், வேலூர்ப் பாளையம் என்னும் கிராமங்கள் உள்ளன. வேலூர்ப் பாளையத்தில் பெருமாள் கோயிலும், சிவன் கோயிலும் உள்ளன. சிவன் கோயிலில் விக்ரகம் ஏதும் இல்லை; கல்வெட்டுக்கள் உள்ளன. இவ்வூரில் கோட்டை ஒன்று இருந்ததாகக் கூறுவர்.

முள்வாய் என்ற பெயருடைய ஊர் தமிழகத்தில் வேறு எங்கும் இல்லை எனத் தெரிகிறது. ஆகவே இம் முள்வாயில் மக்கள் முன்வந்து முருகனுக்கு ஆலயம் எழுப்பி, அருணகிரி பரவிய தலத்தைப் பேணிக்காக்க முற்படுவார்களாக.

# காமத்தூர் கானமயில் காந்தன்

அருணகிரி நாதர் அருளிச்செய்த திருப்புகழில் காமக்கூர் என்ற தலத்தை ஒரு திருப்புகழில் போற்றியுள்ளார். இத்தலம் இதுவரை இடம் விளங்காமலிருந்து வந்துள்ளது

தற்போது இத்தலம் காமக்கூர் என்று அழைக்கப்படுகிறது என்று அறியும் போது ஆச்சரியமும் மகிழ்ச்சியும் ஏற்படுகிறது

வட ஆற்காடு மாவட்டம் ஆரணியிலிருந்து படவேடு செல்லும் வழியில் ஆருவது கிலோ மீட்டரில் பாளையம் என்ற இடத்திலிருந்து ஒரு கிலோ மீட்டர் ஊருக்குள் சென்றால்காமக்கூர் ஸ்ரீ சந்திர சேகர ஸ்வாமி திருக்கோயிலை அடையாலாம்

இவ்வூருக்கு காமநகர் என்ற பெயரும் உள்ளதாக தலபுராணத்திலிருந்து தெரியவருகிறது. அதற்குச் சான்றாக இக் கோயிலில் வடக்கு பிராகாரத்தில் காமாட்சியம்பிகை சன்னதி மிகவும் விசேஷமான முறையில் அமைந்துள்ளது காமேஸ்வரியும், காமரூபிணியும், காமவர்த்தினியுமான காமாட்சியம்பிகை விசேஷ சான்னித்யத்துடன் அருள்புரிந்து வருவதால் காமத்தூர் என்ற பெயர் ஏற்பட்டு பின் காமக்கூர் என்று மருவி அழைக்கப் படலாயிற்று. இந்தக் காமாட்சியம்பிகை சன்னிதியில் திரிபுரசுந்தரி என்ற திருநாமத்துடன் ஒருகையில் புஷ்பச் செண்டும் மற்றொரு கையில் கரும்பும் கொண்டு அம்பிகை அருள்பாலிக்கிறாள். ஸ்ரீசக்கரபிரதிஷ்டையும் உள்ளது. ஒருகாலத்தில் மிகவும் சிறப்பாக வழிபாடு நடைபெற்றதற்கான அறிகுறி தோன்றுகிறது. இச் சன்னிதியில் ஓர் அதிசயமான அமைப்பு துவார பாலகி (ஒருவர் மட்டுமே உள்ளார்)யை சிற்பி வடித்துள்ள சிற்பத்தில் தட்டினால் விதவிதமான சப்தங்கள் வருகின்றன.

கோயில் முன்புறம் பெரிய ராஜகோபுரமும் உள்ளே அசோக மரத்தினுல் ஆகிய துவஜஸ்தம்பமும் தாண்டி வெளிச் சுற்றில் முகப்புவாயில் தெற்கு நோக்கி உள்ளது. உள்ளே அதிகார நந்தியைத் தரிசித்த உடன் நம்எதிரில் தோன்றுவது அற்புதமான நடராஜர் உருவம் தான். மற்ற கோயில்களில் இருக்கும் நடனத் திலிருந்து வேறுபட்ட நிலையில் இடது காலை ஊன்றி வலது காலை இடது காலின் பின்புறமும் பின்னிய நிலையில் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாட அருகில் சிவகாமி மகிழ ஆடும் அந்த ஆடல் வல்லானின் சதுரதாண்டவத்தின் அழகை எப்படி வருணிப்பது? சோழர் காலத்தில் அமைந்த இந்த விக்ரகம் அருமையாகஉள்ளது.

அடுத்து நம்மை வரவேற்பவர் சுமார் 10 அடி உயரத்தில் அமைந்த துவாரபாலகர்கள். அவர்களைத் தாண்டிஉள்ளே சென்று ஸ்ரீ சந்திரசேகர ஸ்வாமியை வணங்குகிறோம். ஆதியில் சுயம்பு நாதேஸ்வரர் என்றபெயரிலும்சந்திரன் பூசித்ததால்சந்திரசேகரர் என்று அழைக்கப் படுகிறாராம். அம்பிகை அமிர்தாம்பிகை என்ற திருநாமத்தோடு நின்ற கோலத்தில் அழகாகக் காட்சியளிக்கிறார். இருவரையும் தரிசித்து விட்டு வெளிச்சுற்று வந்தால் கணபதியைக் காண்கிறோம். கருவறைக்கு நேராகப் பின்புறம் சிறிய மிக அழகான ஆறுமுகப்பெருமான் பன்னிருகரங்களோடு சுமார்3½அடி உயரத்தில் மயில் மேல் அமர்ந்த நிலையில் மிக்க வேலைப்பாடுடைய திருவாசியுடன் இருபுறமும் தேவிமார் புடைசூழ அமைந்துள்ள காட்சி உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும். மயில் முகம் வடக்கு நோக்கியுள்ளது. (இதே அமைப்பில் தேவிகாபுரத்தில் கனககிரிஸ் வரர் கோயிலிலும், அம்பிகைகோயிலில் சுமார் ஐந்து அடி உயரத்தில் காணலாம். எல்லாம் ஒரே சிற்பியினுல் வடிக்கப் பெற்றிருக்கும் என்பது புலனுகிறது) இந்த ஆறுமுகஅழகனை அருணகிரியார் கண்டதும் தன்னை நாயகியாக பாவித்து நற்று யிரங்கல்துறையில் பாடுகிறார்.

"ஆகத் தேதப் பாமற் சேரிக்
கார்கைத் தேறற் கணையாலே
ஆலப் பாலைப் போலக் கோலத்
தாயக் காயப் பிறையாலே

போகத் தேசற் றேதற் பாயற்
பூவிற் றீயிற் கருகாதே
போதக் காதற் போகத் தாளைப்
பூசித் தாரப் புணராயே

தோகைக் கேஉற் றேறித் தோயச்
சூர்கெட் டோடப் பொரும்வேலா
சோதிக் காலைப் போதுக் கூவத்
தூவற் சேவற் றொடியோனே

பாகொத் தேசொற் பாகத் தாளைப்
பாரித் தார் நற் குமரேசா
பாரிற் காமத் தூரிற் சீலப்
பாவத் தேவப் பெருமாளே''

இந்தப் பூமியில் காமத்தூர் என்னும் தலத்தில் விளங்கும் சீலனே! தேவர்கள் பெருமாளே! நான் ஆசைவைத்துள்ள இன்பத்துக்கு இடமாகிய உனது திருவடியில் மிக்க மகிழ்ச்சியுடன் திருப்தி அடைய சேர்த்தருளமாட்டாயோ! என்று வேண்டுகிருர்.

அடுத்து சஹஸ்ரலிங்கங்களைத் தரிசித்து, திரிபுரசுந்தரியையும் தரிசித்து வலம் வரும் போது மகிழமரம் ஒன்றுள்ளது. அதன் கீழ் மூன்று பெரிய கருங்கல் குண்டுகள் அழகாக உருட்டிவைத்தது போல் வழவழவென்று காணப்படுகிறது. 250, 300, 350 கிலோ எடையுள்ளவைகளாக இருக்கலாம். அக்காலத்தில் இக்கருங்கல் குண்டுகளை எவர் தோளில் வைத்து தூக்கிவருகிருரோ அவருக்கே அந்தவூரில் திருமணத்திற்கு பெண் கொடுப்பார்களாம். அந்த ஊருக்கு மணமகனுக வருபவர் பலசாலியாகவும், நல்லஉடற் கட்டும் உள்ளவராகவும் இருக்க வேண்டும் போலிருக்கிறது. தற்போது யாராவது இவைகளை தூக்குகிருர்களாவென்று ஆச்சரியத்தோடு வினவியபோது உற்சவதினங்களில் இவ்வூரில் உள்ள மூன்று நான்கு பேர் இதனைத்தூக்கித் தோளில்வைத்து வலம் வருவதாகக் குருக்கள் கூறினர்.

சோழர்கள் காலத்தில் கட்டப்பெற்ற இக்கோயில் திருப் பணிகள் செய்யப்படவேண்டிய நிலையில் உள்ளது. தினமும் இரண்டு வேளைகள் பூசைநடைபெறுகிறது. இங்குள்ள உற்சவ முருகன் ஒருமுகம் நான்கு கரங்களோடு தேவியர் புடை சூழ வீற்றிருக்கின்ருர். கோயிலுக்கு மிக அருகில் காமநதி என்னும் கமண்டல நதி செல்கின்றது. மற்றும் அர்ச்சுனன் குளம் என்ற பெயரில் ஒரு திருக்குளம் உள்ளது.

இத்தலத்திற்கு அருகில் பிரபல அம்பிகைத்தலமான படவேடு ரேணுகாம்பாள் கோயிலும், தேவிகாபுரம் ஆகியவை உள்ளன.

# கனககிரி கந்தன்

*கருணை பொழி கிருபை முந்தப்*
*பரிவினொடு கவுரி கொஞ்சக்*
*கலகலென வருகடம்பத் திருமார்பா*

*கரிமுகவர் தமைய னென்றுற்*
*றிடுமிளைய குமர பண்பிற்*
*கநககிரி யிலகுகந்தப் பெருமாளே!*

(அரிவையர்...திருப்புகழ்)

கனககிரி, கனகாத்திரி, கனகாசலம், தேவியம்பதி, தேவிகா புரம், தேவகிபுரம், தேவக்யபுரம், தேவிகீழ்புரம், நாராயணவனம் என்ற பல பெயர்களைக்கொண்டு, தமிழகத்தின் சிற்பக்கரு வூலமாய், குடத்திடை விளக்கென, மக்களறிந்து நன்கு வழி படாத தலம் இது. ஆரணிக்கு நேர் தெற்கில் 15 கி. மீ தொலைவிலும், போளூருக்குக் கிழக்கில் 11 கி மீ. தொலைவிலும் உள்ள இத்தலத்திற்குச் சென்னை, ஆரணி, சேத்துப்பட்டு, போளூர் ஆகிய ஊர்களிலிருந்து பஸ் வசதி உள்ளன. தேவிகா புரம் என்று தற்போது வழங்கும் இத்தலத்தில் குன்றின் மீது கனககிரீசர் திருக்கோயிலும், கீழே பெரியநாயகி அம்மன் திருக்கோயிலும் சிறப்பாக உள்ளன. கனககிரீசர் கோயிலில் முருகன் சந்நிதி உள்ளது. 320 படிகளைக்கொண்ட இம்மலைக் கோயிலுக்குச் செல்லும் வழியில் வீரபத்திரர்–அழகுமிகும் அற் புதக் கோலம் நம்மை ஈர்க்கிறது. மலையில் அம்பிகையின் பாதச் சுவடுகள் பதிந்துள்ளன.

முருகன் ஆறுமுக சுவாமி மயில் மீதமர்ந்துள்ளார். ஆறுமுகமும் பன்னிருகரங்களும் கொண்டு திகழ்கிறார். இத்திரு வுருவமும் காமக்கூர் முருகனும் ஒரே சிற்பியின் படைப்புக்கள் என்பர்.

அம்பிகை கீழ்க்கோயிலில் பெரியநாயகி என்ற பெயர் கொண்டிருப்பினும் இம்முருகன் மீது பிரியம் அதிகமுடைய வளாகத் திகழ்வதைக் காட்டுகிறார். இத்தலத் திருப்புகழில் அருணகிரிநாதர். மலையில் விசாலாட்சியம்மன் சந்நிதி உள்ளது. இக்கோயில் சிற்பக்கருவூலம்தான். விசுவநாதர் வெந்நீர் அபிஷேகம் கொள்கின்றார் இங்கே.

இங்கு காரணாகமப்படி தினமும் 3 கால பூஜை நிகழ்கின்றது. பங்குனி உத்திரம் கந்த சஷ்டி. திருவாதிரை. கார்த்திகை உற்சவங்கள் நிகழ்கின்றன. கீழ்க் கோயிலில் பெரியநாயகி அம்மன் மிகச் சிறப்புடன் திகழ்கின்றாள். அருகில் 7 கல் மண்டபத்தில் திருக்காமேசுவரர், கோகிலாம்பாள் சந்நிதிகள் உள்ளன.

கீழ்க் கோவிலுக்கருகில் திருக்குளம் உள்ளது. மலைச் சுற்றில் காட்டான் குளம் உள்ளது. மலையை வலம் வருதல் சிறப்பு. அக்னி தீர்த்தத்தருகில் மலையின் மீது புதிய முருகன் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. தல விருட்சம் மகிழ் என்பர்.

இங்குள்ள சிற்பங்களில் வீரபத்திரர், பைரவர், சம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கியது, சுந்தரர் முதலைவாய் மகனை மீட்டது, மனு நீதி வேந்தன் பசுவிற்கு நீதி வழங்கியது, ஹிரண்யவதம், ராமர் மராமரங்களைத் துளைத்தது முதலியன நம் நெஞ்சை விட்டு நீங்காதவை.

தொன்மையான இக்கோயில் படவேடு திருக்கோயில் நிர்வாக அதிகாரியினால் அறநிலைய ஆட்சித்துறையில் நிர்வகிக்கப்படுகிறது. இத்தலத்தருகில் காமக்கூர், குன்றத்தூர், வில்வாரணி, போளூர் முதலிய தலங்கள் உள்ளன.

சேலம் மாவட்டத்தில் காகாபாளையம் கனககிரிக் கோயிலை (சேலத்திலிருந்து 19 கி. மீ. தொலைவிலுள்ளது) கனககிரி என்பர் சிலர். இங்கே சிறிய குன்றில் வேலாயுதசுவாமி கோயில் உள்ளது. ஒரு முகமும் 4 கரங்களும் கொண்டு நின்ற கோலத்தில் தனி முருகன் விளங்குகின்றார். தொன்மையான இக்கோயிலை இப்பகுதியிலுள்ளோர் திருப்புகழ்த்தலமென்பர்.

ஆயினும் கோவை மாவட்டத்திலுள்ள கிணத்துக்கடவுக் கருகிலுள்ள மலைக்கோயிலைக் கனககிரி என்று கருதலாம் என்றும் தணிகைமணி அவர்கள் கருதுகின்றார்கள். இதற்கிடையில் கோவை மாவட்டம் பல்லடம் கண்டியம் கோயில் என்பதே கனககிரி என அப்பகுதி மக்கள் கூறுகின்றனர். ஆனால் அருணகிரிநாத சுவாமிகள் போற்றும் கனககிரி-தேவிகாபுரம் திருக்கோயிலே என்பதை உறுதியாகக்கொள்ள முடிகின்றது.

## ஆண்பனை ஈன்ற அற்புதச் செய்யார்

*பவமாய்த் தாணதுவாகும் பனைகாய்த் தேமணகாறும்*
*பழமாய்ப் பார்மிசை வீழும் படிவேதம்*
*படியாப் பாதகர் பாயன் றியுடாப் பேதைசள் கேடய*
*பறிகோப் பாளிசுள் யாருங் கழுவேறச்*

*சிவமாய்த் தேனமு தூறுந் திருவாக் காலொளி சேர்வெண்*
*திருநீற் றுலமராடுஞ் சிறியோனே*
*செழுநீர்ச் சேய்நதி யாரங் கொழியாக் கோமளம் வீசும்*
*திருவோத் தூர்தனில் மேவும் பெருமாளே!*

—திருப்புகழ்.

வட ஆற்காடு மாவட்டம்-செய்யாறு வட்டத்தில் திருவோத்தூர் என்னும் தொன்மையான தலம் அமைந்துள்ளது. காஞ்சிபுரத்திலிருந்து 25 கி மீ. தொலைவில் உள்ளது. சென்னையிலிருந்து இத்தலத்திற்குப் பஸ் வசதி உள்ளது. தற்போது செய்யார் என்று அழைக்கப்படுகிறது.

இத்தலத்தில் அருள்மிகு வேதபுரீசர் திருக்கோயில் உள்ளது. இங்குள்ள சிவபெருமான் வேதங்களை ஓதியதால் வேதபுரீசர் எனப்பெயர் கொண்டார். இறைவி பாலகுஜாம்பிகை. இத்தலத்தில் ஒரு அடியார் பனை மரங்களைப் பரமன் கோயிலுக்கெனப் பயிரிட்டார். அவை அனைத்தும் ஆண்பனைகளாகி விட்டன. அங்கே திருஞானசம்பந்தர் வழிபாட்டிற்காக வந்த போது,அவ்வடியார் இதனை விண்ணப்பிக்கத் திருஞானசம்பந்தரும் "பூத்தேர்ந்தாயன" என்று தொடங்கும் பதிகத்தைப் பாடி திருக்கடைக்காப்பில்,

குரும்பை ஆண்பனை ஈன்குலை ஓத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும் புகலியுள் ஞானசம்பந்தன் சொல்
விரும்புவார் வினை வீடே

என்று பாடினார். திருக்கடைக்காப்புப் பாடுவதற்குள் ஆண்பனை எல்லாம் பெண்பனைகளாகிக் காய்த்து விட்டன என்பது புலப் படுகின்றது. இத்தகைய அற்புதம் நிகழ்ந்த பதி இது.

இங்குள்ள சிவபெருமான் சந்நிதிக்கு வாயு மூலையில் ஆறுமுகஸ்வாமி சந்நிதி உள்ளது. ஆறுமுகம், பன்னிருகரங் களுடன் மயில்மீது அமர்ந்து இரு தேவியர் விளங்கக் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். அழகான கோலம்.

ஏழுகரங்களுடன் நர்த்தனவிநாயகர், நாகம்குடைபோல் அமைந்த இலிங்கம், ஆண்பனையைப் பெண்பனையாக மாற்றிய கோலம், பஞ்சலிங்கத்தைத் தன்னுள் கொண்ட வேதநாதர் முதலிய சந்நிதிகள் இங்கு சிறப்புடையன. நந்தி, கோபுரத்தைப் பார்த்துத் திரும்பி உளளது.

வாதுளாகம முறைப்படி நாடோறும் இரண்டுகால பூசை நிகழ்கின்றது.

இங்குள்ள கல்யாண கோடி தீர்த்தம் சகல பாபங்களையும் போககுவது தல விருட்சம்: பனை. கருங்கல்லாலான பனைமரம் கோயிலுள் உள்ளது.

சித்ரா பௌர்ணமி, ஆடிப்பூரம், தை பிரம்மோற்சவம் (ரதசப்தமி தேர்) மாசி மகம், பங்குனி உத்திரவிழாக்கள் சிறப்புடையன.

ஆடிப்பூரத்தன்று சந்தனக் காப்பு விமரிசையாயிருக்கும். பல்லவ, சோழ, தொண்டைமான்கள் திருப்பணிகள், கல்வெட்டுக் கள் உள்ளன. அறநிலைய ஆட்சித்துறை நிர்வாகத்தில் உள்ளது.

அண்மையில் (19—6—1977) குடமுழுக்குக் கண்ட கோயில் இது. செய்யாற்றின் தென் கரையில் ஞானமுருகன் ஆலயம் தனியார் நிர்வாகத்தில் உள்ளது.

வழிபடுவோர் விடுதி, உணவு விடுதி வசதிகள் இல்லை.

இத்தலத்தில் அருணகிரிநாதர் "தவர்வாட்டோமா" என்ற திருப்புகழால் முருகனைப் பரவிப் போற்றினார். திருஞான சம்பந்தர், ஆண்பனை பெண்பனையாக்கிய லீலைகளைப் பாராட்டி யும், சிவமணம் கமழும் திருவாக்காலும் திருநீற்றாலும் சமண ரோடு போராடி அவர்களை அவர் வென்ற பராக்கிரம ஆடலைப் போற்றியும் இத்திருப்புகழ் அமைந்துள்ளது

# ஒடுக்கத்துச் செறிவாய் உத்தமன்

ஸ்ரீ அருணகிரிநாதர் ஒடுக்கத்துச் செறிவாய் என்று பாடியுள்ள தலம் வடஆற்காடு மாவட்டம் வேலூர் வட்டத்தில் உள்ள ஒடுக்கத்தூராக இருக்கலாம். (தணிகைமணி அவர்கள் இதனை இடம் விளங்காத தலமாகக் குறிப்பிடுகிறார்) ஒடுக்கத்தூர் செல்ல வேலூரிலிருந்து பஸ்வசதிகள் உள்ளது.

ஒடுக்கத்தூர் ஸ்ரீ சப்தரிஷிஸ்வரர் கோயில் கி. பி. 11ம் நூற்றாண்டில் கட்டப் பெற்றது. கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. கர்ப்பக்ருஹத்தில் நின்றால் அம்மனையும், சுவாமியையும் ஒரே சமயத்தில் தரிசிக்கலாம். கர்ப்பக்ருஹவாயில் தென்புறம் அமைந்துள்ளது. சுவாமி கிழக்கு நோக்கியும், அம்பிகை தெற்கு நோக்கியும் அமைந்துள்ளார்கள். சப்த மாதர்களும் வடக்குப்புறம் நோக்கியுள்ளார்கள்.

சுந்தரவிநாயகரும், ஸ்ரீ வள்ளி தேவசேனை சமேத ஸ்ரீசுப்ரமண்யரும்கிழக்குநோக்கி அமைந்துள்ளார்கள்(சுப்ரமண்யர் சன்னிதி 27-6-33ல் கட்டப்பட்டது.)ஸ்ரீ சுப்ரமண்யர் ஒருமுகம் நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் வள்ளி தேவயானையுடன் காட்சி அளிக்கிறார். இத்தல முருகனை அருணகிரியார் பாடும் அழகே தனி. முருகன் எப்படி முத்தமிழால் வைதாரையும் வாழ வைப்பானோ அதே போல் மாமன் தமிழால் கட்டுப்பட்டவன், தமிழிலே வசப்பட்டவன்; பைந்தமிழின் பின்சென்ற பச்சை பசுங் கொண்டல்; திருமழிசை ஆழ்வார் "சொன்ன வண்ணம் செய்த பெருமாள்" என்ற வரலாற்றைக் குறிப்பாகக்காட்டுகிறார்.

உண்மைப் பொருளைத் தெரிவிக்க ருத்ரஜன்மர் என்ற செட்டிப்பிள்ளையாய் வந்து முத்தமிழ்ப் பொருளை ஆராய்ந்து நால்வகைப் புலவர்களுடன் கூடியிருந்த முருகனை நாற்கவிராஜன் என்ற பெருமையால் பாடுகிறார்.

*"அழற்சட் டப்பறை மோட்ட ரக்கரை*
*நெருக்கிப் பொட்டெழ நூக்கியக்கணம்*
*அழித்திட் டுக்குற வாட்டி பொற்றன கிரி தோய்வாய்*

*அகப்பட் டுத்தமிழ் தேர்த்த வித்தகர்*
*சமத்துக் கட்டியி லாத்த முற்றவன்*
*அலைக்குட் கட்செவி மேற்படுக்கையில் உறைமாயன்*

*உழைக்கட் பொற் கொடி மாக்கு லக்குயில்*
*விருப்புற் றுப்புணர் தோட்க்கு பைக்கடல்*
*உறிக்குப் கைத்தல நீட்டு மச்சுதன் மருகோனே*

*உரைக்கச் செட்டிய ருய்ப் பண் முத்தமிழ்*
*மதித்திட் டுச்செறி நாற்க விப்புணர்*
*ஒடுக்கட்டுச் செறி வாய்த்த லத்துறை பெருமாளே."*

கோயில் நான்குபுறம் மதில் சுவருடன் வாயில் கிழக்கு நோக்கியும் உள்ளது. இராஜகோபுரம் இல்லை. விமானம் மட்டுமே உள்ளது.



## மதுராந்தகம்

முனவாம்பத மூடிக வந்தன
முயல்வான்பிடி மாடிமை ஐங்கரர்
முகதாம்பின மேஉறு சம்ப்ரம சங்கன் ஆறு
முககாம்பீர மோடமர் சம்பன
மதுராந்தக மாநக ரந்திகழ்
முருகாந்திர மோடம ரும்பர்கள் தம்பிரானே.

நன்றி: *French Institute of Indology, Pondicherry.*



அடலருணைத் திருக்கோபுரத்தே அந்த வாயிலுக்கு
…… …… ……… —வருவார் தலையில்
தடபடென படுகுட்டுடன் சர்க்கரை மொக்கியகை
கடதடகும்பக் களிறு……….



அருணகிரிநாதர்



**திருவண்ணாமலை**

ஆதிரகு ராமஜய மாலின்மரு காபெரிய
ஆதி அரு ணாபுரியில் பெருமாளே
கூறும்அடி யார்கள்வினை நீறுபட வேஅரிய
கோலமயி லானபதம் அருள்வோனே.

நன்றி: *French Institute of Indology Pondicherry.*

வாரணி முலைச்சி ஞான பூரணி கலைச்சி நாக்
வாணுத லளித்த வீர மயிலோனே
மாடமதில் முத்து மேடை கோபுர மணத்தசோலை
வாகுள குறட்டி மேவு பெருமாளே.

# குறட்டியில் குறமகள் கொழுநன்

வடஆற்காடு மாவட்டம்-திருப்பத்தூர் வட்டத்தில் கொரட்டி (குறட்டி) என்ற தலம் உள்ளது. திருப்பத்தூரிலிருந்து ஊத்தங்கரைபஸ் வழியில் 8 கி. மீ. தொலைவில் இத்தலம் உள்ளது

இங்கே அருள்மிகு காளத்தீசுவரர் திருக்கோயில் உள்ளது. இறைவர்: காளத்தீசுவரர். இறைவி: ஞானப்பூங்கோதை ஜதூக முனிவர் பூசித்ததலம். இக்கோயிலில் அருள்மிகு சண்முக சுவாமி சன்னிதி உள்ளது.

மூலத்தான முருகன் ஆறுமுகம் பன்னிருகரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்தகோலத்தில் கிழக்குநோக்கிஎழுந்தருளியுள்ளார். இருதேவிமாரும் இருபுறமும் விளங்குகின்றனர். அற்புதமான சிற்ப அமைப்பு.

கோயில் பழுதடைந்துள்ளது. தினமும் ஒரு கால பூசை நிகழ்கின்றது. ஆடிக்கிருத்திகை, பங்குனிஉத்திரம், சிறப்புவிழாக் கள் கொண்டாடப் பெறுகின்றன.

ஐம்புநதி (ஆறு)-புண்ணியப்புனல், தலவிருட்சம்-வில்வம். கல்வெட்டுக்கள் உள்ளன. அற நிலைய ஆட்சித்துறையினரால் கோயில் நிர்வகிக்கப்படுகிறது.

அருகில் பசலிக்குட்டை. சுப்பிரமணிசுவாமி ஆலயம் தரிசிக்கத்தக்கது.

உணவு விடுதி, தங்கும் வசதி இல்லை.

இத்தலத்தில் அருணகிரிநாத சுவாமிகள் முருகனைவழிபட்டு "கூரிய கடைக்", "நீரிழிவு குட்ட" மெனத் தொடங்கும் இரு திருப்புகழால் பரவியுள்ளார்.

இத்தலத்தில் அலமேலுமங்கையுடன் கூடிய பிரசன்ன வேங்கடரமண சுவாமி (திருமால்) கோயிலும் உள்ளது. ஆடிக் கிருத்திகை ஒருநாள் திருவிழாவும, பங்குனிஉத்திர 13நாட்கள் திருவிழாவும் கொண்டாடப்படுகின்றன. மார்மீதுமஞ்சள்இடித்தல் பிரார்த்தனையும், அலகுகுத்தி வேலேந்தி, பால்காவடி, புஷ்பக் காவடி, தேன்காவடி, இளநீர்காவடிகள் எடுப்பதும் இங்கே நிகழ்கின்றன.

# பரகருணைப்புரியும் அருணைநகர்

*உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன்*
*பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ*
*மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழ வதிரும்*
*அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ணம் அறுமே*

—திருஞானசம்பந்தர்

ஆரூரில் பிறக்கமுத்தி; தில்லையைத் தரிசிக்க முத்தி; காசியில் இறக்கமுத்தி; (மதுரை) ஆலவாய் என்று சொல்லமுத்தி; அவிநாசி என்று கேட்க முத்தி; அருணையை (திருவண்ணாமலையை) நினைக்க முத்தி என்று ஆன்றோர் அமுதமொழி பகருகின்றது.

வடஆற்காடு மாவட்டம் பெற்றுள்ள ஒப்பற்ற திருத்தலம் திருவண்ணாமலை. வேலூரிலிருந்து 50 கல் தெற்கில் உள்ளது. சென்னையிலிருந்து 110 கல் மேற்கில் உள்ளது. விழுப்புரத்திலிருந்து காட்பாடி செல்லும் இரயில் வழியில் இத்தலம் உள்ளது. கடலூர், திண்டிவனம், செங்கற்பட்டு, விழுப்புரம், காஞ்சிபுரம், வேலூர் முதலிய பலதலங்களிலிருந்தும் பஸ் வசதி உள்ளது.

நடுநாட்டுத் தேவாரத்தலங்களுள் ஒன்று இத்தலம். நான்முகனும் திருமாலும் தம்முள் உயர்ந்தவர் யார் என்று தருக்கித்துச் சண்டையிட்ட நாளில், சிவபெருமான் பேரொளிப் பிழம்பாய் அவர்களிடையே தோன்றி- அதன் அடிமுடிகளைக் காணுமாறு பணிக்க, நான்முகன் முடியையும், திருமால் அடியையும், தேடி நாடிச் சென்று காணாமல் அறிவும் செல்வமும் ஆண்டவனைக் கண்டு விடமாட்டா என்ற கருத்தைக் காட்டிய தலம் இது.

பஞ்சபூதத் தலங்களுள் இது தேயு (நெருப்பு)த் தலம். சிவலோகம், அருணாசலம், சோணாசலம், திருவண்ணாதது, சோணாத்திரி, அண்ணாநாடு, திருஅருணை, திருவண்ணாமலை என்று இலக்கியங்களும் கல்வெட்டுகளும் இதனைப் பலவாறு அழைக்கும். சிவபெருமானே இங்கு மலையாக விளங்குகின்றார் என்பது தல மான்மியம். அருணம் = சிவப்பு. அசலம் – மலை. தன்னை அடைந் தாரது கன்மங்களை ஒழிக்கும் நெருப்புமயமான பேரொளிப் பிழம்பே மலையாக எழுந்தருளியுள்ளது. பிரமனும் திருமாலும் அணுசமுடியாத மலையாதலின் அண்ணாமலையாயிற்று.

திருக்கயிலையில் சிவபெருமானது திருக்கண்ணைப் புதைத்த பார்வதிதேவியார் இறைவன் கட்டளைப்படி இத்தலம் வந்து தவமியற்றி இடப்பாகம் பெற்றனள். வல்லாள மன்னனுக்கு இறைவன் மகனாகத் தோன்றி அருள் செய்த தலம். இன்றும் அம்மன்னனுக்கு இறைவன் நீத்தார்கடன்கழிக்கும் திருவிழா நடை பெற்று வருவது காணலாம்.

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும், மணிவாசகப் பெருமானும், போற்றிப் பணிந்து பாடிய தலம். கார்த்திகை தோறும அடியார் கூட்டம் மிகுகின்றது. கார்த்திகைப் பெரு நாளின் ஒளிப்பிழம்பு மலையுச்சியினின்றும் பல கல் தொலைவி லும் தெரியும்.

மலையடிவாரத்தில் மிகப்பெரிய ஆலயம். கோயிலும் கோபுரங்களும அடியாரை வா, வா என்று அழைக்கின்றன. மலைவலம் வருதல் சிறப்பு.

இறைவன்: அண்ணாமலையார்; இறைவி: உண்ணாமுலை யம்மை. இத்தலத்தில் விநாயகர், வயிரவர், முருகன், பார்வதி திருமால், இந்திரன், பிரமன், திருமகள், கலைமகள் சூரியன், சந்திரன், திக்குப்பாலர், அட்டவசுக்கள், முனிவர்கள், இருடியர், வச்சிராங்கத பாண்டியன், பிரபுடதேவன், வல்லாள மன்னன், ஏழுகன்னியர், குதிரை, புனுகுப்பூனை முதலிய எண்ணற்றோர் வழிபட்டுப் பேறு பெற்றனர் என்பதை அருணாசலபுராணம் அழகாக எடுத்தியம்புகிறது.

தல விநாயகர்: யானைதிரை கொண்ட, விநாயகர். இவர் கிளிகோபுரத்தின் வலப்பக்கம் எழுந்தருளியுள்ளார்.

இத்தலத்தில் கம்பத்திளையனார், கோபுரத்திளையனார் என்று இரு முருகன் சந்நிதிகள் உள்ளன.

அற்புதமான திருப்புகழ்ப்பாக்களை அவனிக்களித்தருளிய அருணகிரிநாத சுவாமிகளை உய்யும்படி செய்த தலம் திருவண்ணாமலையேயாகும். அவர் திருவண்ணாமலையில் வாழ்ந்தும் அவநெறியிற் சென்று 'வேசையர் மயல் மேலாய் வெடுக்கெடுத்து மகாபிணி மேலிட முடக்கி வெட்குமதாமத வீணனாய்'' "மோக மாயையில் விழுந்து தணியாமல் பெருகியொரு காசே கொடாத வரை ஐந்து தருவை நிகரேயாகவே எதிர் புகழ்ந்து பெரிய தமிழே பாடி நாடோறும் இரந்து உழன்று'' திரிந்தார். சிவபெருமானே எனத்தகும் தவப பெரியார் ஒருவர் அருணகிரிநாதர் முன்பு தோன்றி "அன்ப! நீ தவ நிலையில இருந்து ஆறுமுகக் கடவுளை இடைவிடாமல் தியானிப்பாயாக'' என்று உபதேசித்தனர்.'' அவர் கூறிய நன்னெறியைப் பயில முயலாது வீணே காலங் கழித்தேனே'' என்று மனம் நைந்த அருணகிரிநாதர் மனம் புழுங்கி திருவண்ணாமலையில் பெரிய கோபுரத்து வட வாயிலில் தவநிலையில் அமர்ந்து ஆறுமுகங்களையும் மொழிந்து மொழிந்து தியானித்தார். மூவாசைகளும் நீங்கின பாடில்லை. தமது பிறவியை வெறுத்து 'தன் பிழைக்கே கவன்று, தமது உயிரை விடுவதே உத்தமம எனத்துணிந்தார். கோயில் கோபுரத தில் ஏறித் தமது உயிரை மாய்க்கக் குதித்தார்.

'மொழியும் அடியார்கள் கோடி குறை கருதினாலும் வேறு முனிய அறியாத தேவர் பெருமாள்' தமது வழியடிமை இவ்வாறு உயிர்துறத்தலைக் காணச்சகிப்பரோ! தமது அன்பருக்கு யாதொரு ஊறும் வாராத வண்ணம் அவரைத் தமது திருக்கரத்தாற பிடித்துத்தாங்கி, 'அஞ்சற்க' என அபயம அளித்துக்காததனர். அருணகிரிநாதர் என்று பெயரிட்டு அழைத்தார் முருகவேள். இவ்வாறு அருள்செய்த முருகன் சந்நிதிதான் கோபுரத்திளையனார் என்று போற்றப்படுகின்றது.

ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு, வள்ளி தேவயானையுடன் நின்ற கோலத்தில கிழக்கு நோக்கிக் கோபுரத்தில் விளங்கும பெருமானே சந்தக்கவிராஜரான அருணகிரிநாதரை நமக்கு அளிதத வள்ளல் என்று நாளும் தொழவேண்டும்.

அருணகிரிநாதருக்கு இப்பெருமான் நயனதீட்சை, திருவடி தீட்சைகளைச் செய்து, நாவில் ஆறெழுத்தைப் பொறித்து, முத்

தமிழை ஊட்டி. ஜபமாலையொன்றை அளித்து, ஞான உபதேசஞ் செய்தருளினர் "முத்தைத்தரு" என்ற வண்ணப்பாவாகவே அடி எடுத்துக் கொடுத்து 'என் புகழ் பாடுக' என்று பணித்தார்.

தமக்குக் குருவாய் வந்த கோபுரத்திளையனார் சந்நிதியிலேயே அருணகிரிநாதர் தவநிலையில் இருந்து சந்தக்கவி மிக்க திருப்புகழ்ப் பாக்களைப் பாடி வந்தனர். அருணாசலேசுவரர் இவர் முன் தோன்றித் திருநீறு அளித்து 'நின் துயர் ஒழிக' என அருளினர். உண்ணாமுலையம்மையும் அருள்செய்தனள்.

கந்தவேள் கழலை அடைந்தவர் எய்த இயலாதது ஒன்று உண்டோ? எனும்படி அருணகிரிநாதர் அபரிமித வித்தைகளையும் ஞானத்தையும் இமைப்பொழுதில் அறியப்பெற்றார். சுக ஞானக்கடலில் மூழ்கினார்; தவஞானக் கடலில் ஆடினார்; சிவப் பேற்றினுக்கு உரியரானார்; பிரமஞான நிலை எய்தினார்; யோகாநுபூதியும் மோன நிலையும் எய்தினார்; மனோலயம் பெற்றார்; கர்ணாமிர்தப் பதத்தைப் பெற்றார்.

கந்தவேளின் கருணைக்கிலக்காகிப் பெருந்தவமுனிவராய்த் திகழ்ந்த அருணகிரிநாதரின் பெருமை எங்கும் பரவியது. அப்போது திருவண்ணாமலையை ஆண்ட மன்னன் 'பிரபுடதேவராயன்' என்பவன், அருணகிரிநாதரிடம் அளவற்ற அன்பும் பக்தியும் கொண்டிருந்தான். இம்மன்னனது அவையிலே தேவி வழிபாடு செய்பவனாகிய சம்பந்தாண்டான் என்பவனும் இருந்தான். அவன் அருணகிரிநாதர்பால் அழுக்காறுடையவன். "யாரொருவர் தாம் உபாசிக்கும் மூர்த்தியைச் சபையில் வரவழைக்கின்றாரோ அவர் மாட்டே நீங்கள் அன்பு கொள்ள வேண்டும்" என்று மன்னனைத் தூண்டினான். அரசசபையில் சம்பந்தாண்டான் தேவியை வரவழைக்கவும் முயன்றான். தோற்றான். அண்ணாமலையான் கோயிலின் ஆயிரக்கால் மண்டபத்தில் அனைவரும் கூடினர். சந்தக்கவிஞர் கந்தக்கடவுளைத் தியானித்து,

*"அதல சேடனாராட அகிலமேரு மீதாட*
*அபின காளி தானாட - அவளோடன்(று)*
*அதிரவீசி வாதாடும் விடையி லேறுவாராட*
*அருகு பூத வேதாளம் - அவையாட*

*மதுரவாணி தானாட மலரில் வேதனாராட*
*மருவு வானுளோ ராட - மதியாட*
*வனசமாமியாராட நெடிய மாமனாராட*
*மயிலுமாடி நீயாடி - வரவேணும்*

கதைவிடாத தேர்ஸ்வீமன் எதிர்கொள் வாளியால்நீ
கருதலார்கள் மாசேனை - பொடியாகக்
கதறுகாலி போய்மீள விஜயனேறு தேர்மீது
கனக வேத கோடூதி - அலைமோதும்

உததி மீதிலேசாயு முலகமூடு சீர்பாத
உவணமூர்தி மாமாயன் - மருகோனே
உதயதாம மார்பான ப்ரபுடதேவ மாராஜன்
உளமுமாட வாழ்தேவர் - பெருமாளே.''

என நெஞ்சம் நெக்குருகத் துதித்து வணங்கினார். அடியார்க்கு எளியராம் அண்ணலும் ஒருநொடிப் பொழுதில் திருக்கை வேல் விளங்க மயில்மீது ஆரோகணித்து வந்து அவையோருக்குக் காட்சியருளி மறைந்தார். எம்பெருமான் மயில்மீதமர்ந்து அனைவருக்கும் கம்பத்தில் காட்சிதந்த சந்நிதியே கம்பத்து இளையனாராக நமக்கும் அருள் பாலிக்கிறார். 16 கால் மண்டபத்தில் இச் சந்நிதி உள்ளது.

உலகினில் அனைவர்கள் புகழ்வுற அருணையில் ஒரு நொடி தனில் வந்தருளிய மயில் வீரரான கம்பத்திளையனார் ஒரு முகமும், நான்கு கரங்களும் கொண்டு மயில்மீது எழுந்தருளி கிழக்கு நோக்கி விளங்குகின்றார்.

கம்பத்திளையனாருக்கும், கோபுரத்திளையனாருக்கும் தினமும் இரண்டுகால பூசை காமிகாகம முறைப்படி நிகழ்ந்து வருகின்றது.

இக்கோயிலில் பழனியாண்டவர், ஆறுமுகர் சன்னிதிகள் தனித்தனியே வேறு உள்ளன. இவர்களுக்கு உற்சவமூர்த்திகள் உண்டு. பழனி ஆண்டவருக்கு ஆடிக்கிருத்திகைச் சிறப்புவிழா நிகழ்கிறது.

வைகாசி விசாகம், தைக்கிருத்திகை, பங்குனி உத்திர விழாக்களில் 108 காவடிகள், பால்க்காவடிகள் முதலியன எடுக்கின்றனர்.

கார்த்திகை மாதக் கார்த்திகைத் திருவிழா 10 நாட்கள் கொண்டாடப் பெறும். அண்ணாமலை தீபம் என்பது உலகப் பிரசித்தியானது.

இத்தலத்தில் பிரம்மதீர்த்தம், சிவகங்கை, இந்திரதீர்த்தம் முதலிய 360 தீர்த்தங்கள் உள்ளன. தலவிருட்சம்: மகிழமரம்.

அருணகிரிநாதர் இத்தலத்து முருகனை 78 திருப்புகழ்ப் பாக்களில் பரவியுள்ளார். இவை அற்புதமான அருள் வளம்மிக்கவை.

ஞானத் தபோதனர்கள் அன்றும், இன்றும், என்றும், கூடி வணங்கும் அண்ணாமலையில்தான் எத்தனை அருளாளர்கள் வழிபட்டுப் பாடியிருக்கிறார்கள் திருவெம்பாவையை இத்தலத்தில்தானே மணிவாசகர் பாடி மகிழ்ந்தார்! குகைநமச்சிவாயர், குருநமச்சிவாயர், சேஷாத்திரி சுவாமிகள், ரமண ரிஷிகள், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். சைவ எல்லப்ப நாவலர் முதலான எண்ணிறந்த ஞானிகளின் பாடலும் பாதமும் தோய்ந்த பதி இது. இன்றும் ராம் சுரத் குமார் போன்ற ஞானிகள் நடமாடும் ஞானப்பதி இது.

சில ஆண்டுகளுக்கு முன்பு குடமுழுக்குச் செய்யப் பட்டுள்ள இப்பெருங்கோயில், நகரத்தாரின் வழிபடு தெய்வமாகப் போற்றிக்காக்கப்படுகிறது. அறநிலைய ஆட்சித்துறையினரால் நிர்வாகிக்கப்படுகிறது.

இத்தலத்தினருகே வில்வாரணி (15கல்) சோமாஸ்பாடி; (6கல்), மண்மலை (18கல்), துறிஞ்சாபுரம் (1 கல்) பவழக்குன்று (1 பர்லாங்), குமரக்கோயில் (1பர்) முதலிய முருகன் கோயில்கள் உள்ளன.

இங்கே பல திருமடங்கள் உள்ளன. இத்தலம் பற்றிய பல நூல்கள் உள்ளன. அவற்றுள் சைவ எல்லப்ப நாவலர் இயற்றிய அருணாசல புராணம் சிறப்புடையது.

மிகச் சிறந்த சிற்பக் களஞ்சியமாய்த்திகழும் இக்கோயிலைச் சுற்றி வழிபடுவோர் விடுதிகள், உணவு விடுதிகள் இந்நகரில் உள்ளன. ஆண்டு தோறும் ஏராளமானபடி விழாக்கள் நடைபெறினும் ஆகஸ்ட் 15-ஆம் நாள் திருப்புகழ் திருப்படி விழாவில் தமிழ்நாட்டின் பல திருப்புகழ்ச் சங்கங்களும் வந்து அஞ்சலி செய்யும் காட்சி மெய்சிலிர்க்கச் செய்யும்.

*இரவு பகற் பலகாலும்*
*இயலிசை முத்தமிழ் கூறித்*
*திரமதனைத் தெளிவாகத்*
*திருவருளைத் தருவாயே!*
*பரகருணைப் பெருவாழ்வே*
*பரசிவ தத்துவ ஞானா*
*அரனருள்சற் புதல்வோனே*
*அருணகிரிப் பெருமாளே.*

— திருப்புகழ்.

# தென் ஆற்காடு மாவட்டம்

1. மயிலம்
2. திருவக்கரை
3. தேவனூர்
4. திருவாமாத்தூர்
5. திருக்கோவலூர்
6. பாக்கம்
7. திருவெண்ணெய்நல்லூர்
8. திருத்துறையூர்
9. திருநாவலூர்
10. திருவாமூர்
11. திருவதிகை
12. திருப்பாதிரிப்புலியூர்
13. திருமாணிகுழி
14. வேப்பூர் (வேப்பஞ்சந்தி)
15. அத்திப்பட்டு (வில்லுடையான்பட்டு)
16. விருத்தாசலம்
17. யாழ்ப்பாணயன்பட்டினம் (எருக்கத்தம்புலியூர்)
18. திருவரத்துறை
19. திருக்கூடலையாற்றூர்
20. திருமுட்டம்
21. கடம்பூர்
22. திருநெல்வாயில் (சிவபுரி)
23. திருவேட்களம்
24. சிதம்பரம்

## மயிலம்தண் மாமலை வாழ்வே!

தென்னாற்காடு மாவட்டத்தில் அமைந்த ஒப்பற்ற முருகன் தலங்களில் ஒன்று மயிலம் ஆகும். விழுப்புரத்திலிருந்து 18 கல்; திண்டிவனத்திலிருந்து 6 கல். விழுப்புரம்-திண்டிவனம் இரயில் வழியில் மயிலம் நிலையத்திலிருந்து இத்தலம் 2கல் தொலைவி லுள்ளது. திண்டிவனம்-பாண்டிச்சேரி (வானூர்) வழி செல்லும் பஸ்கள் இத்தலத்தின் வழியே செல்கின்றன.

மலைக்கோயில். மலை மயில் போன்ற அமைப்புடையது ஆதலின்மயிலம் என்ற பெயர் கொண்டது. மலைமீது கார்கள் செல்லவும் வசதி உள்ளது. குன்று தோறாடலில் இத்தலமும் ஒன்று

சூரபன்மனது ஆணவத்தை அழித்துக் கூறுக்கியப்பின் அவன் முருகப்பெருமானிடம் தன்னை வாகனமாக ஏற்றுக்கொள்ள வேண்டினான். முருகப்பெருமான், நீ சிறிதுகாலம் வராகநதியின் வடகரையில் உள்ள புண்ணிய தலத்தில் மயில் வடிவம் கொண்டு மலையாக இருந்து தவம்புரிக என்று ஆணையிட்டார். சூரனும் மயில் உருக்கொண்ட மலையாக நின்று தவம் புரிந்து முருகன் அருள் பெற்றான். இத்தலம் இதனால் மயூராசலம் என்று பெயர் பெற்றுப் பின்பு மயிலம் என வழங்கலாயிற்று.

மூலவர் ஆறுமுகப் பெருமான் நான்குதிருக்கரங்களுடன்' வள்ளி தேவயானையுடன் திருக்கலியாண கோலத்தில் கிழக்கு நோக்கி நின்றருளும் அற்புதக் காட்சியைக் காண்கிறோம். மயில் வடதிசை நோக்கியமுகமுடையது.

உற்சவரும் மூலவர் போன்றே சிறப்புடன் அமைந்து விளங்குகின்றார்.

தினமும் நான்குகால பூசை-குமாரதந்திர முறைப் படி நிகழ் கின்றது.

பொம்மையபாளையம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீசிவஞான பாலைய சுவாமிகள் மடத்தின் அருளாட்சியில் அமைந்தது இக்கோயில். கள்ளிப்பாலையேபருகிக்கொண்டு ஆயிரம் ஆண்டுகள் யோகநிட்டை யில் இருந்த பாலயோகி என்ற சிவஞானி மயிலம் முருகன் சன்னிதி யில் தென்புறத்துள்ள இலிங்கத்துள் ஐக்கியமானார். இச்சன்னிதி விசுவநாதர் சன்னிதி என்றழைக்கப் படுகின்றது

மாதந்தோறும் பரணி, கார்த்திகை நாட்கள் சிறப்புடையன வசந்தோற்சவம், ஆடிப்பெருக்கு, நவராத்திரி, கந்தசஷ்டி, கார்த்திகை, மாசிமகப்பெருவிழா, பங்குனிஉத்திரப் பெருவிழா முதலியன சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. மாதந்தோறும் பஞ்சபர்வ விழாக்கள் நடைபெறும். மாசிமகம் தீர்த்தவாரிக்கு முருகப் பெருமான் இங்கிருந்து புதுவை மாநகருக்கு (பாண்டிச்சேரிக்கு) எழுந்தருளுவார். தைப்பூசத்தன்று 1008 சங்காபிஷேகமும், ஆகஸ்ட் 15ம் நாள் திருப்படித் திருவிழாவும் சிறப்புடையன.

தலவிருட்சம்: புன்னை; வராகநதி (குளம்) புண்ணியப் புனலாகும்.

உற்சவ நாட்களில் தங்கமயில் வாசனத்தில் முருகன் வீதியுலாக்காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும்.

குட்டித்தொல்காப்பியம் எனப்படும் இலக்கண விளக்கம் எழுதிய வைத்தியநாததேசிகர் இத்தலமுருகன் மீது பிள்ளைத் தமிழ் பாடியுள்ளார் வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் மயிலலங்காரம்பாடியுள்ளார். தியாசராசக்கவிராயர் தலபுராணம் பாடியுள்ளார். பாம்பன் சுவாமிக்ள், வேலாயுதம்பிள்ளைப் பாடல் களும் உள்ளன.

இங்கு அங்கப்பிரதட்சிணம் செய்வது சிறப்பு. காவடி எடுத்தலும், முடிகாணிக்கையும் செலுத்திவணங்குவர்.

தொன்மையான கோயில், அவ்வக்காலங்களில் மயிலம் மடாதிபதிகளின் திருப்பணிகளால் சிறப்புற்று விளங்குகின்றது. சிறந்த பிரார்த்தனைத்தலம். தங்கும் வசதி இல்லை.

இத்தகு சிறப்புடையதலத்தில் அருணகிரிநாதர் வழிபட்டு "சொலைகொண்ட" என்னும் திருப்புகழால் முருகனைப் பரவிப் பாடினார்.

*"மதி மிஞ்சு போதக வேலா ஆளா*
*மகிழ்சம்புவே தொழு பாதாநாதா*
*மயிலந்தண் மாமலை வாழ்வே வானோர் பெருமாளே"*

இத்தலத்திற்கருகே சென்னை செல்லும் சாலையில் "பெறும் பேறு" (பேறைநகர்) என்ற முருகன் தலம் வழிபடற்குரியது.

# நினைத்ததை அளிக்கும் திருவக்கரை மாமணி

திண்டிவனம்—பாண்டிச்சேரி பஸ் வழியில் பாண்டியி லிருந்து 11கல் தூரம் சென்று மானூரை அடைந்து அங்கிருந்து மேற்கே 2கல் சென்று இத்தலத்தை அடையலாம்.

மலையடிவாரத்தில் கோயில் உள்ளது. வக்ரபுரி, வக்ரபுரிப் பட்டினம் என்றெல்லாம் அழைக்கப்படுவது. வக்ரராஜன் ஆண்டதால் இப்பெயர் வந்தது என்பர். வக்கிரன் என்னும் அசுரன் பூசித்ததால் வக்கரை என்ற பெயர் ஏற்பட்டது என்பது தலமான்மியம். சந்திரன், பிரமன், திருமால் ஆகிய மூவருக்காக இங்கே சிவபெருமான் மும்முகம் தாங்கியுள்ளார். இங்கே மரங்கள் கல்லுருவாக உள்ளன.

இறைவன்; சந்திரசேகரர். இறைவி: வடிவாம்பிகை

இங்கு எழுந்தருளியுள்ள ஆறுமுகப்பெருமான் பன்னிரு கரங்களும் கொண்டு வள்ளி தேவயானையுடன் மயில் மீது அமர்ந்து கிழக்கு நோக்கி விளங்குகின்றார். உற்சவரும் சிறப்பு மிக்கவர்.

தினமும் காமிகாகம முறையில் இரண்டு கால வழிபாடு நிகழ்கின்றது.

வேல் எடுத்தல், ஊசி போட்டுக் கொள்ளுதல், செடல் எடுத்தல், தேர் இழுத்தல், முதலிய பிராத்தனைகள் இங்கு சிறப்புடையன.

கார்த்திகை, கந்தசஷ்டி தைப்பூசவிழாக்கள் நடைபெறு கின்றன, தைப்பூசத்தன்று சந்தனக்காப்பு அற்புதமாயிருக்கும்.

சூரியபுட்கரணி-புண்ணியப்புனல், தலவிருட்சம்-வில்வம்

திருஞானசம்பந்தர்ஓர்பதிகத்தால் பரமனைப்பரவியுள்ளார். அருணகிரிநாதசுவாமிகள் "கல கலென" "பச்சிலையிட்டு" என்ற இருதிருப்புகழ்ப் பாக்களால் இத்தல முருகனைப்பாடிப் பரவினார்'

"உனது அடிமைத்திரள் அதனினும் உட்பட
 உபயமலாப்பதம் அருள்வாயே
அடியவர் இச்சையில் எவைஎவை யுற்றன
 அவை தருவித்தருள் பெருமாளே." (கலகலெனச்)

"கொத்தவிழ் பத்ம மலர்ப் பழனத்தொடு
 குற்றாறக் கடிகைப் புனல் சுற்றிய
 கொட்புள நற்றிரு வக்கரை யுற்றுறை பெருமாளே'
 (பச்சிலையிட்டு - )

எனவரும் பகுதிகள் சிந்தித்தின்புறுதற்குரியவை.

கி. பி. 7ஆம் நூற்றாண்டில் கட்டப்பெற்ற இக்கோயிலில் பல அரசர்களின் பணிபற்றியக் கல்வெட்டுக்கள் பலஉள. சக்கரத்துடன் ரதபாணியில் இங்கு மண்டபம் உள்ளது.

இத்தலத்தில் வக்ராசுரன் என்ற அசுரனைத் திருமால் வதைத்தார். அவனது தங்கை துன்முகியை அஷ்டபுஜகாளி சம்ஹாரம் செய்தாள். துன்முகி சம்ஹாரத்தின் போது கருவுற்றிருந்ததால் அவள் வயிற்றிலிருந்த குழந்தையைக் காளி தன்காதில் குண்டலமாக அணிந்து கொண்டாள் இதனல் இங்குள்ள அஷ்டபுஜகாளியின் காதில் குழந்தையுடன் கூடிய குண்டலம் உள்ளது.

அஷ்டபுஜதுர்க்கையும், பிரயோகசக்கரத்துடன் அஷ்டபுஜவக்கரகாளியும் இத்தலத்தில் சிறப்புடைய சந்நிதிகளாகும்.

அறநிலைய ஆட்சித் துறையினரால் இக்கோயில் நிர்வகிக்கப் படுகிறது.

அருகில் உள்ள தலம் மயிலமாகும்.

உணவு விடுதிகள், தங்கும் விடுதிகள் இல்லை.

## ஞானிகள் உளம் உறையும் தேவனூர் தேவன்

தென்னாற்காடு மாவட்டத்தில் செஞ்சிக்கருகில் இத்தலம் அமைந்துள்ளது. செஞ்சியிலிருந்து பஸ்வசதி உள்ளது. செஞ்சியிலிருந்து சேத்துப்பட்டு செல்லும் வழி (8 கல்) யில் தேவனூர் கட்ரோடில் இறங்கவேண்டும்.

இங்கு அமைந்துள்ள சோழர்கள் காலக் கோயிலான ஸ்ரீ நாகேஸ்வரன் கோயில் கலைச் செல்வம் மிக்கது. பழநியில் இருக்கும் முருகனைப் போன்ற அமைப்பு இங்குள்ளது. மற்றொரு முருகப்பெருமான் திருவுருவம் ஒருமுகம் நான்குகரங்களுடன் மயில் மேல் அமர்ந்த கோலத்தில் அடைந்துள்ளது. இத்தலத்து அம்பிகை கமலேஸ்வரி அம்மன்.

உற்சவர் வள்ளி தேவயானையுடன் மயில்மீதமர்ந்து காட்சியருள்கிறார்.

தனியார் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது. ஆடிக் கிருத்திகை, பங்குனி உத்திரவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

அருணகிரிநாத சுவாமிகள் இத்தல முருகனைப் பாடிப் பரவிய திருப்புகழ் மூன்று. அவற்றுள் தத்துவச் சிறப்புடையது வருமாறு!

*ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும் ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும்*
*ஆறும் ஆறும் அஞ்சும் அஞ்சும் அறுநாலும்*
*ஆறுமாய சஞ்சலங்கள் வேறதா விளங்குகின்ற*
*ஆரணாக மங்கடந்த கலையான*

சீறுகூறரும் பெருஞ்சுவாமி யாயிருந்த நன்றி
யேது வேறியம்ப லின்றி யொருதானய்
யாவுமாய் மனங்கடந்த மோன வீடடைந்தொருங்கி
யான வாவடங்க என்று பெறுவேனே!

இத்தலத்திற்கு மூன்று திருப்புகழ்ப்பாக்கள் உள்ளன. ''தாரகாசுரனி'' என்று தொடங்கும் திருப்புகழில்,

''ஆசைகூறு நண்பஎன்றும் மாமயூரகந்த என்றும்
ஆவல்தீர என்று நின்று புகழ்வேனே''

என்று ஏங்குகின்றார்.

''காணொணாதது'' என்று தொடங்கும் திருப்புகழில் பெருமானுடைய பரத்துவத்தை அதியற்புதமாகக்காட்டுகின்றார்.

''சேரொணா வகை வெளியே திரியு மெய்ஞ்
ஞான யோகிக ளுளமே யுறைதரு
தேவனூர் வரு குமரா அமரர்கள் தம்பிரானே''

இத்தலத் திருப்புகழ் பாடல் கோயிலில் எழுதி வைக்கப் பெற்றுள்ளது.

# முத்தார் நகை அழகுடையாள் திகழ் ஆமாத்தூர்

*அரிதிரு மால்சக் ராயுதன வனிலையாள் முத்தார் நகை*
*அழகுடையாள் மெய்ப்பாலுமை அருள்பாலா*
*அரவொடு பூளைத்தார்மதி அறுகொடு வேணிச்சூடிய*
*அழகர்தென் மாதைக்கேயுறை பெருமாளே!*

(கருமுகில்—திருப்புகழ்)

தென் ஆற்காடு மாவட்டத்தில் விழுப்புரம் அருகே அமைந்த தலம் இது. விழுப்புரத்திலிருந்து பஸ் வசதி உள்ளது (வடமேற்கே 4 கல்). பசுக்களுக்குத் தாயகமான தலம். பிருங்கி முனிவர் சக்தியைப் பூசித்துச் சாபம் நீங்கிய தலம். திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் பதிகமும் கொண்ட தலம்.

கொம்புகள் இல்லாமலிருந்து பசுக்கள் இங்குள்ள சிவபெருமானை வழிபட்டுக் கொம்புகளைப் பெற்ற—பசுக்களின் தாயகமான இத்தலம் கோமாதுருபுரம் என்று வடமொழியில் அழைக்கப்படுகிறது.

இங்குள்ள சிவபெருமான் திருக்கோயில் தொன்மையானது. இறைவன்: அபிராமேசுவரர்: இறைவி : முத்தாம்பிகை. இராமன் இங்குள்ள பெருமானை வழிபட்டதால் அபிராமேசுவரர் என்ற பெயர் வந்தது என்பர்.

சிவாலயத்தின் மேற்குப் பிரகாரத்தில் முருகவேள் சந்நிதி உள்ளது. மூலவராகிய ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங் களுடன் தேவிமாருடனும் மயில்மீது அமர்ந்து கிழக்கு நோக்கி விளங்குகின்றார். மயிலின் முகம் இடப்புறம் உள்ளது. அமைப்புச் சிறப்புடையது.

உற்சவரும் மூலவர் போன்றே உருவ அமைப்புடையவர். பிட்சாடனர், தட்சிணாமூர்த்தி, அண்ணாமலையார், பிரம்மா, துர்க்கை, சண்டிகேசர் திருவுருவங்கள் உள்ளன. சிவதுர்க்கை மிகச் சிறப்பானது.

இங்கே காரணாகம முறையில் இரண்டுகால வழிபாடு நாடோறும் நிகழ்கின்றது.

பங்குனி உத்திரப் பெருவிழாச் சிறப்புடையது.

இராமபிரான் தனது தண்டத்தால் ஊன்றிய தீர்த்தம் (கிணறு) இங்கு புண்ணியப் புனல் ஆகும், அது தண்ட தீர்த்தம் என்றழைக்கப் படுகிறது. பம்பை ஆறு, ஆம்பலம், பூம்பொய்கை முதலிய புண்ணியப் புனல்களும் உள்ளன.

அருணகிரிநாதர் இத்தலத்திற்கு நான்கு திருப்புகழ்ப் பாக்களை அருளியுள்ளார். ''அடல் வடிவேல்'', ''கண்கயற்பிணை'' ''கருமுகில்'', ''காலமுகி'' என்று அவை தொடங்குகின்றன.

இரட்டையர் பாடிய திருஆமாத்தூர் கலம்பகம் சுவையானது.

பல்லவர் காலக் கோயில் அற்புதமான கல்வெட்டுக்கள் உள்ளன. தேவாரம் பாடுவதற்கு கண்பார்வை இழந்த ஓதுவார்களை நியமித்து அவர்கட்கு உதவும் ஆட்களையும் நியமித்து—அனைவருக்கும் மானியம் வழங்கிய அருமையான கல்வெட்டுச் செய்தியை இத்தலம் ஒன்றில்தான் காணலாம்.

மாடக்கோயில் அமைப்புடைய இத்தலம் அறநிலைய ஆட்சித் துறையால் நிர்வாகம் செய்யப்படுகிறது.

சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த வண்ணச்சரபம் ஸ்ரீ தண்டபாணி சுவாமிகள் சமாதியடைந்த தலம். அவரது திருமடாலயம் சிறப்பாக உள்ளது. அவரது நூல்கள் செந்தமிழ்த் தேனமுது ஆகும். இன்னும் பல அச்சேறாமலேயே உள்ளது வருந்தற்குரியது.

# கோவை மாநகர் மேவிய வீரன்

கோவல் வீரட்டம், திருக்கை வேலூர் என்றெல்லாம் அழைக்கப்படும் இத்தலம் திருக்கோயிலூர் எனத் தற்காலத்தில் அழைக்கப்படுகிறது. சிவபெருமானது அட்ட வீரட்டத் தலங்களுள் ஒன்று. அந்தகாசுரனை அடர்த்தருளிய தலம். தென்னாற்காடு மாவட்டம் கீழையூர் கிராமத்தில் தென்பெண்ணை யாற்றங்கரையில் இத்தலம் உள்ளது. விழுப்புரம்-காட்பாடி இரயில் வழியில் திருக்கோவலூர் ஸ்டேஷன் உள்ளது. பெண்ணை யாற்றின் வடகரையிலுள்ள அறையணி நல்லூரிலும் இரயில் நிலையம் உள்ளது; அங்கிருந்தும் வரலாம். கடலூர், விருத்தாசலம் கள்ளக்குறிச்சி, திருவண்ணாமலை, விழுப்புரம் முதலிய ஊர்களி லிருந்து பஸ்கள் உண்டு.

மெய்ப்பொருள் நாயனார் வாழ்ந்த திருத்தலம். திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் பரவிய தலம்.

இங்கு சிவபெருமான்: வீரட்டேசுவரர். இறைவி: பிரஹந்நாயகி. (சிவானந்தவல்லி) சிவன் மேற்குப் பார்த்த சந்நிதி.

கோயிலின் உட்பிராகாரத்தில் ஆறுமுகஸ்வாமி மூலவர், பன்னிரு கரங்களுடன் தேவிமார் இருவருடன் மயில் மீதமர்ந்து கிழக்கு நோக்கி விளங்குகின்றார்.

உற்சவர் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு நின்ற கோலம்.

காமிகாகம முறைப்படி இருகால வழிபாடு தினமும் நிகழ்கின்றது.

மாத சஷ்டி, கிருத்திகை சிறப்பு நாட்கள். கந்தசஷ்டி, கார்த்திகை விழா, மகாமக விழாக்கள் கொண்டாடப் படுகின்றன.

தென் பெண்ணையாறு (பினுகி) தெட்சிண கங்கை புண்ணியப் புனல்களாகும். தலவிருட்சம் : சரக்கொன்றை.

ஔவையார் இத்தல விநாயகரை வழிபட்டுத்தான் விநாயகர் அகவல் பாடினர் என்பர். அருணகிரிநாத சுவாமிகள் "பாவநாரிகள்" என்ற திருப்புகழால் இத்தல முருகனைப் பாடிப் பரவியுள்ளார்.

மிகத் தொன்மையான இக்கோயிலில் பல மன்னவர்களது கல்வெட்டுக்கள் உள்ளன.

அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது.

திருக்கோவிலூர் உலகளந்த பெருமாள் கோயில் சிறப் புடையது. புகழ்பெற்ற வைணவத்தலம் இது.

உணவு விடுதிகள் உள்ளன.

*கோவ தாமறை யோர்மறை யோது மோதம் விழாவொலி*
*கோடி யாகம மாவொலி மிகவீறும்*
*கோவை மாநகர் மேவியவீர, வேலயிலாயுத*
*கோதை யானையி னேடமர் பெருமாளே!*

# பாக்கத்தில் மேவும் பெருமான்

*பார்க்கொற்ற நீறுபுனை வார்க்கொக்க ஞானபர*
*ஞெய்ப்பந்தி கூர்மொழிகள் பகர்வாழ்வே*
*பாக்கொத்தி ஞூலியலர் நோக்கைக்கு வேல்கொடுயர்*
*பாக்கத்தில் மேவவல பெருமாளே.*

**(காக்கொத்த...திருப்புகழ்)**

திருவண்ணுமலை-கள்ளக்குறிச்சி பஸ் வழியில் கடுவனூரில் இறங்கிச் சுமார் 4 கி. மீ. கிழக்கே சென்ருல் பாக்கம் என்னும் தலத்தை அடைகின்ளும். இததலத்தில் ஸ்ரீசுகந்தகுந்தளாம்பிகை சமேத ஸ்ரீ சோளீஸ்வரர் கோயில் அமைந்துள்ளது. இதன் இடப் புறம் பாறையில் முருகன் கோயில் உள்ளது. 15 படிகள் ஏறி கோயிலுள் செல்கிருேம்.

இங்கே ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு மயில் மீதமர்ந்த கோலத்துடன் முருகவேள் விளங்குகின்ருர். காரணுகம முறையில் தினமும் ஒருகால பூசை நிகழ்கின்றது பங்குனி பூரத்தில் அலகு போடுதல், செக்கிழுத்தல், மிளகாய் இடித்தல், மஞ்சள் இடித்தல், பூந்தேர் அலகு கொத்தி இழுத்தல், முதலிய பிரார்த்தனைகள் நிறைவேற்றப்படுகின்றன. ஆடிக கிருத்திகை, தைப்பூசம், பங்குனி பூரம் சிறப்பு நாட்களாகும் பாலமுருகனுதலின் தேவியர் இல்லை.

இக்கோயிலில் விநாயகர், ஆறுமுசசுவாமி, சோளீசுவரர் (சுயம்புலிங்கம்), சுகந்தகுந்தளாம்பிகை, மகிடாசுரமர்த்தினி

(எட்டுக்கரங்களுடன்) திருவுருவங்கள் தெய்வீகப் பொலிவுடன் விளங்குகின்றன.

இத்தலத்தில் ஆறுமுகசுவாமி கோயில் ஒன்று உள்ளது.

வழிபடுவோர்க்கு விடுதிகளில்லை; உணவு வசதிபெறலாம். இக்கோயில் திருப்பணிக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றது. முருகனடியார்கள் முன்வர வேண்டும்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது.

தணிகை மணியவர்கள் குறிப்பிடும் பாக்கம் செங்கல்பட்டு மாவட்டம் திருநின்றவூருக்கு அருகில் உள்ளது ஆனால் அங்குள்ள தழுவக்கொழுந்தீஸ்வரர் கோயில் சென்ற நூற்றாண்டில் கட்டப் பட்டதாகும்.

# திருநடனமிடும் திருவெண்ணெய்ப்பதி

*பித்தா பிறைசூடி பெருமானே அருளாளா*
*எத்தான் மறவாதே நினைக்கிறேன் மனத்துன்னை*
*வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய் நல்லூர்*
*அருட்டுறையுள்*
*அத்தா உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனலாமே!*

—சுந்தரர்.

தென் ஆற்காடு மாவட்டம்-திருக்கோவலூர் வட்டத்தில் திருவெண்ணெய்நல்லூர் என்ற திருத்தலம் உள்ளது. விழுப்புரத்திலிருந்து 8 கல் தொலைவிலுள்ள அரசூர் அடைந்து அங்கிருந்து மேற்கு நோக்கிப் பிரியும் சாலை வழி 1 கல் சென்றால் திருமுண்டீச்சுரம் என்ற தலத்தை அடையலாம் அங்கிருந்து 3 கல் மேற்கில் உள்ளது திருவெண்ணெய்நல்லூர். விழுப்புரம் விருத்தாசலம் இருப்புப்பாதையில் விழுப்புரத்திலிருந்து 8 கல் தொலைவில் திருவெண்ணெய்நல்லூர் ரோடு என்ற ரயில் நிலையத்தில் இறங்கி 3½ கல் சென்றால் இத்தலத்தை அடையலாம். கடலூர், விழுப்புரம், திருக்கோவலூரிலிருந்து பஸ்வசதி உள்ளது.

இத்தலம் திருஅருட்டுறை என அழைக்கப்படும். சுந்தரமூர்த்தி நாயனார், புத்தூர் சடங்கவி சிவாச்சாரியார் மகளை மணக்க இருந்த போது இறைவன் கிழவேதியனாக வந்து தடுத்தாட்கொண்டு, திருவெண்ணெய்நல்லூர்ச் சபையில், தனக்குச் சுந்தரன் அடிமை என ஓலை காட்டி ஆட்கொண்டதலமாதலின் இறைவன் தடுத்தாட்கொண்ட தேவர், அருட்டுறைநாதர் என்று போற்றப்படுகிறார் கிருபாபுரீசுவரர் எனவும் வேணுபுரீசர் எனவும் அழைப்பர். இறைவி: வேற்கண்ணியம்மை; மங்களாம்பிகை.

இத்தலத்தில் தனிக்கோயில் கொண்டு விளங்கும் ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களுடன் இருதேவிமாருடன் மயில் மீதமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

காரணாகம முறையில் தினமும் 3 கால வழிபாடு நிகழ்கின்றது.

அம்பிகை வெண்ணெய்யால் கோட்டை அமைத்து அதன் நடுவே பஞ்சாக்கினி மத்தியில் தவம் புரிந்து இறைவனை அடைந்ததாக இத்தல புராணம் கூறுகின்றது (திருவருட்டுறை புராணம்)

புண்ணியப்புனல்: பெண்ணை நதி.

பங்குனி உத்திரம் பெருவிழா நிகழ்கின்றது.

திருநாவுக்கரசர் தேவாரம் உள்ளது. சுந்தரருக்குப் "பித்தா" என்று அடியெடுத்துக் கொடுத்துத் தேவாரம் பாடச் சொன்ன தலமிது. பல கல்வெட்டுக்கள் உள்ளன.

இத்தலத்து முருகனை அருணகிரிநாத சுவாமிகள் "பல பல தத்துவம்" எனத் தொடங்கும் திருப்புகழால் பரவினார்.

*"மகிழ்பெணை யிற்கரை பொழில்முகில் சுற்றிய*
*திருவெணெய் நற்பதி புகழ்பெற அற்புத*
*மயிலின் மிசைக்கொடு திருநடமிட்டுறை பெருமாளே"*

என்ற இறுதி அடியைக்கொண்டு இங்கே முருகப்பெருமான் அருணகிரிநாதருக்கு நடனக்காட்சியருளினார் என்பது புலப்படும்.

இங்குள்ள கோயில் அறநிலைய ஆட்சிக்குட்பட்டது.

தங்கும் வசதியில்லை. உணவு விடுதிகள் உள்ளன.

இங்கே ஒரு திருமால் கோயிலும் உள்ளது.

இராமாயணம் பாடிய கம்பரை ஆதரித்த சடையப்ப வள்ளல் வாழ்ந்த பதி இதுவே என்பாரும் உளர்.

12-ஆம் நூற்றாண்டில் திருப்பெண்ணாடகத்தில் தோன்றிய சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமம் உடைய மெய்கண்டார் திருவெண்ணெய்நல்லூரில் தனது தாய் மாமன் வீட்டில் வளர்ந்த போது இரண்டாவது வயதில், வான்வழியே சென்ற பரஞ்சோதி மாமுனிவரால் சிவஞானோபதேசம் செய்யப் பெற்று மெய்கண்டார் என்ற தீட்சாநாமம் பெற்று அகச்சந்தான குரவருள் முதல்வராகிச்-சிவஞானபோதம் அருளலானார். அவர் காப்புக் கூறிய 'நல்லார் தொழும் பொல்லாப்பிள்ளையார்" –இத்திருவெண்ணெய் நல்லூர்ச் சிவாலயத்தில் விளங்கும் பொல்லாப் பிள்ளையாரேயாவார். மெய்கண்டார் கோயில், மேல வீதியில் உள்ளது. இது துறைசையாதீனக் கோயில்.

தோத்திரங்களுள் வழிகாட்டிய சுந்தரமூர்த்தி நாயனார் அருள்பெற்ற தலமும், சாத்திரங்களுள் தலையாய சிவஞான போதம் எழுந்த தலமும், காப்பியங்களுள் சிறந்த இராமாயணம் எழுதுதற்கு உதவிய தலமும் இதுவே என்பது எண்ணி இன்புறுதற்குரியதாகும்.

## சோதித் துறையூர் நத்திய பெருமாள்

தென்னாற்காடு மாவட்டத்தில்--விழுப்புரத்திற்கும் பண்ருட்டிக்கும் இடையில் உள்ளது இத்தலம். திருத்தலூர் என்றழைக்கப் படுகிறது. விழுப்புரத்திற்கு வடக்கில் 11 கி. மீ தொலைவில் உள்ளது. பண்ருட்டியிலிருந்து கருப்பூர் வழியே பஸ் வசதி உள்ளது. துறையூர் இரயில் நிலையத்திலிருந்து 2 கி. மீ தொலைவில் இத்தலத்தை அடையலாம்.

வீமன் பூசித்ததால் வீமேச்சரம் என்று இத்தலத்திற்கு ஓர் பெயர் உண்டு. இறைவன்: துறையூர் நாதர். மேற்குப் பார்த்த சந்நிதி. வாமதேவ முக தரிசனச் சிறப்புடையது. அம்பிகை: பூங்கோதை நாயகி.

இங்கு எழுந்தருளியுள்ள முருகப் பெருமான் இருதேவி யருடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் எழுந்தருளி யுள்ளார்.

தினமும் இருகால பூசை நிகழ்கின்றது.

சூரியன், வீமன் வழிபட்ட தலம். பெண்ணைநதி புண்ணியப் புனல் ஆகும்.

சுந்தர மூர்த்தி நாயனார் திருவெண்ணெய் நல்லூரில் இறைவனால் தடுத்தாட் கொள்ளப் பெற்றவுடன் இத்தலத்திற்கு வந்து இறைவனைப் பாடித் தவநெறி பெற்றார். "மலையார் அருவி" என்ற அவரது இத்தலப் பதிகம் உள்ளது.

அருணகிரிநாதர் "ஆரத்தன பாரத்துகில்" என்ற திருப் புகழால் இத்தல முருகனைப் பரவியுள்ளார்.

"தோகைச் செயலாள் பொற்பிரகாசக் குரமான் முத்தொடு
சோதித் துறையூர் நத்திய பெருமாளே"

என்று போற்றுகின்றார்.

பல மன்னர்களின் திருப்பணியும் கல்வெட்டுக்களும் கொண்ட இக்கோயில் 1969-ல் மீண்டும் திருப்பணி செய்யப் பெற்று நன்றாக உள்ளது. அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் உள்ளது.

சைவ சித்தாந்த நெறிகாட்டிய சந்தான குரவர்களுள் அருள்நந்தி சிவாச்சாரியார் அவதரித்த தலம் இது. இவர் சகலாகம பண்டிதர் எனப் போற்றப் படுபவர் திருப் பெண்ணாடகத்தில் அச்சுதகளப்பாளர் குடும்பத்திற்கு தீட்சாகுரு இவரே. அச்சுதகளப்பாளருக்குப் பிள்ளையில்லாக் குறைபோக்க இவர் தேவாரத்தில் கயிறு சார்த்திப் பார்த்து திருவெண் காட்டுப் பதிகம் வர-முக்குள நீர் மூழ்கி-திருவெண்காடர் கோயிலில் நோன்பியற்றுமாறு கூறினார். அங்ஙனமே செய்த அச்சுதகளப்பாளருக்கு ஓர் ஆண்மகவு தோன்றியது. அதுவே சுவேதனப் பெருமான் என்று பெயர் பூண்டு பின்பு மெய்கண்ட சிவமாகத் திகழ்ந்த ஞானத் தபோதனர் ஆகும். மெய்கண்டார் இரண்டு வயதில் சிவஞான போதத்தை அருளினார். சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கினுள் தலையாயது இது. மெய்கண்டாருக்கும் சீடானார் சகலாகம பண்டிதர். சிவஞான போதத்துக்கு வழிநூலாகிய சிவஞான சித்தியாரை இயற்றினார். சித்தாந்த சாத்திரங்களுள் விரிவானது சிவஞான சித்தியார் என்பது வெள்ளிடைமலை.

இத்தலம் பல்லாற்றானும் இவ்வாறு சிறப்புடையது. வழிபடுவோர் விடுதி-உணவு விடுதிகள் இல்லை. விழுப்புரத்தி லிருந்து வந்து வழிபட்டுச் செல்லலாம்.

# திருநாவலூர் மேவிய நாவலன்

*"ஆவி தளர்வுற்று வாடுமெனை நித்தம்*
*ஆசை கொடணைக்க வரவேணும்*
*........................................................*
*சீதவயல் சுற்று நாவல் தனிலுற்ற*
*தேவர் சிறைமீட்ட பெருமாளே!"*

தென்னாற்காடு மாவட்டத்தில்-திருக்கோயிலூர் வட்டத்தில் பண்ருட்டிப் புகைவண்டி நிலையத்திலிருந்து தென்மேற்கே 10 கல் தொலைவிலுள்ளது இத்தலம். கடலூர்-உளுந்தூர்ப் பேட்டை பஸ் இத்தலம் வழியேதான் செல்கின்றது. சுக்கிரன் பூசித்த தலம். தற்போது திருநாம நல்லூர் என்றழைக்கப் படுகின்றது. கடலூருக்கு மேற்கே 42 கி. மீ தொலைவிலுள்ளது.

நாவலேசுவரர், பக்தஜனேசுவரர், ஜம்புநாதர் என்றெல்லாம் இத்தலத்தில் சிவபெருமான் அழைக்கப் படுகிறார். இறைவி : சுந்தரநாயகி, மனோன்மணியம்மை.

நாவல் மரம் தலவிருட்சமாதலின் திருநாவலூர் என்ற பெயர் வந்தது.

வெண்ணெய் நதிக்கரையில் பசுபதி என்பாரது கட்டளையின்படி திருநாவலூர் சுலியாண சிவாச்சாரியார் மகன் சிவப்பிரியன் பசுநிரை மேய்த்து வந்தான். அதில் கிடைக்கும் பாலை இறைவனுக்கு அபிடேகித்தும், வேதியர் குழந்தைகட்குப் பங்கிட்டுக் கொண்டும் பயன்படுத்தி வந்தான். ஒருநாள் அவா மேலோங்கிட பெரும் பகுதிப் பாலையும் சிவபெருமானுக்கே அபிடேகித்து விட்டான். அதுகண்ட அவன் தந்தை வெகுண்டு ஒரு கோலால் அடித்துப் பின் ஒரு ஆயுதம் கொண்டு வெட்ட ஓங்கியபோது சிவபெருமான் ஒருவேடன் உருக்கொண்டு தடுத்துச்

சிவப்பிரியனுக்கு அருள் செய்து சண்டேசப் பதவி தந்தருளினார். சிவபூசையை வெறுப்பவரைத் தண்டிக்கும் நியமம் பெற்றார் சிவப்பிரியன். இதனால் இத்தலம் சண்டேசபுரம் என்ற பெயர் பெறுவதாயிற்று

இங்குள்ள முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவிமாருடன் கிழக்கு நோக்கி நின்றருளுகின்றார்.

உற்சவமூர்த்தியும் மூலவர் போன்றே விளங்குகின்றார்.

காரணாகம முறையில் தினமும் இரண்டுகால வழிபாடு நிகழ்கின்றது.

இத்தலத்தில் சுந்தரர் பிறந்தார். ஆகவே இங்கே பரவையார், சங்கிலியாருடன் அவருக்குத் தனிச் சந்நிதி உள்ளது அவர் பிறந்த வீடும் கோயிலாக உள்ளது.

இங்கே திருமாலுக்கும் ஒரு கோயில் உள்ளது. அவருக்கு பக்தவத்ஸலப் பெருமாள் என்று பெயர்.

சுந்தரர் பிறந்த ஆவணி உத்திரமும். அவர் கயிலை சேர்ந்த ஆடிச் சுவாதியும் திருநாட்களாகக் கொண்டாடப் பெறுகின்றன.

திருமாலின் சக்கரத்தால் தோற்றுவிக்கப் பெற்ற சக்கரத் தீர்த்தம் கோமுக தீர்த்தம், சாம்புநதி தீர்த்தம், கெடிலநதி ஆகிய புனித தீர்த்தங்கள் உள்ளன.

அருணகிரிநாத சுவாமிகள் "கோலமறை" என்ற திருப் புகழால் இங்கு முருகனைப் பாடிப் பரவினார். சுந்தரரும் திரு வெண்ணெய் நல்லூர் திருநாவலூர் இரண்டையும் இணைத்துக் "கோவலன் நான்முகன்" என்னும் பதிகத்தால் பரவியுள்ளார்.

மிகவும் தொன்மையான கோயில் இது. திருப்பணி நடைபெற்று வருகிறது. முன்பு இக்கோயில் திருத்தொண்டீச்சரம் என வழங்கப் பெற்று வந்தது.

இவ்வூரில் அகஸ்தீஸ்வரர் கோயில் ஒன்று இருந்த செய்தி *(S. I. I Vol. VII. No 977)* கல்வெட்டினால் புலனாகின்றது.

அறநிலைய ஆட்சித் துறையினரால் கோயில் நிர்வாகிக்கப் படுகின்றது.

ஊருக்கருகே தனியார் கோயிலாக தண்டபாணித் திருக் கோயில் உள்ளது. இங்கே பங்குனி உத்திரத் திருவிழாச் சிறப்பாக நடைபெறுகிறது.

தங்கும் வசதிகள்-உணவு விடுதிகள் இல்லை.

# மாது புகழ் வளர்க்கும் திருவாமூர்

*சீதமதிய மெறிக்குந் தழலாலே*
*சீறிமதனன் வளைக்குஞ் சிலையாலே*
*ஓதமருவி யலைக்குங் கடலாலே*
*ஊழியிரவு தொலைக்கும் படியோதான்*
*மாதுபுகழை வளர்க்குந் திருவாமூர்*
*வாழு மயிலிலிருக்குங் குமரேசா*
*காதலடியர் கருத்தின் பெருவாழ்வே*
*காலன் முதுகை விரிக்கும் பெருமாளே!*

**(திருப்புகழ்)**

சைவ சமய குரவர்களுள் திருநாவுக்கரசரை (அப்பரை) அனைவரும் போற்றுவர். அவர் சமணமதத்திற்குச் சென்றும் சைவத்திற்குத் திரும்பும் பேறு பெற்றவர். அவரை நினைக்கும் போது அவரது பிறந்த ஊரான திருவாமூரை நினைக்கிறோம். திரு ஆம் ஊர் என்று சேக்கிழார் அதனை நயம்படக் காட்டுவார். பண்ருட்டியிலிருந்து சுமார் 10 கி. மீ. தொலைவிலுள்ள இத்தலத்தை அடைகிறார் அருணகிரிநாதர். அங்கே பசுபதீசுவரர் கோயிலில் உள்ள கந்த வேளைப்பார்க்கிறார். திருநாவுக்கரசரின் வாழ்வும் பணியும் அவர்தம் மனத்தில் வந்து அருளொடு மின்னுகின்றன. திருநாவுக்கரசர் சைவத்திற்கு மீண்டும் வரக்காரணமாயிருந்தவர் அவர் தமக்கையரான திலகவதியார் அல்லவா! அவர் தன் தம்பியார் ஊராக வேண்டும் என்னும் பெருங் கருணையுடன் உயிர் தாங்கித் திருவதிகைப் பெருமானுக்குத் தொண்டு செய்த தெய்வக் கற்புக்கரசியாரன்றோ. அவரால் திருவாமூரும் சிறப்புற்றது; திருநாவுக்கரசராகும் பெரும் பேறு பெற்றார் மருள் நீக்கியாரான தருமசேனர்; ஏன்-சைவமே திலகவதியாரால்

உயர்வடைந்தது என்பதில் ஐயமில்லை. இவ்வளவையும் கருதும் அருணகிரிநாதர் மாது புகழை வளர்க்கும் திருவாமூர் என்று முத்தாய்ப்பு வைக்கிறார்.

இங்கே முருகவேள் ஒரு முகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் இரு தேவியருடனும் மயிலுடனும் விளங்குகின்றார்.

தினமும் 2 கால வழிபாடுகள் நடைபெறுகின்றன. திருவாமூரை எண்ணும் போது திலகவதியார் பணி செய்து பரவிய திருவதிகையை (பண்ருட்டியிலிருந்து 1 கி. மீ.) யும் நாம் எண்ணிப் பரவவேண்டும். திருவதிகை அட்டவீரட்டத் தலங்களுள் திரிபுரசம்ஹாரஸ்தலம். இங்கே மூலலிங்கம் 16 அம்சங்களுடன் திகழ்வதைக் காணலாம்.

திருவாமூருக்கு அடியார்கள் சென்று விழாக்களை நடத்திச் சைவ நன்னெறி பரவ முன் வரவேண்டும்.

# திரிபுர மெரி செய்த திரு அதிகை

சிவத்தலங்களுள் அதிகம் உற்ற தலம் திருவதிகையாகும் தென்னாற்காடு மாவட்டத்தில் கடலூர்-பண்ணுருட்டி இரயில நிலையத்திலிருந்து தென்கிழக்கில் 1 கல் தொலைவிலுள்ளது.

அட்டவீரட்டத்தலங்களில் இது ஒன்று. முப்புராதிகளைச் சிவபெருமான் சிரித்து எரித்தருளிய தலம். திலகவதியம்மையார் வதிந்து திருப்பணி செய்த தலம். தருமசேனராக மாறிய மருள் நீக்கியாரை-மீண்டும் சைவம் சேருமாறு சிவபெருமானைத திலகவதியார் வழிபடச்சிவபெருமானும் சூலை நோய் தோறறு வித்துத தருமசேனரைத் திருநாவுக்கரசராக ஆட்கொண்டருளிய தலம இது. திருநாவுக்கரசர் மூலம் சைவமே மெய்ச்சமயம் என்றுணாந்த பல்லவ மன்னன் மகேந்திரவர்மன் சமணம் நீங்கிச் சைவனாகி, சமணப் பாழிகளை இடித்து, குணபரேச்சுரம் என்னும் கோயிலைக் கட்டினான். அதுவும இத்தலததருகிலேயே உள்ளது.

இறைவன்: வீரட்டநாதர். இறைவி: திரிபுரசுந்தரி.

நடுநாட்டுச் சிவதலங்களுள் ஏழாவது தலம் இது. திருமால், பிரமன், திரிபுர அசுரர் மூவர், கருடன், பாண்டவர், திருமூலா, திலகவதியார், மகேந்திரவர்மன், திருஞானசம்பந்தர், திருநாவுக கரசர், சுந்தரர் முதலியோர் வழிபட்டுப் பரவிய தலம். அருணகிரி நாதர் பரவிய தலம். உண்மை விளக்கம் என்னும் மெய்கண்ட சாத்திரம் அருளிய மனவாசகம் கடந்தார் அவதரித்த தலம்.

இங்கே வள்ளி தெய்வ யானையுடன் விளங்கும் ஆறுமுகப் பெருமான் சந்நிதி அருமையாக உள்ளது.

உற்சவரும் இரு தேவியாருடன் சண்முகப் பெருமானுக் அருட்காட்சி யருளுகின்றார்.

தினமும் நான்கு கால வழிபாடுகள் நிகழ்கின்றன.

சக்கர தீர்த்தம், சூல தீர்த்தம், கருட தீர்த்தம் (கெடிலநதி) முதலியன புண்ணியப் புனல்கள்.

தல விருட்சம்; கொன்றை.

இங்கு சித்திரை அப்பர் விழா, வைகாசி பிரம்மோற்சவம், ஆனி உத்திர விழா, ஆடிப்பூரம், விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, கந்த சஷ்டி விழா, கார்த்திகைச் சோமவார விழா, மார்கழித் திருவெம்பாவை விழா, திருவாதிரை விழா, மாசி சிவராத்திரி விழா, பங்குனி உத்திர விழா, முதலியன நிகழ்கின்றன.

அற நிலைய ஆட்சித் துறையின் கீழ் நிர்வகிக்கப்படும் கோயில் இது. பண்ணுருட்டியில் தங்கும் விடுதிகள் உணவு விடுதிகள் உள்ளன.

"பரவுவரிக் கயல்" "விடமும்" என்ற இரு ஒப்பற்ற திருப் புகழ்ப் பாக்கள் இத்தல முருகனைப் போற்றுவன.

*"அமர ராதிய ரிடர்பட அடர்தரு*
*கொடிய தானவர் திரிபுரமெரி செய்த*
*அதிகைமாநகர் மருவியசசிமகள் பெருமாளே."*

என்று நாமும் போற்றுவோம்

## அமலை தவஞ்செய் பாடலவள நகர்

கடலூர் *N. T.* என்று தற்காலத்தில் அழைக்கப்படும் இத் தலம் சென்னை–இராமேஸ்வரம் இரயில்வழியில் விழுப்புரத்திற்குத் தெற்கே 45 கி. மீ. தொலைவில் உள்ளது. சிதம்பரத்திலிருந்து வடக்கே 45 கி. மீ. இரயில்நிலையமும் பஸ்வசதிகளும் அதிகம் உள்ளன.

வடபுலியூர், கடைஞாழல், பாடலபுரம், சன்னிவனம், கன்னிகாப்பு, புலிசை என்றெல்லாம் போற்றப்பெறும் இத்தலம் வெண் பாதிரி விருட்சத்தைத் தலவிருட்சமாகக்கொண்டு, புலிக்கால் முனிவர் (வியாக்கிரபாதர்) பூசித்துப் புலிக்கால் பெற்றதால் திருப்பாதிரிப்புலியூர் என்ற பெயர் கொண்டது.

திருநாவுக்கரசர் சமணராயிருந்தபோது இது சமணர்களின் முக்கியக்கேந்திரமாகப் பாடலிபுரம் எனவிளங்கியது.

இங்கே சிவபெருமான் திருக்கோயில் தொன்மையானது திருப்பணிகள் பலகொண்டு நூதனமாயும் விளங்குகின்றது இறைவன்: பாடலேசுவரர், தோன்றுத்துணைநாதர். இறைவி: பெரியநாயகி.

திருநாவுக்கரசரைச் சமணர்கள் தூண்டுதலால் மன்னன் ஆணைப்படி கல்லிலேகட்டிக் கடலிலே பாய்ச்சவும், "கற்றுணைப் பூட்டியோர் கடலிற்பாய்ச்சினும் நற்றுணையாவது நமச்சிவாயவே" என்று பதிகம்பாடி–கல்லே தோணியாக இறைவன் அவரைக் "கரையேற விட்டகுப்பம்" இத்தலத்திற்குத் தெற்கே ஒருகல் தொலைவில் வண்டிப்பாளையம் என இப்போது வழங்கப் பெறுகிறது.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடிப்பரவிய தலம் இது. இரட்டையர் பாடலும் உள்ளது.

இங்கே ஆறுமுகப்பெருமான் பன்னிருகரங்களுடன் வடக்கு நோக்கிய ஞானமயில்மீது ஒருகாலை மடித்தமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். இருதேவியரும் நின்றதிருக்கோலத்தில் உடன் விளங்குகின்றனர்.

உற்சவமூர்த்திகள் இரண்டு உள்ளன. ஒருமுகமும் நான்கு கரங்களும்கொண்டு இருபுறமும் தேவிமாருடன் நின்றதிருக் கோலம் உடையன.

நாள்தோறும் ஐந்துகால வழிபாடு நிகழ்கின்றது.

இத்தலத்தில் இறைவி தவமியற்றி இறைவனை அடைந்தாளாதலின் இறைவன் கோயிலுக்கே தினமும் இறைவி பள்ளி அறையில் எழுந்தருளும் வழக்கம் தனிச்சிறப்பாகும்.

சந்நிதி வீதியில் தேர்நிலைக்கு எதிரில் திருஞானசம்பந்தர் கோயில் உள்ளது.

இங்குள்ள வலம்புரிவிநாயகர் இருகைகளிலும் பாதிரி மலர்க்கொத்துக்களே அமைந்துள்ளன. இறைவி தவமியற்ற கயிலையினின்றும் எழுந்தருளிய போது வேலுடன் வந்த சப்த கன்னியரே சப்த மாதர்களாக அமர்ந்தநிலையில் விளங்குகின்றனர்.

ஆவிமகத்தன்று மாணிக்கவாசகருக்காக உண்டாக்கிய சிவஹரதீர்த்தமும், வெள்ளமேற்பட்ட கெடிலநதியை வடபுறம் ஓடுமாறு சித்தராய்ச்சிவபெருமான் விளையாடிய சிறப்பும் இங்குள்ளன. சிவஹரதீர்த்தம் கோயிலின் வடபுறம் நன்கு நாற்புறமும் படிகள் சூழ உள்ளது. இத்தீர்த்தத்தை பிரம்மசீலன் என்பான் யமனிடம் எடுத்துச்சென்று நரகத்தில் உழன்ற ஐவர் மீது சிவநாமம் ஓதித் தெளிக்க அவர்கள் முத்தியடைந்தனர் என்று தலமான்மியம் கூறும்; பிரம்மதீர்த்தம் (கடல்), பெண்ணைநதி, கெடிலநதி, பாலோடை முதலியன இத்தலப் புண்ணியப்புனல்களாம். தலவிருட்சம்: பாதிரி.

வியாக்கிரபாதமுனிவரது குமாரர் உபமன்யு ஒருசமயம் அம்மையார் பூசனைபுரிந்த பீடத்தில் அவர் கால்பட, முடங்கு கால் முயலாகும்படிச் சாபம் பெற்று அவர் திரிந்தார். ஆதிராசன் என்ற மன்னன் இம்முயலின்மீது அம்பெய்த-அதற்குத் தப்பிஓடும போது இத்தல விருட்சமான பாதிரிமரத்தின்மீதுபடவும், சாபம் நீங்கிப்பழைய உருப்பெற்றார் என்று தலபுராணம் பேசுகின்றது.

வியாக்கிரபாதர் சிதம்பர தரிசனம் காண்பதற்கு முன்னரே ஏற்பட்டகோயில்இது. இது ஞாழற்கோயில் எனப்படும்.

வைகாசி பிரமோற்சவம் 10நாட்கள் கொண்டாடப்பெறு கின்றது. கார்த்திகைதோறும் சிறப்பு வழிபாடு உண்டு. ஆடி வெள்ளி, புரட்டாசிநவராத்திரி நாட்களில் அம்பிகைக்குச்சிறப்பு. கார்த்திகைப்பெருவிழாச் சிறப்புடையது. அமாவாசைதோறும் பைரவப் பெருமானுக்குச் சிறப்புப்பூசனை நிகழ்கின்றது,

துவஜஸ்தம்ப மண்டபத்தில் எட்டுப்பெரிய தூண்களில் யாளி, குதிரை, யானை வீரரும், மற்றவற்றில் பல அற்புதச் சிற்பங்களும் எழில் வாய்ந்தவை. அம்பிகைகோயிலின் மண்டப மும் சிறப்புச் சிறப்புடையது.

இத்தகுதலத்தினை அருணகிரிநாதர் வழிபட்டுப், பாடலவன முருகனைப்போற்றி "நிணமொடுகுருதி" என்னும் திருப்புகழால் பரவினர். அதில்,

*"உணர்விலி செபமுதலொன்று தானிலி*
*நிறையிலி முறையிலி அன்புதானிலி*
*உயர்விலி எனினும் என்நெஞ்சுதான்*
*நினைவழியாமுன்*
*ஒருதிரு மரகத துங்க மாமிசை*
*அழுமுக மொளிவிடவந்து நான்மறை*
*உபநிடமதனை விளங்க நீ அருள் புரிவாயே"*

என்று தன்னிலேக்கிரங்கி வேண்டுவது உருக்கமான பகுதியாகும். திருநாவுக்கரசர் வரலாற்றை நினைவுபடுத்துவதுபோன்று "தோன்றுத்துணைவனைத் தொழுவோர் வினைக்கடலினின்று மீள்வர்" எனவரும் தேவார வரிகள் சிந்தித்தற்குரியன.

இத்தலத்திற்கருகே வேலுடையான்பட்டு (நெய்வேலி) வடலூர், மணவாளநல்லூர், கொளஞ்சியப்பர் கோயில் முதலிய தலங்கள் உள்ளன.

அறநிலைய ஆட்சித்துறையினரால் கோயில் நிர்வகிக்கப் படுகிறது.

வழிபடுவோர்க்குத் தங்கும் விடுதிகளும், உணவு விடுதி களும் உள்ளன.

# வானோர்கள் தொழும் மாணிக்குழி

தென்னாற்காடு மாவட்டம்-கடலூர் வட்டத்தில் உள்ள இத்தலம் வாமனனாய் மாவலிபால் மூவடி மண் கேட்ட திருமாலின் வரலாற்றை நினைவுபடுத்துவது. திருப்பாதிரிப்புலியூர் (கடலூர் N. T) இரயில் நிலையத்திலிருந்து மேற்கே 3 கி. மீ. சென்றால் திருவகீந்திரபுரம் என்னும் திருமால் தலத்தை அடையலாம். நிகமாந்த மகாதேசிகர் வரலாற்றுத் தொடர்புடையது இத்திருமால் தலம். திருவகீந்திரபுரத்திற்கு மேற்கே பாலூர் வழியே பண்ருட்டி செல்லும் சாலையில் 1 கி. மீ. சென்று கெடில நதியைக் கடந்தால் திருமாணிகுழியை அடையலாம். கடலூரி லிருந்தும் பண்ருட்டியிலிருந்தும் பஸ்வசதி உள்ளது.

மாணி – பிரம்மச்சாரி, பிரம்மச்சாரியான வாமனன் சிவபெருமானைப் பூசித்தத்தலம். வாமனபுரி என்ற மற்றொரு பெயரும்உண்டு. மாவலியை அழித்த பாவம்நீங்க வாமனன் சிவபெருமானை இங்குப் பூசித்தான் என்று தலமான்மியம் கூறும். திருஞானசம்பந்தர் தேவாரம்பெற்ற திருத்தலம் இது.

இங்கேசிவபெருமான்: மாணிக்கவரதர், திருமால் மாணிக்கத்தால் வழிபட்டதால் இப்பெயர் வந்தது. கௌடதேசத்துத் தனஞ்சயன் என்ற வணிகனுக்கு உதவியாக இருந்து கள்வரை அழித்ததால் உதவிநாயகர் என்ற பெயரும் உண்டு. அம்பிகை: மாணிக்கவல்லி, உதவிநாயகி,

கோயிலின் மேலைத்திருச்சுற்றில், முருகன் சந்நிதி உள்ளது. தலமுருகன் ஆறுமுகமும் பன்னிருகரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்து இருதேவியர் உடனிற்கக் கிழக்குநோக்கித்திருக்கோலம்; வடக்குநோக்கி மயில்உள்ளது, திருவாசி இல்லை. மிகப்பழையது; ஆனால் அழகான திருவுருவம்.

உற்சவர் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு இரு தேவியருடனும் நின்ற திருக்கோலம்.

தினமும் நான்குகால பூசை நிகழ்கின்றது. வாதுள ஆகம முறைப்படி வழிபாடு அமைந்துள்ளது.

கோயிலின் கிழக்கே செம்மண்குன்று சற்றேறக்குறைய 80அடி உயரமுடையது; இக்குன்றின் அடிவாரத்தில்தான் கோயில் உள்ளது. சருங்கற்கோயில் எனினும் நெடுங்காலமானதால் சிதிலமடைந்துள்ளது.

''தென்திசைக்கங்கை'' எனப்படும் கெடிலம் இங்கே ஓடுகின்றது. வெள்ளவாரிமலையில் 'சுவேதநதி' உற்பத்தியாகி, இத தலத்தருகே கெடிலநதியில் சேருகின்றது அமுததீர்த்தம் (குளம்) தற்போது வயலாகிவிட்டது. தலவிருட்சம்: கொன்றை.

கார்த்திகைமாத ரோகிணி நாளில் தீபஉற்சவம் நடைபெறுகின்றது. அதையொட்டி 10நாட்கள் பிரமோற்சவம் நடைபெறும். தை ஐந்தாம்நாள் பெண்ணையாற்றில் தீர்த்தவாரி நிகழும் மாசிமகத்துல கடலில் நீராடப் பெருமான் திருப்பாதிரிப் புலியூர் பாடலேசுவரருடன் ஆண்டுதோறும் இங்கிருந்து எழுந்தருளுவார்.

பல கல்வெட்டுக்களும் இங்கு உள்ளன. முன்னாளில் பூதங்கள் இங்கு பெருமானைப் பூசித்தமைக்குச்சான்றாகத் தென்சுவரில் பூதவடிவம் உளளது என்பர்.

வராஹ உருவில் திருமால் கீழ்நோக்கிச் செல்வதும், பூமியைப்பாயாகச்சுருட்டிச்சென்ற இரணியாட்சனுடன் திருமால போரிடுவதும், திரிவிக்கிரமனாக உலகு அளந்ததும், மாவலியிடம் நீர் ஏற்பதும், அவனைப்பாதத்தில் வைத்து அழுத்துவதுவும், திருமாணிகுழி இறைவனைப் பூசிப்பதும் ஆகிய பல சிற்பங்கள் சிறப்பாக உளளன.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளது இத்தலம்.

அருகில் வேலுடையான்பட்டி (நெய்வேலி டவுன் ஷிப்), மயிலம் ஆகியன முருகன் தலங்கள் ஆகும்.

இத்தல முருகப்பெருமானை 'மதிக்கிநேரெனும்' என்னும் திருப்புகழால் அருணகிரிநாதர் பரவிப் போற்றியுள்ளார்.

''குதித்து வானர மேலேறு தாறுகள்
குலைது நீள்கமு கூடாடி வாழைகொள்
குலைக்கு மேல்விழ வேரேறு போகமும் வஞ்சிதோயுங்

குளிர்த்தி ஓரிய தேனூறல் மாதுகள்
குடித்து லாவியெ சேலோடு மாணிகொள்
குழிக்குள் மேவிய வானோர்க ளேதொழு தம்பிரானே.''

# வேப்பஞ்சந்திக் கந்தக்குமரன்

நாட்டந்தங்கிக் கொங்கைக் குவடிற் படியாதே
நாட்டுந் தொண்டர்க் கணடக்கமலப் பதமீவாய்
வாட்டங் கண்டுற் றண்டத் தமரப் படைமீதே
மாற்றந் தந்துப் பந்திச் சமருக் கெதிராஞோ
கூட்டங் கந்திச் சிந்திச் சிதறப் பொருவோனே
கூறறன் பந்திச் சிந்தைக் குணமொத் தொளிர்வேலா
வேட்டந் தொந்தித் தந்திப் பரனுக் கிளையோனே
வேப்பஞ் சந்திக் கந்த குமரப் பெருமாளே.

**- திருப்புகழ்.**

தென் ஆற்காடு மாவட்டத்தில் விருத்தாசலம் வட்டத்தில் வேப்பூர் எனனும் தலமே வேப்பஞ்சந்தி என அருணகிரிநாதர் போற்றிய தலமாகும். சென்னை-திருச்சி நெடுஞ்சாலையில் உளுந்தூர்ப் பேட்டைக்குத் தெற்கில் 15 கல் தொலைவில் இத்தலம் உள்ளது. வேப்பூர் வழியே பஸ்கள் செல்கின்றன. திட்டகுடி ரயில்நிலயத்திலிருந்து 8 கி. மீ. தொலைவிலுள்ளது இது.

முன்பு இத்தலத்தில் ஞானஸ்கந்த மூர்த்தி மட்டுமே பிரதிட்டை செய்யப்பட்டிருந்தது பிற்காலத்தில் வள்ளி, தேவயானையம்மையரும் பிரதிட்டை செய்யப்பட்டனர். அருகில நல்லூரில் சண்முகா வடக்கு நோக்கி எழுந்தருளியிருக்கிறார். இங்கே சிவனை முருகன் பூசித்ததாக மரபுச செய்திகள் கூறுகின்றன. இறைவன்: வில்வவனேசர். இக்கோயிலில பிரமா, தட்சிணாமூர்த்தி, துர்க்கை, பைரவக்கோலங்கள் சிறப்பாக உள்ளன. இத்தலத்தில் வரதராசப்பெருமாள் கோயிலும் உள்ளது. எல்லாக் கோயில்களிலும் ஒருகால பூசையே நிகழ்ந்து வருகின்றது. இவை அறநிலய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளன.

# அத்திப்பட்டில் வில்லுடையான்

*அரிய மரகத மயிலி லூற்றுக் கத்துகட*
*லதுசுவற அசுரர்கிளை கெட்டுக் கட்டையற*
*அமரர்பதி யினியகுடி வைத்தற் குற்றழகு மிளையோனே*

*அருணமணி வெயில்பரவு பத்துத் திக்குமிகும்*
*அழகுபொதி மதர்மகுட தத்தித் தத்திவளர்*
*அணிய கயலுகளும் வயல்அத்திப் பட்டிலுறை*
*பெருமானே.*

(கருவேறிவகள...திருப்புகழ்)

தென் ஆற்காடு மாவட்டத்தில் வடலூர் இரயில் நிலையத்திற்கு வடக்கே நான்கு கல் தொலைவில் தற்போது நெய்வேலி புது நகர் விளங்குகின்றது. விருத்தாசலம், கடலூர், சிதம்பரம் முதலிய நகரங்களிலிருந்து நெய்வேலிக்குப் பஸ்வசதி உண்டு. கடலூர்-சேலம் இரயில் வழியில் நெய்வேலி ரயில் நிலையமும் உள்ளது. நெய்வேலி பழுப்பு நிலக்கரிச் சுரங்கத்தை அடுத்து மின் உற்பத்தி நிலயத்தருகே வில்லுடையான்பட்டி என்று வழங்கப்பெறும் முருகன் திருக்கோயில் புதுப்பொலிவோடு விளங்குவதைக் காணலாம். இப்பகுதியின் பழைய ஆவணங்களிலிருந்து இது அத்திப்பட்டு என்ற பழைய கிராமத்தின் ஒரு பகுதி எனவும், அத்திக்கிறை சத்திச்சரவணன் வில்லுடன் திகழ்கின்ற காரணத்தால் வில்லுடையான் பட்டியாகியது எனவும் அறிந்து மகிழ்கின்றோம்.

இக்கோயில் முருகனுக்கமைந்த தனிக்கோயிலாகும். ஒரு முகமும் இருகரங்களும் கொண்டு நின்ற கோலத்தில் இரு தேவியர் சூழக் கந்தவேள் விளங்குகின்றார். இது சுயம்புமூர்த்தி என்பர். வில்லும் அம்பும் ஏந்திய அற்புதக்கோலமாகும்.

உற்சவ மூர்த்தியும் மூலவர் போன்று திருக்கரங்களில் வில்லும் அம்பும் கொண்டு விரிந்த சடையுடன் வேடர் கோலத்தில் இருதேவியருடன் எழுந்தருளியுள்ளார்.

கோயிலில் விசுவநாதர், விசாலாட்சி, தண்டபாணி, அருணகிரிநாதர் சந்நிதிகளும் உள்ளன.

தினமும் நான்குகால வழிபாடுகள் நிகழ்கின்றன. பங்குனி உத்திரப்பெருவிழாவும், பாதக்குறடு காணிக்கை, காவடிகளும் சிறப்பானவை. கந்த சஷ்டி, தைப்பூசம் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றன.

சரவணதீர்த்தமும், வன்னி விருட்சமும் உள்ளன. வழிபடுவோர் தங்கவும் உணவு வசதிக்கும் விடுதிகள் நெய்வேலி யில் உள்ளன.

சுவாமி வளையாபதி சாந்த யோகி இத்தலத்தில் இறை யனுபவத்துடன் நூலொன்று எழுதியுள்ளார். இத்தலச் சிறப்புக் களை இனிது அதில் விளக்கியுள்ளார்.

நவீனத் தொழில் மயமாகி வரும் நெய்வேலிக்கு நாளும் அருள் வளங்கொழிக்கச் செய்யும் அத்திப்பட்டு வில்லுடைப் பெருமானை நன்கு வழிபட்டுக் கோயிலையும் நன்றாக நிர்வகித்து வரும் நெய்வேலி சுரங்க ஆட்சியாளர்களை நாம் பாராட்ட வேண்டும்.

விழித்தாமரை போலழகாகுற
மகட்கான வனுளன தாயுறை
விருத்தாசலம் வாழ்மயில் வாகன பெருமாளே.
(நடத்தாமரை.. திருப்புகழ்)

# முதுகிரி வலம்வரு முருகன்

திருமுதுகுன்றம், முதுகிரி, விருத்தகிரி என்றெல்லாம் போற்றப் பெறும் இத்தலம் காசியை விஞ்சிய தலமாகும். தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள இத்தலத்திற்கு சிதம்பரம் கடலூர், முதலிய ஊர்களிலிருந்து பஸ்வசதி உள்ளது. சென்னை திருச்சி கார்டு இருப்புப் பாதையில் முக்கிய நிலையமாகும் இது.

சிவன் முதன் முதலில் படைத்த மலை இதுவே என்பர், ஆகவே இதற்குப் பழமலை, முதுமலை, முதுகுன்று, முதுகிரி விருத்தாசலம் என்றெல்லாம் பெயர் வந்தது. விருத்தகாசி எனவும் இதனை அழைப்பர்.

இங்கே உயிர் விடுபவைகளை இறைவி தன் துணியால் விசி இளைப்பாற்ற, இறைவன் திருவைந்தெழுத்தோதி முத்தியிற் சேர்ப்பர் என்று தலமான்மியம் கூறுகின்றது.

மிகப் பெரிய சிவன் கோயில். இறைவன்: பழமலை நாதர் முதுகுன்றர். இறைவி: பெரிய நாயகி, விருத்தாம்பிகை. பாலாம்பிகை என்ற மற்றொரு சந்நிதியும் உள்ளது.

குமாரதேவர் என்ற ஞானிக்கு நாள்தோறும் உணவளித்த அம்பிகை ஒருநாள் காலம் தாழ்த்தி வந்தபோது அவர் 'முதுமையால் தாழ்த்தனையோ?' என்றாராம். அம்பிகை பாலாம்பிகையாக அருட்காட்சி நல்கினாள்.

இக்கோயிலின் மூன்றாவது பிராகாரத்தில் ஆறுமுகர் சந்நிதி கிழக்கு நோக்கி உள்ளது. பன்னிரு கரங்களுடன் இரு புறமும் தேவிமாருடன் மயில் மீதமர்ந்து விளங்குகின்றார்.

நான்காவது பிராகாரத்தில் இருபத்தெட்டு ஆகமங்களுடன் கூடிய குமரேசர் சந்நிதி உள்ளது. ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்ட குமரேசர் வள்ளி, தெய்வயானையுடன் கிழக்கு நோக்கியருளுகின்றார்.

காமிகாகம முறையில் தினமும் 3 கால பூசை நிகழ்கின்றது.

மணிமுத்தாறு கோயிலுக்கருகே ஓடுகின்றது. புண்ணிய மடு, அக்கினி தீர்த்தம், சக்கர தீர்த்தம், குபேர தீர்த்தம், நித்தியானந்த கூபம் முதலிய தீர்த்தங்கள் உள்ளன. தலவிருட்சம்: வன்னி.

வசந்தோற்சவம், ஆனித் திருமஞ்சனம், ஆவணி மூலம், நவராத்திரி, கந்த சஷ்டி, கார்த்திகை விழா, மாசிமகப் பெருவிழா முதலிய விழாக்கள் நிகழ்கின்றன. மாசிமக விழாவில் 11-ம் நாள் முருகனுக்குத் தெப்பத் திருவிழா நிகழும். ஆடிக் கிருத்திகை, தைக்கிருத்திகை நாட்களில் சந்தனக் காப்பு சிறப்பாக உள்ளது.

திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவரும் பாடிய தலம். சுந்தரர் இங்கே பொன் வேண்டிப் பெற்று மணிமுத்தாற்றில் இட்டு, திருஆரூர்க் கமலாலயத்தில் எடுத்தார். இங்கே மாற்றுரைத்த விநாயகர், ஆழத்துப் பிள்ளையார் என இரு சந்நிதிகள் உள்ளன.

சுக்கிரன், சித்திர சிகண்டி, கோசிகன், விதர்கண செட்டி, விபசித்து முனிவர், குருநமச்சிவாயர், முதலியோர் வழிபட்ட தலம். தலபுராணம் அச்சில் உள்ளது.

இத்தல முருகனை அருணகிரிநாத சுவாமிகள் மூன்று திருப்புகழ்ப் பாக்களால் பரவியுள்ளார். அவை "குடத்தாமரை", "திருமொழி", "பசையற்ற" எனத் தொடங்குவன.

கி. பி. 7-ம் நூற்றாண்டில் கட்டப் பெற்ற இக்கோயிலில் பல தொன்மையான கல்வெட்டுக்கள் உள்ளன.

அறநிலையஆட்சித்துறையினரால் இக்கோயில் நிர்வாகிக்கப் படுகிறது.

உணவு விடுதிகளும், தங்கும் விடுதிகளும் உள்ளன.

அருகில் கொளஞ்சியப்பர், வேடப்பர், வெண்மலையப்பர், கரும்பாயிரம் கொண்ட அப்பர் கோயில்கள் உள்ளன.

# ஏற்போர் வந்திறைஞ்சும் யாழ்ப்பாணாயன் பட்டினம்

*ஏத்தா நாளுந் தர்ப்பண செபமொடு*
*நீத்தார் ஞானம் பற்றிய குபேர*
*யாப்பாராயுஞ் சொற்றமிழ் அருள்தரு முருகோனே*

*ஏற்போர் தாம்வந் தீச்சையின் மகிழ்வொடு*
*வாய்ப்பாய் வீசும் பொற்புரசை நெடுமதிள்*
*யாழ்ப்பா ணாயன் பட்டின மருவிய பெருமாளே*

பாணர் குலத்தில் தோன்றிய திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் திருஞான சம்பந்தருடன் தலங்கள் தோறும் சென்று, தேவாரப் பதிகங்களை யாழில் இசைத்துப் பேறு பெற்றவர் அவர் அவதரித்த தலமான திருஎருக்கத்தம் புலியூர் தற்போது இராசேந்திரன் பட்டினம் என்று அழைக்கப்படுகிறது. இத் தலத்தையே அருணகிரிநாதர் மிகவும் சுவைபட 'யாழ்ப்பாணா யன் பட்டினம்'' என்று திருப்புகழில் வைத்துப் பாடியுள்ளார்.

தென்னாற்காடு மாவட்டம்-விருத்தாசலத்திற்குத் தெற்கே 7 கல் தொலைவிலுள்ளது இத்தலம். விருத்தாசலம், ஸ்ரீமுஷ்ணம் ஜெயங்கொண்டம், முதலிய ஊர்களிலிருந்து பஸ் வசதி உள்ளது. கோயிலுள் வெள்ளெருக்கஞ்செடி உள்ளதால் எருக்கத்தம் புலியூர் என்ற தலப்பெயர் வந்தது. உருத்திரசன்மர் இறைவனை இங்கு வழிபட்டுத் தன் ஊமைத் தன்மையை நீக்கிக் கொண்டார் என்று தலமான்மியம் கூறுகின்றது.

இங்கு சிவபெருமான் திருப்பெயர்: ஸ்வேதார்க்கவனே சுவரர்; நீலகண்டேசுவரர்; இறைவி; அபின்னகுசாம்பிகை, நீலமலர்க்கண்ணி.

இத்தலத்தில் விளங்கும் முருகன் ஒருமுகமும் நான்கு கரங் களும் கொண்டு இருதேவியர் சூழக் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் விளங்குகின்றார்.

தினமும் நான்குகால வழிபாடு காரணாகம முறையில் நிகழ்கின்றது.

பங்குனி உத்திரம் 10 நாள் விழா சிறப்பானது. விநாயகர் காசி விசுவநாதர், விசாலாட்சி, இலட்சுமி நாராயணர், தட்சிணா மூர்த்தி, சட்டநாதர், பிரம்மா, சண்டேசுவரர், அருணாசலேசுவரர், சூரியன், பைரவர், சனீஸ்வரர், நவக்கிரகம் நால்வர், திருநீலகண்ட யாழ்ப்பாணர், அவரது மனைவியார் மதங்க சூடாமணியார் திருவுருவங்கள் உள்ளன.

கந்த தீர்த்தம், செங்கழுநீர் தீர்த்தம், நீலதீர்த்தம் முதலிய புண்ணியப் புனல்கள் உள்ளன தலவிருட்சம்: வெள்ளெருக்கு.

திருஞான சம்பந்தர் தேவாரம் பெற்ற தலம். அருணகிரி நாதர் அருளிய "பூத்தார் சூடுங்......" என்னும் ஒரு திருப்புகழ் கிடைத்துள்ளது.

பாண்டியர் திருப்பணி கொண்ட தலம் இது.

அருகில் விருத்தாசலம், கொளஞ்சியப்பர் கோயில், சிறப் பானது. வழிபடுவோர் விடுதி, உணவு விடுதிகள் இல்லை.

## வயல்கள் மேவு நெல்வாயில்

*மறியு மாழ்கடலூடு போய்க் கரந்து*
*கவடு கோடியின் மேலுமாய்ப் பரந்து*
*வளரு மாவிரு கூறதாய்த் தடிந்த வடிவேலா*
*மருவு காளமு கீல்கள் கூட்டெழுந்து*
*மதியுலாவிய மாடமேற் படிந்த*
*வயல்கள் மேவு நெல்வாயில் வீற்றிருந்தபெருமாளே.*

சிதம்பரத்திற்குத் தென் கிழக்கில் 3 கல் தொலிலுள்ளது இத்தலம். இப்போது சிவபுரி என்று இது அழைக்கப்படுகிறது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்குத் தெற்கில் 2 கல் தொலை விலுள்ளது. சிதம்பரத்திலிருந்து டவுன் பஸ் உள்ளது.

நெல் வயல்களை ஊரின் வாயிலில் கொண்டு விளங்கும் மாட்சியால் இத்தலம் திருநெல்வாயில் எனப்படுகின்றது.

இங்குள்ள சிவபெருமான்: உச்சிநாதேசுவரர் இறைவி: கனகாம்பிகை. சிவலிங்கமூர்த்தியின் பின்னே சிவபெருமான் உமையுடன் காட்சி தருகிறார்.

திருவேட்களம் அருகிலுள்ள தலமாகும் (அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தருகிலுள்ளது.) இங்கு தங்கியிருந்த திருஞான சம்பந்தர் திருநெல்வாயில்பரமனைப் பாடிப்பரவினார். "திருஉச்சி" என்பது இக்கோயிலின் பெயர் என்று திருஞானசம்பந்தர் தேவாரத்தால் அறிகிறோம்.

இங்குள்ள முருகப்பெருமான் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்ட அருமையான திருக்கோலம் உடையவர் இரு தேவியர் சூழ விளங்குகின்றார்.

தினமும் இருகால வழிபாடுகள் நிகழ்கின்றன.

அருணகிரிநாதர் "அறிவிலாதவர் ஈனர்" என்று தொடங்கும் திருப்புகழால் இத்தல முருகனை வழிபட்டுப் பரவியுள்ளார்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது. கொள்ளிடக்கரையில் இருந்து வெள்ளத்தால் பாதிக்கப்பட்டிருந்த திருக்கழிப் பாலை என்னும் கோயிலின் மூர்த்தங்களை இத்தலத்தில் புதிதாகக் கோயில் கட்டி எழுந்தருளுவித்துள்ளார்கள். இறைவன்: பால்வண்ணநாதர். இறைவி: வேதநாயகி. மூவர் தேவாரமும் பெற்ற பெருமான் இவர்.

ஆகவே திருநெல்வாயில் திருக்கோயிலை வழிபடும் போது அதனருகிலேயே திருக்கழிப்பாலை இறைவனையும் வழிபட்டுய்யலாம்.

சிதம்பரத்திலேயே தங்கும் விடுதிகள், உணவு விடுதிகள் உள்ளன.

# திருக்கூடலை யாற்றூர்க் கோமான்

சிதம்பரத்திலிருந்து ஸ்ரீமுஷ்ணம் செல்லும் பஸ் வழியில் 18 கல் தொலைவிலுள்ளது இத்தலம். சிதம்பரம்-விருத்தாசலம் பஸ் வழியில் வளையமாதேவி என்னுமிடத்திற்குத் தெற்கே 2 கல் தொலைவிலும் இத்தலத்தை அடையலாம். இங்கு மணி முத்தாறும் நிவா நதியும் சேர்கிறது; அதனால் கூடலையாற்றூர் என்ற பெயர் வந்தது. வடமொழியில் தட்சிணப் பிரயாகை என்று இத்தலத்தை அழைப்பர்.

சுந்தரமூர்த்திநாயனார் திருமுதுகுன்றத்தை (விருத்தாசலம்) நோக்கிச் செல்லும் போது அந்தணவடிவில் இறைவன தோன்றி இத்தலத்திற்கு அழைத்துச் சென்று பாடவைத்த சிறப் புடையது. இறைவன் நெறிகாட்டு நாயனார் என்று பெயர் கொண்டார். பிரம்மாவுக்காக நர்த்தனம் செய்தருளியதால் நர்த்தன வல்லபேசுவரர் என்ற பெயரும் இறைவனுக்கு இங்கு வழங்கப்படுகிறது. இறைவி: புரிகுழலாம்பிகை.

இங்கு எழுந்தருளியுள்ள ஆறுமுகப்பெருமான் பன்னிரு கரங்களுடன் வள்ளி, தெய்வானை உடன் விளங்க மயில்மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

ஆகம முறைப்படி தினமும் இரண்டுகால பூசை நடை பெறுகிறது.

நிவா நதி, மணி முத்தாறு-புண்ணியப் புனல்கள். தல விருட்சம்: கல்லால மரம்.

அகத்தியர், காத்தியாயனர் வழிபட்டதலம்.

அருணகிரிநாத சுவாமிகள் இத்தல ஆறுமுகனை வழிபட்டு "வாட்டி எனை" என்ற அற்புதமான திருப்புகழால் பரவியுள்ளார். இத்தலப் பெயர்க் காரணத்தை அதில் அழகாகக் காட்டுகின்றார்

கூட்டுநதித் தேங்கிய வெள்ளாறு தரளாறு திகழ்
நாட்டிலுறைச் சேந்த மயிலாவளி தெய்வயானை யொட
கூற்றுவிழத் தாண்டியெனதாக மதில் வாழ்குமர
தம்பிரானே

இத்தலத்தில் மாசிமக விழாச்சிறப்புடையது. மாதக் கார்த்திகை நாட்களும் கந்தசஷ்டி விழாவும் கொண்டாடப் பெறுகின்றன. விபூதி அலங்காரமும் சந்தனக்காப்பும் சிறப்பாக இருக்கும்.

இக்கோயில் மிகப்பழையதாயிருந்து-ஆற்று வெள்ளத்தால் சிதலமடைந்துவிடவே நூறாண்டுகட்கு முன்பு இப்போதுள்ள இடத்தில் தேவகோட்டை இரட்டை அரு. குடும்பத்தினர் திருப் பணியில் கோயில் அமையலாயிற்று. சிற்பங்கள் அற்புதமாக அமைந்துள்ளன.

தனியார் நிர்வாகத்தில் இவ்வாலயம் உள்ளது. கலியாண மண்டபமும் தங்க வசதியும் உள்ளன. அருகில் ஸ்ரீமுஷ்ணம் தரிசித்தற்குரியது.

இத்தலபுராணம் வடமொழியில் உள்ளது. ஆதிசைவருக்கு அம்பிகைக் கனவில் வெள்ளம் வருவதை உணர்த்திய அற்புதம் நிகழ்ந்த தலம்.

# திருமுட்டப்பதி திருமால் மருகன்

தென்ஆற்காடு மாவட்டம் – சிதம்பரம் வட்டத்தில் ஸ்ரீமுஷ்ணம் என்னும் இத்தலம் உள்ளது. சிதம்பரத்திற்கு மேற்கில் 35 கி. மீ. தொலைவிலுள்ள இத்தலத்தினை, விருத்தாசலத்திலிருந்தும் (13 கி. மீ.) அடையலாம். பஸ்வசதி உள்ளது. நல்ல சாலைகள் உள்ளன. இத்தலத்தில் புகழ்பெற்ற பூவராகசுவாமி (திருமால்)கோயில் உள்ளது. இத்திருமால்பதி, உடையார்பாளையம் ஜமீன்தார்களின் ஆதரவில் தழைத்திருந்தது ஜில்லிகை என்னும் சூரனை இவ்வூர்ப் பெருமாள் அழித்ததால இத்தலத்திற்கு ஜில்லிகாவனம் என்ற பெயரும் உண்டு

இங்கு மிகத்தொன்மைமான சிவன்கோயில் உள்ளது. சுவாமி: நித்யீசுவரர்; இறைவி: பெரியநாயகி.

இங்கே முருகன் சந்நிதி அமைந்துள்ளது. ஆறுமுகமும் பன்னிருகரங்களும் கொண்டு மயில் மீதமர்ந்து கிழக்குநோக்கி விளங்குகிறார். அருகே தேவிமார்கள் உள்ளனர்.

உற்சவமூர்த்தி-மயில்மீது சாய்ந்த நிலையில் ஒருகால் காலணியுடனும் ஒருகால் தாழ்ந்தும் உள்ளது.

ஹரிபுஜேசுவரர் சந்நிதியும் உள்ளது.

இங்கு காமிகாகம முறையில் நாடோறும் 3கால பூசை நிகழ்கின்றது.

ஆடிக்கிருத்திகை, தைக்கிருத்திகை, பங்குனிஉத்திர விழாக்கள் நடைபெறுகின்றன. விபூதி அலங்காரம் இங்கு சிறப்பு.

12ம் நூற்றாண்டில் இரண்டாம் குலோத்துங்கன் கட்டிய இக்கோயில் பலகல்வெட்டுக்களைக் கொண்டிருப்பதோடு, சிற்பச் சிறப்புக்களும் மிக்குள்ளது சிவபெருமான் விமானம் முழுதும் ஒரே கருங்கல்லால் ஆனது என்பது குறிப்பிடத்தக்கது. அம்பிகை விஷ்ணு அம்சமாக விளங்குகிறாள். இத்தலத்தொன்மைச் சிறப்பினைக் கண்டு மத்திய தொல்பொருள் பாதுகாப்புத்துறை இக்கோயிலைப் பாதுகாக்கின்றது.

அறநிலைய ஆட்சித்துறையினரால் நிர்வகிக்கப்படுகிறது.

அருகே கொளஞ்சியப்பர் கோயில், மணவாளநல்லூர் திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) போன்ற தலஙகள் உள்ளன.

அருணகிரிநாதர் இத்தலத்து முருகனை இருதிருப்புகழ்ப் பாக்களால் பரவியுள்ளார். ''கழை முத்துமாலை', ''சரம் வெற்றி'', என்ற தொடக்கமுடைய அப்பாக்கள் அற்புதமானவை.

இங்கு தங்கும் விடுதிகள் இல்லை. சில உணவு விடுதிகள் உள்ளன.

*கழைமுத்து மாலை புயல் முத்து மாலை*
*கரிமுத்து மாலை* — *மலைமேவுங்*
*கடிமுத்து மாலை வளைமுத்து மாலை*
*கடல் முத்து மாலை* — *அரவினும்;*

*அழல் முத்து மாலை இவைமுற்றும் மார்பின்*
*அடைவொத்து லாவ* — *அடியேன்முன்-*
*அடர்பச்சை மாவின் அருளிற்பெ ணோடும்*
*அடிமைக்கு ழாமொ* — *டருள்வாயே;*

*மழை ஒத்த சோதி குயில் தத்தை போலும்*
*மழலைச் சொல் ஆயி* — *எமைஈனும்;*
*மதமத்த நீல களநித்த நாதர்*
*மகிழ் சத்தி ஈனும்* — *முருகோனே;*

*செழுமுத்து மார்பின் அமுதத் தெய்வானை*
*திருமுத்தி மாதின்* — *மணவாளா-*
*சிறையிட்ட சூரர் தலைவெட்டி ஞான*
*திருமுட்ட மேவு* — *பெருமாளே.*



திருவாமாத்தூர்

வாச முறுமலர் விசிரிய பரிமள
மாதை நகர்தனில் உறையும் ஓர் அறுமுக
வானில் அடியவர் இடர்கெட அருளிய பெருமாளே.



**திருவேட்களம்**
வேத்தம தாமறை யார்த்திடு சீர்திரு
வேட்கள மேவிய பெருமாள்



**விருத்தாசலம்**

விழித்தாமரை போலழ காகுற
மகட்கானவ ளைன தாயுறை
விருத்தாசலம் வாழ்மயில் வாகன பெருமாளே.



**அடியார்க்கருள யானைமேல் வருதல்**

...... ......... ......... உன்றனது
சிந்தை சந்தோஷித் தாளு கொண்டருள
வந்து சிந்துரத்தேறி அண்டரொடு தொண்டர்சூழ
......... ......... ......... ......... .........
... ... ...... ......... ......... —...
என்றன் முந்துறத் தோணியுன்றனது சிந்தைதாராய்.
(வந்து வந்து ....)

(சிதம்பரம் சபாநாயகர் கோயில் கிழக்கு கோபுர வாயில்)

தூரணங் கோடாழி போய்கிடந் தேவாட
சூரியன் தேரோட அயிலேவி
தூதறுங் காவேரி சேருமொண் சீரூர
சூழ்கடம பூர்தேவர் பெருமானே.

# கடம்பூர் கந்தன்

தென்னாற்காடு மாவட்டத்தில் சிதம்பரத்திற்குத் தென் மேற்கிலுள்ள ஓமாம்புலியூருக்கு வடமேற்கில் 4 கல் தொலைவில் அமைந்துள்ளது இத்தலம். காட்டுமன்னார்குடியிலிருந்து எய்யலூர் செல்லும் பஸ்ஸில் இத்தலத்தை அடையலாம்.

திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் பதிகம் பாடிப் பரவிய கோயில் இது. ஆலயத்திற்குக் கரக்கோயில் என்று பெயர்.

இங்குள்ள சிவபெருமான்: அமிர்தகடேசுவரர். இறைவி: சோதி மின்னம்மை.

இந்திரன் இங்கு வழிபட்டு அமிர்த கலசம் பெற்றான்; முருகப் பெருமான் இங்கே வழிபட்டுச் சூரபன்மனை அழித்தற்கு வில் அருளப் பெற்றார்; அங்காரகன் (செவ்வாய்) இங்கே வழிபட்டுய்ந்தான்.

தலவிருட்சம்: கடம்புமரம்.

இவ்வூரில் கீழைக் கடம்பூர், மேலைக் கடம்பூர் என இரு பிரிவுகள் உள்ளன. தேவாரப் பாடல் பெற்ற திருக்கோயில் மேலைக்கடம்பூரில் உள்ளது. இத்தலத்தின் அற்புதத் தேவாரப் பாடல்

நம் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்கடன் அடியேனையும் தாங்குதல்
என்கடன் பணிசெய்து கிடப்பதே.

என்ற அப்பர் அருள்வாக்கு எல்லோருடைய நாவிலும் பயிலப் படுவதொன்று.

தலமான்மியப்படி, இந்திரன் இக்கோயிலைத் தன் உலகிற்கு கொண்டு சென்று, முதியவளான தன் தாய் தினமும் இம் மண்ணுலகிற்கு வந்து இத்தலத்தை வழிபடுவதை எளிமையாக்கிட நினைத்தான். தன் கரங்களால் அகழ்ந்து இக்கோயிலைச் சக்கரங் கள் அமைத்துக் குதிரைகள் பிணைத்து இழுத்தான், தனது முயற்சியின் அவசரத்தில் விநாயகரை வழிபட மறந்தான். விநாயகர் தன் வலக்கால் பெருவிரலால் தேரை அழுத்தினார், தேர்சிறிது சாய்ந்துநின்று விட்டது. இந்திரன் தன் பிழைக்கு வருந்தி வணங்கித் தன் முயற்சியைக் கைவிட்டு, இறைவன் ஆணைப்படி கோடிலிங்கம பிரதிட்டை செய்து உய்வுற்றான். இங்குள்ள விநாயகர் வலக்காலை ஊன்றிய நிலையில் விளங்கு கிறார்.

கீழைக்கடம்பூர் கோயில் ருத்திரனால் பிரதிட்டை செய்யப் பட்டதாகும். இறைவன் பெயர் ருதரகோடீசுவரர்.

இத்தலத்து ஆறுமுகப்பெருமான் பன்னிருகரங்களுடன் அற்புதக் கோலத்தோடு விளங்குகின்றார.

புண்ணியப்புனல்: சக்திதீர்த்தம். கோயிலுக்கு மேற்கே ½கி.மீ. தூரத்தில் உள்ளது. பாண்டிய மன்னன ஒருவன் தன் தநதையின் அஸ்தியைக்காசியில் கலரக்க எடுத்துசசென்றான், வழியில் இத்தலம அடைந்து, இத்தீர்த்தக்கரையில் வைதது வழிபாடு செய்தான். இததீர்ததம்பட்டதால் அஸ்தி மலராயிறறு. இங்கேயே கரைத்துவிட்டுபபணிந்தான. இன்றும் இப்பகுதியி லுள்ள மக்கள் இககுளததிலேயே அஸ்தியைக் கரைக்கின்றார்கள்.

இங்கு நாள்தோறும் ஆகமமுறைப்படி பூசை நிகழ் கின்றது.

திருக்கூடலையாற்றூர் திருப்பணி செய்த இரட்டை அரு. செட்டியார் இக்கோயில் திருப்பணியையும் செய்த வரலாறு சுவையானது. காட்டுமன்னார்குடி சரவணப்பிள்ளை என்பவர் தேவகோட்டை சென்று திரு.செட்டியாரவர்களிடம் கடம்பூர் திருப்பணி செய்துதரவேண்டுமென்றுகேட்டார். செட்டியாரவர் களும பார்க்கலாம் என்றுகூறி அனுப்பிவிட்டார்.

சிலமாதங்கள் கழித்து, திருக்கூடலையாற்றூர் திருப்பணி தொடங்கவேண்டி மாட்டுவண்டி கட்டிககொண்டு செட்டியார் புறப்பட்டு வந்தார். இரவில் செட்டியார் கனவில் கடம்பூர்

இறைவன் தமது கோயிற்பணியைச் செய்யுமாறு ஆணையிட்டு மறைந்தார். வண்டியை ஓட்டியவர் உறங்கியதால் வண்டி கூடலையாற்றூர் செல்லும் வழியை விட்டகன்று கடம்பூர் சென்று கொண்டிருந்தது. பொழுது விடியும்போது, கனவிலிருந்து விழிப்புற்ற செட்டியார் தாம் கடம்பூர் அருகே வந்து கொண்டிருப்பதையும், கடம்பூர் பெருமான் தம்மைத்தடுத்தாட்கொண்டதையும் எண்ணி வியந்துபோற்றி, இக்கோயிலையும் திருப்பணி செய்வித்தார். இது சுமார் 90 ஆண்டுகட்கு முன் நிகழ்ந்தது.

இன்றும் அம்மரபினரே இக்கோயிலைப் பேணிக்காத்து வருகின்றனர். கோயில் திருப்பணி நடந்து வருகிறது.

கடம்பூர் திருக்கோயில் ஒருக்கலைக்கருவூலமாகும். இங்குள்ள சிற்பங்கள் அருமையானவை; அற்புதமானவை. கருவறையின் மூன்றுப்புறச்சுவர்களில் அமைந்திருந்த சிலைகள் தற்போது காணப்படாவிடினும் அவற்றின் பெயர்கள் மட்டும் காணப்படுகின்றன. இதனால் அக்காலத்தில் இக்கோயிலின் சிற்பச்சிறப்பு எப்படியிருந்திருக்கும் என்பது ஒருவாறு புலப்படும்.

இத்தலத்தில் தங்கும் விடுதி-உணவு விடுதிகள் இல்லை.

இத்தலத்து முருகனை அருணகிரிநாதர் "வாருமிங்கே" என்றழைக்கும் திருப்புகழால் பரவினார்.

"உடம்பூர் பாவத்தை ஒழித்தருளும் மேன்மைக்
கடம்பூர்வாழ் எண்ணிரண்டு கண்ணே"

என்று வள்ளலார் போற்றியதலம்இது.

# சிவிகையருள் திருவரத்துறை

தென்னாற்காடு மாவட்டம்-விருத்தாசலம் வட்டத்தில் பெண்ணாகடம் இரயில் நிலையத்திற்குத் தெற்கே 3 கல் தொலைவிலுள்ள இத்தலம் திருவட்டத்துறை, திருவரவத்துறை, நிவாநதிபுரம் என்றெல்லாம் அழைக்கப்படுவது. நிவா (வெள்ளாறு) நதியின் வடகரையில் இத்தலம் உள்ளது. திட்டக்குடி, விருத்தாசலத்திலிருந்து பஸ் வசதி உள்ளது. சப்தரிஷிகள் ஏழு துறைகளை வணங்க நீ வா என்றழைத்ததால் வந்த நதிக்கு நீவா என்பது பெயர். அது மருவி 'நிவா' என்று ஆயிற்று. ஆதித்துறை (காரியனூர்), திருஆலந்துறை, திருமாந்துறை, ஆடுதுறை, திருவதிட்டத்துறை (திட்டக்குடி), திருவரத்துறை, திருக்கைத்துறை, என்பன அவ்வேழு துறைகள் என்பர். திருஞானசம்பந்தருக்கு இத்தலத்தில் முத்துச்சிவிகையும் குடையும் சின்னமும் கொடுத்தார் சிவபெருமான்.

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் தேவாரப்பாக்களும் பெற்ற தலம் இது. இறைவன் தீர்த்தபுரீசர் (அரத்துறை நாதர்); இறைவி: திரிபுரசுந்தரி, ஆனந்தநாயகி.

இத்தல முருகப்பெருமான், ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவியருடன் மயிலுடனும் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் விளங்குகின்றார்.

உற்சவரும் அழகாக மூலவரைப் போன்று உள்ளார்; வலஞ்சுழிவிநாயகர், பிற பரிவார தேவதைகள் விளங்குகின்றனர்.

தினமும் இருகால பூசை காரணாகமப்படி நிகழ்கின்றது. கந்தசஷ்டி ஆறு நாட்கள், நவராத்திரி, மகாமக விழாக்கள் நடைபெறுகின்றன.

நிவாநதி (வெள்ளாறு) புண்ணியப் புனலாகும். தல விருட்சம்: வடவால மரம்.

அருணகிரிநாதசுவாமிகள் "கறுவிமைக்கணி" என்ற இத் தலத்திருப்புகழில் திருஞானசம்பந்தருக்கு இத்தலத்தில் சிவ பெருமான் அருளிய திறத்தினை அழகாகக்காட்டுகின்றார்.

"பிறவியைத் தணித்தருளு நிட்களப்
பிரம சிற்சுகக் கடல் மூழ்கும்
பெருமுனித் திரட் பரவு செய்ப்பதிப்
ப்ரபல கொச்சையிற் சதுர்வேதச்

சிறுவ நிற்கருட் கவிகை நித்திலச்
சிவிகை யைக்கொடுத் தருளீசன்
செகதலத்தினிற் புகழ் படைத்த மெய்த்
திருவரத் துறைப் பெருமாளே"

தொன்மையான இக்கோயிலில் வடமொழிக் கல்வெட்டுக்களும் உள்ளன. அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளது.

கொளஞ்சியப்பர் கோயில், மணவாளநல்லூர், விருத்த கிரீசர் கோயில் ஆகியவை அருகிலுள்ள தலங்களாகும்.

வழிபடுவோர் விடுதி, உணவு விடுதிகள் இல்லை.

## கீர்த்தி உலாவிடும் திருவேட்களம்

சதுரத்தரை நோக்கிய பூவொடு
கதி ரொத்திட ஆக்கிய கோளகை
தழையச்சிவ பாக்கிய நாடக அநுபூதி
சரணக்கழல் காட்டியென் ஆணவ
மலமற்றிட வாட்டிய ஆறிரு
சயிலக்குல மீட்டிய தோளொடு முகமாறுங்

கதிர்சுற்றுக நோக்கிய பாதமும்
மயிலிற்புர நோக்கிய ளுமென
கருணைக்கடல் காட்டிய கோலமும் அடியேனைக்
கனகத்தினு நோக்கினி தாயடி
யவர் முத்தமிழோர் புகவேபர
கதிபெற்றிட நோக்கிய பார்வையும் மறவேனே

............ ......... ......
வெளியெட்டிசை சூர்ப்பொரு தாடிய
கொடிகைக்கொடு கீர்த்தியுலாவிய
விறல் மெய்த்திரு வேட்கள மேவிய பெருமாளே.

சிதம்பரம் இரயில் நிலையத்திற்குக் கிழக்கே ஒரு கல் தொலைவில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்குள் அமைந்த இத்தலம் தமிழகத்தின் இருபத்தெட்டு கடற்கரைத் தலங்களில் ஒன்றாகும்.

கீழ்த்தில்லைவனம், மூங்கில்வனம், வேட்களம், வேள்விக் களம், விசயனூர், சிங்கவர்மேச்சுரம் என்ற பல பெயர்களைக் கொண்டது இத்தலம்.

சைவர்களால் போற்றப்படும் கோயில் என்ற சிதம்பரத்தை யடுத்த இரண்டாவது தலமாகச் சிறப்பிக்கப்பெறும் இத்தலத்தில்

இறைவன் அருச்சுனனுக்குப் பாசுபதம் அருளியதால் அவர் பாசுபதேசர் என்ற திருநாமம் கொண்டுள்ளார். இறைவி: சற்குணாம்பாள் (நல்ல நாயகி).

இக்கோயில் பிராகாரத்தில் முருகன் சந்நிதி சிறப்பாக உள்ளது. மூலவர் ஆறுமுகப் பெருமானாக பன்னிருகரங்களுடன் இருதேவிமாருடன் மயில் மீது கிழக்கு நோக்கியமர்ந்து காண்போர் களிப்புறும் கவினுரு அமைப்புடன் திகழ்கின்றார். திருவாசியுடன் ஒரே கல்லில் அமைந்த இவ்வற்புத சிற்பம் மிகச்சிறப்புடையது.

உற்சவமுருகன் ஒரு முகத்துடன் இருதேவிமார் சூழ விளங்குகிறார்.

தினமும் இரண்டுகால வழிபாடு நிகழ்கின்றது. காரணாகம முறையில் பூசை நிகழ்கிறது. மாதக்கிருத்திகை நாட்கள் சிறப்புடையன. வைகாசி விசாகவிழா நடைபெறுகிறது.

கோயிலுக்கு முன்னால் கிருபாதீர்த்தம் (அழகான திருக்குளம்); தலவிருட்சம்: மூங்கில். பார்த்தன் இங்கே மூங்கிலை வில்லாகப் பயன்படுத்தினான் என்பர்.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பதிகம் பாடிப் பரவிய தலம் அருணகிரிநாதர் இருதிருப்புகழ்ப் பாக்களால் இங்கு முருகவேளைப் பரவியுள்ளார். "சதுரத்தரை", "மாத்திரை" எனத்தொடங்குவன அவை.

நகரத்தார் திருப்பணி கொண்ட தலம். தல புராணம் உள்ளது. தனியார் நிர்வாகத்தில் சிறப்பாக உள்ளது.

அருகில் சிதம்பரம், திருநெல்வாயில், (சிவபுரி), திருக்கழிப்பாலை (சிவபுரி), திருமயிலாடி, புள்ளிருக்கு வேளூர் (வைத்தீஸ்வரன் கோயில்) முதலிய தேவாரத்தலங்கள் உள்ளன.

இங்கு வழிபடுவோர் விடுதி, உணவு விடுதிகள் இல்லை. சிதம்பரத்திலிருந்து டவுன்பஸ் வசதி உள்ளது.

*வேத்திர சாலம தேற்றிடு வேடுவர்*<br>
*மீக்க முதாமயில் மணவாளா*<br>
*வேத்தம தாமறை யார்த்திடு சீர்திரு*<br>
*வேட்கள மேவிய பெருமாளே.*

# ஆதிநாத ராடு நாடகச்சாலை அம்பலச் சிதம்பரம்

தமிழ் நாட்டில் சிதம்பரம் என்னும் தில்லை மாநகரை அறியாதார் இலர். சைவர்களின் கோயில் என்பது இதுவே. தென்னாற்காடு மாவட்டம் இத்தலத்தைத் தன்னுட் கொள்ளும் பெருமை பெற்றுள்ளது.

உலகமே புருஷ வடிவம் அதற்குத் திருவாரூர் மூலாதாரம் திருவானைக்கா – கொப்பூழ்; திருவண்ணாமலை – மணிபூரகம்; சிதம்பரம் – இருதயம்; காளத்தி – கண்டம்; காசி – புருவமத்தி இவ்வாறு உலகமே விராட் புருஷ வடிவம் என்பர் ஆன்றோர்.

உலகின் இயக்கமே சிதம்பரத்தில் (ஞான வெளியில்) நடராஜப் பெருமானுடைய ஆனந்தத் தாண்டவத்தில் அமைந்துள்ளது. பொது, சிற்றம்பலம், புலியூர், பெரும்பற்றப் புலியூர் என்று பல பெயர்களைக் கொண்ட இத்தலப் பெருமை விரிக்கிற் பெருகும்.

புண்டரீகபுரம், வியாக்ரபுரம், ஹேமசபாநாதபுரம், தில்லை வனம் எனவும் இத்தலம் போற்றப் பெறுவது.

இங்கே திருமூலட்டானர், உமையபார்வதி, ஸ்ரீ நடராஜர் சிவகாம சுந்தரி இவர்தம் சந்நிதிகள் சிறப்புடையன. இங்கே ஞானமே வடிவான முருகவேளும் பல கோயில்கள் கொண்டு விளங்கி அடியார்களைப் பாடிப் பரவி உய்யத் திருவுளங் கொண்டு விளங்குகின்றார்.

1. தெற்கு உள் கோபுரத்தில் உள்ள கார்த்திகேயர் ஒரு முகமுடன் வடக்கு நோக்கி விளங்குகின்றார்.

2. மேலைக் கோபுரத்தின் உட்புறம் வேலாயுதம் ஏந்தி ஆறு திருமுகங்களுடன் பன்னிரு கரங்களும் கொண்டு மயில் மீதமர்ந்து வெற்றிப் புன்னகையுடன் கிழக்கு நோக்கி வெற்றி வேலாயுத மூர்த்தி விளங்குகின்றார். நவவீரர் திருவுருவங்கள் உள்ளன.

3. முத்துக்குமார சுவாமி என்ற சண்முக மூர்த்தி இரு தேவிமார்களுடன் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். இவருக்கு வீரசுப்பிரமணியர் என்ற பெயரும் உண்டு. இவருக்கு உற்சவரும் உள்ளனர்.

4. பாண்டிய நாயகர் கோயிலில், தேவிமார் இருவருடன் ஆறுமுகத்துடன் மயில்மீது கம்பீரமாக விளங்கும் சண்முகப் பெருமான் கோயில் தனிச் சிறப்புடையது. தேர் போன்ற அமைப்பையுடைய இப்பெருங் கோயில் சிற்பம் செறிந்தது. இங்குள்ள ஓவியங்கள் கந்தவேளின் தனிப் பெருமைகளைச் சித்தரிக்கின்றன. நவவீரரில் வீரவாகு தேவர் சந்நிதி உள்ளது.

5. நடராஜரை வழிபட்டு வெளிச் சுற்று வலம் வரத் தொடங்கும் போது தூணில் விளங்கும் தண்டாயுதபாணி நம் கருத்தைக் கவரும் மூர்த்தியாவார். கௌபீனதாரியாய் மயிலுடன் கையில் தண்டமுடன் பாலகனைத் தெற்கு நோக்கி விளங்கும் அற்புத மூர்த்தி இவர்.

சிதம்பரத்தில் கமலீசுவரன் கோயில் இளமையாக்கினார் கோயில், அனந்தேசுவரர் கோயில், தில்லைக்காளி கோயில் மத்திய அனந்தேசர் கோயில் முதலிய கோயில்களிலும் முருகன் சந்நிதிகள் சிறப்பாக உள்ளன.

ஞானப்பிரகாசர் குளம், ஆயிகுளம், ஓமகுளம், புலிமடு வியாக்கிரபாதர் தீர்த்தம், அனந்த தீர்த்தம், நாகசேரி பிரமதீர்த்தம், சிவப்பிரியை, திருப்பாற்கடல், சிவகங்கை, பரமானந்தகூபம் (நடராஜர் சந்நிதியருகிலுள்ள கிணறு) முதலியன இத்தலப் புண்ணியப் புனலாகும்.

தில்லைச்செடி இத்தல விருட்சமாகும்

ஆகாசத்தலமான இங்கே தினமும் ஆறுகால பூசை சிறப்பாக நடை பெறுகிறது சஷ்டி, கார்த்திகை சிறப்பானவை. முருகனுக்குரிய திருவிழாக்கள் இங்கு சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றன.

இங்கே பல அருளாளர்கள் வழிபட்டுள்ளனர். அருணகிரி நாதர், 65 திருப்புகழ்ப் பாக்களால் இத்தல மூர்த்தி, தீர்த்த, தலச் சிறப்புக்களைப் பலவாறு போற்றியுள்ளார்.

"தில்லை மேலைக் கோபுர மேவிய பெருமாளே"
"தெற்குக் கோபுர வாசலில் மேவிய பெருமாளே"
"தெய்வயானை மாதொடு நாலு கோபுரவாசல் மேவிய பெருமாளே"
"மன்றுள் வளர் பெருமாளே"
"கனகசபை தனில் மேவிய கந்தப் பெருமாளே"
"புலிகண்டவூர் மகிழ் தம்பிரானே"

என்ற ஒவ்வொரு இடத்திலும் விளங்கும் முருகனையும், தனித் தனியே பாடி மகிழ்ந்தார் அருணகிரி வள்ளல்.

நடராஜப் பெருமானே முருகனாகவும், முருகனே நடராஜப் பெருமானாகவும் சற்றேனும் பேதமின்றி இவருக்குத் தரிசனம் கிடைத்த காரணத்தால்

"மலைமகள் உமைதரு வாழ்வே நமோ நம" எனக் குகனைக் குறித்தும், "திரிபுரமெரி செய்த கோவே நம" எனச் சிவனைக் குறித்தும் கலம்பகமாக ஒரே பாடலில் "அவகுண விரகனை" என்ற திருப்புகழ் இவர் வாக்கினின்றும் எழுந்தது.

இத்தலம் நடனஸ்தலமாதலின் கலகல என்றும் கணகண என்றும் சிலம்பொலி, தாளஒலி, நடன ஒலி ஒலித்த நாதமே இவரைப் பரவசப் படுத்திய காரணத்தால் இத்தலத்துத் திருப் புகழ்ப் பாடல்கள் பலவகையாக நாதஒலி நிறைந்த அற்புத சந்தபேத ஒலிகளுடன் பொலிகின்றன. சிதம்பரத்திற்குரிய 65 பாடல்களுள் இரண்டு நீங்கலாக ஏனையவை தனித்தனிச் சந்தங்களாய் அமையப் பெற்று 63 வகைச் சந்தபேதங்கள் கொண்டு திகழ்கின்றன அவையும் சிலம்பொலிக்கு ஒத்தனவாய் தாளபேதங்கள் சிறக்க மெல்லோசையுடன் எழுகின்றன.

இத்தலத் திருப்புகழ்ப் பாக்களைப் பயில்வோர் இத்தல மாண்பு அனைத்தையும் உணர்ந்தின்புற முடியும். தில்லை வாழந்தணர் சிறப்பு, சிவகாமியம்மையின் திருநாமம், சிவ கங்கை தீர்த்தம், சிதம்பரம் ஞான பூமி, முருகனது குடைக் கூத்து, சூரசம்ஹாரம் முருகவேளுக்கு ஒரு விளையாட்டு, முருகன் செட்டி வடிவு பூண்டு வள்ளியோடு விளையாடியது, பஞ்சாக்கரம்,

பஞ்சபூதத் தொடர்பு, பதஞ்சலி, வியாக்கிர பாதர் காண நடராஜர் ஆடல் ஆடினர், மாணிக்கவாசகர் அருள் பெற்றது, பஞ்சாக்கரமே வேலாகச் 'சூரனையட்டது', சடாக்ஷரப் பொருளை உபதேசம் பெறவிரும்பியது, வள்ளிப் பிராட்டியின் கருணைத் திறம், மெய்ஞ்ஞானம் போதித்த கருணை மூர்த்தியே முருக வேள், சம்பந்தர் ஞானவாளால் சமணரை வென்றார், பரப் பிரமவெளியே "மயிலாடு சுத்த வெளி", என்பன போன்ற செய்திகள் குறிக்கப்படுகின்றன.

இத்தலத்தில் பதஞ்சலி, வியாக்கிரபாதரும் அரிது இது அரிது இது என வியக்கும்படி முருகவேள் அருணகிரிநாதருக்கு நடன தரிசனம் தந்தருளினார் என்பதை,

*"அரிதுயில் சயன வியாள மூர்த்தனும்*
*அணிதிகழ் மிகுபுலியூர் வியாக்ரனும்*
*அரிதென முறைமுறை ஆடல் காட்டிய பெருமாளே"*

என்ற வரிகள் காட்டுகின்றன.

சிதம்பரத் திருப்புகழ்ப் பாடல்களுள் கீழ் வரும் இரு பகுதிகளையாவது மனப்பாடம் செய்தல் வேண்டும் என்பார் தணிகைமணி அவர்கள்.

*"இறந்திட்டுப் பெறவே மதியாயினும்*
*இருந்திட்டுப் பெறவே மதியாயினும்*
*இரண்டிற் றக்கதோர் ஊதியம் நீதா இசைவாயே',*

*"கழலிணை பணியும் அவருடன் முனிவு*
*கனவிலும் அறியாப் பெருமாளே"*

பெருமானின் கேசாதி பாதவருணையாக வரும் "மருவு கடல் முகில்" என்ற இத்தலத் திருப்புகழ் இணையற்றது. 96 சீர்களைக் கொண்ட இப்பாடல் பெருமானின் அளப்பரும் பெருமையை பலப்படப் பேசுவது ஆகும்.

சிதம்பரத்தில் வழிபடுவோர்க்கு வசதியாக தங்கும் விடுதிகள் உணவுவிடுதிகள் ஏராளமாக உள்ளன.

தில்லையைத் தரிசிக்க முத்தியன்றே!

## சேலம் மாவட்டம்

1. சேலம்
2. ராசிபுரம்
3. திருச்செங்கோடு
4 கொல்லி மலை

## தர்மபுரி மாவட்டம்

1. தீர்த்த மலை



தருமபுரி-சேலம் மாவட்டங்கள்
கர்நாடகம்
ஆந்திரப் பிரதேசம்
கிருஷ்ணகிரி
தேன்கனிக்கோட்டை
வட ஆற்காடு
பாலக்கோடு
ஊத்தங்கரை
பென்னாகரம்
தருமபுரி
அரூர்
தீர்த்தமலை
மேட்டூர்
ஏற்காடு
தென் ஆற்காடு
ஓமலூர்
சேலம்
ஆத்தூர்
பெரியார்
சங்ககிரி
ராசிபுரம்
திருச்செங்கோடு
நாமக்கல்
கொல்லிமலை
திருச்சிராப்பள்ளி
குறிப்பு
மாநில எல்லை
மாவட்ட எல்லை
தேசிய நெடுஞ்சாலை
இருப்புப் பாதை
இதர இணைப்புச் சாலைகள்
வட்டத்தலைமையிடம்
திருப்புகழ்த்தலங்கள்

## திருவளர் சேலத்தமர்வோன்

*கிரிதனில் வேல்விட் டிருதோளை யாகத்*
*தொடு குமராமுத் தமிழோனே*
*கிளரொளி நாதர்க் கொருமகனாகித்*
*திருவளர் சேலத் தமர்வோனே*

என்று சேலம் நகரில் விளங்கும் முருகவேளை "பரிவுறு" என்று தொடங்கும் திருப்புகழால் அருணகிரிநாதர் பரவுகின்றார். சேலம் நகரில் மரவனேரி என்ற இடத்தில் விளங்கும் சுகவனேசுவரர் கோயிலில் விளங்கும் முருகனே இத்திருப்புகழ் நாயகராகத் திகழ்கின்றார்.

கிளி உருவில் சுகமுனிவர் வழிபட்டதால் இத்தலம் சுகவனம் என்ற பெயர் கொண்டது. கிருதயுகத்தில் அரசமர வடிவில் வேதங்கள் பூசித்துத் தேவர்களின் பாவங்களைப் போக்கியதால் பாபநாசம் எனவும், திரேதாயுகத்தில் காமதேனு வழிபட்டதால் பட்டீச்சுரம் எனவும் துவாரயுகத்தில் ஆதிசேடன் வழிபட்டதால் நாகேசம் எனவும் இத்தலத்திற்குப் பல பெயர்கள் உள்ளன என்பர்.

இங்கே சிவபெருமானது திருப்பெயர்: சுகவனேசுவரர் இறைவி: சுவர்ணாம்பிகை.

இங்கு எழுந்தருளியுள்ள சுகவன சுப்பிரமணியர் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவிமாருடனும் நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கிக் காட்சியருள்கின்றார்.

உற்சவ மூர்த்தி ஆறுதிருமுகங்களுடன் வள்ளி தெய்வயானை சூழ விளங்குகின்றார்.

காரணாகம முறையில் தினமும் 3 கால பூசை நிகழ்கின்றது. விநாயகர், முருகன் துர்க்கை, நவக்கிரகம் முதலிய சந்நிதிகளும் உள்ளன.

சித்திரை வருடப் பிறப்பு, வைகாசித் தேர்திருவிழா, விநாயக சதுர்த்தி, கார்த்திகை விழா, தைப்பூசம், பங்குனி உத்திரம் முதலிய விழாக்கள் நிகழ்கின்றன.

ஆமண்டு தீர்த்தம் (கிணறு): இதிலிருந்து ஆதிசேஷன் நீர் எடுத்து அபிடேகம் செய்து வழிபட்டதால் இக்கிணற்றில் தவளை இல்லை. தலவிருட்சம்: வில்வம்.

இக்கோயில் தொன்மையானது. அறநிலைய ஆட்சித் துறையின் கீழ் உள்ளது.

உணவு விடுதிகள், தங்கும் விடுதிகள் உள்ளன.

அருகே குமரகுரு பாலதண்டாயுதபாணி சுவாமி கோயில் கந்தாஸ்ரமம், உடையாப்பட்டி முதலிய தலங்கள் உள்ளன.

சொங்க ணுதித ரப்பெறு கொங்கி னூடுக கித்திடு
கொங்கின் விரக வைப்சிய குமராபொற்
கொங்குலாவை குறக்கொடி கொங்கையே தழுவிச்செறி
கொங்கு ராசு புரத்துறை பெருமாளே.

# கொங்கு ராஜபுரத்துறை குமரன்

சேலம் மாவட்டத்தில் சேலம் நகரிலிருந்து 20 கல் தொலைவிலுள்ள ராசிபுரம் என்று தற்போது அழைக்கப்படும் இத்தலத்தில் முன்பு முருகன் கோயிலாக இருந்தது பின்பு கயிலாயநாதர் கோயிலாக மாறியுள்ளது என அறிகிறோம் சேலத்திலிருந்து ராசிபுரத்திற்குப் பஸ் வசதி உள்ளது. மலையடிவாரக் கோயில்.

இங்கு சிவபெருமான்: கயிலாசநாதர் எனவும், அம்பிகை தர்மசம்வர்த்தனி எனவும் போற்றப்பெறுகிறார்கள்.

இங்கு ஆறுமுகப்பெருமான் பன்னிருகரங்களுடன் மயில் மீது அமர்ந்து தென் திசை நோக்கி விளங்குகின்றார்.

உற்சவப்பெருமான் வள்ளி தேவயானையுடன் விளங்கு கின்றார். இவருக்கு ஒரு முகமும் நான்கு கரங்களும் உள்ளன.

முருகன் சந்நிதியை நோக்கி முன்பு திருவாயில் இருந் தமைக்குச் சான்றுகள் உள்ளன.

தினமும் இருகால பூசை நிகழ்கின்றது.

சித்திராபூர்ணிமை தேர்த்திருவிழா, கார்த்திகை விழா, தைப்பூசம், பங்குனி உத்திரம் சிறப்பு விழாக்கள் நிகழ்கின்றன.

தலவிருட்சம்: வில்வம்

கடையெழு வள்ளல்களில் வல்வில் ஓரி என்னும் மன்னர் வழிபட்டுத் திருப்பணி செய்த தலம் இது என்பர்.

அருணகிரிநாதர் இத்தல முருகனை "சங்குவார்முடி" என்ற திருப்புகழால் போற்றும் போது

"சங்குவார் முடிபொற்கழல் பொங்குசாமரை கத்திகை
தண்டு மாகரி பெற்றவன் வெகுகோடிச்
சந்தபாஷைகள் கற்றவன் மந்த்ரவாதிச துர்க்கவி
சண்ட மாருத மற்றுள கவிராஜப்

பங்கி பாலச ரச்வதி சங்க நூல்கள்வி தித்தப்ர
பந்த போதமு ரைத்திடு புலவோன்யரன்
பண்டை மூவெழு வர்க்கெதிர் கண்ட நீயுமெனச்சில
பஞ்ச பாதக ரைப்புகழ் செயலாமோ"

என்று கேட்பது சிந்தித்தற்குரியது.

இக்கோயில் தனி முருகன் கோயிலாக இருந்த போது, சொல்லிமலையரசனான ஓரி வேட்டைக்குச் சென்ற காலத்து ஒரு காட்டுப் பன்றியைத் துரத்திவந்தான். அவனிடம் அம்புகள் தீர்ந்துவிட்டன. அப்பன்றியும் இக்கோயில் கொடிக்கம்பத்தின் அருகே வந்து நின்றது. அரசன் தன் வாளால் அதன் தலையினைக் காயப் படுத்த, அது சிவலிங்கமாக மாறிவிட்டது. அது கண்ட வல்வில் ஓரி இக்கோயிலில் சிவலிங்கம் தாபித்து வழி பட்டதாக வரலாறு பேசுகின்றது.

இதற்குச் சான்றாகக் கொடிமரத்தின் கீழ்ப்பகுதியில் ஓரி மன்னன் பன்றியை வெட்டும் சிற்பம் உள்ளது. இலிங்கத்தின் இடது புறம் வடு ஒன்று காணப்படுகிறது. இக்கோயிலில் வல்வில் ஓரியின் திருவுருவும் உள்ளது. ஆண்மக்கட்பேறு கோரல் இங்கு முக்கிய பிரார்த்தனையாகும். இக்கோயில் தனியார் நிர்வாகத்தில் உள்ளது.

இத்தலத்திற்கருகில் அலவாய் மலை, வையப்பமலை, கனககிரி (காகா பாளையம்), கொல்லிமலை முதலியவை உள்ளன.



**வெற்றிவேற் பெருமான்**

சூரர் கேயொரு கோளரி யாமென
நீலத் தோகைம யூரம தேறிய
தூளிக் கேகடல் தூரநி சாசரர் களமீதே
சோரிக் கேவெகு ரூபம தாவடு
தானத் தானன தானன தானன
சூழிட் டேபல சோகுக ளாடவெ பொரும்வேலா

(ஆரத்தோடணி ..........சிதம்பரம்)

(சிதம்பரம் சபாநாயகர் கோயில் மேலைக்கோபுரவாயில்)

நன்றி: *French Institute of Indology, Pondicherry.*



திருச்செங்கோடு

செஞ்சாலி கஞ்சம் ஒன்றாய் வளர்ந்த
செங்கோ டமர்ந்த பெகுமாளே
சென்றே இடங்கள் கந்தா எனும்போ
செஞ்சேவல் கொண்டு வரவேணும்



கொடுமுடி

கொடுமுடிக் குமரப் பெருமாளே அடியவர்க் கெளிஅற்
புதநேயா
திருவருட் கருணைப் ப்ரபையாலே திரமெனக்
கதியைப் பெறுவேனோ.



திருமுருகன்பூண்டி

சிவகுமரன் பீண்டிற் பெயரானே
　　திருமுருகன் பூண்டிப் பெருமாளே
அவசியம்உன் வேண்டிப் பலகாலும்
　　அறிவினுணர்ந் தாண்டுக் கொருநாளில்
தவசெபமும் தீண்டிக் கனிவாகிச்
　　சரணமதும் பூண்டற் கருள்வாயே.

# நாககிரியில் நாலுமறைப் பொருளோன்

அருணகிரிநாதர் திருச்செங்கோடு வருகிறார். அதன் உயர்ந்த மலை மீதேறிச் செங்கோட்டு வேலவனைத் தரிசிக்கின்றார் பரமானந்தம் அடைகின்றார். முருகன் திருவுருவ அழகைத் தமது இரு கண்ணாலும் பருகினார்; பாடினார்; ஆடினார்; பரவசமுற்றார். அப்பனே! உனது அழகைக் காண்பதற்குப் பிரமன் எனக்குக் கொடுத்துள்ள இருகண் போதுமோ? எனக்கு அவன் ஏன் நாலாயிரங்கண் கொடுக்கவில்லை? என வருந்தி

*மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு*
*மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்*
*சேலார் வயற்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டுதொழ*
*நாலாயிரங்கண் படைத்திலனே அந்த நான்முகனே!*

**(கந்தர் அலங்காரம்: 90)**

என்று பாடினார். 'செங்கோட்டுப் பெருமானே! நான் எந்த இடத்தில் கந்தா! என்று அழைக்கின்றேனோ அந்த இடத்தில் நினது சேவலுடன் வரவேணும்!

*'செங் கோடமர்ந்த பெருமானே*
*சென்றே யிடங்கள் கந்தா எனும்பொ*
*செஞ்சேவல் கொண்டு வரவேணும்*

என விண்ணப்பித்தார். அவ்வாறே உதவுவோம் என்று அருள் கிடைத்தது. அத்துணிவு பற்றியே செங்கோடைக் குமரன் என எங்கே நினைப்பினும் அங்கே என்முன் வந்து எதிர் நிற்பனே'' (கந்தர் அலங்காரம் 104) என்றும்,

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மை குன்றா
மொழிக்குத்துணை முருகாஎனும் நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத்துணை அவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத்துணை வடிவேலும் செங்கோடன் மயூரமுமே.

· கந்தர் அலங்காரம் 70.

என்றும் பாடிப் பரவி மகிழ்ந்தார்.

சேலம் மாவட்டத்தில், நாமக்கல்-ஈரோடு பஸ் வழியில் திருச்செங்கோடு அமைந்துள்ளது. நாகாசலம், சர்ப்பகிரி, சுரபகிரி நாககிரி என்றெல்லாம் போற்றப் பெறுவது. ஈரோட்டிலிருந்து 20 கி. மீ. தொலைவிலுள்ளது.

கொங்கு நாட்டில் தேவாரப் பதிகம் பெற்ற ஏழு தலங்களுள் இதுவும் ஒன்று.

"சீர்கெழு செந்திலும், செங்கோடும் வெண் குன்றும் ஏரகமும் நீங்கா இறைவன்" என்று சிலப்பதிகாரம் முருகன் தலங்களைக் குறிப்பிடுகின்றது. செங்கோடு-சிவந்தமலை.

தெய்வத் திருமலை என்று அருணகிரிநாதர் இதனைப் போற்றுவார்.

இங்கு மலையடிவாரத்தில் ஆறுமுக சுவாமி கோயில் உள்ளது. ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களுடன் தேவிமார் இருவர்சூழ மேற்கு நோக்கி அழகுடன் அமர்ந்த அற்புதக் கோலம். இடும்பன் சந்நிதியும் உள்ளது.

தினமும் இருகால பூசை காமிகாகம முறையில் நிகழ்கின்றது.

இங்கே முடியிறக்குதல், காதுகுத்தல், திருமணம் போன்ற பிரார்த்தனைகள் செய்யலாம்.

வருடப்பிறப்பு, பங்குனி உத்திரம் சிறப்பு.

வைகாசித் தேர்த் திருவிழா, தைப்பூசத் திருவிழாச் சிறப்பானவை. மூலவர் மிக நுண்ணிய வேலைப்பாடமைந்த சிற்பமாகத் திகழ்கிறார். தொன்மையான கோயில் இது.

இப்பெருமானை வழிபட்டு மலை மீதுள்ள செங்கோட்டு வேலவன் கோயிலை அடையப் படியேறத் தொடங்குகின்றோம்.

சுமார் 2000 அடி உயரமுடைய மலைமீது செங்கோட்டு வேலவன் விளங்குகின்றார். 1300 படிகள் உள்ளன. சில இடங்களில் செங்குத்தாக உள்ளன. மலையுச்சியை அடைந்ததும் ஐந்து நிலை இராசகோபுரம் நம்மை வரவேற்கின்றது. கோபுரத்தைக் கடந்து 20 படிகள் கீழே இறங்கினால் முதலில் செங்கோட்டு வேலவரின் திருக்கோயிலும் நிருத்த மண்டபமும் தென்படும். இங்கே இளமுருகன் கோலத்தில் செங்கோட்டு வேலவர் ஒரு முகமும் இருகரங்களும் கொண்டு கையில் வேலும், சேவற் கொடியும் விளங்கக் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சியருளுகின்றார். இங்குதான் வேல கல்லால் ஆனது. நாகாசலவேலவர் செங்கோட்டு வேலவர், செங்கோடன், செங்கோட்டையன் என்றெல்லாம் துதிக்கப்படும் மூர்த்தி இவர்.

எடுப்பான தோற்றமுடைய உற்சவ மூர்த்தி மலையடிவாரத்தில் உள்ள கோயிலில் விளங்குகின்றார்.

செங்கோட்டு வேலவனுக்குப் பின்னால் மேற்கு நோக்கி அர்த்த நாரீச மூர்த்தியாக (மாதொரு பாகனாக) சிவபெருமான் எழிலுருவம் விளங்குகின்றது. மூலவர் நவபாஷாணத்தால் ஆனது. பிருங்கி முனிவருக்காக ஏற்பட்ட தலம்.

திருஞானசம்பந்தர் கொடிமாடச் செங்குன்றூர் என்று தேவாரம் பாடிப் பரவிய தலம் இது. திருஞான சம்பந்தர் அடியவர்களோடு இங்கே வந்தபோது பனியினால் வெப்பு நோய் ஏற்பட்டது. "அவ்வினைக்கிவ் வினை" என்னும் திருநீலகண்டப் பதிகம் பாடி அந்நளிர்ச் சுரத்தை நாட்டை விட்டே நீக்கியருளினார். அர்த்த நாரீசர் திருவடியில் ஒரு சுனை உள்ளது.

இம்மலைக் கோயிலில் ஆதிகேசவப் பெருமாள், துர்க்கை பைரவர், நவக்கிரகம், நால்வர் சன்னிதிகள் உள்ளன.

தினமும் மூன்றுகால வழிபாடு காமிகாகம முறையில் நிகழ்கின்றது.

மாங்கல்ய பாக்கியம், புத்திர பாக்கியம் கோரிப் பிரார்த்தனை செய்கின்ற தலம்.

சஷ்டி, கார்த்திகை, அமாவாசைகள் சிறப்பு வைகாசித் தேர்த் திருவிழா, ஆடி அமாவாசை, கேதார கௌரி விரதம்,

தைப்பூசம், முக்கிய உற்சவங்கள் ஆகும். சித்திரா பௌர்ணமி யன்று சந்தனக் காப்புச் சிறப்பு.

பைரவர் தீர்த்தம், நாக தீர்த்தம், குமார தீர்த்தம், பாவநாச தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம் முதலியன உள்ளன. தலவிருட்சம் : இலுப்பை.

மலைக்கோயிலில் அற்புதமான சிற்பங்கள் அபரிமிதமாக உள்ளன.

இம்மலைக் கோயிலுக்கும் மேலே 400 படிகள் கடந்து சென்றால் பாண்டீசுவரர் கோயில் என்ற உச்சிப்பிள்ளையார் கோயில் உள்ளது. படிகள் ஏறுவது கடினம்.

மலையடிவாரத்தில் பஸ்நிலையத்திற்கருகில் கயிலாயநாதர் கோயில் (நீலத்தம்பிரான் கோயில்) சிறப்பானது.

கயிலாயநாதரும் சுகந்த குந்தலாம்பிகை அம்மையும் தனித் தனியே விளங்குகின்றனர். நடுவில குமாரசுப்பிரமணியர் சந்நிதி உள்ளது. ஒருமுகமும இருகரஙகளும் (ஒருகையில் வேலும் ஒரு கையில் சேவற்கொடியும்) கொண்டு கிழக்குநோக்கி நின்ற கோலம்.

இக்கோயிலில் நான்குகாலபூசை நாடோறும் நிகழ்கின்றது புத்திரப்பேறு கோரிப் பிரார்த்தனை சிறப்பு.

பிரதோஷம், சஷ்டி, கார்த்திகைநாட்கள் முக்கிய மானவை.

புண்ணியப் புனல்: ரிஷப தீர்த்தம். தலவிருட்சம்; வன்னி, தொன்மையான துர்க்கை திருவுருவம் விளங்குகின்றது.

திருச்செங்கோட்டு வேலனை 21 திருப்புகழ்ப் பாக்களால் பரவி இன்புற்று மகிழ்ந்தார் அருணகிரிநாதர்.

**நாககிரிப் பெருமானே! என்னிடம் யமன்வரின் உனது அருளே படையாக அவன் மடிந்து விழ, அவனோடு நான் போரிடுவேன். அப்போது அருணையில் மகாசபையில் நீ வந்தது போன்று மயில் மீதேறி, பழைய அடியார் கூட்டத்துடன் தமிழும் மறையும் முழங்க வரவேணும் என்பார்;**

"தொடிய முறலியும் அவனது கடகமும்
மடிய ஒருதினம் இருபதும் வழிபடு
குதலையடியவன் நினைதருள் கொடுபொரும் அமர்காண

...மரகத துரகத மிசையேறிப்
பழைய அடியவருடன் இமையவர் கணம்
இருபுடையு மிகுதமிழ் கொடு மறைகொடு
பரவ வருமதில் அருணையில் ஒருவிசை வரவேணும்"

நல்லியக் கோடன் என்னும் அரசன் தனது பகைவர்களின் பலத் திற்கு அஞ்சி முருகக் கடவுளை வழிபட்ட பொழுது "கேணியில் உள்ள பூவைப்பறித்து, அதையே வேலாக நிருமிக்கத் தியானித்து எறி. நீ வெல்வாய்" என முருகவேள் அவன் கனவிற் கட்டளையிட அம்மன்னனும் அங்ஙனமே செய்யப் பகைத்தளம் பறந்தது என்பதும் அங்ஙனம் வேலால் வெற்றி பெற்ற இடம் வேலூர் ஆயிற்று என்பதும் சிறுபாணாற்றுப் படையில் "திறல்வேல் நுதியிற் பூத்தகேணி விறல்வேல் வென்றி வேலூர்" என வருவது இத் தலத் திருப்புகழில் ("மந்தக் குடைக்கண்") "பைம்பொற் பதக்கம் பூட்டிய அன்பற் கெதிர்க்கும் கூட்டலர் பங்கப்படச்சென்றோட்டிய வயலூரா" என்ற வரிகளால் உணர்த்தப் பெறுவதாக இருக்கலாம் என்பார் தணிகைமணியவர்கள்.

கந்தரலங்காரம் 23, 36, 70, 72, 90, 91, 97, 104, பாடல்கள் செங்கோட்டு வேலவனின் அருளைப் பாடியவை. கந்தரனுபூதியிலும் "நாகாசல வேலவ நாலுகவித் தியாகா சுரலோக சிகாமணியே" என இத்தலத்தைப் பாடுவார்.

தாமா தாமா... எனவரும் திருப்புகழ்ச்சந்தக் கலவையானது.

திருச்செங்கோட்டில் விளங்கும் ஆலயங்கள் அறநிலைய ஆட்சித் துறையினரால் நிர்வகிக்கப் படுகின்றன.

இங்கு கண்ணகி விழாவும் கொண்டாடப் பெறுகின்றது.

வழிபடுவோர் விடுதிகளும் உணவு விடுதிகளும் உள்ளன.

காலனிடத் தணுகாதே
காசினியிற் பிறவாதே
சீலஅகத் தியஞான
தேனமுதைத் தருவாயே
மாலயனுக் கரியானே
மாதவரைப் பிரியானே
நாலுமறைப் பொருளானே
நாககிரிப் பெருமானே.

# கொல்லிமலை மேவி நின்ற குரவன்

அறப்பளீசுரசதகம் என்ற தமிழ்நூலைத் தமிழகமக்கள் பயின்று இன்புறுவர். இந்நூலுக்குரிய அறப்பளீசுரப்பெருமான் விளங்கும் கோயில் சேலம் மாவட்டத்தில் நாமக்கல்வட்டம் கொல்லிமலையில் உள்ளது. நாமக்கல்லிலிருந்து தென்கிழக்கில் உள்ள இத்தலத்திற்குப் பஸ்வசதி உள்ளது.

இங்கே சிவபெருமான்: அறப்பளீசுவரர்; இறைவி, தாயம்மாள்.

இத்தலத்தில் ஆறுமுகப்பெருமான் சந்நிதி அருமையானது, பன்னிருகரங்களுடன் வள்ளி, தேவயானை உடன்விளங்க மயில்மீது அமர்ந்து தெற்குநோக்கிக் காட்சியருளுகின்றார் ஆறுமுகச் செவ்வேள். வேலும் சேவற்கொடியும் விளங்குகின்றன.

நாடோறும் இரண்டுகால வழிபாடுகள் காமிகாகம முறையில் நடைபெறுகின்றன.

விநாயகர், தட்சிணாமூர்த்தி, பைரவர் சந்நிதிகள் உள்ளன.

சந்ததியில்லாதவர்கள் இங்குள்ள தீர்த்தத்தில் உள்ள மீன்களுக்கு மூக்குக் குத்திவிட்டால் சந்ததிபெறுவர் என்று இங்கு நம்பிக்கை. சுனைகள் உள்ளன. தலவிருட்சம்: பலா

அருணகிரிநாதர் இத்தலமுருகனைப் பாடிப்பரவிய "கட்டமன்னு", "தொல்லைமுதல்" என்னும் இருதிருப்புகழ்ப் பாடல்கள் உள்ளன. இறையனார் களவியலுரை கண்டபோது தமிழ்ச்சங்கம் வீற்றிருந்து உருத்திரசன்மராய் வந்து முருகபிரான் ஆடிய அருளாடலை இத்தலத்திருப்புகழில் காட்டுகின்றார்:

"முட்ட உண்மைசொல்லு செட்டி திண்மை கொள்ள
முட்டநன்மை விள்ள வருவோனே"

"தொல்லைமுதல்" என்ற திருப்புகழில் ஒன்றுமுதல் ஆறுவரை வருகின்ற அருமை இன்புறற்குரியது:

"தொல்லைமுதல் தானென்று மெல்லியிரு பேதங்கள்
சொல்லுகுண மூவந்த மெனவாகி
துய்யசதுர் வேதங்கள் வெய்யபுல னைந்து
தொய்யுபொரு ளாறங்கம் எனவேயும்

பல்லபல நாதங்கள் அல்கபசு பாசங்கள்
பல்குதமிழ் தானொன்றி இசையாகிப்
பல்லுயிரு மாயந்த மில்லசொரு பானந்த
மௌனவுரு வேநின்ற தருள்வாயே"

ஆடிப்பெருக்கு, கார்த்திகைதீபம் முதலிய திருவிழாக்கள் நடைபெறுகின்றன திருக்கல்யாண மண்டபம் உள்ளது.

தற்போது இத்திருக்கோயில் திருப்பணி செய்யப்பெற்று வருகிறது.

அறநிலைய ஆட்சித்துறையினரால் நிர்வகிக்கப்படு கின்றது.

## தீர்த்தமலை நகர் காத்தவன்

*தீர்த்த எனதகம் எட்டை யுடனினை*
*ஏத்த அருளுட னேக்கி அருளுதி*
*தீர்த்த மலைநகர் காத்த சசிமகள் பெருமாளே.*

தீர்த்தமலை நகரில் காவல் புரிந்து தெய்வயானை உவக்கும் பெருமிதம் உடையவரே! தூயவரே! என்மனம் விருப்புடன் உம்மை ஏத்தும்படி நீர் திருவருட்பார்வையால் அருளவேண்டும் என்று அருணகிரிவள்ளல் தீர்த்தமலைக்காத்தகந்தனிடம் இறைஞ்சுகின்றார்.

தீர்த்தமலை மான்மியம் எப்படிப்பட்டது?

*" அட்டசித்தி உதவுமலை அநேகமுள ஆனாலும்*
*இட்டசித்தி உதவுமிடம் இதுபோல இலை எவர்க்கும்*
*கிட்டரிய காரியசித்தி கிரியையுடன் யோகசித்தி*
*மட்டரிய ஞானசித்தி மற்றெவையும் பெறலாமே"*

என்று இத்தலபுராணத்தின் ஆசிரியர் சைவஎல்லப்பநாவலர் அறுதியிட்டு உறுதியளிக்கின்றார்.

தவசாரகிரி, பஞ்சபூதகிரி, சிவசைலம், கங்காகூடம், பனலசடிலம், சித்தநிவாசம், நிரந்தரம், நியாதிநாசம், துரிதகரம், ரோககரம், இராமேட்டம், சுவாமிசிங்கம், தீர்த்தகிரி என்று பதின்மூன்று பெயர்களைக் கொண்ட இம்மலைத்தலம் தருமபுரி மாவட்டத்தில் அரூர்வட்டத்தில் அமைந்துள்ள அருமையான முருகன் தலமாகும்.

தருமபுரியிலிருந்து அரூர்வழியாகவும் சேலத்திலிருந்து அரூர் வழியாகவும், திருப்பத்தூரிலிருந்து ஊத்தங்கரை வழியாகவும் இத்தலத்தையடையலாம். இரயில் வழி இல்லை.

தீர்த்தமலையின் அடிவாரத்தில் ஒருசிவன்கோயில் உள்ளது. மலையில் ஒருகிலோமீட்டர் மலைப்பாதையில் சென்று தீர்த்தகிரீசுவரரையும் வடிவழகியம்மையையும் வழிபடுகின்றோம். இங்கே அருணகிரிநாதர் போற்றிய பாலமுருகன் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு வடதிசை நோக்கி விளங்குகின்றார்.

ஆனால் மலையடிவாரத்தில் உள்ள கோயிலில் ஆறுமுகப் பெருமானாக-இருதேவியருடன் அருள்வழங்குகின்றார்.

இத்தலத்தில் அஷ்டபுஜ துர்க்கையும் சகஸ்ரலிங்கமும் கவின்பெறு வனப்புடையன.

எப்போதும் வற்றாத ஐந்து சுனைகள் மலைமீது உள்ளன. அவை இராமதீர்த்தம், அக்னிதீர்த்தம், குமாரதீர்த்தம், அகத்திய தீர்த்தம், கௌரிதீர்த்தம் என அழைக்கப்படுகின்றன.

மலைக்கோயிலில் ஆகமப்படி உச்சிகாலத்து வழிபாடு மட்டுமே நிகழ்கிறது. மலையடிவாரக்கோயிலில் காலையிலும் மாலையிலும் ஆகமமுறைப்படி வழிபாடு நிகழ்கின்றது.

அகத்தியரும் வசிட்டரும் வழிபட்டதலம்.

மாசிமகத் தேர்விழாவும் ஆடிப்பதினெட்டு நீராடலும் இங்கே பெருஞ்சிறப்புடைய விழாக்களாகும்.

1500 ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்ட இக்கோயிலில் 19 கல்வெட்டுக்கள் உள்ளன. நிகரிலி சோழமண்டலத்து கலிங்க நாட்டுப்புறமலை நாட்டுத்தகடூரில் பெண்ணையாற்றின் தென்கரையில் உள்ள தீர்த்தமலை என்று கல்வெட்டுப்பேசும்.

இரண்டு ஏக்கர் பரப்பளவில் அமைந்த இக்கோயிலில் அற்புத சிற்பங்கள் விளங்குகின்றன. கல்நிறைகணபதியும், அழகு நிறை அதிகாரநந்தியும் குறிப்பிடத்தக்கவை.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்திலுள்ள இக்கோயில் மலைக்கோயிலுக்குச் சாலையமைத்தல், பயணிகள்விடுதி அமைத்தல், திருச்சுற்றுமதில் அமைத்தல் முதலான பணிகள் செய்யப் பெறவேண்டும்.

இத்தகு புனிதத்தலத்தினைப்பரவிய அருணகிரிநாதசுவாமிகளும்,

> வாக்கு முனதுள நோக்கும் அருளுவன்
> ஏத்த புகழடி யார்க்கும் எளியனை
> வாழ்த்த இருவினை நீக்கும் முருகனை மருவாயோ

என்று மனதுக்குக்கோரிக்கை விடுக்கின்றார். நம் மனதிற்கும் அக்கோரிக்கையைத்தானே நாம் விடவேண்டியுள்ளது. அப்போது தானே கந்தனருள் கிட்டும்!

## கோயம்புத்தூர் மாவட்டம்

1. பேரூர்
2. குருடிமலை
3. அவிநாசி
4. திருமுருகன் பூண்டி
5. தென்சேரி கிரி

## பெரியார் மாவட்டம்

1. பவானி
2. விஜயமங்கலம்
3. சென்னிமலை
4. கொடுமுடி
5. பட்டாலியூர்
6. காங்கேயம் (சிங்கை)
7. கன்னபுரம்
8. வட்டமலை (கொங்கணகிரி)
9. ஊதிமலை

# பேரூர்ப் பெரியோன்

திருநாவுக்கரசர், சுந்தரர் தேவாரங்களிலும், மணிவாசகரின் திருக்கோவையார் 299 இலும் குறிப்பிடப்பெறும் வைப்புத்தலமான பேரூர் கோவைக்கருகிலுள்ள காஞ்சிமா நதிக்கரையில் விளங்கும் மேலைச் சிதம்பரமாக எல்லையிலாப் பெருமைகொண்ட தலமாகும். கோயம்புத்தூரிலிருந்து 8 கி. மீ. தொலைவிலுள்ளது. டவுன் பஸ் வசதி அதிகம் உள்ளது. இத் தலத்தில் சிவபெருமான்: பட்டிப்பெருமான்; இறைவி: பச்சை நாயகி. காமதேனு வழிபட்ட பட்டியிடத்தே தோன்றி அருள் செய்ததால் சிவபெருமான் பட்டீசர் என்ற திருநாமம் கொண்டார்.

இச்சிவன் கோயிலின் வெளிப்பிரகாரத்தில் அருள்மிகு பாலதண்டாயுத பாணி சந்நிதி உள்ளது. ஒரு முகமும் இரு கரங்களும் கொண்டு மேற்கு நோக்கி நின்ற திருக்கோலம்.

உற்சவரும் மூலவர் போன்றே அமைப்புடையவர். திருவாசியில் ஐந்து தலை நாகர் படத்துடன் விளங்குகிறார்.

நாள்தோறும் மூன்றுகால வழிபாடு, காரணாகம முறையில் நிகழ்கின்றது

கார்த்திகைதோறும் முருகப்பெருமான் மயில் வாகனத்தில் புறப்பாடு நிகழ்கின்றது.

மாதந்தோறும் சோமவாரம், வெள்ளிக்கிழமை, சஷ்டி கார்த்திகை, அமாவாசை, விசாகம் சிறப்பு நாட்களாகும்.

பல்வேறு அலங்காரங்களில் முருகனை இங்கே கண்டு மகிழலாம்,

காஞ்சனம் பயக்கும் நீராதலின் காஞ்சிமாநதி என்ற பெயருடன் கோயிலின் அருகே நொய்யலாறு ஓடுகின்றது "பூஞ்சினை காஞ்சி நிகழப் பொற்புறத் தவழ்தலாலும் வாஞ்சையின் அப்பெயர் சால வயங்கும்" என்று தலபுராணம் போற்றும்.

தலவிருட்சம்: சித்தேசவிருட்சம் (பன்னீர் மரம்.)

இங்குள்ள நடராஜப்பெருமான் அற்புதப் பொலிவுடன் திகழ்கின்றார் கனகசபை சிற்பவேலைப்பாடு மிக்கது. கவிராட்சச கச்சியப்ப முனிவர் அருளிய பேரூர்ப் புராணம் ஒப்பற்ற பேரிலக்கியமாகும். (அவர் காலம் கி. பி 1765)

இத்தல முருகனை இரு திருப்புகழ்ப் பாக்களால் பரவிப் பாடினார் அருணகிரிநாத சுவாமிகள்;

*நீராப் பிணி தீர*
*சீவாத்தும ஞான*
*ஊராட்சிய தான*
*ஓர்வாக் கருள்வாயே*
*பாரோர்க் கிறைசேயே*
*பாலாக் கிரிராசே*
*பேராற் பெரியோனே*
*பேரூர்ப் பெருமானே!*

எனவரும் சிறிய அருமையான திருப்புகழ் ஒன்று; மற்றொன்று "மைச்சரோருக" என்று தொடங்குகின்றது.

*பச்சை மாமயில் மெச்ச வேறிய*
*பாகா சூரா வாகா போகா தெனும்வீரா*
*பட்டியாள்பவர் கொட்டி யாடினர்*
*பாரூரர் சூழ் பேரூராள்வார் பெருமானே.*

அறநிலைய ஆட்சித்துறை நிர்வாகத்தின் கீழ் இத்தலம் உள்ளது. இத்தலத்தில் பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் திருமடம் உள்ளது. நால்வர் மடம் உள்ளது. சிவக்கவி மணி C. K. S. அவர்களின் சமாதியும் உள்ளது. அருகே மருதமலை என்ற முருகன் தலமும் காணற்குரியதாம்.

# மருதமலை

கோயம்புத்தூருக்கு வடமேற்கில் அமைந்த மேற்குத் தொடர்ச்சிமலையின் மத்தியில் மருதமலைக் குமரன் திருக்கோயில் திகழ்கின்றது. கோவையிலிருந்து 12 கி. மீ. தொலைவுதான்! மலைக்கோயிலுக்கு படிகள் மூலமாகவும் ஏறலாம். நேரே கோயிலுக்குச் செல்லும் சாலையும் உண்டு. டவுன் பஸ் உள்ளது.

மலைப்பாதையின் நடுவே இடும்பன் கோவில் உள்ளது. பெரிய பாறையின் முன்பு காவடி தூக்கிய இடும்பன் காட்சி தருகிறான். பிள்ளைவரம் வேண்டுவோர் சிறு துணியால் தூளி கட்டிப் பூச்ச மரத்திலும் கோடாரி முறி மரத்திலும் தொங்க விட்டுச் செல்கின்றனர்.

மலைக்கோயில் சிறிதெனினும் மூர்த்தியின் கீர்த்தி மிகப் பெரிதென்பதை இங்கு வந்து வழிபடும் மக்கள் திரளைக் காணும் போது புலப்படுத்துகின்றது. சுற்றுப்பிராகாரத்தில் இடது பக்கம் சிவலிங்கமும் வலது பக்கம் மரகதாம்பிகை சந்நிதியும் உள்ளன. அருகிலுள்ள வெள்ளியங்கிரியைச் சிவன் உருவாகவும், நீலி மலையை அம்மை உருவாகவும் இம் மருத மலையை முருகனுருவாகவும் மும்மலையையும் சேர்த்து சோமாஸ்கந்த மூர்த்தமாகப் பேரூர்ப்புராணம் பகர்கின்றது-

மலையில் பழைய கோயிலில் வள்ளி-முருகன்-தெய்வயானை சுயம்பு மூர்த்திகள் உள்ளன. பாம்பாட்டிச் சித்தர் குகை உள்ளது.

மலைக்கோயிலில் மருதமலை ஆண்டவன் கண்கண்ட தெய்வ மாகக் கலியுக வரதராகத் திகழ்கின்றார். தினமும் நான்கு கால

பூசனை உண்டு. கார்த்திகைதோறும் சிறப்பு வழிபாடு நிகழ்கின்றது. முருகன் விழாக்களைக் கோவை அடியார்கள் திரண்டு நிகழ்த்துகின்றனர்.

தங்குவோர்க்கு விடுதிகள் உள்ளன. கோவையே மருத மலைக்குள் திரண்டுவிடுவதை விழாக்காலங்களில் காணலாம்.

எண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட திருமுருகன்பூண்டிக் கல்வெட்டில் மருதமலை பற்றிய குறிப்பு உள்ளது. மருதாசல மூர்த்தி சதகம், மருதாசலபதி தாய் மகள் ஏசல் முதலிய நூல்கள் உள்ளன.

திருப்புகழில் "திரிபுரமதனை ஒரு நொடியதனில்" என்ற பாடலில் "அணி செயும் மருதமலையோனே" என்பதனையே "அருணையில் உரையும்" என்ற பாட பேதம் கொண்டுள்ளனர் என்று கருதுவாரும் உளர். சிவக்கவிமணியவர்கள் மருதாசலபதி உயிர்வருக்கமாலையைப் பாடியுள்ளார். வண்ணச்சரபம் சுவாமிகள் முருகன் வண்ணப்பதிகமும், திருப்புகழும் இத்தலத்திற்குப் பாடியுள்ளார். சிரவணபுரம் கந்தசாமி சுவாமிகள் மருதமலை அலங்காரம், மருதமலை யமக அந்தாதி, மருதமலை சந்தப்பதிகம் ஆகியவற்றைப் பாடியுள்ளார்.

அருணகிரிநாதர் அடிச்சுவடு இத்தலத்திலும் பட்டிருக்கலாம் ஆனால் இன்று அமரர் சின்னப்பாதேவர் திருப்பணிகொண்டு தெய்வீகப் பொலிவுடன் குன்றுதோறாடலில் சிறந்த தலங்கள் வரிசையில் மருதமலை திகழ்வது கண்கூடு.

## மதுரம் குதிபாயும் குருடிமலை

கருடன் மிசைவரு கரிய புயலென
கமல மணியென வுலகோரைக்
கதறி யவர்பெயர் செருகி மனமது
கருதி முதுமொழி களைநாடித்

திருடி யொருபடி நெருடி யறிவிலர்
செவியில் நுழைவன கவிபாடித்
திரியு மவர்சில புலவர் மொழிவது
சிறிது முணர்வகை யறியேனே

வருடை யினமது முருடு படுமகில்
மரமு மருதமு மடிசாய
மதுர மெனுநதி பெருகி யிருகரை
வழிய வகைவகை குதிபாயுங்

குருடிமலையுறை முருக குலவட
குவடு தவிடெழ மயிலேறுங்
குமர குருபர திமிர தினகர
குறைவி லிமையவர் பெருமானே.

(திருப்புகழ்)

அருணகிரிநாதசுவாமிகள் போற்றிப்பரவிய குருடிமலையைக் காணும் முயற்சியில் பலமாதங்கள் செலவிடநேர்ந்தது. குருடிமலையாயிற்றே நமக்கணைக் குருடாக்கிக்காட்டா நின்றது. கொல்லம் அன்பர் ஸ்ரீராம் மூலம் அத்தலத்தைக்கண்டுபிடித்து விட்டோம். மருகனின் தலத்தை மாமன் கைப்பற்றிப்படுத்து விட்டார். ஆம்! முருகன் கோயில் கடந்த 50 ஆண்டுகட்கு முன்பு திருமால் கோயிலாகித் தற்போது மேல்முடிரங்கநாதசுவாமி திருக்கோயில் என அழைக்கப்படுகின்றது.

கோயம்புத்தூரிலிருந்து 26, 11A, 85, 103 எண்களுள்ள ஏதாவதொரு பஸ்மூலம் சின்னத்தடாகம் என்ற ஊரை அடைகிறோம். அதற்கருகே குருடிமலை அமைந்துள்ளது இங்கே மலை மீது கோயில் உள்ளது. மலைமீது ஏறிச்செல்ல படிக்கட்டுகள்-பாதை ஏதும் சரியாக இல்லை. நன்கு பழக்கமுள்ளவர்கள் துணையுடன் மலையேறவேண்டும். 5 மைல் நடந்து மலை உச்சிக்கோயிலை அடையலாம். மலைக்கோயிலை அடைய 2½ மணி ஆகிறது. ஐம்பது ஆண்டுகளாக அக் கோயிலுக்குச் சென்றுவரும் சின்னத்தடாகம் திரு. கிருஷ்ண செட்டியார் அவர்களும், பன்னிமடையைச் சேர்ந்த திருவாளர் நடராசனும் பழனிசாமியும் நமக்கு உதவுகிறார்கள் குருமரிஷிமலை என்ற பெயர்கொண்ட இம்மலைக்குருடிமலை என மருவிற்று என்று கூறுகின்றனர்.

மலைமீது அருள்மிகு அரங்கநாதர் கோயிலில், ஒரு செவ்வகக் கல் உள்ளது. இது முருகனாக வழிபடப்பெறுகிறது. அது கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. முருகனின் அருவத்திருக்கோலம் போலும்! மேலும் விநாயகர், கன்னியம்மன் திருவுருவங்களும் உள்ளன. 1976ம் ஆண்டுவரைக் கூரைக்கட்டிடமாக இருந்த தொன்மையான இக்கோயிலை மேற்சொன்ன திருவாளர்கள் நடராசன், பழனிசாமி ஆகியோர் பொதுமக்கள் உதவியால் மண்டபம் முதலியன அமைத்து 1976ல் குடமுழுக்கு நிகழ்த்தினர். மலைமீதுள்ள இக்கோயிலில் ஒருசாது தினமும் மூன்றுகாலம் பூசை நிகழ்த்துகிறார். கோயிலில் ஒரு இச்சிமரம் உள்ளது. சுற்றிலும் காடுகள் கோயிலுக்கருகில் ஒரு நீர்ச்சுனை உள்ளது சனிக்கிழமைகளில் மக்கள் சென்று சிறப்பாக வழிபடுகின்றனர். புரட்டாசி மாதம் சிறப்புடையது அருணகிரிநாதர் இங்கே வந்து பாடினார் என்று இங்கே உள்ளவர்களும் கூறுகிறார்கள்.

இத்தலத்திருப்புகழ் "கருடன் மிசைவரு கரியபுயல்" என்று தொடங்குவதற்கேற்பத் திருமால் கோயிலாகி விட்டதுபோலும்! முருகனடியார்கள் இத்தலத்தை அடைந்து வழிபடப் பாதை வசதிகள் அமைக்கப்படவேண்டும். இங்கு முருகன் கோயிலும் பொலிவுற வேண்டும். குன்றுதோறாடலில் மிகச் சிறந்த ஒரு தலமாக ஆன்மீக வளம் நல்கும் அமைப்புடைய இத்தலம் தனியார் நிர்வாகத்தில் உள்ளது. கோவையிலிருந்து வந்து வழிபட்டுச் செல்லலாம்.

## "அவிநாசிப்புக்கொளியூர் அருள்நேசன்"

சைவ நன்னெறியின் சீலமுய்யத் திருத்தொண்டத்தொகை அருளிய சுந்தரமூர்த்தி சுவாமிகள், சேரர் பெருமானை நினைந்து மலைநாடு செல்லும்போது வழியிடையில் கொங்குநாட்டில் முதல் வழிபாடாக வணங்கிப் பதிகம் பாடிய தலம் திருப்புக்கொளியூர் அவிநாசி. இது முதலையுண்ட பாலகனைத் திருவருள் துணை கொண்டு அவர் அழைத்துக்கொடுத்த தெய்வீகச்செயல் நிகழ்ந்த இடமாகும். காசிவிசுவேசுரனைத்தரிசித்தப்பலனைத் தரவல்லது "காசியில் வாசி அவிநாசி". மணிவாசகப்பெருமான் "அரிய பொருளே அவிநாசியப்பா!" என்றழைத்து ஆனந்தமாலை பாடுகின்றார். திருப்புக்கொளியூர் என்பது தலப்பெயராகவும், அவிநாசி என்பது கோயிற்பெயராகவும் வழங்கப்பெற்று, பின்னர் கோயிற் பெயரே தலப்பெயராக அமைந்தது.

கமலையில் பிறக்கமுத்தி, தில்லையைத்தரிசிக்கமுத்தி, அருணையை நினைக்கமுத்தி, காசியில் இறக்கமுத்தி, ஆலவாய் என்று கூறமுத்தி, அவிநாசி என்று கேட்க முத்தி என்பது ஆன்றோர் அருளுரை.

ஈரோடு-கோவை பஸ்வழியில் அவிநாசி அமைந்துள்ளது. ஈரோடு, திருப்பூர், கோவை முதலிய நகரங்களிலிருந்து பஸ் வசதி அதிகம். திருப்பூர் இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 8 கல் தொலைவுதான். டவுன்பஸ் வசதி உள்ளது.

அண்மையில் புதிய ராஜகோபுரம் கட்டப்பெற்றுக் குடமுழுக்குவிழாக்கண்ட தொன்மையான கோயில் அவிநாசியப்பர் திருக்கோயிலாகும். சிவபெருமான் அவிநாசியப்பர்: இறைவி: பெருங்கருணைநாயகி.

இங்கே பாலதண்டாயுதபாணி சந்நிதியும் சுப்பிரமணியர் சந்நிதியும் புதிதாக அறுகோண அமைப்பில் எழுப்பப்பெற்றுள்ள செந்தில்நாதன் சந்நிதியும் ஆறுமுகனை வணங்க அமைந்த திருக் கோயில்களாகும். அம்பிகை சந்நிதிக்கும் அவிநாசியப்பர் சந்நிதிக் கும் நடுவே முருகன் சந்நிதி விளங்குவது சோமாஸ்கந்த வடிவினை நினைப்பூட்டுகின்றது.

உற்சவர் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு வள்ளி தேவயானையுடன் விளங்குகின்றார். மற்றொரு உற்சவமூர்த்தி குமாரசுப்பிரமணியராக விளங்குகின்றார். வீரபாகுதேவருக்கும் உற்சவ விக்கிரகம் உள்ளது.

இங்கு திருவிழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன. தினமும் ஆறுகால பூசை ஆகம முறைப்படி நிகழ்கின்றது. வைகாசி விசாகம்–தண்டபாணி சுவாமிக்கு விழா நடைபெறுகின்றது. பங்குனி மாதத்தில் சுந்தரர் முதலைவாயினின்றும் பாலகனை மீட்ட விழாவும், அறுபத்துமூவர் விழாவும் சிறப்பாக நடைபெறும்.

இத்தலத்தில் காசிக்கங்கை தீர்த்தம் (சதுரக்கிணறு), தெப்பத்திருக்குளம், (சிவதீர்த்தம், சந்திரபுஷ்கரணி, பிரம்ம தீர்த்தம், கபிலதீர்த்தம், செல்லங்க சமுத்திரம்எனவும் அழைக்கப் பெறுவது), நாககன்னிகை தீர்த்தம், நள்ளாறு (நல்லாறு, சாதாரி நதி எனப்பெயர் கொண்டது), சுந்தரர் முதலையுண்டபாலகனை மீண்டும் வரவழைத்த ஏரியான தாமரைக்குளம்–ஆகிய புண்ணியப் புனல்கள் உள்ளன.

இங்கு அருணகிரிப்பெருமான் அருமையான ஆறுதிருப் புகழ்ப்பாக்களால் முருகப்பெருமானை வழிபட்டுப் பரவினார். "இறவாமற்...","பத்தப்பொற்","மனத்திரைந்" "பக்குவஆசார" "மதப்பட்ட", "வனப்புற்றெழு" என்று அவை தொடங்கு கின்றன.

*இறவாமற் பிறவாமற்*<br>
*எனையாள்சற் குருவாகிப்*<br>
*பிறவாகித் திரமான*<br>
*பெருவாழ்வைத் தருவாயே*<br>
*குறமாதைப் புணர்வோனே*<br>
*குகனேசொற் குமரேசா*<br>
*அறநாலைப் புகல்வோனே*<br>
*அவிநாசிப் பெருமானே.*

அருணகிரிநாதர் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் சரிதத்தைச் சுருக்கமாகக் கூறுகிறார் இத்தலத்திருப்புகழில்!

இதப்பட்டிடவே கமலாலய
ஒருத்திக்கிசை வான பொனாயிரம்
இயற்றப்பதி தோறு முலாவிய தொண்டர்தாள
இசைக்கொக்க விராசத பாவனை
யுளப்பெற் றொரு பாடிடவேடையில்
இளைப்புக்கிட வார் மறையோனென வந்துகானிற்
றிதப்பட்டெதி ரேபொதி சோறினை
அவிழ்த்திட்ட விநாசியிலேவரு
திசைக்குற்ற சகாயனுமாகிம றைந்துபோமுன்
சொறிபித்த கராவதின் வாய்மக
வழைப்பித்த புராணக்பாகர
திருப்புக் கொளியூருடையார் புகழ் தம்பிரானே.

(மதப்பட்ட...)

இப்பாடலில் சுந்தரர்கமலாலயத்தில் பொன் எடுத்தது, இறைவன் பொதி சோறு அளித்தது, திசைகாட்டி உதவியது, முதலைவாயி லிருந்துபாலனை மீட்டது ஆகிய அருளாடல்களைச் சிறப்பித்துப் பாடியுள்ளார் சுவாமிகள். துற்குணம் வேறாக, ஞான உபதேசம் பேசு சற்குருநாதா! உன் அற்புதச் சீர்பாதம் மறவேனே என இத் தலத்தில் முருகவேளிடம் நன்றியும் பாராட்டினார்.

முதலையுண்டபாலனைச் சுந்தரர் அழைத்து இத்தலத்தில் உலகர் முன் காட்டினபடியாற் இத்தலத்தைக் கலிபுருடனை வென்ற உண்மை அருட்சீர் விளங்கும் ஊர் என்னும் பொருளில்

பொய்க்கலி போமாறு மெய்க்கருள் சீரான
புக்கொளியூர்மேவு பெருமாளே

என்று போற்றினார். இத்தலத்தில் பல திருவிழாக்கள் சிறப்பாக அக்காலத்தில் நடைபெற்றன என்பதைக்காட்ட

"விழாமலி
திருப்புக் கொளியூரில்மேவு தேவர்கள் தம்பிரானே"

என்றும் போற்றினார்.

அவிநாசியின் சிறப்புக் காசியின் சிறப்பினை விஞ்சி நிற்பது. நம்மை நாசமடையாமல் காக்கும் பொற்பகுதி இது.

இத்தலத்தில் சுந்தரர் தேவாரம்

*எற்றான் மறக்கேன் எழுமைக்கும் எம்பெரு மானையே*
*உற்றாயென்(று) உன்னையே உள்குகின்றேன் உணர்ந்து உள்ளத்தால்*
*புற்றாடரவா! புக்கொளியூர் அவிநாசியே!*
*பற்றாகவாழ்வேன் பசுபதியே! பரமேட்டியே!*

என்று தொடங்குகிறது. அப்பர் சுவாமிகள் திருக்கொட்டையூர் திருத்தாண்டகத்தில் இத்தலத்தை வைப்புத்தலமாகப் போற்று கின்றார். திருவாசகத்தில் ஆனந்தமாலையில் அவிநாசியப்பா! என்று மணிவாசகர் போற்றுவார்.

இவற்றையன்றி, முத்துநாகப்ப முதலியார் இயற்றிய அவிநாசிநாதர் பதிகமும், கந்தசாமி முதலியார் இயற்றிய பெருங்கருணாம்பிகை பதிகமும், சிவக்கவிமணி C. K. சுப்பிரமணிய முதலியார் பாடிய பெருங்கருணையம்மை பிள்ளைத்தமிழும், கருணை தாசர் இயற்றிய அவிநாசிக்கருணையந்தாதி ,அவினாசிக் கருணாகர மாலைகளும், இராமநாதநாயுடு இயற்றிய அவிநாசிநாதர் திருப்பள்ளி எழுச்சியும், இளையான்கவிராயர் இயற்றிய அவிநாசிப் புராணமும், குமாரசாமிப்பிள்ளை இயற்றிய அவிநாசிநாதர் உலாவும், வண்ணச்சரபம் தண்டபாணிசுவாமிகள் இயற்றிய அவிநாசித் திருப்பதிகங்களும் வடலூர் இராமலிங்கசுவாமிகள் பாடல்களும், உறையூர் அருணாசல முதலியார் இயற்றிய அம்பிகைப்பாமாலையும் இத்தலத்திற்கு உள்ளன.

இத்தலத்தில் புக்கொளியூர் வாகீசர்மடம், கருணாலய சுவாமிகளமடம், சுப்பையசுவாமிமடம், காடாம்பாடி ஐந்நூற்றுச் செட்டியார்மடம், தேவேந்திர வேளாளர்மடம், கோவம்சத்தார் மடம், அகமுடையார்மடம், விசுவகர்மாக்கள்மடம், பன்னிரண் டாம் செட்டியார்மடம் முதலிய திருமடங்களும் பார்வதி கல்யாணமண்டபம், கங்காதரசெட்டியார் சத்திரம், குலாலர் கல்யாணமண்டபம், கருணாம்பிகை கல்யாணமண்டபம், கோவம் சத்தார் கல்யாணமண்டபம் முதலிய திருமண விடுதிகளும் உள்ளன.

உணவு விடுதிகளும் உள்ளன.

பாதிரிமரத்து அம்மன்கோயில், சுந்தரர் தனிக்கோயில், கரிவரதராஜப்பெருமாள் கோயில், அநுமார்கோயில், காசிவிசுவநாதர்கோயில், அழகுநாச்சியம்மன் கோயில், அங்காளபரமேசுவரி கோயில், வடபத்ரகாளி கோயில், ஆகாசராயன் கோயில் முதலியன இத்தலத்திலுள்ள பிற கோயில்களாகும்.

இத்தலத்தருகே 10 கி. மீ. தொலைவில் திருமுருகன்பூண்டி திருக்கோயிலும், 9 கி. மீ. தொலைவில் கருவலூர் மாரியம்மன் கோயிலும் உள்ளன.

அறநிலையத்துறை ஆட்சியின் கீழ் இக்கோயில் நிர்வகிக்கப் படுகிறது.

அண்மையில் பெருஞ்சிலவு செய்து கோவை கௌமரா மடாலய அதிபர் தவத்திரு சுந்தர சுவாமிகள் தலைமையிலான திருப்பணிக்குழுவினர் அற்புதமாகத் திருப்பணிகளைச்செய்து குடமுழுக்காட்டிய புதுமெருகுடன் இக்கோயில் திகழ்கின்றது.

# திருமுருகன் பூண்டிச் சிவகுமரன்

தம்பிரான் தோழரான சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனுர் அளித்த அளவற்ற பொருளிகளை ஆட்களின் தலையில் ஏற்றிக் கொண்டு வருகிறுர். திருமுருகன் பூண்டிக்கு அருகில் வரும்போது சிவபெருமான் ஏவலால் பூதங்கள் வேடுவராகி வந்து அவற்றைப் பறித்துப் போயினர். சுந்தரர் இத்தலத்துக்கு வந்து பதிகம் பாடி, சிவபெருமான் அருளால் இழந்த பொருள்களை மீண்டும் பெற்ருர்.

*வில்லைக்காட்டி வெருட்டி வேடுவர் விரவலாமை சொல்லிக்*
*கல்லிஞல் எறிந்திட்டும் மோதியும் கூறை கொள்ளுமிடம்*
*முல்லைத்தாது மணங்கமழ் முருகன் பூண்டி மாநகர்வாய்*
*எல்லை காப்ப தொன்றில்லை யாகில்நீர் எத்துக்கிங்கிருந்தீர்*
*எம்பிரானிரே.*

என்று ஏசுகின்ருர் சுந்தரர். தம்பிரானுக்குத் தோழராதலின் அத்துணை உரிமையோடு பேசுகின்ருர்.

திருப்பூரிலிருந்து வடக்கே 5 கல் தொலைவிலுள்ளது, திருமுருகன் பூண்டி. திருப்பூர்-அவிநாசி பஸ் வழியில் உள்ளது. அவிநாசிக்கு அண்மையிலுள்ள தலம் ராக்கியாபாளையம் கிராமத்தில் இக்கோயில் உள்ளது.

இங்கு முருகப் பெருமான் சிவபெருமானைப் பூசித்தார். ஆம்! சூரசம்ஹாரத்தால் ஏற்பட்ட பாவங்கள் நீங்க இங்கு பரமனை வழிபட்டார் செவ்வேட் பரமன்! இத்தலத்திற்கு வருகிருர் அருணகிரிநாதர். ஆறுமுகப் பெருமானின் அருளொழுகு திருவடியில் தன்னைக் கரைத்துக் கொள்கிருர்; பரவிப் போற்றுகின்ருர்! வேறு எத்தலத்திலும் காண இயலாத

அற்புத வேண்டுகோள் இங்கு அவர் திருவாயிலிருந்து வெளி வருகிறது. முருகா! ஆண்டுக்கு ஒருநாளேனும் தப ஜெபத்தை நான் மனக் கனிவுடன் தீண்டவும், உன் திருவடியைப் போற்ற வும் அருள மாட்டாயா? என்று அருள் வேண்டுகிறார்.

*அவசிய முன்வேண்டிப் பலகாலும்*
*அறிவினுணர்ந் தாண்டுக் கொருநாளில்*
*தவசெபமுந் தீண்டிக் கனிவாகிச்*
*சரணமதும் பூண்டற் கருள்வாயே*
*சிவதமொடுந் தாண்டித் தகருர்வாய்*
*சடுசமயங் காண்டற் கரியானே!*
*சிவகுமரன் பீண்டிற் பெயரானே*
*திருமுருகன் பூண்டிப் பெருமாளே!*

இங்ஙனம் ஆண்டுக்கு ஒருமுறையேனும் ஆண்டவனைத் தரிசித்துப் பாடித் துதிக்கும் அனுட்டானம் இப்போது முருகன் தலங்களில் திருப்படி விழாக்களாகப் பெருகி வருவது கண்கூடு. ஞானிகள் சொல் பொய்ப்பதில்லையன்றோ! வள்ளிமலை ஸ்ரீ சச்சிதானந்த சுவாமிகள் 1921-ஆம் ஆண்டுமுதல் திருத்தணி திருப்படி விழாவைப் பிரபலமாக்கினார்! ((1917-ஆம் வருடமுதல் தணிகைமணி குடும்பத்தாரால் இது நடத்தப்பட்டு வந்தது.)

கந்தமாபுரி, முல்லைவனம். மாதவிவனம் என்றெல்லாம் போற்றப் பெறும் இத்தலத்தில் சிவபெருமான் திருமுருக நாதேசுவரராகவும் இறைவி முயங்கு பூண்முலை வல்லியம்மை யாகவும் எழுந்தருளியுள்ளனர்.

ஆறுமுகமும் பன்னிருகரங்களும் கொண்டு மயில் பின்புறம் விளங்க தென்திசையை நோக்கிச் சுப்பிரமணியர் கம்பீரமாக நின்ற திருக்கோலத்தில் இங்கே விளங்குகின்றார். உற்சவர் வள்ளி, தெய்வயானையுடன் விளங்குகின்றார்.

நடராஜர், நவநாயகம், பஞ்சலிங்கம், சூரியன், தட்சிணா மூர்த்தி, பவானீசுவரர், சண்டேசர், சண்டேசுவரி, பைரவர் போன்ற சந்நிதிகளும் உள்ளன.

காரண, காமிகாகம முறையில் நான்குகால வழிபாடு தினமும் நடைபெறுகின்றது.

கேதுவுக்கு தனிக்கோயில் உள்ளது. நீலகண்டியம்மன் கோயிலும் உள்ளது.

விநாயகர் சதுர்த்தி, நவராத்திரி, மார்கழித் திருவிழா, மாசிமகம், தேர்த்திருவிழா முதலிய விழாக்கள் கொண்டாடப் பெறுகின்றன.

கார்த்திகை, சஷ்டி, விசாகம், போன்ற நாட்களில் சிறப்பு வழிபாடும் நிகழ்கின்றன.

பிரம்ம தீர்த்தம், ஞான தீர்த்தம், சண்முக தீர்த்தம் இவை மூன்றும் கிணறுகள்-புண்ணியப் புனல்கள்.

தலவிருட்சம்–மாதவி (குருக்கத்தி)

இங்கே சித்தப்பிரமை பீடித்தவர்கள் வழிபட்டு நலம் அடைகின்றார்கள் பிரமஹத்தி தோஷம் நீங்குகின்றது. மன நோய் உடையவர்கள் 12, 24, 36, 48 நாட்கள் தங்கி வ்ழிபட்டு நலம் பெறுகின்றார்கள். அவர்கள் தங்குவதற்கு அறைகள் கட்டித் தரப் பெற்றுள்ளன.

மாமாங்க விநாயகர், கரிவரதராஜப் பெருமாள், மாதவி வனேசுவரர் கோயில்களும் இத்தலத்தில் உள்ளன.

இத்தல புராணம் செட்டிப்பாளையம் வாசுதேவ முதலியாரால் இயற்றப் பெற்றுள்ளது.

அறநிலைய ஆட்சித் துறையினரால் இக்கோயில் நிர்வாகம் செய்யப்படுகிறது. கி. பி. 10-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்கள் இத்தலத்தில் உள்ளன.

கொங்கணகிரி, திருப்பூர், சென்னிமலை, கைத்தமலை, சிவன்மலை, அழகுமலை, வட்டமலை, முதலிய தலங்கள் இதற்கருகில் அமைந்துள்ளன.

# தென்சேரிகிரி சண்முகதேவர்

*சிங்கார அரிமருக பங்கேருகனுமருள*
*சென்றேயும் அமராருடை சிறைமீளச்*
*செண்டாடி அசுரர்களை ஒன்றாக அடியர்தொழு*
*தென்சேரி கிரியில்வரு பெருமாளே!*

(எங்கேனும்...திருப்புகழ்)

*தீண்டாடச் சிந்து நிசிசரர்*
*தொண்டாடக் கண்ட அமர்பொரு*
*செஞ்சேவற் செங்கை யுடையஷண் முகதேவே*
*சிங்காரச் செம்பொன் மதிளத*
*லங்காரச் சந்த்ர கலைதவழ்*
*தென்சேரிக் குன்றி லினிதுறை பெருமாளே!*

(கொண்டாடிக் திருப்புகழ்)

"ஓராறு முகத்தான், உகந்த மயிலுடையான், உம்பர் போற்றும் ஈராறு கரத்தான் எமை அடிமை கொண்டான், எழிற் சீராரும் பகத்தான் தென்சேரி கிரியான்" என்று தென்சேரி கிரித்தல புராண ஆசிரியர் அம்மையப்பர் காட்டும் தென்சேரிகிரி முருகன் இன்று செஞ்சேரிமலை முருகனெனத் திகழ்கின்றான். மந்திராசல வேலாயுத மூர்த்தியாகிய ஆறு முருகப் பெருமான் விளங்கும் இத்தலம் பல்லடம்-உடுமலைப்பேட்டை பஸ் வழியில் 18 கி. மீ. தொலைவிலுள்ளது தென்சேரிகிரி மருவி செஞ்சேரி மலையாகி விட்டது. கோவை, உடுமலை, திருப்பூர், பொள்ளாச்சி, காங்கேயம், பல்லடத்திலிருந்து பஸ் வசதி நிறைய உள்ளது. நினைப்பவரைக் காப்பாற்றும் மலை (மந் + திர + கிரி) என்ற பொருளில் "ஊனமற்றிடப் பதவியும் கொடுப்பதால் உயர்ந்த ஞானமேவு தென்சேரிகிரி மாமலை" திகழ்கின்றது.

மலை அடிவாரத்திற்கு மலைப்பாளையம் எனப் பெயர் இங்கே தங்கும் திருமடங்கள் உள்ளன.

மலையில் 300 படிகள் ஏறிச் சென்று முருகன் ஆலயத்தை யும், சிவாலயத்தையும் அடைகின்றோம். அழகே உருவான வேலாயுத சுவாமி இத்தலத்தில் சேவற்கொடிக்குப் பதிலாகச் சேவலையே கொண்டுள்ளார். இதனை அருணகிரி வள்ளல் ''செஞ்சேவற் செங்கையுடைய சண்முகதேவே'' என்று இத் தலத் திருப்புகழில் பரவுகின்றார். ஆறுமுகப் பெருமானின் வலப்புறம் விநாயகரும் பிரசன்னநாயகியும், இடப்புறம் கயிலாய நாதரும் எழுந்தருளியுள்ளனர்.

கோயிலின் வடப்பக்கம் உள்ள சபரிவேலாதகம் (ஞான தீர்த்தம்) புண்ணியப் புனல் ஆகும். இச்சுனை வற்றுவதில்லை. மனநோய்க்கும் இது மருந்தாகும். கோயில் சூழலில் பல தீர்த்தங் களும் குகைகளும் உள்ளன தலவிருட்சம் : கருநொச்சி.

இக்கோயிலில் ''பூக்கேட்டல்'' சிறப்பு. தமது எதிர்கால நடப்புகளைத் தெரிந்து கொள்ள ஆறுமுகப் பெருமான் ஓரிரு திருக் கரங்களில் பூ வைத்துக் கணிப்பர். ஐந்து நிமிடங்களுக்குள் வலக்கரத்திலிருந்து பூ விழுமாயின் நினைத்தகாரியம் வெற்றியாம்; இடக்கரத்தினின்று விழின் தோல்வியாம்; காலம் கடந்தும் விழவில்லை எனில் காலதாமதமாம் என்று கொள்கின்றனர்.

காரணாகம முறையில் தினமும் நான்குகால பூசை நிகழ் கின்றது. வைகாசி விசாகம், தைப்பூசம், பங்குனி, உத்திரம் விழாக்கள் நடை பெறுகின்றன.

கருவறையின் வாயிற் புறங்களில் கல்வெட்டுக்கள் பல உள்ளன. மர எழுத்துக்களையும் காண்கிறோம்.

தைப்பூசத்தன்று தேர் விழாவும், ஐப்பசிக் கந்தர் சஷ்டி விழாவும் சிறப்புடையன.

இத்தலத்திற்கு மேற்கில் 1 கி. மீ. தொலைவில் உள்ள விண்டுமலை—சக்தி வடிவாகக் கருதப்பட்டு சக்திகிரி என்று அழைக்கப்படும். அம்மலைமீது திருமால் நின்ற திருக்கோலத்தில் விளங்குகின்றார்.

இத்தல புராணத்தில் இத்தலம் பற்றிய பல அற்புதச் செய்திகள் கூறப்பட்டுள்ளன. பன்னிரு சருக்கமும் 255 பாடல்களும் உள்ளன

அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளன சென்னிமலை, மருதமலை, பழனிமலைத் தலங்களுடன் எண்ணித்துதிக்க வேண்டிய தலம் இது.

ஆனதினால் தெனசேரித் தலமகிமை
　　தனைப்புகல்வோர் அன்பாய்க் கேட்போர்
மாநிலத்தில் கலிவினையும் பலவினையும்
　　தானகன்று வாழ் குபேரன்
தானென வாழ்ந்திருந் திம்மைப் பயனடைந்து
　　தேவர் தபோதனர்கள் போற்ற
மேனிலைசேர் கந்தவெற்பிற் குகனடியாம்
　　பதத்தினில் வீற்றிருப்பர் மதோ!

—தென்சேரிகிரித் தலபுராணம்
(அம்மையப்பர்)

# வாணிகூடற் பெருமாள்

காவிரி, பவானி, அமுதநதி (சிறுவாணி) என்னும் மூன்றும் சங்கமமாகும் தலம் பவானி என்று அழைக்கப்படுகிறது. ஈரோட்டிலிருந்து வடக்கே 15 கி. மீ. தொலைவிலுள்ளது இத்தலம்: இங்கு எழுந்தருளியுள்ள சிவபெருமான் சங்கமேசுவரர் என்றழைக்கப் படுகிறார். இங்கு இறைவனை வழிபடும் அடியார்களை எவ்வகைத் தீங்கும் நண்ணாது (அணுகாது) நண்ணாவூர்–என்ற பொருள்பட "நணா" என்ற பெயரும் இத்தலத்திற்குண்டு. தேவாரத்தில் இத் தலம் திருநணா என்று அழைக்கப்படுகிறது. பவானி என்னும் இத்தலப்பெயர் சங்கமருவிய தமிழ்நூல்களுள் வரும் வாணி என்ற பெயரின் திரிபு என்று கூறுவர்; பவானிமுக்கூடல் என்ற பெயரும் உண்டு.

திருஞானசம்பந்தர் இத்தலத்தில் பதிகம்பாடிப்பரவியுள்ளார். மூன்றுநதிகள் சங்கமம் ஆவதோடு ஐந்துமலைகளுக்கிடையே இத்தலம் அமைந்து விளங்குகின்றது: பத்மகிரி, நாககிரி, (திருச்செங்கோடு), சங்ககிரி, மங்கலகிரி, வேதகிரி என்பன அவை.

ஈரோட்டிலிருந்தும் திருச்செங்கோட்டிலிருந்தும் இத்தலத் திற்கு நிறைய பஸ்வசதி உள்ளது.

பராசரர் பூசித்ததால் இத்தலம் பராசரக்ஷேத்திரம் என்ற பெயரும் கொண்டுள்ளது.

இங்கே அருள்மிகு சங்கமேசர் கோயில் வலப்பாலும், வேதநாயகி அம்மன்கோயில் இடப்பாலும், முருகன் திருக்கோயில் நடுவிலும் அமைந்து சோமாஸ்கந்த வடிவத்தை நினைவுக்கூரச் செய்கிறது. அருணகிரிவள்ளல் இத்தகு அற்புதத்தலத்தைத் நண்ணி, முருகனைப்பரவிப் பாடிப்போற்றினர்:

கலைமேவு ஞானப் பிரகாசக்
கடலாடி ஆசைக் கடலேறி
பலமாய வாதிற் பிறழாதே
பதிஞான வாழ்வைத் தருவாயே
மலைமேவு மாயக் குறமாதின்
மனமேவு வாலக் குமரேசா
சிலைவேட சேவற் கொடியோனே
திருவாணி கூடற் பெருமாளே!

இங்கே முருகவேள் ஆறுமுகமும் பன்னிருகரங்களும் கொண்டு தேவிமாருடன் மயிலமீதமர்ந்து வேலுடன் விளங்குகின்றார். சண்முக சுப்பிரமணியம் என்று இங்கே அவர் போற்றப்படுகிறார். உற்சவர் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு மயிலருகில்நின்றதிருக்கோலத்தில் தேவிமாருடன திகழ்கிறார்.

காரணாகமமுறையில் மூன்றுகாலவழிபாடு இஙகே நாடோறும் நிகழ்கின்றது.

இங்கே வலம்புரி விநாயகர், தட்சிணாமூர்த்தி, ஜுரஹரேசுரர், காசிவிசுவநாதர், விசாலாட்சி, ஆதிகேசவப்பெருமாள், சௌந்தரவல்லித்தாயார் சந்நிதிகளும் உள்ளன.

இங்கே சித்திரையில் பிரம்மோற்சவம் (11 நாட்கள்), ஆடிப்பெருக்கு, விநாயகசதுர்த்தி, கார்த்திகைதீபவிழா, வைகுண்ட ஏகாதசி, ஆருத்ராதரிசனவிழா முதலியன சிறப்பு விழாக்களாகும்.

இத்தலத்தில் காவிரி இடப்பக்கமும், பவானியும் அமுத நதியும வலப்பக்கமும் சங்கமமாகுமிடத்தில் அமுததீர்த்தம் உளளது. தலவிருட்சம்-இலந்தை (பதரிவிருட்சம). ஆகவே பதரிகாவனம் எனவும் இத்தலம் அழைக்கப்பெறும்.

பராசரர், விசுவாமித்திரர், தந்துவர்த்தனர், வக்ராசுரன் முதலியோர் வழிபட்டதலம் இது என்பர்.

தொன்மையான ஆலயம் இது. அறநிலைய ஆட்சித்துறையின் கீழ் நிர்வகிக்கப்படுகிறது. விடுதிகள் கல்யாண மண்டபங்கள் உள்ளன.

நெசவுத்தொழிலில் சிறப்புடையது இவ்வூர். பவானி ஜமுக்காளம் புகழ்பெற்றது. அருகில் குமரபாளயம் நெசவுத்தொழில் சிறப்புமிகுதி.

இத்தலத்திற்கருகே வட்டமலை வேலாயுதசுவாமிகோயில் சென்னிமலை ஆண்டவர் கோயில், திண்டல்மலை முருகன்கோயில் முதலியன உள்ளன.

கோவையில் 1804-ல் கலெக்டராக இருந்த வில்லியம் கேரோ என்பவருக்கு இத்தலத்து அம்பிகை அருள்பாலித்ததைப் போற்றி, அவர் அம்பிகைக்கு அர்ப்பணித்த தந்தக்கட்டில் இன்றும் உள்ளது.

சிரிக்கும்சிலை, ஒரே கல்லில் செய்த கற்சங்கிலி, கருவறையில் கற்களை-மரங்களைப் போன்று இணைப்பு தெரியாமல் சேர்த்துக் கட்டப்பட்ட அழகு-இவை கண்ணிற்கும் கருத்திற்கும் விருந்தாகும். வாசுதேவமுதலியார் பாடிய தலபுராணம் உள்ளது.

அமிருதலிங்கம், சகஸ்ரலிங்கம், காயத்ரிலிங்கம் ஆகியவை வழிபடவேண்டியவை.

*பந்தார் விரல்மடவாள் பாகமா நாகம்பூண் டேறுதேறி*
*அந்தார் அரவணிந்த அம்மா னிடம்போலும் அந்தண்சாரல்*
*வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில் வண்டுபாடச்*
*செந்தேன் தெளியொளிரத் தேமாக் கனியுதிர்க்கும்*
*திருநணாவே.*

— திருஞானசம்பந்தசுவாமிகள்.

# விஜயமங்கலத் தேவன்

விலைதருங் கோலைப் போர்வேடர் கோவென
இணையு மங்குறப் பாவாய் வியாகுலம்
விடுவிடென்று கைக்கூா வேலையேவிய இளையோனே
விறல் சுரும்புநற் கரிதேசி பாடிய
வுரைசெய் பங்கயப் பூவோடை மேவிய
விஜயமங்கலத தேவாதி தேவாகள் பெருமாளே.

(கலகசப்ப்ரமத் .. திருப்புகழ்)

ஈரோடு, வட்டத்தில் ஈரோடு-திருப்பூர் இருப்புப் பாதையில் விஜயமங்கலம் இரயில் நிலையத்திலிருந்து 3 கி. மீ தொலைவில் இத்தலம் உள்ளது. ஈரோட்டில பலவசதி உள்ளது. இங்கே சிவபெருமான் அருள்மிகு கோவர்த்தனாம்பிகை உடனுய நாகேசப் பெருமான் என்றதிருப்பெயர் கொண்டு கோயில் கொண்டுள்ளார். இத்தல முருகனுக்கு ஆறுமுகங்களும் பன்னிரு கரமும உள்ளன; மயில் மீதமர்ந்த க்காலம; இருபுறமும் தேவிமார் விளங்குகின்றனர். தென திசை நோக்கிய ஆவாசநந்தி தனிச் சிறப்பாகும. மயிலின் முகம் இடப்புறம உள்ளது. சுமார் 5 அடி உயரமுடைய அற்புத உருவமாகும.

இங்குள்ள உற்சவர் ஒரு முகமுடன், வள்ளி தேவயானை யுடன் விளங்குகிறார்.

இங்கே தத்தாத்ரேயர் சந்நிதி உள்ளது.

தினமும் இருகால வழிபாடு நிகழ்கிறது. கார்த்திகை மற்றும் திருவிழாககள் நிகழ்கின்றன. அருணகிரி வள்ளலின் அற்புதத் திருப்புகழ் நம்மை இத்தல முருகனிடம் ஆற்றுப் படுத்துகிறது.

இத்தலத்தருகே மணிவாசகப் பெருமான் சீட பரம்பரை யாதீனமான கூனம்பட்டி மணிவாசகர் திருமடம் (சிவாசார்ய மடம்) உள்ளது.

## சென்னிமலைச் சரவணன்

*பகலிரவினிற் றடுவாரு:பதி குருவெனத் தெளிபோத;*
*ரகசியமுரைத் தநுபூதி; ரதநிலைதனைத் தருவாயே*
*இபரமதற் இறைவனே; இயலிசையின முத்தமிழோனே*
*சகசிரகிரிப் பதிவேளே; சரவணபவப பெருமாளே.*

— அருணகிரிநாத சுவாமிகள்.

சிகரகிரி, புட்பகிரி சிரகிரி, சென்னியங்கிரி என்றெல்லாம் போற்றப்பெறும் இத்தலம் முருகப் பெருமான் எழுந்தருளியுள்ள குன்றுதோருடல் திருப்பதிகளில் ஒன்று. ஈரோட்டிலிருந்து கோவை செல்லும் வழியிலுள்ள ஈங்கூர் இருப்புப் பாதை நிலையத்திலிருந்து தெறகே நான்கு கல் தொலைவிலுள்ளது; ஈரோட்டிலிருந்து 18 மைல். நிறைய பஸ் வசதி உள்ளது. இப் பகுதியில் சென்னிமலையும சிவனமலையும் (பட்டாலியூா) முருகனுக் கமைந்த இணையொத்த தலங்களாகக கூறுவர். சென்னிமலையில தயிறும் சிவன்மலையில் பாலும முருகனுக்கு மிகவும் உவப் புடையன என்பர். சென்னிமலையில் தயிர் புளிப்பதில்லை என்று தலமான்மியம் கூறும்.

*சென்னிமலை வேலருக்குச் சேர்கொம் பிரண்டுண்டு*
*கன்னிகுற வள்ளிக்குக் காலில்லை-இன்னிலையே*
*ஆட்டுக்குக் காலில்லை யானைக்குக் கொம்பில்லை*
*பாட்டுகளுள் ஆராய்ந்து பார்.*

என்பது இத்தலத்தைப் பற்றி உலக வழக்கில் வழங்கும் பழம் பாடலாகும்.

திருஞான சம்பந்தருக்கும் திருநாவுக்கரசருக்கும் சிவபெருமான் திருவீழிமிழலையில் படிக்காசு தந்தருளியது போன்று, சென்னிமலை முருகபிரானும் அருணகிரிநாத சுவாமிகளது திருப்புகழ்ப பாடல் கேட்டு உகந்து அவருக்குப் படிக்காசு அளித்தார் என்று சென்னிமலையாண்டவன் காதல் என்னும் நூல் பேசுகின்றது.

"நாட்டில் அருணகிரி நாதன் திருப்புகழ் சொல்
பாட்டின் மகிழ்ந்து படிக்கா சளித்த பிரான்
தாலமீகுஞ் சென்னிமலை தன்னில் வளர் கல்யாண
வாலசுப்ப ராயனென்று வாணர்புகழ் வாசலினுன்"

சென்னிமலை எல்லா மலைகளுக்கும் தலையாயதாகக் கருதப் படுவதாலோ (சென்னி–தலை), எல்லா மலைகளிலும் மிகப் பெரியதாக உள்ளதாலோ இப்பெயர் பெற்றிருத்தல் கூடும். தல விருட்சம்: திந்துருணி(புளி)யாகும். மலையில் 1300 படிகள் உள்ளன; படிகள் ஏறும்போது வள்ளிபாதம் கண்டு இடும்பன் சந்நிதியை வணங்கி மலைமேற சென்றால் புளியமரத்தின் (தலவிருட்சம்) அடியில் வீற்றிருக்கும் புளியடிப் பிள்ளையாரைக் காணலாம். மலையடி வாரத்திலிருந்து மலையுச்சிக்குச் செல்ல-கார் செல்லும். நல்ல தார்ச்சாலை வசதியும் உள்ளது. படிகளும் செங்குத்தாக இல்லாமல் சாயவாக மிகவும் நன்முறையில் அமைந்துள்ளன.

சென்னிமலையாண்டவன் தண்டபாணித் திருக்கோலத்தில் காண்போர் உள்ளம் உருகும் பேரழகனாக காட்சியருளுகின்றார். கிழக்கு நோக்கிய சந்நிதி; முருகனை வலம் வரும்போது அமிர்தவல்லி, சுந்தரவல்லி என்ற பெயர்களுடன் விளங்கும வள்ளி தெய்வயானை யம்மையாரை வணங்கலாம். இபபாதை வழியே இன்னும் சறறு சென்றால் சித்தர் சமாதியையும பழநி போகர் சந்நிதிக்குச செல்வதாகக் கூறப்படும குகையையும காணலாம.

சென்னிமலைத் தலபுராணததில் இத்தலத்திற்குரிய மூர்த்திகள் கூறப்பட்டுளளது. மலைக்குச் செலலும வழியில் விளஙகும மலைவிழி விநாயகர்; செனனிமலை நகாக் கோயிலில் எழுந்தருளியுள்ள நடராச மூர்த்தி; காளிநகர்ச் சிவபெருமான் (திருமுக மலாந்த நாதர்); காளிநகா அம்பிகை (திருந்தார் குழலி); கயிலாய நாதர் (சென்னிமலைநகர்ச் சிவபெருமான); பெரியநாயகி அம்பிகை; மார்க்கண்டேசர் (மலை மீதுள்ள சிவபெருமான்) இமயவல்லி (மலைமீது விளங்கும் அம்பிகை); திருச்சந்தி விநாயகர் (மலைமீதுள்ள தலவிநாயகர்); சிரகிரி வேலாயுதர் (மலைமேல் சரவண முனிவருக்கு முதன்முதலில் காட்சி நல்கியவர். இவர் ஆறுமுகஙகளும பன்னிரு கணகளும புன்முறுவலும் வச்சிரம, வேல இருதலைச்சூலம், தண்டு, வாள், கேடயம (பலகை) வில், அமபு, கோழி, சக்கரம், வரதம், அபயம் என்னும் இவற்றை கொண்ட பனனிரு கரங்களும் கடமபமலர் மாலையும, தோள்களும் வாகுவலயமும், நீறணிந்த மாாபும், உதரபந்தமும்

இடையில் கட்டிய செம்பட்டாடையும், அரைநாணும், தண்டையும், சிலம்புமணி திருவடிகள் இரண்டும் தெரியும்படி காட்சி தந்தருளினார். இவர் கோயில் மலைநகர்க் கோவிலில உள்ளது). சிரகிரித் தண்டாயுதபாணி (சரவண முனிவருக்கு ஒரு முகவடிவில் இரண்டாவது முறையாகக் காட்சி நல்கிய கோலம். சரவண முனிவர் விரும்பிய வண்ணம் இவர் மலைக் கோவிலினுள் எழுந்தருளியுள்ளார்); மலைமேல் தனிக் கோயில் கொண்டுள்ள தெய்வயானையம்மையார், வள்ளியம்மையார்; சத்திய ஞானி (புண்ணாக்குச் சித்தர்-இவர் குகை மலை மேலுள்ளது); பிற்காலதது்ல் மலைமீது எழுப்பப்பட்ட விசுவநாதா விசாலாட்சி கோயில் ஆகியன.

இத்தலம் தீர்த்தச் சிறப்பு மிக்கது. சென்னிமலையின் தென்மேற்குச சரிவில விளங்கும விநாயகருககு எதிர்ப் புறத்தில மாமாங்க தீர்த்தம உள்ளது. ஞானிகள மட்டுமே காணககூடிய கண்டுகாஞ்சுனை ஒன்றுண்டு எனத் தலபுராணம் கூறுகின்றது. மலையடிவாரத்தின் வடபால விளங்குவது சுப்பிரமணிய தீர்த்தம. இதனைச சரவணப் பொய்கை, குமார தீர்ததம் எனவும் அழைப்பர்.

இத்தலக் கல்வெட்டில் ஆத்தலத்தின் பல பெயர்கள் குறிப்பிடப் பெறுகின்றன

*ஏற்கும் கமல புரம்திரு விருந்தபுரம்*
*சோககின்ற காளிநகா செனனிநகா-கார்க்குங்*
*கமலா லயாதிரு முகமலாந தாரகாரி*
*கமலிநகா செனனி நாதா.*

இத்தலத் தொடர்பான நூல்கள் வருமாறு:

சென்னிமலைத்தலபுராணம: ஆசிரியர்-சரவணமுனிவர்.

| | |
|---|---|
| மேழி விளககம் | சரவணையா. |
| சென்னிமலைப் பிள்ளைத்தமிழ்; | சாமிநாதப் புலவர். |
| சென்னிமலையமக அந்தாதி: | சாமிநாதப புலவர். |
| சென்னிமலையாண்டவர் காதல்: | அங்கண்ண செட்டியார். |
| கொங்குமணடல சதகம்: | வாலசுந்தரக் கவிராயர் |
| சென்னிமலை முருகன் புலவராற்றுப படை | வே. ரா. தெய்வசிகாமணிக் கவுண்டர். |
| பூந்துறைப் புராணம் | காளியண்ண கவிராயர். |

இத்தலத்திற்குப் படிக்காசுப் புலவர் பாடிய வண்ணப்பாக்களும்பல புலவர் பாடிய பதிகம் முதலிய தோத்திரப் பாடல்களும் உள்ளன

துணியாலைகள் மிக்க இத்தலத்தில் விடுதிகள், உணவு விடுதிகள் உள்ளன. ஈரோட்டிலும் தங்கலாம்.

இத்திருக்கோயில் அறநிலைய ஆட்சித்துறை நிர்வாகத்தில் உள்ளது. இத்தலத்திற்கருகில் ஊதிமலை, வட்டமலை, சிவன்மலை, திருமுருகன் பூண்டி முதலிய தலங்கள் உள்ளன. பஸ் வசதி உண்டு, காங்கேயத்தை மையமாகக் கொண்டு இவற்றை வழிபடலாம்.

# திருப்பாண்டிக் கொடுமுடிப் பரமகுரு

*இருவினைப் பிறவிக் கடல்மூழ்கி*
*இடர்கள் பட்டலையப் புகுதாதே*
*திருவருட் கருணைப் ப்ரபையாலே*
*திரமெனக் கதியைப் பெறுவேனோ*
*அரியற் கரிதற் கரியானே*
*அடியவர்க் கெளியற் புதநேயா*
*குருவெனச் சிவனுக் கருள்போதா*
*கொடுமுடிக் குமரப் பெருமாளே.*

— அருணகிரிநாதசுவாமிகள்.

ஈரோடு வட்டத்தில், ஈரோட்டிலிருந்து தென்கிழக்கில் 25 கல் தொலைவில் இத்தலம் உள்ளது. திருச்சி ஈரோடு இருப்புப் பாதையில் கொடுமுடி ரயில் நிலையமும் உண்டு. கரூர் ஈரோட்டி லிருந்து பஸ்வசதி உள்ளது.

இங்கு சிவபெருமான் மகுடேஸ்வரர் (கொடுமுடிநாதர்) என்ற பெயர் சூடி சுயம்புலிங்கமாக விளங்குகின்றார். மேருவின் சிகரமே இலிங்கமாக இங்கு விளங்குகின்றது என்பர். இறைவி: வடிவுடைநாயகி (பண்மொழி நாயகி). திருமணக்கோலத்தில் இறைவியை இறைஞ்சுகின்றோம். இத்தலத்தில் ஆறுமுகசுவாமி பன்னிருகரங்களுடன மயில்மீதமர்ந்து கிழக்கு நோக்கி விளங்கு கின்றார். அருகே இருதேவியர் உள்ளனர். உற்சவரும் மூலவர் போன்றே விளங்குகின்றார்.

கொங்கு நாட்டில்பாடல் பெற்ற ஏழு தலங்களுள் ஒன்றான இத்தலத்தைத் தேவாரம் பாடிய மூன்று சமயாசாரியரும் பதிகம் பாடிப் பரவியுள்ளனர். நமச்சிவாயத் திருப்பதிகத்தால் சுந்தரர் இங்கே பாடியருளினார். இத்தலம் மும்மூர்த்தித் தலமாகும்.

திருமால், நான்முகன், அனுமார், சனீசுவரர் சந்நிதிகளும் உள்ளன. தினமும் காமிகாகம முறைப்படி இருகால வழிபாடுகள் நடைபெறுகின்றன.

சித்திரைத் தேர்த்திருவிழா, ஆடி பதினெட்டு, விநாயக சதுர்த்தி, மார்கழித் திருவிழா, ஸ்கந்த சஷ்டி, கார்த்திகை தீப விழா, பொங்கல் திருநாள் போன்றவை சிறப்புடையவை.

காவிரி, பிரம்மதீர்த்தம், தேவதீர்த்தம், பரத்துவாச தீர்த்தம் முதலிய புண்ணியப்புனல்கள் உள்ளன. தலவிருட்சம்: வன்னி.

நான்முகன், திருமால், பரத்துவாசர், அகத்தியர், பாண்டியன் முதலியோர் வழிபட்ட தலம். சுமார் 1200ஆண்டுகட்கு முன்பு மலையத்வஜ பாண்டியரால் கட்டப்பட்ட கோயில் இது என்பர்.

அருணகிரிநாதர் இங்குள்ள முருகவேளை இரு திருப்புகழ்ப் பாக்களால் பாடிப் பரவினர். (இருவினைப் ..., காந்தட்கரவளை... .)

*பாந்தட் சடைமுடி யேந்திக் குலவிய*
*பாண்டிக் கொடுமுடி யுடையாரும்*
*பாங்கிற் பரகுரு வாங்கற் பனையொடு*
*பாண்சொற் பரவிய . பெருமாளே.*

எனவரும் பகுதிகள் சுவையானவை.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது. தங்கும் விடுதிகளும், உணவுவிடுதிகளும் உள்ளன. சிவன்மலை, சென்னிமலை, திண்டல்மலை முதலியன இத்தலத்திற் கருகிலுள்ள முருகன் தலங்களாகும்.

*மற்றுப்பற்றெனக் கின்றிநின் திருப்பாதமே மனம்பாவித்தேன்*
*பெற்றலும் பிறந்தேன் இனிப்பிறவாமை வந்துஎய்தினேன்*
*கற்றவர் தொழுதேத்தும் சீர்க்கறையூரிற் பாண்டிக்கொடுமுடி*
*நற்றவா உனைநான் மறக்கினும் சொல்லும்நா நமச்சிவாயவே.*

கறையூர் என்பது ஊரின் பெயர். பாண்டிக்கொடுமுடி என்பது கோயிலின் பெயராகும் என்று சுந்தரர் தேவாரத்தால் கருத முடிகின்றது வாட்போக்கி மலைக்கொழுந்து கவிராயர், திருத்தொண்டர் சதகம், கொடுமுடிக் குறவஞ்சி, கொடுமுடிப் பள்ளு பாடியுள்ளதாக டாக்டர் உ. வே. சா அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

# பட்டாலியூர் வருபெருமாள்

*கொங்கைக் கொப்பாகும் வடகிரி செங்கைக் கொப்பாகு நறுமலர்*
*கொண்டைக் கொப்பாகும் முகிலென வனமாதைக்*
*கும்பிட்டுக் காதற் குணகிய இன்பச்சொற் பாடும் இளையவ*
*கொங்கிற் பட்டாலி நகருறை பெருமாளே!*

(சங்கைக்கத் திருப்புகழ்.)

தாராபுரம் வட்டத்தில் காங்கேயம்-திருப்பூர் பஸ் வழியில், 6 கி. மீ தொலைவில் சிவன்மலை என்னும் தலம் உள்ளது. சிவன் மலையிலிருந்து 2 கி மீ. தொலைவில் பட்டாலி என்னும் சிற்றூரில் பல்லவனிசுவரர் திருக்கோயில் அமைந்துள்ளது. இத்தலமே அருணகிரி போற்றும் கொங்கிற் பட்டாலிநகர் ஆகும் சமவெளியிலுள்ள இத்திருக் கோயிலில் இறைவர்: பால்வண்ண நாதர் எனவும், இறைவி: நல்ல மங்கை எனவும் போற்றப்பெறுகின்றனர். இத்திருக் கோயிலில் ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களுடன் இருதேவியர் சூழ நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கிக் காட்சியருளுகின்றார். முருகவேளின் பின்புறம் மயில் விளங்குகின்றது.

விநாயகர், சூரியன், தட்சிணாமூர்த்தி, சண்டேசர், பைரவர் சந்நிதிகள் உள்ளன. இங்கே முருகவேளுக்கு உற்சவ மூர்த்தி இல்லை.

காரணாகம முறையில் தினமும் ஒருகால பூசை நிகழ்கின்றது.

இத்தல முருகனை மூன்று திருப்புகழ்ப் பாக்களால் (இருகுழை , கத்தூரிய கரு , சங்கைக்கத் .......,) அருணகிரிநாதர் போற்றியுள்ளார். இத்தலத்தையும் அருகிலுள்ள சிவன் மலையையும் இணைத்துச் சிலர் கூறுவர். ஆனால் அருணகிரிநாதர்

பட்டாலி நகர் என்றுரேயன்றி, மலை என்று கூறுதது கருதத் தக்கது. இருப்பினும் சிவன்மலை ஸ்தல புராணத்தை இயற்றிய அம்பலவாண கவிராயர் சிவன்மலையின் பழைய பெயர் பட்டாலி என்று கூறுகின்றார். பட்டாலியூர் என்பதன் பொருள் இறந்தவர் மீண்டும் உயிர்பெற்று எழுந்த ஊர் என்று காட்டுகின்றார் வள்ளியைக் கவர்ந்து வந்தவேலாயுதப் பெருமானைத் தொடர்ந்து வெகுண்டு வந்த வேடர்கள் போரில் மாய்ந்தனர் வள்ளியின் வேண்டுகோளுக் கிணங்கி. அவ்வேடர்களை உயிர் பெறச் செய்தார் கந்தவேள் இக்கருத்தை வலியுறுத்துவது போன்று சிவன் மலையின் மூலத்தானத்தில் முருகவேள் வள்ளியுடன் திகழ்கின்றார்.

சிவன்மலை-சிவவாக்கியருடன் தொடர்புடையது, கொங்கு நாட்டில் சித்தர்கள் பெரிதும் உவந்து தங்கினர் என்பதற்குக் கொங்கணகிரியில் கொங்கணரும், மருதமலையில் பாம்பாட்டிச் சித்தரும், சென்னி மலையில் பிண்ணாக்குச் சித்தரும் இருந்தமை சான்றாகும்.

478 படிகளைக் கடந்து மலைக் கோயிலை அடைகிறோம். அமாவாசை, கார்த்திகை நாட்களில் பக்தர்கள் மிகுதியாக வருகின்றனர் வெண்ணெயும் தயிரும் அர்ப்பணிக்கின்றனர்.

மலையமைப்பும், படிகளும், மண்டபங்களும், யானைப் பாதையும் பழனிமலையைப் போன்றே உள்ளன. மலைக்கோயிலில் முருகவேள் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு மயில் மீதமர்ந்து விளங்குகிறார். அருகில் வள்ளியின் எழிற்கோலம் சிறப்புடையது. தனியே வேறு வள்ளியும் தெய்வயானையும் சந்நிதி பெற்றுள்ளனர் இவ்வமைப்பினை ஊதிமலை, வட்டமலை, அமகும்மலைக் கோயில்களிலும் காண்கிறோம் இருபெருந்தேவியரும் ஒரே சந்நிதி! இவர்கள் சந்நிதிக்கும் முருகன் சந்நிதிக்குமிடையே சுரங்கப் பாதை உள்ளது! இச்சுரங்கக் குகையில்தான் இக் கோயிலை எழுப்பிய சிவவாக்கியர் தவம் புரிந்தார் என்பர்.

காரணாகம முறையில் தினமும் ஐந்துகால வழிபாடு இங்கே நிகழ்கின்றது. பரிவார தேவதையாகக் கயிலாய நாதர்-ஞானாம்பிகை சந்நிதிகள் உள்ளன.

இராம-இராவண யுத்தத்தின் போது மயங்கிய இலட்சுமணனைக் காப்பாற்ற சஞ்சீவி பருவதத்தை அனுமன்

எடுத்துச் சென்றபோது இரு துண்டுகள் சிதறி விழுந்தன எனவும் அவை சிவன்மலை, ஊதியூர்மலை என்று தற்காலத்தில் விளங்கு கின்றன எனவும் செவிவழிச் செய்திகள்கூறும். இங்கே மூலிகைகள் மிகுந்திருப்பது இதனை மெய்ப்பிக்கின்றது. இச்சிவன் மலையில் யானைப்பாதையில் விளங்கும் அனுமார் மீதுள்ள வெண்ணெய் தீராத நோய் தீர்க்கும் திறமுடையது.

இக்கோயிலில் சஷ்டி, கிருத்திகை சிறப்பு நாட்கள். கந்த சஷ்டியும் தைப்பூசமும் பங்குனி உத்திரமும் சிறப்பு விழாக்களாகும்

தெப்பக்குளம் உள்ளது. தொரட்டி, இலந்தை, புளி-தல விருட்சங்களாகும். இங்கு முருகவேளுக்குப் பணமேயன்றி, பொருள்களும்-சைக்கிள் உட்பட அர்ப்பணிப்பது வழக்கம்.

காவடி, அபிஷேகம், பொட்லி போன்ற பிரார்த்தனைகளும் செலுத்தப்படுகின்றன.

அறநிலைய ஆட்சித் துறையின்கீழ் இவ்விரு கோயில்களும் நிர்வகிக்கப் படுகின்றன.

இவ்வளவு அருமை வாய்ந்த பட்டாலியூர்ப் பெருமானிடம் அருணகிரியார் வேண்டுவது நமக்கும் பொருந்தும்.

*"கொக்காக நரைகள் வருமுனம் இக்காய இளமையுடன் முயல்*
*குற்றேவல் அடிமை செயும்வகை அருளாதோ"*

(கந்துரி....)

*"மங்கைக்குப் பாகன் இருடிகள் எங்கட்குச் சாமியெனவடி*
*வந்திக்கப் பேசியருளிய சிவநூலின்*
*மந்த்ரப் ரஸ்த்தார தரிசன யந்த்ரத்துக் கேள்வியலமலம்*
*வம்பிற் சுற்றுது பரகதி அருள்வாயே"*

(சங்கைக்கந் ...)

காங்கேயத்தை மையமாகக் கொண்டு வட்டமலை, ஊதி மலை, சிவன்மலை, சென்னிமலை ஆகிய தலங்களை வழிபட்டு இன்புறலாம்.

## சிங்கைநகர்க் காங்கேயன்

தற்காலத்தில் காங்கேயம் என்றழைக்கப்படும் இத்தலம் சிங்கை, அகிலாண்டபுரம் என்றெல்லாம் அழைக்கப்படும். திருச்சி-கோவை, ஈரோடு-தாராபுரம் பஸ்வழியில் உள்ளது. ஈரோடு-திருப்பூர் இரயில்வழியில் ஊற்றுக்குழி இரயில் நிலையத்திலிருந்து 14 கல் தொலைவிலுள்ளது.

இங்குள்ள தொன்மையான சிவன்கோயில் அகிலாண்டநாயகியம்மை உடனுறை அகஸ்தீசுவரர் எழுந்தருளப்பெற்ற சிறப்புடையது. இக்கோயிலின் ஒருபகுதியாக முருகன் சந்நிதி விளங்குகின்றது ஒருமுகமும் இருகரங்களும் கொண்டு, தண்டாயுதத்துடன் கிழக்குநோக்கிக்கம்பீரமாக நிற்கும் திருக்கோலம் நம்மை ஈர்க்கின்றது. முருகனுக்கு உற்சவர் இல்லை. மூலவிநாயகர் தட்சிணாமூர்த்தி, சண்டேசர், சூரியன், பைரவர் சந்நிதிகளும் உள்ளன.

தினமும் ஒருகாலவழிபாடு, காரணாகமமுறையில் நடைபெறுகின்றது. கார்த்திகையும், அமாவாசையும் சிறப்புவழிபாடு நிகழ்கின்றது. புண்ணியப்புனல் கோவிந்ததீர்த்தம் என்னும் கிணறு ஆகும். அகத்தியமுனிவர் வழிபட்டதாகத்தலமான்மியம் கூறும். இங்கே பசுமாடுகள் அதிகம்.

விராடராஜா என்ற மன்னரால் கட்டப்பெற்றது இக்கோயில். நிலங்களிருந்தும் பூசைக்கு வழியில்லாத நிலையில் இக்கோயில் இன்று உள்ளது.

இத்தல முருகனை "சஞ்சரியுகந்து", "சந்திதொறு நாண" என்னும் இரு திருப்புகழால் பரவினூர் அருணகிரிநாதசுவாமிகள், அவற்றில்

...... ...... ...... ஆசை
நண்புறெனை இன்று நன்றில் வினைகொன்று
நன்று மயில் துன்றி வரவேணும்.
...... ...... ......
செண்பகமிலங்கு மின்பொழில் சிறந்த
சிங்கையில் அமர்ந்த பெருமாளே'

எனவும்,

சுந்தரம தாக எந்தன்வினை யேக
சிந்தை களிகூர அருள்வாயே
...... ...... ...... ... ...
கம்பர்கயிலாசர் மைந்தவடிவேல
சிங்கை நகர் மேவு பெருமாளே

எனவும் வரும் பகுதிகள் நினைவிற்கொளத் தக்கவை.

இத்தலத்தில் காசி விசாலாட்சி உடனுறைய விசுவநாதர் திருக்கோயில் ஒன்றும் உள்ளது. சுமார் 300 ஆண்டுகட்கு முன்பு கட்டப்பட்ட இக்கோயிலில் கல்யாணசுப்பிரமணியசுவாமி வள்ளி தெய்வயானையுடன், மயில் அருகில் நிற்க ஒருதிருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் கிழக்குநோக்கிக் காட்சியருளுகிறூர்.

காரணுகம முறைப்படி தினமும் 2காலபூசை நிகழும் இக்கோயிலில் விழாக்கள் சிறப்பாக நடந்துவருகின்றன. கந்த சஷ்டிவிழாச் சிறப்புடையது.

# கன்னபுரச்சேய்

*அன்னமிசைச் செந்நளினச் சென்மிகணக் கந்நியமத்*
*தன்னமயப் புலால் யாக்கை துஞ்சிடாதென்*
*றந்நினைவுற் றன்னினைவுற் றன்னியரிற் றன்னெறிபுக்*
*கன்னிய சற் றுலா முச்ச டங்கயோகம்*
*என்னுமருட் கின்னமுடைப் பன்னவைகற் றின்னவை விட்*
*டின்னணமெய்த் தடாமார்க்க மீன்புருதென்*
*றின்னதெனக் கென்றுமதப் புன்மை கெடுத் தின்னல்விடுத்*
*தின்னதெனப் படாவாழ்க்கை தந்திடாதோ*
*கன்னல் மொழிப் பின்னளகத் தன்னநடைப் பன்னவுடைக்*
*கண்ணவிரச் சுருவீட்டு கெண்டையானைக்*
*கன்னமிடப் பின்னிரவிற் றுன்னுபுரைக் கன்முழையிற்*
*கன்னிலையிற் புகா வேர்த்து நின்றவாழ்வே*
*பொன்னசலப் பின்னசலச் சென்னியினற் கன்னபுரப்*
*பொன்னிநதிக் கரா நீர்ப்பு யங்கநாதா*
*பொன்மலையிற் பொன்னிநகர்ப் புண்ணியர்பொற்*
*பொன்மவுலிப்*
*பொன்னுலகத் திராசாக்கள் தம்பிரானே!*

**இந்த அற்புதமான** அருணகிரிசுவாமிகள் திருப்புகழ் கொண்ட கன்னபுரத்தலம் எது என்று தேடினோம். தஞ்சைமாவட்டம் நன்னிலம் வட்டத்திலமைந்த கன்னபுரம் என்ற வைணவத் தலமாக இது இருக்கலாமென எண்ணப்பெற்றுவந்தது. அங்கே முருகர் தலமேதும் இல்லை இது எத்தலமாக இருக்கக்கூடும் என்று கந்தவேள் சருணை துணைகொண்டு அருணகிரிநாதர் அடிச்சுவட்டில் ஆராய்ந்தபோது பளிச்சென்று ஒளிகிட்டியது! ஆம். அத்தலம் தாராபுரம் வட்டத்தில் உள்ள கன்னபுரம் என்பது புலப்படடது.

கரூரிலிருந்து கோவை செல்லும் பஸ்வழியில் இத்தலத்தை அடையலாம், கரூரிலிருந்து காங்கேயம் செல்லும் பஸ் இத்தலம் வழியே செல்கின்றது.

இத்தலம் கன்னபுரம், நேத்ரபுரி என்று வழங்கப்படுவது. இங்கே அருள்மிகு வித்வநாயகி உடனுறை விக்கிரமசோளீசுவரர் திருக்கோயில் விளங்குகின்றது. மிகத்தொன்மையான கோயில். விக்கிரமசோழன் கட்டியதெனத் தெரிகின்றது. கல்வெட்டுக்கள் உள்ளன. இங்கு சிவபெருமான் சந்நிதியின் பின்புறம் ஆறுமுகப் பெருமான் பன்னிருகரங்களுடன் கிழக்குநோக்கி நின்ற திருக் கோலத்தில் இருபுறமும் தேவிமார் சூழ எழுந்தருளியுள்ளார். பீடத்துடன் ஆறு அடி உயரமுடன் அமைந்த அற்புதக் கோலம் இது. உற்சவர் இல்லை.

இக்கோயிலில் நடராசர் திருவுருவம் இல்லை. சிவபெரு மானுக்கு வலப்புறம் அம்பிகை சந்நிதி உள்ளது. மூல விநாயகர் தல விநாயகர் ஆவார்.

தினமும் இருகால வழிபாடு நிகழ்கின்றது. மாத அமாவாசை, கிருத்திகை சிறப்பு நாட்களாகும்.

சித்திராபௌர்ணமிக்கு முன்ஐந்துநாளும் பின் ஐந்துநாளு மாகப் பத்துநாட்கள் பெருந்திருவிழா-தேர்த் திருவிழாவும் நவராத்திரி, கார்த்திகை, மார்கழி, சிவராத்திரி, முதலிய விழாக் களும் கொண்டாடப்பெறுகின்றன.

இத்தலத்தின் கீழ்பால் காளிகோயிலும், மாரியம்மன் கோயிலும் சிறப்புடையவை. கன்னபுரம் மாரியம்மன் என்று இப்பகுதியில் பெரிதும் போற்றப்பெறும் இத்திருக்கோயிலேகன்ன புரம் விக்கிரமசோளீசுவரர் திருக்கோயிலை நமக்குக் காட்டி. அருணகிரிநாதசுவாமிகள் வழிபட்டக் கன்னபுரம் ஆறுமுகப் பெருமானையும் காட்டியருளித் தெளிவுப்பெறச்செய்தது.

இத்தலம் அறநிலைய ஆட்சித்துறை நிர்வாகத்தில் உள்ளது. கல்வெட்டுக்கள் உள்ளன. கல்யாணமண்டபம் கட்டப்பெற்று வருகிறது. தங்கும் விடுதி, உணவுவிடுதிகள் இல்லை. கோயில் நல்ல நிலையிலுள்ளது.

இவ்வூரில் "கன்னபுரம் மாட்டுச்சந்தை" மிகப் பிரபலமான தாகும்.

இவ்வூருக்கருகே சிவன்மலை, வெள்ளக்கோயில், வீரக் குமாரர்கோயில் முதலிய முருகன் கோயில்கள் உள்ளன.

## கொங்கணகிரிக் கந்தன்.

*கொங்கிலுயிர் பெற்றுவளர் தென்கரையில் அப்பர்அருள்*
*கொண்டு உடலுற்றபொருள் அருள்வாயே*
*குஞ்சர முகற்கிளைய கந்தனென வெற்றிபெறு*
*கொங்கண கிரிக்குள் வளர் பெருமாளே!*

**(ஐங்கரனை...திருப்புகழ்)**

அருணகிரிநாதசுவாமிகள் பரவிய கொங்கணகிரி என்ற தலம்எது? என்ற வினு நீண்டகாலமாகத்தீர்க்கப் படாதிருப்பது. மூன்றுதலங்கள் கொங்கணகிரிக்கு உரிமை கொண்டாடுகின்றன.

(1) திருப்பூர் நகரின் மேற்கில் 13 கி. மீ. தொலைவில் உள்ள வேலாயுதபாளையம் மலைக்கோயில் (18 படிகளுடையது) கொங்கண கிரி என்று தணிகைமணி கருதுவார். இங்கே குழந்தை வேலாயுத சுப்ரமணியர் பாலமுருகனுக இருகரங்களுடன் நின்றகோலம்.

(2) திருப்பூரின் மேற்கே 3 கி. மீ. தொலைவில் மலைமீது புதியகோயில் நிறுவப்பெற்று கந்தப்பெருமான் கோயிலாகக் கொங்கணகிரி என அழைக்கப்பட்டு வருகிறது.

ஆனுல் மேற்சொன்ன இருதலங்களையும்விடக் கொங்கண கிரியாகக்கொள்ளத்தக்கதலம் தாராபுரம் வட்டத்தில் காங்கே யம்–தாராபுரம் சாலையில்-வட்டமலை என்ற பெயருடன் விளங்கு வதாகும். மிகச்சிறிய குன்றின்மீது அழகான கோயில்; அருகில் கொங்கணர் தங்கியிருந்து அட்டமாசித்திகள் செய்த ஊதிமலை உள்ளது கருதத்தக்கது.

குன்றின்மீது 150 அடி உயரத்தில் உள்ள கோயிலில் மூலவர் முத்துக்குமாரசுவாமி ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு தேவிமாருடன் மேற்குநோக்கி விளங்குகின்ருர். குமார

தந்திரப்படி அமைந்த திருவுருவம். மூலவரும் உற்சவரும் அமைப்பில் ஒத்துள்ளன.

இங்குள்ள முருகன் தேவியர் சந்நிதி அமைப்பினை அருகிலுள்ள ஊதிமலை, சிவன்மலை, அழகுமலைகளிலும் ஒத்திருப்பதைக் காணலாம்.

தினமும் காமிகாகமமுறையில் 2 காலவழிபாடு நிகழ்கின்றது.

மரகததீர்த்தம், சாலக்ராமதீர்த்தம், கொங்கணதீர்த்தம் (த்ரயம்பகநதி)—முதலிய புண்ணியப்புனல்கள் உள்ளன. மனநோய் நீக்குவது மரகததீர்த்தம். மாவலிங்கமரம் தலவிருட்சமாகும்.

மாதக்கார்த்திகை, சஷ்டி, அமாவாசைச்சிறப்புநாட்கள் கந்தசஷ்டி, கார்த்திகைப்பெருவிழா, பங்குனிஉத்திர விழாக்கள் நிகழ்கின்றன.

சேரமன்னர் கட்டிடப்பாணி உடையது.

தனியார் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது. விடுதிகள் சத்திரங்கள் உள்ளன.

நுண்ணிய வேலைப்பாடுடைய மோகினிச்சிற்பங்கள். மற்றும் காலசம்ஹாரமூர்த்தி, காளிதாண்டவம், வாலிவதம், அர்ச்சுனன் தவம், மிருகண்டுமுனிவர்தவம் முதலிய அற்புதசிற்பங்கள் கொண்ட இச்சிறப்புமிகு ஆலயத்திற்கு ஒருமுறையாவது சென்று பாருங்களேன்!

# ஊதிமலை உகந்த கந்தன்

*ஓதுமறை ஆகமஞ் சொல் யோகமதுவே புரிந்து*
*ஊழியுணர்வார்கள் தங்கள் வினைதீர*
*ஊனு முயிராய் வளர்ந்து ஓசையுடன் வாழ்வுதந்த*
*ஊதிமலை மீதுகந்த பெருமாளே!*

(ஆதிமகமாயி...திருப்புகழ்)

*ஓத வெழுத்துக் கடக்கமுஞ் சிவ*
*காரண பத்தரிக் கிரக்க முந்தகு*
*ஓமெ னெழுத்துக் குயிர்ப்பு மென்சுட ரொளியோனே*
*ஓதி யிணர்த்திக் குகைக்கி டுங்கன*
*காபரணத்திற் பொருட் பயன்றரு*
*ஊதி கிரிக்குட் கருத்து கந்தருள் பெருமாளே!*

(கோதிமுடித்து...திருப்புகழ்)

அருணகிரிநாதசுவாமிகளின் அற்புதத்திருப்புகழ் இரண்டு பெற்ற ஊதிமலை என்னும் திருத்தலம் தற்போது ஊதியூர் என வழங்கப்படுகின்றது. தாராபுரம்-காங்கேயம் பஸ்வழியில் 16 கி. மீ, தொலைவில் ஊதியூர் உள்ளது. இங்கே மலைமீது உத்தண்ட வேலாயுதசுவாமி கோயிலும், கீழே கைலாசநாதர் கோயிலும், உள்ளன. கொங்கணகிரி, சஞ்சீவிமலை, பொன்னூதிமலை முதலிய பெயர்களும் இத்தலத்திற்கு உண்டு என்பர். கொங்கணர் வரலாற்றுத் தொடர்புடைய தலம் இது. கொங்கணர் தங்கம் செய்ததால் பொன் ஊதிமலை என்பர்.

156 படிகளைக்கடந்து மலைக்கோயிலை அடைகிறோம். மலை மீது தண்டபாணி எழுந்தருளியுள்ளார். கொங்கணசித்தர் சந்நிதியும் உள்ளது. வள்ளி, தெய்வயானை இருவரும் தனி சந்நிதியாக

விளங்குகின்றனர். உற்சவமுருகன் உத்தண்டவேலாயுதர் ஒரு முகமும் இருகரங்களும் உடையவர்; கையில் தண்டுடன் நின்ற திருக்கோலம்-அழகே உருவான அற்புத கோலமிது.

நாளும் மூன்றுகால வழிபாடுகள் நிகழ்கின்றன. மலைமீது முருகனும், மலையின்கீழ்ச் சிவனும் எழுந்தருளியுள்ளது - மகனுர் தந்தைக்கு உபதேசித்த நிலையில் கொள்ளலாம். இத்தலத்திருப் புகழ் இரண்டிலும் இக்கருத்து இடப்பெற்றிருப்பது கருதத் தக்கது:

*நீ தயவதா யிரங்கி நேசவருளே புரிந்து*
*நீதிநெறி மேவிளங்க உபதேச*
*நேர்மைசிவனுர் திசழ்ந்த காதிலுரை வேதமந்த்ர*
*நிலமயி லேறிவந்த வடிவேலா* **(ஆதிமகமாயி)**

இத்தலத்தில் அமாவாசை, சஷ்டி, கார்த்திகை சிறப்புநாட்கள். கந்தசஷ்டிவிழாச் சிறப்புடையது,

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது.

குறிப்பு:- அவிநாசி வட்டம், புன்செய்ப்புளியம்பட்டி-மேட்டுப்பாளையம் சாலையில் 8 கி. மீ. தொலைவிலுள்ள இரும்பறைக்கு வடக்கில் 3 கி. மீ. தொலைவிலுள்ள ஒதிமலையை ஊதிமலை என்று சிலர் கருதுவர். ஒதிமலையிலும் அற்புதமான முருகன் ஐந்துமுகங்களும் எட்டுககரங்களும் கொண்டு தனி முருகனுக குமாரசுப்பிரமணியன் என்ற திருப்பெயரில் திகழ் கின்ருர். மலையடிவாரத்தில் கயிலாயநாதர் கோயிலுள்ளது. இரும்பறை என்பது பிரமனை அடைத்த இரும்பு அறை என்று கருதுகின்றனர். இம்மலையடிவாரத்தில் போகர்யாககுண்டம் உள்ளது. போகருக்கு வழியனுப்ப ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு ஆறுமுகன் இறங்கி வந்ததாகவும், எஞ்சிய ஐந்துமுகங் களும் எட்டுகரங்களும் கொண்டு மலையில் விளங்குகின்ருர் எனவும் கூறுவர். ஆனுல் இத்தலம் ஒதிமலையே யன்றி ஊதிமலை யாகாது என்பது தெளிவு.

## திருச்சிராப்பள்ளி

1. திரிசிராப்பள்ளி
2. திருவானைக்கா
3. வயலூர்
4. பெருங்குடி
5. உய்யக்கொண்டான்
6. திருப்பராய்த்துறை
7. திருமாந்துறை
8. லால்குடி
9. பூவாளூர்
10. திருநெடுங்களம்
11. கீழப்பழுவூர்
12. வாலிகண்டபுரம்
13. தென்கடம்பந்துறை
14. சிவாயமலை
15. கருவூர்
16. திருவெஞ்சமாக்கூடல்
17. நெருவூர்
18. புகழிமலை

## புதுக்கோட்டை

1. விராலிமலை
2. ஆவுடையார்கோயில்
3. திருப்புனவாயில்.

# சிகர கோபுர சித்திரமண்டப சிராப்பள்ளி

*நன்றுடை யானைத் தீயதிலானை நரைவெள்ளே*
*றொன்றுடையானை உமையொரு பாகமுடையானைச்*
*சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்*
*குன்றுடையானைக் கூறஎன் உள்ளம் குளிரும்மே*

—திருஞானசம்பந்தர்.

தமிழ் நாட்டின் தலைசிறந்த நகரங்களில் ஒன்றாகத் திகழும் திருச்சிராப்பள்ளி தொன்மையான வரலாற்றுச் சிறப்பும் ஆன்மீக வளமும் உடையது. திரிசிராமலை, திரிசிரகிரி, திரிசிரபுரம், முத்தலைமலை, பிரமகிரி, ரிஷபாலயம், தென் கயிலாயம் எனப்பலவாறு போற்றப் பெறும் இத்தலத்தில் தாயான செல்வர் (தாயுமானவசுவாமி) திருக்கோயில் குன்றின் மேல் கம்பீரமாகத் திகழுகின்றது. ஊரின் நடுவில் மலைக் கோயில்–உச்சியில் உச்சிப்பிள்ளையார் கோயில்–இது திருச்சியின் தனிச்சிறப்பாகும். தமிழ்நாட்டின் முக்கிய ஊர்களிலிருந்து திருச்சிக்குப் பஸ், இரயில் வசதிகள் அமைந்துள்ளன.

இங்கே சிவபெருமான் ஒரு செட்டிப்பெண்ணுக்காக மகப்பேறு காலத்தில் தாயாக வந்து கருணை புரிந்ததால் தாயுமானவர், தாயான செல்வர், (மாத்ரு பூதேசுவரர்) செவ்வந்திநாதர் என்றெல்லாம் போற்றப்பெறுகிறார். இறைவி: மட்டுவார்குழலம்மை (சுகுந்த குந்தளாம்பிகை) எனத் திருப் பெயருடையாள். திரிசிரன் வழிபட்டதால் திரிசிராப்பள்ளி என்பர். கல்லில் குடைந்துள்ளதால் சிலாப்பள்ளி என்பர். சுவாமி, அம்மன், பிள்ளையார்–மூன்று சிகரங்கள் என்பர்.

இத்தலத்தில் முருகவேள் முத்துக்குமரசுவாமியாக–ஆறு முகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டு மயில் மீதமர்ந்து

கிழக்கு நோக்கி விளங்குகின்றார். அருகில் இருதேவியரும் விளங்குகின்றனர். மற்றொரு முருகவேள் ஒரு முகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு தேவிமாருடன் நின்றதிருக்கோலத்தில் விளங்குகின்றார்.

நாடோறும் காமிகாகம முறையில் நான்கு கால வழிபாடு நிகழுகின்றது. சித்திரைப் பெருவிழா, கந்தசஷ்டி, பங்குனி விழாச் சிறப்பு. பங்குனி 23, 24, 25 தேதிகளில் மாலை சூரிய பூசை நிகழும்.

காவிரி, சிவகங்கை, சோமரோகிணி, பிரம்மதீர்த்தம்-நன்றுடையான், தீயதில்லான், முதலிய புண்ணியப் புனல்கள். உள்ளன. தலவிருட்சம்: வில்வம். செட்டிப்பெண் மகப்பேறு, வேடன் சிவராத்திரியன்று முத்தி பெற்றது முதலிய தலச்சிறப்பு கள் கூறப்படுகின்றன. பல்லவர் காலக் குகைக் கோயில்கள் சிறப்பாக உள்ளன.

இங்கே குமரவேளை அருணகிரிநாதர் பதினைந்து திருப் புகழ்ப் பாக்களால் பரவிப் போற்றியுள்ளார். திருச்சிராப்பள்ளி மலையழகைக் கண்டார். அந்த அழகில் முருகனைக்கண்டார்' திரிசிராப்பள்ளித் தியானமே முருகர் தியானமாம் என உணர்ந்து "சிராப்பளி எனபார். மனமே திவி ஏநாகிய பெருமாளே" -சிராப்பள்ளி என செபிக்கும் அன்பர்தம் மனமாகிய இடத்தை (கோயிலாக) விரும்பிய பெருமாளே எனப்பாடி புகழ்நதார். தமது வழிபடு கடவுளாம் திருஞானசம்பந்தர் "நன்றுடை யானைத் தீயதில்லானை...... உமையொரு பாகம் உடையானை... (சென்றடையாத) திருவுடையானைச்... (சிராப்பள்ளிக்)குன்றுடை யானை"—என இததலததுககுப் பாடிய தேவாரம் நினைவுககு வரச் "சீகாழி மாமுநி... வநது பாடும் திருவுடையாய, திதிலாதவா, உமையொரு பாலன மேவியர்" எனவும், "உருவளர் குன்றுடையாா" எனவும தமது திருபபுகழ்ப் பாககளில் பாடி யுள்ளது கவனிக்கத் தககது. "அஜகதலம மெச்சும வயலூர்க்கும் திரிசிராப்பள்ளிக்கும் உரிய பெருமாள் நீ" என இரணடு தலங் களையும் இணைத்துப் பாடியுள்ளார். திருச்சிக்குரிய பதினைந்து பாடல்களில் ஒன்பது பாடல்களில் வயலூர் சொல்லப்பட்டிருத் தலின் திருச்சிராப்பள்ளியிலிருந்தே இவர் வயலூரைத் தரிசித்து வந்திருக்கலாம் என்று கூறுவர்.

"அந்தோ மனமே" என்னும் திருப்புகழ் மனப்பாடஞ் செய்தற்குரியது. "மைந்தா குமரா எனும் ஆர்ப்பு உ(ய்)ய மறவாதே" என்பது அவரது ஒப்பற்ற உபதேசமாகும். "புவனத்தொரு" என்னும் பாடலில் நரகவேதனை வர்ணனை வருகின்றது. "வாசித்துக் காணொணாதது" என்னும் இத்தலத்து அருமையான திருப்புகழில் பரம் பொருளின் விளக்கம் மிக அற்புதமாகக் கூறப்பட்டுள்ளது:

*"வாசித்துக் காணொ ணாதது*
*பூசித்துக் கூடொ ணாதது*
*வாய்விட்டுப் பேசொணாதது நெஞ்சினாலே*
*மாசர்க்குத் தோணொ ணாதது*
*நேசர்க்குப் பேரொ ணாதது*
*மாயைக்குச் சூழொ ணாதது விந்துநாத*
*ஓசைக்குத் தூர மானது*
*மாகத்துக் கீற தானது*
*லோகத்துக் காதி யானது."*

"வெருட்டியாட்கொளும்" என்ற திருப்புகழில்

*திருச்சிராப் பள்ளிமலைமிசை நிலைபெறு பெருமாளே!*
*கபடிகள் ... இடையினும் நடையினும் அவமேயான்*
*மயக்கமாய்ப் பொருள் வரும்வகைக்கு ஷிபணு*
*தடத்து மோக்ஷம தருளிய பலமலர்*
*மணத்த வாரக்கழல் கனவிலு நனவிலு மறவேனே!*

என நன்றி பாராட்டுவார் அருணகிரிநாதர்.

"குவளை பூசல்" எனத்தொடங்கும் திருப்புகழில்,

*"தவள ரூபச ரச்சுதி இந்திரை*
*ரதிபு லோமசை கருத்திகை ரம்பையர்*
*சமுக சேவித துர்க்கை பயங்கரி புவனேசை*
*சகல காரணி சத்தி பரம்பரி*
*இமய பார்வதி ருத்ரி நிரஞ்சனி*
*சமய நாயகி நிஷ்களி குண்டலி எமதாயி*
*சிவம நோமணி சிற்சுக சுந்தரி*
*கவுரி வேதவி தக்ஷணி யம்பிகை*
*த்ரிபுரை யாமளை யற்பொடு தந்தருள் முருகோனே"*

எனவரும் பகுதிகள் அம்பிகை நாமாவளியாக அருமையாக அமைந்துள்ளது.

மற்ருெரு திருப்புகழில்

"சத்தி பாணீ நமோநம முத்திஞானீ நமோநம
தத்வ வாதீ நமோநம விந்துநாத
சத்துருபா நமோநம ரத்னதீபா நமோநம
தற்பர தாபா நமோநம"

என்று முருகனை அர்ச்சிக்க வகை செய்கிருர் அருணகிரிவள்ளல்.

திரிசிராப்பள்ளியைச் சுற்றிலும் உறையூர் (முக்கீச்சரம்), கற்குடி(உய்யக்கொண்டான்மலை), குமார வயலூர், திருவரங்கம், திருவானைக்கா முதலிய பல தலங்கள் சிறப்பானவை.

திருச்சி நகரத்திலேயே பல கோயில்கள் உள்ளன. தமிழ்நாடு அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்திலுள்ள தாயான செல்வர், மாணிக்கவிநாயகர், உச்சிப்பிள்ளையார் கோயில்கள் எண்ணற்ற யாத்திரிகர்களை நாளும் ஈர்க்கின்றன.

இத்தலத்தில் நாளும் திருவிழாக் கோலமாகவே இருக்கும்.

வழிபடுவோர்க்கு நகரில் பல விடுதிகள், உணவு விடுதி கள் வசதியாகக கிடைக்கும்.

செவ்வந்திப்புராணம் (சைவ எல்லப்ப நாவலர்), சிரா மலைக்கோவை, சிராமலையமக அந்தாதி (மகாவித்துவான் திரிசிரபுரம் மீனுட்சி சுந்தரம் பிள்ளை), முதலிய நூல்கள் இத் தலப் பெருமைகளைக் காட்டும் இலக்கியங்களாகும.

உறையூர் (திருமுக்கீச்சரம்) திருப்புகழ் வைப்புத் தலமாகும். திருச்சியின மேல்பால் விளங்கும் இத்தலம திருஞானசம்பந்தர் தேவாரம் பெற்ற திருத்தலமாகும் பஞ்சவர்ணேசுவரரும் காந்திமதியம்மையும விளங்கும் இத்தலத் துல் உதங்க முனிவர் பஞ்சவர்ணம் கண்டார். புகழ்ச்சோழ நாயனுர், கோச்செங்கட் சோழநாயனுர் விளங்கிய தலம் மகாவித்துவான் மீனுட்சிசுந்தரம் பிள்ளை இயற்றிய உறையூர்ப் புராணம் உண்டு.

## சிலந்தி நூல்செய் திருக்காவணம்

வானைக் காவில் வெண்மதி மல்கு புல்குவார் சடைத்
தேனைக் காவிலின் மொழித் தேவி பாக மாயினான்
ஆனைக் காவில் அண்ணலை அபயமாக வாழ்பவர்
ஏனைக் காவல் வேண்டுவார் ஏதும் ஏதம் இல்லையே.

—திருஞானசம்பந்தர்

எத்தாயர் எத்தந்தை எச்சுற்றத்தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர்நல்லார்
செத்தால் வந்துதவுவார் ஒருவரில்லை
சிறுவிறகால் தீமூட்டிச் செல்லாநிற்பர்
சித்தாய வேடத்தாய் நீடுபொன்னித்
திருவானைக் காவுடைய செல்வாஎன்றன்
அத்தா உன்பொற்பாதம் அடையப் பெற்றால்
அல்ல கண்டங் கொண்டடியேன் என்செய்கேனே.

—திருநாவுக்கரசர்.

தந்தை தாயுலகுக் கோர்தத்துவன் மெய்த்தவத் தோர்க்குப்
பந்தமாயின பெருமான் பரிசுடையவர் திருவடிகள்
அந்தண் பூம்புனல் ஆனைக்காவுடை ஆதியை நாளும்
எந்தை என்றடி சேர்வார் எம்மையும் ஆளுடையாரே.

—சுந்தரர்.

நாடித் தேடித் தொழுவார்பால்
நானாய்த் தாகத் திரிவேனோ
மாடக் கூடற் பதிஞான
வாழ்வைச் சேரத் தருவாயே
பாடற் காதற் புரிவோனே
பாலைத் தேனாத் தருள்வோனே
ஆடற் றோகைக் கினியோனே
ஆனைக் காவிற் பெருமாளே.

—அருணகிரிநாதர்.

ஒரு சிலந்தியும் ஒரு யானையும் ஒரு சோலையில் வெண்ணாவல் மரத்தின் கீழ் ஒரு சிவலிங்கத்தை வழிபட்டு வந்தன. நாவல் சருகு வீழாமலிருக்க சிலந்தி தன் எச்சிலாற் பந்தலமைத்தது. சிவபூசைக்கு அது அநுசிதம் என்று தினமும் யானை அப்பந்தரைச் சிதைத்தது. இப்படியே நாளும் நிகழ, ஒரு நாள் சிலந்தி வெகுண்டு யானையின் துதிக்கையுட் புகுந்து அதனைக் கடிக்க யானை கீழே விழுந்து இறந்தது. சிலந்தியும் இறந்தது. இருவர் பூசனையும் ஏற்ற சிவபெருமான் சிலந்தியைச் சோழ மன்னனாக மறுபிறப்பெடுக்கச் செய்தார் அம்மன்னன் கோச்செங்கட் சோழநாயனாராகத் திகழ்ந்து-முற்பிறவி நினைவு வர யானை ஏறமுடியாதபடி சிவபெருமானுக்கு மாடக்கோயில்கள் எழுபது அமைத்து வழிபட்டார் என்று பெரியபுராணம் பேசுகின்றது. அவ்வாறு சிலந்தியும் யானையும் வழிபட்ட தலமே திருஆனைக்கா ஆகும்.

திருச்சிக்கு வடக்கே 3 கல் தொலைவிலுள்ள இத்தலம் பஞ்சபூதத் தலங்களில் இறைவன் நீருருவாய் அமர்ந்ததலமாகும். (ஏனையவை மண் காஞ்சிபுரம், தீ-திருவண்ணாமலை, காற்று-காளத்தி, ஆகாயம்-சிதம்பரம்) இங்குள்ள சிவபெருமான் ஜெம்புகேசுவரர். ஆனைக்கா அண்ணல் ஆவார். அம்பிகை: அகிலாண்டேசுவரி நாடோறும் உச்சிக்காலத்தில் இறைவனை அகிலாண்டநாயகி பூசை செய்யும் தலம் இது. அக்காலத்தில் சிவாசாரியார் புடவையுடுத்துப் பரமனை வழிபடுவதை இன்றும் காணலாம். விராட்புருடனின் சுவாதிட்டான தலம் இது.

மூவர் தேவாரமும் பெற்ற அற்புதமான தலம் இது. திருஆனைக்கோவில், கஜாரணியம், ஜெம்புகேசுரம், ஜம்புவீச்சரம். வெண்ணாவல் வனம், சம்பு வனம், ஞானதலம், காவை, தந்திபுகா

வாயில், தந்தி வனம், அமுதேசுவரம், இபவனம் முதலிய பல பெயர்களைக் கொண்டுள்ளது இத்தலம். ஐந்து பிராகாரங்கள் உள்ளன. நாலாவது, ஐந்தாவது பிராகாரங்களில் வீடுகள் உள்ளன. திருநீற்றையே கூலியாகக் கொடுத்து இறைவன் கட்டிய திருநீற்றுமதில் நான்காவது மதிலாகும். இறைவன் இங்கே நீர் உருவில் உள்ளதை திருநாவுக்கரசர் "செழுநீர்த்திரள்" என்று போற்றுவார். காவிரியும் கொள்ளிடமும் இருபுறமும் ஓடத்தீவு அமைந்து அதிலே ஆனைக்காவும் திருவரங்கமும் அமைந்திருப்பது அற்புதமான சூழலாகும்.

மூன்றாம் பிராகாரத்தில் முருகன் சந்நிதி உள்ளது பாலசுப்பிரமணியன்-ஒருமுகமும் இருகாங்களும் கொண்டு தெற்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் விளங்குகின்றார்.

பாலதண்டாயுதபாணி என்று இவரைப் போற்றுவர். முருகன் சந்நிதிக்கு ஒருகால வழிபாடு நிகழ்கின்றது.

இந்திரதீர்த்தம், அக்னிதீர்த்தம், அகஸ்தியதீர்த்தம், சூரிய தீர்த்தம், ஜம்புதீர்த்தம், சந்திரதீர்த்தம், இராமதீர்த்தம், ஸ்ரீமத் தீர்த்தம் முதலிய புண்ணியப்புனல்கள் உள்ளன: தலவிருட்சம்: வெண்ணாவல்

காளமேகப்புலவர் அருள் பெற்றது இத்தலத்திலேயே என்பதை வரலாறு காட்டுகின்றது.

அருணகிரிநாதர் அற்புதமான பதினான்கு திருப்புகழ்ப் பாக்களால் இத்தலத்து முருகனைப் பரவியுள்ளார். திருவானைக்காத் திருப்புகழ்ப் பாடல்களுள், விநாயக மூர்த்தியின் வருணனையாக

"குஞ்சர மாமுக விக்கினப் பிரபு
அங்குச பாசகரப் பிரசித்தன் ஓர்
கொம்பன் மகோதரன், முக்கண் விக்ரம கணராஜன்
கும்பிடுவார் வினை பற்றறுப்பவன்
எங்கள் விநாயகன் நக்கர் பெற்றருள்
குன்றைய ரூபக கற்பகப் பிள்ளை"

(அஞ்சன......)

என வெகு அழகாகப் பாடுகின்றார்.

திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார் (பாணப்பாவலர்) திருஞானசம்பந்தருடன் அவர் தேவாரத்துக்கு இசைய பாடியதும், காரிகை என்னும் யாப்பிலக்கண நூல் புலவர் களால் பயிலப்பட்டதும், எழுத்தாணிக்கு (இபக்கோடு) தந்தத்தினாற் செய்யப் பட்ட பிடி இருந்ததும், காளமேகப்

புலவர் திருவானைக்கா உலாவிற் ''சேவிக்கும் எல்லைத் திருசாலக நலமும்'' என வருவதைத் "திருச் சாலகச் சோதி'' எனவும், வராக அவதாரம் எடுத்த போது அதனை அடக்கிய மூர்த்தி சண்முகரே எனவும், அறங்கள் வல்லவராய் வேள்வி நடத்தும் அந்தணர்கள் திருவரங்கப் பெருமாளை "ஹரி ஹரி கோவிந்த கேசவ'' என்று போற்றுகின்றனர் எனவும், இராமாயண கிட்கிந்தாகாண்டச் சுருக்கம் இது எனவும், முனிவர்கள் ''ஆதித்யாய'' எனத் தர்பண-காயத்ரி ஜப அர்ச்சனை செய்வதையும், தேர் வீதியில் திருநீறிட்டான் மதில் விளங்குவதையும் இன்ன பிற செய்திகளையும் அருணகிரிநாதர் இத்தலத் திருப்புகழ்களில் காட்டியுள்ளார்.

அவ்வத்தலத்து இறைவன், இறைவி திருநாமங்களை அருணகிரிநாதர் வடமொழிப் பெயர்களாலேயே குறிக்கின்ற பாங்கில் ஜம்புநாதர், சுஜாரணியம், முதலியவற்றை இத்தலத் திருப்புகழில் குறிக்கின்றார்

முருகவேள் கட்டளையிட்டபடியே வயலூரை மறவாமல் திருவானைக்காப்பாடல்கள் பலவற்றிலும் அருணகிரிநாதர் குறிப்பிடுகின்றார்.

இத்தலத்தில் கந்தசஷ்டிவிழா நிகழ்கின்றது.

திருவானைக்காப்புராணம் (கச்சியப்ப முனிவர்), திருவானைக்காப்பதிற்றுப்பத்தந்தாதி (சுப்பையர்) மாத்ருகாபுஷ்பமாலாஸ்துதி (ஆதிசங்கரர்), ஜம்புநாதாஷ்டகம் (ஸ்ரீதரஐயாவாள்) முதலிய நூல்கள் இத்தலப் பெருமைபேசுவன.

இராஜராஜேசுவரர் கோயில், நீலவிண்டீசுவரர் கோயில், சங்கரேசுவரர் கோயில், பிடாரிகோயில், வீரபத்திரர்கோயில், கொண்டையம்பேட்டை சுப்பிரமணியசுவாமிகோயில் முதலியன திருவானைக்கா திருக்கோயிலின் சுற்றுக்கோயில்களாகும். இவற்றுள் கொண்டையம்பேட்டை சுப்பிரமணிய சுவாமி கோயில் அருணகிரிநாதரால் பாடல்பெற்றிருக்கக்கூடும்.

இத்தலத்திலிருந்து ½கல் தொலைவில் திருவரங்கம் உள்ளது.

வயலூர், சமயபுரம், குணசிலம், திருச்சி முதலிய தலங்கள் இத்தலத்தருகே உள்ளன. வழிபடுவோர்க்குத் தங்கும் விடுதிகளும் உணவு விடுதிகளும் உள்ளன. பஸ் வசதி அதிகம் உள்ளன.

தமிழ்நாடு அறநிலையத்துறையின் ஆட்சியின் கீழ் இத்தலம் விளங்குகிறது.

"அருளிற் சீர் பொயாத கணபதி
திருவக் கீசன் வாழும் வயலியில்
அழகுக் கோபுர மீதே மருவிய பெருமாளே!"

# மெய்த் திருப்புகழ் பெற வயலூரா!

"என்னால் பிறக்கவும் என்னால் இறக்கவும்
என்னால் துதிக்கவும் கண்களாலே
என்னால் அழைக்கவும் என்னால் நடக்கவும்
என்னால் இருக்கவும் பெண்டிர்வீடு
என்னால் சுகிக்கவும் என்னால் முசிக்கவும்
என்னால் சலிக்கவும் தொந்த நோயை
என்னால் எரிக்கவும் என்னாய் நினைக்கவும்
என்னால் தரிக்கவும் இங்கு நான்யார்
கன்னா ருரித்த என்மன்னா எனக்குநல்
கர்ணா மிர்தப்பதம் தந்தகோவே
கல்லார் மனத்துட னில்லா ழனத்தவ
கண்ணா டியிற்றடம் கண்டவேலா
மன்னான தக்கனை முன்னாள் முடித்தலை
வன்வாளி யிற்கொளும் தங்கரூபன்
மன்னா குறத்தியின் மன்னா வயற்பதி
மன்னா முவர்க்கொரு தம்பிரானே!"

அருணகிரி நாதரை அருணையில் ஆண்டுகொண்ட அறுமுகப் பெருமான் திருவருளை வியக்கும்போது, வயலூர் என்னும் தலத்தையும் குறிப்பிட்டுச் சிந்திக்காமலிருக்க முடியாது. தம்மையாண்ட பிரானது திருப்புகழை நிரம்பப்பாட வேண்டும் என்னும் இச்சை பொங்கி எழுந்தவராக அருணகிரிநாதர் வயலூர்த் தலத்தை அடைகின்றார். திருச்செங்கோட்டு வேலனைக் கண்டு பரவும் போதும் வயலூரை என்று காண்பேன் என மனம் நைந்து, 'முருகா! நான் என்று செய்ப்பதி (வயலூர்) சேர்வேன்! என்று அத்தலத்தில் உன்னைக் கண்டு பற்றித் தொண்டுபட்டுத் தெண்டனிடுவேன்.

"செய்ப்பதி மீதே-தொண்டுபட்டுத் தெண்டனிட்டுக்
கன்றுபெற்றத் தண்டைவர்க்கத் துங்கரத்துப் பங்கயத்தைத்
தருவாயே"

என்று போற்றியவர்,-வயலூரை அடைந்தவுடன் எப்படி மகிழ்ந்திருப்பார் என்று எண்ணிப் பார்ப்பதே நமக்கு இயலாத தொன்று ஆகும். வள்ளியைத்தம்மோடு இணைக்க எண்ணிய நமது ஆண்டவரே தமது இச்சை நிறைவேற விநாயகமூர்த்தியை வேண்டினராதலின் நாமும் இத்தலத்துள்ள பொய்யா விநாயகரது திருவருளைப் பெற்று விட்டால் நமது இச்சை நன்கு நிறைவேறும்; அங்ஙனம் விநாயகப் பெருமானை வேண்டு வதற்கும் நமது ஆண்டவரான கந்தவேளின் அனுமதி வேண்டுமே எனக்கருதி, முருகவேள் திருமுன்னர் நின்று, 'பெருமானே! உனது திருவடி, உனது சக்திவேல், மயில், கோழிக்கொடி, இவற்றை எக்காலமும் சிந்தித்து வந்திக்கும் புத்தி எனக்கு நிலைத்திருக்க வேண்டி, நான் இத்தலத்தில் விளங்கும் 'அருளிற் பொய்யாத கணபதியை' முறைப்படி வலம் செய்து மறவாது அர்ச்சித்து வணங்குவேன்.

நிசிசரரைப் பெலியிட்டருள் பெருமானே!
நினது திருவடி சத்தி மயிற்கொடி
நினைவு கருதிடு புத்தி கொடுத்திட
நிறைய அமுதுசெய் முப்பழ மப்பமு நிகழ்பால்தேன்
நெடிய வளைமுறி யிக்கொடு லட்டுகம்
நிறவி லரிசிப ருப்பவ லெட்பொரி
நிகரி லினிகத லிக்கனி வர்க்கமு மிளநீரும்
மனது மகிழ்வொடு தொட்ட கரத்தொரு
மகர சலநிதி வைத்தது திக்கர
வளரு கரிமுக ஒற்றை மருப்பனை வலமாக
மருவு மலர்புனை தொத்திர சொற்கொடு
வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு
வகைச பரிபுர பொற்பத அர்ச்சனை மறவேனே

எனப் போற்றி, வயலூரில் விளங்கும் சிவபெருமானை (அக்னீசுவரர்) வழிபட்டுப் பரவினர். திருமுறைகளைத் தொகுத்துதவிய நம்பியாண்டார் நம்பிக்குத் திருநாரையூர்ப் பொல்லாப் பிள்ளையார் அருள் செய்தது போன்று அருணகிரி நாதருக்கு வயலூர்ப் பொய்யாப் பிள்ளையார் அருள் செய்தார். தனது கனவில் பொய்யாப் பிள்ளையார் அருளிய திறத்தை அருணகிரி நாதரே இதோ பாடுகின்றார்.

*"வித்தக மருப்புடைய பெருமாளே!"*

*"பக்கரை விசித்ரமணி பொற்கலனை யிட்டநடை*
*பட்சியெனு முக்ரதுர கமுநீபப்*
*பக்குவ மலர்த்தொடையும் அக்குவடு பட்டொழிய*
*பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்*

*தீக்கது மதிக்கவரு குக்குடமும் ரக்ஷைதரு*
*சிற்றடியு முற்றிய பனிருதோளும்*
*செய்ப்பதியும் வைத்துயர் திருப்புகழ் விருப்பமொடு*
*செப்பென எனக்கருள்கை மறவேனே,'*

தான் விரும்பிய வண்ணமே முருகவேளது மயிலையும் கடப்ப மாலையையும், வடிவேலையும், குக்குடத்தையும், ரக்ஷை தரு சிற்றடியையும் பன்னிரு தோளையும் செய்ப்பதியை (வயலூர்) யும் வைத்து அப்பிரானது திருப்புகழை விருப்புடன் பாட அருள் புரிந்த பொய்யாக் கணபதியின் பேரருளைத் துதித்து நன்றி பாராட்டியதோடு, பிறிதோரிடத்தில் (சக்கரப் பள்ளித் திருப்புகழில்) வயலூரில் விளங்கும் அக்னீசவரரது திருவருளையும்

*"தட்டறச் சமயத்தை வளர்ப்பவள்*
*அத்தன் முற்புகழ் செப்ப அநுக்ரக*
*சத்துவத்தை அளித்திடு செய்ப்பதி"*

எனப் போற்றினர்.

வயலூரில் அருணகிரி நாதர் பலபல அநுக்கிரகப் பேறு களைப் பெற்றார். அருணகிரி நாதருக்கு மிக உகந்த தலம் வயலூர் தான் என்பதை அவர்தம் பல திருப்புகழ்ப் பாக்களிலும் அறிந்து மகிழலாம்.

காவேரி சூழுங் குளிர் வயலூர், திரிசிரகிரி அயல்வயலி, அதிமோகர வயலூர், வயற்பதி, செய்ப்பதி என்று பலப்பட போற்றினர். வயலூருக்குப் பதினெட்டுத் திருப்புகழ்ப் பாடல் கள் கிடைத்துள்ளதும் திருவருட் குறிப்பேயாம்.

பரமவரதராகத் தம்மைப் பணிவார் வினை தணிவாராய் விளங்கும் வள்ளற் பெருமான் விளங்கும் இத்தலம் திருச்சி நகரின் மேற்கே 7 கல் தொலைவிலுள்ளது. இடையே கற்குடி உய்யக்கொண்டான்), சோமரசம்பேட்டை இரண்டும் அமைந் துள்ளன. பெயருக்கேற்பவே வயல்களும் தென்னஞ் சோலை களும் சூழ்ந்து இத்தலம் விளங்குகின்றது. திருச்சியிலிருந்து நிறைய டவுன் பஸ்கள் உள்ளன.

தல விநாயகர்; பொய்யாக் கணபதி ஆவார் அவர் அருகே வடக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் அருணகிரி நாதர் திருவுருவம் உள்ளது. இத்தலத்தில் சிவபெருமான்-ஆதிநாதர் அக்னீசுவரர், குமாரபூஜிதநாதர், விடங்கப் பெருமான், மகா தேவர் என்றெல்லாம் போற்றப் படுகின்றார். இங்கே சிவபெருமான் தானே தோன்றியதால் விடங்கர் (உளியால் செதுக்கப்படாதவர்) எனவும், குமாரக் கடவுளால் பூசிக்கப் பெற்றமையால் குமாரபூஜிதநாதர் எனவும் பெயர் பெற்றார். அருணகிரிநாதர் "திருவக்கீசர்" (அக்னீசுவரர்) என்று இவரைப் போற்றுவார். இறைவி: ஆதிநாயகி, மூந்நிலை நாயகி. இத்தலத்தில் நடராஜப் பெருமான் "சுந்தரத் தாண்டவ மூர்த்தி"யாக வேறு எத்தலத்திலும் காண இயலாத தாண்டவக் கோலத்துடன்-திருவாசி, முயலகன் முதலியன இல்லாமல் இரு கால்களையும் பின்னிய தாண்டவக் காட்சியருளுகின்றார். இப் பெருமான் முற்காலத்தில் "ஐநாற்றுவன்" என்னும் ஐந்நாற்றுக் கால் மண்டபத்தில் சிறப்பு விழாக் கொண்டார் என்று கல் வெட்டுக்கள் பேசுகின்றன.

இத்தலத்தில் சிவபிரானுக்குப் பின்னால் குமாரவேள் சந்நிதி உள்ளது. ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு வேடமங்கையும், வேழமங்கையும் இருபுறமும் விளங்க-மயில் பின் நிற்க-நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். மயிலின் முகம் இடப்பால் உள்ளது. இத்தலத்தில் தேவேந்திரனே மயிலாக வந்ததாகக் கூறுவர். உற்சவர் முத்துக்குமாரசாமி நான்கு கரங்களுடன் மயில்மீது அமர்ந்து விளங்குகின்றார்.

நாடோறும் ஆறுகால வழிபாடு காமிகாகம முறையில் நடைபெறுகின்றன. மாத சஷ்டி, கார்த்திகை நாட்கள் சிறப் பானவை. வைகாசிப் பெருவிழா கந்தசஷ்டி 11 நாட்கள் (அதில் 4 நாட்கள் அருணகிரி நாதர் விழா) பங்குனி உத்திரம் (வள்ளி கல்யாணத்துடன்), கார்த்திகைப் பெருவிழா முதலியன சிறப்பு விழாக்களாகும். தனிக்கட்டணம் செலுத்தினால் முருகவேளுக்கு ராஜா, வேடன், விருத்தன் அலங்காரங்கள் செய்து தரிசனம் செய்யலாம் தங்கக்கவசம் சார்த்தவும் தனிக்கட்டணம் உண்டு.

குமரவேள் தனது வேலாயுதத்தால் உண்டாக்கிய அக்னிதீர்த்தம், சர்ப்பநதி முதலியன புண்ணியப் புனல்கள் தலவிருட்சம்: வன்னி.

மனநோயாதி உள்ளவர்கள் இங்கு வழிபட்டுக் குணம் அடைகின்றார்கள். இரண்டாண்டுகட்கு முன்பு இங்கு வழிபட்ட ஒரு ஊமைப் பெண் பேசினாள்.

அருணகிரிநாதர் வயலூரில் வழிபட்ட நாட்களில் "பெரிய திருப்புகழ்ப்பாடு" என்று முருகன் ஆணையிட "விகடபரிமள" (74 சீர்) என்ற பெரிய திருப்புகழைப் பாடிப் பரவினர். வயலூர் வள்ளல் அருணகிரி நாதரை ஆட்கொண்டு பாமாலை பாடச் செய்தது சொற்கோயிலாகத் திகழுகின்றது.

இதுவரை நமக்குக் கிடைத்துள்ள திருப்புகழ்ப் பாக்களில் அரத்துறை, ஆவினன்குடி, ஆனைக்கா, இஞ்சிகுடி, எட்டிகுடி, கடம்பந்துறை, கதிர்காமம், கருவூர், கற்குடி, குன்றக்குடி, கொடுமுடி, கோடைநகர், சக்கரப்பள்ளி, சுவாமிமலை, திருச்செங்கோடு, செந்தூர், தவத்துறை, தனிச்சயம், திரிசிராப்பள்ளி, தென்சேரிகிரி, நெருவூர், திருப்படிக்கரை, பட்டாலியூர், பரங்குன்றம், புக்கொளியூர், திருப்புத்தூர், திருப்பூந்துருத்தி, பெருங்குடி, பேரூர், திருவாஞ்சியம், விராலிமலை, விஜயமங்கலம் திருவேற்காடு என்னும் 33 தலங்களுக்குரிய 55 பாடல்களில் வயலூர்க் குறிப்பு வருவதை நோக்குமிடத்து, வயலூரைத் தரிசித்த பின்னரே மேற்கண்ட தலங்களை அருணகிரி நாதர் வழிபட்டிருக்கக் கூடும் என்று கருத இடமுண்டு.

இந்நூற்றாண்டில் நம்மிடையே வாழும் திருமுருகக் கிருபானந்தவாரியார் சுவாமிகளை வயலூர் வள்ளல் ஆட்கொண்டு கற்கோயிலை கட்டுமாறு பணித்துத் தன் பணியை நிறைவேற்றிக் கொண்டார். ஸ்ரீ வாரியாரை வயலூர்ப் பெருமான் ஆட்கொண்டதும் மிகவும் சுவையானது. அவரது சுயசரிதத்தில் அதனைப் படித்து இன்புறலாம்.

இத்தலத்தைச் சுற்றி கற்குடி, பெருங்குடி, விராலிமலை, திருச்சி முதலிய திருப்புகழ்த் தலங்கள் உள்ளன.

தங்கும் விடுதிகளும் உணவு விடுதிகளும் உள்ளன.

அறநிலைய ஆட்சித் துறையினரால் இத்தலம் நிர்வகிக்கப் படுகின்றது.

அருணகிரி நாதரை வா என அழைத்து, அருள் தந்து உலகம் உள்ளவரையில் தமிழ் நெஞ்சங்கள் பாடிப் பாடிப் பரவசமுற்றுப் பரமன் அடிசேர பக்தியும் திருவடிப் பேற்றை யடைய யுக்தியும் தரும் திருப்புகழைப் பாடும் திறம் தந்த வயலூரை வழிபட நமக்கு வாய்த்த பிறப்பை வாழ்த்துவோம்.

# பெருங்குடி மருங்குறை பெருமான்

இன்றைக்கு எழுநூறு ஆண்டுகளுக்குமுன் திருச்சிக்கு அருகே உள்ள பெருங்குடியில் ஓர் அதிசயம் நிகழ்வுற்றது. கூத்தன் என்ற பெயருடைய கல்தச்சன் ஒருவன் தன் மகன் நல்லமங்கனுக்கு கண்பார்வையில்லையே என்று அவ்வூரில் உள்ள பெருங்குடி உடையார், திருஅகத்தீஸ்வரமுடையார் சன்னிதி முன்பு நின்று இறைஞ்சுகின்றான். இப்படி அவன் பலநாட்கள் வேண்டி, அந்தப்பையனின் பத்தாவது வயதில் அவனுக்கு ஒளி தோன்றுகிறது. ஆம்! பார்வை கிடைத்துவிட்டது. கூத்தன் மகிழ்ச்சிக்கடலில் கூத்தாடினான். நல்லமங்கனுக்கு கண்பார்வைக் கிடைத்த மகிழ்ச்சியைக் கொண்டாட, தங்கத்தினால் செய்த நெற்றிப்பட்டை ஒன்றை அப்பெருங்குடிப் பெருமானுக்கு அன்பளிப்பாக அளித்தான். இதுமட்டுமா! பெருங்குடி அகத்தீஸ்வரமுடையார் கோயில் கல்தச்சக்கூலி தாழ்வாரத திருப்பணி குறையாயிருக்கையில் மூன்று கழஞ்சு பொன்கொடுத்து அத்திருப்பணியை பூர்த்தி செய்தானாம.

ஹொய்சால மன்னர்களில் வீரராமநாததேவன் ஆட்சியில் கி. பி 1275-ஆம் ஆண்டில் நடைபெற்ற மேற்கூறிய நிகழ்ச்சியைப் பெருங்குடி அகஸ்தீஸ்வரமுடையார் கோயில்கல்வெட்டுவாயிலாக அறியும்போது நமக்கு ஆச்சரியமாக இருக்கிறது.

திருச்சியிலிருந்து வயலூர் செல்லும் வழியில் சோமரசம் பேட்டையிலிருந்து ஒரு மைல் தூரத்தில் உள்ள இந்தப் பெருங் குடியே அருணகிரி நாதர் சென்று வழிபட்டு திருப்புகழில் போற்றிய தலம் என்று அறியும்போது நமது மகிழ்ச்சிக்கு எல்லையில்லை,

வயல்வழியில் பெருங்குடிக்கும் வயலூருக்கும் ஒருகிலோ மீட்டர் தூரமே உள்ளது, அருணகிரிநாதர் வயலூர் வழிபட்ட பின் இப்பெருங்குடியை அடைந்து பாடும்போது வயலூரையே வைத்துப் பாடினர் என்பதற்கு இத்தலத்திருப்புகழே சான்று.

"இலங்கையில் இலங்கிய இலங்களுன் இலங்கரும்
இலெங்கனும் இலங்கென முறையோதீ
இடுங்கனல் குரங்கொடு நெடுங்கடல் நடுங்கிட
எழுந்தருள் முகுந்தனன் மருகோனே
பெலங்கொடு விலங்கலு நலங்கஅ யில்கொண்டெறி
ப்ரசண்டக ரதண்டமிழ் வயலூரா
பெரும்பொழில் கரும்புகள் அரம்பைகள் நிரம்பிய
பெருங்குடி மருங்குறை பெருமாளே."

இத்திருப்புகழில் இவர் பெருங்குடி மருங்குறை என்று குறிப்பிடு வதால் அருகிலுள்ள வயலூர் என்றே கொள்ளலாம்,

பெருங்குடி அகத்தீஸ்வர முடையார் கோயிலில் உள்ள மற்ற கல்வெட்டுக்களை நோக்கும்போது, இதனைக் கட்டியவன் சுந்தர சோழனின் மகன் ஆதித்த கரிகாலன் என்று தெரியவரு கிறது. இவன் கி. பி. 956-969 வரை சோழநாட்டை ஆண்டவன். இவன்காலத்தில் இக்கோயில் திருப்பெருங்குடி பரமேஸ்வரி என்று அழைக்கப்பட்டது. இவனுக்குமுன் இவ்வூர் பல்லவர்கள் ஆட்சியில் இருந்தபோது, "நந்திவர்ம மங்கலப் பெருங்குடி" என்று அழைக்கப்பட்டதாம். இதைத்தவிர மயிலைத்திண்டன் என்பவன் தன்னிடம் இருந்த பொன் கொடுத்து ஒருநிலத்தை வாங்கி இறைவனுக்குக் கொடையாக அளித்தான் என்ற செய்தியை மற்ருெரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. எனவே வரலாற்றுச் சிறப்புமிக்க ஊர் இப்பெருங்குடி என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

அகஸ்தீஸ்வரர் கோயில் முன்புறம் கோபுரம் இல்லை. வெளிமதில்சுவர் இடிந்து காணப்படுகிறது. உள்ளே கோயில் சற்று பள்ளத்தில் உள்ளது. உட்புறபிராகாரங்களில் கல்வெட்டுக்கள் உள்ளன.

மூன்றடி உயரத்தில் அமைந்த நந்தி நல்ல வேலைப்பாட்டு டன் கூடியது. மூலவர் அகத்தீஸ்வரப் பெருமான் சுமார் இரண்டடி உயரமுள்ள லிங்க வடிவில் கிழக்குநோக்கிக்காட்சி யளிக்கின்ருர். அம்பிகை. சிவகாமசுந்தரி என்ற திருநாமத்

தோடு தனிச்சன்னிதியில், நின்றகோலத்தில், நான்குகரங்களுடன் சுமார் இரண்டடி உயரத்தில் மிக அழகாகக் காட்சியளிக்கிருள். சுற்றுப்பிராகாரத்தில் அற்புதமான தட்சிணுமூர்த்தியும், அர்த்த நாரீஸ்வரரும், பிரம்மா, சண்டிகேசுவரர் ஆகிய திருவுருவங்கள் சோழர்காலக் கலைப்படைப்பைக் காட்டுகின்றன.

கோயிலின் ஒருபுறத்தில் பூமிதேவியுடன் கூடியதிருமால், நாராயணர் நின்றநிலையில் மற்றும் விநாயகர் திருவுருவங்கள் உள்ளன. பாலசுப்ரமண்யர் நின்றகோலத்தில் ஒருமுகம் நான்கு கரங்களுடன் அருகில் தேவயானையுடன் உள்ளார். இவைக ளெல்லாம் கோயிலின் பல பகுதிகளிலிருந்து கண்டெடுக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளன. தனியாக முருகப்பெருமான் வள்ளி, தேவ சேனையுடன் கூடிய சன்னிதி இருந்திருக்கக்கூடும். பூமியில் புதைந்திருக்கலாம் என எண்ண வாய்ப்புள்ளது.

தினமும் ஒருகால பூஜை நடைபெறும். இக்கோயில் குமார வயலூர் திருக்கோயிலோடு இணைந்துள்ளது. அறநிலைய ஆட்சித் துறைக்கு உட்பட்டது. அருணகிரிப்பெருமான் இத்தலத்தை தரிசித்தபோது இத்தலப்பாடலில் "பெருங்குடி மருங்குறை பெருமாளே" என்று வயலூரையே குறிப்பிடுகிருர். எனவே திருப்பணி செய்யப்படவேண்டிய நிலையில் உள்ள இக்கோயிலுக்கு குமாரவயலூர் கோயிலே திருப்பணியைச்செய்ய முன்வர வேண்டும்.

தணிகைமணி அவர்கள் பெருங்குடி என்ற பெயருள்ள இடங்கள் பலவற்றைக் குறிப்பிட்டு அருணகிரியார் வழிபட்டது எந்தப் பெருங்குடி என்று விளங்கவில்லை என்று தெரிவிக்கிருர். இதனை ஆராய்ந்ததில் இப்பெருங்குடிதான் அருணகிரியார் பரவியது என்பது இப்பாடலில் உள்ள வயலூர்க் குறிப்பைக் கொண்டு அறிகிறோம். எனவே திருப்புகழ் அன்பர்கள் பலமுறை குமாரவயலூர் செல்லும்போது ஒருமுறையாவது இந்தப் பெருங் குடியில் கண்கொடுத்த பெருமானை வழிபட்டு ஞானக்கண் பெறலாமே!



**ஓதிமலை**

ஸ்ரீ குமாரசுப்ரமண்யர் (ஐந்து முகங்கள்-எட்டு கரங்கள்)

ரத்நபு ஷ்டைநிருத்தன் மெய்ச்சுதனு நாடுமிக்க
லக்ஷணகு மாரசுப்ர மணியோனே

(நற்குணமு...போது)



### வயலூர்

வேலு மயிலுநி னைந்தவர் தந்துயர்<br>
தீர அருள்தரு கந்தநி ரந்தர<br>
மேலைவயலை உகந்துள நின்றருள் பெருமாளே



திருப்பராய்த்துறை

பராய்த்துறைப்பதி பெருமாளே

தீரனெ னும்படி சாற்று விக்ரம

சூரன்ந டுங்கிட வாய்த்த வெற்புடல்

தேயந டந்திடு கீர்த்தி பெற்றிடு கதிர்வேலா



**தென்கடம்பந்துறை (குளித்தலை)**

கனகுடகுல் நின்றகுன் றந்தருஞ் சங்கரன்
குறுமுனிக மண்டலங் கொண்டுமுன் கண்டிடுங்
கதிசெய்நதி வந்துறுந் தென்கடம்பந்துறைப் பெருமாள்.

நன்றி: *French Institute of Indology, Pondicherry.*

உனைச் சொற் றுதிக்கத் தக்க
கருத்தைக் கொடுப்பை சித்தி
யுடைக்கற் குடிக்குட் பத்தர் பெருமாளே

# சித்தியுடைக் கற்குடி

*செய்யானை வெளியானைக் கரியான் தன்னைத்*
*திசைமுகனைத் திசையெட்டுஞ் செறிந்தான் தன்னை*
*ஐயானை நொய்யானைச் சீரியானை*
*அணியானைச் சேயானை ஆனஞ்சாடும்*
*மெய்யானைப் பொய்யாது மில்லான் தன்னை*
*விடையானைச் சடையானை வெறித்தமான்கொள்*
*கையானைக் கற்குடியில் விழுமியானைக்*
*கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே.*

—திருநாவுக்கரசர்.

திருச்சிக்கு மேற்கே 3 கல் தொலைவிலுள்ள உய்யக்கொண்டான் மலைமீது விளங்கும் இத்தலம் திருக்கற்குடி என்று போற்றப்பெறும். இதுமூவர் தேவாரமும் பெற்ற திருத்தலமாகும் 50 அடி உயரமுடைய பாறைமீது கோயில் அமைந்துள்ளது. இங்குள்ள மலையைராஜ கம்பீர வளநாட்டுமலைஎனவும் கூறுவர். இத்தலக் கல்வெட்டில் "ராஜகம்பீரவளநாட்டு மலைஉடைய நாயனார்" என்று காணப்படுகிறது.

இங்கே சிவபெருமான் உச்சிநாதர், முத்தீசர், கற்பக நாதர், உய்யக்கொண்டநாதர், உஜ்ஜீவனநாதசுவாமி என்றெல்லாம் போற்றப் பெறுகின்றார். ஐந்துபிராகாரங்களைக்கொண்ட இக்கோயிலில் இரு அம்மன் சந்நிதிகள் உள்ளன. அம்பிகை: அஞ்சனாட்சி (மைக்கண்ணம்மை) என்ற திருப்பெயருடையாள்.

இங்கு ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு வேடமங்கையும் வேழமங்கையும் புடைசூழ நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி முருகவேள் மூலவர் விளங்கியருள்கின்றார்.

அம்பிகை சந்நிதிக்கருகில்; சண்முகர் தனிசந்நிதியாக விளங்கு கின்றார். உற்சவ மண்டபத்தில் கீழே ஷண்முகர் உத்ஸவமூர்த்தி விளங்குகின்றார். மலைமேலுள்ள ஷண்முகரோ தேவியர் இரு வருடனும் திகழ்கின்றார்.

நாரதர், உபமன்யு, மார்க்கண்டேயர், சுரன், முதலியோர் வழிபட்டதலம் இது.

இத்தலத்தில் பொன்னொளிஓடை, குடமுருட்டி, ஞான வாவி, எண்கோணக்கிணறு, நாற்கோணக்கிணறு முதலிய புண்ணியப்புனல்கள் உள்ளன-

தினமும் காமிகாகம முறையில் இரண்டுகாலவழிபாடு நிகழ்கின்றது. பௌர்ணமியன்று பாலபிடேகம் சிறப்புடையது. பங்குனியில் பிரம்மோற்சவம் நிகழ்கின்றது.

இங்கே குழந்தைகளுக்கு முடிகயிறு போடப்படுகிறது.

இத்தலத்து நிர்வாகம் தருமபுர ஆதீனத்திடம் உள்ளது.

இத்தலத்தைச்சுற்றி, சுரன்வழிபட்ட ஆளுடையார் கோயில், இடர்தீர்த்தவர் கோயில், முத்திதீர்த்தக்கரையில் சண்முகர் கோயில் ஆகியன உள்ளன. பெருங்குடி, வயலூர், அருகிலமைந்த முருகன் தலங்களாகும்.

இத்தலத்தை வழிபட்ட அருணகிரிவள்ளல் இரண்டு திருப் புகழ்ப்பாக்களால் (குடத்தைத்..., நெறித்துப்...) குமரவேளைப் பரவிப் போற்றியுள்ளார். இத்தலமே ராஜகம்பீரவளநாட்டுமலை என்று அருணகிரிநாதர் போற்றும் தலமாகும். "மாகசஞ்சார" என்ற திருப்புகழில் இத்தலத்தைப் போற்றுகிறார். கற்குடி மாமலைமாலை என்ற நூல்திரிசிரபுரம் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களால் பாடப் பெற்றுள்ளது.

இங்கே வழிபடுவோர் விடுதி, உணவுவிடுதிகள் இல்லை, திருச்சியே மிக அருகிலுள்ளது. டவுன்பஸ்வசதி அதிகம்.

குடத்துற்ப வித்துச் சுவர்க்கத் தலத்தைத்
தழைப்பித்த கொற்றத் தனிவேலா
தமிழ்க்குக் கவிக்குப் புகழ்ச்செய்ப் பதிக்குத்
தருக்கற் குடிக்குப் பெருமாளே!

## பராய்த்துறைப்பதி பெருமாள்

*செல்வ மல்கிய செல்வர் பராய்த்துறைச்*
*செல்வர் மேற் சிதையாதன*
*செல்வன் ஞான சம்பந்தன செந்தமிழ்*
*செல்வமா மிவை செப்பவே*

—திருஞானசம்பந்தர்.

*தொண்டு பாடியுந் தூமலர் தூவியும்*
*இண்டை கட்டி யிணையடி யேத்தியும்*
*பண்டரங்கர் பராய்த்துறைப் பாங்கரைக்*
*கண்டு கொண்டடி யேனுய்ந்து போவனே,*

—திருநாவுக்கரசர்.

''பராய்த்துறை மேவிய பரனே போற்றி'' என்று மணிவாசகர் போற்றினர். இவ்வாறு தேவார ஆசிரியர் இருவரும் மணிவாசகரும் பரவிய திருப்பராய்த்துறை, திருச்சி—ஈரோடு இரயில் வழியில், அகண்டகாவிரியின் கரையில் அமைந்துள்ள அற்புதமான திருத்தலமாகும். திருச்சியிலிருந்து 11 கல் மேற்கிலுள்ளது திருச்சியிலிருந்து நிறைய பஸ் வசதி உண்டு. ஐப்பசி மாதப்பிறப்பன்று இத்தலத்தில் ஆயிரக் கணக்கானோர் காவிரியில் நீராடிப் பராய்த்துறை ஈசனை பணிந்து இன்புறுவர்.

இங்கே சிவபெருமான்: தாருகாவனேசுவரர், பராய்த்துறை நாதர் எனவும், இறைவி: ஹேமவர்ணாம்பிகை, பொன் மயிலம்மை எனவும் பெயர் கொண்டு எழுந்தருளியுள்ளனர், மூலவர் சுயம்புலிங்கம். புரட்டாசி 18-ஆம் நாள், வருடந்தோறும், சூரியனின் கிரணங்கள் பெருமான் மீதுபடும் சூரிய பூஜை நிகழ்கின்றது.

தலவிருட்சம்: பராய்மரம். புண்ணியப் புனல்: அகண்ட காவிரி, கோயில் திருக்குளம்.

இங்கே முருகவேள் ஒருமுகமும் இரண்டு கரங்களும் கொண்டு வள்ளி, தெய்வானையுடன் மயில்மீதமர்ந்து மேற்கு நோக்கிக் காட்சியருளுகின்றார். இதே அமைப்பில் உற்சவர் விளங்குகின்றார்.

நாள்தோறும் இரண்டுகால வழிபாடு நிகழ்கின்றது.
மாதக் கார்த்திகை சிறப்புடையது.

வைகாசி விசாகம், கந்தசஷ்டி, கார்த்திகை விழாக்கள் நிகழ்கின்றன.

தொன்மையான ஆலயம்; கல்வெட்டுக்கள் பல உள்ளன
நகரத்தார் வழிபடுவோர் விடுதி ஒன்றுள்ளது.

இங்கே அருணகிரிநாதர் முருகப்பெருமானை ஒரு திருப்புகழால் (வாசனை மங்கையர்...) பாடிப்பரவியுள்ளார்.

இக்காலத்தில் இராமகிருஷ்ண குடில் என்ற அனாதை சிறுவர்கள் புனர்வாழ்வு இல்லமும், இராமகிருஷ்ண தபோவனமும் இத்தலத்தின் பெருமையை மேலும் மிகுவிக்கின்றன.

இக்கோயில் அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தின் கீழ் உள்ளது.

*முதலி வந்திய தீக்ஷை செப்பிய*
*ஞானம் விளங்கிய மூர்த்தியற்புத*
*மூவரிலங்கு பராய்த்துறைப் பதி பெருமாளே!*

# மாந்துறை யமர்ந்த மாமணி

*மாங்கனி யுடைந்து தேங்கவயல் வந்து*
*மாண்பு நெல் விளைந்த வளநாடா*
*மாந்தர் தவரும்பர் கோன்பரவி நின்ற*
*மாந்துறை யமர்ந்த பெருமாளே.*

திருச்சி-லால்குடி பஸ் சாலையில் 10 கி. மீ. தொலைவில் திருமாந்துறை உள்ளது. திருச்சி-அரியலூர் இரயில் வழியில் திருமாந்துறை உள்ளது. லால்குடியிலிருந்து மேற்கே 3 கல் தல விருட்சம் மாமரமாதலின் ஆம்ரவனம், மாந்துறை என்ற பெயர்கள் ஏற்பட்டன. இத்தலத்தில் சிவபெருமானை மான் பூசித்ததாகத் தலமான்மியம் பேசும். மான் பூசிப்பதாக ஒரு சிற்பமும் காணப்படுகிறது. மிருகண்ட முனிவர், கண்ணுவ முனிவர், சூரியன், சந்திரன் முதலியோர் பூசித்துப் பேறு பெற்ற தலமிது.

திருஞானசம்பந்தர் பதிகம் பாடிப் பரவிய தலம் இது. காவிரி வடகரை மாந்துறை என்று இத்தலத்தை உறுதிப் படுத்தி அவர் தேவாரம் பேசுகிறது.

சிவபெருமான்: ஆம்பிரவனேசுவரர்; இறைவி: அழகம்மை (வாலாம்பிகை) அழகாலுயர்ந்த அம்மை எனவும் போற்றுவர்

இத்தலத்தில் மேற்குப் பிராகாரத்தில் முருகவேள் சந்நிதி விளங்குகின்றது. முருகன் கோயில் விமானம் சிற்பங்கள் மிகுந்தது. முருகப்பெருமான் ஒரு முகமும் நான்கு திருக்கரங் களும் கொண்டு வேழமங்கையும் வேடமங்கையும் உடன் விளங்க மயிலுடன் நின்ற கோலத்தில் சுமார் 5 அடி உயரமுடன் கம்பீரமாகக் கிழக்கு நோக்கி விளங்குகிறார். இங்கே முருகனுக்கு உற்சவர் இல்லை.

தண்டாயுதபாணி சந்நிதியும் இங்கு உள்ளது.

சிவபிரானின்பரிவார மூர்த்தங்களோடு, ஆதி சங்கரருக்குத் தனிசந்நிதி இத்தலத்தில் இருப்பது குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

தினமும் காமிகாகம முறையில் நான்கு கால வழிபாடுகள் நிகழ்கின்றன. கந்தனை வந்தித்து தம்தம் வினை நீக்கிக் கொள்கின்றனர். அம்பிகை மகிமை மிக்குத் திகழ்கின்றாள்.

வைகாசி விசாகம், பங்குனி உத்திரம் சிறப்பு விழா நிகழ்கின்றது.

கோயிலின் தென்பால் காயத்திரி நதி ஓடுகின்றது. அது வற்றாத ஜீவ நதியாகும்.

அருணகிரிநாதர் இத்தல முருகனை 'ஆங்குடல் வளைந்து' என்ற திருப்புகழில் பரவிப் போற்றியுள்ளார்.

இத்தலத்தருகே திருத்தவத்துறை (லால்குடி), பூவாளூர், திருமங்கலம், அன்பிலாலந்துறை போன்ற தலங்கள் உள்ளன.

அமைதியான, வளமான சோலைகள் சூழ்ந்து விளங்கும் இவ்வருள் நிலயம் வேண்டுவார்க்கு வேண்டுவன வழங்குகின்ற தன்மையது.

இந்து அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ள இத்தலத்தில் மான் வளர்க்க வேண்டும் என்ற அவா நீண்ட நாட்களாக நிறைவேறாமல் இருந்து வருகின்றது.

# திருத்தவத்துறை வரும் வாழ்வே!

திருச்சிராப்பள்ளிக்கு வடகிழக்கே 12 கல் தொலைவில்-அரியலூர் செல்லும் பஸ், இரயில் மார்க்கத்தில் விளங்கும் இத்தலம் தற்காலத்தில் லால்குடி என்று அழைக்கப்படுகின்றது. முஸ்லீம்கள் இப்பகுதியில் படையெடுத்தகாலத்தில் இத்தல திருக்கோயில் கோபுரம் சிவப்பாக இருந்ததுகண்டு சிவப்புநகரம் (லால்-சிவப்பு) என அழைத்தனர். அப்பெயரே பிற்காலத்தில் வழக்கில் நிலவவே பழைய பெயரான திருத்தவத்துறை என்ற பெயர் நூல்களில் மட்டுமே காணக்கிடக்கின்றது. இப்படிப் பலதலங்கள் தமது பழம்பெரும் புனிதப்பெயர்களை இழந்து-இக்காலத்தில் நாம் அவலமடைந்து உழல்வதுபோலவே-அவை தாமும் புதுப்பெயரோடு பொலிகின்றன!

திருத்தவத்துறை-அருமையான தலம் இது. அத்ரி, பிருகு, புலஸ்தியர், வசிஷ்டர், கௌதமர், ஆங்கிரஸர், மரீசி என்னும் ஏழு முனிவர்களும் வழிபட்டு முக்திஅடைந்ததலம். ஆதலின் தவமுனிவர் வழிபட்டதுறை-தவத்துறை என்று தலப்பெயரும், சப்தரிஷீசுவரர் என்று இறைவன் பெயரும் திகழலாயிற்று. இறைவியின் பெயர்: ஸ்ரீமதி, (பெருந்திருப்பிராட்டியார்).

முன்பொருகாலத்தில் காடாக இருந்த இத்தலத்தை ஓர் மழவமன்னன் அடைந்தான். அவனுக்குத் தொழுநோய் பற்றியிருந்தது. இங்கிருந்த தடாகத்தில் நீராடினான். என்ன அதிசயம்! அவன் நோய் நீங்கிவிட்டது. உடனே இத்தல மாண்பினை உணர்ந்து-காடுகளை அழிக்கத்தலைப்படும்போது ஓர் சிவலிங்கத்தைக்கண்டான்; கோயிலை நிருமாணித்தான். அம்மன்னன் நீராடிப்பேறுப் பெற்றதடாகமே சிவகங்கை தீர்த்தமாக திகழுகின்றது. இக்கோயிலின் பிராகாரத்தில் விளங்கும் கிணறு-சக்கரதீர்த்தம் எனப்படும். இது திருமால் தனது சக்கரத்

தால் தோற்றுவித்தது; இதில் நீராடி சப்தரிஷீஸ்வரரை வழிபட்டே திருமகள் திருமாலைச்சேர்ந்தாள் என்று இத்தல மான்மியம் கூறுகின்றது. இங்கு சப்தரிஷீஸ்வரரும் திருமாலும் மேற்குநோக்கி விளங்குவதையும் ஸ்ரீ மதி அம்பிகையும் மகாலட்சுமியும் கிழக்குநோக்கி விளங்குவதையும் காணலாம். இறைவனுக்குத் தேஜோவிடங்கர் என்ற பெயரும் உண்டு.

கருவறையில் நான்கு தூண்கள் காணப்படுவது இத்தலத்தின் மற்றொரு சிறப்பாகும்: அவை அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் குறிப்பன என்பர். தலவிருட்சம் அரசமரம் இத்தல விநாயகர் சிணுமூர்த்தி திருவுருவம் சிறப்பானது.

சிவன் சந்நிதியின் உட்பிராகாரத்தின் வடபால் ஆறுமுகப் பெருமான் பன்னிருகரங்களுடன், வள்ளி, தெய்வயானையுடன் மயில்மீதமர்ந்து தெற்குநோக்கி எழுந்தருளியுள்ளார் அம்பிகை சந்நிதியில் உள்ள ஆறுமுகர் கிழக்குநோக்கி நின்றதிருக்கோலத்தில் வள்ளி, தெய்வயானையுடன் விளங்குகின்றார்.

தினமும் காரண, காமிகாகம முறையில் ஆறுகாலவழிபாடு நிகழ்கின்றது. மாதக்கார்த்திகை, சஷ்டி சிறப்பு நாட்களாகும்

கந்தசஷ்டி விழா சிறப்பாக நடைபெறுகின்றது.

அருணகிரிநாதர் இத்தலப் பெருமானை இருதிருப்புகழ்ப் பாடல்களால் பரவினார் (காரணியுங்..., நிரைத்தநித்தில...)

"சீரணியுந் கிரை கத்து முத்தெறி
காவிரி யின்கரை மொத்து மெத்திய
சீர்புனை நின்ற திருத்தவத்துறை வரும்வாழ்வே"

எனவும்,

"திரைக்கடற்பொரு காவிரி மாநதி
பெருக்கெடுத்துமெ பாய்வள நீர்பொலி
செழித்த நெற்செநெல் வாரிக ளேகுவை குவையாகச்
செருக்கு செய்ப்பதி வாழ்முருகா அறம்
வளர்த்த நித்ய கல்யாணி க்ருபாகரி
திருத்தவத்துறை மாநகர் தானுறை பெருமாளே"

எனவும் வரும் பகுதிகள் வளமிக்க திருத்தவத்துறையின் ஆன்மீக வளத்தை நம்முன் சித்தரித்துக் காட்டுகின்றன.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளது இத்தலம்.

இத்தலத்தருகே பூவாளூர், அன்பில், பெருமங்கலம், திருமாந்துறை, சமயபுரம் முதலிய பலதலங்கள் உள்ளன.

வழிபடுவோர்க்குத் தங்கும் விடுதிகளும் உணவுவிடுதிகளும் உள்ளன. திருச்சியிலிருந்து டவுன்பஸ் வசதி அதிகம்.

## மாவளநாடு போற்றிய பூவாளுர்

இக்காலக்கம்பர் எனப் போற்றப்பெறும் திரிசிரபுரம் மஹாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களின் மாணாக்கர்களுள் ஒருவர் தியாகராயசெட்டியார். அவர் குடந்தைக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகச் சிறப்புடன் திகழ்ந்தவர் தனக்குபின்தன் ஒருசாலைமாணவரான உ.வே.சுவாமிநாதய்யரை அப்பணியில் அமர்த்த உதவியவர்-அதன்மூலம் தமிழ்த்தாத்தாவின் பணி தமிழகத்திற்கு முழுதுமாய்க் கிட்டிடச்செய்த பெருந்தகை அவர். மஹா மஹோபாத்தியாய டாக்டர் உ.வே. சுவாமிநாதய்யரை நினைவுகூறுமிடத்து தியாகராசச்செட்டியாரை போற்றவேண்டும். அப்பெருந்தகையை அளித்த ஊர் பூவாளுர் ஆகும். திருச்சிமாவட்டத்தில் லால்குடிக்கு வடக்கே 2 கல் தொலைவில் அரியலூர் சாலையில் அமைந்த இத்தலத்திற்கு, திருச்சியிலிருந்து லால்குடிக்கு இரயில்வழிமூலம் சென்றும் அடையலாம். திருச்சியிலிருந்து நிறைய பஸ்வசதி உள்ளது.

காமதகனத்திற்குப்பின் இரதி இத்தலத்திறைவனை வேண்டித்தன் பதியைப் பெற்ற பதி இது. ஆதலின் இதற்கு மன்மதபுரம் என்ற பெயரும் உண்டு.

இங்கே இறைவன் சிவபெருமான் திருமூலநாதர் என்ற திருப்பெயருடனும் அம்பிகை-குங்குமாம்பிகை எனவும் கோயில் கொண்டு விளங்குகின்றனர். அழகான கோயில்; அமைதியான காவிரி வளமுடைய சூழல்.

இக்கோயிலில் ஆறுமுகப்பெருமான் பன்னிருகரங்களுடன் மயில்மீதமர்ந்து வேடமங்கை வேழமங்கையுடன்விளங்க-கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தனியே பாலதண்டாயுதபாணி சந்நிதியும் உள்ளது. உற்சவமூர்த்தியும்சிறப்பாகவிளங்குகின்றார்.

நாள்தோறும் காமிகாகம முறைப்படி இரண்டுகால வழிபாடு நிகழ்கின்றது.

மாதக்கார்த்திகை சிறப்புடையது.

வைகாசிவிசாகம், கந்தசஷ்டி விழாக்கள் நிகழ்கின்றன.

புண்ணியப்புனல்: சுயபங்குனி வாய்க்கால் தீர்த்தம்; தலவிருட்சம்: வில்வம்.

இத்தலமுருகனை அருணகிரிநாதசுவாமிகள் ஒரு திருப்புகழ்ப் பாடலால் பரவியுள்ளார். அதில் மதுரையில் திருஞானசம்பந்தர் சமணர்களை வாதில் வென்று எண்ணாயிரம் சமணர் கழுவேறவும், பாண்டியன் கூன்நிமிர்ந்து நின்றசீர் நெடுமாறனாக மாறவும் நிகழ்ந்த அற்புதங்களைத் தொகுத்துப்பாடுகின்றார்.

ஞான தீக்ஷித சேயே காவிரி
யாறு தேக்கிய கால்வாய் மாவள
நாடு போற்றிய பூவாளூர் உறை பெருமாளே.

இத்தலத்தில் தங்கும் விடுதிகள், உணவு விடுதிகள் இல்லை. திருச்சி அருகிலுள்ளதால் அங்கிருந்து வந்து வழிபடலாம். இத்தலத்தைச்சுற்றி திருத்தவத்துறை (லால்குடி), அன்பிலாலந்துறை (அன்பில்), திருப்பெருமங்கலம் (ஆனயநாயனார்பதி), திருமாந்துறை, முதலிய தலங்கள் அமைந்துள்ளன. தமிழ்நாடு அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது.

# அன்பர் குலவுந் திரு நெடுங்களம்

*மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்*
*பிறையுடையாய் பிஞ்ஞகனே என்றுனைப் பேசினல்லால்*
*குறையுடையார் குற்றமோராய் கொள்கை யினுலுயர்ந்த*
*நிறையுடையார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே.*

திருஞானசம்பந்தர்

சைவர்கள் தமக்கு இடர் ஏதும் நேரிட்டால் இடர்களையும் பதிகமாகத் திருஞான சம்பந்தர் அருளிய பதிகமொன்றைப் பாடி இடர் நீங்குவர். திருஞான சம்பந்தர் அப்படி அற்புதமாக ஔடதமாக அருளிய பதிகம் பெற்றதலம் திருநெடுங்களம் என்னும் ஒப்பரிய தலமாகும். இது திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் திருவெறும்பூருக்குக் கிழக்கே 7 கல் தொலைவில் அமைந்துள்ளது. தூவாக்குடியிலிருந்து வாளவந்தான் கோட்டை மார்க்கமாகவும் இத்தலத்தை அடையலாம் சோழகம்பட்டி இரயில் நிலையத்திலிருந்து 2 கல் தொலைவில் அடைவோரும் உண்டு. திருச்சியிலிருந்து டவுன் பஸ் (56, 56-A) வசதி உள்ளது.

இங்கே சிவபெருமான் நித்திய சுந்தரேசுவரர் என்ற திருநாமத்துடனும், இறைவி ஒப்பிலாநாயகி என்ற திருப்பெயருடனும் திகழ்கின்றனர். இத்தலத்தில் முருகவேள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு, வேடமங்கை, வேழமங்கையுடன் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

தினமும் 2 கால வழிபாடு நிகழ்கின்றது.

கந்த சஷ்டி, கார்த்திகை விழாக்கள் நிகழ்கின்றன.

இத்தலத்தில் அருணகிரிநாதர் பரவிய திருப்புகழ் அருமையானது.

*பஞ்சபுலனும் பழையரண்டு வினையும் பிணிகள்*
*பஞ்சென எரிந்துபொடி யங்கமாகிப்*
*பண்டறவுடன் பழைய தொண்டர்களுடன் பழகி*
*பஞ்சவர் வியன்பதியு டன்குலாவக்*
*குஞ்சரமுகன் குணமொ டந்தவனம் வந்துலவ*
*கொஞ்சிய சிலம்புகழல் விந்துநாதங்*
*கொஞ்ச மயிலின் புறமெல் வந்தருளி என்கவலை*
*கொன்றருள் நிறைந்த கழல் இன்றுதாராய்*

என்று இப்பொழுதே என் கவலை நீங்கிட உன் திருவடியைத் தந்தருள்வாய் என வேண்டுகின்றார்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தின்கீழ் இத்தலம் உள்ளது. தங்கும் விடுதி, உணவு விடுதிகள் இங்கில்லை.

# பழூர்க்குள் மயில் அழகோன்

அரியலூரிலிருந்து திருச்சி செல்லும் பஸ்வழியில் அமைந்த இத்தலம் வரலாற்றுச் சிறப்பு மிக்கது. மேலப் பழூர் என்பது பழுவேட்டரையர்கள் வாழ்ந்த இடமாகும். அவர்கள் சோழ மன்னர்களுக்கு மகட் கொடை கொடுக்கும் உரிமை பெற்றவர்கள்; தற்காலத்தில் செங்குந்தர், கைக்கோளர் என விளங்கும் மரபினரின் முன்னோர்கள். முருகவேளை முதற்கடவுளாக வழிபடும் பெருமக்கள் இவர்கள். மேலப்பழுவூரில் விளங்கும் இரு கருங்கற் கோயில்கள் ஸ்தூபி முதல் பீடம் வரையில் கருங் கல்லினாலேயே அமைந்து அற்புதமான சிற்பங்களுடன் தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத்துறையின் பாதுகாப்பிலுள்ளது. இங்கு பரசுராமரின் தந்தையார் ஜமதக்னி வழிபட்ட சிவன் கோயிலும் உண்டு. மேலப் பழுவூரின் கிழக்கே ஒருகல் தொலைவில் கீழப் பழுவூர் உள்ளது. கீழப்பழுவூரே, திருப்பழுவூர் என்ற சிறப் புடைய தேவாரத் தலமாகும். தஞ்சாவூரிலிருந்து அரியலூர் செல்லும் பஸ்கள் இத்தலம் வழியே செல்கின்றன. அரியலூரி லிருந்து டவுன் பஸ் வசதி உண்டு. திருவையாற்றிலிருந்து 10 கல் தூரத்திலுள்ளது.

பழு-ஆலமரம் ஆலமரம் தலவிருட்சமாதலின் இத்தலம் இப்பெயர் பெற்றது. பழுவேட்டரையர் தொடர்பும் ஒரு சிறப்பாகும். இங்கே சிவபெருமான் திருக்கோயில் ஆலந்துறை என்றழைக்கப் படுகின்றது. இறைவனும் ஆலந்துறையார், வடமூலநாதர் என்று போற்றப் பெறுகிறார். இறைவி: அருந்தவ நாயகி, மஹாதபஸ்வினி என்ற திருப்பெயர் கொண்டு தவக் கோலத்தில் விளங்குகிறாள். அம்பிகை, தவமியற்றுவதால் இத் தலத்திற்கு யோகவனம் என்ற பெயரும் உண்டு. கல்வெட்டுக் களில் இத்தலம் சிறுபழுவூர் எனக் காணப்படுகிறது.

இத்தலத்தில்தான் பரசுராமர் வழிபட்டுத் தன் தாயைக் கொன்ற பாவத்திற்குக் கழுவாய் தேடிக் கொண்டார் என்று தலமான்மியம் பேசுகின்றது. பரசுராம தீர்த்தம் கோயிலின் முன்பு உள்ளது.

இங்கே திருஞான சம்பந்தர் வழிபட்டுப் பதிகம் பாடினர்.

இங்கே முருகவேள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு வேட மங்கையும் வேழமங்கையும் உடன் நிற்க கிழக்கு நோக்கி, நின்ற திருக்கோலத்தில் காட்சியருளுகின்றார். அற்புதமான சிற்பப் படைப்பு. உற்சவர் மயில்மீது அமர்ந்து விளங்குகின்றார்.

நாள்தோறும் காமிகாகம முறையில் இரண்டுகால வழிபாடு நிகழ்கின்றது.

மாதக் கார்த்திகை சிறப்புடையது.

கந்த சஷ்டி, பங்குனி உத்திர விழாக்கள் நிகழ்கின்றன.

அருகில் அரியலூரில் தங்கும் விடுதிகள் உணவு விடுதிகள் உள்ளன. அரியலூரிலுள்ள சிவன்கோயிலும் திருப்பழுவூரை நினைவுபடுத்துவதாயுள்ளது. அங்கே இறைவன்: ஆலந்துறையார்; இறைவி: அருந்தவநாயகி, ஆறுமுகப்பெருமான் அற்புதத்திருக் கோலம் நம்மை ஈர்க்கின்றது.

இத்தல முருகனை அருணகிரிநாத சுவாமிகள் "விகடசங்கட என்னும் திருபுகழால் போற்றிப் பரவினர். அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது. தலபுராணம் உள்ளது. அச்சேறவேண்டும்.

இங்கு-கோயிலில் திருடவந்த ஒருவன் கண்பார்வை இழந்து விட்டான். தான் செய்த பழி நீங்கப் பெரிய குத்து விளக்கினைப் இறைவனுக்கு அர்ப்பணித்துத் தன் பாதகமலங் களைப் போக்கிக் கொண்டான்என்று கூறுவர்.

*அமரர் அந்தணர் போற்ற வேகிரி*
*கடல தீர்ந்திட நோக்கு மாமயில்*
*அழகொடும் பழுவூர்க்குள் மேவிய பெருமாளே.*

# வாலிகொண்டபுரம் அமர்ந்த வேலன்

திருச்சி மாவட்டத்தில், பெரம்பலூரிலிருந்து சென்னை செல்லும் டிரங்க் சாலையில் 8 கல் தொலைவில் உள்ள வாலிகண்டபுரம் என்று தற்போது வழங்கப்படும் தலமே அருணகிரிநாதரால் வாலிகொண்டபுரம் என்று திருப்புகழில் போற்றப்பெற்றுள்ளது.

இங்கே சிவபெருமான்: பிரம்மபுரீசுவரர் என்றும், இறைவி, பாலாம்பிகை, பிரஹந்நாயகி எனவும திருப்பெயர் கொண்டு கோயில் கொண்டுள்ளனர். பிரம்மா பூசித்து உய்வடைந்ததால் இங்கு பெருமானுக்குப் பிரம்மபுரீசுவரர் என்ற திருப்பெயர் வந்தது என்று தலமான்மியம் கூறும். வாலி பூசித்த தலமாதலின் இது வாலிகொண்டபுரம் ஆயிற்று என்பர் தற்போது அது வாலிகண்டாபுரமென மருவி வழங்கப்படுகின்றது.

தொன்மையான இத்தலத்தில் வரலாற்றுச் சின்னங்கள் பல உள்ளன. ஆங்கிலேயரும பிரெஞ்சுக்காரர்களும் திருச்சியை மையமாகக்கொள்ளக் கர்னாடகத்தில் போரிட்ட சூழலில் இவ் வூரும இடம் பெறுகின்றது.

இத் திருக்கோயிலில் தண்டாயுதபாணி சந்நிதியும் அறுமுகப் பெருமான் சந்நிதியும் அமைந்துள்ளன. ஆறுமுகப் பெருமான் மயில்மீதமர்ந்துள்ள கோலம் அற்புதமானது.

இங்கே இரண்டுகால பூசை நாடோறும் நிகழ்கிறது.

முக்கிய திருவிழா நாட்களில் சிறப்பு வழிபாடு நிகழும்.

அறநிலைய ஆட்சித்துறையின் கீழ் உள்ளது.

இத்தலத்திற்கருகே துறைமங்கலம் என்ற தலம் சிவப்பிரகாச சுவாமிகள் (நால்வர் நான்மணி மாலை, முதலிய நூல்களை அருளியவர்) அவதரித்த பெருமை உடையது.

வாலிகொண்டபுரம் சிறிய ஊராதலின் பெரம்பலூரில் தான் தங்கும் விடுதிகளும் உணவு விடுதிகளும் உள்ளன.

அருணகிரிநாதர் இத்தல முருகவேளை "ஈயெறும்பு" எனத் தொடங்கும திருப்புகழில் சூரசம்ஹாரத்தைச் சிறப்பித்து

வாச கும்பதன மானை வந்துதினை
காவல் கொண்ட முருகா எனும் பெரிய
வாலிகொண்ட புரமேயமர்ந்து வளர் தம்பிரானே.

என்று பரவிப் போற்றுகின்றார்.

# தென் கடம்பந்துறை தேவன்

*ஆரியந் தமிழோ டிசையானவன்*
*கூரிய குணத்தார் குறிநின்றவன்*
*காரிகை யுடையான் கடம்பந்துறைச்*
*சீரியல் பத்தர் சென்றடை மின்களே.*

-திருநாவுக்கரசர்:

''காலைக் கடம்பர், மத்தியானச் சொக்கர், அந்தி திரு ஈங்கோய்நாதர்'' என்று ஓர் பழமொழி உண்டு. ஒரே நாளில் மூன்று காலங்களில் இம்மூன்று தலங்களையும் தரிசிக்கவேண்டும் என்பது ஆன்றோர் கட்டளை. ஒன்றுக்கொன்று சில கல் தொலைவில் அமைந்துள்ள இம் மூன்று திருத்தலங்களும் தேவார ஆசிரியர்கள் பரவிப்பாடிய பெருமையும் உடையவை.

காலைக்கடம்பர்—கடம்பர் கோயில்

மத்தியானச்சொக்கர்—திருவாட்போக்கி (இரத்தினகிரி, சிவாயம்)

அந்தி திரு ஈங்கோய்நாதர்—திருஈங்கோய்மலை (திருவெங்கி மலை)

திருச்சி மாவட்டம் இம்மூன்று தலங்களையும் தன்னகத்தே உடைய பெருமை கொண்டது. இவற்றுள் கடம்பர்கோயில் என்னும் தென்கடம்பந்துறைத் தலத்திற்கு இப்பொழுது செல்கிறோம். திருச்சி-கரூர் பஸ் வழியில், குளித்தலைக்கு வட மேற்கில் ஒருகல் தொலைவில் உள்ளது இத்தலம். கடம்பம், கடம்பந்துறை, கடம்பவனம் என்றெல்லாம் இப்பதி பெயர் பெறக்காரணம் இத்தல விருட்சமானக் கடம்பமரமேயாகும். சிவபெருமான் கண்ணுவமுனிவருக்கும் தேவர்களுக்கும் கடம்ப விருட்சத்தில் தோன்றி காட்சியருளிய தலம் இது. புண்ணியப் புனல்: காவிரி (அக்னி தீர்த்தம்). இங்கே சிவபெருமான்

கடம்பவனேசராகவும், இறைவி: முற்றிலா முலையம்மை (பால குஜாம்பிகை) யாகவும் திருப்பெயர்கொண்டு விளங்குகின்றனர். வடக்குபார்த்த திருக்கோயில் இது.

இங்கே முருகவேள் ஆறுமுகமும் பன்னிருகரமும் கொண்டு தேவிமார் இருவரும் புடை சூழ நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். உற்சவர் ஒரு முகத்துடன் மயில் மீது அமர்ந்த கோலத்தில் திகழ்கின்றார்.

காமிகாகம முறைப்படி நாடோறும் நான்கு கால வழி பாடு நிகழ்கின்றது.

மாதக்கார்த்திகை, சஷ்டி சிறப்புடையவை.

கந்தசஷ்டி, மாசிமகம், தைப்பூசப் பெருவிழாக்கள் நிகழ்கின்றன.

கருவறையில் சிவபெருமானுக்குப் பின்புறம் ஏழு கன்னியர் (சப்தமாதர்) விளங்குகின்றனர்.

அறநிலைய ஆட்சித்துறைபால் இக்கோயில் நிர்வகிக்கப் படுகின்றது. தங்கும் விடுதி, உணவு விடுதிகள் உள்ளன.

இத்தலத்து முருகவேளை அருணகிரி வள்ளல் அற்புதமான ஒரு திருப்புகழால் பாடிப்பரவினார்: (புணரியு ...), இதில்

*துணர்விரி கடம்பமென் தொங்கலும் பம்புறும்*
*புழுகுமச லம்பசுஞ் சந்தனங் குங்குமந்*
*தொகுகளப முந்துதைந் தென்பூநன் கொன்றுபத்*
*திருதோளுந்*
*தொலைவில் சண்முகங்களுந் தந்த்ரமந்த் ரங்களும்*
*பழநிமலையும் பரங்குன்றமும் செந்திலுஞ்*
*துதிசெயுமே யன்பர்தஞ் சிந்தையுஞ் சென்று செய்ப்*
*பதி வாழ்வாய்*

என்றும் போற்றிக் காவிரியின் தோற்றத்தைக் கூறித் தலைக்கட்டுகின்றார்:

*கன குடகில் நின்றகுன் றந்தருஞ் சங்கரன்*
*குருமுனி கமண்டலங் கொண்டுமுன் கண்டிடுங்*
*கதிசெய்நதி வந்துயுந் தென்கடம் பந்துறை பெருமாளே*

# நமசிவாயனொடு ரத்னகிரி வாழ் முருகா

*மாறு கொண்டு வளைத் தெழு தூதுவர்*
*வேறு வேறு படுப்பதன் முன்னமே*
*ஆறு செஞ்சடை வைத்த வாட்போக்கி யார்க்(கு)*
*ஊறி யூறி உருகும் என் உள்ளமே.*

**-திருநாவுக்கரசர்.**

*பத்தியால் யானுனைப் பலகாலும்*
*பற்றியே மாதிருப் புகழ்பாடி*
*முத்தனா மாறெனைப் பெருவாழ்வின்*
*முத்தியே சேர்வதற் கருள்வாயே*
*உத்தமா தானசற் குணர்நேயா*
*ஒப்பிலா மாமணிக் கிரிவாசா*
*வித்தகா ஞானசத் திநிபாதா*
*வெற்றி வேலாயுதப் பெருமாளே.*

**-அருணகிரிநாதர்.**

திருச்சியிலிருந்து குளித்தலை அடைந்து அங்கிருந்து மணப்பாறை செல்லும் வழியில் இத்தலம் உள்ளது. சிவாயமலை சிவதைப்பதி, அரதனாசலம், இரத்தினவெற்பு, சிவாயம், வாட்போக்கி, மணிக்கிரி, மாணிக்கமலை எனப் பல்வேறு பெயர்களால் 'போற்றப் பெறுவது இத்தலம். 1017 படிகள் கொண்ட மலைக் கோயிலில் சிவபெருமான் இரத்தினகிரீசுவரர், என்ற திருப் பெயருடன் விளங்குகின்றார். இறைவி : கரும்பார் குழலி. இத் தலத்தில் முருகவேள் ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டு இருபுறமும் தேவிமார் சூழ மயில்மீது அமர்ந்து கிழக்கு நோக்கி காட்சி தருகின்றார்.

தினமும் 3 கால வழிபாடு வாதுள ஆகம முறையில் நிகழ்கின்றது.

மாதக் கார்த்திகை சிறப்புடையது. பௌர்ணமி, அமாவாசை சிறப்பு வழிபாடு.

சித்திரைவிழா, தைப்பூசம், பங்குனி, தெப்பவிழா முதலியன நிகழ்கின்றன.

காலைக்கடம்பர் (கடம்பர் கோயில்) மத்தியானச் சொக்கர் (இரத்தினகிரி) அந்திதிரு ஈங்கோய் நாதர் (திருஈங்கோய்மலை) என்ற முதுமொழிப்படி நடுப்பகலில் வழிபடவேண்டிய தலம் இது.

காவிரியே புண்ணியப் புனல். தலவிருட்சம்; வேம்பு.

சுவாமி சந்நிதி மேற்கு நோக்கியுள்ளது. சுவரில் உள்ள ஜன்னல் வழியே மாலைப் பொழுதில் சுவாமிமேல் சூரியஒளி மாசி சிவராத்திரி, வைகாசி விசாக சமயத்தில் வருடத்தில் இரு முறை கீழிருந்து மேலாக விழுவதைக் காணலாம. மலைமீது சுவாமிக்கு அபிடேகம் செய்யும் பால், தயிராக மாறுவதை இன்றும் காணலாம். ஆயர் ஒருவர் அபிடேகத்துக்குக் கொண்டு வந்த பாலைக் காகம் கவிழ்த்ததால் அது எரிந்து போயிற்று. அப்படிக் கவிழ்த்த எல்லைக்குமேல் காகம் இன்றும் பறப்பது இல்லை. ஆகவே இம்மலைக்குக் "காகம் பறவாமலை" என்ற பெயரும் உண்டு.

ஆரியமன்னன், பெருமான் முடியில் வாளை வீசிய போது அவ்வாளைப் போக்கிய காரணத்தால் வாள்போக்கி என்ற பெயர் வந்தது. மலை அடிவாரத்தில் லவரப் பெருமாள் சந்நிதியும், கருப்பண்ணசாமி சந்நிதியும் உள்ளன. மலையில ஆங்காங்கே நீர்ச் சுனைகள் உள்ளன.

சுவாமி இரத்தினகிரீசுவரர், வாட்போக்கி நாதர், இராசலிங்கர், முடித்தழும்பர், மலைக்கொழுந்தீசர், மாணிக்கமலை, மகாதேவர் என்றெல்லாம் போற்றப் பெறுகிறார்.

இந்திரன், சூரியன் வீரசேனன், ஆதிசேடன், துர்க்கை அகத்தியர் முதலியோர் வழிபட்டுப் பேறு பெற்ற தலம். 12 வருடங்களுக்கு ஒருமுறை இடி பூஜிப்பதாகக் கூறப்படுகிறது.

இத்தலத்தில் 50 கல்வெட்டுக்கள் உள்ளன.

திருவாட்போக்கிப் புராணம், இரத்தினகிரி உலா, வாட்போக்கிக் கலம்பகம் முதலிய இலக்கியங்கள் இத்தலத்திற்குள்ளன.

அருணகிரி நாதர் இத்தலப் பெருமானை மூன்று அற்புதத் திருப்புகழ்ப் பாக்களால் பரவியுள்ளார். முருகவேள் எல்லோரையும் ஆடவிடுகிறார்.

*தித்திமித தீதிமித தீதிமித தீமிதத*
*தத்ததன தானதன தானனன தானனன*
*திக்குடுடு டேடமட டாடமட டுடுடு எனதாளம்*
*திக்குமுகிலாட அரியாட அயனாட சிவ*
*னொத்துவிளை யாடபரை யாடவர ராடபல*
*திக்கசுரர் வாடசுரர் பாடமறை பாடஎதிர் களமீதே*
*எத்திசையு நாடியமனூர் நிணமொ டாடபெல*
*மிக்கநரி யாடகழு தாடகொடி யாடசமர்*
*எற்றிவரு பூதகண மாட வெளி யாடவிடு வடிவேலா*
*எத்தியொரு மானைதினை காவல்வல பூவைதனை*
*சித்தமலை காமுககுகா நமசிவாயனொடு*
*ரத்னகிரி வாழ்முருகோனே இளையவா அமரர்*
*பெருமாளே,*

இத்தலத்தில் வழிபடுவோர் விடுதி, உணவு விடுதிகள் இல்லை.

தமிழ்நாடு அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது.

மலையடிவாரத்தில் 1½ கல் தொலைவில் சிவாயம் என்ற ஊரில் ஒரு சிவன் கோயில் உள்ளது. இது அருணகிரிநாதர் திருப்புகழ் வைப்புத் தலம் என்பர்

# கருவைப் பதிக்குள் உறை கருணாகரன்

நீதியார் நினைந்தாய நான்மறை
ஓதியாரொடுங் கூடலார் குழைக்
காதினார் கருவூருள் ஆனிலை
ஆதியார் அடியார் தமதன்பரே.

திருஞானசம்பந்தர்.

மதியால்வித் தகனாகி
மனதாலுத் தமனாகிப்
பதிவாகிச் சிவஞான
பரயோகத் தருள்வாயே
நிதியேநித் தியமேயென்
நினைவேநற் பொருளாயோய்
கதியேசொற் பரவேளே
கருவூரிற் பெருமாளே!

—அருணகிரிநாதர்.

திருச்சி மாவட்டத்தில் அமைந்த முக்கிய நகரங்களுள் கருவூர் ஓர் முக்கிய நகரமாகும். சோழர்களின் தலைநகரங்களில் ஒன்றாகத் திகழ்ந்த இத்தலம் கொங்கு நாட்டுத் தேவாரத் தலங்களுள் ஒன்றாகவும் இடம் பெற்றுள்ளது. பெரிய புராணத்தில் வரும் எறிபத்த நாயனார், புகழ்ச்சோழ நாயனார் வரலாறுகளில் இத்தலச் சிறப்புகளை விரித்துப் பேசுவார் சேக்கிழார். போகரின் சீடரான கருவூர்த் தேவர் இங்கே சிவபெருமானுடன் சோதியிற் கலந்தார் என்று தலமான்மியம் பேசுகின்றது–காமதேனு இத்தலத்தில் வழிபட்டுப் படைத்தல் தொழிலுக்குரிய வரம் பெற்றது ஆதலின் ஆனிலை என்ற பெயர் இத்தலம் பெற்றது என்று கூறுவர்.

இங்கே இறைவன் பசுபதிசுவரர், கல்யாண பசுபதீசுவரர் என்றெல்லாம் போற்றப் படுகிறார். இறைவி: கிருபாநாயகி (சௌந்தரவல்லி), அலங்காரநாயகி என்று இரு அம்பிகை சந்நிதிகள்.

முருகவேள் ஆறுமுகமும் பன்னிரு கரமும் கொண்டு வள்ளி தெய்வயானையுடன் மயில் பின்புறம் நிற்க, கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காட்சியருளுகின்றார்.

நாடோறும் மூன்று கால வழிபாடு முருகனுக்கு நிகழ்கிறது. முசுகுந்த சக்கரவர்த்தி திருப்பணி கொண்ட இத்தலம் இரு பிராகாரங்களையும் நூற்றுக்கால் மண்டபத்தையும் கொண்ட பெரிய கோயிலாகும்.

கார்த்திகை தோறும் முருகனுக்குச் சிறப்பு வழிபாடு நிகழும்.

எறிபத்த நாயனார் விழா, பங்குனி உத்திரம், தைப்பூசம், அருணகிரிநாதர் விழா முதலியன முக்கிய விழாக்களாகும்.

இத்தல முருகனை 7 பாடல்களால் பரவி மகிழ்ந்தார் அருணகிரி வள்ளல். கருவூருக்குக் கிடைத்துள்ள 7 பாடல்களில் 4 பாடல்களில் வயலூர் குறிப்பிடப் பெறுவதால் வயலூரை வழிபட்ட பின்னரே அருணகிரி நாதர் கருவூர் சென்று பாடிப் பரவினார் என்பது புலப்படும். கருவூர் என்பதைக் "கொர்ப்பபுரம்" என்று பெயரிட்டு வாழ்த்துகிறார்! கசிவார் இதயத்து அமிர்தே எனக் கந்தனை அழைத்துப் போற்றுகிறார். பாரதச் செய்திகளை நினைவுபடுத்துகிறார். "எமையாள் கொள வெற்றிப் புகழ் கருவூர் தனில் மேவிய பெருமாளே" என்று பரவுகின்றார்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது. தங்கும் விடுதிகளும் உணவு விடுதிகளும்உள்ளன.

அருகில் வெண்ணெய் மலை உள்ளது.

# வெஞ்சமாக் கூடல் வேந்தன்

*தொழுவார்க் கெளியாய் துயர்தீர நின்றாய்*
*சுரும்பார் மலர்க்கொன்றை துன்றுஞ் சடையாய்*
*உருவார்க்கரிய விடையேறி யொன்னார்*
*புரந்தீயெழ ஓடுவித்தாய் அழகா*
*முழவாரொலி பாடலொடாடல் கரு*
*முதுகாடரங்கா நடமாடவல்லாய்*
*விழவார் மறுகில் வெஞ்சமாக் கூடல்*
*விகிர்தா அடியேனையும் வேண்டுதியே* —சுந்தரர்.

தம்பிரான் தோழரான சுந்தரமூர்த்தி நாயனார் தமது தேவாரப்பாடல்களால் சிவபெருமானை மகிழ்வித்து வந்தார். ஒருதலத்தில் அவரது பாடலைக்கேட்டு மகிழ்ந்த பரமன் தனது இருகுமாரர்களையும் (விநாயகரையும், முருகனையும்) அடகு வைத்துப் பொன்பெற்று, விகிர்தவடிவில் சுந்தரருக்கு அருளினார் என்று கொங்குமண்டலசதகம் பேசும்-ஒப்பற்ற அத்தலம் இதுவே. மிகப்புராதனமான இத்திருக்கோயில் கருவூரிலிருந்து 12 கல் தொலைவிலுள்ளது. கருவூரிலிருந்து பஸ்வசதிஉள்ளது. இறைவன்: கல்யாண விக்ருதீஸ்வரர்; அம்பிகை: மதுரசுபாஷிணி, விக்ருதீஸ்வரி இக்கோயில் குடகனாற்றின் கீழ்கரையில் அமைந்துள்ளது.

இக்கோயிலின் உட்பிராகாரத்தின் வடமேற்குப்பாகத்தில் ஆறுமுகப்பெருமான் பன்னிருகரங்களோடு மயில்மீதமர்ந்து, வள்ளி தெய்வானையுடன் கீழ்த்திசை நோக்கி விளங்குகின்றார் உற்சவமூர்த்தி-கல்யாணகோலத்தில் நான்குகரங்களுடன் விளங்குகின்றார்.

நாடோறும் காமிகாகம முறையில் இரண்டுகால பூசை நிகழ்கின்றது. கார்த்திகை கந்தசஷ்டி சிறப்பு நாட்களாகும்.

மாசிமகம் பிரம்மோற்சவம் மிகச்சிறப்பாக நடை பெறுகிறது.

இத்தலமுருகனை அருணகிரிவள்ளல்-அழகான திருப்புகழால் பரவியுள்ளார்,

வண்டு போற் சாரத் தருள்தேடி
மந்தி போற் காலப் பிணிசாடிச்
சென்டு போ பாசத் துடனாடி
சிந்தை மாய்த் தேசித் தருள்வாயே
தொண்டராற் காணப் பெறுவோனே
துங்கவேற் கானத் துறைவோனே
மிண்டரசற் காணக் கிடையானே
வெஞ்ச மாக் கூடற் பெருமானே.

தமிழ்நாடு அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது. தங்கும்விடுதி, உணவுவிடுதிகள் இல்லை.

இத்தலத்தருகே கனககிரிவேலாயுதசுவாமிகோயில், கருவூர் கல்யாண பசுபதீசுவரர்கோயில், வெண்ணெய்மலை பாலசுப்பிர மணியசுவாமி கோயில் முதலியன உள்ளன.

## நெருவை நகருறை திருவுரு அழகன்

திருச்சி மாவட்டத்தில் கருவூருக்கருகில் உள்ளது நெருவூர் என்னும் தலம். இங்கே சிவபெருமான் அக்னீசுவரர் என்னும் திருநாமத்துடன் எழுந்தருளியுள்ளார். இத்திருக்கோயிலில் வலப்பால் சுவாமி சந்நிதியும், இடப்பால் அம்பிகை சந்நிதியும் நடுவில் முருகன் சந்நிதியும் அமைந்துள்ளது சோமாஸ்கந்தர் அம்சமாகத்திகழுகின்றது.

இங்கே ஆறுமுகப்பெருமான் பன்னிருகரங்களுடன் விளங்கு கிறார். வள்ளி, தேவயானை இல்லை.

அருணகிரிநாதர் இத்தலத்தில் பாடியுள்ள திருப்புகழ் அவருக்கு வயலூர்வள்ளல் அருளிய திறத்தினை வெளிக்காட்டு கின்றது.

வயலி நகரியி லருள் பெற மயில்மிசை
யுதவு பரிமள மதுசர வெகுவித
வகை மலரடி கனவிலு நனவிலு மறவேனே.
.. ... ... ........ .... ...... ...

நிலவு சொரிவன வயல்களு நெடுகிய
குடக தமனிய நளினமு மருவிய
நெருவை நகருறை திருவுரு வழங்கிய பெருமாளே!

அருணகிரிநாதர் திருச்செங்கோட்டுவேலனைப் பாடிப் பரவும் போது "ஆலகாலபடப்பை" என்ற திருப்புகழில் "நெருவைப் பதிவித்தக..." என்று போற்றுவதும் குறிப்பிடத் தக்கது. திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான் கல்வெட்டு இக்கோயிலில் உள்ளது. அதில் "இனங்கு நாட்டு நெருவூரென வீரசோழ சதுர்வேத மங்கலத்துடையார் திரு அக்னீஸ்வரமுடைய நாயனார் கோயில்" என இத்தலம் பேசப்படு கின்றது.

# தமிழ் முநிவரோது புகழிமலை

*புகலரிய தான தமிழ்முனிவர் ஓது*
*புகழிமலை மேவு பெருமாளே!*
*..... ..... . .           ...........          ..... .....*
*கமலபத வாழ்வு தரமயிலின் மீது*
*கருணையுட னேமுன் வரவேணும்!*

—அருணகிரிநாதர்.

திருச்சி மாவட்டம், கரூர் வட்டம் புஞ்சைப் புகளூர் கிராமத்தில் வேலாயுதம் பாளையத்தில் குழுந்தமலை, ஆறு நாட்டார் மலை என வழங்கப்பெறும் புகழிமலை என்ற தலம் உள்ளது. புகளூர் இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 2 கல் தொலைவில் இத்தலத்தை அடையலாம்

மலையின் மீது சுந்தரேசுவரர் திருக்கோயில் உள்ளது. 345 படிகள் ஏறிச் செல்ல வேண்டும். அங்கே அன்னை மீனாட்சியும், ஐயன் சுந்தரேசுவரரும் எழுந்தருளியுள்ளனர். முருகவேள் பாலசுப்பிரமணியராக—ஒரு முகமும் நான்கு கரங்களும்கொண்டு மயில் பின் நிற்க—கம்பீரமாக நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். உற்சவமூர்த்தி வள்ளி, தெய்வயானை யுடன் விளங்குகிறார்.

காமிகாகம முறைப்படி தினமும் இரண்டு கால வழிபாடு நிகழ் கின்றது. மாதக் கார்த்திகை, அமாவாசை சிறப்பு நாட்க ளாகும். கந்த சஷ்டி, தைப்பூசம், பங்குனி உத்திரப் பெரு விழாக்கள் நிகழ்கின்றன.

இயற்கையாக அமைந்த நான்கு சுனைகள் உள்ளன. மலை மீது பிராகாரத்தில் உள்ள சுனை பெருமான் அபிடேகத்திற்குரியது. நாகர் சுனை, காந்ததீர்த்த சுனை, மல்லீசுரவர் சுனை முதலியன உள்ளன.

அருணகிரிநாதர் பரவிய முருகவேள் நம் மனக்கல் உருக விளங்குகிறார்.

உணவு விடுதிகள் உள்ளன. அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது.

இத்தலத்தைச் சுற்றிலும் பல தலங்கள் உள்ளன. கிழக்கே (10 கல்) வெண்ணெய் மலை, தெற்கே (8 கல்) பரலமலை (முருகன் ஆண்டியாகத் திகழும் கோயில், வடமேற்கில் (8 கல்) கபிலர் மலை (குழந்தை வேலாயுத சுவாமி கோயில்) பிலிக்கப்பாளையம் (10 கல்) வடபழனி ஆண்டவர் கோயில் போன்ற மலைக்கோயில்கள் உள்ளன.

புகழிமலையில் கல்வெட்டுக்கள் உள்ளன. குகையில் சமண முனிவர்களின் படுக்கைப் பாறைகளைக் காணலாம்.

## கற்பதாருவென மெத்தியவிராலி

ஞானமே வடிவான வயலூர்ப்பெருமானது அருள்பெற்ற அருணகிரிநாதர் கனவில், அப்பரமன், "இனி நீ நித்தம் அற்புதத் திருப்புகழ்ப் பாக்களைப் பாடவேண்டும். யாம் உறையு மிடம் விராலிமலை. நீ அத்தலத்துக்கு வருவாயாக" எனக் கட்டளையிட்டு, ஞானப்பொருள்களை விளக்கி, "ஞான அமுதை ஊட்டி விட்டோம். உன் மலமாசு யாவையும் விட்டி விட்டோம்" என்று மிகக் கனிவுடன் உரைத்தருளி மறைந்தார். விழித்தெழுந்த அருணகிரிநாதர் எம்பிரானது தாளிணையைச் சற்றுங் கருதாத இவ்வடியேனை விராமலைக்கு வா என அழைத்த கருணையை வியந்து

*தாமரையின் மட்டு வாசமல ரொத்த*
*தாளிணை நினைப்பில் அடியேனைத்*
*தாதவிழ் கடுகைக நாகமகிழ் கற்ப*
*தாருவென மெத்தி யவிராலி*
*மாமலையி னிற்ப நீகருதி யுற்று*
*வாவென அழைத்துஎன மனதாசை*
*மாசினை அறுத்து ஞானமுதளித்த*
*வாரம் இனி நித்தம் மறவேனே.*

(வயலூர்-திருப்புகழ்)

என்று போற்றிப் பரவினர். கல்லினின்றும் நார் உரித்தது போல என் நெஞ்சக்கல்லைக் கனியாக்கி எனக்கு அமிர்தப்பதவி அளித்த பெருமானே—

*"வயற்பதி மன்னு! கல்நார் உரித்த என்மன்னு!*
*எனக்கு நல்கர்ணுமிர்தப் பதம் தந்தகோவே!*
*(என்னால் பிறக்கவும்......*

என்றும்,

*புயற் பொழில் வயற்பதி யினிற் பொருள் ப்ரியத்தோடு*
*புலப்பட எனக்கருள் பெருமாளே!* (இருப்பவள்.......)

என்றும் போற்றினர்.

திருமறைக்காட்டில் தங்கியிருந்த திருநாவுக்கரசு சுவாமிகளைச் சிவபிரான் திருவாய்மூருக்கு வருக என அழைக்க அவர் எழுந்து விரைந்து சென்றது போலவே அருணகிரிநாதரும் உடனே விராலிமலைக்குச் சென்று பணிந்தார். விராலிமலைப் பெருமானை வழிபட்டு, 'அடியேன் உனது அருள் கொண்டு உரைத்த அரிய பெரிய திருப்புகழுக்கு (விகடபரிமள...-74 சீர் வயலூர் திருப்புகழ்) உகந்து வயலூரில் அடிமையின் முன்-அற்புத கோலத்தோடு எழுந்தருளி எனது இன்னலை ஒழித்த குகமூர்த்தியே! விராலிமலைக் குருபரனே! என வாழ்த்தி "இதமுறு விரைபுனல்" எனத் தொடங்கும் (74 சீர்) பிறிதொரு சந்தப் பெருந்திருப்புகழைப் பாடி-அதில்

*திருவயலியில் அடிமைய குடிமையி(ன்)னலற*
*மயலொடு மலமற அரியபெரிய திருப்புகழ் விளம்புமென்முன்*
*அற்புத மெழுந்தருள் குக!விராலிமலை யுறைகுரவ!*

என்று போற்றினர். முருகனது திருவோலக்க வர்ணனையாக-

*"சீரான கோல கால நவமணி*
*மாலாபி ஷேக பார வெகுவித*
*தேவாதி தேவர் சேவை செயுமுக மலராறும்*
*சீராடு வீர மாது மருவிய*
*ஈராறு தோளும் நீளும் வரியளி*
*சீராக மோது நீப பரிமள இருதாளும்*
*ஆராத காதல் வேடர் மடமகள்*
*ஜீமூத மூர்வ லாரி மடமகள்*
*ஆதார பூத மாக வலமிட முறைவாழ்வும்*
*ஆராயு நீதி வேலு மயிலு மெய்ஞ்*
*ஞானாபி ராம தாப வடிவமும்*
*ஆபாத னேனும் நாளும் நினைவது பெறவேணும்*

என்று தன் கோரிக்கையைத் திருமுன் வைத்து முருகன் உருத்திர சன்மராக சங்கத்தமர்ந்து கலகம் தீர்த்த அருளாடலையும்

பாரதத்தில் அவர் மாமன் கண்ணன் அருச்சுனனது உயிரைக் காக்கும் பொருட்டுச் சூரியனைச் சக்கரத்தால் மறைத்தருளி யதையும் எடுத்தியம்பி அருள் வேண்டினார். இப்படி அற்புதமான 16 திருப்புகழ்ப் பாடல்கள் பெற்றதலம் விராலிமலையாகும்.

திருச்சியிலிருந்து மதுரை செல்லும் பஸ் வழியில், திருச்சியிலிருந்து 28 கி. மீ தொலைவில் இத்தலம் உள்ளது. புதுக்கோட்டை மாவட்டம் குளத்தூர் வட்டத்தில் அமைந்த இத்தலத்தை, மணப்பாறை, புதுக்கோட்டை, திருச்சி, மதுரை நகரங்களிலிருந்து பஸ் மூலம் அடையலாம்.

முனிவர்கள் இம்மலையில் குராமரங்கள் உருவில் மரங் களோடு விராவி யிருந்து முருகப் பெருமானை வழிபட்டதால் இம்மலைக்கு விரவிமலை என்ற பெயர் உண்டாகி, விராவிமலை யாக மருவிப் பின் விராலிமலை ஆயிற்று என்பர். ஆனால் விராலிச்செடி (மூலிகைச்செடி) இத்தல விருட்சமாதலின் விராலிமலை எனப் பெயர் கொண்டது என்று கூறுகின்றனர் மற்றொரு சாரார். சோலைகளும், மயில்களும் மிகுந்த மலைத் தலம இத்தலமாகும். முனிவர்கள் இம்மலையில் இருமருங்கும் வழிபடு கின்றனர் என்பதையும் அவர்கள் விராவிய தலம் இது என்பதையும,

'*விராகவ சுராதிப பொராாதுத விராதடு*
*விராயண பராயணச் செருவூரா*
***விராவிய** குராவகில் பராரைமு திராவளர்*
*விராலிமலை ராஜதப் பெருமாளே.*

(*நிராமயபுராதன ...* )

"*வெந்த நீறணி வேணி இருடிகள்*
*பந்தபாச விகார பரவச*
*வென்றி யானசமாதி முறுகுகல் முழைகூடும்*
***வீண்டு** மேல் மயிலாட **இனியது***
*ஞண்டுகாரெளி பாட **இதழிபொன்***
*விஞ்ச விசு விராலி மலையுறை பெருமாளே*

(*ஐந்து பூதமும்......*)

என்வரும் இத்தலத் திருப்புகழ்ப் பாக்களில் அழகுறக் காட்டுவார் அருணகிரிவள்ளல்.

இத்தல மான்மியப்படி-சரவணப் பொய்கையில் குழந்தை யாக வந்த முருகனுக்கு முனிவர்களின் மனைவியரில் வசிட்டரின்

மனைவி அருந்ததி பாலூட்ட மறுத்து விட்டாள். வசிட்டர் அவளைச் சபித்தார். வீணே அருந்ததியை வசிட்டர் தண்டித்தது கண்டு முருகன் வசிட்டரைச் சபித்தார். பின்பு வசிட்டரும் அருந்ததியும் விராலிமலைக்கு வந்து முருகவேளை வழிபட்டுச் சாப விமோட்சனம் பெற்றனர்.

சூரபன்மாதியரைப் பெற்றெடுத்த பாவம் நீங்கும் பொருட்டுக் காசியபமுனிவரும், தன் தந்தையாகிய நான்முகனைத் தண்டித்ததற்காகச் சிவ நிந்தனை செய்த பாவம் போக்க நாரத முனிவரும் இத்தலத்தில் முருகனை வழிபட்டு உய்வடைந்தனர்.

இச்செய்திகளை உறுதிப்படுத்தும் வகையில் இக்கோயிலில் காசியபர், நாரதர், வசிட்டர், அருந்ததி சிற்பங்கள் உள்ளன.

விராலி மலையில் பாதி தூரத்தில் உள்ள சந்தானகோடு என்னும் புண்ணியத்தானம்-தேவ விருட்சங்கள் ஐந்தினுள் ஒன்றாய சந்தான விருட்சம் போல இட்ட காமியங்களை அன்பர்களுக்கு அளிக்கும் என்பதை

*மதியணையுஞ் சோலை யார்த்து*
*மதிவள சந்தான கோட்டின்*
*வழியருளின் பேறுகாட்டிய விராலி*
*மலைமருவும் பாதி யேற்றி*
*கடிகமழ் சந்தான கோட்டில்*
*வழியருளின் பேறு காட்டும் பெருமாளே.*

என்ற திருப்புகழால் காட்டுகிறார். இதனை விளக்கும் வகையில் மலைக்கோயிலுக்குச் செல்லும் வழியில் மலைமீதுள்ள சந்தனக் கோட்டம் என்னும் மண்டபத்தில் உள்ள தூண்களில் ஆறுமுகப் பெருமான், அருணகிரிநாதர் சிற்பங்கள் அமைந்துள்ளன.

ஊரின் நடுவே மலை; மலையின் உச்சியில் கோயில், முருகனுக்குத் தனிக்கோயில்-207 படிகள் உள்ளன. மலையடி, வாரத்தின் சிறிது தொலைவில் தென்பால் சரவணப் பொய்கை அமைந்துள்ளது. கீழ்பாகத்தில் மெய்க்கண்ணுடையாள் சந்நிதி உள்ளது. இவ்வம்பிகையை வழிபட்ட பின்னரே மலைக் கோயிலுக்குச் செல்ல வேண்டும்.

மலைமீது செல்லும் வழியில் இடும்பன் சந்நிதியும், பாறையைக் குடைந்தமைந்த மீனாட்சி சுந்தரேசர் சந்நிதியும்



விராலிமலை

விராலிமலையில் விளங்கிய கந்த என்றுனை
மகிழ்வொடு வந்திசெய் மைந்தன் என்றனை
வழிவழி அன்புசெய் தொண்டு கொண்டருள்
பெருமாளே.



திருக்கடவூர்

கருணைவிழி கிருபை முந்தப்
பரிவினொடு கவரி கொஞ்சக்
கலகலென வருகடம்பத் திருமார்பா

(அரிவையர்கள்...)

நன்றி: *French Institute of Indology, Pondicherry.*



வழுவூர்

ஆதிசங்கர னொர்பாக மாதுமை
கோல அம்பிகை மாதா மநோமணி
ஆயிசுந்தரி தாயான நாரணி அபிராமி
ஆவல்கொண்டு விருலே சீராட்டவே
கோம ளம்பல சூழ்கோயில்மீறிய தேவர்கள்
பெருமானே.

(போதகந்தருகோவே )

நன்றி: *French Institute of Indology, Pondicherry.*

சந்தனக் கோட்டமும், நவராத்திரி மண்டபமும், சண்முக மூர்த்தி மண்டபமும் உள்ளன. நவராத்திரி மண்டபம் அருகே தெற்கு நோக்கி இராஜகோபுரம் காட்சியளிக்கின்றது.

ஒரே பிராகாரத்துடன் அமைந்த மலைக்கோயில் இது, சண்முகமூர்த்தி மண்டபத்தில் உற்சவ மூர்த்தியாக- வள்ளி தேவயானையுடன் அழகாக முருக பெருமான் அமர்ந்துள்ளார். இம்மண்டபத்தின் அருகே காசி விஸ்வநாதர், விசாலாட்சி சந்நிதிகள் உள்ளன.

மேற்குப் பிராகாரத்தில் விநாயகர், தட்சிணாமூர்த்தி, அகத்தியர், அருணகிரிநாதர் சந்நிதிகளும், வடக்கில் சண்டீசர், பைரவர் சந்நிதிகளும், கிழக்கில் காற்றுடி மண்டபமும் அமைந்துள்ளன.

கருவறைக்கு முன்புள்ள மகாமண்டபம் செல்லும் வழியில் நவக்கிரக சந்நிதி உள்ளது. மகாமண்டபத்தில் நடராஜர், சிவகாமி, மாணிக்கவிநாயகர், ஸ்ரீதேவி பூதேவியுடன் ஸ்ரீனிவாசப்பெருமாள் முதலிய சந்நிதிகள் உள்ளன.

கருவறையுள்ளே விராலிமலை வள்ளலாக ஆறுமுகப் பெருமான் பன்னிருகரங்களுடன் மயில் மீது அமர்ந்து காட்சியருளுகின்றார். இருமருங்கிலும் வள்ளி, தேவயானையம்மை விளங்குகின்றனர். மயிலின் முகம் வலப்புறம் அமைந்துள்ளது. சூலம் வலது கரத்திலும், வஜ்ராயுதம் இடது கரத்திலும் அமைந்துள்ளதும் சிறப்பு அம்சமாகும். மூலவர் போன்ற உற்சவ மூர்த்தியும் உள்ளார்.

அருணகிரிநாதர் அஷ்டமாசித்தி உபதேசம் பெற்ற பதி இதுவாதலின் நாம் அருணகிரிநாதரிடம் அவர் பெற்றபேற்றினை நமக்கும் அருளுமாறு வேண்டிக்கொள்ள-அச்சந்நிதி விளக்கமாக உள்ளது.

காரணாகம முறைப்படி நான்கு கால வழிபாடு தினமும் நிகழ்கின்றன.

சித்ரா பௌர்ணமி சங்காபிஷேகம், வைகாசிவிசாகவிழா, ஆடிக்கார்த்திகை, கந்தசஷ்டி, தைப்பூசம், மாசிக் கார்த்திகை மகாபிஷேகம், பங்குனி உத்திரம் முதலிய விழாக்கள் நிகழ்கின்றன.

வைகாசி விசாகத்திற்கு மறு நாளும், தைப்பூசத்தன்றும், தெப்பத்திருவிழா நிகழ்கின்றது. நாகதீர்த்தக்குளம் என்று தெப்பக்குளம் அழைக்கப்படும். மலையில் சுனை உள்ளது.

புதுக்கோட்டை மன்னருக்கு வயிற்று வலி நீக்கியருளிய தலம் இது. சுந்தரக் குருக்கள் என்பார் ஊமையாகி, இம் முருகன் அருளால் மீண்டும பேசும் பேறு பெறுரா். திருவாரூர் தட்சிணாமூர்த்தி சுவாமிகளுக்கு முருகனே இங்கு நேரில் வந்து பிரசாதம் வழங்கினார். அவரது வேண்டுகோளின்படி 35 கற்றூண்கள் கொண்ட ஓர் புது மண்டபம் கட்டப்பெற்றுள்ளது சதாசிவபிரமமேந்திரர் வழிபட்ட தலம்.

இங்கு மாலை வழிபாட்டில் இன்றும் முருகனுக்கு சுருட்டு ஒன்று நிவேதிக்கப்படுவது சிறப்புச் செய்தியாகும.

1500 ஆண்டுகட்கு முற்பட்ட இக்கோயில் பல கல் வெட்டுக்களைக் கொண்டுள்ளது. அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளது.

மலையின் பின்புறம் பேருந்துநிலையமும் உணவு விடுதிகளும் உள்ளன.

இளவயதினராக இங்கு வழிபட வந்த அருணகிரிநாதருக்கு மடவார்பால் அவருக்கிருந்த மருளின் வன்மை மடியும படியாக வெற்றிகொண்ட திருவருளின் வன்மையை இத்தலத் திருப்புகழ்ப் பாடலில் அவர் போற்றுவார்.

கோனாடு சூழ்ந்த விராலிமலை என்று அக்கால நிர்வாக அமைப்பினையும் காட்டுவார் அருணகிரிவள்ளல்.

*வேலா! விராலி வாழ்வே! சமுக*
*வேதாள பூத பதிசேயே!*
*வீரா! கடோர சூராரி யே!செ*
*வேளே! சுரேசர் பெருமாளே!.*

—அருணகிரி வள்ளல்.

புதுக்கோட்டை மாவட்டத்தில் குமரன் மலை, (குமரேச சதகம் பெற்ற தலம்: திருப்புல்வயல் எனப்படும் தலம் இது) தேனி மலை, மலையக்கோயில் (நச்சாந்து பட்டி) என்ற முருகன் கோயில்கள் சிறப்புடையவை. திருப்புகழ் இவற்றிற்கு இல்லை யாயினும் முருகவேள் சந்நிதி சிறப்புடையன.

## திருப்பெருந்துறை மேவிய கந்தன்

*சிரத்து டன்கர மேடுபோ ழிந்திட்*
*டிரைத்து வந்தம ரோர்கள் படிந்துச்*
*சிரத்தினுங்கமழ் மாலைம ணம்பொற் சரணேமே*
*செகத்தி னின்குரு வாகிய தந்தைக்*
*களித்தி டுங்குரு ஞானப்ர சங்கத்*
*திருப்பெருந்துறை மேவிய கந்தப் பெருமாளே.*

(இரந்த முஞ்சியு... திருப்புகழ்)

தமிழகத்தில் அடியவரை முன்னிட்டுத் திருவிழா நடக்கும் ஆலயம் ஒன்று உண்டெனில் அது மணிவாசகருக்கு இறைவன் குருவடிவாக வந்து ஆட்கொண்ட தலமான திருப்பெருந்துறை (ஆவுடையார் கோயில்) என்பதுதான் என்பதை அனைவரும் அறிவர். புதுக்கோட்டை மாவட்டத்தில் அறந்தாங்கி வட்டத்தில்–அறந்தாங்கியிலிருந்து 16 கி. மீ. தொலைவிலுள்ள இத்தலத்திற்கு அறந்தாங்கியிலிருந்து பஸ்வசதி அதிகம். அருகிலுள்ள பெருநகரம் அறந்தாங்கியேயாகும்.

இங்குள்ள கோயிலின் செய்திகளை விவரிக்கின் பெருகும். நாயக்கர்கால சிற்பக்களஞ்சியம் இது. இங்குள்ள கொடுங்கைகள், தூண்சிற்பங்கள், மண்டப அமைப்புக்களை நேரில்பார்ப்பதுதான் நாம் கண்பெற்ற பேறாகும்.

இங்கே அருபமாகச் சிவபெருமானும் அம்பிகையும் விளங்குகின்றனர். இறைவன்: ஆத்மநாதர். இறைவி: சிவயோகநாயகி.

இங்கே சுப்ரமணியர் சந்நிதி மிகச்சிறப்பாக உள்ளது. பாலசுப்ரமணியர் சிற்பம் கண்டு தொழவேண்டியது. மூன்று வீரபத்திரர், பிட்சாடனர், தாண்டவமூர்த்தி, காளி, ஆஞ்சநேயர், இராமர், மணிவாசகர், குதிரைவீரர் திருவுருவங்களை எப்படி விளக்கிக்காட்டமுடியும்!

தினமும் ஆறுகால பூசை நடைபெறும். இக்கோயிலுக்கு 27 தீர்த்தங்கள். அவற்றுள் அக்னிதீர்த்தம் சிறப்பு. தல விருட்சங்கள் 14. அவற்றுள் குருந்தமரம் சிறப்பு.

ஆனித்திருமஞ்சனமும், மார்கழி திருவாதிரையும் மணிவாசகருக்குப் பெருவிழா நாட்கள்.

திருவாவடுதுறை யாதீனத்திருக்கோயில் இது. திருவாசகம் தந்த மணிவாசகர் தலத்தில் அருள்மிகும் அருணகிரிநாதரும் பரவியதை நாம் நினைந்து வணங்கி மகிழவேண்டும்.

# தென்புனவாயில் அமர்ந்தருள் தீரன்

புதுக்கோட்டை மாவட்டம்-அறந்தாங்கி வட்டத்தில்-திருப்பெருந்துறை (ஆவுடையார்கோயில்) அருகில் திருப்புன வாயில் என்னும் தலம் உள்ளது. இத்தலம் வடமொழியில் விருத்தகாசி எனவும், தமிழில் பழம்பதி எனவும் அழைக்கப்படும்: இங்கு சிவபெருமான்: விருத்தபுரீசர்; பழம்பதிநாதர். இறைவி கருணைநாயகி. அறந்தாங்கியிலிருந்து பஸ்வசதி உண்டு (30 கல் தொலைவு.)

இத்தலத்தில் நந்தியும், மூலலிங்கமும், ஆவுடையாரும் பெரியன. இலிங்கத்தின் மேற்பகுதியாகிய பாணத்திற்கு மூன்று முழஆடைஒருசுற்று; கீழே உள்ள ஆவுடையாருக்கு 30 முழ ஆடை வேண்டும். இதுபற்றியே மூன்றுமுழமும் ஒருசுற்று, முப்பது முழமும் ஒருசுற்று என்ற முதுமொழி ஏற்பட்டது. இக்கோயிலில் பதினொன்கு லிங்கங்கள் உள்ளன இவை பாண்டிப்பதினான்கு தலங்களின் மூர்த்திகளாவர். தலத்திற்குத்தெற்கே சர்ப்பநதி ஓடுகின்றது.

திருஞான சம்பந்தரும், சுந்தரரும் பதிகம்பாடிப் பரவிய தலம் இது.

இத்தலத்தில் உள்பிராகாரத்தில் வடமேற்குப் பாகத்தில் ஒரு முகமும் நான்குகரங்களும் கொண்டு கிழக்குத்திசைநோக்கி நின்றதிருக்கோலத்தில் முருகவேள் காட்சியருளுகின்றார்.

உற்சவரும் மூலவரைப்போன்றே அமைப்புடையவர். தினம் இரண்டுகாலவழிபாடு காமிகாகம முறையில் நடை பெறுகின்றது.

இங்குள்ள தட்சிணாமூர்த்தி மிகப்பெரிய வடிவுடையவர். லிங்கோத்பவர் இருக்கும் இடத்திற்கு மேற்குமுகமாகத்திருமால் விளங்குகின்றார். அனுமார் சந்நிதியும் உண்டு.

இங்குள்ள அம்மை சந்நிதிக்குக்கிழக்கே குடவறையில் அன்னை பெரியநாயகியே காளியுருவம் தாங்கி விளங்குகின்றார். இங்கே குடவறைக் காளியம்மன் என்று இச்சக்தி போற்றப் படுகின்றாள்.

வைகாசிவிசாகப் பெருவிழா, ஆனித்திருமஞ்சனம், கார்த்திகை சோமவாரம், மார்கழி திருவாதிரை, தைப்பூசப் பெருவிழாக்கள் நிகழ்கின்றன.

ஆடிவெள்ளி, தைவெள்ளிகளில் அம்பிகைக்குச் சந்தனக் காப்பு சிறப்பாக இருக்கும்.

இந்திரதீர்த்தம், பிரம்மதீர்த்தம், சூரியபுட்கரணி, சிவகங்கைதீர்த்தம், வருணதீர்த்தம், லட்சுமிதீர்த்தம், சந்திர புட்கரணி, சக்கரதீர்த்தம், சர்ப்பநதி, கல்யாணதீர்த்தம் முதலிய புண்ணியப்புனல்கள் உள்ளன.

தலவிருட்சங்களாக புன்னை, குருந்தை, மகிழ், சதுரக்கள்ளி மரங்களைக் குறிப்பிடுகின்றனர்.

இத்தலத்தில் அருணகிரிப்பெருமான் பாடிய "உரையும் சென்றது..." என்று தொடங்கும் திருப்புகழ் அற்புதமானது. ஐவரும் கைவிட்டு மெய்விடும்போது ஏற்படும் நிலையை அப்படியே விளக்கி-அச்சமயத்தில்

... ... ... ... . ... ... .. ... "இயல் தோகை
*மயிலுஞ் செங்கைக ளாறிரு திண்புய*
*வரைதுன் றுங்கடி மாலையும் இங்கித*
*வனமின் குஞ்சரிமாருடன் என்றன்முன் வருவாயே"*

என்று வேண்டுகின்றார்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது. மதுரைக்கு அடுத்த பெரியகோயிலாகப் பாண்டிநாட்டுத் தலங்களுள் பேசப்படுவது இத்தலம். சுவாமிவிமானம், இராஜ கோபுரத்தைவிடப்பெரியது. அழகியது ஆகும்.

சோழ, பாண்டியர்களின் திருப்பணிகளைக் கொண்ட இத் தலத்தில் கல்வெட்டுக்கள் பல உள்ளன.

இந்திராதி தேவர்கள், அகத்தியர், போன்றோர் வழிபட்ட அற்புதத்தலமிது. வேண்டுவோர்க்கு வேண்டுவன அளிக்கும். இன்பமான மனமாற்றத்தையும், உத்தியோக உயர்வு, மாற்றம் போன்றவற்றை அளிக்கவல்லது என்பது இத்தலத்தில் வழிபடுவோரது அனுபவத்தால் வெளிப்படுகின்றது.

## தஞ்சை மாவட்டம்

1. சீர்காழி
2. மகேந்திரப்பள்ளி
3. கொண்டல்
4. வைத்தீஸ்வரன் கோயில்
5. ஆக்கூர்
6. திருக்கடவூர்
7. திருவிடைக்கழி
8. வழுவூர்
9. மாயூரம்
10. பொன்னூர்
11. குறுக்கை
12. திருவாளொளிப் புத்தூர்
13. மண்ணிப்படிக்கரை
14. திருத்துருத்தி
15. திருவாவடுதுறை
16. பந்தணை நல்லூர்
17. திருப்பனந்தாள்
18. மருத்துவக்குடி
19. திருஇடை மருதூர்
20. திருபுவனம்
21. திருநாகேஸ்வரம்
22. கும்பகோணம்
23. சோமீச்சுரம்
24. சிவபுரம்
25. கொட்டையூர்
26. சுவாமிமலை
27. திருவலஞ்சுழி
28. திருச்சத்திமுற்றம்
29. பழையாறை
30. திருநல்லூர்.
31. குரங்காடுதுறை
32. திருச்சக்கரப்பள்ளி
33. காவாலூர்
34. பெரும்புலியூர்
35. திருவையாறு
36. திருப்பூந்துருத்தி
37. தில்லைஸ்தானம்
38. தஞ்சாவூர்
39. எண்கண்
40. திரியம்பகபுரம்
41. குடவாயில்
42. திலதைப்பதி
43. கூந்தலூர்
44. திருவீழிமிழலை
45. திரு வாஞ்சியம்
46. கீரனூர்
47. இஞ்சிக்குடி
48. கோயில் திருமாகாளம்
49. அம்பர்
50. கந்தன்குடி
51. திருச்செங்காட்டாங்குடி
52. திருவிற்குடி
53. திருவாரூர்
54. சிக்கல்
55. நாகப்பட்டினம்
56. வலிவலம்
57. எட்டிகுடி
58. வேதாரண்யம்
59. கோடிக்கரை




**வைப்புத்தலங்கள்.**

| | | | |
|---|---|---|---|
| A | காவிரிப்பூம்பட்டினம் | B | திருப்பறியலூர் |
| C | திருப்புறம்பயம் | D | திருப்பழனம் |
| E | கண்டியூர் | F | திருவேதிகுடி |
| G | திருச்சோற்றுத்துறை | H | திருமருகல் |
| I | தேவூர் | J | தண்டலைநீணெறி |
| K | திருக்களர் | L | கைச்சினம் |

# காழியில் வரும் கவுணியன்

பூமகனூர் புத்தேளுக் கிறைவனூர்
குறைவிலாப் புகலி பூமேல்
மாமகளூர் வெங்குரு நற்றோணிபுரம்
பூந்தராய் வாய்ந்த விஞ்சிச்
சேமமிகு சிரபுரம் சீர்ப்புறவ நிறை
புகழ்ச்சண்பை காழி கொச்சை
காமனைமுன் காய்ந்தநுதற் கண்ணவனூர்
கழுமலம் நாம் கருதுமூரே

—திருஞானசம்பந்தர்.

சிந்துற்றெழு மாமதி அங்கித் திரளாலே
தென்றற் றருவாசமி குந்துற் றெழலாலே
அந்திப் பொழுதாகிய கங்குற் றிரளாலே
அன்புற்றெழு பேதை மயங்கித் தனியானாள்
நந்துற்றிடு வாரியை மங்கத் திகழாயே
நஞ்சொத் தொளிர் வேலினையுந்திப் பொருவேனே
சந்தக்கவி நூலினர் தஞ்சொற் கினியோனே
சண்பைப்பதி மேவிய கந்தப் பெருமாளே.

—அருணகிரிநாதர்.

சீகாழி என்றவுடனேயே அழுது உலகை வாழ்வித்த கவுணியரான திருஞான சம்பந்தர் நினைவு நமக்கு ஏற்படுகின்றது. மூன்று வயதில் குழந்தை குளக்கரையில் உலகம் உய்வதற்காக அழ—அம்மையப்பன் எழுந்தருளி ஞானப்பாலை ஊட்ட—சிவஞான சம்பந்தப் பிள்ளையாராகி அற்புதம் பல புரிந்து தமிழக வரலாற்றில் தனிச்சிறப்புடன் திகழ்ந்த அவர்தம் வரலாறு பெரிய புராணத்தில் விரிவாகப் பேசப்படுகின்றது.

அருணகிரிநாத சுவாமிகள், முருகவேளே திருஞான சம்பந்தராக வந்து அவதரித்து ஞான வாள் கொண்டு அமணராகிய அவுணரை அழித்துத் தமிழர் தம் செந்நெறியாகிய சைவப் பெருநெறியை உய்வித்தார் என்று கருதினர். ஆகவே திருஞான சம்பந்தரைத் தனதுவழிபடு கடவுளாகக் கொண்டார். திருஞான சம்பந்கர் அருளிய அற்புதங்களைக் குருபரனகிய குகப் பெருமான் அற்புதங்களாகத் திருப்புகழில் பல இடங்களில் போற்றி மகிழ்வார் அருணகிரிநாதர். ஆகவே தமது வழிபடு கடவுளின் அவதார தலமாயிற்றே என மகிழ்ந்து சீகாழியில் தங்கி வழிபட்டுப் பாடி மகிழ்ந்தார் சீகாழிக்குரிய பன்னிரு பெயர்களுள் காழி, புகலி, சண்பை, பிரமபுரம், கொச்சை, கழுமலம், பூந்தாராய் என்பன திருப்புகழ்ப் பாக்களில் இடம் பெற்றுள்ளன சீகாழிக்குரிய 14 திருப்புகழ்ப் பாக்களில் ஏழு பாக்களிற் திருஞான சம்பந்தரது லீலைகள் பாராட்டப் பட்டுள்ளன. பண்பிலாத எண்ணாயிரம் சமணரைத் திருஞான சம்பந்கர் கழுவேறச் செய்ததும், சமணர் கலங்கத் தமிழ் (தேவாரம்) பாடியதும், பாண்டியனது சுரப்பிணியைத் தீர்த்த தும் பாண்டி நாட்டில் திருநீறு பரவச் செய்ததும், கவுணிய கோத்திரத்தில் அவர் அவதரித்ததும், முத்தமிழாகரன் என விருது ஊதப் பெற்றார் என்பதும். வேதக் கவிகளை-ஞானத் தமிழ்ப் பாடல்களை-அவர் பாடினர் என்பதும் இத்தலத் திருப் புகழ்ப் பாக்களில் இனிது விளக்கப் பெற்றுள்ளன.

திருநீற்றின் சிறப்பு, ஹர ஒலியின் பெருமை, பிரமபுரம் என்பவர் மனதிலும் குகன் என்பவர் மனதிலும் முருகன் அன்புடன் குடிகொள்கிறார். சந்தக் கவிநால் முருகவேளுக்கு பிரியமானது, என்பனவாகிய செய்திகளும் இத்தலத் திருப்புகழ் களில் காணப்படுகின்றன முருகவேள் இங்கே தமக்குத் தரிசனம் தந்து சக்ஷு தீக்ஷை செய்தார் என்றும் குறிப்பிடுகிறார்.

இத்தகு ஒப்பற்ற தலமானது மாயூரத்திலிருந்து சிதம்பரம் செல்லும் இரயில், பஸ் வழியில் உள்ளது. தஞ்சை, கும்பகோணம் மாயூரம், சிதம்பரம், கடலூர் முதலிய ஊர்களிலிருந்து நிறைய பஸ் வசதி உள்ளது.

இங்கே சிவபெருமான் பிரமபுரீசர், தோணியப்பர், சட்டை நாதர் என்றெல்லாம் விளங்கியருளுகின்றார். இறைவி: திருநிலை நாயகி.

திருஞான சம்பந்தர் ஞானப்பாலுண்ட பிரமதீர்த்தக் குளக்கரையிலிருந்து தோணியப்பரைக் காணலாம்.

திருஞான சம்பந்தர் 67 பதிகங்களாலும், திருநாவுக்கரசர் 3 பதிகங்களாலும், சுந்தரர் 1 பதிகத்தாலும் இத்தலப் பெருமானை வழிபட்டுள்ளனர்.

இத்தலத்தில் முருகவேள் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவியர் புடைசூழ நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். தனியாகக் குமரகோயில் என்ற ஓர் உபகோயில் உள்ளது. இதில் முருகவேள் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு தேவிமாருடன் நின்றருளுகின்றார். அம்மன் சந்நிதியின் பின்புறம் ஒரு முருகன் சந்நிதியும், தெற்குக் கோபுர வாயில் முன்புறம் ஓர் முருகன் சந்நிதியும் உள்ளன. இவை இரண்டிலும் முருகவேள் மயில்மீது அமர்ந்துள்ளார். அருகே தேவிமார் நிற்கின்றனர்.

தினமும் 6 கால பூசை நிகழ்கின்றது.

கார்த்திகைச் சிறப்பு.

கந்த சஷ்டி விழா நிகழ்வுறும்.

சித்திரை சஷ்டியில் திருஞான சம்பந்தர் ஞானப்பால் உண்டருளிய திருவிழா நடைபெறுகின்றது. அருணாசலக் கவிராயர் இயற்றிய சீகாழிப் புராணமும், சீகாழிக் கோவையும் உள்ளன.

இத்தலத்தில் உணவு விடுதிகள் உள்ளன.

அருகில் புள்ளிருக்கு வேளூர் (வைத்தீஸ்வரன் கோயில்) உள்ளது.

தருமையாதீனத்தைச் சார்ந்த திருக்கோயில்களுள் இத் தலமும் ஒன்று.

தொன்மையான கோயில் இது. பல கல்வெட்டுக்கள் உள்ளன. சைவத்தை வாழ்வித்த தலங்களுள் இதுவும் ஒன்று.

# மயேந்திரப்பள்ளி முருகன்

*திரைதரு பவளமும் சீர்திகழ் வயிரமும்*
*கரைதரும் அகிலொடு கனவளை புகுதரும்*
*வரைவிலால் எயில்எய்த மயேந்திரப்பள்ளியுள்*
*அரவரை அழகனை அடியிணை பணிமினே* —திருஞானசம்பந்தர்

சீர்காழி-சிதம்பரம் பஸ் இரயில் வழியில் கொள்ளிடத்திலிருந்து கிழக்கே 7 கல் தொலைவிலுள்ள இத்தலத்திற்குக் கொள்ளிடத்திலிருந்து பஸ் வசதி உள்ளது. சிதம்பரம், சீர்காழியிலிருந்தும் பஸ்கள் உண்டு.

இங்கே பல்லவர் காலத்தைச் சார்ந்ததான சிவன்கோயில் சிறப்பாக உள்ளது இறைவன்: திருமேனி அழகர்; இறைவி: வடிவாம்பிகை. சூரியன். சந்திரன். இந்திரன் நான்முகன் முதலியோரால் வழிபடப் பெற்ற மூர்த்தி இங்கே திருஞான சம்பந்தர் ஒரு பதிகம் பாடிப் பரவியுள்ளார்.

இத்தலத்தில் சிவன் சந்நிதிக்குப் பின்னால் சிங்காரவேலராக ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் இரு தேவியருடனும் கிழக்கு நோக்கி விளங்குகின்றார்.

உற்சவர் சுப்பிரமணியராக இரு தேவியருடன் விளங்குகின்றார்.

தினமும் மூன்றுகால வழிபாடு நிகழ்கின்றது. கந்தசஷ்டி சிறப்புடையது.

புண்ணியப்புனல்: மந்திர புஷ்கரணி தலவிருட்சம்: தாழை.

இத்தலத்தில் அருணகிரி வள்ளல் "வண்டணியுங்......" எனத் தொடங்கும் திருப்புகழால் கந்தவேளைப் பரவினார்.

*செண்டணி யுஞ்சடை பாங்கள் நீர்மதி*
*யென்பணி யன்கன சாம்பல் பூசிய*
*செஞ்சட லன்சுத சேந்த வேலவ முருகோனே*
*திங்கள்மு கந்தன சாந்து மார்பின*
*னென்றனு ளம்புகு பாங்கி மாவொடு*
*சிந்தை மகிழ்ந்து மயேந்த்ர மேவிய பெருமானே.*

# கரியவனகரின் கருணையன்

திருக்கயிலாயத்தில் கந்தவேள் அவதரித்து எழுந்தருளியிருந்தார். எல்லாத் தேவர்களும் விநாயகரையும் குமாரக் கடவுளையும் தொழுத பின்னரே சிவபெருமானைக் கண்டுதரிசித்து வந்தனர். நான்முகன் அகந்தையுடன் குமாரக்கடவுளை மதியாது சென்றார். முருகவேள் அவரையழைத்துப் பிரணவத்திற்குப் பொருள்கேட்டார். வேதமோதும் நான்முகனுக்குப் பிரணவத்தின் பொருள் தெரியவில்லை. உடனே கந்தவேள் அவரது நான்கு தலைகளும் நடுங்குமாறு குட்டிச், சிறையில் அடைத்துவிட்டுத் தாமே சிருட்டித்தொழிலை மேற்கொண்டுவிட்டார். தனது குமாரனுக்கு ஏற்பட்ட நிலைகண்டு திருமால் வருந்தினார்; சிவபெருமானிடம் சென்று முறையிட்டார்; சிவபெருமானும் திருமாலும் கந்தவேளிடம் வந்துப் பிரம்மனை சிறைவிடுக்குமாறு கோரினர். அவ்வாறு கோரியதலந்தான் கரியவனகர் என்னும் தலமாகும்.

தற்காலத்தில் இது கொண்டல் என்றழைக்கப்படுகிறது கரியவன்–திருமால், அவர் மேக (கொண்டல்) நிறமுடையவர். ஆதலின் பெயர்ப்பொருத்தமும் உள்ளது. சீர்காழிக்கு மேற்கே 4 கல் தொலைவிலுள்ள இத்தலத்திற்கு–சீகாழி–பனங்காட்டாங்குடி பஸ்மூலம் சென்றடையலாம்.

இத்தலத்தில் முருகனுக்குத் தனிக்கோயில்–குமார சுப்பிரமணியசுவாமி திருக்கோயில் என்று பெயர்கொண்டு விளங்குகின்றது. குமாரக்கடவுள் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் வேடமங்கையும் வேழமங்கையும் உடனிருக்க கிழக்குநோக்கி எழுந்தருளியுள்ளார், மயில் பின்புறம் நிற்கின்றது. மயிலின்முகம் தெற்குநோக்கி உள்ளது. உற்சவர் மூலவர் போன்றே உள்ளார்.

தினமும் இரண்டுகால பூசை காரணாகம முறையில் நிகழ்கின்றது. சஷ்டி, கிருத்திகை சிறப்பு வழிபாடுகள் நிகழும். கந்த சஷ்டி விழா, கார்த்திகைவிழா, தைப்பூசவிழாக்கள் நடைபெறுகின்றன.

புண்ணியப்புனல்: திருக்குளமும், கோயிலுக்கு 2 பர்லாங் தெற்கிலுள்ள கழுமலநதியும். தலவிருட்சம்: பலா.

இங்கே இடும்பன் சந்நிதி விசேஷமாகத் தென்மேற்கு மூலையில் உள்ளது. இடும்பனுக்கும் உற்சவமூர்த்தம் உண்டு.

தாரகபரமேசுவரனும் திருமாலும் இங்கே முருகனிடம் பிரமனைச்சிறைமீட்கவேண்டி வந்ததால் அவர்களது சந்நிதிகளும் உள்ளன.

இத்தகு சிறப்புடைய முருகப்பெருமானை அருணகிரிநாதர் அற்புதமான ஓர் திருப்புகழால் பாடிப்பரவியுள்ளார்.

"களிமயில் தலிற்புக் சேறு தாட்டிக
அழகிய கனகத் தாம மார்த்தொளிர்
கனகிரி புயமுத் தார மேற்றருள் திருமார்பா
கரியவனகரிற் றேவ பாாபபதி
யருள் சுத குறநற் பாவை தாட்பணி
கருணையே தமிழிற் பாடல்கேட்டருள் பெருமாளே"

தனியார் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது. வழிபடுவோரது ஆதரவுடன் சிவாச்சாரியார் வழிபாடுகளை நடத்திவருகிறார். இப்பகுதியில் இதனைக் கீழ்ப்பழனி என்றழைக்கின்றனர்.

அருகில் சீகாழி, வைத்தீசுவரன் கோயில் முதலியன உள்ளன.

தொண்டலுக்கருகில் உள்ள வள்ளுவக்குடியில் அமைந்துள்ள அருள்மிகு வேதநாயகி அம்பாள் உடனுறை அருள்மிகு வேதபுரீசர் திருக்கோயிலில் வள்ளி தேவயானையுடன் விளங்கும் முருகவேள் சன்னிதி சிறப்பாக உள்ளது.

# வேளூர் உகந்த வேலவன்

*உரத்துறை போதத் தனியான*
*உனைச் சிறிதோதத் தெரியாது*
*மரத்துறை போலுற் றடியேனும்*
*மலத்திருள் மூடிக் கெடலாமோ*
*பரத்துறை சீலத் தவாவாழ்வே*
*பணித்தடி வாழ்வுற் றருள்வோனே*
*வரத்துறை நீதர்க் கொருசேயே*
**வயித்திய நாதப்** *பெருமாளே.*

—அருணகிரிநாதர்

உலகில் நோய்வந்தால் மருத்துவரிடம் செல்வது வழக்கம். ஆன்மவயித்தியராக உள்ள சிவபெருமானிடம் சென்று நோய் தீரப் பிரார்த்திப்போர் பலர் உளர். தன்னிடத்து வசிக்கும் உயிர்கள் யமலோகம் அடையக்கூடாது என்று, பேய், பில்லி, வஞ்சனைகளையும் 4448 வியாதிகளையும் தீர்க்கத் திருவுள்ளம் கொண்டு தையல்நாயகி அம்மையார் தைலபாத்திரமும் சஞ்சீவியும், வில்வமரத்தடி மண்ணும் எடுத்துக்கொண்டு தம்முடன்வர, வைத்தியராகி எழுந்தருளிச் சிவபெருமான் அருள்புரிந்து வரும தலம் இவ்வுலகிலேயே தமிழகத்தில் தஞ்சைமாவட்டத்தில்தான் உள்ளது என்றால் வியப்பாக இருக்கிறதா! வைத்திசுவரன் கோயில் என்று தலப்பெயராக, ஊர்ப்பெயராக வேறெங்கும் இத்தலத்தைத் தவிர இல்லை என்பதும் அனைவரும் அறிவர்.

வைத்தீசுவரன் கோயில் சிவபெருமானுக்கு உகந்ததலமாக விளங்குவது போன்றே குமரக்கடவுளுக்கும் சிறந்ததலமாகும். தேவாரப்பாக்களில் இத்தலம் புள்ளிருக்குவேளூர் என்று போற்றப்படுகின்றது. புள்-ஜடாயு-சம்பாதி, இருக்கு இருக்கு

வேதம், வேள்-முருகவேள்; இவ்வாறுக ஜடாயு, சம்பாதி, இருக்கு வேதம், முருகவேள் ஆகியோர் வழிபட்டதலமாக இது விளங்கு கின்றது. வேளூர் என்று வரும் தலங்கள் பொதுவாக முருகவேள் சிவபெருமானைப் பூசித்தத்தலங்களாகும். (உ. ம்.) கீழ்வேளூர் பெருவேளூர் முதலியன.

திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் இத்தலத்தை உருகி வழிபட்டுப் பாடினர். புள்ளிருக்கு வேளூரானைப் போற்றுதே ஆற்றநாள் போக்கினேனே என்று புலம்பிய திருநாவுக்கரசர்,

> *"தன் னுருவை யொருவருக் கறிவொணு*
> *மின்னுருவனை மேனிவெண்ணிற்றனைப்*
> *பொன்னுருவனைப் புள்ளிருக்கு வேளூர்*
> *என்ன வல்லவர்க்கில்லை இடர்களே"*

என்று நமது இடர்கள் அகலச் சுலபவழியையும் இங்கே காட்டி விட்டார்.

வேம்பு (வேப்பமரம்) தலவிருட்சமாகவும், சித்தாமிர்த தீர்த்தம் புண்ணியப்புனலாகவும் கொண்ட இத்தலம் நவக்கிரகங் களுள் அங்காரகனுக்கு (செவ்வாய்) உரியதலமாகும். இராம லட்சுமணர் வழிபட்டுயந்ததலம் இது. இத்தனைச்சிறப்புக்களையும் கொண்ட இத்தலம் மாயூரம்-சீர்காழி என்னும் இருதலங்களின் நடுவே அமைந்துள்ளது மற்றொரு சிறப்பாகும். இரயில் வழியாக வும், பஸ்வழியாகவும் இத்தலத்தை இவ்விருதலங்களிலிருந்தும் எளிதில் அடைந்துவிடலாம்.

சிவபெருமான் மேற்குநோக்கி இங்கே விளங்க, முருகவேள் அவரைப் பூசிக்குமுகத்தான் கிழக்குநோக்கி எழுந்தருளியுள்ளார். ஆறுமுகமும் பன்னிருகரங்களும் கொண்டு மயில்மீது விளங்கும் முருகவேள் இருபுறமும் தேவியர்சூழ எழுந்தருளியுள்ளார். அற்புத மான காட்சியை எப்படி வருணிக்க முடியும். இக்கோலத்தைக் கண்ட அருணகிரிவள்ளல்

> *"சித்தினி லாடலோடு முத்தமிழ் வாணரோது*
> *சித்திர ஞானபாதம் அருள்வாயே!"* (எத்தனைகோடி...)
>
> *"ஞான வெற்புகந்தாடும் அத்தர் தையல்*
> *நாயகிக்குநன் பாகர் அக்கணியும்*
> *நாதர் மெச்ச வந்தாடு முத்தம் அருள் பெருமாளே!"*
> (பாடகச்......)

"வேலினால் வினைக்கணங்கள் தூளதா எரித்து உன்றன்
வீடுதாபரித்த அன்பர் கணமூடே
மேவியான் உனைப்போல் சிந்தையாகவே களித்துகந்த
வேளெ யாமெனப்பரிந்து அருள்வாயே

...... ... ... ...... ... ...... ...........

தேவர் மாதர் சித்தர் தொண்டர் ஏகவேளூருக்குகந்த
சேவல் கேது சுற்று கந்த பெருமாளே."
(மாவினு....)

" மாலா டுனொடு சேர்த்தி தம்பெற
நாலு வேதம சாத்தி ரஞ்சொலும்
வாழ்ஞானபுசி யேற்றி மந்திர தவிசூடே
மாதா நாதனும் விற்றிருந்திடும்
வீடே முனொளி காட்டி சந்திர
வாகார் தேனமு தூட்டி யென்றனை உடனுள்வாய்'.
(மூலாதார—)

"தோளி ராறுமுக மாறுமயில் வேலழகு
மிதெய் வானவடி வாதொழுதெ ழுவயனர்
சூழுகாவிரியும் வேளூர் முருகா அமரா பெருமாளே"
(மேகவார்...)

என்றிவ்வாறு ஆறுத்திருப்புகழ்ப்பாக்களால் ஆறுமுகப்பரமனைப் பாடி மகிழ்ந்தார் போலும்!

இத்தலத்தில் உற்சவமூர்த்தியாக விளங்கும் முருகவேள் செல்வமுத்துக்குமாரசுவாமி என்று போற்றப்பெறுகின்றார் வேடமங்கையும் வேழமங்கையும் இருபால் விளங்க-செல்வ முத்துக்குமரர்தரிசனம் ஒவ்வொருவர்வாழ்விலும் கிட்டவேண்டிய பாக்கியம் என்றே கூறவேண்டும். இப்பெருமானுக்குத்தங்கக் கவசம், நவரத்தினக்கவசம், வைரவேல் சாரித்தி வழிபட்டு மகிழ்கின்றனர் அடியார்கள். ஒவ்வொரு கார்த்திகையும் திருவிழாக்கோலந்தான்!

தினமும் காமிகாகம முறைப்படி ஆறுகால பூசை நிகழ் கின்றது. முடிகாணிக்கைச்சிறப்புடையது. தைப்பூசம், சந்தசஷ்டி விழாக்கள் பிரபலமானவை.

இத்தலத்தில் 18 தீர்த்தங்கள் உள்ளன.

இத்தலப்புகழ்ப்பரவும்நூல்கள்பலவுள. காத்தியாயினிருப்பு வடுகநாததேசிகர் இயற்றிய புள்ளிருக்குவேளூர் தலபுராணம்

(1131 பாடல்கள்), குமரகுருபரசுவாமிகள் அருளிய முத்துக்குமார சுவாமிபிள்ளைத்தமிழ் என்ற இருநூல்களும் மிகமுக்கியச் சிறப்புடையன.

அருணகிரிவள்ளல் கந்தனூர் என்று போற்றும் திருப்புகழ்த்தலம் இதுவே எனக்கொள்ளலாம். "கந்தபுரி" என்று இத்தலப்பிள்ளைத்தமிழ் பேசுகின்றது. இதில் வரும் கந்தன் சிவனைப் பூசிக்கும் இத்தலமான்மியமும் பொருந்திவருவது குறிப்பிடத்தக்கது.

*எந்தனுயிர்க்குதவு சந்த்ர சேர்வைச் சடையர்*
*எந்தை பாகத்துறை அந்தமாது*
*எங்குமாய் நிற்குமொரு கந்தனூர் சத்திபுகழ்*
*எந்தை பூசித்து மகிழ் தம்பிரானே!*

—விந்துபேதந்த.

தருமபுரம் ஆதினத்திருக்கோயில்களுள் ஒன்றான இத்தலத்தில் வழிபடுவோர் விடுதியும், உணவுவிடுதிகளும் உள்ளன.

இத்தலத்தருகே சீகாழி, திருவிடைக்கழி, திருமயிலாடி, திருப்புன்கூர், மாயூரம் முதலிய தலங்கள் உள்ளன.

பவரோக வைத்தியநாதரும் செல்வமுத்துக்குமாரசுவாமியும் நம் இருவினைகளையும் போக்கிக்காத்தருள இருக்கும்போது நமக்கு என்ன குறை உள்ளது!

இத்தலத்தருகில் திருமயிலாடி பாலசுப்பிரமணிய சுவாமி கோயில் சிறப்புடையது. இங்கே இருகரங்கள் கொண்டு நின்ற கோலத்தில்வடதிசை நோக்கி முருகன் விளங்குகின்றார். பாதத்தில் மயில்மிதித்து நின்ற தனிக்கோலம் காணத்தக்கது.

# தான்தோன்றிக் குமரன்

*பண்ணொளிசேர் நான்மறையான் பாடலினோ டாடலினான்*
*கண்ணொளிசேர் நெற்றியினான் காதலித்த தொல்கோயில்*
*விண்ணொளிசேர் மாமதியந் தீண்டியக்கால் வெண்மாடம்*
*தண்ணொளிசேர் ஆக்கூரில் தான்தோன்றி மாடமே.*

—திருஞானசம்பந்தர்.

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் சிறப்புலி நாயனார் என்று ஒருவர் விளங்கினார். இவ்வுலகில் வறுமையால் இரந்து செல்வோர் எவராயினும் அவர்க்கு இல்லை என்னாது ஈயும் தன்மை மிக்கோர் வாழும் பதியான திருஆக்கூரில் அவர் வாழ்ந்து வந்தார். "வேளாளர்கள் என்போர் விருந்திருக்க உண்ணாதார்'' என்பது பழமொழி அல்லவா? அத்தகு வள்ளன்மை மிக்கத் தாளாளர்கள் மிகுந்திருக்கும் தலம் ஆக்கூர் என்று திருஞானசம்பந்தர் பாடுகின்றார். ஈத்துவக்கும் இன்பம் துய்க்கும் ஆக்கூரில் அந்தணர் குலத்தில் தோன்றிய சிறப்புலி நாயனாரும்,

"ஆளும் அங்கணருக்கு அன்பர் அணைந்தபோது அடியில் தாழ்ந்து
மூளும் ஆதரவு பொங்க முன்புநின்று இனிய கூறி
நாளும் நல்லமுதம் ஊட்டி நயந்தன எல்லாம் நல்கி
நீளும் இன்பத்துள் தங்கி நிதிமழை மாரி போன்றார்"

என்று சேக்கிழார் சுவாமிகள் போற்றுகின்றார்.

இத்தலத்தின் திருக்கோயில் "தான் தோன்றி" எனப்படும். இறைவன் தானே தோன்றியவர் (சுயம்பு); ஆதலால் தான் தோன்றியப்பர் என்று போற்றப் பெறுகிறார். கோச்செங்கட்

சோழநாயனர் கட்டிய மாடக்கோயில்களுள் இதுவும் ஒன்று. இறைவி வாள்நெடுங்கண்ணம்மை. இத்தலப் பெருமானைத் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடிப்பரவியுள்ளனர். தலவிருட்சம்: கொன்றை. தீர்த்தம்: குமுதபுட்கரணி.

மாயூரம்-பொறையாறு பஸ், இரயில் வழியில் ஆக்கூர் உள்ளது. இத்தலத்தருகே செம்பொன்பள்ளி, திருக்கடவூர், திருவிடைக்கழி முதலிய பல சிறந்த தலங்கள் உள்ளன.

அகத்தியருக்குத் திருமணக்காட்சியைப் பரமன் இத் தலத்திலும் அருளினார். இங்கு மன்னன் ஒருவன் இறைவன் கட்டளைப்படி, ஆயிரம் அந்தணர்களுக்கு உணவு அளித்த போது, இறைவனும் அவர்களுள் ஒருவராக வந்து உணவு உண்டார். அப்பெருமான் "ஆயிரத்தில் ஒருவர்" என்று எழுந்தருளியுள்ளதை இன்றும் வழிபடுகின்றோம். இவரே இத் தலச் சிறப்பு மூர்த்தியாவர்.

இத்தலத்தில் முருகவேள் ஒரு முகமும் நான்கு கரங் களும் கொண்டு மயில் மீது விளங்குகின்றார். அருகே இரு தேவியரும் திகழ்கின்றனர். கிழக்கு நோக்கிய சந்நிதி; உற்சவ மூர்த்தியும் மூலவர் போன்று விளங்குகின்றார். தினமும் இரண்டுகால வழிபாடு காமிகாகமப்படி நடைபெறுகின்றது. கார்த்திகை தோறும் சிறப்பு வழிபாடும், வைகாசி விசாக விழாவும் நிகழ்கின்றன.

இங்கே அருணகிரிவள்ளல் "சூழ்ந்தேன்ற" எனத் தொடங்கும் திருப்புகழ் பாடி, கந்தவேளை வழிபட்டு இன்புற்றார். கோயிலின் பெயரை நயமாக வைத்து,

> "தான்தோன்றி யப்பர்குடி வாழ்ந்தீன்ற நற்புதல்வ
> தான் தோன்றி நிற்கவல பெருமாளே"

என்று பரவுகின்றார்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளது இத்திருக்கோயில்.

# கூற்றுதைத்த திருக்கடவூர்

*எரிதருவார் சடையானும் வெள்ளை எருதேறியும்*
*புரிதரு மாமலர்க் கொன்றைமாலை புனைந்தேத்தவே*
*கரிதரு காலனைச் சாடினானுங் கடவூர் தனுள்*
*விரிதரு தொல்புகழ் வீரட்டானத் தரனல்லனே.*

—திருஞானசம்பந்தர்.

நன்மக்களைப் பெறுவதே இல்லறத்தில் பெறும் பேறாகக் கருதினர் நம்முன்னோர். அதனால்தான் திருவள்ளுவரும் மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம் நன்மக்கட் பேறு என்று அறிவுறுத்தினார் இக்குறளுக்கு எடுத்துக்காட்டாக வருகிறது திருக்கடவூர் தலமான்மியம். மிருகண்டு முனிவருக்குப் புத்திரப் பேறு இல்லை. நெடுநாள் இறைவனை நோக்கி அதற்கெனத் தவம் இருந்தார். பரமனும் அவர் தவத்திற்கிரங்கி நெடுநாள் வாழக் கூடிய தீய மகன் வேண்டுமா அல்லது சில ஆண்டுகளே வாழக் கூடிய நன் மகன் வேண்டுமா என்று கேட்டார். முனிவர் சில ஆண்டுகளே வாழ்ந்தாலும் நல்லதோர் மகன் கிடைத்தால் போதுமென வேண்டினார். ஒரு மகனும் பிறந்தான். அவர்தான் மார்க்கண்டேயர். மார்க்கண்டேயர் நாளும் வளர்ந்து, கலை பல பயின்றார், வயது பதினாறு ஆகியது. அவரது ஆயுள் முடியும் தருணம் வந்தது. யம தூதர்கள் தம் பணியை நிறைவேற்ற வந்தனர். மார்க்கண்டேயரோ சிவபெருமானைப் பூசித்து அவரைப் பற்றிக் கொண்டார். யமனே வந்தான்; பாசக்கயிறு வீசி இலிங்கத் துடன் சேர்த்து மார்க்கண்டேயரை இழுக்க முயன்றான். அன்பருக்கு அபயமளிக்க இலிங்கத்திலிருந்து வெளிபட்டார் சிவபெருமான். காலால் காலனைக் கடிந்தார். யமன் வீழ்ந்தான். பரமனும் காலசம்ஹாரமூர்த்தி அல்லது காலாரி மூர்த்தியானார்.

மார்க்கண்டேயர் என்றும் பதினாறாக விளங்கும் வரம் பெற்றார். யமனும் தான் செய்த பிழையுணர்ந்து வருந்தி உய்வடைந்தான். சிவபெருமான் தனது இடது திருக்காலால் யமனை உதைத்தார். அது அம்பிகையின் பாகத்திற்குரியது; அருள் திறம் மிக்கது. காலனுக்குக் கருணை கிட்டியது. ஆனால் வலத்திருப்பாதத்தால் யமனுக்குஉதை கிட்டியிருப்பின் அவன் மாய்ந்திருப்பான் ஆகவே அம்பிகைக்கு அவன் கடமைப்பட்டான். அம்பிகையும் இத்தலத்தில் அபிராமியாகப் புகழ்பெற்றாள்.

காலனைக்காய்ந்து அடியவர்க்கருளிய காலகாலனாகிய கடவூர்ப்பெருமான் அமிர்தலிங்கேசுவரர் இன்றும் ஆயுள் விருத்திக்காக ஆயிரக்கணக்கானோர் வழிபடும் மூர்த்தியாக விளங்குகின்றார்.

மாயூரம்-தரங்கம்பாடி இருப்புப் பாதையில் உள்ள இத்தலம் மாயூரத்திலிருந்து ஏராளமான பேருந்து வசதிகளைப் பெற்றுள்ளது அமுதம் நிறைந்த கடம் (குடம்) இலிங்க மானதால் கடவூர் என்ற பெயர் வந்தது என்பர் ஊழிக் காலத்தையும் கடந்து நின்ற தலம் இது; அதனால் கடவூர் எனலாம். இங்குள்ள பெருமானை வழிபட்டால் யமனது ஆணையைக் கடந்து விடலாம்; அதனாலும் இது கடவூர்தானே ! இங்கே வழிபட்டால் பிறப்பையும் இறப்பையும் கடக்கலாம், இது அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்று.

கள்ள வாரணப்பிள்ளையார், புலத்தியர் வழிப்பட்ட புண்ணிய வர்த்தனர், அகத்தியர் வழிபட்ட பாபவிமோசனர், பிரமன் பூசித்த வில்வவனேசர், குங்குலியக்கலயர்! மார்க்கண்டேயர், சந்திரசேகரர், காலசம்ஹார மூர்த்தி, இரத்தின கிரீடேசுரர் ஆகிய அற்புதமான மூர்த்தங்கள் இத் தலத்தில் உள்ளன.

அறுபத்து மூன்று நாயன்மார்களுள் குங்குலியக்கலயர் ஒருவர். நாடோறும் திருக்கடவூர்ப் பெருமான் சந்நிதியில் குங்குலியதூபம் போடுவது அவர் பணி. பொருள் வளம் குன்றியது. ஆயினும் அவர் தொண்டின் நிலை குறையவில்லை. குடும்பமேபட்டினியால் வாடியது. மனைவியார் தனது திருமாங்கலியத்தைத்தந்து அதை விற்று நெல் வாங்கிவர வேண் டினார். குங்குலியக்கலயர் மனையாளின் தாலியை விற்கச் செல்லும் போது எதிரில் ஒருவன் ஒரு பொதி சுமந்து வந்தான். நாயனார்

அது என்ன என்று வினவ, வந்தவன் குங்குலியப் பொதி என்று விடை தந்தான். கலயனாருக்கு மகிழ்ச்சி! தாலியைக் கொடுத்துக் குங்குலியப்பொதியை வாங்கிக்கொண்டார் - கோயிலுக்குச் சென்றார். மகிழ்வுடன் தூபம் போடலானார். பரமன் அருளால் துயில் வரச் சிறிது உறங்கினார். இதற்கிடையில் சிவபெருமான் ஆணைப்படி குபேரன் கலயனார் வீட்டை மணிமாடமாக்கித் தூசும் துகிலும் உணவுப் பொருள்களும் நிறைந்து செல்வ வளங் கொழிக்கச் செய்தான். பெருமான் கலயனார் கனவில் எழுந்தருளி,

*சால நீ பசித்தாய் உன்றன் நெடுமனையில் நண்ணிப்*
*பாலின் இன் அடிசில் உண்டு பரவரல் ஒழிக என்றார்.*

இறைவன் ஆணையை மறுக்க அஞ்சி, கலயனார் தம் இல்லம் சேர்ந்த போது வியப்புற்று, தம் வீடு செல்வங்கொழித்துத் திகழ்வதைக் கண்டு மனைவியாரிடம் 'வில்லொத்த நுதலாய் இந்த விளைவெல்லாம் எப்படி வந்தது?' என்று வினவினார். மனைவியார் கணவனாரைத் தொழுது 'அல்லொத்த கண்டன் (திருநீலகண்டத்து) எம்மான் அருள் தர வந்தது' என்று இறைவன் அருளைப்போற்றி விடையளித்தார். குங்குலியக்கலய நாயனார் வாழ்ந்து வழிபட்ட இத்தலம் சிவபெருமான் திருவருள் திறத்திற்கு மற்றொரு எடுத்துக் காட்டாகும்.

தலவிருட்சம்: ஜாதிமுல்லை. ஆதலால் பிஞ்சில (ஜாதி முல்லை) வனம் என்று தலப்பெயரும் உண்டு அமிர்தபுஷ்கரணி மார்க்கண்டேய தீர்த்தம் என்பன புண்ணியப் புனல்களாகும்.

திருக்கடவூரில் முருகவேள் ஒருமுகமும் நான்கு திருக் கரங்களும் கொண்டு தேவியர் இருவரும் திகழ விளங்குகின்றார். நாடோறும் ஆறுகால வழிபாடு இத்தலத்தில் நிகழ்ந்து வருகின்றது.

பல திருவிழாக்கள் இங்கே கொண்டாடப் பட்டாலும் கார்த்திகை சோமவார 1008 சங்காபிஷேகம் தனிச் சிறப் புடையது. கந்த சஷ்டி விழா நிகழ்கின்றது.

'கரும்பினில் கட்டி போல்வார் கடவூர் வீரட்டனாரே' என்பார் திருநாவுக்கரசர். மூவர் தேவாரமும் பெற்ற இத் தலத்தில் காரிநாயனார் என்ற சிவனடியார் வாழ்ந்தார் என் பதும் குறிப்பிடத்தக்கது. அட்ட வீரட்டதலங்களுள் ஒன்றான

இத்தலத்தில் அபிராமி அம்பிகையை வழிபட்ட அபிராமி பட்டர் அமாவாசையன்று முழுநிலாக்காட்டி, தஞ்சை மன்னருக்கு மகேசுவரியின் மாண்புறு கருணையை விளக்கியதோடு எல்லா மக்களும் என்றும் இன்புறவேண்டி அபிராமி அந்தாதியையும் அருளிய வரலாறு அனைவரும் அறிந்ததொன்று.

இத்தகைய சிறப்பு மிக்க இத்தலத்தில் அருணகிரி வள்ளல் ஆறுமுகனைப் பரவி 'ஏட்டின் விதிப்படி' 'சூலமென' எனத்தொடங்கும் இருதிருப்புகழ்ப் பாக்களைப் பாடி தொழுதார். இருபாடல்களிலும் காலனைக்காய்ந்த கடவூர்ப் பெருமானின் கருணையைப் போற்றிக் கந்தவேளை வந்தனை செய்கிறார். காலனை உதைத்தது தேவியின் சீர்பாதமே என்று நினைவு படுத்துகிறார் அருணகிரிவள்ளல்.

தருமபுர ஆதீனத் திருக்கோயில்களுள் ஒன்றான இத்தலம் சிறப்பாக அத்திருமடத்தால் நிர்வகிக்கப் பெறுகிறது.

இத்தலத்தருகே திருக்கடவூர் மயானம், திருவிடைக்கழி முதலிய தலங்கள் தரிசிக்கப்பட வேண்டியன.

திருக்கடவூரில் தங்கி வழிபடத் திருக்கோயிலைச் சார்ந்த விடுதிகள் உள்ளன. மணிவிழாக் கொண்டாட உத்தமமான தலம் இது. ம்ருத்யுஞ்ச ஹோமம் இங்கே அடிக்கடி செய்து கொள்வதற்கு அடியார்கள் வந்து போகின்றனர்.

"கூற்று மரித்திட வேயுதை பார்வதி
 யார்க்குமி னித்தபெ ணாகிய மாண்மகள்
 கோட்டுமு லைக்கதி பாக கடவூருறை பெருமாளே!"
"காலனுடே மேதிமட்க வூழிபுவி மேல்கி டத்து
 காலனிடமேவு சத்தி யருள்பாலா
 காலமுதல் வாழ்புவிக்க தாரநகர் கோபுரத்துள்
 கானமயில் மேல் தரித்த பெருமாளே!"

# திருவிடைக்கழி மேவிய குராவடிவேலன்

*மருக்கு லாவிய மலரணை கொதியாதே*
*வளர்த்த தாய்தமர் வசையது மொழியாதே*
*கருக்கு லாவிய அயலவர் பழியாதே*
*கடப்ப மாலையை யினிவர விடவேணும்*
*தருக்கு லாவிய கொடியிடை மணவாளா*
*சமர்த்த னேமணி மரகத மயில்வீரா*
*திருக்கு ராவடி நிழல்தனில் உறைவோனே*
*திருக்கை வேல்வடி வழகிய பெருமாளே*

—அருணகிரிநாத சுவாமிகள்

முருகப் பெருமான் தமிழ்நாட்டில்மிகவும் விரும்பி இரண்டு இடங்களில் உலவினராம்! இந்தச் செய்தியை நாம் சொல்லவில்லை. சொன்னவரும் சாதாரண மனிதரல்லர்! முருகப் பெருமான் திருவருட்கடலைப் பருகி அதன் இன்பத்தை நமக்கு வாரி வழங்கிய வள்ளலான அருணகிரிநாத சுவாமிகள் அவரது அற்புத மிக்க புகழான திருப்புகழ் என்னும் செஞ்சொற் சந்தக் கவி மாலையில் குறிப்பிடுகிறார். ஓர் இடம்;

குறவர் கூட்டத்தில் வந்து கிழவனாய்ப் புக்கு நின்று குருவி யோட்டித் திரிந்த தவமானன வள்ளியைக் குணமதாக்கிச் சிறந்த வடிவு காட்டிப் புணர்ந்த இடமான வள்ளிமலை.

*"வள்ளி படர்கின்ற வள்ளிமலை சென்று*
*வள்ளியை மணந்த பெருமாளே"*

மற்றொரு இடம்.

முருகன் கடப்ப மாலையை விட்டுக் குராமாலையைப் புனைந்து அக்குராவடி நிழல்தனில் உலவிய இடம், திருவிடைக்கழி:

*"சிறக்கு மாதவ முனிவர் மகபதி*
*இருக்கு வேதனும் இமையவர் பரவிய*
*திருக்குராவடி நிழல்தனில் உலாவிய பெருமாளே"*

வள்ளிமலை இருக்குமிடம் அனைவருக்கும் தெரியும். ஆனால் திருவிடைக்கழி இருக்குமிடம் பலர் அறியவில்லை. அமாவாசையைப் பௌர்ணமியாகச் காட்டச் செய்து அதிசயம் நிகழ்த்தி, நமக்கெல்லாம் உலக நாயகியின் அருள் திறத்தை எளிதில் பெற உதவிய அபிராமி பட்டரின் அற்புத நூலான "அபிராமி அந்தாதி" பெற்ற இடம் திருக்கடவூர். மாயூரத்திற்கு அருகிலுள்ளது. திருக்கடவூர் அருகில் தில்லையாடி என்னும் சரித்திரப் பிரசித்தி பெற்ற வள்ளியம்மை நகர் உள்ளது. அதற்கு மேற்கே இரண்டு கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளதுதான் திருவிடைக்கழி என்னும் தலம்.

திருவிடைக்கழி செல்லத் தில்லையாடியிலிருந்து சாதாரண மண்சாலை உள்ளது கார்கள் பஸ் முதலிய செல்லலாம். மாயூரத்திலிருந்து டவுன்பஸ் எண் 25. தற்போது திருவிடைக்கழி செல்கின்றது. இத்தகு வியத்தகு தலமானது, வள்ளிமலை பிரபலமடைந்த அளவிற்குமக்களுக்குத் தெரிய வரவில்லை. குறிஞ்சி நிலக் கடவுளான முருகன் மரத்தினடியில் அதுவும் மிகவும் புனிதம் வாய்ந்த திருக்குரா மரத்தினடியில் குமாரசிவமாக அமர்ந்து அருள்பொழியும் ஒரே தலம் திருவிடைக்கழி. குராமலர் முருகனுக்கு மிகவும் உகந்தது.

*"விழைவு குராப்புனையுங் குமரா"*

என்று அருணகிரியார் பாடுகிறார். அவன் விரும்பி உறையும் இடங்களைப் பற்றிப் பாடும் அவர்,

*"கொந்துவார் குரவடியினும் அடியவர்*
*சிந்தை வாரிஜ நடுவினும் நெறிபல*
*கொண்ட வேதநன் முடியினும் மருவிய குருநாத*
*கொங்கிலேர்தரு பழநியில் அறுமுக*
*செந்தில் காவல, தணிகையில் இணையிலி"*

என்று பாடும் பொழுது முதலில் குராமரத்தினடியில் உறையும் திருவிடைக்கழி முருகனையே குறிப்பிடுகிறார்.

இத்தலத்தில் மிகவும் அதிசயமான அமைப்பு: பிரதோஷ நாயகர், நடராஜர், சந்திர சேகரர், சோமாஸ்கந்தர், சண்டிகேஸ்வரர் ஆகிய எல்லா மூர்த்தங்களும் சுப்பிரமணிய சொருபமாகவே விளங்குகின்றார்கள். நடராஜப் பெருமான் வலது கையில் வேலும், இடது கையில் வில்லும் கொண்டு இரணியாசுர சம்மார மூர்த்தி என்ற பெயரில் காட்சியளிக்கிறார் சூரனின்மகன் இரணியாசுரனைச் சம்மரித்த இடம் திருவிடைக்கழி எனப் புராணம் கூறுகின்றது. திருவிடைக்கழி முருகனின் திருவுருவ அழகு எப்படிப்பட்டது? முருகன் திருக்கோலங்கள் பதினாறு. அதில் சுப்பிரமணிய மூர்த்தியாய் இருப்பது ஒன்று. குமார தந்திரத்தில் கூறப் பெற்றுள்ள அமைப்பில் ஒரு முகம், இரண்டு கரங்கள், வலதுகரம் அபயம்-இடது கரம் தொடையில். இந்த அமைப்பே திருவிடைக்கழியிலும் உள்ளது.

இந்த பாலகுமாரனைச் சென்று கண்டு தொழ நாலாயிரங் கண்கள் வேண்டும். அத்தகைய ஒப்பற்ற அழகுக் காண்பாரைத் தன்பால் ஈர்த்துக் காதல் கொள்ளச் செய்யும் கவின்மிகு வனப்புடன் முழுமதியைப் போன்ற முகம், மலர்விழிகள் வயிரம் பதித்த செஞ்சுட்டி முதலிய திருவாபரணங்கள் இரத்தினக் குண்டலங்கள், தன்னை அடைந்தவர்களின் குறைகளை நீக்கி, வேண்டிய வரங்களை அளிக்கும் அபயகரம், அழகிய மணி பதித்த ஆடைகள் நம்முடைய பாவவினைகளை அகற்றும் பாதார விந்தங்கள். முழுவதுமாகச் சேர்ந்த அழகிய திருக் குமரனின் பேரழகுதான் என்னே!

வெளியில் தெற்கு நோக்கி அமைந்துள்ள மண்டபத்தில் சசிவல்லியான தேவயானை (தெய்வயானை), தலையைச் சற்று வலது புறமாகச் சாய்த்து, அந்தத் திருக்குமரனின் அழகில் மயங்கிக் காட்சி அளிக்கும் நிலையினைக் கண்டவர் விண்டிலர். இக்குமரப் பெருமான் சந்நிதிக்குப் பின்புறம் (கர்ப்பக்கிரகத் தினுள்ளேயே) பாபநாசப் பெருமான் கருவறையும் அமைந் துள்ளது. இவ்வமைப்பு அதி அற்புதமானது. முருகனின் முன்னே ஸ்படிக லிங்கம் உள்ளது. ஆனால் அகிலாண்ட நாயகிக்குச் சந்நிதி இக்கோயிலில் இல்லாமல் அருகிலுள்ள தரங்கம்பாடி கோயிலில் விளங்குகிறது.

இக்கோயிலுக்கு எதிர்நோக்கிய வண்ணம் ஐந்நூற்று விநாயகர் திருக்கோயில் இருக்கின்றது. இதில் பதினாறு விநாயகர்

திருவுருவங்கள் உள்ளன. வெளித் திருச்சுற்றில் திருக்காமேஸ்வரர் சந்நிதியுள்ளது. இவரே இத்தலத்து ஆதி மூர்த்தியாவார். மூலவர் கருவறையை அடுத்து வசிட்டரால் பூசிக்கப் பெற்ற வசிட்ட லிங்கம் உள்ளது சிவசண்டேஸ்வரர் குககண்டேஸ்வரர் சந்நிதிகள் உண்டு. ஆனால் நவக்கிரக சந்நிதிகள் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

அர்த்த சாமத்தில் மட்டும் முருகப் பெருமான் குரா மரத்தின் கீழிருந்து தவம்புரிந்த இடத்திலுள்ள பலிபீடத்துக்கு முதலில் அபிஷேக ஆராதனைகள் நடைபெறுகிறது. சிவபெருமானின் திருவருளைப் பெற்றபின் முருகப் பெருமானைப் பாடிப் பரவியவர் இருவர். ஒருவர் நக்கீரர் இறைவனது பாடலில் குற்றம் எனக்கூறி, அதனால் சாபம் பெற்று, யாத்திரை செல்லும் வழியில், அனுஷ்டானம் செய்யும் வேளையில் அங்கிருந்து சிந்தனை மாறி மனம் வேறொன்றில் லயித்தபோது அங்கு தோன்றிய பூதம் அவரைச் சிறை பிடித்தது அவ்வேளை யில் "திருமுருகாற்றுப் படை" என்னும் சகலவேத சாரமான புகழ்மாலையை முருகனுக்கு அளித்தார் முருகப் பெருமான் உடனே அங்கு தோன்றி அப்பூதத்தினைக் கொன்று முன்பே சிறையிடப்பட்ட 999 பேர்களையும் விடுவித்தார் என்பது வரலாறு.

மற்றொருவர் சேந்தனார்: சேந்தனார் பட்டினத்தடிகளுக்குக் கணக்கராக இருந்து பின் சிதம்பரத்தில் விறகு விற்று வாழ்ந்து வரும் நாளில் ஒருவருக்காவது உணவளிக்கும் கடமையை மேற் கொண்டிருந்தார் பல நாட்கள் தொடர்ந்து பெய்த மழையால் விறகு விற்க இயலாமையால், வருவாய் இன்றி அதனால் பசியால் வருந்திய சேந்தனார் ஏதோ கிடைத்த சிறு பொருளில் வாங்கிய மாவினைத் தம் மனைவியிடம் கொடுத்துக் களியாக்கச் செய்து சிவனடியாரை எதிர்பார்த்திருந்தார். சிவபெருமான் முதுமைப் பருவமுடைய அடியவராகச் சேந்தனார் வீட்டிற்குச் சென்று, அவர் அன்பினால் அளித்த களியை உண்டு மகிழ்ந்து, அடுத்த வேளைக்கும் வேண்டும் என மீதியிருந்த களியைத் தன் பழங் கந்தையில் முடித்துக் கொண்டு பொன்னம்பலத்தை அடைந்தார்.

இஃது இவ்வாறிருக்கத் தில்லையில் கூத்தப் பெருமானுக்குத் தான் நடத்தும் வழிபாட்டில் சிலம்பொலி கேட்டு மகிழ்தலை

நியதியாகக் கொண்ட சோழமன்னன் அன்று முழுவதும் காத்திருந்தும் அவ்வொலியைக் கேட்கப் பெருது வருந்தித் துயில் கொண்டான். இறைவன் அவனது கனவில் தோன்றி "வேந்தனே, கவலை கொள்ளற்க. இன்றுநாம் சேந்தன் அளித்த களியமுதை உண்ணச் சென்றமையால் நீ நடத்தும் வழி பாட்டிற்குவரத் தாழ்ந்தோம்" என்று கூறிமறைந்தருளினர்.

அந்நிலையில் விழிப்புற்ற வேந்தன், சேந்தனரைக் காண விரும்பி விடியற்காலத்தே தில்லைச் சிறறம்பலப் பெருமானை வணங்கச் சென்றவா, பொன்னம்பலத்தில் களியமுது சிந்திக் கிடத்தலைக் கண்டு, தான்கணட கனவினை உண்மையைத் தில்லை வாழ் அந்தணர் முதலிய எலலோருக்கும் தெரிவித்தாா. அதனை உணர்ந்த பலரும், சேந்தனராகிய அடியவரைக கணடு வழிபட வேண்டும் எனப் பெரிதும விரும்பியுறறிருந்தனர். யாாகழித் திருவாதிரைத் திருநாளில் மழை பெயதமையால் திருத்தேர் சேற்றில அழுந்தி ஓடாது நின்றபொழுது, "சேந்தா! தேர் நடக்கப் பல்லாண்டு பாடுக!' என்று ஒரு வான் ஒலி எல்லோருக்கும கேட்கும்படியாகத் தோன்றியது. தெரிழுக்கும அடியாா குழுவில் நின்ற சேநதனர், "மனனுக தில்லை வளர்க நம் பக்தர்கள்" எனத தொடங்கும திருபபல்லாண்டுத் திருப் பதிகத்தைப பாடிபபோற்றினர் தோ மிக எளிதில் நிலைக்கு வந்து சேர்ந்தது. இவ்வற்புதததைக கணடாா. அனைவரும் சேந்தனரது பேரன்பின் திறததை எண்ணி நெஞ்சம் நெக்குருகினர்.

இவ்வாறுகச் சிவபெருமான் திருவருள் பெறறுத் திருப் பல்லாணடு பாடிய சேநதனா பின் திருவிடைக்கழியை அடைந்து அங்குள்ள குராவடிக் குமரனைத் திருவிசைபபா எனனும திருப பதிகத்தில் பதினொரு பாடல்களால சிறப்பிததுளளார். நற்ரு யிரங்கல் என்னும் அகப்பொருள் துறையில் அமைந்துள்ள இப் பதிகம் பன்னிரு திருமுறைகளில ஒன்பதாம திருமுறையில் சேர்க்கப் பெற்றுள்ளது. பன்னிரு திருமுறைகளில பாடப் பெற்றுள்ள ஒரே தனி முருகன் தலம் திருவிடைக்கழிதான்.

முதன் முதலில் 9-ஆம் நூற்ருண்டில் தமிழிலக்கியத்தில் சுப்பிரமணியன் என்னும் சொல் கையாளப் பெறுவது இப் பதிகத்தில்தான். இதோ ஒரு பாடல்:

"கோவினைப் பவளக் குழம்மணக் கோலக்
குழாங்கள் சூழ் கோழிவேல் கொடியோன்
காவனற் சேனையென்னக் காப்பவன்என்
பொன்னை மேகலை கவர்வானே
தேவி நற்றலைவன் திருவிடைக்கழியில்
திருக்குரா நிழல்கீழ் நின்ற
தூவி நற்பீலி மாமயில் ஊரும்
சுப்பிரமணியன் தானே"

—சேந்தனார் திருவிசைப்பா

அருணகிரிநாதர் திருவிடைக்கழி அழகனை எட்டுத் திருப்புகழில் சிறப்பிக்கிறார். தவிர இதர தலத் திருப்புகழ் சிலவற்றிலும், வேல் விருத்தம், மயில் விருத்தம் திருவகுப்புகளிலும் இத்தலத்தைக் குறிப்பிடுகிறார். வேல் விருத்தத்தில் பாடும்போது

"தாதார் மலர்ச்சுனை பழநிமலை சோலைமலை
தனிப்பரங் குன்றேரகம்
தணிகை செந்தூர் இடைக்கழி ஆவினன்குடி
தடங்கடல் இலங்கை அதனிற்
போதார் பொழிற் கதிர்காமத் தலத்தினைப்
புகழும் அவரவர் நாவினிற்
புந்தியில் அமர்ந்தவன் கந்தன் முருகன்குகன்
புங்கவன் செங்கை வேலே"

பழனி, பழமுதிர்சோலை, திருப்பரங்குன்றம், திருவேரகம், திருத்தணிகை, திருச்செந்தூர், திருவிடைக்கழி, திருவாவினன்குடி, இலங்கையிலுள்ள கதிர்காமம் என்ற திருத்தலங்களைப்போற்றிப் புகழ்கின்ற அடியார்களின் நாவிலும், அறிவிலும், உள்ளத்திலும் வீற்றிருப்பவரும், கந்தக்கடவுளும் முருகப்பெருமானும், குகமூர்த்தியும், தூயவரும் ஆகிய எம்பிரானுடைய செவ்விய திருக்கை வேலாயுதமே என்கிறார்.

"ஏரகம் இடைக்கழி சிராமலை திருப்பழனி
ஏரணி செருத்தணியில் வாசக்காரனும்"

என்று திருவேளைக்காரன் வகுப்பிலும்,

"அருணையும் இலஞ்சியும் செந்தூர் திருப்பழநி
அடியர் மன பங்கயஞ் செங்கோடு இடைக்கழியும்"

என்று பூத வேதாள வகுப்பிலும், மற்றும் வேடிச்சிக்காவலன் வகுப்பு, பொருணைத் தலகை வகுப்பு ஆகியவைகளிலும் குறிப்பிடுகிறார்.

குராவடிக்குமரன் அருணகிரியாருக்கு இத்தலத்தில் அறிவும் அறிதத்துவமும் அபரிமித வித்தைகளும் அறிக என இமைப் பொழுதில் அனுக்ரஹித்தான், அப்பெருமானிடம் இத்தலத் திருப்புகழில் நமக்காகச் சகல செல்வயோகமிக்கப் பெருவாழ்வை வேண்டுகிறார்.

"பகருமுத்தமிழ்ப் பொருளு மெய்த்தவப்
பயனும் எப்படிப் பலவாழ்வும்
பழைய முத்தியிற் பதமு நட்புறப்
பரவு கற்பகத் திருவாழ்வும்
புகரில் புத்தியுற் றரசுபெற்றுறப்
பொலியும் அற்புதப் பெருவாழ்வும்
புலனகற்றிடப் பலவிதத்தினைப்
புகழ்பலத்தினைத் தரவேணும்"

இத்தகைய மிகச் சிறப்பு வாய்ந்த தலத்தினை திரிசிரபுரம் மகாவித்வான் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள் பிள்ளைத்தமிழிலும், தில்லையாளி தம்பியப்ப செட்டியார் அவர்கள் அந்தாதியிலும், காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் க்ஷேத்திரக் கோவை பிள்ளைத் தமிழிலும், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஒரு பதிகத்தாலும், அருட்கவி சாதுராம் சுவாமிகள் சமீபத்தில் சந்தப்பாவிலும் போற்றியுள்ளனர்.

ஏறத்தாழ 1500 ஆண்டுகளுக்கு முன்னர் கட்டப்பெற்றதாகத் தோன்றும் இக்கோயிலில் முசுகுந்த சக்ரவர்த்தி திருப்பணி செய்துள்ளார். இங்குள்ள கல்வெட்டுக்களில் குராப்பள்ளி துஞ்சிய பெருந்திருமாளவன் என்ற சோழனது பள்ளிப்படை இவ்வூரின் அருகே அமைந்திருந்தும், சேந்தனார் வரலாறும் தெரிய வருகின்றது. சென்னையிலுள்ள மகாமகோபாத்தியாய நூல்நிலையத்தில் குரவைலிங்கன் என்பவர் பாடிய இவ்வூர்த்தலபுராணம் கையெழுத்துப் பிரதியாக உள்ளது.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் வேதியியல் துறையில் பேராசிரியராகப் பணியாற்றிவரும் திரு ஆ. மங்கலமுடையார் என்ற முருகனடியாரை இக்குமரன் தன்பால் ஈர்த்து ஆண்டு கொண்டுள்ளான். அவர் ஒவ்வொரு ஞாயிறும் பல அன்பர்களை இத்தலத்திற்கு அழைத்துச்சென்று குராவடிக்குமரன் பெருமைகளை எடுத்துச்சொல்லி தான்பெற்ற அருள் அனுபவங்களை அனைவருக்கும் வழங்கி வருகிறார். அவர் தொகுத்துள்ள 'இடர் களையும் இடைக்கழி முருகன்' என்ற நூல் சுவையானது

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்திலமைந்த இத் திருக்கோயிலுக்குத் திருப்பணிகள் செய்யவும், இராஜகோபுரம் புதியதாக அமைக்கவும் ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. அதில் நாமும் பங்கு கொண்டு இருவினையொடு மும்மலமும் இறவியொடு பிறவியும் நீங்கி இடர்களையும் இத்தலத்து அழகனைக் கண்டு வணங்கி திருவருளைப்பெற்று உய்வோமாக!



கோதண்டம்

சூலம்வாள் தண்டுசெஞ் சேவல்கோ தண்டமுஞ்
சூடுதோ ளுந்தடந் திருமார்பும்
தூயதாள் தண்டையுங் காணஆர் வஞ்செயுந்
தோகைமேல் கொண்டுமுன் வரவேணும்.

(பட்டீஸ்வரம் தேனுபுரீஸ்வரர் கோயில்) ([illegible]...[illegible])



சக்கிரப்பள்ளி முக்கணர் பெற்றருள் பெருமாள்.



கும்பகோணம் கார்த்திகேயர்
(ஆறுமுகம்–ஆறுகரங்கள்)

கோதைஇரு பங்கின் மேவவளர் கும்ப
கோணநகர் வந்த பெருமாளே
காலையில்எ ழுந்துன் நாமமெமொ ழிந்து
காதலுமை மைந்த எனவோதிக்
காலமும்உ ணர்ந்து ஞானவெளி கண்கள்
காண அருள் என்று பெறுவேனோ.

ஸ்ரீ ஆதிகும்பேஸ்வரசுவாமி கோயில்.



திருவலஞ்சுழி வாழ்வே தேவர்கள் பெருமாளே.

# வழுவூர்வாழ் வரதாமணி

......... ......... ......... ......... .........

*மருவூர்குளிர் வாவிகள் சோலைகள்*
*செலிசாலிகுலாவிய கார்வயல்*
*மகதாபத சிலமுமேபுனை வளமுதூர்*
*மகதேவர்பு ராரிச தாசிவர்*
*சுதராகிய தேவசி காமணி*
*வழுவூரில்நி லாவிய வாழ்வருள் பெருமாளே.*
*...தருவூரிசை......*

**அருணகிரிநாதர்.**

சிவபெருமான் அருளாடல்களுள் எட்டு வீரச்செயல்கள் தனிச் சிறப்புடையன. இவ்வீரச் செயல்களை நிகழ்த்தியருளிய தலங்கள் அட்டவீரட்டத்தலங்கள் எனப் போற்றப்படும். இவற்றுள் "யானை உரித்த பிரான்" என்று போற்றும் "கஜசம்ஹாரமூர்த்தி" யைச்சிறப்பு மூர்த்தமாகக் கொண்ட தலம் வழுவூர் ஆகும். "புரையுடைய கரியுரிவைப் போர்வை யானை" என்று திருநாவுக்கரசரும், "வடிவுடை மழுவேந்திமதகரி உரிபோர்த்து" என்று சுந்தரரும் போற்றிய இவ்வருளாடல் அவிமுத்தம் என்று போற்றப்பெறும் காசியில் நிகழ்ந்ததாகப் புராணங்கள் பேசிய போதிலும், வழுவூரிலேயே கண்டோர் வியந்து போற்றும் கஜசம்ஹாரப்பெருவிழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டுவருகின் றது. அட்டவீரட்டங்களுள் ஒன்றாக வழுவூர் வழங்கப்படு கின்றது.

முன்பொரு காலத்தில் கயாசுரன் என்ற யானைவடிவுடைய அசுரன் பிரம்ம தேவனிடம் வரம்பெற்று வானவர்களை வம்பிழுத்துத் தொல்லை மிகுவித்து வந்தான். தேவர்களனைவரும்

காசியிலுள்ளவிசுவநாதர் திருக்கோயிலில் புகுந்து பரமேசுவரனைப் பற்றிநின்றனர். அங்கும்வந்துவிட்டான்கயாசுரன்! சிவபெருமான் கயாசுரனை உதைத்து, அதன் தோலை உரித்து உமையும் அஞ்சும் படிப்போர்த்து வானவர் குறைநீக்கினார். இதனைக் கந்தபுராணம் ததீசியுத்தரப்படலத்தில் வரும் கீழ்க்கண்ட பாடல்கள் இனிது காட்டுகின்றன.

"மதித்து வேழமாந் தானவன் வருதலும் வடவை
யுதித்த வன்னியும் அச்சுற எரிவிழித் தொருதன்
கதித்த தாள்கொடு தள்ளவே கயாசுரன் கவிழ்ந்து
பதைத்து வீழ்தலும் மிதித்தனன் சிரத்தையோர் பதத்தால்.

ஒருப தத்தினைக் கவானுறு திருக்கரத் துகிரால்
வெறிநி டைப்பிளந் தீரிரு தாள்புடைமேவக்
குருதி கக்கியே ஓலிட அவுணர்தம் குலத்துக்
கரி உரித்தனன் கண்டுநின்று அம்மையும் கலங்க.

ஐயன் மிக்கதன் கதிரினைக் குருதி நீரளுத
மையல் யானைவன் தோலைமேற் கொண்டனன் மறைத்தான்
செய்ய கோளொடு கரியகோ ளிருவரும் செறிந்து
வெய்ய பானுவின் நடுவுறக் கவர்ந்து மேவியபோல்."

மாயூரம்-திருவாரூர் பேருந்துவழியில் நெய்க்குப்பையில் இறங்கி மேற்கில் 1 கி. மீ சென்று இத்தலத்தை அடையலாம். இருப்புப்பாதைவழியாகச்செல்லும்போது இலந்தங்குடியிலிருந்து 1 கி. மீ. தொலைவில இத்தலத்தைக் காணலாம்.

வழுவூர், வழுவை, ச்யுதபுரி, பரகயிலாயம், ஞானபூமி. வழுகூர், பிப்பிலாரணியம் என்ற பலபெயர்களைக்கொண்ட இத் தலம் பிரளயகாலத்தும் அழியாமல் வழுவியதால் வழுவூர் என்று ஆயிற்று என்பர்.

இத்தலத்தில் சிவபெருமான் சுயம்புமூர்த்தியாக வீரட்டேசு வரர்-கீர்த்திவாசேசுவரர் எனவும் இறைவி இளங்கிளைநாயகி எனவும் போற்றப்படுகின்றனர்.

முருகவேள் இத்தலத்தில் ஒருமுகமும் நான்கு திருக்கரங் களும் கொண்டு நின்றத்திருக்கோலத்தில் வள்ளி, தெய்வயானை யுடன் கிழக்குநோக்கி விளங்குகின்றார்.

காமிக, காரணாகம முறையில் நாடோறும் மூன்றுகால வழிபாடுகள் நிகழ்கின்றன.

இத்தலத்தில் பஞ்சப்பிரம்ம மகாபுண்ணிய தீர்த்தங்கள் உள்ளன. மேற்கில் சத்தியோஜாத தீர்த்தமும், வடக்கில் வாமதேவ தீர்த்தமும், கிழக்கில் தற்புருடதீர்த்தமும், தெற்கில் அகோர தீர்த்தமும் பெருமானுக்கும் நந்திக்கும் இடையே ஈசானம் அல்லது சிவபாதாள கங்கையும் உள்ளன. முகமோசனம், வித்யா தீர்த்தம், திரிவர்க்கம், ஞானம்ருதம் முதலிய தீர்த்தங்களும் உள்ளன. தலவிருட்சம்: வன்னி.

ஸ்கந்தனை இடுப்பில்கொண்டுவிளங்கும் உமை, கஜசம்ஹார மூர்த்தி, ஆலிங்கனமூர்த்தி, பிட்சாடனமூர்த்தி, மோகனித் திருவுருவங்கள் மிகச்சிறப்பாக உள்ளன. சிதம்பர ரஹஸ்யப் பிரதிஷ்டைபோலவே கஜசம்ஹாரமூர்த்திக்குப்பின்னால் யந்திர பிரதிஷ்டை உள்ளது.

சிவமகாபுராணம், ஈசானசம்ஹிதை, பாத்மபுராணம், ஸ்காந்தம் முதலிய வடமொழி நூல்கள் இத்தல மான்மியத்தை விவரிக்கின்றன. திருநாவுக்கரசர் வைப்புத்தலமாக இத்தலத்தைப் பாடியுள்ளார்.

"உஞ்சேனை மாகாளம் ஊறல் ஓத்தூர்
உருத்திரகோடி மறைக்காட்டுள்ளும்
மஞ்சார் பொதியின்மலை தஞ்சை வழுவூர் வீரட்டம்
மாதானம் கேதாரத்தும்
வெஞ்சமாக்கூடல் மீயச்சூர் வைகாவேதிச்சரம்
விசுரம் வெற்றியூரும்
கஞ்சனூர் கஞ்சாறு பஞ்சாக்கையும்
கயிலாய நாதனையே காணலாமே"

"காவிரியின் கரைக்கண்டி..." எனவரும் அப்பர் தேவாரப் பாடலிலும் வழுவூர் வீரட்டம் குறித்தல் காண்க.

அருணகிரிநாதர் இத்தல முருகனைத் "தருவூரிசை" எனத் தொடங்கும் திருப்புகழால் பரவினார்.

அமாவாசைதோறும் இங்கே தீர்த்தவாரி நிகழ்கிறது.

அருகில் பெரம்பூர், பெருஞ்சேரி முதலியதலங்கள் உள்ளன. அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது.

# தமனியப்பதி இளைய நாயகன்

*வயல்களிற் கயலினமீ குத்தெழு*
*வரம்பின் கண்பு ரண்டே*
*பெருக யற்கொடு சொரியு நித்தில*
*நிறைந்தெங் குஞ்சிறந்தே*
*வரிசை பெற்றுயர் தமனியப்பதி*
*யிடங் கொண் டின்புறுஞ்சீர் இளையநாயகனே!*

(விலையறுக்கவு...... திருப்புகழ்)

தமனியம் என்றால் பொன். தமனியப்பதி-பொன்னூர் எனப்பொருள்படும் போது இத்திருப்புகழ்த் தலத்தை நாம் அடையாளங் காண முடிகின்றது. தஞ்சை மாவட்டத்தில் மாயூரம்வட்டத்தில் நீடூர் இரயில் நிலையத்திற்கு மேற்கே 5 கி. மீ தொலைவில் இத்தலம் உள்ளது. இங்கே ஆபத்சகாயேசுவரர் திருக் கோயில் உள்ளது. இறைவி: பெரியநாயகியம்மை. இத்தல இறைவனைத் திருஞானசம்பந்தர் ஒரு பதிகத்தாலும், திருநாவுக் கரசர் ஒரு பதிகத்தாலும் போற்றியுள்ளனர். அக்கினி பூசித்ததால் அன்னியூர் என்று இத்தலப் பெயர் வந்தது; வருணன் பூசித்த சிறப்புடையது

இங்கே முருகன் ஒரு முகமும் நான்குகரங்களும் கொண்டு மயில் வாகனனாக இருதேவியருடன் விளங்குகின்றார்.

வருணதீர்த்தம், அக்கினிதீர்த்தம், சிவகங்கைதீர்த்தம் என்னும்புண்ணியப் புனல்கள் உள்ளன. தலவிருட்சம்: எலுமிச்சை.

தினமும் நான்குகால வழிபாடுகள் நடைபெறுகின்றன. கார்த்திகை, கந்தசஷ்டி சிறப்புநாட்களாகும்.

அருணகிரிநாதர் "விலையறுக்கவும்" எனத்தொடங்கும் திருப்புகழால் இத்தல முருகனைப் பரவியுள்ளார்.

இன்பம் வேண்டுவீர், அன்பன் அன்னியூர்
நன்பொன் என்னுமின், உம்பராகவே.

எனவரும் திருஞானசம்பந்தர் தேவாரப்படி அன்னியூர் இன்று பொன்னூர் என்று வழங்கப்படுகின்றது. இதற்குக் கந்தசாமி அடிகள் பாடிய தலபுராணம் உள்ளது என்பர்.

# புண்ணியப் குறுக்கைப் பெருமாள்

*பொன்னுலகினைப் புரக்குமன்ன நல்வ்ரதத்தை விட்ட*
*புன்மையர் புரத்ரயத்தர் பொடியாகப்*
*பொன்மலை வளைத்தெரித்த கண்ணுத லிடத்திலுற்ற*
*புண்ணிய குறுக்கையுற்ற பெருமாளே.*

**(மின்னினில்...திருப்புகழ்)**

சிவபெருமானது அட்டவீரட்டத் தலங்களுள் காமனைக் காய்ந்த வீரட்டத் தலம் திருக்குறுக்கையாகும். அருணகிரிநாதர் பரவிய "மின்னினில் நடுக்க" எனத் தொடங்கும் திருப்புகழின் இறுதியடியில் பாடபேதமாக "புண்ணிய குறுக்கையுற்ற பெருமாளே" என வருவதால் இது திருக்குறுக்கைத் திருப்புகழாக இருக்கலாம் என்று டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் அவர்களது குறிப்பினின்றும் கருத முடிகின்றது. இத்தலம் திருப்புகழ் வைப்புத் தலமாகவும் கொள்ளலாம். "நிறுக்குஞ்" எனத்தொடங்கும் திருசெந்தூர்த் திருப்புகழில் "குறுக்கை" வருகிறது.

சடுவனம், யோகீசபுரம், காமதகனபுரம், கம்பகரபுரம் முதலிய பல பெயர்களை உடைய இத்தலம், தீர்க்கவாகு முனிவர் இத்தலத்திறைவனை அபிடேகம் செய்யக் கங்கையை விரும்பித் தனது கரங்களை நீட்டக் கரங்கள் குறுகினமையால் குறுக்கை என்ற பெயர் கொண்டது என்பர். அரிதகிவனம், ஞானம்பிகை புரம் எனவும் தல புராணத்தில் இத்தலம் குறிக்கப் பெறும்.

**இறைவன்:** வீரட்டேசுவரர். **உற்சவர்:** யோகீஸ்வரர் (காமதகன மூர்த்தி). **இறைவி:** ஞானம்பிகை. **உற்சவர்:** பூரணி.

இத்தலத்தில் முருகப் பெருமான் ஒரு திருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடனும் விளங்குகின்றார்.

உற்சவ முருகன் வில்லேந்திய வேலவர்.

காரணாகம முறையில் தினமும் இரண்டுகால பூசை நிகழ்கின்றது. கந்த சஷ்டி, கார்த்திகைப் பெருவிழாச் சிறப்புடையன. மாசி மகத்தில் பிரம்மோற்சவம் நடைபெறும்.

கோயிலின் முன்பு சூல தீர்த்தம் உள்ளது. இத்தீர்த்தத்தின் பெருமையை உணராது கங்கையினை விரும்பி ஆகாயத்தில் தனது கரங்களை நீட்டியதால் தீர்க்கவாகுவின் கரங்கள் குறுகின என்று தல புராணம் பேசும். ஞானதீர்த்தம்-(பழவாறு) ஞான நதி எனவும் கூறப்படும். இது மற்றொரு புண்ணியப் புனல்.

தலவிருட்சம்: கடுக்காய் மரம். வீரட்டேசருக்குப் பின்னால் உள்ளது.

பிரமன், விஷ்ணு, தேவேந்திரன், இரதி, மன்மதன், காளி, துர்க்கை, லட்சுமி, முருகன், தீர்க்கவாகு, சயத்துவசன், அகத்தியர், முதலியோர் இத்தலத்தைப் பரவினர்.

திருநாவுக்கரசர் தேவாரப் பதிகம் இரண்டும் அருணந்தி சிவம் அருளிய 'கண்ணுதல்யோகி' எனத் தொடங்கும் பாடலும் இத்தலத்திற்குரியன.

21 கல்வெட்டுக்கள் இங்கே உள்ளன. திரிசிபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய தலபுராணம் உள்ளது. தருமையாதீன நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது. அருகில் நீடூர். திருவாளொளி புற்றூர் (திருவாளம்புத்தூர்) வைத்தீசுவரன் கோயில் முதலிய தலங்கள் உள்ளன.

காமனை எரித்த இடத்தில் மண் வெண்மையாய் விபூதி போலுள்ளது. கோயிலிலிருந்து 1 பர்லாங் தொலைவிலுள்ள அவ்விடத்தை விபூதிக் குட்டை என்பர். அம்மண்ணைத் திருநீறு போல் அணிய வினைகளும் பிணிகளும் நீங்குவது கண்கூடு.

மாயூரத்திலிருந்து சென்று பார்த்து வரவேண்டிய தலம் இது. மாயூரம்-மணல்மேடு-பஸ்ஸில்-கொண்டல மதகில் இறங்கி 2 மைல் நடந்து சென்று இத்தலத்தை அடையலாம். நீடூர் இரயில் நிலையத்திலிருந்து 8 கி. மீ. தொலைவிலுள்ளது இத்தலம்.

# வாகை மாநகர் வேலவன்

*வேலையாக வளைக்கை வேடர்பாவை தனக்கு*
*மீறுகாத லளிக்கு முகமாய*
*மேவுவேடை யளித்து நீடுகோல மளித்து*
*மீளவாய்மை தெளித்து மீதண்மீது*
*மாலையோதி முடித்து மாதுதாள்கள் பிடித்து*
*வாயிலூறல் குடித்து மயல்தீர*
*பாகுதோளி லணைத்துமாக மார்பொழிலுற்ற*
*வாகை மாநகர் பற்று பெருமாளே*

**(ஆலைபாவ...திருப்புகழ்)**

திருப்புகழில் வாகை மாநகர் எனவரும் தலம் எது என நீண்ட காலமாகச் சிந்தித்திருந்தபோது ஒரு தலமும் விளங்காத நிலையில் ஒருநாள் திருச்சிற்றம்பலம் பேரறிஞர் திரு. மு. அருணாசலம் அவர்களிடம் இதுபற்றி கேட்டபோது—குருவருளால் அண்ணாமலை வள்ளலே வந்து வழிகாட்டியது போல—வாகை மாநகர் பற்றிய குறிப்பினைத் தந்து ஒளி தந்தார்கள்.

வாகை மாநகர் என்ற பெயருடைய தேவாரத் தலம் திருவாளொளி புற்றூர் என்பது. அது தற்காலத்தில் திருவாளப்புத்தூர் என மருவி உள்ளது. மாயூரத்திலிருந்து பந்தணைநல்லூர் பஸ் வழியில் 16 கி. மீ. தொலைவில் இத்தலம் உள்ளது.

வாகை தலவிருட்சமாதலின் வாகைமாநகர் என்று இத்தல புராணம் பேசும். மகாவித்துவான் திரிசிபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளை தனது திருவாளொளி புற்றூர் தலபுராணத்தில் வாகை மாநகர் என்றே குறிப்பிடுகிறார்.

குககேது என்னும் சோழன் பொருட்டுச் சிவபெருமான் அரதனப் பாறையிலிருந்து தோன்றியதால் அரதனபுரம் எனவும் வாசுகி என்னும் மாநாகம் சிவபெருமானை வழிபட்டு உறைந்த புற்று உள்ளதால் புற்றூர் எனவும் பெயருடையது இத்தலம்.

தீர்த்தயாத்திரை செய்து வரும்போது அருச்சுனன் இத்தலம் வந்தான், நீர் வேட்கையுற்றான். முதிய அந்தணராக சிவபெருமான் அவன் முன் தோன்றி—ஒரு தண்டினைக் கொடுத்து. 'இதனை ஊன்றுமிடத்தில் தண்ணீர் தோன்றும்; அதனைப் பருகுக' என்றார். அருச்சுனன் தனது வாளினை அக்கிழவரிடம் கொடுத்து விட்டு நீர் பருகச் சென்றான். அவ்வாளினைப் புற்றில் ஒளித்து விட்டுச் சிவபெருமான் மறைந்தார். வாள் காணாது, சிவபெருமானிடம் அருச்சுனன் முறையிட்டான்.

*"மறங்கொண்ட இராவணற்கு வாள்கொடுத்தாய் முன்நாயேன்*
*நிறங்கொண்ட வாள்கவர்தல் நின்கருணைக் கழகோ*
*அறங்கொண்ட மலர்வாகை, அரதன மாநகர் மேவும்*
*நிறங்கொண்ட மாணிக்க நின்மல நாயக என்றான்"*

என்று பிள்ளையவர்கள் இத்தல புராணத்தில் இச்செய்தியை காட்டுவார்.

இங்கே சிவபெருமான். இரத்னபுரீசர் – சுயம்புலிங்கம். இறைவி: வண்டார் பூங்குழலி (வண்டமர் பூங்குழல் நாயகி) சம்பந்தரும் சுந்தரரும் பாடிப் பரவிய தலம் இது–திருமால் மாணிக்கத்தை வைத்துப் பூசித்ததால் மாணிக்க வண்ணர் என்ற பெயர் இத்தலத்திறைவன் பெற்றார்.

இத்தலத்தில் முருகப்பெருமான் சிறப்பாக விளங்குகின்றார் இருதேவியருடன் தினமும் நான்குகால வழிபாடுகள் நிகழ்கின்றன சண்டதீர்த்தம், ஐயன் தீர்த்தம், சக்கர தீர்த்தம் பிரம்ம தீர்த்தம் முதலியன உள்ளன.

வைகாசி விசாகம், கார்த்திகை, தீபவிழா, கந்தசஷ்டி, பங்குனி உத்திர விழாக்கள் சிறப்பானவை.

சுப்ரமணியரும் துர்க்கையும் சிற்பச் சிறப்பு மிக்கவை. அறநிலைய ஆட்சித் துறையினரால் இத்தலம் நிர்வகிக்கப் படுகிறது.

மாயூரத்திலிருந்து சென்று வழிபடுவது விரும்பத்தக்கது.

# திருப்படிக்கரைத் தமிழ்ப்பெருமாள்

*முன்னவன் எங்கள் பிரான் முதல் காண்பரிதாய பிரான்*
*சென்னியில் எங்கள் பிரான் திருநீலமிடற்றெம்பிரான்*
*மன்னிய எங்கள் பிரான் மறைநான்கும் கல்லா நீழற்கீழ்ப்*
*பன்னிய எங்கள் பிரான் பழமண்ணிப் படிக்கரையே.*

— சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

தற்காலத்தில் இலுப்பைப்பட்டு என அழைக்கப்படும் இத்தலம் பண்டைக்காலத்தில் மண்ணியாற்றின் படிக்கரையில் இருந்தமையால் மண்ணிப்படிக்கரை என்றும் திருப்படிக்கரை என்றும் பெயர் பெற்றிருந்தன. ஆனல் சுந்தரமூர்த்திசுவாமிகள் காலத்தில், மண்ணியாறு கோயிலுக்கு அப்பால் தொலைவில் அகன்று ஒதுங்கி விட்டது போலும்! ஆதலின் அவர் பழமண்ணிப் படிக்கரை என்று பாடியருளினர். இலுப்பைமரம் தலவிருட்சமாதலின் இலுப்பைப்பட்டு என்றபெயர் இன்றும் நிலைத்து விட்டது!

மாயூரத்திலிருந்து மணல்மேடு சென்று அங்கிருந்து பாப்பாகுடி வழியில் 1 கல் சென்றுல் இத்தலத்தை அடையலாம். வைத்தீஸ்வரன் கோயிலிலிருந்தும் பஸ்வசதி உண்டு. அங்கிருந்து மேற்கே 6 கல் தொலைவில் இத்தலம். சிவபெருமான் திருப்பெயர் நீலகண்டேசுவரர்; இறைவி: அமுதகரவல்லி. தருமபுத்திரர் இவரைவழிபட்டுப் பேறுபெற்ருர். மற்றும் படிக்கரைநாதர் என்ற பெருமான், மங்கலநாயகியுடன் விளங்குகின்ருர். இவர்

அருச்சுனரால் வழிபடப்பெற்றவர். பீமன் பூசித்த மகதீசரும் நகுலன் பூசித்த பரமேசரும், சகாதேவன் பூசித்த முத்தீசரும் இத்தலத்தில் விளங்குகின்றனர். பாண்டவர்கள் இங்கே தங்கி வழிபட்டநாளில், துரியோதனன் இங்குள்ள தீர்த்தத்தில் விஷத்தைக்கலந்து அவர்களைக் கொல்லத்திட்டமிட்டான். அம்பிகை தனது திருக்கரத்தில் உள்ள அமுதத்தால் தீர்த்தத்தில் விஷத்தை முரித்துவிட்டாள். இறைவன் விஷத்தை உண்டார். ஆதலால் இறைவன் நீலகண்டேசுவரர், இறைவி அமுதகரவல்லி யாயினர். இங்கே வடக்கு பிராகாரத்தில் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு நின்றதிருக்கோலத்தில் கிழக்குநோக்கி முருகவேள் எழுந்தருளியுள்ளார். இருபுறமும் தேவியர் இருவரும் விளங்குகின்றனர்.

உற்சவமுருகன் வில்லேந்திய வேலனாகத்திகழ்கின்றார்.

தினமும் நான்குகால வழிபாடு காமிகாகம முறைப்படி நிகழ்கின்றது. சித்திராபௌர்ணமிவிழாச் சிறப்புடையது.

பிரம்ம தீர்த்தம் (நச்சுப் பொய்கை, அமுதபுட்கரணி), மண்ணியாறு, கொள்ளிடம் ஆகியவை இத்தலப்புண்ணியப் புனல்களாகும். பிரமன், திருமால், இந்திரன், நளன், பாண்டவர் முதலியோர் வழிபட்ட இத்தலத்தில் அருணகிரிவள்ளல் ஆறு முகனை வழிபட்டுப் பாடினார். இங்கே இவரது கனவில் முருகவேள் ஒருமுகத்துடன் கழலும், கடப்பமாலையும், வேலும் விளங்க, மயில்மிசைத்தோன்றித் "திரிசிராப்பள்ளிக்கு அருகில் உள்ள மேலைவயலூர் எனவழங்கும் செய்ப்பதியில் உள்ளோம். நமது திருப்புகழை நித்தம்பாடும் அன்பை உனக்கு அவ்வயலூரில் அருளுவோம். நீ அங்கு வந்து சேருக"-எனக் கட்டளையிட்டு மறைந்தார் போலும்! அருணகிரிநாதர் விழித்தெழுந்து, 'கனவி லாள் சுவாமீ நின்மயில்வாழ்வும்; கருணை வாரிகூர் ஏகமுகமும், வீரம்மாறுத கழலும் நீப வேல்வாகும் மறவேனே, மேலைவயலி மீது வாழ்தேவர் பெருமாளே' எனப்போற்றி, 'பெருமானே! நீ அடியேற்குப் புலப்பட உரைத்த வயலூர் பதியை என்று காண்பேன்! உன் திருப்புகழை நித்தம்பாடும் பாக்கியத்தை என்று பெறுவேன்!' என உள்ளம் உருகி இத்தலத்திருப்புகழில்

"......... செய்ப்பதித்தலத்தி னைத்துதித்
துணைத்திருப்புகழ்ப் பகர்வேனோ
......... ......... ......... திருமாமன்
திருத்தகப்பன் மெச்சொருத்த முத்தமிழ்த்
திருப்படிக்கரைப் பெருமாளே."

(அருக்கிமெத்தெனச்...)

என்று போற்றுகின்றார்.

மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம்பிள்ளை இயற்றிய தலபுராணம் உள்ளது.

திருவாவடுதுறை யாதீனத்தின் அருளாட்சியிலுள்ள இத் திருக்கோயில் தற்போது திருப்பணி கண்டு வருகின்றது. இங்கே விடுதி வசதிகள் ஏதும் இல்லை.

# திருத்துருத்தி மேவிய ஒருத்தன்

*உன்னி எப்போதும் நெஞ்சுள் ஒருவனை ஏத்துமின்றே*
*கன்னியை ஒருபால் வைத்துக் கங்கையைச் சடையில் வைத்துப்*
*பொன்னியின் நடுவு தன்னுள் பூம்புனல் பொலிந்து தோன்றும்*
*துன்னிய துருத்தியானைத் தொண்டனேன் கண்டவாறே.*

—திருநாவுக்கரசர்.

ஆறுமுகப்பெருமான் அருணகிரிவள்ளலை ஆட்கொண்டு அற்புதத் திருப்புகழ் பாடுமாறு ஆணையிட்டதைக்காட்டும் வரலாற்றுத் திருப்புகழ்ப்பெற்ற இத்தலம் சுந்தரமூர்த்திசுவாமிகளது நோய் நீக்கிய சிறப்பும் கொண்டு விளங்குகின்றது. மாயூரம் - கும்பகோணம் பஸ்/இரயில் வழிகளில் இத்தலத்தை அடையலாம். தற்போது இத்தலம் குத்தாலம் என அழைக்கப்படுகின்றது.

ஆற்றிடைக்குறையில் அமைந்துள்ள இடம் துருத்தி எனப் படும். உத்தாலமரம் தலவிருட்சமாதலால் குத்தாலம் என மருவி இத்தலம் அழைக்கப்பெறுகின்றது.

இங்கே தருமபுர ஆதீனத்துக்குச் சொந்தமான மேற்கு நோக்கிய உத்தவேதீசுவரர் (சொன்னவாறறிவார்)திருக்கோயில் உள்ளது. அம்பிகை: அரும்பன்னவனமுலையாள் (அமிர்த முகிளாம்பிகை). இத்தலத்தில் ஆறுமுகப்பெருமான் அற்புதக் கோலங்கொண்டு அருணகிரிநாதரைக் கவர்ந்ததில் வியப்பில்லை.

ஆறுமுகங்களும் பன்னிருகரங்களும் கொண்டு மயிலின்மீது அமர்ந்தகோலம்; மயிலின்முகம் வடக்குநோக்கி உள்ளது. இடதுகாலை மடித்து வலதுகாலைத் தொங்கவிட்டநிலையில் வேலவப் பெருமான் விளங்குகின்றார். முருகவேள் மயிலின் மீதமர்ந்து

நமக்கு நேரே வருவது போன்று அழகொழுகும் அளப்பரிய தோற்றம். அருகில் வள்ளியும், தேவயானையும் விளங்கு கின்றனர்.

தினமும் 6 காலவழிபாடு காரணாகம முறையில் நிகழ் கின்றது. கார்த்திகை, கந்தசஷ்டி விழாக்கள் சிறப்பானவை.

தீர்த்தங்கள்: காவிரி, சுந்தரதீர்த்தம், (பதுமதீர்த்தம்) திருஞானசம்பந்தர் ஒருபதிகமும், வேள்விக்குடியுடன் இணைந்து பாடியருளிய மற்றொருபதிகமும், திருநாவுக்கரசர் ஒருபதிகமும், சுந்தரர் ஒருபதிகமும் திருவாசகப்பாடலும் இத்தலப்பெருமை சாற்றுவன. சுந்தரர் நோய்நீக்கிய திருக்குளமும் அதனருகில் சுந்தரர் தனிக்கோயிலும் கண்டு தொழவேண்டும்.

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளை பாடியதலபுராணம் உள்ளது.

இத்தலச்சிறப்புக்களாக-உமையம்மையார் பூசித்துச் சிவபெருமானைத் திருமணம் செய்துகொண்டது, அக்கினிப்பழி நீங்கப்பெற்றது, விக்கிரமச்சோழன்மனைவி கோமளையின் குட்டம் நீங்கியது, வருணனது சலோதர நோய்நீங்கியது, காமன் வழிபட்டது, காளி காவல் புரிவது, காசிபன், ஆங்கிரசன், கௌதமன், மார்க்கண்டன், வசிட்டன், புலத்தியன், அகத்தியன் முதலியோர் வழிபட்டது, சிவபக்தன் ஒருவனுக்குக் காசநோய் நீங்கியது. சூரியன் வழிபட்டது முதலியன கூறப்படுகின்றன.

இத்தலத் திருப்புகழ் "மலைக்கனத்தென" எனத்தொடங்கு கின்றது. இதில் "அடைக்கலப்பொருளாமென நாயெனை அழைத்து முத்தியதாம் அநுபூதி என் அருள் திருப்புகழ் ஓதுக வேல்மயில் அருள்வோனே" என்று அருணகிரிவள்ளல் கூறும் பகுதி சிந்தித்தற்குரியது.

இத்தலத்தில் வழிபடுவோர் விடுதி இல்லை. உணவு வசதிகள் உள்ளன. இத்தலத்தைச்சுற்றி திருவாவடுதுறை, தென்குரங்காடு துறை, திருக்கோடிகா, சூரியனார்கோயில், கதிராமங்கலம். திருமணஞ்சேரி, வேள்விக்குடி, திருவாலங்காடு, பந்தணைநல்லூர் முதலிய தலங்கள் உள்ளன. பஸ்வசதி உள்ளது.

## ஆவடுதுறை அயிலவன்

*இடரினும் தளரினும் எனதுறு நோய்*
*தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்*
*கடல்தனில் அமுதொடு கலந்தநஞ்சை*
*மிடறினில் அடக்கிய வேதியனே*

*இதுவோ எமை ஆளுமாறு ஈவதொன்று எமக்கில்லையேல்*
*அதுவோ உனது இன்னருள் ஆவடுதுறை அரனே!*

—திருஞானசம்பந்தர்.

தஞ்சை மாவட்டத்தின் சிவராஜதானியாகத் திகழ்வது திருவாவடுதுறை. மூவாயிரம் ஆண்டுகள் மோனத்தவம் இருந்து திருமூலர் திருமந்திரம் அருளிச்செய்த தலம் இது. கோமுத்தி, கோகழி, திருவாவடுதுறை (திரு ஆ + அடு + துறை), பூகயிலாயம், நந்திநகர், தியாகபுரம், போதிவனம், அரசவனம், மகாதாண்டவபுரம், வேதபுரம், சித்தபுரம், நவகோடி சித்தபுரம், முத்திக்ஷேத்திரம், சிவபுரம் என்று பல்வேறு சிறப்புக்களைக் கொண்ட இத்தலம் கும்பகோணத்திலிருந்து மாயூரம் செல்லும் சாலையில் 12 கல் தொலைவிலுள்ளது. மாயூரத்திலிருந்து 10 கல். இருப்புப் பாதை வழியில் வந்தால் நரசிங்கன்பேட்டை நிலையத்திலிறங்கி ஒரு கல் கிழக்கே வரவேண்டும்.

இத்தலத்தில் அம்பிகை பசுவடிவிலிருந்து பெருமானை வழிபட்டு தன்சுயவடிவம் பெற்றதால் ஆ + அடு + துறை என்ற பெயர் வந்தது. மாசிலாமணீசுவரர், கோமுத்தீசுவரர் என்று சிவபெருமான் போற்றப்படுகிறார். சுவயம்வியக்தேசுவரர், பிரகாசமணிநாதர், கோகழிநாதர், அணைத்தெழுந்தநாயகர், பூகயிலாசேசுவரர், புத்திரத்தியாகர், போதிவனநாதர், போதியம்பலவாணர், மகாதாண்டவேசுவரர், அர்த்தத்தியாகர்,

முத்தித்தியாகர், சிவலோகநாயகர் என்றெல்லாம் இங்கே சிவ பெருமான் வழிபடப்பெறுகிறார்.

இறைவி: அதுலகுசநாயகி-ஒப்பிலாமுலையம்மை, ஒப்பிலாளி. இங்கே இருவிநாயகர் உள்ளனர். அம்பிகை பசு வடிவம் கொண்டபோது துணை வந்த விநாயகர், திருக்கோபுர வாயிலுக்குத் தென்பால் கோயில் கொண்டுள்ளார். மற்றொருவர் ஸ்ரீஅழகியவிநாயகர். இவர் அகத்தியருக்கு இத்தலத்தில் பஞ்சாக்கர உபதேசம் செய்தவர். தட்சணாமூர்த்தி சந்நிதியின் கீழ்பால் இவர் விளங்குகிறார்.

இங்கே முருகவேள் ஒரு முகமும் நான்கு திருக்கரங் களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் இருதேவியர் புடை சூழ கிழக்குநோக்கி எழுந்தருளியுள்ளார். காமிகாகம முறையில் நாடோறும் இருகால வழிபாடுகள் நிகழ்கின்றன.

இத்தலத்தில் திருக்கோயிலின் முன்புள்ள கோமுத்தி தீர்த்தமும் காவிரியில் கைவல்லிய தீர்த்தமும் கொங்கணேசுவரர் கோயிலின் பக்கத்தில் பத்மதீர்த்தமும் உள்ளன.

தலவிருட்சம் படர் அரசு. திருமூலர் தவமிருந்த இடம்.

இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்றும், திருநாவுக்கரசர் பதிகம் ஐந்தும், சுந்தரர் பதிகம் இரண்டும், சேந்தனார் திருவிசைப்பாப் பதிகம் ஒன்றும் திருவாசகப் பகுதி களும் திருமந்திரப் பாடல்களும் உள்ளன. அருணகிரிநாதர் "சொற்பிழை வராமல்" என்ற திருப்புகழால் இத்தல முருகனைப் பரவியுள்ளார். "மிக்க திருவாவடு நற்றுறைக்குட் செழித்த பெருமாளே" என்று இத்திருப்புகழ் முடிகின்றது. சிலரது கருத்துப்படி 'சோதிமாமதி" என்று தொடங்கும் திருப்புகழும் இத்தலத்திற்குரியதே என்று கொள்ள இடமுண்டு. "மாசிலா மணியீசர் மகிழ்ந்தருள் பெருமாளே" என முடியும் இத்திருப் புகழ் திருமுருக கிருபானந்த வாரியார் பதிப்பில் வடதிருமுல்லை வாயிலுக்குரியதாகச் சேர்க்கப்பட்டுள்ளது.

இத்தலத்தின் மாண்பினை 2600 பாடல்களில் சாஸ்திரம் ஸ்ரீசாமிநாதமுனிவர் இயற்றியுள்ள தலபுராணம் இனிது பேசு கின்றது. அது அச்சில் இல்லை. திருவாவடுதுறை யாதீனத்தை நிறுவிய பஞ்சாக்கர தேசிகர்சமாதியும், திருமாளிகைத் தேவர் கோயிலும் ஆதீனத்தலைமையகமும் இக்கோயிலும் தமிழகத்தின்

சைவ வளர்ச்சியினைப் பயிலுவோர்க்குப் பல அரிய செய்திகளை அளிக்கும்நிலையங்களாகும். திருவாவடுதுறையாதீன முனிபுங்கவர்கள் இத்தலப் பெருமானைப் பலப்படபாடிப் பரவியுள்ளார். அவற்றுள்ளும் மாதவச்சிவஞான முனிவரது மாணாக்கருள் ஒருவரான தொட்டிக்கலை ஸ்ரீமதுர கவி சுப்பிரமணியமுனிவர் இயற்றிய துறைசைக்கோவையும் திருவாவடுதுறையாதீன மகா வித்வான் திரிசிரபுரம் ஸ்ரீமீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்களியற்றிய துறைசையமக அந்தாதியும், இராயசம் பொன்னுசாமி செட்டியார் இயற்றியதுறைசைச் சிலேடை வெண்பாவும் குறிப்பிடத்தக்கன. துறைசைப் புராணவசனமும் ஆதீன வெளியீடாகவந்துள்ளது. சைவமும் தமிழும் வளர துறைசையாதீன முனிவர்கள் பெருந் தொண்டாற்றி வந்துள்ளனர் என்பதையும் ஈண்டு குறிப்பிட வேண்டும்.

இக்கோயில் திருவாவடுதுறை யாதீனத்தின் நிர்வாகத்தில் உள்ளது. மகப்பேறு கருதிவந்த முசுகுந்தச்சக்கரவர்த்திக்கு இத்தலத்தைத் திருவாரூராகவும் தம்மைத் தியாகேசுவரராகவும் காட்டிப் புத்திரப்பேறு அளித்தார் சிவபெருமான். ஆதலின் இங்கு சிவபெருமான் புத்திரத்தியாகராக விளங்குகின்றார்.

திருஞானசம்பந்தர் தம் தந்தையார் செய்ய விழைந்த சிவவேள்விக்கு இங்கே சிவபெருமானிடம் ஆயிரம்பொன் பெற்ற வரலாற்றைப் பெரியபுராணம் இனிது காட்டும்.

இத்தலக் கல்வெட்டுக்கள் பல அரிய செய்திகளைக் குறிப்பிடுகின்றன. கோச்செங்கட்சோழ நாயனார் திருப்பணி பெற்ற தலங்களுள் இதுவும் ஒன்றாகும்.

இத்தலத்தருகில் தென்திருவாலங்காடு, திருக்கோடிக்காவல், கஞ்சனூர், தென்குரங்காடுதுறை முதலிய தலங்கள் உள்ளன.

மாயிரு ஞாலமெல்லாம் மலரடி வணங்கும் போலும்
பாயிருங் கங்கையாளைப் படர்சடை வைப்பர் போலும்
காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க் கம்பொன்
ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடுதுறையனாரே.

—திருநாவுக்கரசு நாயனார்.

## அருள்செறி பந்தணையின் அரசு

*முற்றுமதிச் சடையார் மூவரானார்*
*மூவுலகு மேத்தும் முதல்வரானார்*
*கற்றார் பரவும் கழலார் திங்கள்*
*கங்கையாள் காதலார் காம்பேய்தோளி*
*பற்றும் பாகத்தார் பால்வெண்ணீற்றார்*
*பான்மையர் ஊழி யுலகமானார்*
*பற்றார் மதிலெரித்தார் பைங்கணேற்றார்*
*பலியேற்றார் பந்தணை நல்லூராரே.*

— திருநாவுக்கரசர்.

கும்பகோணத்திலிருந்து 18 கல் தொலைவிலுள்ளது இத் தலம். குத்தாலத்திலிருந்து 6 கல். இத்தலத்திற்குக் கிழக்கில் திருக்கோடிக்காவல், கஞ்சனூர் ஆகிய தலங்களும், தெற்கில் திருவாவடுதுறையும் தென் மேற்கில் திருப்பனந்தாளும் அமைந்துள்ளன.

தென்கயிலை, கோவூர், கொன்றைவனம், பானுபுரம், விஷ்ணுபுரம், இந்திரபுரி, கண்ணுவராச்சிரமம், வாலிநகர், அன்னமிடும் மெய்ப்பேரூர், கந்துகபுரி, ஆவூர் என்பன இத் தலத்தின் வேறு பெயர்களாகும்.

இங்கே சிவபெருமான் பசுபதீஸ்வரர் எனவும், இறைவி வேணுபுஜாம்பிகை (காம்பனதோளி) எனவும் போற்றப் பெறுகின்றனர்.

இறைவி பந்தாடுதலில் ஈடுபட்டு இறைவனை அவ மதித்ததால் சாபம் பெற்றுப் பசு வடிவில் இத்தலத்தில்

தவமியற்றி உய்ந்த தலம். இங்கு திருமால் இடையராக வந்ததாகத் தலமான்மியம் கூறும். இறைவியை இறைவன் திருமணங்கொண்டு கண்ணுவ முனிவருக்குக் காட்சியருளினார்.

காம்பிலி மன்னன் பூபதி சூடாமணியின் மைந்தன் பிறவிக் குருடாயிருந்து இங்கே வழிபட்டுப் பார்வை பெற்றுப் பசுபதி எனப் பெயரிடப் பெற்றான். ஓர் பசுவைக் கொன்ற மறையவன் குட்டரோகமுற்று இங்கே வழிபட்டு உய்ந்தான். காம்போச மன்னன் காந்தனும் இங்கே வழிபட்டுத் தன் நோய் நீங்கப் பெற்றான். வித்யாவதி என்ற விலைமகளும், வீரதுரந்தரன் என்னும் துளுவ மன்னனும் இங்கே வழிபட்டுப் பேறுபெற்றனர்.

கோயிலின் முன்பு சூரிய தீர்த்தம் சிறப்பாக உள்ளது. தலவிருட்சம்: சரக்கொன்றை.

இத்தலத்தில் ஆறுமுகப் பெருமானாகப் பன்னிரு கரங் களுடன் மயில்மீது அமர்ந்து இரு தேவியரும் விளங்கக் கிழக்கு நோக்கி முருகவேள் விளங்குகின்றார். உற்சவ மூர்த்தி ஒரு திரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு விளங்குகின்றார்.

முருகவேளுக்குத் தினமும் காரணாகம முறைப்படி இரண்டு கால வழிபாடுகள் நிகழ்கின்றன. மாதக் கார்த்திகை சிறப் புடையது. கந்த சஷ்டியும் திருக் கார்த்திகையும் சிறப்பு விழாக்கள்.

இத்தலத்திறைவனைத் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் இருவரும் பதிகம் பாடிப்பரவியுள்ளார். வடலூர் இராமலிங்கரும் இவ்விறைவனைக் குறிப்பிட்டுள்ளனர். திருப்பட்டீச்சரம் மௌன குருசாமிகள் அருளிய பதிகங்கள் இரண்டும் உள்ளன.

அருணகிரிநாதர் இத்தல முருகனை ஏழு திருப்புகழ்ப் பாடல்களால் பரவியுள்ளார். கந்துகம் என்றால் பந்து என்பதால் இத்தலத்தைக் கந்துகாபுரி எனப்பெயரிட்டுப் போற்றியுள்ளார். இத்தலத் திருப்புகழுள் "கெண்டைகள்" எனத் தொடங்கும் பாடலில்

*சந்ததமும் வந்தீரும் பரிமளப்*
*பங்கய பதங்கள்என் கொடுவினைச்*
*சஞ்சல மலங்கெடும் படியருள்புரிவாயே*

எனவேண்டுவார். "தேனிருந்த" என்ற பாடலில் தோகை

மடவாருடன் இன்புறும் போதும் "கமலபாதமும் புயமீராறு மிந்துள பல் தோடலங்கலணி மார்பமும் பரிவுளங்கொள்வேனே" என்று பேசுவார். "மதியஞ்சத்திரு" என்ற பாடலில்

"நதிமிஞ்சச் சடைவிரிந்த நாயகன்
உமையன்பிற் செயும்மிகுந்த பூசனை
நலமென்றுட் குளிர்சிவன் பராபரன் அருள்பாலா
நவகங் கைக்கிணை பகர்ந்த மாமணி
நதிபங்கிற் குலவுகந்து காபுரி
நகர்பொங்கித் தழையவந்து வாழ்வுறுமுருகோனே"

என்று போற்றுவார். இப்பாடலில் "நான் உனைநிகர் சந்தத் தமிழ் சொரிந்து பாடவும் அருள் தாராய்" என வேண்டினார். "இதசந்தன" எனத் தொடங்கும் திருப்புகழில்

பணமுண்டென தவலம்படு நினைவுண்டிடை சோர
இதுகண்டவர் மயல்கொண்டிட மனமும் செயல்மாற
பகலுஞ்சில இரவுந்துயில் சில வஞ்சகர் மாயைத்
துயர்தீராய்

என இறைஞ்சுகின்றார். "இருவினையஞ்ச" எனத்தொடங்கும் திருப்புகழில்,

"திருமுக சந்த்ர முருக கடம்ப
சிவசுத கந்த குகவேல
சிவசிவ என்று தெளிவுறு நெஞ்சு
திகழ நடஞ்செய் கழல்தாராய்

என்று திருவடி வேண்டி நிற்கின்றார். "எகினினம்" எனத் தொடங்கும் திருப்புகழில் "கரி நெடும்புலி தோலுடையார், எனை அடிமை கொண்ட சுவாமி சதா சிவ கடவுள் எந்தையர்" என்று சிவபிரான் தம்மை அடிமையாக ஆட்கொண்டதைக் காட்டுகின்றார். "கும்பமுநிகர்த்த" என்னும் திருப்புகழில்

"வண்கயிலை சுற்றி வந்திடு பதத்தை
வந்தனை செய் புத்தி தருவாயே

என வேண்டுகின்றார்.

இக்கோயிலைச் சுற்றியஅமைப்புக் கோட்டைக் கொத்தளங் களை நினைப்பூட்டுகின்றன. இரும்புக்குண்டுகள் கிடைத்துள்ளன. சிவன் கோயில் வடக்குப் பார்த்த சந்நிதியும், கோயிலுள்ளேயே பெருமாள்கோயில் விளங்குவதும் இங்கே சிறப்பு அம்சங்கள் ஆகும்.

ஆதிகேசவப் பெருமாள், கண்ணுவர், வாலி, இந்திரன் பிரமன், சூரியன் முதலியோர் வழிபட்டுய்ந்த இத்தலம் கல் வெட்டுச் செய்திகளையும் மிகக் கொண்டு விளங்குகின்றது. இராசராச நாடகம் பற்றியும், பழைய கல்வெட்டுக்களைத் திருப்பணி செய்யுங்காலத்து மீண்டும் வெட்டி வைப்பது பற்றியும் இங்கே காண்கிறோம்.

அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தின் கீழ் விளங்கும் இத்தலத்தில் பசுபதீசுவரருக்கு மாசிமகப் பெரு விழாவும் ஆதிகேசவப் பெருமாளுக்குப் பங்குனி உத்திரப் பெரு விழாவும் சிறப்பாக நிகழ்கின்றன.

## பனந்தாள் உற்றருள் கந்தன்

சூழ்தருவல் வினையும் உடல்தோன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேல் மிகஏத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் அனல்பொங்கரவும் புனைந்த
தாழ்சடை யான்பனந்தாள் திருத்தாடகை யீச்சரமே.

– திருஞான சம்பந்தர்.

இறைவன் அடியார்க்கு எளியன். ஆணவமும் அதிகார மமதையும் உடையவர்களுக்கு அவன் அரிதானவன். ஒரு சிறு பெண்சிவபிரானது இலிங்கத் திருமேனிக்கு மாலை சூட்டி வணங்க விரும்பினாள். அதற்காக இலிங்கமே சாய்ந்து கொடுத்து அம் மலரஞ்சலியை ஏற்றுக் கொண்டது. அவ்விலிங்கம் சாய்ந் திருப்பது கண்டு அதனை நேராக நிமிர்த்த வேண்டி மன்னன் முயன்றான். அவனது படைகள் அனைத்தையும் கொண்டு இலிங்கத்தை நிமிர்த்த எத்தனித்தான். யானைகளைக் கட்டி இழுத்தனர். ஆனால் உடற்பலமும் செல்வச் செருக்கும், அதிகார மிடுக்கும், ஆண்டவனிடம் என்ன செய்ய முடியும் அவர் சாய்ந்த வண்ணமே இருந்தார். அரசனோ பெரிதும் கவலையுற்றான். அக்காலத்தில் திருக்கடவூரில் குங்குலியக் கலய நாயனார் சிவபெருமான் திருவருளால் செல்வ நலமெய்திப் பணி செய்து வந்தார். கலயனார் இச்சிவலிங்கம் சாய்ந்திருப்பதை யும் மன்னர் நிமிர்த்த முயல்வதையும் கேள்வியுற்று, அரசனுக்கு உதவ வந்தார்.

காதலால் அரசன் உற்ற வருத்தமும் களிற்றினோடும்
தீதிலாச் சேனைசெய்யும் திருப்பணி நேர்படாமை
மேதினி மிசையே எய்த்து வீழ்ந்திளைப் பதுவும் நோக்கி
மாதவக்கலயர் தாமும் மனத்தினில் வருத்தம் எய்தி

சேனையும் ஆனைபூண்ட தேரும் எய்த்தெழாமை நோக்கி
யானும்இவ் விளைப்புற் றெய்க்கும் இதுபெற வேண்டும்என்று
தேனலர் கொன்றையார்தம் திருமேனிப் பூங்கச் சேய்ந்த
மானவன் கயிறுபூண்டு கழுத்தினால் வருந்தலுற்றார்.

நண்ணிய ஒருமை அன்பின் நாருறுபாசத் தாலே
திண்ணிய தொண்டர்பூட்டி இளைத்தபின் திறம்பிநிற்க
ஒண்ணுமோ? கலயனார்தம் ஒருப்பாடு கண்டபோதே
அண்ணலார் நேரே நின்றார் அமரரும் விசும்பில் ஆர்த்தார்.

தன் கழுத்திலும் இலிங்கத்திலுமாகச் சேர்த்துக் குங்குலியக் கலயனார் பக்தி என்னும் கயிறுடன் இணைத்து இழுத்தால் இறைவனால் சகித்துக் கொள்ள முடியாதன்றோ! கலயனாரது பக்தி இலிங்கத்தை நேராக நிமிர்த்தியது என்கிறார் சேக்கிழார் சுவாமிகள் இப்புராண விரிவைப் பெரிய புராணத்தில் சுவைத்து இன்புறலாம்.

இந்நிகழ்ச்சி நடைபெற்ற தலத்திற்கு நாம் இப்போது வந்துவிட்டோம். இதோ! திருப்பனந்தாள் அருணஜடேசுவரர் (செஞ்சடையப்பர்) திருக்கோயிலுக்குள் நிற்கிறோம். சிவபெருமான் தாடகையீசன், தாலவனநாதர் செஞ்சடையப்பர் என்று போற்றப் படுகிறார். மாலை சூட்டிவணங்கிய பெண் தாடகை, அவளுக்கருளிய ஈசன், இவள் இராமாயணத் தாடகை அல்லள். திருப்பனந்தாளில் இருந்த ஒரு பெண் அணங்கு அவளுக்கு 16 கரங்களை இறைவன் அருளினான் என்பதை ஒரு சிற்பம் காட்டுகின்றது. இத்தலத்திறைவி: பெரியநாயகி (பிரஹந்நாயகி), பெரிய பெருமாட்டி, தாலவன நாயகி என்று போற்றப் பெறுகிறாள். பாலாம்பிகை என்ற பெயர் கொண்ட இத்தலத்திறைவி பெரியநாயகி இறைவனிடம் ஞானோபதேசம் பெற்ற பிறகு பெரியநாயகியாயினள் என அறிகிறோம்.

இத்தலத்தில் முருகவேள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு மயிலின் அருகில் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். இரு புறமும் தேவிமார் விளங்குகின்றனர். அழகான திருவுருவம் இது இத்தலத்தில் இரு உற்சவ முருகவேள் வடிவங்கள் உள்ளன. 1. தேவிமார் இருவருடன் நின்ற திருக்கோலத்தில் மயிலருகில் நிற்கும் திருவுருவம். 2. முத்துக்குமார சுப்பிரமணியன் இரு தேவியருடன் விளங்குகின்றார். அருகில் மயில் இல்லை.

முருகனுக்கு காரண, காமிகாகம முறையில் இருகால வழிபாடுகள் நிகழ்கின்றன. மாதக் கிருத்திகை சிறப்புடையது கந்த சஷ்டி திருக்கார்த்திகை விழாக்கள் நிகழ்கின்றன.

நாக கன்னிகை தீர்த்தம், ஆதிசேட தீர்த்தம், தருமசேன தீர்த்தம், அரித்துவார தீர்த்தம், கூப தீர்த்தம், பிரமதீர்த்தம், இராவத தீர்த்தம், தாடகை தீர்த்தம், சூரிய தீர்த்தம், விஷ்ணு தீர்த்தம், சந்திர தீர்த்தம், சுப்பிரமணிய ஆறு, (மண்ணியாறு) முதலிய புண்ணியப் புனல்கள் உள்ளன கார்த்திகை வெள்ளிக் கிழமைகளில் நாக கன்னிகை தீர்த்தத்தில் நீராடலும், ஆவணி அமாவாசையன்று பிரம்மதீர்த்தத்தில் நீராடலும் சிறப்புடையன.

தலவிருட்சம்: ஆண்பனை.

தலமான்மியப்படி தாடகை, பிரம்மா, திருமால், இந்திரன் இராவதம், அகத்தியர், சந்திரன், சூரியன், ஆதிசேடன், நாக கன்னிகை, தருமசேனன், யக்ஞகுப்தன், சங்குகன்னன், குங்குலியக் கலயர் முதலியோர் வழிபட்ட இத்தலத்தினைத் திருஞான சம்பந்தர் ஒரு பதிகத்தால் பாடிப் பரவியுள்ளார்.

இங்கே அருணகிரிநாதர் முருகவேளை "கொந்தார்" என்று தொடங்கும் ஓர் திருப்புகழால் பரவிப் போற்றியுள்ளார். இத்தலத்தில் அருணகிரி வள்ளல் "உன் மனச் சுழற்சியை நிறுத்த வல்ல ஒரு அற்புதப் பொருள் இந்தா!" என அளித்தருளுவாய் என வேண்டித் துதித்தார்.

சடையப்பர் மாலை, பெரியநாயகி மாலை, திருவிளையாடற் புராணம் மற்றும் பெரியபுராணப் பகுதிகள், காளமேகப் புலவர் பாடல் முதலியவை இத்தலம் பற்றி அறிய உதவுவன.

தருமபுர ஆதீனத் திருக்கோயில்களுள் இத்தலமும் ஒன்று. திருப்பனந்தாள் என்றவுடன் குமரகுருபர சுவாமிகள் நிறுவிய காசிமடம் இங்கே திகழ்வது நம் நினைவிற்கு வரும். ஆம்! இத் திருமடம் சைவமும் தமிழும் தழைக்கப் பல அறக்கட்டளைகளை நிறுவி அருந்தொண்டாற்றி வருகிறது. தமிழ்க் கல்லூரி, உயர்நிலைப்பள்ளி முதலியன இதன் கல்விப்பணி நிறுவனங் களாகும். காசிமடம் என்று பெயர் கொண்டு இங்கே தலைமை யகம் கொண்டுள்ள இத்திருமடம் பல நூல்களை வெளி யிட்டுள்ளது.

இத்தலத்தில் மார்ச், செப்டம்பர் மாதங்களில் குறிப்பிட்ட நாட்களில் சூரிய கிரணங்கள் செஞ்சடையப்பர் திருமேனியில் விழுகின்றன. இங்கே பல அற்புத சிற்பங்கள் உள்ளன. சித்திரைப் பெருவிழா, பங்குனி உத்திரப் பெருவிழாக்கள் நிகழ்கின்றன.

சண்டேச நாயனார் அவதரித்த சேய்ஞலூரும், பந்தணை நல்லூரும் அருகில் உள்ள தலங்களாகும். சேய்ஞலூர் முருகன் சிவபெருமானை வழிபட்ட தலம். கந்த புராணத்திலும், சண்டேச நாயனார் புராணத்திலும் முருகன் இத்தலத்தில் இயற்றிய பூசை பேசப்படுகிறது. ஆறுமுகப் பெருமான் மயில் மீதமர்ந்த அற்புதக் கோலம் இங்கும் காணத்தக்கது.

## மருத்துவக்குடி வாழ் மருத்துவன்

*செருக்கி வெட்டிய தீயோராம் எனும்*
*மதத்த துட்டர்கள் மாசூராதிய*
*சினத்தர் பட்டிடவே வேல்ஏவிய முருகோனே*
*சிவத்தை யுற்றிடு தூயா தூயவர்*
*கதித்த முத்தமிழ் மாலா யோதிய*
*செழிப்பை நத்திய சீலா வீறிய மயில்வீரா*

*வரைத்த வர்க்கரர் சூலா பாணிய*
*ரதிக் குணத்தரர் தீரா தீரத*
*மனத்தி யற்படு ஞான தேசிக வடிவேலா*
*வருக்கை யிற்கனி சாறுய் மேவிடு*
*தழைத்த செய்த்தலை யூடே பாய்தரு*
*மருத்துவக்குடி வாழ்வே தேவர்கள் பெருமாளே*

—(கருத்திநப்படு....திருப்புகழ்)

கும்பகோணத்திற்குக் கிழக்கே 8 கல் தொலைவிலுள்ளது மருத்துவக்குடி என்னும் தலம். ஆடுதுறை இரயில் நிலையத்திலிருந்து 2 பர்லாங் தொலைவில் இத்தலத்தை அடையலாம் கும்பகோணம்-மாயூரம் பஸ் வழியில் ஆடுதுறை உள்ளது; டவுன் பஸ் வசதிகளும் உண்டு.

இத்தலத்தில் அயினூசஸ்வரர் திருக்கோயில் உள்ளது. சிவபெருமான் அயினூசஸ்வரர் என்று வணங்கப் பெறுகிறார். கல்வெட்டில் உய்யக்கொண்டான் வளநாட்டு திரைமூர் நாட்டு ஆனைச்சூழ் உடையார் திருவிடைக் குளமுடையார் கோயில் என்று வருகிறது ஆனைச்சூழ் உடையார் மருவி அயினூசஸ்வரர் என வந்திருக்கலாம். இறைவி: அபிராமி அம்மன். கோயில் சிதிலமடைந்துள்ளது.

இத்தலத்தில் கந்தவேள் ஒரு முகமும் இரண்டு கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடன் கிழக்கு நோக்கி விளங்குகின்றார் தினமும் இருகால பூசை நிகழ்கிறது. இந்திரன் யானைக்குக் குஷ்டரோகம் நீங்க பூசித்த தலம் என்று கூறுவர். ஆனைச்சூழ் உடையார் என வருவது இது குறித்தே எனலாம் ஆனைஈஸ்வரே அயிஞாஈஸ்வரராகியிருக்கக் கூடும்.

அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் உள்ளது.

அருணகிரி நாதர் ''கருத்திதப்படு'' என்ற திருப்புகழால் இத்தலத்தைப் பரவியுள்ளார். தொன்மையான இத்தலம் பொலிவுடன் திகழக் கந்தவேள் கருணை புரிய வேண்டும்!

# திருவிடைமருதூர் ஏகநாயகன்

*கனியினும் கட்டிபட்ட கரும்பினும்*
*பனிமலர்க்குழல் பாவை நல்லாரினும்*
*தனிமுடி கவித்து ஆளும் அரசினும்*
*இனியன் தன்னடைந்தார்க்கு இடைமருதனே.*

—திருநாவுக்கரசுசுவாமிகள்.

திருஇடைமருது= மத்தியார்ச்சுனம்: மருதமரத்தை தலவிருட்சமாகக் கொண்ட நடுத்தலம். ஆந்திராவில் மல்லிகார்ச்சுனம் (ஸ்ரீசைலம்); திருநெல்வேலியருகே அம்பா சமுத்திரத்திலிருந்து 3 கல் தொலைவில் திருப்புடார்ச்சுனம்-இவ்விரண்டு தலங்களுக்கும் நடுவே விளங்குவது திருஇடைமருதூர்.

கும்பகோணத்தின் வடகிழக்கே 5 கல் தொலைவிலுள்ளது இத்தலம். கும்பகோணத்திலிருந்து மாயூரம் செல்லும் பாதையில் இத்தலம் உள்ளதால் பஸ், இரயில் வசதிகள் அதிகம்.

இங்கே சிவபெருமான் மகாலிங்கசுவாமி என்று போற்றப் பெறுகிறார். இத்தலத்தை மையமாகக் கொண்டு சுற்றிலும் அமைந்த தலங்களின் சிறப்பு மூர்த்தங்களை வைத்துப் பார்த்தால், இத்தலமே மகாலிங்கப்பெருமான் இடங்கொண்டதன் தனிச் சிறப்பு இனிது புலப்படும். திருஆவடுதுறை-நந்தி; திருவலஞ்சுழி-விநாயகர்; சுவாமிமலை-முருகன் சிதம்பரம்-நடராஜர்; சீர்காழி-சட்டைநாதர்; ஆலங்குடி-தட்சிணாமூர்த்தி; சூரியனார்கோயில்-நவக்கிரகம்; சேய்ஞலூர் - சண்டேசுவரர் என்று இப்படிச் சிறப்புடைய தலங்களைத்தன் பரிவாரமூர்த்தங்களாகக் கொண்டு மகாலிங்கசுவாமி மன்னுபேரருள் புரிகின்றார்.

இங்கே இறைவன் மருதவாணராக விளங்கிப் பட்டினத்தார் வரலாற்றை நினைவுபடுத்துகின்றார். பட்டினத்தார் ஏழைக்

கோபுரத்துக் குடவரையிலும், பத்திரகிரியார் மேலைக்கோபுரத்துக் குடவரையிலும் எழுந்தருளியுள்ளனர். வரகுணபாண்டியன் இங்கே வழிபட்டுப் பிரமஹத்தி நீங்கப் பெற்றான்.

இறைவி: பெருநலமாமுலையம்மை. (பிரகத்சுந்தர குசாம்பிகை). தல புண்ணியப்புனல்: காருண்ணியாமிர்தத் தீர்த்தம், அயிராவணத்துறை (காவிரி).

இங்கே முருகவேள் அறுமுகங்களுடன் பன்னிருகரங் களுடையராய் மயிலின் மீது அமர்ந்து இருபுறமும் தேவியர் நிற்க - மகாலிங்கப்பெருமான் சந்நிதியின் மேற்பால் கிழக்கு நோக்கிவிளங்குகின்றார். மயிலின் முகம் ஈசான திசையில் தலை சற்று சாய்ந்து விளங்குவது சிறப்பு. கந்தவேள் தமது இடது திருப்பாதத்தை மடித்து மயில் மீது அமர்ந்து, வலது திருப் பாதத்தை தொங்க அமைத்து மயிலின் தோகையில் வைத்துக் கொண்டிருக்கிறார். வலது கரங்களில் முறையே அபயம், தனுசு வேல்,அங்குசம், சக்கரம், கத்தி ஆகியவையும் இடதுகரங்களில் பழம், வில், சக்தி, பாசம், மணி, கேடயம், ஆகியவையும் கொண்டுள்ளார்.

அம்பாள் சந்நிதியின் நுழைவாயில் துவாரமூர்த்தியாக ஆறுமுகங்களுடன் மயில்மீதமர்ந்த பன்னிருகை வேலன் அற்புதமாகத்திகழ்கின்றார்.

இக்கோயிலில் இருஉற்சவமூர்த்திகள் உள்ளன. ஷண்முகப் பெருமானாக 12 கரங்களுடன் நின்ற திருக்கோலத்தில் இருபுறமும் தேவியர் நிற்க–பின்புறம் மயில் விளங்க அமைந்த ஒருகோலமும், ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவியரும் சூழ அமைந்த ஒரு கோலமும் உள்ளன.

காமிகாகம முறையில் தினமும் நான்கு காலவழிப்பாடுகள் கந்தவேளுக்கு நடைபெறுகின்றன. மாதசஷ்டி, கார்த்திகை சிறப்பு; கந்தசஷ்டி, திருக்கார்த்திகை விழாக்கள் நடைபெறு கின்றன.

இத்தலத்தின் மேற்குக் கோபுரத்தையடுத்துத்தனிமுருகன் கோயில் ஒன்று உள்ளது. பிரணவப் பிராகாரத்தின் வடமேற்கில் கிழக்கு நோக்கிய முருகன் சந்நிதி ஒன்றும் உள்ளது. கோயிலுள்

தலவிருட்சமான் மருத மரத்தின் மேற்கே அழகிய மண்டபத்துடன் ஆறுமுகன் சந்நிதி உள்ளது. இங்கே மயில் மீதுமர்ந்து பன்னிருகை வேலன் மிக கம்பீரமாக இருதேவியருடன் திகழ் கின்றூர்.

இத்தலத்திறைவனைத் திருஞானசம்பந்தர் 6 பதிகங்களாலும், திருநாவுக்கரசர் 5 பதிகங்களாலும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் 1 பதிகத்தாலும் பரவியுள்ளனர், மணிவாசகப்பெருமானுக்குத்திருவடிதீட்சைதந்தருளியதலம்இது(இடைமருததனில் படிமப்பாதம் வைத்த அப்பரிசும்-திருவாசகம்).

அருணகிரிநாதசுவாமிகள் நான்கு திருப்புகழ்ப் பாக்களால் இத்தலக் கந்தவேளை சந்தச் செந்தமிழில் பரவிப்போற்றியுள்ளார். மகாலிங்கப் பெருமான் பெருமைக்கேற்பப் பெரிய திருப்புகழ் ஒன்றை "அறுகுநுனி" என்று தொடங்கி 50 சீர் கொண்டதாய்ப்பாடுகிறூர் அருணகிரிவள்ளல். இதில் வாழ்க்கைத் துன்பங்களை விளக்கி இத்தகைய புல்லிய வாழ்வை உனது அடியார்கள் பெறுவதென்ருல் உலகம் உன்னை ஏசிடாதோ, பாசநாசா என்று முருகவேளிடம் விண்ணபபிக்கிறூர். "இலகு குழை" என்ற திருபபுகழில்

*"மதுரகவி யடைவு பாடி விடறிவு*
*முதிர அரிய தமிழோசையாக ஒளி*
*வசன முடைய வழிபாடு சேரும் அருள்தந்திடாதோ"*

எனப்பாடிப் பணிகின்றூர். "படியையள" என்ற திருப்புகழில் தனக்குத் தவநெறி வேண்டும் என்றுவேண்டுகின்றூர். இறுதியாக "புழுகொடு" என்ற திருப்புகழில்

*"மிடைபடு மலமாயையால் மிககலவிய அறிவேக சாமிநின்*
*விதரண சிவஞான போதகம் வந்து தாராய்"*

என்று இறைஞ்சுகின்றூர்.

திருவிடைமருதூர் தலப்பெருமைகள் விரிக்கிற்பெருகும். ஆதிசங்கரருக்குச் 'சத்தியம் அத்வைதம்' என்று காட்டியதலம் இது. லலிதாசகஸ்ர நாம உரை எழுதிய பாஸ்கரராயர் வழிபட்ட தலமிதுவே. இத்தலப் பெருமைகளையெல்லாம் கோட்டையூர்

சிவக்கொழுந்துதேசிகர் இயற்றிய மருதவனபுராணம் சிறப்பாகப் பேசுகின்றது. திருவிடைமருதூர் மும்மணிகோவை, திருவிடைமருதூர் உலா, திருவிடைமருதூர் கலம்பகம், திருவிடைமருதூர் நொண்டி நாடகம் முதலிய சில்லறைப் பிரபந்தங்களும் உள்ளன.

இத்தலத்தில் 149 கல்வெட்டுக்கள் உள்ளன.

மனநோய் நீக்கும் மூகாம்பிகை சந்நிதியும், நிலையாமையைக்காட்டி விளக்கும் பட்டினத்தார், பத்திரகிரியார் சந்நிதிகளும், தைப்பூசப்பெருவிழாவும், கயிலைக் கொடுமுடிப்பிராகாரமும் சோமாஸ்கந்தர் (ஏகநாயகர்) பொலிவும்—ஏன் கோயிலின் ஒவ்வொரு அம்சமும் சிந்தைக்குப் பெருவிருந்தாகும் திருவாவடுதுறையாதீனத்தின் நிர்வாகத்திலமைந்த இக்கோயிலுக்கு வழிபடுவோர் விடுதிகள் இரண்டு சிறப்பாக அமைந்துள்ளன.

இத்தலத்தருகே திருபுவனம், திருநாகேச்சரம், திருவியலூர், கோவிந்தபுரம், தென்குரங்காடுதுறை முதலிய புனிதத்தலங்கள் உள்ளன.

# திருபுவனத்துத் திறல்வீரன்

*தனுநுதல் வெயர்வெழ விழிகுழி தரவணை*
*சத்திக் கச்சில தித்திக் கப்படும் அன்புபேசித்*
*தழுவிய மகளிர்த முகிழ்முலை யுரமிசை*
*தைக்கச் சர்க்கரை கைக்கப் பட்டன தொண்டையூறல்*
*கனவிலு நுகர்தரு கலவியின் வலையிடை*
*கட்டுப்பட்டுயிர் தட்டுப் பட்டழி கின்றதோதான்*
*கதிபெற விதியிலி மதியிலி யுனதிரு*
*கச்சுற் றச்சிறு செச்சைப் பத்மப தம்பெறேனோ*
*முனைமலி குலிசைதன் ம்ருகமத புளகித*
*முத்தச் சித்ரத னத்துக் கிச்சித அம்புராசி*
*முறையிட முதுநிசி சரர்திரள் முதுகிட*
*முட்டப்பொட்டெழ வெட்டிக்குத்தும டங்கல்வீரா*
*அனுபவ மளிதரு நிகழ்தரு மொருபொருள்*
*அப்பர்க்கப்படி யொப்பித் தர்ச்சனை கொண்டநாதா*
*அகிலமு மழியினு நிலைபெறு திரிபுவ*
*னத்துப் பொற்புறு சித்திச்சித்தர்கள் தம்பிரானே!*

—திருப்புகழ்.

நமக்கு எத்தனையோ வித நடுக்கங்கள் ஏற்படுகின்றன. நிலநடுக்கம் முதலாக உடல்நடுக்கம், உள்ளநடுக்கம் வரையிலும் அத்தனை நடுக்கங்களையும் நீக்கி நம்மைக்காக்கின்ற இறைவனுக-நடுக்கம் தீர்த்தபெருமான் (கம்பஹரேசுவரர்) என்ற திருப் பெயருடன் சிவபெருமான் கோயில்கொண்டு விளங்கும்தலம் திருபுவனம். கும்பகோணத்திற்குக்கிழக்கே 6 கி. மீ. தொலைவிலுள்ள இத்தலம் கும்பகோணம்-மாயூரம் சாலைவழியில் அமைந்துள்ளது. இங்கே சிவபெருமான் நடுக்கம்தீர்த்த நாயகராகவும், இறைவி அறம்வளர்த்தநாயகி (தர்மசம்வர்த்தினி) யாகவும்

திருக்கோயில் கொண்டுள்ளனர். மூன்றும் குலோத்துங்கசோழன் அமைத்துள்ள இக்கோயில் ஒப்பற்ற கலைக்கருவூலம் என்ருல் மிகையாகாது. தஞ்சாவூர், கங்கைகொண்டசோழபுரம், தாராசுரம், திருபுவனம்--இந்நான்கும் பிற்காலச் சோழர் கோயிற் பணியின் வளர்ச்சி நிலைகளாகத் திகழ்கின்றன.

வரகுணபாண்டியனுக்குத் திருவிடைமருதூரில் பிரம்மஹத்திதோஷம் நீங்கப்பெற்றும் நடுக்கம் தீராததால் இத்தலப் பெருமானை வணங்கி நடுக்கம் நீங்கப்பெற்ருன். இத்தலத்தின் மற்ருெரு சிறப்புச் சரபமூர்த்தியாகும். நரசிம்மாவதாரம் ஏற்ற திருமால், இரணியனை வதைத்தபின்பு, தன் சீற்றம் அடங்காது உலகை வருத்தியதுகண்டு, தேவர்கள் வேண்டுகோளினை ஏற்று, சிவபெருமான் சரபமூர்த்தி வடிவங்கொண்டு நரசிங்கத்தின் செருக்கடக்கினுர் என்று புராணங்கள் கூறுகின்றன. இத்தகு சரபமூர்த்தம் அமைந்த இப்பெருங்கோயிலில் பகைவெல்ல விரும்புவோர் ஞாயிறுதோறும் இப்பெருமானை வழிபட்டு இன்புறுகின்றனர்.

இத்தலத்தில் முருகவேள் ஒருமுகமும் நான்குதிருக்கரங்களும்கொண்டு, தேவியர் இருவரும் சூழ நின்றத்திருக்கோலத்தில் கிழக்குநோக்கிவிளங்குகின்ருர். மூலவரைப்போன்றே உற்சவரும் உள்ளார். காரண—காமிகாகம முறையில் இருகாலவழிபாடுகள் நிகழ்கின்றன. மாதக்கார்த்திகை சிறப்பு; நவராத்திரி, கந்தசஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனிஉத்திரவிழாக்கள் நிகழ்கின்றன. தை கிருத்திகையில் 108 காவடிகள் எடுத்தல் நிகழ்கின்றது.

சரபதீர்த்தம், பிரம்மதீர்த்தம், வருணதீர்த்தம், தேவதீர்த்தம், வியாசதீர்த்தம், பிருகுதீர்த்தம், சித்ததீர்த்தம் முதலிய புண்ணியப்புனல்கள் உள்ளன. தலவிருட்சம்: வில்வம்.

இத்தலத்தில் அருணகிரிநாதசுவாமிகள் ''தனு நுதல்'' என்ற திருப்புகழால் முருகவேளைப்பரவிப் போற்றியுள்ளார்.

தருமபுர ஆதீனத்திருக்கோயில்களில் இதுவும் ஒன்று வழிபடுவோர் விடுதியும், கல்யாணமண்டபமும் உள்ளன.

இத்தலத்துள்ள சிற்பங்கள் ஒப்பற்றவை. 16 கல்வெட்டுகள் உள்ளன.

அருகிலுள்ள திருநாகேச்சரம், திருவிடைமருதூர், கும்பகோணம் முக்கியத்தலங்களாகும்.

# நாகேசன்மெச்சிய ஞானவிநோதன்

*தாயவனை வானோர்க்கும் ஏனோருக்கும்*
*தலையவனை மலையவனை உலகமெல்லாம்*
*ஆயவனைச் சேயவனை அணியான்தன்னை*
*அழலவனை நிழலவனை அறியவொண்ணா*
*மாயவனை மறையவனை மறையோர்தங்கள்*
*மந்திரனைத் தந்திரனை வளராநின்ற*
*தீயவனைத் திருநாகேச் சரத்துளானைச்*
*சேராதார் நன்னெறிக்கண் சேராதாரே.*

—**திருநாவுக்கரசர்.**

சோழப்பேரரசன் இரண்டாம் குலோத்துங்கனது முதலமைச்சராய்த்திகழ்ந்த சேக்கிழார்பெருமான் திருத்தொண்டர்மாக்கதை என்ற நாயன்மார் வரலாற்றுக்காப்பியத்தை கி. பி. 12-ம் நூற்றாண்டில் பாடியிராவிடில் சமணக்காட்டில் சைவம் சிக்கி நலிந்திருக்க வாய்ப்பு உண்டு. தமிழகத்தின் தொன்மைநெறியாகிய சைவநன்னெறியைக் காத்தபெருமை சேக்கிழாரையே சாரும். தேவாரத் திருமுறைகளெல்லாம் மறையாமலிருக்கப் பெரியபுராணமே அரணாக விளங்கலாயிற்று. சேக்கிழார் பெருமான் தொண்டைநாட்டில் சென்னைக்கருகிலுள்ள குன்றத்தூரில் பிறந்தவராயினும் அவருள்ளம் கவர் கள்வனாக விளங்கிய பெருமான் திருநாகேச்சரப்பெருமான். கும்பகோணத்திற்குக்கிழக்கே காரைக்கால் சாலையில் 4 கல் தொலைவிலுள்ள இத்தலம் சேக்கிழார் பெருமானுக்கு ஆன்மார்த்த தலம்; அவர் திருவடி ஞானம் பெற்ற தலம்; இத்தலத்தைப் பிரிய மாட்டாதவராய் – தனது குன்றத்தூரில் ஒரு கோயிலமைத்து அதற்குத் திருநாகேச்சரம் என்று பெயரிட்டு வணங்கினார்.

திருநாகேச்சரத்திலிருந்து சில குடும்பங்களையும் குன்றத்தூரில் குடியமர்த்தி இன்புற்றார் சேக்கிழார்.

திருநாகேச்சரம்-நாகராசன் வழிபட்டதலம். ராகு கேது தோஷங்கள் நிவர்த்தியாகும் தலம். சர்ப்பதோஷம் நீங்க நாகராசன் திருவுருவத்திற்கு அபிஷேகம் செய்து பயனடைவோர் பலர். நாகராசன் திருமேனியில் அபிஷேகிக்கப்படும் பால் நீல நிறமாவதை இன்றும் காணலாம். இது ஒரு தெய்வீகச்சிறப்பு.

நாகராசன் வழிபட்டதலங்கள் நான்கு என்பர். கும்பகோணம் நாகேசுவரசுவாமி கோயில், திருநாகேச்சரம் நாகநாதசுவாமிகோயில், திருப்பாம்புரம் பாம்பணிநாதர்கோயில், நாகபட்டினம் காயாரோகணசுவாமி கோயில்-இந்நான்கிலும் சிவராத்திரியன்று முறையே முதல், இரண்டு, மூன்று, நான்காம் காலங்களில் நாகராசன் வழிபடுவதாகத் தலமான்மியம் பேசுகின்றது.

திருநாகேச்சரத்தில் இறைவன்: நாகநாதசுவாமி, நாகேசர் செண்பகாரணியேசுவரர் எனவும், இறைவி: பிறையணி வாணுதல் உமை எனவும் போற்றப்படுகின்றனர். அம்பிகை தவக்கோலமாக-தனிக்கோயில்கொண்டு சக்திபீடங்களுள் ஒன்றாக-திருமகளும் கலைமகளும் நின்றுபணிசெய்ய குன்றுமலைக் குமரியாக (கிரிகுஜாம்பிகையாக) விளங்கும் சந்நிதி தனிச் சிறப்புடையதாகும்.

சூரியன், பாண்டவர், நளன், இந்திரன், சம்புமாலிமன்னன் முதலியோர் வழிபட்டதலம். திருஞானசம்பந்தர் 2 பதிகமும், திருநாவுக்கரசர் 3 பதிகமும், சுந்தரர் ஒருபதிகமும் கொண்ட தலம். சேக்கிழார் திருப்பணி செய்த தலம்.

இங்கே முருகர் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு மயிலுடன் நின்றகோலத்தில் தேவியர் இருவருஞ்சூழ கிழக்கு நோக்கி விளங்குகின்றார். மூலவரைப் போன்றே உற்சவரும் உள்ளார். மற்றொரு உற்சவமூர்த்தி மயில்மீது அமர்ந்த ஆறுமுகப் பெருமான் அற்புதமான கோலம். கிரிகுஜாம்பிகை கோயிலில் பாலசுப்ரமணியர் விளங்குகிறார். காமிகாகம முறையில் தினமும் இரண்டுகால வழிபாடுகள் நிகழ்கின்றன. மாதசஷ்டி, கார்த்திகை சிறப்பு, கந்தசஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனிஉத்திரப்பெரு விழாக்கள் நிகழ்கின்றன.

இத்தலத்தில் பலபுண்ணியப்புனல்கள் உள்ளன. முக்கிய மானது கோயிலுள் அமைந்த சூரியபுஷ்கரணி. கார்த்திகை ஞாயிற்றுக் கிழமைகளில் இதில் நீராடல் சிறப்பு, தலவிருட்சம்: சண்பகம்; அதனால் தலமும் சண்பகவனம், சண்பகாரணியம் எனப்படும்

அருணகிரிநாதர் இத்தலமுருகனை 'ஆசார ஈன' எனத் தொடங்கும் திருப்புகழால் பரவியுள்ளார். இத்திருப்புகழை இக்காலத்துமக்கள் அனைவருமே பாராயணம் செய்து தினமும் சிந்தித்தல் வேண்டும். யார்யார் நரகத்திற்குச் செல்வார்கள் என்ற பட்டியலை இதில் சுவாமிகள் தந்துள்ளார். வன்முறையும் தீச்செயல்களையும் மனந்துணிந்து செய்யும் இக்காலமக்களை இப் பாடல் விழிப்படையச்செய்யும் என்பதில் ஐயமில்லை.

இத்தலத்திறைவிமீது பலபதிகங்கள் உள்ளன. திருநாகேச்சரப்பதிற்றுப்பத்தந்தாதியும்,திருநாகேச்சரக்கோவை யும் உள்ளன. சிங்காரவேல்பிள்ளை ஆக்கியுள்ள பாட்டிடைவிரவிய உரைநடைபுராணம் உள்ளது.

பலகல்வெட்டுக்கள் கொண்ட தொன்மையான தலம்இது. இத்தலத்தில் வைணவத்தலமான ஒப்பிலியப்பன் கோயிலும் அமைந்துள்ளது.

திருபுவனம், திருவிடைமருதூர், தென்குரங்காடுதுறை, திருநல்லம், திருநறையூர், அரிசிக்கரைப்புத்தூர், சிவபுரம் கும்பகோணம்-முதலிய தலங்கள் அருகில் உள்ளன.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்திலுள்ள இத்தலம் சைவர்கள் போற்றிக்காக்கவேண்டியதொன்றும்.

## கும்பகோணத்து ஆறுமுகன்

*பஞ்சுசேர் நிர்த்தப் பதமாதர்*
*பங்கமார் தொக்கிற் படியாமற்*
*செஞ்சொல்சேர் சித்ரத் தமிழாலுன்*
*செம்பொனூர் வத்தைப் பெறுவேனோ*
*பஞ்சபாணத்தற் பொருதேவர்*
*பங்கில்வாழ்சத்திக் குமரேசா*
*குஞ்சரீ வெற்புத் தனநேயா*
*கும்பகோணத்திற் பெருமாளே.*

அருணகிரிநாதசுவாமிகள் அற்புதத்திருப்புகழே பாடவேண்டும் என்னும் கருத்தே நிறைந்தவராய்க் "கும்பகோணத்திற் பெருமாளே! செஞ்சொல்சேர்சித்ரத் தமிழால்உன் செம்பொனூர் வத்தைப்பெறுவேனோ!" எனச் சித்திரத்தமிழ் பாடும் விருப்பினை வெளியிட்டு இத்தலம் வருகிறார். கும்பகோணத்தில் சுவாமிகள் அருளியுள்ள ஏழுதிருப்புகழ்ப் பாடல்கள் கிடைத்துள்ளன. காலையில் எழுந்ததும் கந்தன் நாமத்தைக் கூறவேண்டும் என்று அருணகிரிநாதர் இத்தலத்தில் உபதேசிக்கின்றார்.

*"காலையி லெழுந்து உன்நாமமெ மொழிந்து*
*காதலுமை மைந்த எனவோதிக்*
*காலமு முணர்ந்து ஞானவெளி கண்கள்*
*காணஅருளென்று பெறுவேனோ"* (*மாலைதனில்—*)

என்று தன் அருள் நாட்டத்தைக்காட்டுகின்றார்.

கும்பகோணம் என்றவுடன் மூன்றுதலங்களை நாம் சிந்திக்கின்றோம் எண்ணற்ற ஆலயங்கள் இத்தலத்தில் இருந்தபோதிலும் குடமூக்கு(கும்பேசுவரர் கோயில்), குடந்தைக்கீழ்கோட்டம்

(நாகேச்சுவரசுவாமி கோயில்),குடந்தைக்காரோணம்(சோமேசுவர சுவாமி கோயில்) ஆகியமூன்று கோயில்களும் தேவாரப்பதிகம் பெற்றவை. இம்மூன்று கோயில்களிலுமுள்ள முருகவேள் சந்நிதிகளிலும் அருணகிரிநாதர் பாடியிருக்கக்கூடும்.

முதலில் குடமூக்கு எனப்படும் ஆதிகும்பேசுவரர் திருக்கோயிலுள் நுழைவோம். குடமூக்கே "குடமூக்கே என்பீராகில், கொடுவினைகள் தீர்ந்து அரனைக்குறுகலாமே" என்றார் தாண்டக வேந்தர் திருநாவுக்கரசர். ஒருபிரளயத்தின்போது சிருட்டிபீஜம் வைத்தகுடம் வெள்ளத்தில்மிதந்துவர, சிவபெருமானே ஒருவேட உருவில் (கிராதமூர்த்தி) அக்குடத்தின்மீது பாணமெய்தி சிருட்டியைத்தோற்றுவித்தலம் இது. குடத்திலிருந்தமண் இலிங்க வடிவாக்கப்பெற்றுச் சிவபெருமானாலேயே பூசிக்கப் பட்டது. இவ்வாறு சிவபெருமான் கும்பேஸ்வரராகித் தன்னைத்தானே பூசித்தார். குடத்தின்மூக்கு – குடமூக்கு – கும்பகோணம் என்றாயிற்று. கும்பகோணத்திற்குத் தென்கிழக்கில் குடவாயில் என்ற ஊர்அமைந்துள்ளதும் ஈண்டு நினைவு கூரத்தக்கது. கும்பேசுவரர் தன்னைத்தானே பூசித்ததை. இக்கோயில் பிரம்மோத்ஸவத்தில் ஐந்தாம் நாள் திருவிழாவில் நினைவு படுத்துகிறார்கள்.

இங்கே மந்திர பீடேசுவரியாக மங்களாம்பிகை விளங்குகின்றாள். அறுபத்துநான்கு சத்திபீடங்களுள் இதுவும் ஒன்றாகும்.

கும்பேஸ்வரருக்குப்பின்புறம் முருகவேள் சந்நிதி அமைந்துள்ளது. இங்கு அவர் கார்த்திகேயன் என்று பெயர்கொண்டு திகழ்கிறார். ஆறுமுகங்களும் ஆறு கரங்களும் கொண்டு மயில்பின்புறம் நிற்க-நின்ற திருக்கோலத்தில் இருபுறமும் தேவிமார்சூழ அவர் விளங்குகின்றார். வடஇந்தியாவில் ஒன்றிரண்டு தலங்களைத் தவிரஆறுமுகமும் ஆறுகரங்களும் கொண்ட மூர்த்தி இவரையன்றி வேறெங்கும் இல்லை. இக்கோயிலில் முருகவேளுக்கு இருஉற்சவ மூர்த்தங்கள் உள்ளன. கோயிலின் வெளி பிராகாரத்தில் மேற்கு நோக்கிய தண்டபாணிசுவாமி தனிக்கோயில் சிறப்புடையது.

இக்கோயிலில் காமிகாகம முறையில் கந்த வேளுக்கு நாடோறும் இருகால வழிபாடுகள் நிகழ்கின்றன. மாதக் கார்த்திகை சிறப்பு. கந்தசஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனி உத்திர விழாக்கள் நடைபெறுகின்றன.

மாகமகக்குளம் இதன் புண்ணியப்புனல் ஆகும். தல விருட்சம்: வன்னி.

கும்பகோணப் புராணம். திருக்குடந்தைப் புராணம் மங்களாம்பிகை பிள்ளைத் தமிழ், மங்களாம்பிகை மாலை,முதலிய நூல்கள் இத்தல மாண்பினைப் பேசுவன. மாசிகமப் பெருவிழா சிறப்பு மிக்கது. 12 ஆண்டுகளுக்கு ஒருமுறை குரு சிம்மராசியில் வரும் போது மாசியில் பௌர்ணமியும் மகமும் கூடிய நன்னாளில் மகாமகம் பல லட்சக்கணக்கான மக்கள் புனித நீராடலாகக் கொண்டாடப் பெறுகிறது.

குடந்தைக் கீழ்க்கோட்டம் என்னும் ஸ்ரீநாகேஸ்வரசுவாமி கோயிலின் உட்பிராகாரத்தில் நாகேஸ்வர ஸ்வாமி சந்நிதிக்குக் பின்புறம் ஆறுமுகப் பெருமான் சந்நிதி மிகச்சிறப்பாக உள்ளது. கார்த்திகை தோறும் சிறப்பு வழிபாடும் கந்தசஷ்டி, திருப் கார்த்திகை, பங்குனி உத்திரம் பெருவிழாக்களும் நிகழ்கின்றன. இக்கோயிலில் கல்வெட்டுக்களும் சிற்பச் சிறப்புகளும்மிகுதியாக உள்ளன.

குடந்தையிலுள்ள கோயில்கள் அறநிலைய ஆட்சித்துறை யின் நிர்வாகத்திலேயே உள்ளன. கோயில் மாநகரமாக உடைய இத்தலத்தினை தேவார ஆசிரியர்களும், ஆழ்வார்களும் அருளாளர்களும் அறிஞர்களும் பலவாறு போற்றி நூல்களை இயற்றியுள்ளனர்.

அருணகிரிநாதர் இத்தலத்தில் பல திருப்புகழ்ப் பாடல்கள் பாடியிருத்தல் வேண்டும். கிடைத்த பாடல்கள் அவர் திருப்பாதம் இத்தலத்தில் தோய்ந்ததை நன்கு காட்டுகின்றன.

## சோமீசர் கோயில் சோதி

குடந்தைக் காரோணம் என்பதை கும்பகோணம் சோமேஸ்வரர் கோயில் என்று சிலரும் மகாமகக் குளக்கரையிலுள்ள விசுவநாதசுவாமி என்றும் சிலர் கூறுவர். தேவாரத்தில் வரும் தேனார் மொழி என்ற இறைவியின் பெயரைக் கொண்டால் வியாழச் சோமேசர் (தற்காலத்தில் இது ஏழைச் சோமேசராக மக்கள் மனம் போல ஏழையாக அழைக்கப் படுவதாயிற்று) கோயிலைக் கொள்ளலாம். குடந்தைப்புராணம்பாடிய திரிசிரபுரம் மாகவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை - அப்புராணத்தில் குடந்தைக்காரோணம் என்று மகாமகக் குளக்கரையருகேயுள்ள விசுவநாதசுவாமி கோயிலையே காட்டுகின்றார். கங்கை முதலிய நதிகள் மகாமகக் குளத்தில்நீராடித் தம்பாவம் போக்கிக்கொள்ள வந்த புராணச் செய்தியை இக்கோயிலிலுள்ள ஒன்பது நதி தேவதைகளாகும் நவகன்னிகைகள் காட்டி நிற்கின்றனர்.

வியாழச் சோமேசர் கோயிலில் ஆறுமுகப் பெருமான் சிறப்புற விளங்குகின்றார். முன்புறம் ஐந்து முகங்களும் பின்பக்கம் ஒருமுகமும் கொண்டு பன்னிருகரங்களுடன் மயில் மீது அமர்ந்த கோலத்தில் தேவிமார் இருவருடனும் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். முருகவேளின் திருப்பாதங்களில் காலணிகள் சிறப்பாக உள்ளன. உற்சவ மூர்த்தியும் அழகானது. ஒருமுகம், நான்கு கரங்களுடன் தேவிமார் இருவருடன் விளங்குகின்றார்.

சோமீச்சரம் திருப்புகழ் 'கரியகுழல்' எனத்தொடங்கு கின்றது. இதில், வரும் ஒரு அற்புதமான வேண்டுகோள் நம் வாழ்வினை மேலேற்றும் மாண்புடையது.

*இரவினிடை துயிலுகினும் யாரோடு பேசுகினும்*
*இளமையும் உன் அழகுபுனை ஈராறு தோள்நிரையும்*
*இருபதமும் அறுமுகமும் யானோத ஞானமதை அருள்வாயே!*

இத்திருப்புகழில் நரசிம்மாவதாரமும் அழகாகப் பேசப்படுகிறது.

இத்தலத்தில் குடந்தைத் திருமுறைக் கழகத்தினர் மாதக்கார்த்திகை நாட்களில் சிறப்பு வழிபாடு நிகழ்த்திவரு கின்றனர்.

## சிவபுரச் சிவபாலன்

வானவன்காண் வானவர்க்கு மேலானான்காண்
 வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும்
ஆனவன்காண் ஆன்ஐந்தும் ஆடினான்காண்
 ஐயன்காண் கையில்அனல் ஏந்தியாடும்
கானவன்காண் கானவனுக்கு அருள்செய் தான்காண்
 கருதுவார் இதயத்துக் கமலத்தூறும்
தேனவன்காண் சென்றடையாச் செல்வன்தான்காண்
 சிவனவன்காண் சிவபுரத்து எம்செல்வன்தானே!

திருநாவுக்கரசர்.

சிவபெருமான் உவந்தெழுந்தருளும் தலங்கள் நம் நாட்டில் பலவாயினும் சிவபுரம் என்று தனிப்பெயர் கொண்டு ஒருதலம் மட்டுமே விளங்குகின்றது. இச்சிவபுரம் தற்காலத்தில் தான் பெற்றிருந்த நடராசர் திருவுருவத்தை இழந்ததன்மூலம் உலகப் புகழ் பெற்றுவிட்டது கும்பகோணத்திலிருந்து தென் கிழக்கே 3 கல் தொலைவில் இத்தலம் உள்ளது கும்பகோணம் -மன்னார்குடி பஸ் வழியில் சாக்கோட்டையில் இறங்கி ஒரு கல் கிழக்கே நடந்து செல்லவேண்டும். சாக்கோட்டைக்குப்பலடவுன் பஸ்கள் கும்பகோணத்திலிருந்து செல்கின்றன.

இத்தலத்தில் சிவபுரநாதர், பெரியபுரீசர், பிரமபுரிநாதர் என்ற பெயர்களால் சிவபெருமான் போற்றப்பெறுகிறார். இறைவி: சிங்காரவல்லி, பெரியநாயகி. மங்களபுரம் என்றும் இத்தலம் அழைக்கப்படுகிறது.

இங்கே முருகவேள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு மயிலுடன் நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடனும் திகழ்கின்ருர். அழகும் அருளும் நிறைந்த அற்புதக் கோலம். உற்சவர் நின்ற திருக்கோலத்தில் மயிலின் மீது ஒரு கால்வைத்து விளங்குகின்ருர். தேவியர் இருவரும் காலணிகளுடன் திகழ்கின்றனர்.

இங்கே முருகனுக்குக் காரணுகம முறையில் இருகால வழிபாடு நிகழ்கிறது. மாதக்கார்த்திகை சிறப்புடையது. கார்த்திகை சோமவார விழா நிகழ்கின்றது. கந்தசஷ்டி, கார்த்திகை வழிபாடுகள் நடைபெறும். இங்கே முருகனை வழிபட்டு நினைத்த காரியம் நிறைவேற்றிக் கொள்வோர் உளர்.

கோயிலுக்கெதிரில் சந்திரபுஷ்கரணி உள்ளது. சூரிய தீர்த்தமும் உண்டு. கார்த்திகைச்சோமவாரத்தில்சந்திரபுஷ்கரணியில் நீராடற்சிறப்பாம். தலவிருட்சம்: சண்பகமரம்.

இத்தலத்தில் திருமால் சுவேதவராஹமாய் (வெண்பன்றியுருவில்) வழிபட்டார் என்று தலமான்மியம் பேசும். குபேரன் வழிபட்ட தலம். திருஞானசம்பந்தர் மூன்று பதிகங்களாலும் திருநாவுக்கரசர் ஒரு பதிகத்தாலும் பரவியுள்ளார்.

இத்தல முருகனை அருணகிரிநாதர் 'மனமெனும்' எனத் தொடங்கும் திருப்புகழால் பரவி முருகனை வழிபட்டுள்ளார். இத்திருப்புகழில் தனக்கு அருள வேண்டுமென அவர்இறைஞ்சுவது

*"வருசுகம் துயர்ஆசை யிலேஉழல்*
*மதியை வென்று பராபர ஞானநல்*
*வழிபெறும்படி நாயடியேனை நின்அருள் சேராய்."*

இங்கே அம்பிகையின் பல பெயர்களைப் போற்றுகின்ருர்:

*"செனனி சங்கரி ஆரணி நாரணி*
*விமலி எண்குண பூரணி காரணி*
*சிவைபரம்பரை யாகிய பார்வதி அருள்பாலா"*

நரசிம்மாவதாரம் எடுத்த நிலையை விளக்கி 'அத்திருமாலின் மருகனே' என்று போற்றுகின்ருர். தேவர்கள் எல்லாம்

புகழும் அழகஞக, அஷ்டலட்சுமி விளங்கும் சிவபுரத்தினில் விளங்குகின்ருன் முருகன் என்று பாடலை முடிக்கின்ருர்.

*"தினகரன் சிலை வேளருள் மாதவர்*
*சுரர்க ளிந்திரஞுர காதிபர்*
*திசைமுகன் செழுமாமறையோர்புகழ் அழகோனே*
*திருமடந்தையர் நாலிருவோர் நிறை*
*அகமொடம் பொனிஞலய நீடிய*
*சிவபுரந்தனில் வாழ்குருநாயக பெருமாளே!"*

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது. அருகில் மருதாந்த நல்லூர், திருக்கலயநல்லூர், கும்பகோணம், திருநாகேச்சரம் முதலிய தலங்கள் உள்ளன. கல்வெட்டுக்கள் பல உள்ளன.

# கொற்றர்பணிக் கொட்டைநகர்

தமிழ்நாட்டில் ஆமணக்குச்செடி ஒருதலத்தில் தெய்வ மரமாகக்கருதப்படுகின்றது. ஆமணக்கைக் கொட்டைமுத்து என்பர். ஆகவே இத்தலம் கொட்டையூர் என வழங்கலாயிற்று. இத்தலத்தைத் திருநாவுக்கரசரும் திருக்கொட்டையூர் என்றே தனது திருத்தாண்டகத்தில் போற்றுகின்றார்.

*கருமணி போற்கண்டத் தழகன் கண்டாய்*
*கல்லானிழற்கீழ் இருந்தான் கண்டாய்*
*பருமணிமா நாகம்பூண்டான் கண்டாய்*
*பவளக்குன்றன்ன பரமன்கண்டாய்*
*வருமணிநீர்ப் பொன்னிவலஞ்சுழியான் கண்டாய்*
*மாதேவன் கண்டாய் வரதன்கண்டாய்*
*குருமணிபோ லழகமருங் கொட்டையூரிற்*
*கோடீச்சரத்துறையுங் கோமான்றானே!*

என்று தொடங்கும் இப்பதிகம் நம்மை அத்தலத்திற்கே அழைத்துச்செல்ல வல்லது.

கும்பகோணத்திற்கு 2 கல் மேல்பால் உள்ளது இத்தலம். கும்பகோணம் – சுவாமிமலை பஸ்வழி; கும்பகோணம் திருவையாறுபஸ்வழியிலும்–இத்தலம் அடையத்தக்கது. சுருங்கக் கூறின்கும்பகோணத்திற்கும்சுவாமிமலைக்கும் இடையில் இத்தலம் உள்ளது. காவிரியின் வடகரைத்தலம் இது.

ஊர்: கொட்டையூர்; கோயில்: கோடீச்சரம். ஹேரண்ட முனிவர் வழிபட்டதால் ஹேரண்டபுரம் எனவும், வில்வமரம் மிகுதியாதலின் வில்வாரண்யம் எனவும் இத்தலம் வழங்கப் பெறும்.

இறைவன்: கோடீசுவரர்; கோடிலிங்கம், ஹேரண்டமுனிவருக்கு இறைவன் இத்தலத்தில் கோடியுருவமாகக் காட்சியளித்ததால் கோடீசுவரர் என்றபெயர்வந்தது. இறைவி: பந்தாடுநாயகி. பந்தாடுவதைக்காட்ட அம்பிகையின் ஒருகால் கொஞ்சம் முன்னும் மற்றொருகால் கொஞ்சம் பின்னும் அமைந்துள்ளது.

இங்கே கோடிவிநாயகர், கோடிமுருகன், கோடிசண்டேசர் என்ற பரிவாரங்கள் எல்லாம் கோடிப்பெருமையுடையவை. இத்தலத்தை வழிபட்டால் கோடிதலங்களை வழிபட்ட பயன்கிட்டும்.

நுழைவாயிலில் தண்டாயுதபாணி சந்நிதி உள்ளது. உட்பிராகாரத்தில் உள்ள கோடிசுப்பிரமணியர் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு மயிலினருகில் நின்றதிருக்கோலத்தில் தேவியர் இருவருடன் கிழக்குநோக்கி விளங்குகின்றார்.

தினமும் காமிகாகம முறைப்படி இரண்டுகால வழிபாடுகள் நிகழ்கின்றன. மாதசஷ்டி, கார்த்திகை சிறப்புநாட்களாகும். கந்தசஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனிஉத்திரவிழாக்கள் நிகழ்கின்றன.

கோயிலின் உட்பிராகாரத்திலுள்ள அமுதக்கிணறு இங்கு புண்ணியப்புனலாகும். ஹேரண்டமுனிவர், பத்திரயோகி, மார்க்கண்டேயர், ஆத்திரேயர் முதலியோர் வழிப்பட்டுய்ந்த இத்தலத்தில் அருணகிரிநாதர் முருகவேளை "பட்டுமணிக்கச்சிறுகக்" என்று தொடங்கும் திருப்புகழால் பரவிப்பாடினார்.

*துட்டனெனக் கட்டனெனப் பித்தனெனப் ப்ரட்டனெனச்*
*சுற்றுமறச் சித்தனெனத் திரிவேனைத்*
*துக்கமறுத் துக்கமலப் பொற்பதம்வைத் துப்பதவிச்*
*சுத்தியணைப் பத்தரில்வைத் தருள்வாயே.*

என்றுவேண்டி, இத்திருப்புகழில் இராவணனுக்கு யாழ்கொடி என்பதையும், இராமர் இத்தலத்தைப்பூசித்தார் என்பதையும் காட்டுகின்றார். இத்தலத்தில் உட்பிராகாரத்தில் அஷ்டபுஜ

துர்க்கையும் வெளிப்பிரகாரத்தில் சதுர்புஜதுர்க்கையும், நவக்கிரகங்கள் தமது வாகனங்களுடன் விளங்குவதும் தனிச்சிறப்பெனலாம். திருவலஞ்சுழித் தலவரலாற்றுடன் தொடர்புடைய ஹேரண்டமுனிவர் உருவம் இத்தலத்தில் உள்ளது.

தனியார் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது.

இக்கோயிலருகில் வள்ளலார் மாணவர் (அனாதை) இல்லம் அரும்பணியாற்றிவருகிறது. கொட்டையூர் கோடீச்சரக்கோவை இத்தலமாண்பினைப்பேசும். இத்தலத்தில் பிறந்த கொட்டையூர் சிவக்கொழுந்துதேசிகர் தஞ்சை மராத்தியமன்னரும், சரஸ்வதி மகால் நூல்நிலையம் கண்டவருமான இரண்டாம் சரபோஜியின் அவைக்களப்புலவராக விளங்கி, மருதவனபுராணம், கோடீச்சரக் கோவை, தஞ்சைப்பெருவுடையார் உலா, சரபேந்திர பூபாலக் குறவஞ்சி, சரபேந்திரர் வைத்தியமுறை, சரபேந்திர சன்னிரோக சிகிச்சை, சரபேந்திரர் வைத்தியம், திருப்பெருமணநல்லூர் புராணம் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

# திருவடிகாட்டிய திருவேரகம்

*காமியத் தழுந்தி இளையாதே*
*காலர்கைப் படிந்து மடியாதே*
*ஓமெழுத்தில் அன்பு மிகவூறி*
*ஓவியத்தில் அந்தம் அருள்வாயே!*
*தூமமெய்க்கணிந்த சுகலீலா*
*சூரனைக் கடிந்த கதிர்வேலா*
*ஏமவெற் புயர்ந்த மயில்வீரா*
*ஏரகத்தமர்ந்த பெருமாளே!* (திருப்புகழ்)

கலியுகவரதனும் கந்தவேள் எந்தைசிவபெருமானுக்குப் பிரணவப் பொருளை உபதேசித்தருளி விளையாடல் புரிந்த பதி சுவாமிமலை என்னும் திருஏரகம் ஆகும். ஏரகம் என்பது மலைநாட்டுப்பதி என்று நச்சினார்க்கினியர்கூறிச்சென்றார். ஆனால் நம்அருணகிரிநாத சுவாமிகளோ "ஏரகவெற்பு என்னும் அற்புதமிக்க சுவாமிமலைப் பதி" (கோமளவெற்பினை......) என்று காட்டிஏரகமே சுவாமிமலை என உறுதிப்படுத்துகின்றார். திருமுருகாற்றுப்படையில் பேசப் படும் திருஏரகம் இதுவே எனக்காட்டுவாராய் நக்கீரரையும், அவரது பாட்டின் வளப்பமும், அவரது வாய்மைச்சொல்லும், அவருக்கு முருகவேள் இலக்கணங்கள் போதித்த விவரமும். உலகம் உவப்ப என்று அடிமோனையுடன் அவருக்கு முருகவேள் அடி எடுத்துக்கொடுத்த அருட்பிரசாதமும் "கடிமாமலர்க்குன்" எனத்தொடங்கும் இத்தலத்திருப்புகழில் விளக்குகின்றார்.

"வளவாய்மைசொற் ப்ரபந்தமுள கீரனுக்குகந்து
மலர்வா யிலக்கணங்கள் இயல்போதி
அடிமோனை சொற்கிணங்க உலகாமுவப்ப என்றுன்
அருளால் அளிக்குகந்த பெரியோனே"

சுவாமிமலையில் கந்தவேளை வழிபட்ட அருணகிரிநாதர் முன்பு திருவண்ணாமலையில் சம்பந்தாண்டானொடு செய்த வாதில், 'கந்தப்பொழில் திகழ் குருமலை மருவியபெருமாளே! சந்தச்சபை தனில் எனதுளம் உருகவும் வருவாயே.'' (எந்தத்திகையினும்...) எனத்தான் அழைத்தபோது வந்து உதவி வெற்றி அளித்தவர் இந்தக் குருபரமூர்த்திதானே என்னும் மனமகிழ்ச்சியுடன் பல திருப்புகழ்ப்பாடல்களைப்பாடிப் பலநாள் இங்கே தங்கியிருந்தார்.

அறுபடைவீடுகளுள் இத்தலம் குருஸ்தானமாக விளங்குவதால் குருகிரி, குருமலை, என்று போற்றினர். இத்தலத்தில் அருணகிரிநாதருக்கு முருகவேளின் பாத தரிசனம் கிடைத்தது. இந்நிகழ்ச்சியை "செகமாயை" என்னும் இத்தலத்திருப்புகழில்,

*"தகையா தெனக்குன் அடிகாண வைத்த*
*தனி ஏரகத்தின் முருகோனே*
*தருகாவிரிக்கு வடபாரிசத்தில்*
*சமர்வே லெடுத்த பெருமாளே"*

என்ற அகச்சான்று விளக்குகின்றது. "செகமாயை" என்று தொடங்கும் இத்திருப்புகழில் கந்தனைக் குழந்தையாகப்பாவித்து முத்தம்தரவேண்டுகின்றார். முத்தமிழ் சந்தக்கவிராஜர். இப் பாடல் பிள்ளைத்தமிழின் முத்தப்பருவத்தை நினைவுபடுத்து கின்றது.

*"செகமாயை யுற்றென் அகவாழ்வில் வைத்த*
*திருமாதுகெர்ப்ப முடலூறித்*
*தெசமாத முற்றி வடிவாய் நிலத்தில்*
*திரமாயளித்த பொருளாகி*
*மகவாவி னுச்சி விழியான னத்தில்*
*மலைநேர் புயத்தில் உறவாடி*
*மடிமீ தடுத்து விளையாடி நித்தம்*
*மணிவாயின் முத்தி தரவேணும்"*

இறைவனை நாயகனாகவும் தன்னை நாயகியாகவும் பாவித்து இறைவன் மேலுள்ள காதலை வெளிப்படுத்தும் முறையில் பாடும் நூல் "உலா" எனப்படும். இம்முறையில் "தெருவினில் நடவா" என்னும் இத்தலத்திருப்புகழ் அமைகின்றது.

சுவாமிமலையில் முருகன் எப்படி அடியார்களுக்கு அருள் வல்லார் என்பதை,

" பதினாலுலகத்தினில் உற்றுறுபத்தர்கள்
ஏதுநினைத்தது மெத்த அளித்தருள் இளையோனே"

(கோமளவெற்பினை......)

என்று அருணகிரிநாதர் அற்புதமாகக்காட்டுவார்.

இத்தகுசிறப்புடைய சுவாமிமலை, கும்பகோணத்திலிருந்து திருவையாறு செல்லும்வழியில் 4 கல் தொலைவிலுள்ளது. கும்பகோணம்-தஞ்சாவூர் சாலையில் திருவலஞ்சுழியில் இறங்கி ஒருகல் வடக்கில் சென்றும் இத்தலத்தை அடையலாம். கும்பகோணம்-தஞ்சை இருப்புப்பாதைவழியில் சுவாமிமலை நிலையத்தில் இறங்கி வடக்கே ஒருகல் செல்லவேண்டும். சுவாமிமலை இரயில் நிலையத்தருகில் திருவலஞ்சுழிக் கோயில் உள்ளது. இங்கே சுவேதவிநாயகரை வழிபட்டுப்பின் அரிசொல்லாறு, காவிரி இரண்டையும் பாலங்கள் வழியே தாண்டி சுவாமிமலையை அடைகிறோம.

சிவபெருமானுக்குக் குமரன் பிரணவப்பொருளை அவர் செவிகுளிர உபதேசித்தபோது, தந்தை மகனைநோக்கி "நீயே சுவாமி" என்று கூறியதாலும், சுவாமிக்கேநாதனாக முருகன்திகழ் வதாலும் சுவாமிநாதன், குருபரன், குமரகுருபரன் என்ற பெயர் களைக்கொண்டு கந்தவேள் திகழ்கின்றார். இத்தலத்தில் முருகன் கோயிலின் பகுதியாகவே சிவன்கோயில் திகழ்கின்றது, முருகன் கட்டுமலைமீது கிழக்குநோக்கி நின்றகோலத்தில் பிரம்மசாரியாக; ஊர்த்துவசிகையுடன் தண்டபாணியாக விளங்குகின்றார். அறுபது படிகள் ஏறி அவரை வணங்க வேண்டும். அறுபது ஆண்டு களும் இங்கே படிகளாகக் காட்டப்பெற்றுள்ளன. ஒருமுகமும் இரண்டுகரங்களும கொண்ட சுவாமிநாதன சக்திவேல் தரித்துள் ளார். ஞானஸ்கந்தனாக, ஞானசக்திதரனாக அவர் திகழ்கின்றார்.

உற்சவமூர்த்தி ஆறுமுகப்பெருமான் இருதேவியருடன் அற்புதமான திருக்கோலத்துடன் திகழ்கின்றார். மற்றொரு மூர்த்தி வில்லேந்திய வேலனாக விளங்குகின்றார். மலையில் நேத்ரவிநாயகர், இடும்பன், தாரகபரமேஸ்வரர், பாலசுப்பிரமணியர், சரஸ்வதி, லட்சுமி, அருணகிரிநாதர், நடராஜர்சந்நிதிகள் உள்ளன. மலையிலி ருந்து இறங்கி, கீழேவந்தால் சொக்கநாதப்பெருமானையும்

மீனாட்சியம்மையையும்வழிபடுகின்றோம். தட்சிணாமூர்த்தி வடிவம் அற்புதமானது.

இத்தலத்தில் முருகவேளுக்கு ஆறுகாலவழிபாடுகள் குமார தந்திரமுறைப்படியும், காரணாகம முறையிலும் நடைபெற்று வருகின்றன.

வாரந்தோறும் வியாழக்கிழமையும், மாத சஷ்டி, விசாகம் கார்த்திகைநாட்களும் சிறப்பானவை: சித்திரைப்பெருவிழா கந்தசஷ்டிவிழா, திருக்கார்த்திகைவிழா, பங்குனிப்பெருவிழா, (வள்ளி கல்யாணவிழா) இக்கோயிலில் சிறப்புமிக்கவை.

வியாழன்தோறும் வைரவேல் சார்த்துதல், மற்றும் தங்கக் கவசம் சாற்றுதல், ராஜா அங்கிசாற்றுதல், இங்கே சிறப்பு அலங் காரங்களாகும். அடியார்கள் காவடி எடுத்தல், முடிகாணிக்கை, மாவிளக்குப்போடுதல் ஆகியவற்றுடன் பிரார்த்தனை செலுத்து கின்றனர். ஏராளமான திருமணங்களும் காதுகுத்துதல் முதலியன வும் நிகழ்கின்றன.

இத்தலத்தில் வச்சிரதீர்த்தம் (கோயில்கிணறு), குமார தாரை, (காவிரித்துறை), சரவணதீர்த்தம், நேத்திரபுஷ்கரணி பிரம்மதீர்த்தம் என்னும் ஐந்து புண்ணியப்புனல்கள் உள்ளன. தலவிருட்சம் நெல்லி: பூமிபிராட்டியே நெல்லிமரமாக இருந்து இங்கே கந்தனை வழிபடுவதாகத் தலமான்மியம் கூறும்.

தற்போதுள்ள கருங்கல் திருப்பணிகள் 400 ஆண்டுகளுக்கு முற்பட்டவை என்பர். இத்தலச் சிறப்புகள் பிரம்ம கைவர்த்த புராணத்தில் வடமொழியில் உள்ளன என்பர். சுவாமிமலை பிள்ளைத்தமிழ், சுவாமிநாதர் நவமணிமாலை முதலிய நூல்கள் உள்ளன. திருவேரகயமக அந்தாதியும் உள்ளது. கல்வெட்டுக் களும் உள்ளன

அறநிலைய ஆட்சித்துறையினரால் இக்கோயில் நிர்வகிக்கப் படுகிறது. தங்கரதம் இங்கு உள்ளது. உரியகட்டணம் செலுத் தினால் தங்கரதத்தில் ஏரகச்செல்வர் உலாவருவார். இங்கே வழிபடுவோர்க்கு பல அறைகளும் சத்திரங்களும் விடுதிகளும் கல்யாண மண்டபங்களும் உள்ளன. கும்பகோணத்திலிருந்து நிறைய பஸ்வசதி உள்ளது.

மதுரை மாரியப்ப சுவாமிகள் தனக்குப் பாட்டு வரவில்லை என்பதற்காக இங்கே முருகன் சந்நிதியில் தன் நாவை அறுத்துக் கொண்டு பாடியபின் அவருக்கு நாக்கு வளர்ந்துள்ளது. மாவிளக்கு ஏற்றிக் குன்ம நோய் நீங்கிய அற்புதம் பல உள்ளன. கண் ஒளி பெற வேண்டுவோர் நேத்திர விநாயகரை வழிபடல் வேண்டும்.

அருணகிரி நாதர் 38 திருப்புகழ்ப் பாக்களால் இங்கே சுவாமிமலை நாதனைப் பரவியுள்ளார். அப்பாடல்கள் சுவை மிகுந்தவை.

காவிரியின் வடகரையிலுள்ளது இத்தலம் என்பதை "காவேரி வடகரைச் சாமிமலை", "காவேரி நேர் வடக்கிலே வாவி பூமணத்த காவார் சுவாமி வெற்பு", "ஏரகத்தின் முருகோனே, தருகாவிரிக்கு வடபாரிசத்தில் சமர் வேலெடுத்த பெருமாளே", "குடகாவிரிக்கு வடபாலார் திருவேரகத்தில் உறைவாய்", "காவிரியின் வடபுறஞ் சுவாமிமலை மிசை விளங்கு தேவர் பெருமாளே" என்னும் இத்தலத் திருப்புகழ் பகுதிகள் உறுதி செய்கின்றன. இத்தலம் ஞான தபோதனர்கள் சேரும் சிறப்புடையது என்பதை "ஞானத் தபோதனர்கள் சேரும் சுவாமிமலை வாழும் பெருமாளே" என்று பாடுகிறார். இந்திரன் திருமால், பிரமன், வணங்கிய தலம் இது என்றும், வேலாயுதம் சதகோடி உதய சூரியர்களின் உருவொளி கொண்டது என்றும் சிவபிரான் நின்று உபதேசம் கேட்க முருகவேள் குருவாயமர்ந்து யோகத்திருந்து உபதேசித்த தலம் இது என்றும், கயிலை மலையின் கொடுமுடியே சுவாமிமலை என்றும், பஞ்சாட்சர தியானம் அவசியம் என்றும், இராமர் பாணம் யார் யாரைக் கொன்றது என்றும் இத்தலத்தில் திருப்புகழ்ப் பகுதிகள் காட்டுகின்றன.

நோய்வகைகளைக் கூறிக் காமநோயால் பரத்தையர் தொடர்பால் வரும் நோய்களை "மாதர்தரு பூஷணங்கள்" எனப் பரிகாசமாக "வாதமொடு" எனத் தொடங்கும் திருப்புகழில் அருணைவள்ளல் பேசுவார்.

> "நீ வேறெனாதிருக்க நான் வேறெனாதிருக்க
> நேராக வாழ்வதற்கு உன் அருள்கூர
> நீடார் சடாதரத்தின் மீதே பராபரத்தை
> நீகாண் எனவனைச் சொல் அருள்வாயே"

(நாவேறு ...)

சுவாமி மலையில் இருந்த பொழுது அருணகிரி நாதர் திருஎழுகூற்றிருக்கை (இரதபந்தம்-சித்திரக்கவி) ஒன்றும் பாடியுள்ளார். கும்பகோணம் திருப்புகழில் சித்ரத் தமிழால் உந்தன் செம்பொன் ஆர்வத்தைப் பகர்வேனோ என்று கேட்ட அருணகிரி நாதர் அடுத்துள்ள சுவாமிமலையில் திருஎழுகூற்றிருக்கையாம் சித்ரக்கவி பாடி தன் எண்ணம் நிறைவேறும் பேறு பெற்றார் என்பது குறிப்பிடத்தக்கது திருப்புகழ் சாரமாக விளங்கும் இக்கவி இத்தலத்தில் இரத பந்தமாகவே சென்னை திருவல்லிக்கேணி முருகன் திருவருட்சங்கத்தினர் முயற்சியால் சலவைக் கல்லில் பதிப்பிக்கப் பெற்றுள்ளது மற்றொரு சிறப்பாகும்.

*தருணமிதையா மிகுத்த கனமதுறுநீள் சவுக்ய*
*சகல செல்வ யோகமிக்க பெருவாழ்வு*
*தகைமை சிவஞான முத்தி பரகதியும் நீகொடுத்து*
*தவிபுரிய வேணு நெய்த்த வடிவேலா*
*அருணதள பாதபத்ம மதுநிதமுமே துதிக்க*
*அரியதமிழ் தானளித்த மயில்வீரா*
*அதிசயம் அநேகமுற்ற பழநிமலை மீதுதித்த*
*அழக திருவேரகத்தின் முருகோனே!*

(சரணகமலாலயத்தை)

## திருவலஞ்சுழி விநாயகப் பிரியன்

*என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இருங்கடல் வையத்து*
*முன்னை நீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்*
*மன்னு காவிரிசூழ் திருவலஞ்சுழி வாணனை வாயாரப்*
*பன்னி ஆதரித் தேத்தியும் பாடியும் வழிபடும் அதனாலே.*

—(திருஞான சம்பந்தர்)

மலையே இல்லாத தஞ்சை மாவட்டத்தில் சுவாமிமலைக் கோயில் கருங்கல்லாலேயே கட்டுமலையாக அமைந்துள்ளது ஓர் அதிசயம் என்றால் அதற்குத் தெற்கில் ஒருகல் தொலைவிலமைந்துள்ள திருவலஞ்சுழியில் காணப்பெறும் சுவேத விநாயகர் கோயில் ஒரு சிற்பக் காட்சி சாலையாக நம்மை வியப்படையச் செய்கின்றது. இங்குள்ள கருங்கற் பலகணி (ஜன்னல்) உலக அதிசயங்களில் ஒன்று என்று கூறினால் மிகையில்லை. இதனை எல்லாம் எண்ணித்தானோ என்னவோ "திருவலஞ்சுழி வாணனை வாயாரப் பன்னி ஆதரித்து ஏத்தியும் பாடியும் வழிபட என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே!" என்று திருஞான சம்பந்தப் பெருமான் பாடியருளினார் போலும்! கும்பகோணத்திலிருந்து தஞ்சை செல்லும் பஸ் வழியில் இக் கோயிலுக்கருகிலேயே இறங்கலாம். கும்பகோணத்திலிருந்து டவுன் பஸ் வசதியும் உண்டு. இங்கே மூத்த பிள்ளையாரை வணங்கிய பின்னரே, சுவாமிமலையில் இளைய பிள்ளையாரை (முருகனை) வழிபடல் சிறப்பு என்பர் ஆன்றோர்.

முன்னால் விநாயகரது தனிக்கோயில். பின்னால் பிரம்மாண்டமான சிவன்கோயில். இறைவர்: கபர்தீஸ்வரர் (சடைமுடி நாதர்) கற்பகநாதேசுவரராகவும் இறைவி பெரிய நாயகியாகவும் விளங்குகின்றனர். மிகவும் தொன்மையான கோயில் இது.

அருகில் அரிசொல்லாறு ஓடுகிறது. இந்திரன் கடல் நுரையால் அமைத்து வழிபட்ட விநாயகர் சுவேத விநாயகர். அவருக்குப் பச்சைக் கற்பூர அபிடேகந்தான். விநாயகருக்குச் சிறப்பான உற்சவங்கள் இங்கே நடைபெறுகின்றன.

பிலத்தில் சென்ற காவிரி, ஏரண்ட முனிவரைப் பலி கொண்டபின் வலமாகச் சுழித்தெழுந்ததால் இத்தலம் வலஞ்சுழி என்ற பெயர் கொண்டது என்பர். துதிக்கை வலமாகச் சுழித்துள்ள விநாயகர் சந்நிதி இருப்பதாலும் இப்பெயர் பொருத்தமே.

இக்கோயிலில் இறைவி இறைவனுடன் திருமணக் கோலத்தில் வலது பக்கம் சந்நிதி கொண்டுள்ளாள். அறுபத்து நான்கு சக்தி க்ஷேத்திரங்களில் இதுவும் ஒன்று. இங்கே உள் பிரகாரத்தில் ஆறுமுகமும் பன்னிரு கரங்களும் கொண்டு கந்தவேள் மயில் மீதமர்ந்து வேல், சேவல்கொடி கொண்டு கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவரும் அருகில் நிற்கின்றனர். உற்சவமூர்த்தி ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு திகழ்கின்றார்.

முருகவேளுக்குக் காரணாகம முறையில் இரண்டுகால வழிபாடுகள் நிகழ்கின்றன. மாதக் கார்த்திகை சிறப்புடையது; கந்தசஷ்டி, திருக்கார்த்திகை விழாக்கள் நடைபெறுகின்றன.

இத்தலப் புண்ணியப் புனல் ஜடாதீர்த்தம் (குளம்) கோயிலுள்ளேயே உள்ளது. அரிசொல்லாறு மற்றொன்று. தல விருட்சம் வில்வம்.

இத்தல சுவேத விநாயகராம் வெள்ளைப் வாரணப் பிள்ளையார் வேண்டுவார்க்கு வேண்டுவன வழங்கும் வள்ளல்; இந்திரனால் பூசிக்கப் பெற்றவர். சனகர், முத்தலர், ஹேரண்ட முனிவர், முதலியோர் வழிபட்ட சடைமுடிநாதரை திருஞான சம்பந்தர் மூன்று பதிகங்களாலும் திருநாவுக்கரசர் இரு பதிகங்களாலும் பரவி வழிபட்டனர். திருநாவுக்கரசர் பதிகங்களில் ஒரு பதிகம் முழுமையாகவும் மற்றொரு பதிகத்தில் ஒரு பாடல் மட்டும் கிடைத்துள்ளன. நக்கீரர் திருவலஞ்சுழி மும்மணிக் கோவை பாடியுள்ளார். இது 11-ஆம் திருமுறையிலுள்ளது.

இத்தலத்து முருகனை அருணகிரி வள்ளல் பாடிப் பரவிய ஓர் திருப்புகழ் கிடைத்துள்ளது (மகரகுண்டல... ,..) இப்பாடலில் இராமாயண நிகழ்ச்சிகளை நினைவூட்டி, மகா யோகிகள் விளங்கும் சுவாமிமலைக்கருகில் திகழும் திருவலஞ்சுழிப் பெருமானே என்று முடிக்கிறார்.

*சிகர வும்பர்கள் பாகிராதிகள்*
*பிரபை யொன்று பிராகாதாதிகள்*
*சிவசடங்க மொஉடிசாணுதிகள் சிவமோனர்*
*தெளியு மந்த்ர கலாபா யோகிகள்*
*அயல்விளங்கு சுவாமீகாமரு*
*திருவலஞ்சுழி வாழ்வே தேவர்கள் பெருமாளே!*

இத்திருப்புகழில் கண்ணை வருணிப்பது சிறப்புடையது.

திருப்பாற்கடலைத் தேவர்களும் அசுரர்களும் கடைந்த போது அமுதம் எழாமை கண்டு விநாயகர் பூசை செய்தால் கிடைக்குமென்றவுடன் அருகிருந்த கடல் நுரையைக் கொண்டு தேவேந்திரன் விநாயகர் செய்து வழிபட்டுப் பின் பாற்கடல் கடைந்து அமுதம் பெற்று பின்பு தேவேந்திரன் பூசித்து வந்த இத்தல விநாயகர் அவனாலேயே பிரதிட்டை செய்யப்பட்டது என்பதும், அகலிகை சாப விமோசனம் அருளிய பலிபீட விநாயகர் இங்கு விளங்குகிறார் என்பதும் இத்தல விநாயகரை வழிபட்டால் வேண்டியன வேண்டியாங்கு எய்தலாம் என்பதை இன்றும் காட்டி விளக்குகின்றன.

இங்கே இரு கிளைகளுடன் தென்னை விளங்குகின்றது.

சுவாமிமலை திருக் கோயிலின் நிர்வாகத்திலுள்ள இக் கோயில் அண்மையில் ராஜகோபுரத் திருப்பணியும் நிறைவேறி கம்பீரமாக நம்மை வரவேற்கின்றது.

இக்கோயிலில் எண்ணற்ற கல்வெட்டுக்கள் உள்ளன. இத்தலத்தில் சனீஸ்வரன் கிழக்கு நோக்கித்தனியே எழுந்தருளியுள்ளார். நவக்கிரகங்கள் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

## திருச்சத்திமுத்தத்துச் சகலகலாதரன்

*கோவாய் முடுகியடுதிறற் கூற்றங் குமைப்பதன் முன்*
*பூவாரடிச் சுவடென் மேற்பொறித்துவை போகவிடில்*
*மூவா முழுப்பழி மூடுங்கண்டாய் முழங்குந் தழற்கைத்*
*தேவா திருச்சத்தி முற்றத்துறையுஞ் சிவக்கொழுந்தே.*

— **திருநாவுக்கரசர்.**

இறைவி தவமிருந்தாள் இறைவனை மணக்க வேண்டி! சிவபெருமான் ஜோதி வடிவில் தோன்றி தவத்திற்கு இடையூறு செய்தார். அஞ்சிய அம்பிகை சுவாமியைத் தழுவிக்கொண்டு முத்தங் கொடுத்தாள். சத்தி முத்தம் கொடுத்ததால் சத்தி முத்தமாகி பின் சத்தி முற்றம் என மருவிவிட்டது இத்தலம். இத்தலத்தில் அம்பிகை இறைவனை தழுவும் ஆலிங்கன மூர்த்தி அற்புதமாக அமைந்துள்ளது. இத்தலத்திற்குத் திருநாவுக்கரசர் வழிபட வருகிறார். சமண சமயத்தில் போய் மீண்ட அவருக்கு இவ்வுடலைத் தூய்மையாக்கிக் கொள்ள வேண்டும் என்ற அவா நெடுநாட்களாகப் பெருகி வருகிறது. இத்தலத்திறைவனை வழிபடும்போது அவ்வெண்ணம் பீறிட்டுக்கொண்டு வருகின்றது. காலன் இவ்வுடலைக் கவர்வதன் முன் உன்னுடைய மலர்ப் பாதங்களை என்மீது சூட்டி அருள வேண்டும். இல்லையேல் உனக்கு முடிவில்லாத முழுப்பழி வந்து சேரும் என்று அன்பு எச்சரிக்கை விடுக்கிறார். இறைவிக்கருளிய இத்தலம் கருணைப் பொலிவு மிக்கதன்றோ! நாவுக்கரசரது கோரிக்கையும் ஏற்கப் படுகிறது.

*"கோவாய் முடுகி என்றெடுத்துக் கூற்றம்வந்து*
*குமைப்பதன் முன்*
*பூவாரடிகள் என்தலைமேல் பொறித்து வைப்பாய் எனப்*
*புகன்று*

*நாவலர் பதிகம் பாடுதலும் நாதன் தானும் நல்லூரில்*
*வாவா என்றே அருள்செய்ய வணங்கி மகிழ்ந்து வாகீசர்"*

என்று இந்நிகழ்ச்சியை அற்புதமாக காட்டுவார் சேக்கிழார். நல்லூருக்கு வா என்று இறைவன் அருள, வாகீசரும் அங்கே இறைவனது திருவடி தீட்சை பெற்று இன்புறுகிறார். திருச்சத்தி முத்தம் அவ்வளவு அருள் வளம் மிக்கது.

இங்கே இறைவன் சக்திவனேசுவரர், சிவக்கொழுந்தீசுவரர் எனவும், இறைவி பெரியநாயகி (பிரஹந்நாயகி) எனவும், வழி படப் பெறுகிறார். இத்தலத்தில் கந்தவேள் ஆறுமுகமும் பன்னிரு கரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்த கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவரும் அருகில் விளங்குகின்றனர். சிற்பச் சிறப்புடன் இம் மூர்த்தி விளங்குகின்றார். உற்சவ மூர்த்தி ஒருமுகமும் நான்கு கரங் களும் கொண்டு தேவியர் இருவருடன் எழுந்தருளியுள்ளார்.

முருகவேளுக்குத் தினமும் இரண்டுகால வழிபாடுகள் காரணாகம முறையில் நிகழ்ந்து வருகின்றது. மாதக் கிருத்திகை சிறப்பு. கந்த சஷ்டி விழா, திருக் கார்த்திகை விழா முதலியன நடைபெறுகின்றன.

சூலபுஷ்கரணியும், சக்தி தீர்த்தமும் (கிணறு) உள்ளன. தலவிருட்சம் வில்வம்.

இத்தல முருகனை அருணகிரிநாதர் 'கடகரி' எனத் தொடங்கும் திருப்புகழால் பரவிப் போற்றியுள்ளார். "சத்தி முத்தம்" என்றே அவர் குறிப்பிட்டு இத்தல மான்மியத்தை நினைவுபடுத்துவது குறிப்பிடத்தக்கது.

இத்தலத்தின் மிக அருகில் உள்ளது பட்டீச்சரம்* என்னும் திருத்தலம்-திருஞான சம்பந்தருக்கு முத்துப் பந்தல் அளித்து இறைவன் உவந்த தலம்; திருஞானசம்பந்தர் வழிபட வேண்டி நந்தியைச் சிவபெருமான் விலகச் சொன்ன தலம்; அற்புதமான

---

*பட்டீச்சரத்தில் உள்ள திருமுருகன் ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டு விளங்குகிறார். இந்த ஆறுமுகப் பெருமான் சோழன் மாளிகையில் காவல் தெய்வமாக இருந்ததாகவும், பின்பு அங்குள்ள கோயில் இடிபாடுற்றதால் இக்கோயிலில் பிரதிட்டை செய்விக்கப் பட்டதாகவும் அறிகின்றோம்.

துர்க்கையம்மன் சந்நிதி அமைந்த தலம்; கோவிந்த தீட்சிதர் திருப்பணி கொண்ட சிற்பச் சிறப்பு மிக்க தலம். பழையாறை வடதளி என்ற திருத்தலமும் இதனருகில் உள்ளது. சமணர்களால் மூடப்பட்டிருந்த இத்தலத்தை நாவுக்கரசர் சத்தியாக்கிரகம் செய்து, திறக்கச் செய்து வழிபட்ட பெருமையைப் பெரிய புராணம் இனிது எடுத்தியம்பும்.

ஆவூர், திருவலஞ்சுழி, சுவாமிமலை ஆகிய தலங்களும் இதனருகில் அமைந்தவையே.

அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் உள்ளது சக்திமுத்தம். கும்பகோணத்தின் தென்மேற்கே 5 கல் தொலைவிலுள்ள இத்தலத்திற்குக் குடந்தையிலிருந்து டவுன் பஸ் வசதிகள் அதிகம் உள்ளன. தாராசுரம் இரயில் நிலையத்திலிறங்கி தெற்கில் 2 கல் தொலைவிலும் இத்தலத்தை அடையலாம்.

# பழையாறைப் பொற்கோயிலான்

*ஆதியைப் பழையாறை வடதளிச்*
*சோதியைத் தொழுவார் துயர்தீருமே.* – திருநாவுக்கரசர்.

பழையாறை என்றவுடன் நம் நினைவிற்கு வருவது நாயன்மார்களுள் பக்திச்சிறப்பால் கோவணநிறைக்குத் தானும் தன்குடும்பத்தினரும் பொன்னும் மணியும் தூசும் துகிலும் சேரத்துலாக்கோல் ஏறிய அமர்நீதிநாயனார் தொண்டேயாகும். சேக்கிழார் பெரிய புராணத்தில் பழையாறைவணிகர் அமர்நீதிநாயனார்வரலாற்றைச் சுவைப்படக்காட்டுகின்றார். திருநாவுக்கரசர் இப்பழையாறையிலுள்ள வடதளி என்னும் கோயில் சமணரால் மூடப்பட்டது கண்டு வருந்தி–உண்ணாநோன்பிருந்து இறைவன் அருளால் மன்னன் உதவியுடன் அக்கோயிலை மீண்டும் திறக்கச்செய்து வழிபாடாற்றினார் என்பதையும் பெரியபுராணம் பெருமிதமாகக் கூறுகின்றது. சோழர்களின் உரிமைத்தானமாகிய பழையாறை இன்று பெரிதும் சிதைந்து மிகச்சிறிய கிராமமாகத் திகழ்கின்றதைப் பார்க்கும்போது அக்காலத்தில் இந்நகரம் இருந்த பொலிவை நம்மால் எண்ணிப்பார்க்காமல் இருக்கமுடியவில்லை.

கும்பகோணத்தின் தென்மேற்கில் 4 கல் சென்றால் பட்டீச்சரத்தை அடைகிறோம். டவுன்பஸ் வசதிகள் மிகுதியாக உள்ளன. பட்டீச்சரத்திற்குக்கிழக்கே ½ கல்லில் பழையாறை வடதளி உள்ளது. இங்கே கட்டுமலைக்கோயில். கோச்செங்கட் சோழநாயனார் திருப்பணி. இறைவர்: வடதளிநாதர். இறைவி கௌரியம்மை. வடதளியிலிருந்து ½ கல் கிழக்கே சென்று பம்பப்படையூரை அடைகின்றோம். அங்கே திருமலைராஜன் ஆற்றைக்கடந்து ½ கல் சென்றால் பழையாறை என்னும் தலத்தை அடைகிறோம். இங்கே இறைவர்: சோமேசர் இறைவி: சோமகலா நாயகி. இங்கிருந்த சிதைந்த கோயிலிருந்த திருவுருவங்களை

எடுத்து அண்மைக்காலத்தில் ஒரு கோயிலமைத்து பிரதிட்டை செய்துள்ளார்கள். கயிலாயநாதர் திருவுருவம் மிக அற்புதமானது.

அருணகிரிநாதசுவாமிகள் இத்தலங்களையெல்லாம் பாடியிருப்பார். நமக்குப் பழையாறைத்திருப்புகழ் ஒன்றுமட்டும் கிடைத்துள்ளது. "தோடுற்றுக்" என்று தொடங்கும் திருப்புகழ் அது. இத்தலத்தில் ஒருமுகமும் நான்குதிருக்கரங்களும் கொண்டு கந்தவேள் விளங்குகிறார். இக்கோயில்களிலெல்லாம் ஒருகாலவழிபாடுதான் நடைபெறுகின்றது. மக்கள் ஆதரவும் மிகக்குறைவாக உள்ளது, இராஜராஜனும் இராஜேந்திரனும் தோன்றிய சோழர் பூர்வீகப்பதியாகிய இத்தலத்திலுள்ள கோயில்கள் பொலிவுடன் விளங்க அன்பர்கள் முன்வரவேண்டும்.

பழையாறைக்குத் திருநாவுக்கரசர் அருளியபதிகம் ஒன்று கிடைத்துள்ளது.

ஆடத்தக் காருமை பாதியர்
வேதப்பொற் கோவண வாடையர்
ஆலித்துத் தானருளூறிய முருகோனே
ஆடப்பொற் கோபுர மேவிய
ஆடிக்கொப் பாமதிள் சூழ்பழை
யாறைப்பொற் கோயிலின்மேவிய பெருமாளே!

## சங்கரதியாகர் வந்துறை நல்லூர்

*நினைந்துருகும் அடியாரை நையவைத்தார்*
*நில்லாமே தீவினைகள் நீங்கவைத்தார்*
*சினந்திருகு களிற்றுரிவைப் போர்வைவைத்தார்*
*செழுமதியின் தளிர்வைத்தார் சிறந்துவானோர்*
*இனந்துருவி மணி மகுடத்தேறத்துற்ற*
*இனமலர்கள் போதவிழ்ந்து மதுவாய்ப்பில்கி*
*நனைந்தனைய திருவடி என்தலைமேல் வைத்தார்*
*நல்லூர்எம் பெருமானார் நல்லவாறே.*

—திருநாவுக்கரசர்.

அருணகிரிநாதர் திருநல்லூர் என்னும் தலத்தைவழிபட்டுப் போற்றிய ஓர்திருப்புகழ் ''மூலமுண்டக'' என்று தொடங்கு கின்றது. அந்நல்லூர் எது?

தணிகைமணியவர்கள் இத்தலம் திருஞானசம்பந்தர் முத்தி எய்திய நல்லூர்ப்பெருமணம் (ஆச்சாள்புரம்) என்று காட்டியுள் ளார்கள். அதற்குக்காரணம் அதில் வரும்

*'' சீல வெண் பொடியிடாத வெஞ்சமணர்*
*மாள வெங்கழுவி லேறு மென்றுபொடி*
*நீறிடுங்கமல பாணி சந்த்ரமுக கந்தவேளே''*

என்றபகுதி திருஞானசம்பந்தரைக் குறிக்கின்ற தன்மையே யாகும். திருமுருக கிருபானந்தவாரியாரும் தணிகைமணியவர் களைப் பின்பற்றி இத்தலத்தையே திருநல்லூர் எனக் குறித் துள்ளார். ஆனால் இத்திருப்புகழின் கடைசிப்பகுதியைச் சற்று உற்று நோக்கினால் ஒருண்மை புலப்படும்.

"தேவரம்பையமுதீண மங்கைத்கு
மான ஊணந்தபுய தீர சங்கரதி
யாகர் வந்துறை நலூர மர்ந்துவளர் தம்பிரானே.

"சங்கரதியாகர் வந்துறைநல்லூர்" என்கிருர்.

திருஞானசம்பந்தர் நம் பாண்டார்நம்பியின் செல்வியைத் திருமணங்கொண்டு சிவசோதியில் கலந்த நல்லூர்ப்பெருமணம் அல்லது திருப்பெருமணநல்லூரில் சிவபெருமான் திருப்பெயர் சிவலோகத்தியாகராஜசுவாமி என்பதாகும். "சீலவெண்பொடி" என்றகுறிப்பும் இங்குள்ள இறைவியின் திருவெண்ணீற்றுமை என்பதைக்குறிக்கும். திருஞானசம்பந்தரை முருகனின் அவதாரமாகக்கண்ட அருணகிரிநாதர் இத்தலத்தைப்பாடியிருப்பார் என்பதிலும் ஐயமில்லை.

ஆனுல் "சங்கரதியாகர்" "வந்துறை"—வந்துஉறைந்த நல்லூர் என்பதில் ஒருகுறிப்பு புலப்படுகின்றது. இதனைத் தணிகைமணியவர்களும் கீழ்க்கண்டவாறு குறித்துள்ளார்கள்.

"கும்பகோணத்துக்கடுத்த சுந்தரப்பெருமாள் கோயில் ரயில்வே ஸ்டேஷனுக்குத்தெற்கு 2 மைல் தூரத்திலுள்ள நல்லூர் என்னும் தேவாரம் பெற்ற ஸ்தலத்தில் வீதிவிடங்கத்தியாகர் மூன்றுநாள் வந்து உறைந்ததாகத் திருநல்லூர்ப்புராணம் கூறும்" [முருகவேள் திருமுறை; IV. பக். 282] திருநல்லூர் என்று குறித்தால் திருநாவுக்கரசர் திருவடி தீட்சைபெற்ற நல்லூரையும் திருப்பெருமணநல்லூர் என்று குறித்தால் திருஞானசம்பந்தர் சிவசோதியில் கலந்த தலத்தையும் குறிப்பது சைவமரபு கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகரும் தாமியற்றிய "திருப்பெருமணநல்லூர்ப்புராணம்" என்ற பெயர்சூடி இதனை உறுதிப்படுத்தியுள்ளார்.

இனி திருநல்லூர்ப்புராணம், 25 வது வீதிவிடங்கச் சருக்கத்தைச்சற்று நோக்குவோம்.

"முசுகுந்தன் ஆட்சிக்காலத்தில் அசுரர்களது கொடுமைக்கு ஆளாகிய தேவர்கள் அவன்பால் வந்து முறையிடலானுர்கள். தேவர்களது முறையீட்டைக்கேட்ட முசுகுந்தன், 'அசுரர்களைச் சின்னபின்னஞ்செய்து, உங்களைக்காப்பாற்றுகிறேன்' என்று கூறினுன். உடனே முசுகுந்தன் தேவர் கூட்டத்தோடு சேர்ந்து

அசுரர் கூட்டத்தை அழித்துவெற்றிபெற்ருன். இந்திரன் முசுகுந்தனைத்தழுவிப்புகழ்ந்து என்னுடைய அரசை எனக்கு மீட்டுத்தந்தாய் என்று பாராட்டினுன்.

"இந்திரன், முசுகுந்தனைப்பார்த்து 'மன்னனே, நீ இன்று எனக்குச்செய்த உதவிக்குக்கைம்மாறுசெய்தல் என்பதுஇயலாது. ஆயினும் வேண்டுவனகேள் கொடுக்கிறேன்" என்று கூறினுன் இவ்வாறு இந்திரன் கூறிய அளவில் உமையோடும் குமரனேடும் அமர்ந்த வீதிவிடங்கரை எனக்குக்கொடுத்தருளவேண்டும் என்று முசுகுந்தன் வேண்டினுன்.

"முசுகுந்தன் இப்படிக்கேட்டலும் இந்திரன், திருமால் முன்பு தமக்கு நல்கிய மூர்த்தியை அளித்தான். முசுகுந்தன் இறைவனைக்கொண்டு மீண்டு சோலைகள் சூழ்ந்ததாய நல்லூரை அடைந்தான் அடைந்தவன் மூன்றுநாட்கள் வீதிவிடங்கரைப் பீடத்தில் வைத்தாட்டினுன். தேவர்களும் உடனிருந்து ஆடினர். பின்னர், முசுகுந்தன் இறைவனுடைய அசரீரிப்படி திருவாரூரில் வீதிவிடங்கரைக்கொண்டு சேர்த்தான்."

" அந்தணூருர் அதற்கு எய்துங்காலையில்
எந்தை நல்லூரிடத்தமர்ந்தான் என்ருற்
சுந்தராசலத் தொல்பதி யாவைக்கும்
முந்துமாறு மொழியவும் வேண்டுமோ?"

— நல்லூர்ப்புராணம்.

இப்பொழுது மீண்டும் திருப்புகழ்வரியைக்காண்போம். "சங்கர தியாகர் வந்துறை நல்லூர்" இங்கே வந்து சிலநாட்கள் உறைந் தார் (தங்கினுர்) என்ற பொருளில் இவ்வரி திருநல்லூரையே குறிக்கின்றது எனலாம். திருப்பெருமணநல்லூரில் இறைவன் பெயரே சிவலோகத்தியாகர் என்பது. அவர் அத்தலத்தில் வந்து உறையவில்லை, அங்கேயே எழுந்தருளிவிட்டார். சப்தவிடங்கத் தலங்களில் அத்தலம் அடங்கவும் இல்லை. ஆனுல் திருநாவுக்கரச ருக்குத் திருவடிசூட்டிய தொன்மைமிக்க திருநல்லூரில் தியாகேசப் பெருமான் வந்து உறைந்துபின் திருஆரூருக்கு எழுந்தருளினுர் என்றபுராணச்சான்றுகொண்டு பார்க்குமிடத்து அருணகிரிநாதரது இத்திருப்புகழ் இத்தலத்திற்கே உரியது என் பதில் ஐயமில்லை

சுந்தராசலம் எனவும் ஆண்டான்நல்லூர் எனவும் வழங்கும் இத்தலம் தஞ்சை-கும்பகோணம் பஸ்வழியில் வாழைப்பழக் கடை என்னும் இடத்திலிறங்கி ஒருகல் தென்கிழக்கே சென்று அடையத்தக்கது. சுந்தரப்பெருமாள் கோயில் இரயில்நிலையத் திற்குத்தெற்கே 2 கல் தொலைவில் அடையலாம். பிருகுமுனிவர் வண்டுருவில்தொளைத்த இலிங்கம் பஞ்சவர்ணேசுவரர்,பெரியாண் டேசுவரர், கலியாணசுந்தரேசுவரர் எனப்போற்றப்படுகிறார். இறைவி கல்யாணசுந்தரி, பர்வதசுந்தரி, கோச்செங்கட்சோழ நாயனாரது மாடக்கோயில்களுள் ஒன்று. இலிங்கத்தின் பின்னால் இறைவனது திருமணக்கோலத்தை இன்றும் காணலாம். அது அகத்தியருக்கு அருளியகாட்சியாகும். இறைவன் ஒருநாளைக்கு ஐந்து வண்ணமாகத்தோன்றுவார் என்பது தலமான்மியம். திருஞானசம்பந்தர் மூன்றுபதிகங்களும் திருநாவுக்கரசர் இரண்டு பதிகங்களும் கொண்டதலமிது. சப்தசாகர தீர்த்தம் என்ற திருக்குளம் கார்த்திகைஞாயிறு, மாசிமகநீராடற் சிறப்புமிக்கது. அமர்நீதிநாயனார் வாழ்ந்தபதிஇது.

இத்தலத்தில் முருகவேள் ஒருதிருமுகமும் நான்குகரங்களும் கொண்டு இருதேவியர் உடன்விளங்க, கிழக்குநோக்கி எழுந்தருளி யுள்ளார். காமிகாகமமுறையில் இரண்டுகால வழிபாடுகள் நிகழ் கின்றன. கோயிலின் தற்காலநிலை கவலைக்குரியது. திருநாவுக்கரச ருக்கு இறைவன் திருவடி சூட்டியருளிய இத்தலம் சிறப்பாகத் துலங்கச்செய்ய வேண்டும். திருவாவடுதுறையாதீனத்தைச் சார்ந்த இத்திருக்கோயில் இவ்வாறு கவனிப்பாரற்றுக்கிடப்பது வருந்தற்குரியது.

இத்தலத்தில் வெளிப்பிராகாரத்தில் சுந்தரமாகாளி விளங்குகின்றாள். பிற்காலச்சோழர் வரலாற்றுடன் தொடர் புடையவள்இத்தேவி. இத்தலத்திற்கு அருகே ஆவூர்,பட்டீச்சரம் முதலிய தலங்கள் உள்ளன.

# குரங்காடுதுறைக் குமரன்

*கோங்கமே குரவமே கொழுமலர்ப் புன்னையே கொகுடிமுல்லை*
*வேங்கையே ஞாழலே விம்முபா திரிகளே விரவியெங்கும்*
*ஓங்குமா காவிரி வடகரை யடைகுரங் காடுதுறை*
*வீங்குநீர்ச் சடைமுடி யடிகளாரிடமென விரும்பினரே.*

(திருஞானசம்பந்தர்).

*செறித்த மந்தாரை மகிழ்புனை*
*மிகுத்ததண் சோலை வகைவகை*
*தியக்கியம் பேறு நதியது பலவாறுந்*
*திரைக்கரங் கோலி நவமணி*
*கொழித்திடுஞ் சாரல் வயலணி*
*திருக்குரங்காடு துறையுறை பெருமாளே!*

(குறித்தநெஞ்—திருப்புகழ்)

பல்வகை மலர்ச்சோலைகள் மலிந்து ஆறுகள் பலபாயும் வளமுடைய திருக்குரங்காடுதுறையில் குமரவேளைப்பரவும் அருணகிரிநாதர் இருதிருப்புகழ்ப்பாக்களில் இத்தலத்தைக் காட்டுகின்றார். குரங்காடுதுறை என்றவுடன் தேவாரத்தலங் களான தென்குரங்காடுதுறை (திருவிடைமருதூரருகிலுள்ள ஆடுதுறை)யும் வடகுரங்காடுதுறை (கணபதி அக்ரகாரத்தருகி லுள்ள ஆடுதுறை) சிவன்கோயிலும் நம் மனக்கண்முன் வருகின் றன. முன்னையது சுக்ரீவன் வழிபட்டதலம், பின்னையது வாலி வழிபட்டதலம். இதற்கிடையில் திருச்சி மாவட்டத்தில் பெரம்பலூர் வட்டத்திலுள்ள ஆடுதுறை (திருச்சி-தொழுதூர் வழியில் திருமாந்துறை கைகாட்டியிலிருந்து 5 கல்)என்ற தலமும் நம் ஆய்வுக்கு வருகின்றது.

இவற்றுள் அருணகிரிநாத சுவாமிகளின் வருணனைகள், தேவாரத்தலமான வடகுரங்காடுதுறையின் வருணனைகளுடன் இயைந்துகாணப்படுவதால் தெளிவு ஏற்பட்டு வடகுரங்காடு துறையையே அருணகிரிநாதர் பரவிய திருக்குரங்காடுதுறை யெனக்கொள்ள முடிகின்றது.

திருவையாறு-கும்பகோணம் பஸ்வழியில் திருவையாற்றி லிருந்து 11 கல் தொலைவில் ஆடுதுறை சிவன்கோயில் என்னும் கோயிலருகில் இறங்கலாம். இக்கோயில்தான் நாம் காணும் குரங்காடுதுறையாகும். இங்கே சிவபெருமான் தயாநிதீசுவரர், அழகுசடைநாதர், குலைவணங்குநாதர் எனவும், அம்பிகை அழகு சடைமுடியம்மை (ஜடாமகுடநாயகி) எனவும் வழிபடப்பெறு கின்றனர். காவிரி, குடமுருட்டி, கொள்ளிடம் ஆகியநதிகள் பாயும் இடைப்பகுதியில் இத்தலம் அமைந்துள்ளது திருப்புகழ் வரிகளை விளக்குவதாயுள்ளது.

இத்தலத்தில் முருகன் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு நின்றகோலத்தில் மயிலுடன் விளங்குகின்றார். அருகில் தேவியர் இருவரும் உள்ளனர். தினமும் நான்குகாலவழிபாடுகள் நிகழ்கின்றன. சஷ்டி, கார்த்திகை சிறப்புநாட்கள். தலவிருட்சம். தென்னை புண்ணியப்புனல்: காவிரி.

சோழர்கால கல்வெட்டுக்கள் பல உள்ள இக்கோயில் தஞ்சை அரண்மனை தேவஸ்தான நிர்வாகத்தின் கீழ்உள்ளது. திருப்பணி செய்யவேண்டியதலம்இது.

இத்தலத்திற்கருகில் (2 கி. மீ. வடக்கில்) கொள்ளிடக் கரையில் பட்டுக்குடி என்ற தலத்தையும் இங்கு நாம்குறித்தாக வேண்டும், வயலூர் போன்று சிவபெருமானும் ஆறுமுகப் பெருமானும் அமைந்து விளங்கும் இத்திருக்கோயிலில் அருணகிரி நாதர் காட்டும்.

*அலங்கார முடிக்கிரணத் திரண்டாறு முகத்தழகிற்*
*கசைந்தாடு குழைக்கவசத் திரடோளும்*
*அலந்தாம மணித்திரளைப் புரண்டாட நிரைத்தகரத்*
*தணிந்தாழி வளைக்கடகச் சுடர்வேலுஞ்*

*சிலம்போடு மணிச்சுருதிச் சலங்கோசை மிகுத்ததிரச்*
*சிவந்தேறி மணத்தமலர்ப் புணைபாதந்*
*திமிந்தோதி திமித்திமிதித் தனந்தான தனத்தனனத்*
*தினந்தோறு நடிப்பதுமற் புகல்வேளே*

(அலங்கார...திருப்புகழ்)

என்னும் திருக்குரங்காடுதுறை திருப்புகழ்ப்பகுதி விளக்கம் பெறுகின்றது. பட்டுக்குடி முருகன் ஆறுமுகமும் பன்னிருக்கரங்களும் கொண்டு மயிலுடன் விளங்கி இருதேவியர்சூழ அமைந்த மூலவர் திருவுருவம் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றது. இங்கே இடும்பன்சந்நிதிசிறப்புடையது.பட்டுக்குடிக்கோயில் ஆடுதுறைக் கோயிலுடன் இணைந்தவொன்றாகவே சிறந்து விளங்கியிருக்க வேண்டு மென்பது தெளிவு.

# திருச்சக்கரப்பள்ளி சடாட்சரன்

*துட்ட நிக்ரக சந்தித ரப்ரப*
*லப்ர சித்தச மர்த்தத மிழ்த்ரய*
*துட்க ரக்கவி தைப்புக லிக்கர செனுநாமச்*
*சொற்க நிற்கசொ லட்சண தட்சண*
*குத்த ரத்தில கத்திய னுக்கருள்*
*சொற்குருத்வம கத்துவ சத்வஷண் முகநாத*
*தட்ட றச்சமை யத்தைவ ளர்ப்பவள்*
*அத்தன் முற்புகழ் செப்ப வநுக்ரக*
*சத்து வத்தைய ளித்திடு செய்ப்பதி மயிலேறி*
*சட்ப தத்திரள் மொய்த்தம ணப்பொழில்*
*மிக்க ரத்நம திற்புடை சுற்றிய*
*சக்கிரப்பளி முக்கணர் பெற்றருள் பெருமாளே*

(நீட்டெளப் ...திருப்புகழ்)

தஞ்சை மாவட்டத்தில் சப்தஸ்தானப் பல்லக்குகள் உள்ள தலங்கள் பல உள்ளன. அவற்றுள் திருவையாறு, கும்பகோணம், சக்கரப்பள்ளி திருநீலக்குடி முதலியன குறிப்பிடத்தக்கன. இவற்றுள் முதல்மூன்று தலங்களிலும் சப்தஸ்தான(ஏழூர்சுற்றும்) பல்லக்குகள் இன்றும் புறப்பட்டுச் சுற்றி வருகின்றன. திருச் சக்கரப்பள்ளி சப்தஸ்தானப் பல்லக்கு இவற்றுள் தனித் தன்மை வாய்ந்தது. திருச்சக்கரப்பள்ளி – கும்பகோணம் தஞ்சாவூர் பஸ் வழியில் அய்யம்பேட்டைக்கு முன்னால் அமைந்துள்ளது. ஐயம்பேட்டை இரயில் நிலையத்திற்கு மேற்கே 1. கி. மீ.ல் இதனை அடையலாம். திருச்சக்கரப்பள்ளி கோயிலைச்சுற்றி ஒரு இந்து வீடு கூட இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. சந்நிதித்தெரு, நான்கு

மடவிளாகங்கள் எல்லாம் முஸ்லீம் வீடுகளே உள்ளன. ஆயினும் சிவபெருமான் அவர்களுக்கு நடுவே-ஊர் மாறின போதிலும் தான் மாறுதலின்றி விளங்குகின்றார். இத்தலத்தில் சித்திரை மாதத்தில் ஏழூர் பல்லக்குப் புறப்படுகின்றது. அரிமங்கை, சூல மங்கை. நந்திமங்கை, பசுபதி மங்கை. தாழை மங்கை, புள்ள மங்கை என்னும் ஆறு தலங்களையும் இப்பல்லக்கு சுற்றி வரும். சூலமங்கைதான் சூலமங்கலம்; பசுபதிமங்கை-பசுபதி கோயில்.

சக்கரப்பள்ளி-பிராமி பூசித்தது; அரிமங்கை-மாகேசுவரி பூசித்தது; சூலமங்கை-கௌமாரிபூசித்தது நந்திமங்கை-வைணவி பூசித்தது; பசுபதி மங்கை-வராகி பூசித்தது; தாழை மங்கை-மாகேந்திரி பூசித்தது; புள்ளமங்கை-சாமுண்டி பூசித்தது. இப்படி சப்த மாதர்களும் பூசித்த ஏழுதலங்களையும் கொண்ட ஏழூர்ப் பல்லக்கு முஸ்லீம்கள் வாழும்பகுதியில் இன்றும் கொண்டாடப் பெறுகிறது எனில் அது சிறப்புடையதன்றோ!

திருச்சக்கரப்பள்ளியில் இறைவன்: சக்ரவாகீஸ்வரர், பசுபதி நாயகேசர், இறைவி: தேவநாயகி. இங்கே ஸ்ரீசக்கரம் பிரதிட்டை உள்ளதாகக் கூறுவர். சக்ரவாகப் பறவை பூசித்த தால் இறைவன் சக்ரவாகீஸ்வரர் என்ற பெயர் கொண்டார் என்று தலமான்மியம் கூறும். திருமால் சிவபெருமானை இத் தலத்தில் பூசித்துச் சக்கரம் பெற்றார் என்பாரும் உளர்.

புண்ணியப் புனல்; காகதீர்த்தம், காவிரி.

இங்கே முருகவேள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு, மயில் பின்புறம் நிற்க, நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். அருகில் இரு தேவியரும் நிற்கின்றனர் அருமையான திருவுருவங்கள்.

காரணாகம முறையில் முருகனுக்குத் தினமும் ஒரு கால பூசை நிகழ்கிறது. மாதக் கார்த்திகை சிறப்பு. கந்த சஷ்டி திருக்கார்த்திகை, பங்குனி உத்திர விழாக்கள் நடைபெறும்.

திருஞான சம்பந்தர் இத்தலப் பெருமானைப் போற்றிய ஓர் பதிகம் கிடைத்துள்ளது. அருணகிரிநாதர் "திட்டெனப்" என்ற திருப்புகழால் முருகவேளை இங்கே போற்றியுள்ளார் மணிப்பிரவாள நடையில் அமைந்த இப்பாடல் சந்தச் சிறப் புடையது. அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது. சுவாமிமலைக் கோயிலுடன் இது இணைக்கப்பட்டுள்ளது. இத்தலம் வழிபட விழைவோர் ஐயம்பேட்டையில் ஸ்ரீ சதாசிவ பிரும்மேந்திரர் பிரதிட்டை செய்துள்ள தண்டபாணி கோயிலை வழிபட்டு அக்கோயில் குருக்களை அழைத்துக் கொண்டு திருச்சக்கரப்பள்ளியை வந்து வழிபடலாம். அவரே இரு கோயில் களுக்கும் பூஜகர்.

கோயில் தொன்மையானது. சோழனும் இராணியும் சிவபெருமானைத் தொழும் சிற்பம் உள்ளது.

# காவுலாவிய காவளூர்

*கான வேடர்சி றுக்குடி லம்புன*
*மீதில் வாழித ணத்திலு றைந்திடு*
*காவல் கூருகு றத்திபு ணர்ந்திடு மணிமார்பா*
*காவு லாவிய பொற்கமு கின்திரள்*
*பாளை வீசம லர்த்தட முஞ்செறி*
*காவளூர்தனில் முத்தமிழுந்தெறி பெருமாளே.*

...(மாலை நேர்விழி... ...திருப்புகழ்)

தமிழ் நாட்டில் தஞ்சை மாவட்டத்தில் ஒரு முருகன் கோயில்! ஆறு மண்டபங்கள் அங்கே உள்ளன. மூலவர் விமானம் அறுகோணத்தில் அமைந்துள்ளது. முருகன் ஆறுமுகமும் பன்னிரு கரமும் கொண்டு மயிலருகில் நின்ற திருக்கோலம். கோயில் சிறிய கட்டுமலை. ஏறுவதற்கோ பன்னிரண்டே படிகள் அற்புதமான தோற்றப்பொலிவு. உற்சவ மூர்த்தி ஒரு முகமும் இரு தேவியரும் கொண்ட ஒப்பற்ற கோலம். முத்துக்குமார சுவாமியைத் வைத்தீசுவரன் கோயிலில் பார்க்கிறோமா என்ற பிரமை இங்கே நமக்கு ஏற்படுகிறது. இப்படிப்பட்ட தலம் பிரபலமடையாமல் ஒரு சிறு கிராமத்தில் திகழ்கின்றது. அது தான் காவளூர் குமாரசுவாமி திருக்கோயில்.

தஞ்சாவூரிலிருந்து அகரமாங்குடி டவுன் பஸ்ஸில் அகர மாங்குடி அடைந்து தெற்கில் 1 கி. மீ. சென்றால் இத்தலம். தஞ்சாவூரிலிருந்து திருக்கருகாவூர் செல்லும் டவுன் பஸ்ஸில் நரிய னூரில் இறங்கி 1 கி. மீ. கிழக்கே சென்றும் இத்தலத்தை அடை யலாம். கார் மற்றும் வாகன வசதி உடையவர்கள் கும்பகோணம் தஞ்சாவூர் பஸ் வழியிலுள்ள ஐயம்பேட்டையிலிருந்து, சூல மங்கலம், புண்ணியநல்லூர், பெருமாக்கநல்லூர், வழியே

காவனூரை அடையலாம். ஐயம்பேட்டையிலிருந்து நல்லசாலை 6 கி. மீ. தூரம்தான் இருக்கும்.

12 ராசிகளும் 12படிகளாக அமைந்து-இப்படிகளை ஏறி வழிபடுவோர் ஒரு மகாமகம் கண்ட புண்ணியம் பெறுவதான மாண்புடைய இக்கோயிலில் குமாரசுவாமியாக வள்ளி தேவயானையுடன் முருகவேள் அழகொழுக விளங்குகின்றார். இக்கோயிலில் விநாயகர், காசி விசுவநாதர், விசாலாட்சி பரிவார தேவதைகளாக உள்ளனர் இத்தலத்தில் காரணாகம முறையில் 2 கால வழிபாடு நிகழ்கின்றது. மாத கார்த்திகை சஷ்டியில் சிறப்பு வழிபாடும் சித்திரை திருப்படி விழா, கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனி உத்திரப் பெருவிழாக்களும் நிகழ்கின்றன.

கோயிலின் பின்புறம் உள்ள குமாரதீர்த்தமும், அருகில் ஓடும் விருத்த காவிரி (வெட்டாறு)ம் புண்ணியப் புனல்களாம். இங்கே வெட்டாறு தெற்கிலிருந்து வடக்கு நோக்கி ஓடுகின்றது. தலவிருட்சம் கமுக மரம்.

. இத்தலத்தை அருணகிரிநாதர் வழிபட்டு "மானைநேர்விழி" என்ற திருப்புகழால் பரவியுள்ளார். உருத்திராட்சமணிந்து கூப்பிய கரங்களுடன் மணிவாசகர் போன்று இங்கே அருணகிரி நாதர் எழுந்தருளியுள்ளார். இத்தலத் திருப்புகழில் இராமாயண நிகழ்ச்சிகளை நினைவுபடுத்துகின்றார்.

கோயிலுக்குச் சொத்துக் குறைவாயிருப்பினும் உபயதாரர் கள் ஒத்துழைப்பால் கோயில் சிறப்பாகப் பொலிகின்றது. முருகனடியார்கள் அவசியம் வழிபடவேண்டிய அற்புதமான கோயில். அறநிலைய ஆட்சித் துறையினரால் நிர்வாகிக்கப் படுகின்றது.

அர்த்த மண்டபத்தில் சுரங்கம் உள்ளது என்பர்.

# பெரும்புலியூர் வாழ் பொற்பெருமாள்

சதங்கைமணி வீரச் சிலம்பினிசை பாடச்
சரங்களொளி வீசப் புயமீதே
தனங்கள்குவ டாடப் படர்ந்த பொறி மால்பொற்
சரங்கண் மறிகாதிற் குழையாட
இதங்கொள் மயிலேரொத் துகந்த நகைபேசற்
றிரம்பை யழகார்மைக் குழலாரோ
டிழைந்த மளியோடுற் றழுந்து மெனைநீசற்
றிரங்கி யிருதாளைத் தருவாயே
சிதம்பர குமாரக் கடம்பு தொடையாடச்
சிறந்த மயில் மேலுற் றிடுவோனே
சிவந்த கழுகாடப் பிணங்கள் மலைசாயச்
சினந்தசுரர் வேரைக் களைவோனே
பெதும்பை யெழுகோலச் செயங்கொள் சிவகாமிப்
ப்ரசண்ட அபிராமிக் கொருபாலா
பெரும்புனம தேகிக் குறம்பெணொடு கூடிப்
பெரும்புலியூர் வாழ்பொற் பெருமாளே.

(திருப்புகழ்)

தஞ்சை மாவட்டத்தில் திருவையாற்றுக்கு வடமேற்கில் 4 கி. மீ. தொலைவிலுள்ளது இத்தலம். திருநெய்த்தானம்(தில்லைஸ்தானம்) கோயிலிருந்து 2 கி மீ தொலைவுதான். இங்கே வியாக்ரபாதர் வழிபட்ட சிவபெருமான் கோயிலாதலின் இறைவன் வியாக்ர புரீசுவரர் என்ற பெயருடன் திகழ்கிறார். இறைவி: சௌந்தர நாயகி. புலிக்கால் முனிவர் பெயர் தொடர்பால் புலியூர் என்ற தல வரிசையில் இத்தலமும் அடங்கும். வியாக்ரபாதர்

நடராச பக்தராதலின் இத்தலத் திருப்புகழில் அருணகிரி நாதரும் முருகனைச் "சிதம்பர குமார" என்று போற்றுவது குறிப்பிடத்தக்கது. திருஞான சம்பந்தர் பதிகம் பாடிய தலம் இது.

இத்தலத்தில் திருமழிசை யாழ்வாரின் பெருமையை உலகினருக்கு அறிவித்த திருமால் கோயில்-சுந்தரராஜப் பெருமாள் கோயில் உள்ளது.

வியாக்ரபுரீசர் கோயிலில் முதலாம் ராசராசனது பல கல்வெட்டுக்கள் உள்ளன.

இத்தலத்தில் வள்ளி தேவயானையுடன் கந்தவேள் எழிலுற விளங்குகிறார். கார்த்திகை, சஷ்டி சிறப்பு நாட்களாகும்.

தினமும் இரண்டு கால வழிபாடுகள் நிகழ்கின்றன. அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்திலுள்ளது.

திருவையாற்றிலிருந்து சென்று வழிபட்டு வரலாம்.

*மண்ணுமோர் பாகமுடையார் மாலுமோர் பாகமுடையார்*
*விண்ணுமோர் பாகமுடையார் வேதமுடைய விமலர்*
*கண்ணுமோர் பாகமுடையார் கங்கை சடையிற் கரந்தார்*
*பெண்ணுமோர் பாகமுடையார் பெரும்புலியூர் பிரியாரே.*

—(திருஞானசம்பந்தர்)

# ஐயாற்று அண்ணல்

*புலன் ஐந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்*
*டைம்மேலுந்தி*
*அலமந்த போதாக அஞ்சேலென்று அருள்செய்வான் அமருங்*
*கோயில்*
*வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர மழையென்றஞ்சிச்*
*சிலமந்தி அலமந்து மரமேறி முகில்பார்க்கும் திருவையாறே.*

**—திருஞானசம்பந்தர்.**

*ஓசையொலி யெலாம் ஆனாய் நீயே! உலகுக்கொருவனாய்*
*நின்றாய் நீயே!*
*வாசமலரெலாம் ஆனாய் நீயே! மலையான் மருகனாய் நின்றாய்*
*நீயே!*
*பேசப் பெரிதுமினியாய் நீயே! பிரானாய் அடிஎன்மேல்*
*வைத்தாய் நீயே!*
*தேசவிளக்கெலாம் ஆனாய் நீயே! திருவையாறு அகலாத*
*செம்பொற் சோதீ!*

**— திருநாவுக்கரசர்.**

*எங்கே போவேன்ஆயிடினும் அங்கேவந்து என்மனத்தீராய்ச்*
*சங்கையொன்று மின்றியே தலைநாள் கடைநாள் ஒக்கவே*
*கங்கை சடைமேற் கரந்தானே கலைமான்மறியுங் கனல்மழுவும்*
*தங்குந் திரைக்காவிரிக் கோட்டத்து ஐயாறுடைய அடிகளோ.*

**— சுந்தரமூர்த்திசுவாமிகள்.**

திருநாவுக்கரசர் திருக்காளத்தியை வணங்கினார், அது தென்கயிலாயம்; வடகயிலையில்சிவபெருமான்திருக்கோலத்தைக் கண்டு வணங்கவிழைந்து, ஸ்ரீசைலம், காசி, முதலிய தலங்களை

அடைந்து வணங்கி, இமயமலை அடிவாரத்தை நண்ணி, இரவு பகல் பாராது மலைமேல் ஏறலானார். பாதங்கள் தேய்ந்து, கைகள் தேய்ந்து, மணிக்கட்டும் கரைந்தன. மார்பினால் நகர்ந்து போனார்; எலும்புகள் முறிந்தன. தேகமுழுதும் அரைபட்டன, அவ்வழியில் ஒருமுனிவர் வடிவில் சிவபிரான் தோன்றினார். ஏன் உடலை இவ்வாறு வருத்தவேண்டும் என்று நாவுக்கரசரை வினவினார் அவர். வாகீசர், 'நான் கயிலையில் உமையோடு சிவபெருமானை வணங்க விரும்பி வந்தேன்' என்றார். கேட்டமுனிவர் கயிலையை மனிதர் அடைவது அரிது. நீர்திரும்பிச் செல்லுதலே நல்லது என்று கூறவும், 'கயிலையை தரிசிக்காது இத்தேகத்துடன் திரும்பேன்' என நாவரசர் மறுத்தார். முனிவர் மறைந்தார். அசரீரி எழுந்தது: 'நாவுக்கரசனே' நீ இத்தடாகத்தில் மூழ்கித்திருவையாற்றை அடைந்து நமது கயிலைக்காட்சியை அங்கே கண்டு வழிபடுவாயாக என்றுபணித்தது.

திருநாவுக்கரசர் அப்பணியைச் சிரமேற்கொண்டு, அருகில் இருந்த குளத்தில் மூழ்கித்திருவையாற்றிலுள்ள ஒரு குளத்திலே கரைஏறி அத்தலத்திலுள்ள சராசரங்களெல்லாம் தம் துணையோடு பொலிதலைக்கண்டு அவைகளைச் சிவமும், சத்தியுமாகப் பார்த்து வணங்கி,

*மாதர்ப்பிறைக்கண்ணி யானை மலையான்மகளொடும் பாடிப்*
*போதொடு நீர்சுமந்தேத்திப் புகுவார் அவர்பின்புகுவேன்*
*யாதும் சுவடுபடாமல் ஐயாறடைகின்றபோது*
*காதல் மடப்பிடியோடுங் களிறு வருவன கண்டேன்*
*கண்டேன் அவர்திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்.*

எனத்தொடங்கிப் பதிகம் பாடிக்கொண்டு, திருவையாற்றுக் கோயிலே கயிலையாக விளங்கக்கண்டு ஆனந்தக்கூத்தாடித் திருத்தாண்டகங்கள் பாடிப்பரவினார். திருநாவுக்கரசர் பெற்ற இவ்வனுபவத்தைப் பெரியபுராணத்துள் விரிவாகக்காணலாம்.

சுந்தரமூர்த்திசுவாமிகளின் திருவையாற்றுத்தரிசனமும் சுவையான நிகழ்ச்சியாகும். சேரமான் பெருமாள்நாயனார் சுந்தரரது பக்திமகிமையைப் பரமனால் அறிந்து, அவரைக்காண விரும்பித்திருவாரூர் வந்து அவருடன் மகிழ்ந்து இருந்து பின் இருவரும் சேரநாட்டைநோக்கி செல்லும் போது கண்டியூரை வணங்கினர். காவிரி இருகரையும்பெருகி ஓடிக்கொண்டிருந்தது

ஓடங்களும் செல்லவில்லை. வடகரை யிலுள்ள திருவையாற்றை வணங்கவிரும்பி "பரவும் பரிசு ஒன்று அறியேன் நான்" என்று திருப்பதிகம் தொடங்கி, ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் "ஐயாருடைய அடிகளோ" என்று சொல்லி அழைத்துப் பாடினார். இறைவன் ஆணைப்படி காவிரிநதி பிரிந்து வழி காட்டியது. மேல்திசையில் நீர் பளிங்குமலை போல் நிற்கக், கீழ்த்திசையில் நீர்வடிந்து நடுவழிமணல் பரப்பாய் இருந்தது. இறைவன் திருவருளைப் போற்றி இருவரும் அடியார்களோடும மணல்வழியே திருவையாற்றை அடைந்து, வழிபட்டுப்பின் முன் சென்ற வழியே வந்து தென்கரையிலேறினர். உடனே பிரிந்து மலைபோல் நின்ற நீர் தொடர்ந்து பாய்ந்தது. நாயன்மார் இருவரும் திருவருளைத்துதித்துப் பணிந்து மேற்கு நோக்கிச் சென்றனர் என்ற இந்நிகழ்ச்சியும் பெரியபுராணத்துள் விரிவாகப் பேசப்பட்டுள்ளது காணலாம்.

இவ்வாறு கயிலாயக்காட்சியும், அடியார்க்கென ஆற்றை யும் பிளந்து வழிவிடும் அருட்காட்சியும் நிறைந்த ஒப்பற்ற தலம் திருவையாறு.

"ஐயாரதனில் சைவனாகியும்" என்பார் மணிவாசகர். இறைவன் அர்ச்சகர் வடிவில் தானே வந்து தன்னையே வழிபட்ட சிறப்பு இத்தலத்திற்குரியது. நந்திதேவர் பூசித்த தலமஇது. இந்திரன், வாலி வழிபட்டது; இங்கே தெற்குவாயிலில் விளங்கும் ஆட்கொண்டாரை வழிபட்டால் விஷஜந்துக்கள் நம்மை அணுகா. சங்கீதமும் மூர்த்திகளில் தியாகராஜசுவாமிகள் வாழ்ந்து பாடி முத்திபெற்ற தலமும் இதுவே. எல்லாவற்றிற்கும் மேலாக ஏழூர் (சப்தஸ்தான) பல்லக்குச்சிறப்பும் இத்தலத்தின் தனிப் பெருமையாகும்

இவ்வளவு சிறப்புகளும் மலிந்த இத்தலம் தஞ்சாவூருக்கு வடக்கே 7 கல் தொலைவிலுள்ளது. கும்பகோணம்-திருவையாறு நேர் பஸ் உள்ளன. தஞ்சாவூரிலிருந்து டவுன்பஸ் அதிகம்.

இங்கே சிவபெருமான்: ஐயாறப்பர் (பஞ்சநதீசர்) செம்பொற்சோதீசுரர் என்றெல்லாம் வணங்கப்படுகிறார். அம்பிகை: அறம் வளர்த்த நாயகி. (தர்மசம்வர்த்தனி): சக்தி பீடங்களில் இதுவும் ஒன்றாகும். திருஞானசம்பந்தர் 5 திருப் பதிகமும், திருநாவுக்கரசர் 12 பதிகமும், சுந்தரர் 1 பதிகமும் பெற்ற தலம்.

இத்தலத்தில் முருகவேள் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டுவிளங்குகிறார். கையில் வில்லேந்தியுள்ளார். பின்புறம் மயில்நிற்கிறது. அதன்முகம் தெற்குநோக்கி உள்ளது. முருகன் கிழக்கு நோக்கிநின்ற திருக்கோலம். அருகில் தேவியர் இருவரும்திகழ்கின்றனர். கந்தனின் ரூபசௌந்தர்யம் இராமனை நினைவுபடுத்தும். மூலவரைப் போலவே உற்சவரும் விளங்குகின்றார். சுவாமி கோயிலிலிருந்து அம்பிகை கோயிலுக்குப் போகும் வழியில் நூற்றுக்கால் மண்டபத்தில் தண்டபாணி சந்நிதி உள்ளது. அற்புதத்திருவுருவம்.

இங்கே காரணாகமமுறையில் முருகனுக்கு இரண்டுகால பூசை நிகழ்கின்றது. மாதக்கார்த்திகையில் தண்டபாணிக் கோயிலில் காவடி எடுத்தல் உண்டு. சஷ்டி, கார்த்திகைகளில் சிறப்பு வழிபாடும் சித்திரைப்பெருவிழா, கந்தசஷ்டி, திருக்கார்த்திகை, பங்குனிஉத்திரவிழாக்களும் நிகழ்கின்றன.

இத்தலத்தில் ஐந்து புண்ணியப்புனல்கள் உள்ளன. காவிரியாடல் அனைத்தினும் சிறப்பானது.

இங்கே முருகனை அருணகிரிநாதர் வழிபட்டு ஓர்திருப்புகழ் பாடியுள்ளார். "சொரியுமாமுகிலோ" என்று தொடங்கும் இப்பாடலில் வில்லேந்திய வேலனைப் பார்க்கும்போது இராமன் நினைவு வந்ததுபோலும்! இராமனின் வில்வீரத்தைப் பாடி அவனது மருகனே என்று போற்றுகின்றார்.

*கரியமேனியன் ஆனிரை ஆள்பவன்*
*அரியராவணை மேல் வளர்மாமுகில்*
*கனகன் மார்பது பீறிய வாளரி கனமாயக்*
*கபடன் மாமுடி யாறுடன் நாலுமொர்*
*கருணையினால் நிலமீதுற நூறிய*
*கருணைமால் கவி கோபக்ரு பாகரன் மருகோனே*

*திரிபுராதிகள் தூளெழ வானவர்*
*திகழவேமுனி யாவருள் கூர்பவர்*
*தெரிவை பாதியர் சாதியிலாதவர் தருசேயே*
*சிகர பூதரநீறுசெய் வேலவ*
*திமிர மோகர வீர திவாகர*
*திருவை யாறுறைதேவக்ருபாகர பெருமாளே!*

**மாபெரும் கோயில்: மாண்புறு சிற்பங்கள்! கோயில் மகிமையை**



திருவையாறு

சிகர பூதர நீறுசெய் வேலவ
திமிர மோகர வீரதி வாகர
திருவை யாறுறை தேவக்கு பாகர பெருமாளே.




எண்கண்



சிக்கல் ஸ்ரீ சிங்காரவேலவர்

**சிக்கல்**

அழகிய சிக்கற் சிங்கார வேலவ
மிகவரு மைப்பட் டுன்பாத தாமரை
சரணமெ னப்பற் றும்பேதை யேன்மிசை
விழியருள் வைத்துக் குன்றாத வாழ்வையும்
**அருள்வாயே.**



## வலிவலம்

வலிவல நகருறை பெருமாளே நின்அடியாரோ(டு)
அமர்த்தி மாமலர் கொடுவழி படஎனை
இருத்தி யேபர கதிபெற மயில்மிசை
யரத்த மாமணி அணிகழ லிணைதொழ
அருள்தாராய்.

திருவையாற்றுப்புராணமும் திருவையாற்றுப்பதிற்றுப்பத்தந்தா தியும் விளக்குகின்றன. 70 கல்வெட்டுகள் உள்ளன. தருமபுர ஆதீன அருட்கோயில்களில் இதுவும்ஒன்று. வழிபடுவோர்க்கு வசதிகள் பலஉள்ளன.

சித்திரை சதய அப்பர் விழாவும் ஆடிஅமாவாசையன்று அப்பருக்குக் கயிலைக்காட்சியருளிய விழாவும் சிறப்பானவை

பூசமண்டபத்துறையில் ஒருதனுசு சுப்பிரமணியர் கோயில் உள்ளது. அங்கே வேல் சார்த்தியுள்ளனர்.

இத்தலத்தின் சிறப்பு விழாவான சப்தஸ்தான விழாவைக் கண்ட அருணகிரிநாதர் இந்த ஏழு ஊர்களுக்கும் சேர்ந்து ஒரு திருப்புகழ்ப் பாடியுள்ளார்.

## ஏழு திருப்பதியில் எழிற் குமரன்

சப்தஸ்தானம் திருப்புகழ் "மருவிலாவிடு எனத் தொடங்கு கின்றது. இதில் ஏழு ஊர்களையும் அருணகிரிவள்ளல் சுட்டிக் காட்டுவது அறிந்து இன்புறத்தக்கது.

*திருவின் மாமரமார் பழனப்பதி*
*அயிலு சோறவையாளு துறைப்பதி*
*திசையினன் மறைதேடிய முற்குடி விதியாதிச்*
*சிரமுமாநிலம் வீழ்தரு மெய்ப்பதி*
*பதுமநாயகன் வாழ்பதி நெய்ப்பதி*
*திருவையாறுடன் ஏழுதிருப்பதி பெருமாளே!*

இத்திருப்புகழில் காட்டப்படும் ஊர்கள் வருமாறு.

1. திருவின் மாமரமார் பழனப்பதி–திருப்பழனம்
2. அயிலுசோறவையாளுதுறைப்பதி–திருச்சோற்றுத்துறை
3. திசையின் நான்மறை தேடிய முற்குடி–திருவேதிகுடி
4. விதியாதிச் சிரமும் மாநிலம் வீழ்தரு மெய்ப்பதி–திருக்கண்டியூர்
5. பதுமநாயகன் வாழ்பதி–திருப்பூந்துருத்தி
6. நெய்ப்பதி–திருநெய்த்தானம் (தில்லஸ்தானம்)
7. திருவையாறு.

இவற்றுள் திருப்பூந்துருத்தி, திருநெய்த்தானம், திருவையாறு இம்மூன்று தலங்கட்கும் தனித்தனி திருப்புகழ்

பாடல்கள் உள்ளன. அத்தலங்களைத் தனியாகக் காட்டப் பட்டுள்ளது. எஞ்சிய நான்கு தலங்களிலுள்ள முருகவேள் திருக்கோலத்தை மட்டும் இங்கே காண்போம்.

திருப்பழனம்: திருவையாற்றுக்குக் கிழக்கில் 3 கி. மீ. சப்தஸ்தான தலங்களில் இரண்டாவது தலம். ஆபத்சகாயே சுவரர், பெரியநாயகி-இறைவன் இறைவி திருநாமங்கள். இங்கு முருகன் சந்நிதி மூலவருக்குப் பின்பு சிறப்பாக உள்ளது. இத் தலத்தருகில் திங்களூர் அப்பூதியடிகள் தலம். திருப்பழனம் திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் பாடிய தலமாகும்.

திருச்சோற்றுத்துறை: கண்டியூருக்குக் கிழக்கில் 2. கி மீ. யில் உள்ளது. இத்தலத்திலிருந்து குடமுருட்டியாறு, காவிரி நதிகளைக் கடந்தால் திருப்பழனத்தை அடையலாம். சப்தஸ் தானத்தில் மூன்றாவது தலம். அருளாளன் என்ற அந்தணனுக்கு எடுக்க எடுக்கக் குறையாத சோறு அளித்த தலம். சம்பந்தரும் அப்பரும், சுந்தரரும், போற்றிப் பாடிய தல்ம். ஓதவனேசுவரர் அன்னபூரணி திருக்கோயில். இத்தலத்தில் மயில் வாகனத்தில் ஆறுமுகப் பெருமான் கம்பீரமாக விளங்குகின்றார். இவரது உற்சவ மூர்த்தி கண்டியூரில் உள்ளது.

திருவேதிகுடி: கண்டியூர்-ஐயன்பேட்டை பஸ் வழியில் வீரசிங்கன் பேட்டையில் இறங்கித் தென்கிழக்கில் 2. கி. மீ. தொலைவில் இத்தலம் உள்ளது. சுவாமி: வேதபுரீசர்; இறைவி: மங்கையர்க்கரசி. இங்கே வள்ளி தெய்வயானையுடன் முருகவேள் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு விளங்கு கிறார். இவரது உற்சவ மூர்த்தியும் கண்டியூர்க் கோயிலில் உள்ளது.

திருக்கண்டியூர்: பிரமனது சிரங்கொய்த வீரட்டத் தலம் இது. மேற்கு பார்த்த கோயில். இறைவன் பிரமசிரக் கண்டீசர். இறைவி: மங்களாம்பிகை திருவையாறு-தஞ்சை பஸ் வழியில் கண்டியூர் கோயிலில் இறங்கலாம். இங்கே வள்ளி தெய்வயானையுடன் சுப்பிரமணியர் சிறப்பாக எழுந்தருளி யுள்ளார். சஷ்டி, விசாக விழாக்கள் நிகழ்கின்றன.

## திருப்பூந்துருத்திப் பாவலன்

*நில்லாத நீர்சடை மேல் நிற்பித்தானை*
*நினையா என்நெஞ்சை நினைவித்தானைக்*
*கல்லாதன வெல்லாங் கற்பித்தானைக்*
*காணாதன வெல்லாங் காட்டினானைச்*
*சொல்லாதன வெல்லாஞ் சொல்லியென்னைத்*
*தொடர்ந்திங் கடியேனை யாளாக்கொண்டு*
*பொல்லா வென்னோய் தீர்த்த புநிதன் தன்னைப்*
*புண்ணியனைப் பூந்துருத்திக் கண்டேன் நானே!*

—திருநாவுக்கரசர்

கைத் திருத்தொண்டு நெறிநின்ற திருநாவுக்கரசர் திருமடம் அமைத்து தங்கி வழிபட்ட தலம் திருப்பூந்துருத்தி. இத்தலத்தில்தான் திருஞான சம்பந்தர் சிவிகையைத் திருநாவுக்கரசர் தாங்கி இன்புற்றார். சோழ அரசன் துருத்தி (பூக்குடலை)யை வைத்துப் பூசிக்கச் செய்தபோது அதுவே லிங்கமாகியதால் பூந்துருத்தி என்ற பெயர் வந்தது என்பர். தஞ்சை—அகரம் பேட்டை பஸ் வழியில் இத்தலம் உள்ளது. தஞ்சைக்கு வட மேற்கில் 8 கல் தொலைவிலுள்ளது இத்தலம். கண்டியூருக்கு மேற்கில் 2 கல் தொலைவிலும் அடையலாம். தேவேந்திரன் காசிப முனிவர், சோழ மன்னன் முதலியோர் வழிபட்ட தலம் காசிப முனிவர், காசி கங்கை, விசுவநாதர் ஆகியோரை இத் தலத்திற்கு வரவழைத்து அபிஷேகம் செய்ததாகத் தல மான்மியம் கூறுகின்றது.

இங்கே இறைவன் புஷ்பவனேசுவரர்; பூந்துருத்திநாதர் பொய்யிலி என்றெல்லாம் போற்றப் பெறுகின்றார். இறைவி,

அழகார்ந்த நாயகி, சௌந்தர நாயகி, இத்தலப் புண்ணியப் புனல்; சூரிய புஷ்கரணி, காசிகங்கை, (கோயில் கிணறு). தலவிருட்சம்: வன்னி.

இத்தலத்தில் முருகவேள் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவியருடனும் கிழக்கு நோக்கி நின்ற திருக் கோலத்தில் திகழ்கின்றார். மயில் பின்புறம் உள்ளது. உற்சவரும் மூலவர் போன்றே அழகொழுகும் திருமேனி கொண்டு விளங்கு கிறார். முருகனுக்குத் தினமும் இரண்டு கால பூசை காரணாகம முறையில் நடந்து வருகிறது. மாதக் கார்த்திகை சிறப்புடையது சித்திரை மாதத்தில் திருவையாறு சப்தஸ்தானப் பல்லக்கு இத்தலம் வரும். கந்த சஷ்டி விழாச் சிறப்புடையது.

இத்தலத்திற்குத் திருநாவுக்கரசர் பதிகங்கள் மூன்று உள்ளன. இங்கே நந்தி விலகியிருக்கிறார்.

தீர்த்த நாராயணர் சமாதி இத்தலத்தில் உள்ளது.

"வீங்கு பச்சிள" என்று தொடங்கும் திருப்புகழால் இத்தல முருகனை அருணகிரிநாதர் போற்றினார். இத்திருப் புகழில்

> *"... ... ...... ...... மாயாவாதனை*
> *தீர்ந்துனைக் கெளி தாயே மாதவம்*
> *ஊன்றுதற்கு மெய்ஞ்ஞான சாரம் வழங்குவாயே"*

என வேண்டுகிறார்.

இத்தலம் அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் உள்ளது. கல்வெட்டுக்கள் பல உள்ளன. திருநாவுக்கரசர் திருமடம் இன்றும் உள்ளது.

> *"போந்த பத்தர் பொலா நோய் போயிட*
> *வேண்டநுக்ரக போதா மேவிய*
> *பூந்துருத்தியில் வாழ்வே தேவர்கள் பெருமாளே!*

# திருநெய்த்தானச்சுரபதி.

*செகசெச் சேசெச் செகவென முரசொலி*
*தீகழச் சூழத் திருநட மிடுபவர்*
*செறிகட் காளப் பணியணி யிறையவர் தருசேயே*
*சிகரப் பாரக் கிரியுறை குறமகள்*
*கலசத் தாமத் தனகிரி தழுவிய*
*திருநெய்த் தானத் துறைபவ சுரபதி பெருமாளே!*

(அருணகிரிநாதர் - திருப்புகழ்)

காவிரியின் வடகரையில் திருவையாற்றுக்கு மேற்கே 1. கி மீ தொலைவிலுள்ள திருநெய்த்தானம் (கிருதஸ்தானம்) தற்போது தில்லைஸ்தானம் எனமருவி வழங்குகின்றது. திருவையாறு சப்தஸ்தானத்தலங்களில் ஏழாவது தலமாக இது திகழ்கின்றது. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பதிகம்பாடிப்பரவிய இத்தலம் சுந்தரர் வைப்புத்தலமாகவும் உள்ளது.

இறைவன் நெய்யாடியப்பர். இறைவி; பாலாம்பிகையம்மை இலங்கைமன்னன் கயவாகுவின் குலதெய்வம் இது.

உள்பிராகாரத்தில் முருகவேள் ஒருமுகமும் அபயம், வரதம், வஜ்ஜிரம், சக்தி முதலியவைகளோடு நான்குதிருக்கரங்களும் கொண்டுநின்ற திருக்கோலத்தில் மயிலுடன் விளங்குகின்றார். இருபுறமும் வள்ளி, தேவயானை அம்மை விளங்குகின்றனர். உற்சவரும் மூலவரைப்போன்றே அமைப்புடையவர்.

காரணாகமப்படி தினமும் மூன்றுகாலவழிபாடுகள் நிகழ்கின்றன. கார்த்திகை சிறப்புநாளாகும். கந்தசஷ்டிவிழா, பங்குனி உத்திரதிருவிழாக்கள் கொண்டாடப்படுகின்றன.

காவிரி, கௌரிதீர்த்தங்கள் புண்ணியப்புனல்களாம். தல விருட்சம் வில்வம்.

முதல் பராந்தகன் முதலாக ஐந்து சோழமன்னர்களின் தானங்களும் நந்திவர்மன் தானங்களும் கல்வெட்டுக்களில் காணலாம்.

புகழேந்திப்புலவர் திருநெய்த்தானச்சிவனைப்பாடியபாடல் வருமாறு.

*நற்கோ லிப்பூ சற்பா சத்தே*
*தப்பா மற்சா கைக்கே நிற்பீர்*
*முற்கோ லிக்கோ லிப்பூ சித்தே*
*முட்டா மற்சே வித்தே நிற்பீர்*
*வற்று நெட்டோ டைப்பா ரைச்சேல்*
*மைப்பூ கத்தே றித்தாவிப்போய்*
*நெற்று நெற்று லைப்பா கிற்சேர்*
*நெய்த்தா னத்தா னைத்தியா னித்தே.*

நெய்த்தானப்பெருமானை ஒட்டக்கூத்தர்பாடிய தனிப்பாடலும் உள்ளது.

*விக்கா உக்கா வித்தா விப்போய்*
*விட்டால் நட்டார் சுட்டூர் புக்காய்*
*இக்கா யத்தா சைப்பா றேற்றே*
*இல்தே டிப்போய் வைப்பீர் நிற்பீர்*
*அக்கா டப்பேய் தொக்கா டச்சூ*
*ழப்பா டத்தீ வெப்பா டப்பூண்*
*நெக்கா டக்கா னத்தா டப்பேர்*
*நெய்த்தா னத்தா னைச்சேவித்தே.*

திருவையாற்றிலிருந்து பஸ்வசதி அதிகம் உள்ளது. தஞ்சையிலிருந்து 13, 23, 5A முதலிய டவுன்பஸ்களிலும் இத்தலத்தை அடையலாம். திருவையாறு அருகிலுள்ள பெருநகரமாகும். அறநிலைய ஆட்சித்துறையின் கீழ் திருநெய்த்தானக்கோயில் அமைந்துள்ளது. சிற்பச்சிறப்பும் திருமுறைச்சிறப்பும் அருணகிரிநாதர் திருப்புகழ்ச் சிறப்புமுடைய இத்தலத்தில் நெய்யாடியப்பனை நினைந்து நனைந்தாடுவோம்.

## செம்பொன் மாளிகைத்தஞ்சைப் பெருமாள்

அஞ்சன வேல்விழி மடமாதர்
அங்கவர் மாயையில் அலைவேனோ
விஞ்சுறு மாவுன தடிசேர
விம்பம தாயருள் அருளாதோ
நஞ்சமு தாவுணும் அரனார்தம்
நன்குமரா உமை அருள்பாலா
தஞ்சென வாம்அடி யவர்வாழத்
தஞ்சையில் மேவிய பெருமாளே.

—அருணகிரிநாதர்.

தம்மைத் தஞ்சம் புகுவோரைக்காத்தருளத் தஞ்சையம் பதியில் பெருமான் விளங்குகின்றார் என்று நயப்பட பேசுவார் நவில் சந்தக்கவிராஜரான நம் அருணகிரிநாதர்.

தஞ்சாவூர் என்றவுடனேயே நம் மனக்கண்முன்நிற்பது பெரியகோயில்! ஆம்! தமிழகத்தில் பெரியகோயில் என்றசொல் தஞ்சைப்பெரியக்கோயிலை மட்டுமே சுட்டும். மாமன்னன் இராஜராஜ சோழனின் அளப்பரும் சைவத்தொண்டிற்கு அற்புதச்சின்னமாகவும் அது திகழ்கின்றது. திருமுறைக்கண்ட அச்சோழன் சிவபெருமானுக்குச் சொற்கோயிலைத் திருப்பணி செய்ததோடு கற்கோயிலையும் கண்டவர் வியக்கும் வண்ணம் கவின்பெறக்கட்டினான். அவனது உள்ளத்தில் எல்லாமே பெரியதாகவே தோன்றின. சிறியன சிந்தியாதசெம்மல் அவன்!

தஞ்சைப்பெருவுடையார் (பிரகதீசுவரர்), பெரியநாயகி அம்மை (பிரஹந்நாயகி), இருவரும் சோழப்பேரரசனுக்கு அருள் செய்து நமக்கும் இன்று அருள்செய்ய அங்கே எழுந்தருளி யுள்ளார்,

பெருவுடையார் சந்நிதிக்குத் தென்மேற்கில் தனிப்பெருங் கோயிலாகச்சிற்பச்சிறப்புக்களுடன் முருகவேள் கோயில் திகழ் கின்றது. ஆறுமுகப்பெருமான் பன்னிருகரங்களுடன் மயில் மீதமர்ந்து கிழக்குநோக்கி எழுந்தருளியுள்ளார். அருகில் இரு புறமும் வேடமங்கையும் வேழமங்கையும் விளங்குகின்றனர். மயிலின்முகம் வடக்குநோக்கி உள்ளது. திருவாசி உட்பட முருகவேள் மயிலுடன் அமைந்துள்ள சிற்பஅற்புதத்தை நேரில் கண்டு இன்புற வேண்டுமேயன்றி சொல்லில் அடங்காது.

உற்சவ முருகன் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு வள்ளி, தெய்வயானையுடன் விளங்குகின்றார்.

காரணாகமப்படி தினமும் 4 கால பூசை நிகழ்கின்றது.

மாதக்கார்த்திகை, சஷ்டி நாட்களில் சிறப்புவழிபாடு நிகழ் கின்றது. இங்கே முருகனுக்குத்திருவிழா ஏதும் இல்லாதது பெருங்குறையாகும்.

கருவூர்த்தேவரது திருவிசைப் பாவும்; தஞ்சைப்பெருவுடை யார் உலாவும் இத்தலச் சிறப்பினைப் பேசும்.

மத்தியத்தொல்பொருள் ஆய்வுத்துறையினரும் தமிழ்நாடு அறநிலையஆட்சித்துறையினரும் இக்கோயிலை நிர்வகிக்கின்றனர் இங்கு வழிபடுவோர்க்குத் தங்கும் விடுதிகள் உணவுவிடுதிகள் உள்ளன. தஞ்சையை சுற்றிலும் பல தலங்கள் உள்ளன.

அருணகிரிநாதர் இத்தல முருகனை மூன்று திருப்புகழ்ப் பாக்களால் பரவினர். தஞ்சைக்கோபுரம் அருணகிரிநாதரைக் கவர்ந்ததில் வியப்பேது!

"சண்டகோபுரச் செம்பொன் மாளிகைத்
தஞ்சைமாநகர்ப் பெருமாளே."

(அம்புராசியிற்)

"சண்ட நீலகலாம் வாசி யிற்றி கழ்ந்து
கஞ்சன் வாசவன் மேவி வாழ்பதிக்குயர்ந்த
தஞ்சை மாநகர் ராஜகோபுரத்தமர்ந்த பெருமாளே."

(சந்தவார்குழல்).

## என்கண் வரு என்கண்மணி

*சந்த னந்தி மிர்ந்த வைந்து குங்கு மங்க டம்பிலங்கு*
*சண்பகஞ்செறிந்திலங்கு தீரடோளுந்*
*தண்டை யஞ்சி லம்பலம்ப வெண்டை யஞ்சலஞ்சலென்று*
*சஞ்சிதஞ்ச தங்கை கொஞ்ச மயிலேறித்*
*திந்தி மிந்தி மிந்தி மிந்தி தந்த னந்த னந்த னென்று*
*சென்ற சைந்து கந்து வந்து க்ருபையோடே*
*சிந்தை யங்கு லம்பு குந்து சந்த தம்பு கழ்ந்துணர்ந்து*
*செம்ப தம்ப ணிந்திரென்று மொழிவாயே!*

*அந்தமந்தி கொண்டிலங்கை வெந்தழிந்தி டும்பகண்டன்*
*அங்க முங்கு லைந்த ரங்கொள் பொடியாக*
*அம்ப கும்ப னுங்க லங்க வெஞ்சினம்பு ரிந்துநின்று*
*அம்புகொண்டு வென்ற கொண்டல் மருகோனே*
*இந்துவுங்க ரந்தை தும்பை கொன்றை யுஞ்சலம்பு னைந்தி*
*டும்பரன்ற னன்பில் வந்த குமரேசா*
*இந்திரன்பதம் பெறண்டர் தம்பயங்க டிந்தபின்பு*
*என்கண் அங்கமர்ந்திருந்த பெருமாளே!*

— திருப்புகழ்.

எண்ணமே கண்ணாகக் கொண்டு சிலைவடித்த சிற்பிக்குக் கண் கொடுத்த கந்தன் தலம் எண்கண். திருவாரூரிலிருந்து 8 கல் தொலைவில் இத்தலம் உள்ளது. டவுன் பஸ் வசதி உள்ளது. கும்பகோணம்-திருவாரூர் பஸ் வழியில் காப்பணாமங்கலத்தில் இறங்கி 3 கல் தெற்கில் சென்றும் இத்தலத்தை அடையலாம்.

அஷ்டநேத்திரபுரம், பிரம்மபுரம், பாஸ்கர க்ஷேத்திரம் என இத்தலம் போற்றப்படுவது. பிரமன், சூரியன் பூசித்து வழிபட்ட இத்தலத்தில் இறைவன்: பிரம்மபுரீசர்; இறைவி: பிரஹந்நாயகி இங்கே சிவபெருமான் பிரமனுக்குப் பிரணவம் உபதேசித்ததாகக் கூறப்படுகிறது.

இங்கே ஆறுமுகப் பெருமான் பன்னிருகரங்களுடன் மயில் மீது இடது காலை மடித்துக் கொண்டு வலது காலைத் தொங்க அமைந்து விளங்கும் காட்சி அற்புதமானது. மயிலின் கால்களே ஆதாரமாக திருவாசியுடன் பெருமான் மயில்மீது விளங்கும் சிற்பச் சிறப்பு ஒப்பற்றது. இருபுறமும் தேவியர் விளங்கு கின்றனர். கிழக்கு நோக்கிய சபையில் பெருமான் விளங்கு கிறார். வலக்கரங்கள் ஆறும் சக்தி, சுத்தி, அம்பறாதூணி, அபயம், பாசம், சக்ரம் கொண்டுள்ளன. இடக்கரங்கள் தனுசு, கேடயம், வரதம் சூலம், அங்குசம், துவஜம் கொண்டுள்ளன. மூலவரைப் போலவே உற்சவ மூர்த்தியும் ஆறுமுகப் பெருமானாக விளங்குகின்றார். சிங்கார வேலவரும் எழுந்தருளி யுள்ளார். கிருத்திகை நாட்களில் இவரே வெளியில் எழுந் தருளுவார். மூலவர் ஆறுமுகப் பெருமானுக்குப் பின்புறம் மந்திரத்தகடு பொறிக்கப் பட்டுள்ளது.

இத்தலத்தில் காரணாகம முறையில் தினமும் ஆறுகால வழிபாடுகள் நிகழ்கின்றன. கந்தசஷ்டி, தைப்பூசம் மாசி தெப்பம் முதலிய விழாக்கள் சிறப்புடையன.

கோயிலுக்கு முன்னுள்ள குமாரதீர்த்தமும், காவிரியும் (வெட்டாறு) புண்ணியப் புனல்கள். தலவிருட்சம் வன்னி. ஆதலின் சமீ (வன்னி) வனம் என்ற பெயரும் இத்தலத்திற்கு உண்டு. தைப்பூசத்தன்று, சிம்மவர்மன் என்ற மன்னனுக்கு வன்னி மரத்தடியில் பெருமான் காட்சியருளியதாகத் தல மான்மியம் கூறுகின்றது. நேத்ர புஷ்கரணி, பிரம்ம தீர்த்தம், சரவணப் பொய்கை, விருத்த காவிரி என்னும் புண்ணியப் புனல்களும் உள்ளன.

இத்தலத்தில் அருணகிரிநாதர் அற்புதமான திருப்புகழ் ஒன்று அருளியுள்ளார். பொதுவாக மாதர் மயக்கம் நீக்கியருளக் கோரும்சுவாமிகள் இத்தலத்திருப்புகழில் கந்தவேளையேமுழுதும் பாடிப் பரவியுள்ளமை தனிச் சிறப்புடையது. பழைய எண்கண் கோயில் அருகில் உள்ளது. அறநிலைய ஆட்சித்துறையால்

நிர்வாகம் செய்யப்படும் இத்தலத்தருகே தலையாலங்காடு, பெருவேளூர், மணக்கால், இராப்பட்டீசுரம், முசுகுந்தனூர் (வலஞ்சுழி விநாயகர்) முதலிய தலங்கள் உள்ளன.

எட்டிகுடி, சிக்கல், எண்கண்-இம்மூன்று தலங்களிலும் விளங்கும் ஆறுமுகப் பெருமான் திருவுருவங்கள் ஒரே சிற்பி யால் செய்யப்பட்டமை என்றும், முதலிரண்டு சிற்பங்களைச் செய்த அச்சிற்பி அரசனால் கண்பார்வை இழக்கப் பெற்று குருடாயிருந்து எண்கண் முருகனை வடித்துப்பின் கண் பார்வை பெற்றதாகக் கூறுவர்.

இத்தலத்தில் உள்ள பிற சிற்பங்களும் ஒப்பற்றவை, அர்த்தநாரீசர், தட்சிணாமூர்த்தி, மூன்றுவித துர்க்கைகள். அண்ணாமலையார் முதலியவை குறிப்பிடத்தக்கவை.

இங்கே காவடி எடுத்தல் சிறப்பு. கண் நோய்கள் இங்கே வழிபடுவதால் நீங்குகின்றன.

இத்தலத்தில் பெருமாள் கோயில் ஒன்றும் உள்ளது. எண்கண் பழைய சிவன் கோயிலில் கல்வெட்டுக்கள் உள்ளன.

# திரியம்பகபுரம் மருவிய கந்தன்

கும்பகோணம்-திருவாரூர் பஸ்வழியில் பெரும்பண்ணையூர்க்கருகில் வடக்கே ஒருகல் தொலைவில் தற்காலத்தில் மதுரமாணிக்கம் என அழைக்கப்படும் தலமே த்ரியம்பகபுரம் ஆகும். ஆனால் இத்தலத்தில் தற்போது முருகவேள் திருச்சந்நிதி இல்லையே என்று வியப்படைய வேண்டியதில்லை. இங்குள்ள திரியம்பகேஸ்வரர் கோயிலின் சின்னங்கள் முன்பு இங்கே சிவாலயம் செம்மையாக விளங்கியதை எடுத்துக் காட்டுகின்றன. தற்போதுகூட திரியம்பகேசுவரர் (சிவலிங்கம்) இங்குக் கவனிப்பாரற்றுக் கிடப்பது வருந்தற்குரியதாகும்.

சுமார் நூறாண்டுகட்கு முன்பு இத்தலத்தில் தீட்சிதர்கள் வேள்வி செய்தனர் என அறிகிறோம். இத்தீட்சிதர்களின் மரபினர்கள் தற்போது அருகிலுள்ள சேங்காலிபுரம், வடகுடி முதலிய தலங்களில் வாழ்கின்றனர். "ஸ்மிருதி முத்தாபலம்" என்னும் ஆசார நூலை இயற்றிய வைத்தியநாத தீட்சிதர் என்பவர் இத்தலத்தைச் சார்ந்தவர் என அறிய முடிகின்றது.

தற்போது இத்தலத்திலுள்ள சாஸ்தா (ஐயனார்) கோயிலில் "த்ரியம்பக புராதீசம் சாஸ்தாரம் சசிவல்லபம்" எனத் தொடங்கும் வடமொழிச் சுலோகம் எழுதப் பெற்றுள்ளதைக் காண்கின்றோம். இத்தலத்திலிருந்த முருகன் எங்கு சென்றார் என்று தெரிய வேண்டுமா? குடவாசல்-கொரடாச்சேரி வழியில் அமைந்துள்ள அமுக்திசுவரம் கோயிலில் அவர் சிறப்பாக அமர்ந்தருளுகின்றார். ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு முருகவேள் விளங்குகின்றார்.

அருணகிரிநாதர் வழிபட்ட இத்திரியம்பகபுரக் கந்தன் இன்று வேறொரு கோயிலில் எழுந்தருளியிருப்பினும் நாம் 'த்ரியம்பகபுர'த்திலேயே அவரைக் கண்டு அருணகிரிநாதர் புனிதத் திருவடி தோய்ந்து பரவிய நிலையில் பணிய முடிய வில்லையே என்ற ஏக்கம் எழாமலில்லை. "உரையொழிந்து" என்று தொடங்கும் இத்தலத் திருப்புகழினை "கனமுறு த்ரியம்பக புரமருவிய கவுரிதந்த கந்த அறுமுக என இரு கழல் பணிந்து நின்று அமரர்கள் தொழவல பெருமாளே" என நாமும் பாடிப் பணிவோம்.

## குடவாயிற்பதிகுமரேசன்

*திகழுந் திருமாலொடு நான்முகனும்*
*புகழும் பெருமான் அடியார் புகல*
*மகிழும் பெருமான் குடவாயின் மன்னி*
*நிகழும் பெருங்கோயில் நிலாயவனே.*

— திருஞானசம்பந்தர்.

ஒரு யுகமுடிவில் பிரளயம் ஏற்பட்டது. சிருஷ்டிபீஜம் வைத்திருந்த அமிருதகலசம் (குடம்) அதில் மிதந்து வந்தது. சிவபெருமான் ஒருவேடவடிவங்கொண்டு அக்குடத்தைஉடைத்து சிருட்டித் தொழில் ஏற்பட அருளினார். அக்குடத்தில் இருந்த மண்பகுதியே இலிங்கமாயிற்று. அதுவே கும்பகோணம், ஆதிகும்பேசுவரப்பெருமானாக வழிபடப் பெறுகின்றது. அக் குடத்தின்வாயில்பகுதி இருந்த தலமே குடவாயில் என்ற பெயர் பெற்றதுஎன்று கும்பகோணம்தலமான்மியம் பேசுகின்றது. குடவாயிலுக்கு அமிர்தக்ஷேத்திரம் என்ற பெயரும்உண்டு. கருடன் தன்தாயைவிடுவிக்க வேண்டி அமிர்தத்தைக் கொணர்ந்து இத் தலத்தில் வைத்துவிட்டு அசுரரை வென்று பின் அதனை எடுத்துச் சென்றதால் அமிர்தக்ஷேத்திரம் என்றபெயர் வந்ததாகக் கூறுவர். மேற்குபார்த்த கோயில் இது.

இத்தலம் கும்பகோணம்-திருவாரூர் பேருந்துவழியில் உள்ளது. கும்பகோணத்திலிருந்து 12 கல். திருவாரூரிலிருந்து 13 கல். இக்கோயில் கோச்செங்கணான் எடுப்பித்த மாடக்கோயில்களுள் ஒன்று. சிவபெருமான் திருப்பெயர்: கோணேசுவரர்; இறைவி: பெரியநாயகி.

இங்கே முருகவேள் ஒருமுகமும் நான்குகரங்களும்கொண்டு தேவியர் இருவருடன் மயிலருகேநின்றதிருக்கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். மயிலின் முகம் முருகனுக்கு வலப்புறம் உள்ளது. உற்சவர் நான்குகரங்களுடன் தேவிமார் இருவருடன் நின்றகோலத்தில் திகழ்கின்றார்.

தினமும் இரண்டுகால வழிபாடு காமிகாகம முறையில் நிகழ்கின்றது. மாதக்கார்த்திகை சிறப்புடையது. கந்தசஷ்டி. திருக்கார்த்திகை விழாக்கள் நடைபெறுகின்றன. மாசிமகம் தீர்த்தவாரி நடைபெறுகிறது.

கோவிலுக்கெதிரில் அமிர்ததீர்த்தமும், மற்றும் சந்திர தீர்த்தம். பிரம்மதீர்த்தம், அக்னிதீர்த்தம், சூரியதீர்த்தம் ஆகியனவும் உள்ளன. தலவிருட்சம்: பலா.

சூதமாமுனிவர். பிருகுமுனிவர், தாலப்யமுனிவர், கருடன் முதலியோர் வழிபட்ட இத்தலத்தில் திருஞானசம்பந்தர் இரு பதிகங்களால் பரவியுள்ளார். அருணகிரிநாதர் இருதிருப்புகழ்ப் பாக்களால் இங்கு கந்தவேளைப்பரவியுள்ளார். "அயிலாரிமைக் கடு"..., "சுருதியாய்"...... என்று தொடங்குவன அவை அவற்றுள்

*சுருதியாய் இயலாய் இயல்நிடிய*
*தொகுதியாய் வெகுவாய் வெகுபாஷைகொள்*
*தொடர்புமாய் அடியாய் நடுவாய் மிகுதுணையாய்மேல்*
*துறவுமாய் அறமாய் நெறியாய் மிகு*
*விரிவுமாய் விளைவாய் அருள்ஞானிகள்*
*சுகமுமாய் முகிலாய் மழையாய் எழு சுடர்வீசும்*
*பருதியாய் மதியாய் நிறை தாரகை*
*பலவுமாய் வெளியாய் ஒளியாய்எழு*
*பகலிராவிலையாய் நிலையாய்மிகு பரமாகும்*
*பரம மாயை யினேர்மையையாவரும்*
*அறியொணாதனை நீ குருவாய்இது*
*பகருமாறு செய்தாய்முதல் நாளுற பயனேதான்*

எனவரும்பகுதி சிந்தித்தற்குரியது. திருஞானசம்பந்தர்

வற்லாற்றை இப்பாடலில் அழகாகக்குறிப்பிடுகின்றார். பின்பகுதியில் அருணகிரிநாதர். "அயிலார்" என்ற பாடலை

*குயிலா லித்திடு பொழிலே சுற்றிய*
*குடவாயிற்பதி யுறைவோனே*
*குறமா தைப்புணர் சதுராவித்தக*
*குறையா மெய்த்தவர் பெருமாளே!*

என்று முடிக்கிறார்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளது இக்கோயில். இத்தலத்தருகே எண்கண், திருவாஞ்சியம் முதலிய தலங்கள் உள்ளன.

# திலதைப்பதி திறலோன்

இறையத் தனையோ அதுதானும்
இலையிட் டுணவேய் தருகாலம்
அறையிற் பெரிதா மலமாயை
அலையப் படுமா றினியாமோ
மறையத் தனமா சிறைசாலை
வழியுய்த் துயர்வா னுறுதேவர்
சிறையைத் தவிரா விடும்வேலா
திலதைத் பதிவாழ் பெருமாளே. —அருணகிரிவள்ளல்.

இராம லட்சுமணர் தங்கள் தந்தைக்கும் சடாயுவுக்கும் பிதிர்க் கடன்கள் செய்த தலம் தஞ்சைமாவட்டத்தில் இருக்கின்றது என்பது பலருக்கும் தெரியாத ஒன்று. பிதிரர்களுக்குக் கடன்கள் எள்ளைக்கொண்டுசெய்வதுமரபு. திலம் என்றால் எள் ஆகவே இத்தலம் திலதைப்பதி அல்லது திலதர்ப்பணபுரி என்ற வழங்கலாயிற்று. இங்கே திருமால் சிவபெருமானைத்துதித்தமையால் இத்தலத்திற்கு ஹரிக்ஷேத்திரம் என்ற பெயரும் உண்டு என்று தலமான்மியம் கூறும். இத்தலத்தில் சிவபெருமானைச் சந்திரன் வழிபட்ட காரணம்பற்றி மதிமுத்தம் என்ற பெயரும் வழங்கலாயிற்று. இவ்வளவு சிறப்புடைய இத்தலம் நம் தஞ்சைமாவட்டம்-நன்னிலம் வட்டம்-பூந்தோட்டம் பேருந்து நிலையத்திலிருந்து வடமேற்கே ஒரு கல் தொலைவில் அமைந்துள்ளது; தற்போது செதலைப்பதி என்று இது வழங்கப்படுகிறது.

இங்கே சிவபெருமான் முக்தீசுவரர் என்ற திருப்பெயர் கொண்டுள்ளார். இறைவி: சுவர்ணவல்லி. (பொற்கொடியம்மை) மேற்குச்சுற்றிலையில் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு இருதேவியருடன் கிழக்குநோக்கி நின்றதிருக்கோலத்தில் முருகவேள் விளங்கியருளுகின்றார்.

திருஞானசம்பந்தரது ஒருபதிகம்பெற்ற இத்தலத்தில் சந்திரதீர்த்தம், ஹரிநதி என்னும் இரு புண்ணியப்புனல்கள் உள்ளன. தலவிருட்சம் மந்தாரை. ஆதலின் மந்தாரவனம் எனவும் இத்தலம் போற்றப்படுகிறது,

நாடோறும் இருவேளை பூசைகள் காமிகாகம முறைப்படி இங்கு நிகழ்ந்து வருகின்றன.

சோழர்காலத்ததெனக் கருதப்படும் இக்கோயிலைச் சந்திரன், நற்சோதிகன் (ஓர் அரசன்) முதலியோரும் வழிபட்டதாகக்கூறுவர்.

இத்தலமுருகனை மூன்றுதிருப்புகழ்ப்பாக்களால் அருணகிரிநாதர் போற்றியுள்ளார். "பகைப்பட...", "மகரக் குழைக்கு" , "இறையத்தனை"... என்று அப்பாடல்கள் தொடங்குவன. பகைப்பட எனத்தொடங்கும் பாடலில் முருகவேள் எழுந்தருளும் காட்சியை நம்முன் காட்டுகின்றார்.

" தனனத் தனன தந்த தனனத் தனன தந்த
தனனத் தனன தந்த தனதான
தகிடத் தகிட தந்த திமிதத் திமிதவென்று
தனிமத் தளமுழங்க வருவோனே."

"மகரக்குழை" என்று தொடங்கும் திருப்புகழில் 'ஆதிமூலமே என்றழைத்த கஜேந்திரனுக்கு அருள்செய்த வரதனுக்குடன் பிறந்த சிவை தற்பரைக்குமகனே என்று முருகவேளை அருள் வரலாறுசாட்டி அருள்வேண்டுகின்றார்.

புகர்கைக் கரிபொதிந்த முளரிக் குளத்திழிந்த
பொழுதிற் கரத்தொடர்ந்து பிடிநாளிற்
பொருமித் திகைத்து நின்று வரதற் கடைக்கலங்கள்
புகுதக் கணத்து வந்து கையிலாருந்
திகிரிப் படைத்து ரந்த வரதற் குடற்பிறந்த
சிவைதற் பரைக்கி சைந்த புதல்வோனே
சிவபத்தர் முத்தரும்பர் தவசித்தர் சித்தமொன்று
திலதைப் பதிக்கு உகந்த பெருமாளே!

தனியார் நிர்வாகத்தில் குறைந்த பராமரிப்பில் இக்கோயில் உள்ளது. வசதிகள் ஏற்படவேண்டும். இத்தலத்தருகேகந்தன்குடி, அம்பர், திருமாகாளம், திருவீழிமிழலை, கூத்தனூர் முதலிய தலங்கள் உள்ளன.

# கூந்தலூர் ஏந்தல்

*குரைகழல் பணிவொடு கூம்பிடார் பொரு*
*களமிசை யறமது தீர்ந்த சூரர்கள்*
*குலமுழு தனைவரு மாய்ந்து தூளெழ முனிவோனே*
*கொடுவிட மதுதனை வாங்கியேதிரு*
*மிடறினி லிருவென ஏந்து மீசுரர்*
*குருபரன் எனவரு கூந்தலூருறை பெருமாளே!*

—திருப்புகழ் (தரையினில்...)

நமது சமயத்தில் ஓரறிவு முதல் ஆறறிவுடையன உள்ளிட்ட அனைத்து உயிர்களும் இறைவனை வழிபட்டுப் பேறுபெற்ற வரலாறுகள் உள்ளன. விலங்குகள் வழிபட்ட காரணத்தால் அவ்வத் தலங்களும் அவ்வவற்றிற்கேற்பப் பெயர்களைப் பெற்றுள்ளன என்பதைத் திருவானைக்காவல், திருக்காளத்தி, புலியூர், திருஎறும்பியூர், முதலிய பெயர்கள் விளக்கி நிற்கின்றன. மரங்கள் பற்றிப் பெயர் பெற்ற தலங்களும் பல உள்ளன. விலங்குகளிலேயே தந்திர மிக்கது நரி. மனிதன் எல்லா விலங்குகளையும் அடக்கி, தன் கட்டுப்பாட்டில் வைத்து நிர்வகிக்க முடியும் என்பதை சர்க்கஸ் காட்சிகளில் பார்த்திருக்கிறோம் ஆனால் நரியை வைத்து, இதுவரை எவரும் சர்க்கஸ் செய்தது இல்லை. இறைவன் ஒருவனே அந்நரியையும் பிடித்து பரியாக்கினான் என்பதை மணிவாசகர் வரலாற்றிலும் திருவிளையாடற் புராணத்திலும் காண்கிறோம். நரி இறைவனை வழிபட்டதாக நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? உண்டு. நரி வழிபட்ட தலம் நம் தஞ்சையில் உள்ளது. அது ஜம்புகாரணியம் (ஜம்பு-நரி) என்று வழங்கப்பட்டு தற்காலத்தில் கூந்தலூர் என்று அழைக்கப்படுகிறது. அது கூந்தலூர் என்ற பெயர் பெற்றதும் ஒரு சுவையான வரலாறாகக் கூறுவர்.

ரோமரிஷி என்பவர் இத்தலத்தில் பலநாட்கள் தவம் செய்தார். அவரது தாடி வழியே பொன் பெற்றுப் பலருக்கும் தானம் செய்து வந்தார். தாடியில் பொன் வருவது நின்று விட்டது. உடனே தாடியை நீக்கிவிட்டு, நீராடாமலேயே கோயிலுக்கு வழிபட வந்தார். உடனே கோயிலில் இருந்த விநாயகரும் முருகனும் ஓடிவந்து அவரை உள்ளே வராமல் தடுத்தனர். இதனைக்கண்ட சிவபெருமான் முனிவருக்கு புறத் தூய்மையைவிட அகத் தூய்மையே இன்றியமையாதது எனக்காட்ட அம்முனிவருக்கு அருள் செய்தார். கூந்தல் (ரோமம்) அடிப்படையில் நிகழ்ந்த இந்நிகழ்ச்சியைக் காட்டுவது போல் உரோமரிஷியின் உருவம் இக்கோயிலில் உள்ளது. முருகனும் கோயில் முன்புறமே எழுந்தருளியுள்ளார்.

இத்தலம் கும்பகோணத்திலிருந்து கிழக்கே 10 கல் தொலைவில் உள்ளது. பூந்தோட்டத்திலிருந்து மேற்கே 8 கல் கும்பகோணத்திலிருந்து பஸ் வசதி உள்ளது.

இறைவன்: ஜம்புகாரண்யேசுவரர். இறைவி: ஆனந்த வல்லி. இங்கே முருகவேள் ஒரு முகமும் நான்கு திருக்கரங் களும் கொண்டு மயிலின் அருகில நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடனும் எழுந்தருளியுள்ளார். மயிலின் முகம் சுவாமியின் வலப்புறம் உள்ளது. இது தேவமயில் ஆகும். சூரசம்ஹாரத்திற்கு முன்பு முருகனுக்கு உள்ள மயில் இது உற்சவ மூர்த்தியும ஒருமுகம் நான்கு கரங்களுடன் இருதேவியா சூழ ஒருகால மயில் மீதும் கொண்டு விளங்குகிறார்.

தினமும் காமிகாகம முறையில் மூன்றுகால பூசை நிகழ் கின்றது. இங்கே முருகனை வழிபட்டு நினைத்த காரிய சித்தி பெறுகின்றனர் பலர். கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, தைப்பூச விழாக்கள் நிகழ்கின்றன.

புண்ணியப் புனல்: இராமதீர்த்தம் (கோயிலின் வடபால்) சீதா தீர்த்தம் (தென்பால்); தலவிருட்சம்: பன்னீர் மரம்.

இராமரும் இங்கே வழிபட்டார் என்பதை இத்தலத் தீர்த்தங்கள் காட்டுகின்றன. நவக்கிரகங்கள் இத்தலத்தில் இல்லை.

அருணைமுனிவர் கருணைமிக்கக் கந்தவேளை "தரையில் வெகு" என்ற திருப்புகழால் பரவியுள்ளார். இராமாயணச் செய்தியை அதில் குறித்திருப்பது இத்தலத்தில் இராமர் வழி பட்டதை உறுதி செய்வதாய் உள்ளது.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது.

அருகிலுள்ள தலம் திருவீழிமிழலையாகும்.

## அழியருளும் திருவீழிமிழலை

எருவாய் கருவாய் தனிலே உருவாய்
இதுவே பயிராய் விளைவாகி
இவர்போய் அவராய் அவர்போய் இவராய்
இதுவே தொடர்பாய் வெறிபோல
ஒருதாய் இருதாய் பலகோடியதாய்
உடனே அவமாய் அழியாதே
ஒருகால் முருகா பரமா குமரா
உயிர்கா எனவோ தருள்தாராய்
முருகா எனவோர் தரமோ தடியசர்
முடிமே லிணைதாள் அருள்வோனே
முனிவோர் அமரோர் முறையோ எனவே
முதுசூர மேல் விடும்வேலா
திருமால் பிரமா அறியாதவர்சீர்
சிறுவா திருமால் மருகோனே
செழுமா மதில்சேர் அழகார் பொழில்சூழ்
திருவீழியில் வாழ் பெருமாளே!

— திருப்புகழ்.

தஞ்சை மாவட்டத்தில் சிற்ப/கட்டிடச் சிறப்புக்கு ஒப்பற்ற உதாரணங்களாக விளங்கும் சில தலங்களுள் திருவீழிமிழலையும் ஒன்று. முன்பெல்லாம் கோயில் திருப்பணி செய்வோர் சிற்பிகள் கொத்தனார்களிடம் ஒப்பந்தம் செய்யும் போது அக்கோயிலின் திருப்பணிகளைச் செய்து தருவதாகவும் ஆனால் சில கோயில்களிலுள்ளவற்றைப் போன்று செய்ய, இயலாதென்றும் எழுதிக்கொடுப்பர் என்று கேள்விப்படுகிறோம். ஆவுடையார் கோயில் கொடுங்கை, திருவலஞ்சுழிப் பலகணி கடாரங் கொண்டான் மதில், திருவீழிமிழலை வெளவால் ஒட்டு

மண்டபம் என்பவை அவற்றுள் அடங்கும். திருவீழிமிழலை மண்டபக் கட்டிடச் சிறப்பு நேரில் பார்த்து மகிழவேண்டிய தொன்றாகும்.

திருவீழிமிழலைக்குத்தான் எத்தனை சிறப்புக்கள்! திருமால் இத்தலத்தில் தினமும் 1000 தாமரை மலர் கொண்டு சிவபெருமானை அர்ச்சித்து வந்தார். ஒருநாள் ஒருமலர் குறைய கமலக்கண்ணன் தனது கண்ணிலொன்றை எடுத்து அர்ச்சித்துச் சக்கரம் பெற்றார். திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் இத்தலத்திற்கு வந்து தங்கி வழிபட்டு வரும் நாளில் பஞ்சம் வர, சிவபெருமான் இவர்கள் இருவருக்கும் தினமும் ஒவ்வொரு பொற்காசு விதம் அருளினார். திருநாவுக்காசர் பெற்ற பொற்காசுக்கு வணிகர் உடனே பொருள் கொடுத்தனர். அப்பொருளைக் கொண்டு திருநாவுக்கரசர் அடியார்களுக்கு அமுதளித்துதவினார். ஆனால் திருஞானசம்பந்தர் பெற்ற காசுக்கோ வாசி (வட்டம்) கேட்டனர். அதனால் பொருள் பெற்று உணவளிக்கச் சற்றுதாமதமாயிற்று. திருஞான சம்பந்தர் அது கண்டு திருவீழிமிழலைப் பெருமானைப் பரவிப் "வாசி தீரவே காசு நல்குவீர்" என்று பாடி வாசியில்லாக் காசு பெற்றார். கைத் தொண்டிற்கு என்றுமே தனிச்சிறப்பு உண்டு என்பதை இச்சரித நிகழ்ச்சி எடுத்துக்காட்டும். காத்தியாயன முனிவரது மகளாக இத்தலத்தில் இறைவி வந்தருள, சிவபெருமான் திருக்கலியாணம் கொண்டருளித் திருக்காட்சி தந்தருளினார். இரதிக்காக மன்மதனை இறைவன் உயிர்ப்பித்த தலம் இது.

கல்யாணபுரம், பூகயிலாயம், பஞ்சாக்கரபுரம், தட்சிண காசி, ஷண்மங்களஸ்தலம், சுவேத கானனம் ஆகாசநகரம் பனசாரண்யம், நேத்திரார்ப்பணபுரம், தேஜிநீவனம் என்ற பத்துப் பெயர்களைக் கொண்ட இத்தலம் 'விண்ணிழி' விமானத்தைக் கொண்டு விளங்குகின்றது. ஐந்நூறு மறையவர்கள் இத்தலத்தில் வழிபட்டனர் பிரமதேவர், சிபி, புரூரவர், காமதேனு, மனு ஆகியோர் இங்கே வழிபட்டுப் பேறு பெற்றனர்.

இங்கே சிவபெருமான் வீழியழகர், நேத்திரார்ப் பணேசுவரர் எனவும், இறைவி சுந்தர குஜாம்பிகை. பெருநலமா முலையம்மை எனவும் திருப்பெயர் கொண்டுள்ளனர். புண்ணியப் புனல்: கல்யாண புஷ்கரணி, விஷ்ணு தீர்த்தம். திருமணம் ஆகவேண்டியவர்கள் கல்யாண புட்கரணியில் நீராடி வழிபட்டு

ஏண்ணம் நிறைவேறப் பெறுகின்றனர். முதல் யுகத்தில் செண்பகம், இரண்டாவது யுகத்தில் சந்தனம், மூன்றுவது யுகத்தில் விழுதிச் செடி, நான்காவது யுகத்தில் பலா மரம் ஆகியவை முறையே தலவிருட்சங்களாக விளங்கி வந்துள்ளன.

காத்தியாயன முனிவர், பிரமன், இந்திரன், அகத்தியர், வசிட்டர் ஆகியோரும் வழிபட்ட இத்தலம் மாயூரத்திலிருந்து பூந்தோட்டம் சென்று அங்கிருந்தே மேற்கில் 5 கல் தொலைவில் அடையத்தக்கது. நன்னிலம், ஆடுதுறை பஸ் இத்தலம் வழியே செல்கின்றது. குடந்தை, மாயூரம், பேரளம், நன்னிலம் முதலிய ஊர்களிலிருந்து நல்ல சாலைகள் மூலம் இத்தலத்தை அடையலாம்.

இங்கே கந்தவேள் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இரு தேவிமார் புடைசூழ நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

தினமும் காமிகாகம முறையில் இரண்டு கால வழிபாடு முருகனுக்கு நிகழ்கின்றது. மாத சஷ்டி கார்த்திகை நாட்களில் சிறப்பு வழிபாடு நிகழ்கின்றது கந்தசஷ்டி விழாச்சிறப்புடையது.

சித்திரைபிரம்மோற்சவத்தில்இத்தலபுராணச்செய்திகளை நினைவுபடுத்தும்வகையில் ஒவ்வொருநாளும் அலங்காரங்களும் திருக்கல்யாணமும் சிறப்பாக நிகழ்கின்றன.

சைவத்திருமுறைகள்பன்னிரெண்டிலும் போற்றப்பெறும் இத்தலத்திற்குத் திருஞானசம்பந்தர் பதினொருபதிகமும், திருநாவுக்கரசர் எட்டுபதிகமும், சுந்தரர் ஒருபதிகமும் கிடைத் துள்ளன. சேந்தனார் திருவிசைப்பா மிக அருமையானது.

அருணகிரிநாதர் இத்தலத்து முருகனை அற்புதமான ஒரு திருப்புகழால் விருப்புடன் பரவிப்போற்றியுள்ளார் இத் திருப்புகழில்

> "முருகா எனவோர் தரமோதடியார்
> முடிமேல் இணைதாள் அருள்வோனே"

எனவரும்பகுதி சிந்தித்தற்குரியது.

திருவாவடுதுறை யாதீனத்தைச் சார்ந்துள்ளது இத்திருக் கோயில். இத்தலத்தில் வடக்கு வீதியில் திருஞான சம்பந்தர்,

திருநாவுக்கரசர் திருமடங்களும், மேலவீதியில் விழிச்சிவாக்கிர யோகிகள் சமாதிக் கோயிலும் உள்ளன. இத்தலத்தில் 68 கல் வெட்டுக்கள் உள்ளன. தேஜிநீபுரமகாத்மியம் என்ற வட மொழிப் புராணம் உண்டு. பெருநலமாமுலையம்மை பிள்ளைத் தமிழ் உள்ளது.

அருகில் கூந்தலூர், சற்குணேசுவரம் (கருவேலி) முதலிய தலங்கள் உள்ளன. நாச்சியார் கோயிலும் உள்ளது. இது சிறந்த விஷ்ணு ஸ்தலமாகும். இங்கே கல் கருடன் சிறப்பு.

*ஈறாய் முதல் ஒன்றாய் இருபெண் ஆண் குணம் மூன்றாய்*
*மாறா மறை நான்காய் வருபூதம் அவை ஐந்தாய்*
*ஆறார்சுவை ஏழோசையோ டெட்டுத் திசைதானாய்*
*வேறாய் உடன் ஆனான் இடம் வீழிம்மிழலையே.*

— திருஞானசம்பந்தர்.

*கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை கரையிலாக் கருணை மாக்கடலை*
*மற்றவர் அறியா மாணிக்கமலையை மதிப்பவர் மனமணி விளக்கைச்*
*செற்றவர் புரங்கள் செற்றஎம் சிவனைத் திருவீழிமிழலை வீற்றிருந்த*
*கொற்றவன் தன்னைக் கண்டுகண்டுள்ளம் குளிரஎன்கண் குளிர்ந்தனவே*

— சேந்தனார்.

## முத்திதரு திருவாஞ்சியம்

மேவிலொன்றர் விரிவுற்ற இரண்டினர் மூன்றுமாய்
நாவினுலருடலஞ்சினராற ரேழோசையர்
தேவிலெட்டர் திருவாஞ்சிய மேவிய செல்வனுர்
பாவந்தீர்ப்பர் பழிபோக்குவர் தம் அடியார்கட்கே.

—திருஞானசம்பந்தர்.

நீறுபூசி நிமிர்சடை மேற்பிறை
ஆறுசூடும் அடிகள் உறைபதி
மாறுதானெருங்கும் வயல் வாஞ்சியம்
தேறிவாழ்பவர்க்குச் செல்வமாகுமே —திருநாவுக்கரசர்.

களங்களார்தரு கழனியளிதரக்களிதருவண்டு
உளங்களார் கலிப்பாடலும் பரிலொலித்திடுங்காட்சி
குளங்களானிழற் கீழ்நற்குயில் பயில் வாஞ்சியத்தடிகள்
விளங்கு தாமரைப் பாத நினைப்பவர்வினை நலிவிலரே.

—சுந்தரர்.

திருமால் ஒருகாலத்தில் திருமகளைவிட்டுப் பிரிந்தார். மீண்டும் திருவை அடையவிரும்பிச் சிவபெருமானை அவர் பூசித்து தம் விருப்பம் நிறைவேறப்பெற்றுர். இவ்வாறு அவர் திருவை வாஞ்சித்ததலம்—திருவாஞ்சியம் ஆயிற்று. இன்றும் திரு(செல்வம்) வேண்டுவோர் இத்தலப்பெருமானை வழிபட்டுப் பெறலாம் என்பதை இத்தலத்திறைவனை மூவரும் பாடிய தேவாரப்பாக்கள் சான்று பகருகின்றன. திருவாசகத்திலும் இத்தலம் குறிக்கப் படுகின்றது.

கும்பகோணத்திற்குத் தென்கிழக்கே 15 கல் தொலைவில் உள்ளது இத்தலம். குடவாயிலிலிருந்து நன்னிலம் செல்லும் பேருந்து இத்தலம்வழியே செல்கின்றது. கும்பகோணம்-திருவாரூர் பேருந்துவழியில் மணக்காலிலிருந்து 4கல் வடக்கிலும் இத்தலத்தை அடையலாம். இத்தலம் சந்தனக்காடு (சந்தாரணியம்) எனப்படும். சந்தனமரங்கள் இங்கே நிறைந்திருந்தன. தற்போது கோயிலும் தலவிருட்சமாக சந்தனமரம் உள்ளது.

இங்கே சிவபெருமான் சந்தாரண்யேசுவரர், திருவாஞ்சியநாதர் எனவும், இறைவி: மங்களநாயகி (வாழவந்தநாயகி), மருவார்குழலி எனவும் போற்றப்பெறுகின்றனர்.

ஆறுமுகப்பெருமான் இத்தலத்தில் பன்னிருகரங்களுடன் மயில்மீது அமர்ந்த கோலத்தில் விளங்குகின்றார். மயிலின் முகம் பெருமானின் இடப்புறம் உள்ளதால்இது அசுரமயில்என்பர். இரு தேவியருடன் கிழக்குநோக்கி பெருமான் எழுந்தருளியுள்ளார். உற்சவர் ஒரு முகமும் நான்குகரங்களும் கொண்டு தேவிமார் இருவருடனும் விளங்குகின்றார்.

தினமும் முருகனுக்கு இருகாலவழிபாடு-காமிகாகம முறைப்படி நிகழ்கின்றது. மாதக்கார்த்திகையில் சிறப்புவழிபாடு நிகழும். வருடப்பிறப்பன்று காவடிஎடுத்தல், கந்தசஷ்டிவிழா, திருக்கார்த்திகைவிழா முதலியன நிகழ்கின்றன.

புண்ணியப்புனல்: யமதீர்த்தம், குப்தகங்கை முதலியன. எல்லாத்தலங்களிலும் திருவிழா முடிவின்போது தீர்த்தவாரி நிகழும். ஆனால் இத்தலத்தில் நடுஉற்சவத்தில் தீர்த்தவாரி நிகழ்வது புதுமையானது. கார்த்திகை ஞாயிறு தீர்த்தவாரி.

சூரியன், யமன், புலத்தியர் முதலியோர் வழிபட்ட இத்தலத்தினைத் தேவார ஆசிரியர் மூவரும் பாடிய பதிகம் கிடைத்துள்ளன. அருணகிரிநாதர் இங்கே முருகவேளைப்போற்றி "இபமாந்தர்" என்ற திருப்புகழால் பரவியுள்ளார்.

உபசாந்த சித்த குருகுல
பல பாண்டவர்க்கு வர தன்மை
யுருவோன் ப்ரசித்த நெடியவன் ரிஷிகேசன்
உலகீன்ற பச்சை யுமையணன்
வடவேங்கடத்தி லுறைபவன்
உயர் சார்ங்க சக்ர கரதலன் மருகோனே!

த்ரிபுராந்த கற்கு வரசுத
ரதிகாந்தன் மைத்துன முருக
திறம் பூண்ட சுப்ரமணியஷண் முகவேலா!
திரை பாய்ந்த பத்ம தடவய
லியில் வேந்த முத்தி யருள்தரு
திருவாஞ்சி யத்திலமரர்கள் பெருமாளே!

காசிக்குநிகரான ஆறுதலங்களில் இதுஒன்று. இங்கே இறைவனுக்கு யமன்வாகனமாக விளங்குகின்றார். யமனும் பைரவரும் இங்கே தவமியற்றுகின்றனர். இங்கே யமவாதனை இல்லை. பிரமன், பராசரர், அத்திரி முதலியோர் பூசித்ததலம். இங்கே நவக்கிரகங்கள் இல்லை. இறைவன் சந்நிதியிலேயே "ருத்திரபூமி" அமைந்துள்ளது. சூரியனும் அக்னியும் இங்கே இறைவனை வழிபட்டதைத் திருநாவுக்கரசர்தம் தேவாரத்தில் குறிக்கின்றார்.

புரட்டாசி 6–9 நாட்களிலும், பங்குனி 6–9 நாட்களிலும் காலையில் பெருமான்மீது சூரியஒளி விழுகின்றது-சூரியபூசை யாகக் கொண்டாடப்படுகிறது.

இங்குள்ள மூர்த்தங்கள் சிறப்புச்சிறப்புடையன. அஷ்டபுஜ துர்க்கை கிழக்குநோக்கி விளங்குகிறாள்.

தலபுராணமும், மங்களாம்பிகை பிள்ளைத்தமிழும் உள்ளன.

இத்தலம் அறநிலைய ஆட்சித்துறையினரால் நிர்வகிக்கப் படுகிறது. எண்கண், அச்சுதமங்கலம், நன்னிலம் முதலிய தலங் கள் அருகில் உள்ளன.

# மலர்ப்பொழில் சுற்றிய கீரனூர்

சோழமன்னன் ஒருவன் நாட்டுவளம் கண்டுவந்தான் ஓரிடத்தைக்கடந்துசெல்லும்போது தனது குதிரையின்குளம்பில் இரத்தம் கசிவதுகண்டு, கீழே இறங்கிப்பார்க்கையில் தரையில் ஓரிடத்தில் குருதி பெருகுவதைப்பார்த்து, அவ்விடத்தை தோண்டச்செய்தான். சிவலிங்கம் ஒன்று இருப்பதைக் கண்ணுற்றுத் துணுக்குற்றான். அதே நேரத்தில் பசுஒன்று அங்கே வந்து ஈசன்மீது பால்சொரிய, இரத்தம் வருவது நின்றுவிட்டது. அப்பசுவும் ஈசனை வழிபட்டது. பசுவாகவந்தது பராசக்தியாகிய பார்வதிதேவியே என்று பின்பு புலனாயிற்று. சிவபெருமான் சிவலோகநாதராகக் காட்சியருளினார். அம்பிகையும் பாலாம்பாளாக – (க்ஷீராம்பாள்) திருப்பெயர் கொண்டாள். இத்தகைய அற்புத மான்மியங்கொண்ட சிவலோகநாதசுவாமி திருக்கோயில் தஞ்சை மாவட்டத்தில், நன்னிலம் வட்டத்தில், கீரனூர் என்ற தலத்தில் சிறப்பாக விளங்குகின்றது மாயூரம்–திருவாரூர் பெருந்துவழியில் கீரனூர் அமைந்துள்ளது.

இத்தலத்திற்கு மற்றொரு சிறப்பும் உண்டு. திருப்பறியலூர் (திருப்புன்கூருக்கு வடமேற்கில் 3 கல் தொலைவிலுள்ளதலம்) வீரட்டத்தில் தக்கனது வேள்வியில் அக்கினிதேவனுக்குச் சிவபெருமான்சாபத்தினால் கிளி உருவம்கிடைத்தது. சாபவிமோசனம்தேடி அக்கினி பலதலங்களையும் வழிபட்டு வரும்போது இத்தலத்தில் சிவலோகநாதசுவாமியை வழிபட்டுக் கிளிவடிவம் நீங்கிச் சுயவடிவம் பெற்றதால் கிளி பூசித்ததலம் என்று இது போற்றப் படுகின்றது. இங்கே காசிவிசுவநாதர் சந்நிதியும் உண்டு.

இத்தலத்தில்முதல்பிராகாரத்தில்கந்தவேள் திருக்கோயில் அமைந்துள்ளது. ஒருதிருமுகமும் இருகரங்களும் கொண்டு நின்ற

திருக்கோலத்தில் வேடமங்கையும் வேழமங்கையும் விளங்கக் கிழக்குநோக்கித்திகழ்கின்றார். உற்சவரும் மூலவர் போன்றே விளங்குகின்றார்.

நாடோறும் காரண, காமிகாகம முறையில் நான்குகால வழிபாடு நிகழ்கின்றது.

கோயிலுக்கு எதிரே ஆனந்தகங்கை என்னும் திருக்குளம் உள்ளது.

சித்திராப்பௌர்ணமிவிழாச் சிறப்புடையது.

இங்கே அருணகிரிநாதசுவாமிகள் முருகவேளை வழிபட்டு, "ஈரமோடு சிரித்து"... என்ற திருப்புகழால் பரவிப்போற்றினார். இத்திருப்புகழில் பாற்கடல் கடைந்தவரலாற்றை அழகொழுகக் காட்டுகின்றார்.

*பார மேருப ருப்பத மத்தென*
*நேரி தாகஎ டுத்துட னட்டுமை*
*பாக ராரப டப்பணி சுற்றிடு கயிறாகப்*
*பாதி வாலிபி டித்திட மற்றொரு*
*பாதிதேவர் பிடித்திட லட்சுமி*
*பாரி சாதமு தற்பல சித்திகள் வருமாறு*

*கீர வாரிதி யைக்கடை வித்ததி*
*காரியாய முதத்தை யளித்தக்ரு*
*பானுவாகிய பச்சுரு வச்சுதன் மருகோனே*
*கேதி லாவள கைப்பதி யிற்பல*
*மாட கூடமலர்ப்பொழில் சுற்றிய*
*கீரனூர் உறை சக்தி தரித்தருள் பெருமாளே.*

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளது இத்திருக் கோயில். மாயூரத்திலிருந்து புறப்பட்டு, வழுவூர், பெரம்பூர், கந்தன்குடி முதலிய தலங்களை வழிபட்டு இத்தலத்தை அடைய லாம். திருப்பணி செய்விக்கப் பெறவேண்டிய இக்கோயிலைப் பேணிக்காக்கவேண்டும்!

பெரம்பூர் சிறப்பான முருகன்தலம்-க்ஷேத்திரக்கோவைப் பிள்ளைத்தமிழ் இதன் சிறப்பைப்பேசுகின்றது.

# இன்பம் தரும் இஞ்சிகுடி

குங்கும கற்பூர... ... ... ...
... ... .... ...
சங்கதசக்ரீவ னோடு சொலவள
மீண்டுசெயப் போனவாயு சுதனொடு
சம்பவ சுக்ரீவ னோதி எழுபது வெளமாகச்
சண்டகவிச் சேனை யால்மு னலைகடல்
குன்றி லடைத் தேறிமோச நிசிசரர்
தங்கிளை கெட்டோட ஏவுசரபதி மருகோனே
எங்குநினைப் போர்கள் நேச சரவண
சிந்துரகர்ப் பூர ஆறுமுககுக
எந்தனுடைச் சாமிநாத வயலியில் உறைவோனே
இன்புறுபொற் கூடமாட நவமணி
மண்டபவித் தாரவீதி புடைவளர்
இஞ்சிகுடிப் பார்வதீசர் அருளிய பெருமாளே.

—அருணகிரிநாத சுவாமிகள்

மாயூரம்–திருவாரூர் இருப்புப் பாதையில் பேரளத்திற்குத் தெற்கே ½ கல் தொலைவிலுள்ள சிவஸ்தலம் இஞ்சிக்குடி. நீர் வளமும் நிலவளமும் மிகுந்த இவ்வூரில் இஞ்சி மிகுதியாக விளைந்ததால் இஞ்சிகுடி என்ற பெயர் பெற்றது என்பர். பிரமதேயம், கேரளமாதேவி சதுர்வேதிமங்கலம், பார்வதீசுவரம் எதிரிலி சோழநல்லூர் என்ற பெயர்கள் இத்தலத்திற்குரியன வாகக் கல்வெட்டுக்களில் காண்கின்றோம். புராதன காலத்தில் இத்தலம் சந்தனக்காடாக இருந்தமையால் கந்தவனம் என்றும் அருள் நிறைந்த தவக்கோலத்தில் உமாதேவியார் அமர்ந்துள்ள தால் சாந்திவனம் என்றும் வழங்கப்பட்டன.

இங்கே சிவபெருமான் அருள்மிகு பார்வதீசுவரர் என்ற திருப்பெயர் கொண்டு விளங்குகின்றார். இறைவி: சாந்தநாயகி. சிவராத்திரியன்று சிவபெருமான் வேடராசனுக்கு வேடவடிவுடனேயே வில்லும் வாளும் ஏந்திக் காட்சியருளி முத்தி அளித்ததற்கு அறிகுறியாகக் காட்சி கொடுத்த நாயனார் திருவுருவம் திகழ்கின்றது.

முருகவேள் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவியர் சூழக் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் இத்தலத்தில் விளங்குகின்றார். தினமும் இருகால வழிபாடு காமிகாகம முறைப்படி நிகழ்ந்து வருகின்றது.

மாத சஷ்டி, கார்த்திகை சிறப்புடையன. வைகாசி விசாக விழா நடைபெறுகின்றது. அக்கினி தீர்த்தம், கங்கா தீர்த்தம், நூலாறு முதலிய புண்ணியப் புனல்கள் உள்ளன. தலவிருட்சம்: சந்தனமரம்.

அழகான கோயில்-அற்புதமான இயற்கைச் சூழலில் எழில்பெற அமைந்துள்ளது. இத்தலத்தருகே பெரம்பூர், பெருஞ்சேரி முதலிய தலங்கள் உள்ளன.

அருணகிரிநாதர் இத்தல முருகனைக் "குங்கும கற்பூர" என்று தொடங்கும் திருப்புகழ்ப் பாடலை பாடிப் பரவினார். இராவணவதமும், கந்தன் கருணையும் இப்பாடலில் அற்புதமாகக் குறிக்கப் படுகின்றன.

# திருமாகாளம் நகர் மயில்வாகனன்

*புல்கு பொன்னிறம் புரிசடை நெடுமுடிப் போழிள மதிசூடிப்*
*பில்கு தேனுடை நறுமலர்க் கொன்றையும் பிணையல்*
*செய்தவர்மேய*
*மல்கு தண்டுறை அரிசிலின் வடகரை வருபுனல் மாகாளம்*
*அல்லு நன் பகலுந் தொழும் அடியவர்க் கருவினை அடையாவே*

—திருஞானசம்பந்தர்.

அறுபத்துமூன்று நாயன்மார்களுள் சோமாசி மாறநாயனார் ஒருவர். அவர் சுந்தரர் காலத்தவர். அம்பர் மாகாளம் என்னும் தலத்தில் வாழ்ந்தவர். தாம் செய்ய நினைத்த யாகத்தில் சிவபெருமானே நேரில் வந்து அவிர்ப்பாகம் பெற்றுக் கொள்ள வேண்டும் என்று இறைஞ்சினார். யாகத்தில் சிவபெருமான் எழுந்தருளினார். ஆனால் அவர் வந்த கோலமே முற்றிலும் முரண் பட்டதாய்த் தோன்றியது புலையனாக, கட்குடம் ஏந்திய மங்கை பின்வர, வேதம் நான்கும் நான்கு நாயுருக் கொள்ள யாக சாலைக்குள் பெருமான் நுழைந்தபோது அங்கிருந்த வேதியர் அஞ்சி வெறுத்து ஒதுங்கவும், சோமாசி மாற நாயனார் மட்டும் வந்தவர் சிவபெருமானே என்றறிந்து பணிந்து அவிர்ப்பாகம் தந்து இன்புற்றார். இவ்வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு சோமாசி மாறநாயனாரின் யாகப் பெருவிழா ஆண்டுதோறும் இத் தலத்தில் இன்றும் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகிறது. ஆனால் இந்த யாகச் செய்தியைப் பெரியபுராணத்தில் சேக்கிழார் பெருமான் இப்படிக் கூறவில்லை என்பதும் ஈண்டு அறியத் தக்கது.

மகாகாளபுரி என்றழைக்கப்படும் இத்தலம் அம்பர்பெருந் திருக்கோயிலுக்கு மேற்கே 2 கல் தொலைவிலுள்ளது. கோயில்

திருமாகாளம் என்று இக்காலப் பெயர். அம்பன், அம்பாசுரன் என்னும் அரக்கர்களைக் கொன்ற பாவம் தீரக் காளி இங்கே பரமனைப் பூசித்தருள் பெற்றாள். மகாகாளர் இங்கே மகா தேவனை வழிபட்டார். ஆதலின் மாகாளம், மகாகாளபுரி என்ற பெயர்கள் இத்தலத்திற்கு வழங்கலாயிற்று. இறைவன், மகாகாளநாத சுவாமி; இறைவி: பயக்ஷாம்பிகை-அச்சந்தவிர்த்த நாயகி-ஐயன்மாதேவி. இத்தலத்தில் திருஞான சம்பந்தர் மூன்று பதிகங்களால் பரமனைப் பாடி வழிபட்டார்.

முருகவேள் ஒரு முகமும், நான்கு கரங்களும் கொண்டு தேவிமாருடன் கிழக்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் திகழ்கின்றார். உற்சவமூர்த்தி ஒருகால் மயில்மீது கொண்டு விளங்குகின்றார். அபயவரத ஹஸ்தங்களுக்குப் பதில் வேல் ஏந்திய நிலையில் இங்கே காண்கிறோம்.

சோமாசிமாற நாயனாருக்கு (சோமயாஜிமாறர்) நீசனாக இறைவன் வந்த திருக்கோலம்-தியாகராஜராக இத்தலத்தில் உள்ளது தனிச் சிறப்பு. காட்சி கொடுத்த பெருமான் திருவடிவம் கொள்ளையழகு கொஞ்ச விளங்குவது.

காரண, காமிகாகம முறையில் இரண்டு கால வழிபாடு நிகழ்ந்து வருகின்றது. வைகாசிவிசாகம் பெருவிழா நடைபெறுகின்றது.

மாதசஷ்டி, கார்த்திகை சிறப்புநாட்களாகும். தல விருட்சம் கருங்காலி, புண்ணியப்புனல்: மகாகாளதீர்த்தம்

மதங்க, உதங்கமுனிவர்களும், கரிகாலன், மகுடவர்த்தனன் நாகராசன் முதலியோரும் வழிபட்ட இத்தலம் தொன்மைச் சிறப்புடையது. கருவறை விமானம் உட்படக்கருங்கல் திருப்பணி கொண்டுள்ளது.

இங்கே அருணகிரிநாதசுவாமிகள் "காதோடு... " எனத் தொடங்கும் திருப்புகழ்பாடி எந்தை கந்தவேளைச் செந்தமிழால் துதித்தார். உலக மையலில் உழல்வேனை உனை உன்னி ஓத அருள்வாயே! என்று வேண்டி, முருகவேளின் மாமன், தாய் மாண்புகளைப் போற்றுகின்றார் இத்தலத்திருப்புகழில் அருணை வள்ளல்!

பர்தர்ள சேடனுடல் ஆயிரபணும்குட
மாமேரொ டேழுகடல் ஓதமலை சூரர் உடல்
பாழாக தூளி விணிலேற புவிவாழவிடு
சுடர்வேலா
பாலாழி மீதரவின் மேல் திருவொ டேயமளி
சேர்நீல ரூபன் வலி ராவண குழாமிரிய
பாரேவை யேவிய முராரிஐவர் தோழன்
அரிமருகோனே!
மாதா புராரி சுகவாரி பரை நாரி உமை
ஆகாசரூபி அபிராமி வல மேவுசிவன்
மாடேறி யாடும் ஒருநாதன் மகிழ்போதம்அருள்
குருநாதா!
வானோர்கள் ஈசன் மயிலோடு குறமாதுபண
வாளா குகாகுமர மாமயிலின் மீதுதிரு
மாகாள மாநகரில் மாலொடடியார்பரவு
பெருமாளே.

இத்தலச் சிறப்புக்களை வடமொழியில் சூதமாமுனிவர் அருளிய பிரமபுரீச மகாத்மியத்திலும், திரிசிரபுரம் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் இயற்றிய அம்பர் புராணத்திலும் காண்கிறோம்.

இத்தலத்தருகில் சட்டைநாதசுவாமி கோயில் உள்ளது. அங்கே இறைவர்: புவனேசர், ஆபத்துத்தாரணர்; இறைவி: அமுதவல்லி.

மற்றொரு கோயில் ருத்ரகங்கையில் உள்ளது. இறைவர் ஆபத்சகாயேசுவரர். பரிமளேசுவரர். இறைவி: பரிமளநாயகி.

இக்கோயில்களெல்லாம் அறநிலைய ஆட்சித்துறையின்கீழ் உள்ளது.

அம்பர்மாகாளம் திருக்கோயிலில் வழிபடுவோர் விடுதிகள் உள்ளன. கந்தன்குடி திருக்கோயிலும் இத்தலத்திற்கருகில்தான் உள்ளது.

## திருஅம்பர் தம்பிரான்

*எரிதர அனல் கையிலேந்தி எல்லியில்*
*நரிதிரி கானிடை நட்டம் ஆடுவர்*
*அரிசிலம் பொரு புனல் அம்பர்மாநகர்க்*
*குரிசில் செங்கண்ணவன் கோயில் சேர்வரே*

— **திருஞானசம்பந்தநாயனார்.**

**திருஅம்பர் பெருந்திருக்கோயில் என்று போற்றப்பெறும் இத் தலம் வரலாற்றுச்சிறப்புமிக்கது. பிரம்மபுரி, இந்திரபுரி, மாரபுரி என்றும் அழைக்கப்படும். இத்தலம்மாயூரம்-திருவாரூர் இருப்புப் பாதையில் பூந்தோட்டம் நிலையத்திற்குக் கிழக்கே 4 கி. மீ. தொலைவில் அமைந்துள்ளது. காம்போஜ மன்னன் நந்தனராஜன் இங்கேவழிபட்டதால் நந்தனராஜபுரம் என்ற பெயரும் உண்டு.**

**சிலந்தியாயிருந்து திருஆனைக்காவில் வழிபட்டுப்பின் கோச் செங்கட்சோழநாயனாராக அவதரித்துக்கட்டிய மாடக்கோயில் களுள் இத்தலமும் ஒன்று. கட்டுமலை அமைப்புடைய கோயில் இது.**

**சிவபெருமான் பிரம்மபுரீசுவரர் எனவும், இறைவி சுகந்த குந்தளாம்பிகை எனவும் இங்கே போற்றப்பெறுகின்றனர். இத் தலத்தில் திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் ஒருசேர இருந்து வழிபட்டதாகப்பெரியபுராணம்பேசுகின்றது. திருஞான சம்பந்தர் அருளியபதிகம் கிடைத்துள்ளது.**

**இங்கே முருகவேள் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு இருதேவியருடன் நின்றதிருக்கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். உற்சவர் இல்லை. தினமும் மூன்றுகால வழிபாடுகள் காரண, காமிகாகம முறைப்படி நிகழ்கின்றன.**

**இந்திரதீர்த்தம், சூலதீர்த்தம், அன்னமாம்பொய்கை (கிணறு) முதலிய புண்ணியப்புனல்கள் உள்ளன, தலவிருட்சம்: புன்னை.**

இலிங்கத்திருமேனிக்குப் பின்புறம் சோமஸ்கந்தராகப் பெருமான் இத்தலத்தில் காட்சியருள்வது தனிச்சிறப்பாகும்.

மாதந்தோறும் சஷ்டி, கார்த்திகை நாட்களில் சிறப்புவழி பாடுகள் நிகழ்கின்றன மாசிமகத்திருவிழாச் சிறப்புடையது.

அருணகிரிநாத சுவாமிகள் "சோதிமந்திரம்" எனத் தொடங்கும் திருப்புகழ்ப்பாடி இங்கே கந்தவேளை வழிபட்டு இன்புற்றார். பொய்க்கூரைவேய்ந்து, தன்னலச்சுவர் எழுப்பி, வஞ்சகவாயில்வைத்து, ஐம்புல இன்பமதுமாந்திப் போலிவாழ்வு வாழ்ந்து யமன் வசப்பட்டு, உடல்வேகும்நிலை என்று போகும் என்று உருகிப்பாடினார். அவலவாழ்வு அகன்றிடக் குவலயத்தில் ஞானவேலாயுதன் துணையை நமக்கு நினைவுபடுத்திப்பாடும் பகுதி மிகவும் சுவையானது.

*ஆதிமண்டலஞ் சேர வும்பரம*
*சோம மண்டலங் கூட வும்பதும*
*வாளன் மண்டலஞ் சார வுஞ்சுழிப டர்ந்ததோகை*
*ஆழி மண்டலந் தாவி யண்டமுத*
*லான மண்டலந் தேடி யொன்றதொழு*
*கான மண்டலஞ் சேடனங்கணயில் கொண்டுலாவிச்*

*சூதர் மண்டலந் தூளெ ழுந்து பொடி*
*யாகி விண்பறந் தோடமண்டியொரு*
*சூரியந்திரண் டோட் கண்டுநகை கொண்டவேலா*
*சோலை கொண்டுளங் காண மங்கைமய*
*லாடி இந்திரன் தேவர் வந்துதொழ*
*சோழ மண்டலஞ் சாரும் அம்பர்வளர் தம்பிரானே!*

பிரமன், இந்திரன், மன்மதன் முதலியோர் வழிபட்டு இத்தலத்தில் உய்ந்ததை இத்தலபுராணத்தில் மகாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் சிறப்பாகப்பாடியுள்ளார்கள்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது. அருகில் அம்பர்மாகாளம் (கோயில் திருமாகாளம்) கந்தன்குடி முதலிய தலங்கள் உள்ளன.

# கந்தன்குடி காந்தன்

*எந்தன்சட லங்கம்பல பங்கம்படு தொந்தங்களை*
*என்றுந்துயர் பொன்றும்படி ஒருநாளே*
*இன்பந்தரு செம்பொன்கழ லுந்துங்கழல் தந்தும்பினை*
*யென்றும்படி பந்தங்கெட மயிலேறி*
*வந்தும்பிர சண்டம்பகி ரண்டம்புவி யெங்குந்திசை*
*மண்டும்படி நின்றுஞ்சுடர் ஒளிபோலும்*
*வஞ்சங்குடி கொண்டுந்திரி நெஞ்சன்துக ளென்றுங்*
*கொளும்*
*வண்டன்தமி யன்றன்பவம் ஒழியாதோ*
*தந்தந்தன திந்திந்திமி யென்றும்பல சஞ்சங்கொடு*
*தஞ்சம்புரி கொஞ்சுஞ்சிறு மணியாரம்*
*சந்தந்தொனி கண்டும்புய லங்கன்சிவ னம்பன்பதி*
*சம்புந்தொழ நின்றுந்தினம் விளையாடும்*
*கந்தன்குக னென்றன்குரு வென்றுந்தொழும்அன்பன்கவி*
*கண்டுய்ந்திட அன்றன்பொடு வருவோனே*
*கண்டின் கனி சிந்துஞ்சுவை பொங்கும்புனல்தங்குஞ்சுனை*
*கந்தன்குடி யின்தங்கிய பெருமாளே.*

—அருணகிரிவள்ளல்

தஞ்சைமாவட்டத்தில், நன்னிலம் வட்டத்தில், கோவில் கந்தன்குடி என்று வழங்கப்படும் இத்தலம் குமரக்குடி என்றும் வழங்கப்படுகின்றது. பேரளம்-காரைக்கால் பஸ்வழியில் கந்தன்குடி கோயில் வாசலருகே இறங்கி ஒருகிலோமீட்டர் தெற்கில் சென்று இக்கோயிலை அடையலாம். இரயில் வழியாகப் பேரளம்-காரைக்கால்வழியில் கந்தன்குடியில் இறங்க வேண்டும்.

மதுவனம் என்றழைக்கப்படும் இத்தலத்தில் கல்யாண சுந்தரர் என்ற திருப்பெயருடன் முருகவேள் திருக்கோயில் கொண்டு இங்கே விளங்குகின்றார், ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு நின்றதிருக்கோலத்தில் இருதேவிமார் புடைசூழக் கிழக்குநோக்கி விளங்குகின்றார்.

காமிகாகம முறையில் தினமும் ஐந்துகாலவழிபாடு இங்கே நிகழ்கின்றன. மாதக்கார்த்திகை, சஷ்டி சிறப்பு நாட்களாகும், சித்திராபூர்ணிமை, கந்தசஷ்டி, தைப்பூசம் முதலிய திருவிழாக்கள் நிகழ்கின்றன.

ஸ்கந்தபுட்கரணி என்ற திருக்குளம் உள்ளது. தல விருட்சம் பன்னீர்மரமாகும்.

அருணகிரிநாதர் பரவிய இக்கோயில் அறநிலைய ஆட்சித் துறைநிர்வாகத்தில் உள்ளது.

இக்கோயிலருகில் பெரம்பூர் என்ற முருகன் தலமும் உள்ளது.

## செங்காடு மேவிய செவ்வேள்

வங்காரா மார்பிலணி தாரொடுயர் கோடசைய
கொந்தார மாலைகுழ லாரமொடு தோள்புரள
வண்காதி லோலைகதிர் போலவொளி வீசஇதழ்
மலர்போல
மஞ்சாடு சாபநுதல் வாளணைய வேல்விழிகள்
கொஞ்சார மோககிளி யாகநகை பேசியுற
வந்தாரை வாரும் இரும் நீர்உறவு எனுசைமயல்
இடுமாதர்

சங்காளர் சூதுகொலை காரர்குடி கேடர்சுழல்
சிங்கார தோளர்பண ஆசையுளர் சாதியிலர்
சண்டாளர் சீசி அவர் மாயவலையோ டடியெனு
மூலாமந்
சங்கோதை நாதமொடு கூடிவெகு மாயையிருள்
வெந்தோட மூல அழல் வீசஉபதேசமது
தண்காதி லோதிஇரு பாதமலர் சேரஅருள்
புரிவாயே!

சிங்கார ரூபமயில் வாகன நமோநமென
கந்தா குமார சிவ தேசிக நமோநமென
சிந்தூர பார்வதி சுதாகர நமோநமென விருதோதை
சிந்தான சோதிகதிர் வேலவ நமோநமென
கங்காள வேணிகுரு வானவ நமோநமென
திண்சூர ராழிமலை தூள்படவை வேலவிடு
முருகோனே!

இங்கித வேதபிர மாலைவிழ மோதியொரு
பெண்காத லோடுவன மேவிவளி நாயகியை
இன்பான தேனிரசு மார்முலை விடாதகர
மணிமார்பா!

என்டோளர் காதல்கொடு காதல்கறி யேபருகு
செங்காடுமேவிபிர காசமயில் மேலழகொ(டு)
என்காதல் மாலைமுடி ஆறுமுகவா அமரர் பெருமாளே.

— அருணகிரிவள்ளல்.

மேற்குறித்த திருப்புகழ்ப் பாடல் தான் இன்று தமிழகத்தில் திருப்புகழ் முழக்கத்திற்கு வித்தாய் அமைந்தது என்று கூறினால் பலருக்கு வியப்பாக இருக்கும். திருப்புகழ்ப் பாக்களைத் தமிழகத்தில் இந்நூற்றாண்டில் பரப்பிய வள்ளிமலை ஸ்ரீமத் சச்சிதானந்த சுவாமிகள் முதன் முதலாக இத்திருப்புகழைத் தான் பழநித்திருக் கோயிலில் ஒரு தேவரடியாள் பாடி ஆடக் கேட்டு, அது திருப்புகழ் என அறிந்தார். பழனியாண்டவரே ஒரு சிறுவனாக வந்து அவருக்குத் தமிழ் கற்பித்தார். திருப்புகழ் பரப்புவது தான் அவர் பிறவிப்பணி என்று திருவண்ணாமலை மாமுனிவர் சேஷாத்திரி சுவாமிகள் வள்ளிமலை சுவாமிகளுக்கு உபதேசித்தார். இவ்வாறு இத்திருப்புகழ்ப் பாடல் இன்று தமிழகமெங்கும் திருப்புகழ் இசைபரப்ப முதலொலியாக விளங்கியதைத் திருப்புகழ் அடியார்களும் அருணகிரிநாதரின் தொண்டர்களும் நன்கு உணர்வர். இத்தகு சிறப்புடைய திருப்புகழ் திருச்செங்காட்டங்குடிக் குரியது என்பதை நினைக்கும் போது திருவருளின் மாண்பினை நாம் இன்னும் வியக்க வேண்டியுள்ளது.

திருச்செங்காட்டங்குடி என்றவுடன் சிறுத்தொண்ட நாயனார் வரலாறு நம் நினைவிற்கு வருகின்றது. சீராளனைக் கறிசமைத்து உத்திரா பதிபாராக வந்த பரமனுக்குப் படைத்த பெருமை மிக்க சிறுத்தொண்டர் நாடகம் நம் கிராமங்கள் தோறும் இன்றும் நடந்து வருகின்றதன்றோ!

மந்திரபுரி செங்காடு சத்தியபுரி மலரோன்
தந்திரபுரி ஆத்திவனம் தயங்குசுடர் வயங்காநிற்கும்
முந்துபாஸ் கரபுரி சமுத்திரபுரி முடிசேர்
இந்திரன் மகிழ்கணபதீச்சரம் பெயர் எட்டே.

என்று திருச்செங்காட்டிற்கு எட்டுப் பெயர்கள் உண்டு நன்னிலம் வட்டத்தில் திருப்புகலூருக்குத் தென்கிழக்கில் 2 கல் தொலைவிலுள்ள இத்தலத்திற்குக் கும்பகோணம், மாயூரம், நாகப்பட்டினம்ஆகிய ஊர்களிலிருந்துபேருந்துகள் செல்கின்றன.

சத்தியாஷாட முனிவரது தவத்தை-ரத்தநாமுகி, ரக்தபீஜன் என்னும் அசுரர்கள்-அழிக்க முயன்ற போது சிவபெருமான் அவர்களைக் கொன்று அருள் செய்தார். அவர்களது ரத்தம் சிந்திய இடமே ரத்தக்காடாக-செங்காடு என்றாயிற்று எனத்தலமான்மியம் கூறுகின்றது.

மற்றொரு வரலாற்றின்படி-விநாயகன் கஜமுகனை இத் தலத்தில் அழித்தபோது அவன் ரத்தம் பெருகிச் செங்காடு என்ற பெயர் வந்தது. அசுரனைக் கொன்ற பாவம் நீங்க விநாயகர் இத்தலத்தில் சிவபெருமானை வழிபட்டதால் கணபதீச்சரம் என்ற பெயரும் ஏற்பட்டது.

இங்கே சிவபெருமான் கணபதீச்சரர், உத்திராபதீசுவரர் என்று போற்றப் பெறுகின்றார். இறைவி: குளிகாம்பாள்-திருக்குழல் நாயகியம்மை உத்திராபதியார் திருவுருவம் இங்கே தனிச் சிறப்புடையது. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் போற்றிப் பதிகம் பாடிப் பரவியபதி இது. சிறுத்தொண்டர் திருஞானசம்பந்தரை உபசரித்ததாகப் பெரியபுராணம் பேசு கின்றது.

இத்தலத்தில் முருகவேள் ஒருமுகமும், நான்கு திருக்கரங் களும்கொண்டு தேவிமார்இருவருடனும் நின்றதிருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

தினமும் இரண்டு கால வழிபாடு காமிகாகம முறையில் நிகழ்கின்றது. மாதசஷ்டி, கார்த்திகை நாட்களில் சிறப்புவழிபாடுகள் நிகழ்கின்றன. கந்தசஷ்டி, கார்த்திகை பெருவிழாக்கள் நிகழ்கின்றன. சித்திரைப் பெருவிழாவில் அமுது படையல் தனிச்சிறப்பு-சண்பகத் திருநாளும் காண வேண்டிய தொன்று.

இத்தலத்தில் பல புண்ணியப்புனல்கள் உள்ளன. அக்கினி மூலையில் சத்தியபுஷ்கரணியும், தெற்குவீதி கோடியில் சூரிய தீர்த்தமும், கோயிலுக்குக் கிழக்கில் இந்திர தீர்த்தமும், அக்கினி

தீர்த்தமும், தென்பால் யமதீர்த்தமும், மேல்பால் வருணதீர்த்தமும் வாயு மூலையில் வாயுதீர்த்தம், சந்திரபுஷ்கரணியும், திருமருகல் அருகே சிராளன் குளமும் உள்ளன. தலவிருட்சம் ஆத்தி. பட்டினத்தார், பரணர், காளமேகம், சொக்கநாதப் புலவர் பாடிய பாடல்கள் உள்ளன.

இக்கோயிலில் நவதாண்டவசிற்பங்கள்குறிப்பிடத்தக்கன: அவை முறையே புஜங்கலளித தாண்டவமூர்த்தி, கஜசம்ஹாரமூர்த்தி, ஊர்த்துவதாண்டவமூர்த்தி, காலசம்ஹாரமூர்த்தி, கங்காளமூர்த்தி, பிட்சாடனமூர்த்தி, திரிபுரசம்ஹாரமூர்த்தி, பைரவமூர்த்தி, உத்திராபதியார் என்றழைக்கப்படுகின்றன.

இருபத்திரண்டு சருக்கங்களைக்கொண்ட திருச்செங்காட்டுத்தலபுராணம் உள்ளது. வாலாம்பிகை தாசர் பாடிய அமுது படைச் சிந்து என்ற நூலும் உள்ளது.

சப்தவிடங்கத்தலங்களில் ஒன்றான இதில் மரகதலிங்கம் உள்ளது.

வேளாக்குறிச்சி ஆதீனத்தைச் சார்ந்த இக்கோயில் அறநிலைய ஆட்சித்துறை அலுவலரால் நிர்வகிக்கப்படுகிறது.

இத்தலத்தருகே இராமனதீச்சரம், திருமருகல், திருப்புகலூர் முதலிய சைவதலங்களும் திருக்கண்ணபுரம் என்னும் வைணவ தலமும் உள்ளன.

# முத்தர் புகழ் விற்குடி

*வடிகொள் மேனியர் வானமாமதியினர் நதியினர் மதுவார்ந்த*
*கடிகொள் கொன்றையஞ் சடையினர் கொடியினர்*
*உடைபுலியதளார்ப்பர்*
*விடையதேறும் எம்மான் அமர்ந்தினிதுறை விற்குடிவீரட்டம்*
*அடியராகி நின்றேத்தவல்லார் தமை அருவினை அடையாவே.*

—திருஞானசம்பந்தர்.

சிவபெருமான் எட்டுத்தலங்களில் வீராட்டகாசமாக அருட்காட்சி தந்தார் என்றுபுராணவரலாறுகள் பேசுகின்றன. இவைவீரட்டத் தலங்கள் எனப்படும் இத்தலங்களைத் தொகுத்துக் கூறும் பாடல் ஒன்று உண்டு:

*பூமன் சிரங்கண்டி அந்தகன் கோவல் புரம் அதிகை*
*மாமன் பறியல் சலந்தரன்விற்குடி மாவழுவூர்*
*காமன் கொறுக்கை இயமன்கடவூர் இக்காசினியில்*
*தேமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன் சேவகமே.*

அதாவது :

பிரமன் சிரத்தைக் கொய்தது – திருக்கண்டியூர்
அந்தகாசுரனை அடர்த்தது – திருக்கோவலூர்
திரிபுரத்தை எரித்தது – திருஅதிகை
தக்கன் சிரங் கொய்தது – திருப்பறியலூர்
சலந்தராசுரனை அழித்தது – திருவிற்குடி
யானையை உரித்தது – வழுவூர்
காமனை எரித்தது – திருக்குறுக்கை
யமனை உதைத்தது – திருக்கடவூர்

தஞ்சை மாவட்டத்தில் இவற்றுள் ஆறு தலங்களும் இடம் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத் தக்கதாம். இத்தலங்கள் எட்டினையும் அருணகிரிநாதர் வழிபட்டதோடு தம் திருப்புகழால் பரவியுள்ளதும் அறிந்தின்புறத்தக்கது.

சலந்தராசுரனைச் சிவபெருமான் சக்கரத்தால் அழித்த தலம் இது. சலந்தராசுரனின் மனைவி பிருந்தை மீது திருமால் மையல் கொண்டார். அவள் இறந்தபின் எரிந்து போன அவளது சாம்பலில் புரண்டு மயங்கியிருந்த திருமாலை மயக்கம் நீங்குமாறு இத் தலத்தில் சிவபெருமான் அருள் செய்தார் என்றும் தலவரலாறு பேசும். இதனால் பிருந்தைமயானம் என்ற பெயரும் இதற்கு உள்ளது.

வீரட்டானேசுவரர் என்று இங்கே சிவபெருமான் போற்றப் பெறுகிறார். இறைவி: ஏலவார் குழலி–பரிமளநாயகி

இங்கே முருகவேள் ஒருமுகம் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயிலின் மீது அமர்ந்து இரு தேவியருடனும் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். உற்சவர் நின்ற திருக்கோலத்தில் தேவியர் இருவருடனும் விளங்குகின்றார். தினமும் காமிகாகம முறைப்படி இருகால வழிபாடு நிகழ்கின்றது.

மாதக் கார்த்திகை தோறும் சிறப்பு வழிபாடு–உற்சவர் புறப்பாடு நிகழ்கின்றது. திருக்கார்த்திகை விழா நடை பெறுகின்றது.

இத்தலத்தில் சக்கரதீர்த்தம், சங்குதீர்த்தம் என்னும் புண்ணியப் புனல்கள் உள்ளன. தலவிருட்சம்: துளசி (பிருந்தாவனம்)

இத்தலப் பெருமானைத் திருஞானசம்பந்தர் ஒரு பதிகத்தால் பாடிப்பரவியுள்ளார். திருநாவுக்கரசர் தேவாரத்தில் வைப்புத் தலம் இது.

அருணகிரிநாதர் "சித்திரத்திலுமிகுந்த" என்ற திருப் புகழ்ப் பாடலால் இங்கே கந்தவேளைச் செந்தமிழால் வழிப் பட்டார். இத்திருப்புகழில் – சூரசம்ஹாரத்தில் வரும் ஆயுத ஒலிகள் நம் கண்முன் அக்காட்சியைக் காட்டுகின்றன;

த்த னத்தனத னத்த னத்தனின்

தித்தி மித்திமிதி மித்தி மித்திமித

தக்கு டுக்குடுடு டுக்கு டுக்குடென சங்குபேரி

சத்த முற்றுக்கடல் திக்கு லக்கிரிகள்

நெக்கு விட்டுமுகி லுக்கு சர்ப்பமுடி

சக்கு முக்கிவிட கட்க துட்டசுர ரங்கமாள

வெற்றி யுற்றகதிர் பத்தி ரத்தையரு

ளிச்சு ரர்க்கதிப திப்ப தத்தையுறு

வித்த ளித்துமதி பெற்ற தந்தைமண முண்டவேலா

வெட்கி டப்பிரம னைப்பி டித்துமுடி

யைக் குலைத்துசிறை வைத்து முத்தர்புகழ்

விற்குடிப் பதியி லிச்சை யுற்றுமகிழ் தம்பிரானே!

இத்தலம் அறநிலைய ஆட்சித்துறையால் நிர்வகிக்கப் படுகின்றது. இத்தலத்தருகே எட்டிகுடி, எண்கண், சிக்கல் என்னும் முருகவேள் தலங்கள் அமைந்துள்ளன.

இவ்வளவு சிறப்புங்கொண்ட இத்தலம் இருப்பிடம்அறிந்து வழிபடவேண்டும் அல்லவா! திருவாரூர் - மாயூரம் இருப்புப் பாதையில் விற்குடி நிலையத்திலிருந்து 3கல் தொலைவில் இத்தலம் உள்ளது. திருவாரூர் - பயத்தங்குடி பேருந்திலும் இத்தலத்தை அடையலாம்.

## ஆரூரில் ஆதாரத்தொளி

*நீதானெத் தனையாலும்*
*நீடுழிக் க்ருபையாகி*
*மாதானத் தனமாக*
*மாஞானக் கழல்தாராய்*
*வேதாமைத் துனவேளே*
*வீராசற் குணசீலா*
*ஆதாரத் தொளியானே*
*ஆரூரிற் பெருமாளே.* —அருணகிரிவள்ளல்.

திருவாரூர் என்ற உடனேயே எத்தனை எண்ணங்கள் வருகின்றன! பஞ்சபூதஸ்தலங்களுள் பிருதிவிதலம் இது. சப்த விடங்கத்தலங்களுள் தலைமையானது. விடங்கப்பெருமானை விண்ணுலகிலிருந்து மண்ணுலகங்கொணர்ந்து முசுகுந்தமன்னர் திருவாரூரிலே-பிரதிட்டை செய்தவரலாறு தனிச்சிறப்புடைய தன்றோ! விடங்கப்பெருமான்-தானே உண்டானவர்; டங்கம்-உளி-உளியால் செதுக்கப்படாதவர். இந்திரன் முசுகுந்தனின் பக்திகண்டு தனது தந்திரம் பலிக்காமல் போனதற்கு வருந்தாது ஏழு மூர்த்தங்களையும் அளித்து விட்டதாலன்றோ ஏழுதலங்களில் விடங்கமூர்த்தங்களைக் கண்டு வழிபடும் பேறு நாம் பெற்று விட்டோம்.

1. திருவாரூர்-வீதிவிடங்கப்பெருமான்-அஜபாநடனம்
2. திருநள்ளாறு-நகவிடங்கர்-உன்மத்தநடனம்
3. திருநாகைக்காரோணம்-சுந்தரவிடங்கர் - பராவார தரங்கநடனம்
4. திருக்காராயில்-ஆதிவிடங்கர்-குக்குடநடனம்

5. திருக்கோளிலி-அவனிவிடங்கர்-பிருங்கநடனம்
6. திருவாய்மூர்-நீலவிடங்கர்-கமலநடனம்
7. திருமறைக்காடு-புவனிவிடங்கர்-ஹம்ஸபாதநடனம்

"என் ஆரூர்ப்பெருமானை எவ்வாறு பிரிந்திருக்கேன்" என்றுநம்பியாரூரர் கேட்டது நியாயமே! தன் தோழனுக்காக-இருமுறை நள்ளிரவில் சிவபெருமான் தூதுசென்றதால் வீதிஎல்லாம் சிவலோகமாகத்திகழ்ந்தது! திருவாரூர் திருவாதிரைப் பெருவிழாவைத் திருநாவுக்கரசரிடம் சொல்லக் கேட்டார் திருஞானசம்பந்தர். "முத்துவிதானம்" எனத் தொடங்கும் திருநாவுக்கரசர்பதிகம் ஆதிரைத்திருவிழாவை அப்படியே நம்முன் காட்டுகின்றது. அதுகேட்ட திருஞான சம்பந்தர் திருவாரூர் அடைந்து வழிபட்டுச்"சித்தம்தெளிவீர்காள், அத்தன் ஆரூரைப், பத்திமலர்தூவ, முத்தி ஆகும்மே" என்பன வாகிய பதிகங்களைப்பாடிப்பரவினார். இவ்வாறு மூவரும் தேவரும் யாவரும் போற்றும் இத்தலத்தைத் திருஞானசம்பந்தர் 5 திருப் பதிகங்களாலும், திருநாவுக்கரசர் 21 திருப்பதிகங்களாலும் சுந்தரர் 8 திருப்பதிகங்களாலும் வழிபட்டனர். எல்லா வற்றிற்கும் மேலாகச் சுந்தரர்பாடிய திருத்தொண்டர்தொகை-அறுபத்துமூன்று நாயன்மார்களையும் 9 தொகையடியார்களையும் நமக்கு முதலில் தந்தது. அதன் வகைநூலாக நம்பியாண்டார் நம்பி பாடியருளிய திருத்தொண்டர் திருவந்தாதியும்-விரிநூலாக இம்பரும் உம்பரும் போற்றும் திருத்தொண்டர்புராணம் சேக்கிழாரால் பாடப்பெற்றுச் சைவம்தழைக்க ஏதுவாயிற்று.

திருவாரூரும் சுந்தரரும் இணைந்து சிந்திக்க இன்பம்தரும். பரவைகேள்வராகச் சுந்தரர் திருவாரூரில் வாழ்ந்தகாலமே சைவத்தின் பொற்காலமாகும். பெரியபுராணத்தின் நகரச் சிறப்பில் திருவாரூர் பேசப்படுவதே அது சிவராசதானி என்பதற்குச் சான்றாகும். விருத்தாசலத்தில் ஆற்றில் இட்டப் பொன்னைத் திருவாரூர்க்குளத்தில் எடுத்து மாற்றும் சரியாக உள்ளதா என்று பார்த்தவர் அல்லவா சுந்தரர்! விறன்மிண்டர், நமிநந்தியடிகள், செருத்துணைநாயனார், தண்டியடிகள், கழற்சிங்கர் ஆகியோர் முத்திப்பெற்ற திருத்தலம் இதுவே.

விராட்புருடனின் மூலாதாரத்தலமாகிய திருவாரூர் இசையுலக மும்மூர்த்திகளையும் தந்தபெருமைமிக்கது. இத் தலத்திற்குத் திருமூலட்டானம், பூங்கோயில் என்ற பெயர்களும் உண்டு. ஐந்து பிராகாரங்களையும் 21 வீதிகளையும் கொண்டுள்ள

இத்தலத்தில் சிவபெருமான் இடங்கொண்டது எப்பொழுது என்று காண இயலாமல் திகைக்கின்றார் திருநாவுக்கரசர். "ஒருவனாய் உலகேத்தநின்றநாளோ" எனத்தொடங்கும் திருத் தாண்டகத்தில்!

கோயிலுள் இராஜநாராயணமண்டபம், அறநெறி மண்டபம், தேவாசிரியமண்டபம், சபாபதிமண்டபம் என்ற நான்கு வரலாற்று முக்கியத்துவமிக்க மண்டபங்கள் உள்ளன.

கோயிலினுள்ளே வீதிவிடங்கவிநாயகர், வன்மீகநாதர் (புற்றிடங்கொண்டார்), நிறைசெல்வத்தியாகேசர் (கமலவசந்த தியாகப்பெருமான்), தம்பிரான் தோழரான ஆலாலசுந்தரர், சேரமான்பெருமாள்நாயனார், மந்திரபீடம், யமசண்டர், ஆதிசண்டர், நீலோத்பலாம்பிகை (கந்தர் திருக்கரத்தைப் பிடித்துள்ள அருமை) சித்தீச்சரம் தட்சிணாமூர்த்தி, தவக்கோலத் தில் கமலாம்பிகை, அக்ஷரபீடம் முதலிய திருவருட்கோலங்களை வழிபடுகிறோம்.

இத்திருத்தலத்தை அடைய கும்பகோணம், மாயூரம், தஞ்சாவூர், நாகப்பட்டினம், மன்னார்குடிமுதலிய நகரங்களிலிருந்து பேருந்து வசதி உள்ளது. மாயூரத்திலிருந்து இருப்புப்பாதை வழியிலும் இத்தலத்தை அடையலாம்.

இத்தலத்தில் முருகவேள் பல இடங்களில் எழுந்தருளி யுள்ளார். கிழக்குக் கோபுர வாயிலில் இடதுபக்கம் விநாயகரும் வலதுபக்கம் முருகப்பெருமானும் எழுந்தருளியுள்ளனர். சுவாமி உட்பிராகாரத்தின் வடமேற்குக் கோடியில் முருகன் சந்நிதி உள்ளது. கமலாம்பிகையைத் தரிசித்து அட்சரபீடத்தையும் வழிபட்டபின் வள்ளி, தேவயானையுடன் எழுந்தருளியுள்ள சண்முகப்பெருமான் சந்நிதியை அடைந்து வழிபடலாம். அவரை யடுத்துப் பாலசுப்பிரமணியர் சந்நிதி உள்ளது. தேரடியில் தண்டபாணிசுவாமிகோயில் விளங்குகின்றது.

தினமும் ஆறுகாலவழிபாடுகள் நிகழ்கின்றன. மாதக் கார்த்திகை, சஷ்டிசிறப்புவழிபாடுகளும் கந்தசஷ்டி, கார்த்திகைப் பெருவிழா, தைப்பூசம், பங்குனிஉத்திரம் ஆகிய பெருவிழாக் களும் நிகழ்கின்றன.

அருணகிரிநாதர் இத்தலத்தில் ஈடுபாடுமிக்கு ஏழு திருப்புகழ்ப்பாக்களால் கந்தவேளைச் சந்தப்பாவில் போற்றி யுள்ளார். சிலகாலம் இத்தலத்தில்தங்கி, மநுநீதிச்சோழன்

அக்காலத்தில் தன்மகன்மீது தேரைச்செலுத்தி, பசு தன் கன்றை இழந்ததற்குக் கழுவாய்த்தேடி இதுதான் மனுநீதி என்று காட்டியதிறத்தைப்போற்றினர்:

*சுரபி மகவினை யெழுபொருள் வினவிட*
*மனுவி னெறிமணி யசைவுற விசைமிகு*
*துயரில் செவியினி லடிபட வினவுமி னதிநீது*
*துணிவி லிதுபிழை பெரிதென வருமது*
*உருகி யரகர சிவசிவ பெறுமதோர்*
*சுரபி யலமர விழிபுனல் பெருகிட நடுவாகப்*
*பரவி யதனது துயர்கொடு நடவிய*
*பழுதின் மதலையை யுடலிருபிளவொடு*
*படியரதமதை நடவிடமொழிபவன் அருளாரூர்ப்*
*படியிலறுமுக சிவசுத கணபதி*
*யிளையகுமர நிருபபதி சரவண*
*பரவை முறையிட அயில்கொடு நடவிய*
*பெருமாளே!*

எனவரும் திருப்புகழ்ப் பகுதிப் பெரியபுராணத்தில் வரும் திருநகரச் சிறப்புடன் இணைத்துப் பயின்று இன்புற வேண்டிய தொன்று. இத்தலத் திருப்புகழ்ப்பாக்கள் "நீதானெத்தனை", "மகரமது", "கரமுமுளரியின்", "பாலோதேனே" "கூசாதேபா", "கூர்வாய்" 'பாலோதேனேபாகோ' என்று தொடங்குவன.

இத்தலம் பற்றிய பல இலக்கியங்கள் உள்ளன. சம்பந்த முனிவர் இயற்றிய திருவாரூர்ப்புராணமும், சிதம்பரம் மறை ஞானசம்பந்தர் இயற்றிய கமலாலயச்சிறப்பும், மகாவித்து வான்திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம்பிள்ளை அவர்கள் இயற்றிய தியாகராசலீலையும் இத்தல புராணங்கள் வகையைச்சார்ந் துள்ளன. தேவாசிரிய மான்மியம் என்ற நூலும் உள்ளது. சேரமான் பெருமாள்நாயனார் அருளிய திருவாரூர் மும்மணிக் கோவை, குமரகுருபரசுவாமிகள் அருளிய திருவாரூர் நான்மணி மாலை, வைத்தியநாதநாவலர் இயற்றிய திருவாரூர்பன்மணி மாலை, கமலைஞானப்பிரகாசர் அருளிய திருவாரூர் குறவஞ்சி, அந்தகக்கவி வீரராகவ முதலியார் இயற்றிய திருவாரூர் உலா, கமலைஞானப்பிரகாசர் இயற்றிய தியாகப்பள்ளு, சைவ எல்லப்ப நாவலர் இயற்றிய திருவாரூர்க்கோவை, தியாகராசசெட்டியார் இயற்றிய திருவாரூர்பாதி திருவொற்றியூர் பாதிவெண்பா

அந்தாதி திருவாரூர் மருந்துவெண்பாமாலை, கீழ்வேளூர் குருசாமி தேசிகர் இயற்றிய திருவாரூர் ஒருதுறைக்கோவை, திருவாரூர் சதாசிவதேசிகர் இயற்றிய திருவாரூர் இரட்டைமணிமாலை, பாபவிநாசமுதலியார் இயற்றிய திருவாரூர்ப்பதம் முதலியனவும் சித்தீச்சரம் தட்சிணாமூர்த்திபதிகம், தட்சிணாமூர்த்தி பதிகம், ஆரூர்த்தலமாலை,கமலைபராசத்திமாலை, தேரூர்ந்தசோழபுராணம் கமலாம்பிகை பிள்ளைத்தமிழ், தியாகராசர் கழில்நெடில், தியாகராசர் கலிப்பா. திருவாரூர் விநாயகர் இரட்டைமணிமாலை முதலியனவும் உள்ளன.

வடமொழியில் அஜபாரகசியம், ஆடகேஸ்வரமகாத்மியம், கமலாலயமகாத்மியம், நாகரகாண்டம், தியாகராஜலீலை, சமற்காரபுரமான்மியம், தியாகராஜபுரமான்மியம், தேவயாகபுர மான்மியம், தேவாசிரிய மகாத்மியம், ராமகயாமகாத்மியம், முசுகுந்தபுரமான்மியம், ஸ்ரீபுரமான்மியம், ஸ்கந்தபுரமான்மியம் க்ஷேத்திரவரபுரமான்மியம், முத்துசாமிதீட்சிதர் கிருதிகள், தியாகராஜாஷ்டகம் முதலியன உள்ளன.

திருவாரூர்க்கோயிலினுள்ளே அசலேசுவரர், ஆடகேசர், அனந்தேசர், விசுவகர்மேசர், சித்தீசர், ரணவிமோசனேசர் ஆலயங்கள் உள்ளன.

தலவிருட்சம் பாதிரி. புண்ணியப்புனல்: கமலாலயம், சங்குதீர்த்தம் முதலியன. கமலாலயத்தில் 64 கட்டங்களில் நீராடலாம்.

ஏழுதிருமுறைகளிலும் பாடல் பெற்ற தலங்கள் மூன்றே தாம்: அவை ஆரூர், கச்சியேகம்பம், திருமறைக்காடு என்பன.

இத்தலத்தில் மார்கழிதிருவாதிரை, பங்குனித்திருவிழா, தேர், தெப்பத்திருவிழாக்கள் சிறப்பானவை.

இத்தலம் அறநிலைய ஆட்சித்துறையினரால் நிர்வகிக்கப் படுகிறது.

இத்தலத்தைச்சுற்றி திருவாரூர் அறநெறி, பரவையுண்ட மண்டளி, திருப்பள்ளியின்முக்கூடல், திருவிளமர் முதலிய தேவாரத்தலங்கள் உள்ளன. எண்கண், விற்குடி, ஆகியத்திருப் புகழ்தலங்கள் அருகில் உள்ளன.

## சிக்கல் சிங்கார வேலவன்

வானுலாவும் மதிவந்துலாவும் மதின் மாளிகை
தேனுலாவும் மலர்ச்சோலை மல்குந்திகழ் சிக்கலுள்
வேனல் வேளை விழித்திட்ட வெண்ணெய்ப் பெருமானடி
ஞானமாகந் நினைவார் வினையாயின நையுமே!

— திருஞானசம்பந்தர்

அலர்தரு புட்பத் துண்டாகும் வாசனை
திசைதொறு முப்பத் தெண்காதம் வீசிய
அணிபொழி லுக்குச் சஞ்சார மாமணி யிசையாலே
அழகிய சிக்கற் சிங்கார வேலவ
சமரிடை மெத்தப் பொங்கார மாய்வரு
அசுரரை வெட்டிச் சங்காரமாடிய பெருமாளே!

— (புலவரை......) அருணகிரிநாதர் திருப்புகழ்.

வசிட்டமா முனிவர் காமதேனுவைப் பெறுதற்காக இறைவனைப் பூசித்தார். இறைவன் அருளால் காமதேனுவைப் பெற்றார். காமதேனுவின் பால் பெருகி நிலமெல்லாம் உறைந்து வெண்ணெயாக, அதை எடுத்து இலிங்கமாக்கிப் பூசித்தார் வசிட்டர். அந்த லிங்கத்தை வேறிடத்தில் வைக்க எடுக்கும் போது வராமற் சிக்கிக் கொண்டமையாற் சிக்கல் என்பது பெயர். இறைவரும் வெண்ணெயிலிங்கேசுரர் என்ற பெயர் கொண்டார். இறைவி: வேல்நெடுங்கண்ணியம்மை.

இத்தலம் திருவாரூர்-நாகப்பட்டினம் பேருந்து வழியில் உள்ளது. இரயில் வழியும் உண்டு. மல்லிகைவனம், வசிட்டாச்சிரமம், தேவசாந்நித்தியபுரம், சுயாசரஸ் முதலிய பெயர்களும்

இத்தலத்திற்கு உண்டு. இங்கே சிவன் கோயிலும் திருமால் கோயிலும் ஒருசேர அமைந்துள்ளது தனிச் சிறப்பாகும்.

நவநீதேசுவரர் கட்டுமலையில் கோயில் கொண்டுள்ளார். இது கோச்செங்கணன் கட்டிய கோயில்களுள் ஒன்று.

இங்குள்ள ஆறுமுகப் பெருமான் சிங்கார வடிவேலவர் என்று சிறப்புடன் போற்றப்படும் அற்புத மூர்த்தியாவார். அழகு ஒழுகும் இம்மூர்த்தி சூரசம்ஹார விழாவில் வேல் வாங்கியவுடன் அவரது முகத்தில் வெயர்வை அரும்புவதைக் காணலாம். ஆறு திருமுகங்களும், பன்னிரு கரங்களும் கொண்டு வள்ளி தேவயானையுடன் மயிலின்மீது அமர்ந்த திருக் கோலத்தைக் காணக் கண்கோடி வேண்டும். உற்சவர் சலவைக் கல் மண்டபத்தில் பொன்மேனியராய் இரு தேவியருடன் விளங்கும் அழகும் தனி.

தினமும் ஆறுகால வழிபாடுகள் காரணாகம முறைப்படி நிகழ்கின்றன. ஞாயிறு, செவ்வாய், வெள்ளி, சஷ்டி, கார்த்திகை நாட்கள் சிறப்பு. ஆடிக் கிருத்திகை, கந்தசஷ்டி, திருக்கார்த்திகை தைக் கார்த்திகை சிறப்பு விழாக்கள். தங்க வாகனத்தில் சிங்கார வேலனைத் தரிசிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்.

காமதேனுவின் பால் சுரந்து குளமான பாற்குளம், பல பிணிகளையும் தீர்க்க வல்லது. தலவிருட்சம்: மல்லிகை.

வசிட்டர், விசுவாமித்திரர், காமதேனு, முசுகுந்த சக்கரவர்த்தி, திருஞான சம்பந்தர், அருணகிரிநாதர் முதலியோர் வழிபட்ட தலம். திருஞான சம்பந்தர் ஒரு பதிகத்தால் இங்கே சிவபெருமானைப் பரவினார். இங்கே சிங்கார வேலனை இரு திருப் புகழ்ப் பாக்களால் ("கன்னலொத்த"..., "புலவரை ரட்சிக்குந்"...) அருணகிரிநாதர் வள்ளி மணாளனை வண்டமிழால் பாடிப் பணிந்தார். இத்தலத் திருப்புகழ்ப் பாக்களில் சூரசம்ஹாரம் குறிப்பிடப் படுகிறது. காஞ்சிபுரம் சிதம்பர முனிவர் அருளிய பிள்ளைத் தமிழும் உள்ளது.

அறநிலைய ஆட்சித்துறையின் கீழ் விளங்கும் இக்கோயிலின் வருவாயைக் கொண்டு சித்த வைத்தியசாலை, நாதசுரக் கல்லூரி மாணவர் இல்லம் முதலியன இயங்குகின்றன. வழிபடுவோர் வசதியும் உண்டு. நகரத்தார் திருப்பணி கண்ட கோயில் இது.

எட்டிகுடி, எண்கண், சிக்கல் இம்மூன்றும் ஒரேசிற்பியினால் செய்யப் பெற்ற முருகன் திருவுருவங்களைக் கொண்ட தலம் என்பர்.

சிக்கலுக்கருகே பொரவச்சேரி (பொருள் வைத்தசேரி)யில் கந்தசாமி கோயில் உள்ளது. முருகனின் தனிக் கோயில் இது. பிராகாரத்தில் தண்டபாணி விளங்குகிறார். மூலவராக சண்முகப் பெருமான் திகழ்கிறார். சொக்கலிங்க சுவாமி, மீனாட்சியம்மை சந்நிதிகளும் உள்ளன.

சிலருடைய கருத்துப்படி பொரவச்சேரி ஆறுமுகப் பெருமானே எண்கண், எட்டிகுடி முருகன் திருவுருவங்களைச் செய்த சிற்பியால் உருவாக்கப் பெற்றவர் ஆவார். பெரிய மூர்த்தம் சிறந்த அழகு—மயிலின் பாதம் முதல் திருவாசி வரை யிலும் ஒரே கல்லில் ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களுடன் உருப் பெற்றுள்ளார். நுட்பமான வேலைப்பாடுடைய அற்புதக் கலைப் படைப்பு இம்மூர்த்தி தினமும் மூன்றுகால பூசையும் சிறப்பு விழாக்களும் நிகழும். இக்கோயில் பரம்பரை அறங் காவலரால் நன்கு நிர்வகிக்கப் படுகின்றது. தற்போது திரு. R. செல்லப்ப முதலியார் அறங்காவலராகத் தன் மரபுப் பணியைச் செய்து வருகிறார்.

சிக்கலுக்கருகில் உள்ள கீழ்வேளூர் தேவாரச் சிறப்பு மிக்க சிவஸ்தலமாயினும் அங்கு விளங்கும் முருகன் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு நின்ற கோலத்தில் வடக்கு நோக்கி பிரமசாரியாகச் சிவனை வழிபடுவதாக அமைந்துள்ள காட்சிக் காண வேண்டியதொன்று. செந்தில் முருகனும் கீழ்வேளூர் முருகனும் ஒரே சிற்பி செய்தவை என்பாரும் உளர். இக் கோயிலில் அஞ்சுவட்டத்தம்மன் சந்நிதியும், சுந்தரதாண்டவமும் காணத்தக்கவை. முருகன் வழிபட்டதால் வேளூர் என்ற பெயர் வந்தது. கோச்செங்கட் சோழ நாயனார் அமைத்த மாடக் கோயில்களுள் இதுவும் ஒன்றாகும்.

## நாகையமர்ந்த நம்பிரான்

*மனைவி தாய் தந்தை மக்கள் மற்றுள சுற்றமென்னும்*
*வினையுளே விழுந்தழுந்தி வேதனைக்கிடமாகாதே*
*கனையுமாகடல் சூழ்நாகைமன்னு காரோணத்தானை*
*நினையுமா வல்லீராகில் உய்யலாம் நெஞ்சினீரே.*

—திருநாவுக்கரசர்

நாகை என்றும் நாகப்பட்டினம் என்றும் அழைக்கப் படும் இத்தலம் சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று. இத்தலத்தில் புண்டரீக முனிவரைக் காயத்தோடு சிவபெருமான் ஆரோகணஞ் செய்தருளியதால் திருநாகைக் காரோணம் என்ற பெயர் ஏற்பட்டது. நாகர்கள் பூசித்ததலம் ஆதலால் நாகப்பட்டினம் என்ற பெயர் வந்தது என்பர். இங்கே சுந்தர விடங்கர்–பாராவார தரங்கநடனம் தனிச் சிறப்பு.

கடற்கரைப் பட்டினமாகிய இத்தலத்திற்குத் தஞ்சை, குடந்தை, மாயூரம், காரைக்கால் முதலிய தலங்களிலிருந்து பஸ் வசதி உள்ளது. தஞ்சையிலிருந்து இருப்புப் பாதை வசதி உள்ளது.

இத்தலம் சிவராஜதானி என்றழைக்கப்படுவது. இறைவன் காயாரோகண சுவாமி. இறைவி: நீலாயதாட்சி. காஞ்சி காமாட்சி, காசி விசாலாட்சி, மதுரை மீனாட்சி, நாகை நீலாயதாட்சி என்று போற்றப்படுகிருள் அம்பிகை. அறுபத்து நான்கு சக்தி பீடங்களுள் இதுவும் ஒன்று.

இக்கோயிலுள் மேலைக் குமரன் சந்நிதியும் ஆறுமுகப் பெருமான் சந்நிதிகளும் உள்ளன. மேலைக் குமரன் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு இரு தேவியருடன் நின்ற

திருக்கோலத்தில் விளங்குகிறார். ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களுடன் மயில்மீது அமர்ந்த கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். மயில் முகம் பெருமானுக்கு இடப்புறம் உள்ளது. இரு தேவியரும் அருகில் விளங்குகின்றனர். உற்சவ மூர்த்தி மயிலுடன் நின்ற கோலத்தில் திகழ்கின்றார்.

தேவேந்திரனால் பூசிக்கப்பட்ட கோமேதக லிங்கம் இங்கு வழிபடப் பெறுகிறது.

தினமும் மூன்றுகால வழிபாடுகள் காமிகாகம முறைப்படி நிகழ்கின்றன. கந்த சஷ்டி விழாச் சிறப்புடையது.

இக்கோயிலில் வைகாசி பிரம்மோற்சவம், ஆடிப்பூரம், நவராத்திரி, மாசிமகம் முதலிய விழாக்கள் நிகழ்கின்றன. நவராத்திரி நாட்களில் அலங்காரச் சிறப்புகள் குறிப்பிடத் தக்கவை.

புண்ணியப் புனல்: தேவதீர்த்தம், புண்டரீக தீர்த்தம் ஆகியன. தலவிருட்சம்: மாமரம்.

மூவர் தேவாரமும் பெற்ற இத்தலத்தில் அதிபத்த நாயனார் வழிபட்டு முத்தி பெற்றார். பெரிய புராணத்தில் அதிபத்தநாயனார் புராணத்தில் இத்தலச் சிறப்பினைச் சேக்கிழார் காட்டுகின்றார்.

அருணகிரிநாதர் இங்கே குமரவேளை மூன்று திருப்புகழ்ப் பாக்களால் பரவியுள்ளார்; ("ஒலமிட்டி"..., "மார்புரம்"..., "விழுதாதென"...) இத்தலம் அம்பிகைக்குகந்த தலமாதலின்

*"வாலை துர்க்கை சத்தி அம்பிலோககத்தர் பித்தர் பங்கில்*
*மாது பெற்றெடுத்து கந்த சிறியோனே"*

என்று முருகனைப் போற்றுகின்றார். சூரசம்ஹாரத்தை இரு பாடல்களில் நினைவு படுத்துகின்றார். நரசிம்மாவதாரம் இராமாவதாரம் இரண்டையும் காட்டுகின்றார். "விழுதாதென" என வரும் பாடல் தினமும் பாராயணம் செய்தற்குரியது.

*விழுதா தெனவெ கருதா துடலை*
*வினைசேர் வதுவே புசிதாக*
*விருதா வினிலே யுலகா யதமே*
*விடலே மடவார் மயலாலே*

அழுதா கெடவே அவமா கிடநா
ளடைவே கழியா துணையோதி
அலர் தாளடியேன் உறவாய் மருவோ
ரழியா வரமே தருவாயே!
தொழுதார் வினைவே ரடியோ டறவே
துகள்தீர் பரமே தருதேவா!
சுரர் பூபதியே கருணாலயனே
சுகிர்தா அடியார் பெருவாழ்வே!
எழுதா மறைமா முடிவே வடிவே
லிறைவா எனையா ளுடையானே
இறைவா ஏதுதா அதுதா தனையே
இணைநா கையில்வாழ் பெருமாளே!

திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இயற்றிய திருநாகைக் காரோண புராணம் இத்தல மாண்பினை விரித்துப் பேசுகின்றது. ஆறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது.

பன்னிரெண்டு ராசிகளும் கல்லில் சுவாமி சந்நிதி மேல் மண்டபத்தில் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன. அம்பிகை, ஆறுமுகன் சந்நிதிகளில் கருங்கல் சங்கிலி வளையம் வடிக்கப் பட்டுள்ளது. இன்றும் மீனவ சமுதாயத்தில் யாரேனும் இறந்து விட்டால் கோயில் மரியாதை நிகழ்வது அதிபத்த நாயனார் வரலாற்றை நினைவு படுத்துகின்றது.

இத்தலத்தில் குமரன் கோயில் என்னும் மெய்கண்ட மூர்த்தி திருக்கோயில் உள்ளது. இங்கே ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் பின்புறம் தோகை மயிலுடன் திருமுடியில் கரண்ட மகுடத்துடன் விளங்குகின்றார். தேவியர் தனியே விளங்குகின்றார்கள். இக்கோயிலில் மெய்க் காவல் வேலை பார்த்த அருட்கவி அழகு முத்துப் புலவர் மெய்கண்ட வேலாயுத சதகம் என்ற நூலையும் திறப்புகழ் என்ற நூலையும் இயற்றியுள்ளார்.

## வலிவலத்து வள்ளிகேள்வன்

*பிடியத னுருவுமை கொளமிகு கரியது*
*வடிகொடு தனதடி வழிபடுமவர் இடர்*
*கடிகணபதி வர அருளினன் மிகுகொடை*
*வடிவினர் பயில்வலிவலம் உறை இறையே!*

—திருஞானசம்பந்தர்.

தேவாரத் திருமுறைகளை முறைப்படி ஓதுவோர் முதற்கண் பாடுவது மேல்வரும் தேவாரப் பாடலைத்தான். இதில் விநாயகர் தோற்றம் காட்டப்படுகின்றது. இப்படி எல்லா இடங்களிலும் முதற்கண் பாடுமாறு அமைந்த இப்பாசுரம் வலிவலம் என்னும் தலத்திற்குரியது என்று அறியும் போது அதன் மாண்பினை அறிவது இன்றியமையாததாகின்றது.

வலியன் குருவி வலம் வந்து பூசித்தமையின் இத்தலம் வலிவலம் என்ற பெயர் கொண்டது. முந்நூற்று அந்தணர் இத்தலத்தில் வேள்வி இயற்றி வாழ்ந்து வந்ததால் முந்நூற்று மங்கலம் ஆயிற்று. வில்வக்காடு நிறைந்தமையால் வில்வ வனம் எனவும், கொன்றை மிகுதிபற்றி கொன்றை வனம் எனவும் திருமாலுக்குத் தனிக்கோயில் உள்ளது பற்றி ஏகச்சக்ர நாராயணபுரம் எனவும் இத்தலத்திற்கு வேறு பெயர்களும் உள்ளன.

கோச்செங்கட் சோழ நாயனார் கட்டிய மாடக்கோயில் களுள் ஒன்றான இத்தலத்தில் சிவபெருமான் மனத்துணை நாதராக (ஹிருதயகமலநாத சுவாமி)வும் இறைவி மாழையொண் கண்ணி (மத்ஸ்யாயதாக்ஷி) எனவும் வழிபடப் பெறுகினர்

அருச்சுனன் இங்கே சிவபெருமானை வழிபட்டு 'என்ஹிருதயகமல நாதா!' (மனத்துணை நாதனே) என்று பணிந்தமையால் பெருமானுக்கு இப்பெயர் வந்தது என்பர். இத்தலப்பெருமானைச் சுந்தரர் பாடிப்பரவுங்கால் "மாழையொண்கண்ணுமையை மகிழ்ந்தானை வலிவலந்தனில் வந்து கண்டேனே" என்று குறித்துள்ளதால் அம்பிகைக்கு அப்பெயர் வந்தது எனலாம். வாளையங்கண்ணி (வாளைமீனை ஒத்த கண்ணை உடையவள்) எனவும் போற்றுவர்.

திருவாரூரிலிருந்து 13 கல் தொலைவிலுள்ள இத்தலத்திற்குத் திருவாரூர், நாகை, திருத்துறைப்பூண்டி, கீழ்வேளூர் ஆகிய ஊர்களிலிருந்து பேருந்து வசதிகள் உள்ளன.

திருக்கோயிலைச் சுற்றிக் கிழக்குப்புறம் தவிர மூன்று பக்கங்களிலும் அகழி சூழ்ந்துள்ளது. தல விருட்சம்: புன்னை.

இங்கே சிவபெருமானுக்கு இடப்பால் இதயத்தானத்தில் முருகவேள் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு, மயிலுடன் கூடி நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். குமரவேளின் இடக்கரம் சூசிஹஸ்தமாக விளங்குவது ஒரு சிறப்பு ஆகும். இருபுறமும் தேவியர் விளங்குகின்றனர். உற்சவமூர்த்தி வள்ளி தெய்வானை சூழ ஒரு திருமுகமுடன் மயிலூர்தி கொண்டு விளங்குகிறார்.

வலம்புரி விநாயகர் சந்நிதி சிறப்புடையது.

முருகவேளுக்குக் காரணாகம முறையில் இருகால வழிபாடு தினமும் நிகழ்கின்றது. கந்த சஷ்டி, சித்திரைப் பெருவிழாக்கள் நிகழ்கின்றன. சித்திரையில் தெப்பவிழா ஒப்பற்றது.

பாண்டவர்கள், சூரியன், வலியன் (கருங்குருவி), காரண முனிவர், முதலியோர் வழிபட்ட இத்தலத்தினை திருஞான சம்பந்தர் இருபதிகங்களாலும், திருநாவுக்கரசர் ஒரு பதிகத்தாலும் சுந்தரர்ஒருபதிகத்தாலும் பரவியுள்ளனர். அருணகிரி நாதர் இங்கே முருகப்பெருமானை "தொடுத்த..." என்று தொடங்கும் திருப்புகழால் பரவியுள்ளார். இதில் பிறன்மனை

நோக்காத பேராண்மையைக் காட்டி இராவண சம்ஹாரத்தையும், சிவபிரான் பெருமையினையும் சூரசம்ஹாரத்தையும் அழகாகக் காட்டுகிறார்.

> *வனத்தில் வாழ்குற மகள்முலை முழுகிய*
> *கடப்பமாலிகை யணிபுய அமரர்கள்*
> *மதித்த சேவக வலிவல நகருறை பெருமாளே!*

என்று போற்றுகிறார். இராமலிங்கசுவாமிகள் பாடலும் இத்தலத்திற்கு உள்ளது, வலிவலம் மும்மணிக்கோவை என்ற நூலும் உண்டு. அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளது இத்தலம்.

இத்தலத்திலிருந்து 4 கல் தொலைவில் எட்டிகுடியும் திருக்கோளிலி, கன்றாப்பூர், (10 கல் தொலைவில்), சிக்கல் (8 கல் தொலைவில்) கீழ்வேளூர் முதலிய தலங்கள் உள்ளன.

# எட்டிகுடிப்பதி ஏந்தல்

*ஓங்கு ஐம்புலனோடே நினைத்தின் பயர்வேனை*
*ஓம்பெறும்ப்ரண வாதியுரைத்தெந் தனையாள்வாய்*
*வாங்கி வெங்கணை சூரர் குலக்கொம் புகடாவி*
*வாங்கி நின்றன ஏவிலுகைக்குங் குமரேசா*
*மூங்கி லம்புய வாச மணக்குஞ் சரிமானும்*
*மூண்ட பைங்குற மாது மணக்குந் திருமார்பா*
*சோங்கை யங்கறு பாசில் மனத்தன் பர்கள்வாழ்வே*
*காஞ்சி ரங்குடி ஆறுமுகத்தெம் பெருமானே!*

— அருணகிரிவள்ளல்

"ஈயாத புல்லர் இருந்தென்ன போயென்ன, எட்டிமரம், காயா திருந்தென்ன காய்த்துப் பயன் என்ன" என்ற படிக்காசுப் புலவர் பாடலை நாம் கேட்டிருக்கிறோம். இறைவனுக்கு எட்டியும் உகந்ததே என்பதைக் காட்டுமாப்போலே "எட்டி" ஒரு தல விருட்சமாக அமைந்துள்ளது இத்தலம்தான் எட்டிகுடி. திருத்துறைப்பூண்டியிலிருந்து 20 கி. மீ. தொலைவிலுள்ள இத் தலத்திற்குத் திருவாரூர், வேதாரணியம், நாகப்பட்டினம் ஆகிய ஊர்களிலிருந்தும் பஸ் வசதி உள்ளது. முருகவேள் பெரிதும் உகந்து எழுந்தருளும் இத்தலத்திற்கு அருணகிரிநாதசுவாமிகள் வந்தார். பெருமானைப் பரவினர்; பரவசமுற்றுத் திருநாவுக்கரசு சுவாமிகள் திருப்பெண்ணாடகத்தில் 'சிவபெருமானே! என் ஆவியைக் காக்க உமக்கு இச்சையுண்டேல், கூற்றுவன் என்னைக் கண்டதும் விலகி நிற்க (நான் உனது அடிமை என்பதற்கு அடையாளமாக) உமது மூவிலைச்சூலம் என்மேற்பொறித்திடுக', 'இடம் பொறித்து என்னை ஏற்றுக் கொள்க' என்று விண்ணப் பித்தது போலவே அருணகிரிநாதரும் எட்டிகுடியில்,

"தற்பொறி வைத்தருள் பாராய் தாராய்
தற்சமை யத்தக லாவே ளுதா
தத்துமயிற்பரி மீதே நீதான் வருவாயே
....... ....... ....... .......
எச்சுரு திக்குளு நீயே தாயே
சுத்த விறற்றிறல் வீரா தீரா
எட்டிகுடிப்பதி வேலா மேலோர் பெருமாளே!
(மைக்குழல்...)

என விண்ணப்பித்து 'என்றைக்கு எம்பெருமான் தமது வேற் பொறி மயிற் பொறியிட்டு என்னை ஆண்டருள்வாரோ'' எனக் கவலை கொண்டனர். எட்டிகுடி என்பதைக் காஞ்சிரங்குடி (எட்டி = காஞ்சிரம்) என்று தமக்கே உரிய பாணியில் பெயர் வைத்தும் பாடுகிறார். வயலூர்ப் பெருமானை மறவாது இத் தலத்திலும் போற்றுகிறார். இத்தலத்திற்கு நான்கு திருப்புகழ்ப் பாடல்கள் உள்ளன: (''உரமுற்றிரு'', ''ஓங்கும் ஐம்புல'', ''கடலொத்த'', ''மைக்குழல்'').

இத்தலத்தில் சிவபெருமான் சவுந்தரேசராகவும் அம்பிகை ஆனந்தவல்லியாகவும் விளங்குகின்றனர். அருளானந்த பரவச ரூபமுடைய அம்மையப்பரின் நடுவே ஆறுமுகப் பெருமான் விளங்குவது சோமாஸ்கந்த மூர்த்தத்தை யொத்துள்ளது ஆறுமுகங்களுடன் பன்னிரு கரங்களும் கொண்டு மயில் மீதமர்ந்து விளங்கும் சண்முகப் பெருமான் திருவாசியுடன் ஒரே கல்லில் செதுக்கப்பட்டிருக்கும் அற்புதக் கலை படைப்பு இங்கே தெய்வீகத்திற்கு மேலும் அருட்சக்தியைக் கூட்டுவதா யுள்ளது. அருகில் வேடமங்கையும் வேழமங்கையும் விளங்கக் கிழக்கு நோக்கிப் பெருமான் விளங்குகின்றார்.

மயிலின் மெல்லிய இருகால்கள் மீது திருவுருவம் தாங்குமாறு அமைந்திருப்பதும், திருவாசியின் கொடி, சுடர் இணைப்புத் திறப்பாக அமையப்பெற்றிருப்பதும், பெருமானின் ஆறுமுகங்களும் கரங்களும் தனித்தனியே தெரியுமாறு சிறந்த திறப்பு வேலைப்பாடாக அமைக்கப் பெற்றிருப்பதும் இம் மூர்த்தத்தின் சிற்பச் சிறப்பாகும்.

மூலவரின் பிரதிபிம்பமாக உற்சவர் விளங்குகின்றார். இங்கே பெருமானுக்கு வாதூள ஆகம முறைப்படி ஆறுகால வழிபாடுகள் நிகழ்கின்றன. மாதக்கார்த்திகை சிறப்புடையது.

சித்திரா பௌர்ணமி விழா எத்திக்கும் பெருமை சாற்றுவது. பால்காவடி, பன்னீர்காவடி, பஞ்சாமிர்தக்காவடி, இளநீர்காவடி எடுத்து முருகனின் காக்கும் அடியை வேண்டி நிற்பர் அடியார்கள்! வசந்தன், இடபவாகனக் காட்சி, தேரோட்டம் சிறப்புடையது. வசந்தனுக்கும் தேருக்கும் பெருமான் தியாகேசர் போன்று அலங்கரிக்கப்படுவார்.

சங்கடங்கள் நீக்கும் சரவணப்பொய்கை இங்கு புண்ணியப் புனலாகும். தல விருட்சம்: முன்பு 'எட்டி'; தற்போது 'வன்னி'

வன்மீக முனிவர் இங்கே சமாதி கொண்டிருப்பதாகவும் அவர் சமாதி மீது சித்திவிநாயகப் பெருமான் எழுந்தருளி யுள்ளதாகவும் கூறுவர்.

முத்தரையர் திருப்பணி கொண்ட இத்தலம் அறநிலைய ஆட்சித் துறையினரால் நிர்வகிக்கப்படுகிறது.

எண்கண், எட்டிகுடி, சிக்கல் மூன்றும் ஒரே சிற்பி செய்த முருகப் பெருமான் திருவுருவங்களைக் கொண்ட தலமென்பர். திருநாவுக்கரசருக்குக் காட்சி தந்த திருவாய்மூர், சுந்தரருக்குக் குண்டையூர் கிழார் மூலம் நெல் அருளிய திருக்கோளிலி ஆகிய தலங்கள் அருகிலுள்ளன.

சித்ரா பௌர்ணமிப் பெருவிழாவில் பால்காவடிகள் மிகுந்து, அபிஷேகமாகும் பால் வெள்ளமெனப் பெருகி வாய்க்கால் வழி ஓடும் பக்தி சிறப்பு கண்கொள்ளாக் காட்சியாகும்.

இத்தலத்தில் சுரதேவர் சிற்பம் மூன்று கால்களுடன் அமைந்துள்ளது.

*"பரிவுற்றவருக்கருள் வைத்தருள் வித்*
*தகமுத் தமிழைப் பகர்வோனே!*
*பழனத் தொளிர்முத் தணியெட்டிகுடிப்*
*பதியிற்குமரப் பெருமாளே!"* (உரமுற்றி)

........ ........ ........ ........

*"மெலிவுற்ற தமியற்கு உன் இருபத்ம சரணத்தை*
*மிகநட்பொடருள்தற்கு வருவாயே!*

........ ........ ........ ........

*செழுநத்து மிழுமுத்து வயலுக்குள் நிறைபெற்ற*
*திகழ்எட்டி குடியுற்ற பெருமாளே!"*

(கடலொத்த)

# வேதவனத்தமர்ந்த வேதநாயகன்

*சூழும்வினைக்கட் டுன்பநெடும்பிணி கழிகாமஞ்*
*சோரமி தற்குச் சிந்தைநி னைந்துறு துணையாதே*
*ஏழையெ னித்துக் கங்களு டன்தினம் உழல்வேனே*
*ஏதம கற்றிச் செம்பத சிந்தனை தருவாயே!*
*ஆழிய டைத்துத் தங்கையி லங்கையை யெழுநாளே*
*ஆண்மை செலுத்திக் கொண்ட கரும்புயல் மருகோனே!*
*வேழமு கற்குத் தம்பியெ னுந்திரு முருகோனே*
*வேத வனத்திற் சங்கரர் தந்தருள் பெருமானே!*

**—அருணகிரிவள்ளல்.**

வேதாரணியம் விளக்கழகு என்பது முதுமொழி. இத் தலத்தில் விளக்குகள் அழகுடையவை என்பதற்கு மற்றொரு பொருளும் உண்டு. வேதாரண்யேசுவரர் சந்நிதியில் எரிந்த விளக்கில் எண்ணெய் குடிக்க வந்த எலியொன்று, தனது மூக்கினால் திரியை இழுக்க-விளக்குத் தூண்டப்பட்டது. விளக்கைத் தூண்டிய புண்ணியம் பெற்ற அவ்வெலி அடுத்த பிறப்பில் மாவலிச்சக்கரவர்த்தியாய் மன்னுலகெங்கும் ஆட்சி செலுத்தும் பேறு பெற்றது என்று இத்தல மான்மியம் கூறுகின்றது. மறைகள்பூசித்த தலமாதலின் இத்தலம் திருமறைக் காடு (வேத ஆரண்யம்) என்று வழங்கலாயிற்று.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இத்தலத்திற்கு வழிபடவந்த போது, மறைகள் பூசித்துத் தாளிட்டிருந்ததையும், வேறு ஒரு வாயில் வழியே மக்கள் சென்று வருவதையும் கண்டு, தேவாரமே வேதம் என்பதை மெய்ப்பித்துத் திருநாவுக்கரசர் திறக்கப்பாடினார்; திருஞானசம்பந்தர் மூடப் பாடினார். இவ்வாறு அக்கதவு திறந்து மூடுமாறு செய்தனர்.

சுந்தரர், சேரமானுடன் வழிபட்ட தலமிது. இங்கிருந்துதான் சம்பந்தர் பாண்டிநாடு சென்று சைவம் பரப்பினர். கோளறு பதிகம் பாடிய தலம் இது.

சப்தவிடத் தலங்களுள் ஒன்றான இத்தலத்தில் தியாகேசப் பெருமான் புவனி விடங்கராக எழுந்தருளி ஹம்ஸப்ரீத நடனக் காட்சியருளுகின்றார். தியாகேசருக்கு எதிரில் சுந்தரமூர்த்தி நாயனரும் பரவையாரும் விளங்குகின்றனர். இங்கே திருவாரூர்ப் பூங்கோயில் நமக்கு நினைவிற்கு வருகின்றது.

மூவர் தேவாரமும், முனிவர்கள் போற்றுதலும் பெற்ற இத்தலம் திருத்துறைப்பூண்டி-கோடிக்கரை பேருந்து/இருப்புப் பாதை வழியில் திருத்துறைப்பூண்டிக்குத் தென்கிழக்கே 22 கல் தொலைவிலுள்ளது.

இத்தலம் இராமபிரான் வழிபட்ட தலம். ஆதலின் ஆதிசேது என்று போற்றப்படுகின்றது. இத்தலத்திற்குச் சத்தியகிரி என்ற பெயரும் உண்டு. சிவபெருமானுக்கு இங்கே அமைந்துள்ள பெரிய திருக்கோயில் திருச்சுற்றுமதில்களுடன் சிறப்புற விளங்குகின்றது. பெருமான்: திருமறைக்காடர், வேதாரணியேசுவரர் எனவும், இறைவி: யாழைப்பழித்த மொழியுமையாள் -வீணாவாதவிதூஷிணி எனவும் வழிபடப் பெறுகின்றனர்.

இத்தலத்தில் 96 தீர்த்தங்கள் உள்ளன. அவற்றுள் மணிகர்ணிகை, விசுவாமித்திரதீர்த்தம், வேதாமிர்ததீர்த்தம் வேதநதி, கோடிதீர்த்தம் என்பன சிறப்புடையன. வேதாரணியக் கடல் நீராடல் தொன்மைச் சிறப்பு மிக்கது. அர்த்தோதயம், மஹோதயம், அமாவாசை நாட்களில் எண்ணற்றோர் இங்கே கடலாடி வழிபடுவர். இங்குள்ள 96 தீர்த்தங்களையும் ஆறு யாத்திரைகளாகப் பகுத்து நீராடுவது பண்டைய மரபு: 1. அந்தாக்கிரக யாத்திரை 2. விஷ்ணு யாத்திரை 3. சேது யாத்திரை 4. தெட்சிணமானச யாத்திரை 5. பிரமயாத்திரை 6. உத்தரமானச யாத்திரை என்பன.

தலவிருட்சம்: வன்னி.

அகத்தியருக்குப் பெருமான் இத்தலத்தில் திருமணக்காட்சி யருளியதை வேதாரண்யேசுவரர் சந்நிதியில் அம்மையப்பராய் விளங்கும் காட்சி இன்றும் நமக்கு புலப்படுத்துகின்றது. சுவாமி சுயம்புலிங்கம்.

இவ்வொப்பற்ற திருத் தலத்தில் உட்பிராகாரத்தில் ஆறுமுகப் பெருமானும் வெளிப்பிராகாரத்தில் மேலக்குமரனும் எழுந்தருளியுள்ளனர்.

ஆறுமுகப்பெருமான் பன்னிரு திருக்கரங்களுடன் மயிலுக்கு முன்னுல் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்ருர். இருபுறமும் தேவியர் எழுந்தருளியுள்ளனர்.

மேலக்குமரன் ஒருமுகமும் இரண்டுதிருக்கரங்களும் கொண்டு மயிலின்முன் நின்ற திருக்கோலத்தில் இருதேவியருடன் மேற்குநோக்கி விளங்குகின்ருர்.

இராவணன் வழிபட்ட வீரஹத்தி விநாயகரும், புவனி விடங்கரும் (மரகதலிங்கம்), தெற்கு நோக்கி விளங்கும் துர்க்கையும்–காட்சி கொடுத்த நாயகரும், சந்திரசேகரும் அற்புத மூர்த்தங்களாகும்.

தினமும் ஆறுகால பூசை, காமிகாகம முறைப்படி நிகழுகின்றன. சோமவாரம், வெள்ளிக்கிழமை, சஷ்டி, கார்த்திகை நாட்களில் முருகனுக்குச் சிறப்பு வழிபாடுகள் நிகழ்கின்றன. சித்திரா பௌர்ணமி விழாவும் கந்தசஷ்டி விழாவும் சிறப்பானவை.

திருஞானசம்பந்தர் 4 பதிகங்களும், திருநாவுக்கரசர் 5 பதிகங்களும், சுந்தரர் 1 பதிகமும் இத்தலத்திற்கு உள்ளன. சந்தக்கவி வல செந்தமிழ்க் கவிராஜராகிய அருணகிரிநாதர் மூன்று திருப்புகழ்ப் பாடல்களால் ("சூழும்", "சேலை யுடுத்து", "நூலினை") இங்கே கந்தவேளை வந்தித்துள்ளார். இராமர் இத்தலத்தில் வழிபட்டுள்ளதால்மூன்று திருப்புகழிலும் இராமாயணச் செய்திகளை நினைவுபடுத்துகின்ருர்.

*"பாலைவனத்தில்நடந்து நீல அரக்கியைவென்று*
*பார மலைக்கு ளகன்று கணையாலேழ்*
*பார மரத்திரள் மங்க வாலி யுரத்தையிடந்து*
*பால்வருணத்தலை வன்சொல் வழியாலே*
*வேலையடைத்து வரங்கள் சாடியரக்கரி லங்கை*
*வீடணருக்கருள் கொண்டல் மருகோனே*
*மேவு திருத்தணி செந்தில் நீள்பழ நிக்குளுகந்து*
*வேத வனத்திலமர்ந்த பெருமாளே!"*

(சேலையுடுத்து......)

"வாளிபரப்பி யிலங்கை அரசாேஞன்
மேல்முடி பத்துமரிந்து தோளிரு பத்துமரிந்து
வீரமிகுந்த முகுந்தன் மருகோனே
மேவுதிருத்தணி செந்தில் நீளபழ நிக்குளுகந்து
வேத வனத்திலமர்ந்த பெருமாளே!"

(நூலிணையொத்த...)

இத்தலத்தில் மாவலி வரலாற்றுத் தொடர்புள்ளதையும் நினைவு படுத்துகிறார் அருணகிரிவள்ளல்.

"மாவலியைச் சிறை மண்டஓரடி யொட்டியளந்து"

என்று திருமாலைக் குறித்து அவர் தம் மருகனே என்று போற்றுகின்றார். "உயிர்கூடு விடுமளவும்" எனத் தொடங்கும் பழனித் திருப்புகழிலும் "மறைச்காட்டை" நினைவுகொள்கிறார் அருணை வள்ளல்.

இத்தலம் ஞானியர் பலர் வழிபட்டது; தாயுமான அடிகள் அவதரித்த தலம். மணிவாசகர் மடம், தாயுமானசுவாமிகள் மடம் ஆகியன உள்ளன. திருக்கோயிலும் யாழ்ப்பாணம் வரணியாதீன கர்த்தர் பரம்பரை அறங்காவலராகக் கொண்டு அறநிலைய ஆட்சித்துறையினரால் நிர்வாகம் செய்யப்படுகிறது.

இத்தலத்தில் 89 கல்வெட்டுக்களும் ஒரு செப்புப் பட்டயமும் உள்ளன.

யாழ்ப்பாணம் சின்னத்தம்பிப் புலவர் இயற்றிய மறைசை யந்தாதி, மறைசைக் கலம்பகம் என்ற பிரபந்தங்கள் உள்ளன. பரஞ்சோதி முனிவர் அருளிய தலபுராணம் உள்ளது. இங்கே கஸ்தூரிபா காந்தி கன்யா குருகுலம் ஸ்தாபித்துள்ள, சுதந்திரத் தியாகச் செம்மல் சர்தார் வேதரத்தினம் பிள்ளையவர்களின் தந்தையார் அப்பாக்குட்டிப் பிள்ளையவர்கள் வேண்டுகோளின்படி அகோர தேவர் இயற்றிய தல புராணமும் உள்ளது. திருவாவடுதுறை யாதீன குரு முதல்வர் ஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள் தமது குருவான சித்தர் சிவப்பிரகாசரிடம் ஞான தீக்கை பெற்ற தலமும் இதுவே.

அருகில் அகத்தியன்பள்ளி, கோடிக்குழகர் கோயில் எட்டிகுடி, தலைக்காடு முதலிய தலங்கள் உள்ளன.

வழிபடவும் உணவுகொள்ளவும் வசதிகள் இங்கே உள்ளன.

# கோடிநகர் குழகன்

முன்ருன் கடல் நஞ்சமுண்ட அதனுலோ
பின்தான் பரவைக்கு உபகாரம் செய்தாயோ
குன்ருப் பொழில் சூழ் கோடிக்குழகர்
என்தான் தனியே இருந்தாய் எம்பிரானே!

—சுந்தரர்.

வேதாரண்யத்திற்குத் தெற்கே 9 கல் தொலேவிலுள்ள இத்தலம் கடற்கரையோரத்தமர்ந்த அற்புதத் தனித்தலமாகும். தேவர்கள் பாற்கடலேக் கடைந்து உண்டு மீதியிருந்த அமுதத்தை வாயுவின் கையில் கொடுக்க, அவர் அதை வான்வழியே கொண்டு செல்கையில் கீழே விழுந்து இலிங்க உருவாய் அமைந்த தலம் இது என்பர். இறைவன் அமிர்தகடேசுவரர். இத்தலத்திற்கு சுந்தரர் வருகிருர். இறைவன் தனியே இருப்பது கண்டு, வருந்திப் பாடுகிருர். அப்போதும் ஒரு நயம் காண்கிருர். ஆம்! முன்பு கடலேக் கடைந்த போது நஞ்சு வந்தது அல்லவா. சிவபெருமான் அதனே உண்ண அவர் நீலகண்டராளுர். ஆதலால் கடலின் மீதுயாரேனும் வெகுண்டு தாக்கா திருப்பதற்காகத்தான் கடல்ஓரம் அவர் எழுந்தருளிக் கடலுக்கு உபகாரம் செய்துள்ளார் என்று பாடுகிருர்.

இத்தலத்தில் அம்பிகை: மையார் தடங்கண்ணி, (அஞ்சனுட்சி) என்ற பெயருடன் விளங்குகின்ருள். 'காடுகிழாள்' என்ற அம்பிகையும் விளங்குகின்ருள். சுந்தரர் தேவாரத்திலும் இவ்வம்பிகை குறிப்பிடப்படுகின்றது.

கோயிலுக்குள் அமுததீர்த்தம் என்னும் கிணறு உள்ளது. கோயிலுக்குக் கிழக்கில் ருத்ரகோடி தீர்த்தம் (கடல்) உள்ளது. இதில் ஆடி, தை அமாவாசைகள், மாசி மகம், அர்த்தோதயம், மகோதயம் முதலிய புனிதநாட்களில் நீராடுவது சிறப்புடையது

இங்கே முருகப்பெருமான் ஒரு முகமும் ஆறுதிருக்கரங் களும் கொண்டு கிழக்கு நோக்கி விளங்குகின்றார். அவரது கரங்களில் அமுதகலசம், நீலோற்பலம், பதுமம், அபயம் வச்சிரம், வேல் ஆகியன திகழ்கின்றன. இவர் அமிர்தகர சுப்பிரமணியன் எனப் போற்றப் பெறுகின்றார். இத்தகைய வடிவுள்ள மூர்த்தி வேறு எத்தலத்தும் இல்லை.

காமிகாகம முறையில் தினமும் இரண்டு கால வழிபாடு கள் நிகழ்கின்றன. வைகாசி விசாகப் பெருவிழா பத்து நாட் களுக்கு முருகனுக்குச் சிறப்பாக நிகழ்கின்றது. பங்குனிக் கார்த்திகை திருவிழாவும் மிகச்சிறப்புடையது.

இத்தலத்தில் அருணகிரிநாதர் ஒரு திருப்புகழால் முருகனைப் பாடியுள்ளார். "நீல முகிலான" எனத் தொடங்கும் அப்பாசுரத்தில்,

> காலனது நாவரவ வாயிலிடு தேரையென
> காயமரு வாவிழ அணுகாமுன்
> காதலுட னோதும்அடியார்களுடன் ஆடியொரு
> கால்முருகவேள் எனவும் அருள்தாராய்
> ......... ......... ......... ......... .........
> கோடுமுக வானை பிறகான துணைவா குழகர்
> கோடிநகர் மேவிவளர் பெருமாளே!

என்று போற்றுகின்றார்.

இத்தலத்திற்கு டாக்டர் சொ. சிங்காரவேலன் இயற்றி யுள்ள கோடிநகர்க் கந்தன் கலித்துறை அந்தாதி உள்ளது.

இது கோளிலித்தலம் ஆதலின் நவக்கிரகங்கள் வரிசையாய் உள்ளன. குழகமுனிவர் திருவுருவம் உள்ளது. நவகோடி சித்தர் கட்டம் மிகச் சிறந்த இடம் ஆகும். சிவன் முத்தர்கள்பலர் இன்னும் இங்கு வாழ்வதாகக் கருதப்படுகின்றது. திருவாவடுதுறை சித்தர் சிவப்பிரகாசர் சமாதி இங்கு உள்ளது.

கோடிக்குழகர் கோயில் கோபுரம் ஆறு நிலைகளை உடையதுஎன்பதுசிந்தித்தற்குரியது. வேதாரணியம்கோயிலுடன் இணைந்த கோயில் இது. வேதாரணியத்திலிருந்து பஸ் வசதி உள்ளது. வேறு வசதிகள் இல்லை.

வேதாரணியம் செல்லும் வழியில் இராமர் பாதமும் அகத்தியான் பள்ளியும் காண வேண்டியவை. கோடிக்கரையில் ஒரு லைட் ஹவுஸ் உள்ளது. காடுகளில் மான்கள் அதிகம். கடற் காட்சிகள் இன்பமூட்டுவன. இத்தல முருகன் ஆன்மாக்களுக்குத் தஞ்சம் தருவதோடு, பல்லாயிரக்கணக்கான மைல்களுக்கப்பா லுள்ள ஐரோப்பா, சைபீரியா முதலிய பகுதிகளிலிருந்து வரும் பறவைகளுக்கு இங்கே மாரிக்காலத்தில் தஞ்சம் அளிப்பதை இங்குள்ள பறவைகள் சரணாலயத்தில் கண்டு இன்புறலாம்.

# மதுரை

1. மதுரை
2. திருப்பரங்குன்றம்
3. பழமுதிர்சோலை
4. பழநி
5. பூம்பறை
6. பெரியகுளம்

# கனக மிகும்பதி மதுரை வளம்பதி

*கறங்குதிரைக் கருங்கடலுவ காரவுணப்*
*பெருங்டலுங் கலங்கக் கார்வந்(து)*
*உறங்குசிகைப் பொருப்புஞ்சூர் உரப்பொருப்பும்*
*பிளப்பமறை உணர்ந்தோர் ஆற்றும்*
*அறங்குலவும் மகத்தழலும் அவுணமட*
*வார்வயிற்றின் அழலும் மூள*
*மறங்குலவு வேலெடுத்த குமரவேள்*
*சேவடிகள் வணக்கஞ் செய்வாம்*

— **திருவிளையாடற்புராணம்**

பாண்டிய நாடாகிய மங்கைக்குத் திருப்பரங்குன்றமும் திருக்கொடுங்குன்றமும் கொங்கைகள்; திருச்சுழியல் கொப்பூழ்; திருக்குற்றாலம் வயிறு; திருவேடகம் சிவந்த கைகள், திருப்பூவணம் திருமேனி; திருநெல்வேலி திரண்ட தோள்கள்; மதுரை மாநகரம் அழகிய திருமுகம் என்பார் பரஞ்சோதி முனிவர்:

*"கொங்கை யேபரங் குன்றமுங் கொடுங்குன்றும்; கொப்பூழ்*
*அங்க மேதிருச் சுழியல்; அவ்வயிறு குற்றாலம்;*
*செங்கை ஏடகம்! மேனியே பூவணம்; திரள்தோள்*
*பொங்கர் வேய்வனம்! திருமுகம் மதுரையாம் புரமே"*

— **திருவிளையாடற்புராணம்**

சிவபெருமான் தமது சடையில் சூடிய பிறைமதியிலிருந்து அமுதமாகிய மதுவைத் தெளித்து, இத்தலத்தில் நாகம் உமிழ்ந்த விஷத்தை நீக்கிப் புனிதமாக்கியதால் மதுரை எனவும், சிவபெருமானுடைய அணியாயிருந்த பாம்பு, வட்டமாய் வாலை

வாயினுற் கல்வி எல்லையைக் காட்டியதால் ஆலவாய் எனவும், கடம்பமரம் அடர்ந்த காடாக இருந்ததால் கடம்பவனம் எனவும், இத்தலத்தை அழிக்கும் பொருட்டு வருணன் ஏவிய ஏழு மேகங்களையும் தடுத்தருளச் சிவபெருமான் தமது சடையினின்றும் விடுத்த நான்கு மேகங்களும் நான்கு மாடங்களாக கூடிக் காத்ததால் நான்மாடக்கூடல் எனவும், அங்கயற் கண்ணம்மையாகிய தடாதகைப் பிராட்டியார் கன்னியாயிருந்து ஆட்சி புரிந்தமையின் கன்னிபுரீசம் எனவும், சிவபெருமான் அங்கயற்கண்ணியைத் திருமணம் பூண்டு சோமசுந்தர பாண்டியனுக அரசாண்டதால் சிவராஜதானி பூலோக கயிலாயம் எனவும், இன்னும் பல பெயர்களும் கொண்டு விளங்குவது மதுரை என்னும் அதிமதுரப் பொற்பதி.

இத்தலத்தில் சோமசுந்தரக்கடவுள் மீனுட்சியம்மையுடன் திருக்கோயில் கொண்டு விளங்குகின்ருர்.

இங்கே கூடல் குமாரராக முருகவேள் விளங்குகின்ருர். மீனுட்சியம்மைக்கும் சோமசுந்தரப் பெருமானுக்கும் இடையில் கூடல் குமாரர் சந்நிதி விளங்குவது சோமாஸ்கந்தத் திருவுருவை மெய்ப்பிக்கின்றது. இத்தலத்தில் முருகன் சந்நிதிகள் பல உள்ளன. சுந்தரேசப் பெருமான் சந்நிதிக்குச் செல்லும் வழியில் துவஜஸ்தம்பத்துக்கு எதிரே தண்டபாணியும், கழுகுமலைக் குமரரும், பாலமுருகனும் விளங்குகின்றனர். சோமசுந்தரர் சந்நிதி கோபுர வாயிலிலும் அம்பிகை சந்நிதி கோபுர வாயிலி லும் கந்தவேள் காட்சியருளுகின்ருர்.

கூடல் குமாரர் ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்து கிழக்கு நோக்கி எழுந்தருளி யுள்ளார். மயிலின் முகம் வடக்கு நோக்கியுள்ளது. இருபுறமும் வள்ளியும் தேவயானையும் நின்ற திருக்கோலம்; முருகவேளுக்கு வடபால் அருணகிரிநாதர் கூப்பிய கரங்களுடன் நின்ற கோலத் தில் விளங்குகின்ருர்.

கூடல் குமாரர் சந்நிதியில் பக்தர்கள் அமர்ந்து கொண்டு திருப்புகழ், திருமுருகாற்றுப்படை, சஷ்டி கவசம், சண்முக கவசம் முதலியவற்றைப் பாராயணம் செய்யும் காட்சி அற்புத மாக உள்ளது.

அருணகிரிநாத சுவாமிகள், திருஞான சம்பந்தராக வந்தவர் முருகப் பெருமானே என்று திருப்புகழில் பல இடங்களில் பாடித்துதிக்கின்றார். மதுரையில் திருஞான சம்பந்தர் செய்த அற்புதங்களைத் திருப்புகழில் பல இடங்களில் குறிப்பிடுகின்றார். சமணர்களை அனல்வாதம் புனல்வாதங்களில்வென்று. வழுதிகூன் நிமிர்த்துப் பாண்டியனை நின்றசீர் நெடுமாற நாயனாராகும்படி அருளி, மங்கையர்க்கரசியையும் குலச் சிறையாரையும் பாராட்டி பாண்டி நாட்டில் மீண்டும் சைவ நன்னெறி தழைத்திட அருள் புரிந்த சிவஞானப் பிள்ளையாரின் மதுரைத் திருவருளாடல்கள் முருகப் பெருமானின் அவதாரமாகவே அவரைக் காட்டி அருணகிரி நாதரைப் பாட வைத்ததில் வியப்பில்லை.

*புத்தர் சமணர்கள் மிகவே கெடவே*
*தெற்குநரர்பதி திருநீறிடவே*
*புக்க அனல் வயமிக ஏடுயவே உமையாள்தன்*
*புத்ரனென இசைபகர்நூல் மறைநூல்*
*கற்ற தவமுனி பிரமாபுரம்வாழ்*
*பொற்கவுணியர் பெருமான் உருவாய் வருவோனே.*

என்று மதுரையில் பாண்டியன் சமண் சார்பு நீங்கித் திருநீற்றுச் செந்நெறிக்கு மாறியதையும் அனல் புனல் வாதங்களால் திருஞான சம்பந்தர் சைவ மெய்ந் நெறியை நிலை நாட்டியதையும் அருணகிரிநாதர் அழகுபடப் பேசுகின்றார். மற்றொரு திருப்புகழில் "ஏடுதமிழாலே புனலிலெதிரேற சமணர் கழுவேறப் பொருது கவிவீரராக" முருகனைப் போற்றுவார் அருணகிரி வள்ளல்.

ஏறத்தாழ 26 திருப்புகழ்ப் பாக்களில் திருஞான சம்பந்தர் வரலாற்றுச் சிறப்பினைக் கந்தவேளின் அருளாடற் சிறப்பாகக் காட்டுவார்.

இத்தலத்தில் நாள்தோறும் கந்தவேளுக்கு ஆறுகால வழிபாடு சிறப்பாக நடைபெறுகின்றது. ஒவ்வொரு மாதக் கார்த்திகை, விசாக நாட்களிலும் சஷ்டியிலும் முருகப் பெருமானுக்கு சிறப்பு வழிபாடுகள் நிகழ்கின்றன. ஸ்கந்த சஷ்டி, வைகாசி விசாகப் பெருவிழாக்கள் கண்டு வழிபடற்குரியன. திருவிழாக்களில் திருப்பரங்குன்றத்து முருகப்பெருமான் தெய்வயானையம்மையுடன் எழுந்தருளி சோமசுந்தரப் பெருமான்

அங்கயற்கண்ணியுடன் உலா வருவது கண்கொள்ளாக் காட்சியாகும். சொக்கலிங்கப்பெருமானுக்கு மாதந்தோறும்-சித்திரைப் பெருவிழா, வைகாசி வசந்த விழா, ஆனி ஊஞ்சல் விழா, ஆடி முளைக் கொட்டு விழா, ஆவணி மூலப் பெருவிழா, புரட்டாசி நவராத்திரி விழா, ஐப்பசி கோலாட்ட விழா, கார்த்திகை தீப விழா, மார்கழி எண்ணெய்க் காப்புத் திருவிழா, திருவாதிரை விழா, திருவெம்பாவை விழா, தை தெப்பத் திருவிழா, மாசி மக விழா, பங்குனி வசந்தவிழா என்று மதுரையில் விழாக்கள் தனிச் சிறப்பாகும்.

பங்குனி கோடை விழாவில் திருப்பரங்குன்றம் முருகப் பெருமான் திருக்கல்யாண விழாவிற்குச் சொக்கலிங்கப் பெருமானும் மீனாட்சியம்மையும் எழுந்தருளுவார்கள்.

தண்டபாணி சுவாமிக்கும் கழுகுமலை குமரனுக்கும் விபூதி அலங்காரம், ராஜ அலங்காரம் வெகு சிறப்பாக இருக்கும்.

பார்க்க வேண்டிய திருக்கோயில்கள் மலிந்து-வரலாற்றுச் சிறப்பு மிக்குள்ள பாண்டியர் தமிழ்ச் சங்கம் செழித்த மதுரையில் தமிழ்க் கடவுளாகிய முருகவேளை 11 திருப்புகழ்ப் பாக்களில் அருணகிரிநாதசுவாமிகள் போற்றுகின்றார்.

"வளமொடு செந்தமிழ் உரைசெய அன்பரும்
மகிழவரங்களும் அருள்வாயே" (பரவுநெடுங்கதிர்...)

"அவத்தமாய்ச்சில படுகுழி தனில்விழும்
விபத்தை நீக்கியுன் அடியவருடன்எனை
அமர்த்தி ஆட்கொள மனதினில் அருள்செய்து
கதிதனைத் தருவாயே..." (பழிப்பர்...)

"தாவிமூழ்கி மதிகெட்டு அவலமுற்றவனை
பாவமான பிறவிக்கடல் உழப்பவனை
தாருலாவுபத பத்தியில் இருத்துவதும்
எந்தநாளோ..." (சீதவாசனை)

"......... ....... .. .......... பொருள்தேடிச்
செகமெலா முலாவிக் கரந்து
திருடனுகி ஏசற்றுழன்று
திமிரனுகி ஓடிப்பறந்து திரியாமல்

தெளியுஞானம் ஓதிக்கரைந்து
சிவபுராண நூலிற்பயின்று
செறியுமாறு தாளைப் பரிந்து தரவேணும்"...
(முகமெலா...)

" அருளமுதத்தின் சேருமோர்வழி
குறிதனில் உய்த்துன் பாதமேறிட அருள்தாராய்."
(மனநினை...)

" பத்தர்மன துற்றசிவம் அருள்வாயே"... (முத்துநவ,)

" தாளிணைகளுற்று மேவிய பதத்தில்
வாழ்வொடு சிறக்க அருள்வாயே.... (ஆனைமுக...)

என்று அருள்வேண்டுகின்றார் இத்தலமுருகனிடம் அருணகிரிநாத சுவாமிகள்.

" கனக மிகும்பதி மதுரை வளம்பதி
யதனில் வளர்ந்தருள் பெருமாளே." (பரவு....)

" திறத்தி னுற்பல சமணரை எதிரெதிர்
கழுக்களேற்றிய புதுமையை யினிதொடு
திருத்தமாய்ப்புகழ் மதுரையில் உறைதரும்
அறுமுகப்பெருமாளே, (பழிப்பர்...)

" வேதமீணகம லக்கணர் மெய் பச்சைசரகு
ராம ரீணமயி லொக்கமது ரைப்பதியின்
மேவி வாழமரர் முத்தர்சிவ பத்தர்பணி தம்பிரானே."
(சீதவாசனை....)

" வடவெற்பங்கய லன்றணி குசசர
வணையிற் றங்கிய பங்கய முகதமிழ்
மதுரைச் சங்கிலி மண்டப இமையவர் பெருமாளே."
(புருவச்...)

" தவறிலாமல் ஆளப்பிறந்த
தமிழ்செய் மாறர் கூன்வெப்பொடன்று
தவிர ஆல வாயிற் சிறந்த பெருமாளே.
(முகமெலா...)

" கூர்முத்தமிழ் வாணர்கள் வீறிய
சீரற்புத மாநக ராகிய
கூடற்பதி மீதினில் மேவிய பெருமாளே. (ஏலப்பணி ...)

"திரிபுரநக்கன் பாதி மாதுறை
யழகிய சொக்கன் காதிலோர்பொருள்
செலவரு ளித்தென் கூடல்மேவிய பெருமாளே..."
(மனநினை....)

"அற்பவிடை தற்பமது முற்றுநிலை பெற்றுவளர்
அற்கனக பத்மபுரி பெருமாளே." (முத்துநவ...)

"மரகத கலபச் செம்புள்வாகன
மிசைவரு முருகச் சிம்புளே என
மதுரையில் வழிபட்டும்பரார்தொழு தம்பிரானே.
(அலகில்அவுண...)

"தேவர்கள் கருத்தில்மேவிய பயத்தை
வேல்கொடு தணித்த பெரும-ளே" -(ஆனைமுக..)

எனவரும் மதுரைத்திருப்புகழ் இறுதிவரிகள் மதுரையின்பல்வேறு சிறப்புக்களையும் நினைவுபடுத்தி முருகப்பெருமான் திருவடிகளில் நம்மை ஐக்கியமுறச்செய்கின்றன.

மதுரை தெற்குஆடிவீதியில் திருப்புகழ்ச்சபையும் வடக்காடிவீதியில் திருப்புகழ் மண்டபமும் அறுமுகன் திருப் புகழைபரப்ப அமைந்துள்ளன.

நக்கீரரும் சங்கம் அமர்ந்த புலவர்களும், தேவார திருவாசகம் அருளிய சமயக்குரவர்களும் நாயன்மார்களும், குமர குருபரரும் அருள்பெற்ற மதுரையம்பதி-உள்ளத்திற்கு மதுரமான பதியன்றோ! ஆலவாயான் அருள்கொழிக்கும் ஆலயம் சிற்பக் களஞ்சியமுமாகும்.

"திருஆலவாய் என்று கேட்டவரே
அறம்பெறுவர்; செல்வம் ஓங்கும்;
திருஆலவாய் என்று நினைத்தவரே
பொருள் அடைவர்; தேவதேவைத்
திருஆலவாய்பிடத்துக் கண்டவரே
இன்பநலம் சேர்வர்; என்றும்
திருஆலவாயிடத்து வதிந்தவரே
வீட்டுநெறி சேர்வர் அன்றே!"

அருணகிரிநாதர் பரவிய அறுமுகன் தலங்கள்

# தேவர் பணிந்தெழும் தென்பரங் குன்று

*இருப்பரங் குறைத்திடு மெஃக வேலுடைப்*
*பொருப்பரங் குணர்வுறப் புதல்வி தன்மிசை*
*விருப்பரங் கமரிசை விளங்கக் காட்டிய*
*திருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவாம்.*

—கந்தபுராணம்.

*சந்ததம் பந்தத் தொடராலே*
*சஞ்சலந் துஞ்சித் திரியாதே*
*கந்தனென் றென்றுற் றுனைநாளும்*
*கண்டு கொண்டன்புற் றிடுவேனோ*
*தந்தியின் கொம்பைப் புணர்வோனே*
*சங்கரன் பங்கிற் சிவைபாலா*
*செந்திலங் கண்டிக் கதிர்வேலா*
*தென்பரங் குன்றிற் பெருமாளே.*

—அருணகிரிநாத சுவாமிகள்.

செந்தமிழ்ப்புலமைமிக்க அடியவர் ஒருவர் முருகப் பெருமானை வழிபடக் கோயிலுக்குச்சென்று கொண்டிருக்கிறார். வழியிலே ஓர்பொய்கை; அதன் கரையில் ஓர் அரசமரம்-அதிசயத்தன்மை வாய்ந்தது அதன் இலை! தரையில் விழுந்தால் பறவையாகிவிடும்; நீரில் விழுந்தாலோ மீனாகமாறிவிடும். இவ் வடியவர் வருகின்ற நேரத்தில், மரத்தினின்றும் ஓரிலை கீழே விழுந்தது. அதன்பாதி நிலத்திலும் மற்றொருபாதி நீரிலும் பட்டிருந்தது. பாரில்விழுந்த பகுதி பறவையாயிற்று. நீரில் விழுந்தபகுதி மீனாயிற்று. பறவைபறக்கமுயன்றபோது நீருக்குள்

செல்ல மீன் முயன்றது. 'பார்கொண்டிழுக்க அதுநீர்கொண் டிழுக்க,- இப்படியொரு அதிசயமா? என்று அடியவர் வேடிக்கை பார்க்கலானார். வழிபாட்டிற்குச்செல்வோர் நெறிமாறும்போது அவர்களைப் பிடிப்பதற்கென்று அங்கே கற்கிமுகி என்ற ஒரு பெரும்பூதம் காத்திருந்தது. அடியவரைப் பிடித்துக்கொண்டு பெரிய மலையொன்றின் குகைக்குள் சிறைவைத்து விட்டது. ஏற்கனவே சிவபூசையில் தவறிய 999 அடியார்கள் அங்கு சிறைப் பட்டிருந்தார்கள். ஆயிரம் ஆனவுடன் அப்பூதம் அவர்களை உண்ணும் நியமம் பூண்டிருந்தது. இப்புதிய அடியவர் வருகை யால் இது காறும் அச்சமின்றி சிறையிலிருந்த அடியவர்களுக்கு முடிவு நெருங்கிவிட்டது. வந்த அடியவர் தன்னால் ஏனோருக்கும் நேர இருந்த பேராபத்தை எண்ணி மனம்வெதும்பினார். பூதமோ நீராடிவரச்சென்றிருந்தது. வந்த புதிய அடியவர் எந்த வேளையும் தாம் வழிபடும் கந்தவேளைப்போற்றிப்பாடத்தொடங்கினார். இப்படிப்பிறந்ததுதான் திருமுருகாற்றுப்படை என்ற சங்கப் பாடல்! ஆம்! நக்கீரர்தான் அந்த அடியவர். இறையனார் களவியலுரை கண்ட பேரறிஞர் அவர். மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரர்! தமிழ்கேட்டு விரைந்தார் வேலவன்! அது வீர வேல்-தாரைவேல்-விண்ணோர் சிறைமீட்ட தீரவேல்-வாரிகி குளித்தவேல்-கொற்றவேல்-சூர்மார்பும் குன்றும் துளைத்தவேல்- அது துணையிருக்கப் பயமேது! வேலாயுதப்படை பூதத்தை வதைத்து-ஆயிரம் அடியவரையும் உய்வித்தது.

ஆம்! இந்நிகழ்ச்சி நடந்தஇடம் திருப்பரங்குன்றம்! அக் குகை இன்றும் அங்கே இருக்கின்றது.

*பரங்குன்றில் பன்னிருகைக் கோமான் தன்பாதம்*
*கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காமல்*
*ஆசையால் நெஞ்சை அணிமுருகாற்றுப் படையைப்*
*பூசையாக் கொண்டே புகல்*

என்பது ஓர் தனிப்பாடல்.

முருகவேள் உகந்த ஆறுபடை வீடுகளுள் முதலாவதாகத் திகழ்வது திருப்பரங்குன்றம். தேவயானையைக் கந்தவேள் திருமணங்கொண்டதலம் திருப்பரங்குன்றம்.

சங்க இலக்கியங்களான பரிபாடலும், அகநானூறும் இத் தலத்தைப்போற்றுகின்றன. இங்கே ஆண்டவர் சுப்பிரமணிய

சுவாமியாகக் கந்தவேள் வந்தனைசெய்யப்பெறுகிறார். மதுரையி லிருந்து மேற்கே 5 கல் தொலைவிலுள்ள இத்தலத்திற்கு மதுரை யிலிருந்து நகரப்பேருந்துகள் ஏராளமாகச்சென்று கொண்டிருக் கின்றன.

கந்தமாதனம், கந்தமலை, சத்தியகிரி, பரங்கிரிஎன்றெல்லாம் போற்றப்பெறும் இத்தலத்தில் சிவபெருமான் பரங்கிரிநாதர், சத்யகிரீசர் என்று பரவப்படுகிறார். இறைவி: ஆவுடைநாயகி. பாண்டியநாட்டில் தேவாரம்பெற்ற பதினான்கு தலங்களுள் திருப்பரங்குன்றமும் ஒன்றாகும். இத்தலத்திற்குத் திருஞான சம்பந்தர் தேவாரப்பதிகம் ஒன்றும், சுந்தரர் தேவாரப்பதிகம் ஒன்றும் கிடைத்துள்ளன.

சந்தத்தமிழ்க்கவிராஜரான அருணகிரிநாதசுவாமிகள் இத் தலத்தில் முருகவேளை உருகிவழிபட்டு எண்ணற்ற திருப்புகழ் பாடியிருப்பார். நமக்குக் கிடைத்ததோ பதினாறுதான்! பதினாறு பேறும் தரும் என்பது திருவருட்குறிப்புபோலும்!

மலையடிவாரத்தில் கோயில். குடைவறைக்கோயிலாகத் திகழ்கின்றது. கல்யாணமண்டபம், கம்பத்தடிமண்டபம், மகா மண்டபம், அர்த்தமண்டபம் என்னும் அமைப்புகளைக்கொண்டு 30 படிகளைக்கொண்ட பாண்டியர் சிற்பக்கலைக் கருவூலமாக இக் கோயில் திகழ்கின்றது. மலையிலேயே குடைந்து வடிக்கப்பெற்ற அழகிய திருவுருவாக-ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு-வடக்குநோக்கி அமர்ந்தகோலத்தில் கந்தவேள் விளங்குகின்றார். அருகில் தேவகுஞ்சரி அமர்ந்துள்ளார். இவ்வரிய திருமணக் கோலத்தைச் சூரியனும், சந்திரனும், சித்தர், வித்தியாதரர், நான்முகன், இந்திரன், கலைமகள், நாரதர் முதலியோர் கண்டு போற்றுகின்றதை நாமும் கண்டு வணங்குகின்றோம். எல்லாச் சிற்பங்களும் மலையில் செதுக்கப்பட்டவை. மூலவருக்குக்கீழே ஆடு, சேவல், யானை, மயில் என்ற நான்கும் விளங்குகின்றன. இவை நான்கும் கந்தவேளின் வாகனங்கள்.

இங்கே மூலவருக்கு அபிஷேகம் செய்வதில்லை. எண்ணெய்க் காப்பும் புனுகும் மட்டுமே சாத்தப்படுகின்றது. வேலுக்குத்தான் அபிஷேகச்சிறப்பு!

மூல்மூர்த்தியாகிய முருகவேளுக்கு அருகில் மகிடாசுர மர்த்தினியாக துர்க்கையும்,* தாமரைமலர்மீதமர்ந்து கைகளில் கனியும் கரும்புங்கொண்டு கற்பகவிநாயகரும் விளங்குகின்றனர். மஹாமண்டபத்தின் மேற்புறம் ஸ்ரீகோவர்த்தனம்பிகைகோயில் உள்ளது.

சத்தியகூபம், பிரம்மகூபம், இலட்சுமிதீர்த்தம், சரவணப் பொய்கை முதலான புண்ணியப்புனல்கள் இத்தலத்தில் உள்ளன. மலையின்மீது சரவணதீர்த்தம், காசிச்சுனை என்னும் இருசுனைகள் உள்ளன. கோயிலுக்குள் சந்நியாசிதீர்த்தம் என்ற திருக்கிணறு உள்ளது. இப்புனல்தான் பெருமானின் திருமஞ்சனத்திற்கு உரியது. கோயிலுக்குக்கிழக்கே 2 பர்லாங் தொலைவிலுள்ள சரவணப் பொய்கையில், கார்த்திகைநாட்களில் மக்கள் நீராடிப்புனிதம் அடைகின்றனர்.

புரூரவசு, மாந்தாதா, நளன், அரிச்சந்திரன் ஆகியோர் திருப்பணிகொண்ட இத்தலத்தில் நான்முகன் முதலாக அனைத்துத் தேவர்களும் வழிபட்டுய்ந்தனர் என்று தலமான்மியம்பேசும்.

முருகனைப் போற்றிய எப்புலவரும் பரங்கிரியையும் போற்றிப் பாடியுள்ளனர். இத்தலம் போற்றும் இருபத்தாறு நூல்களை நாம் குறிப்பிடலாம்:

1 திருமுருகாற்றுப்படை. 2 பரிபாடல், 3 அகநானூறு, 4 தேவாரம், 5 திருப்புகழ், 6. திருவகுப்பு, 7. கந்தபுராணம் 8 கந்தபுராணச் சுருக்கம், 9. திருப்பரங்கிரிப்புராணம், 10 சத்தியகிரி மகாத்மியம், 11 பரங்கிரிபிள்ளைத்தமிழ், 12 பரங்கிரிப் பாமாலை, 13. பரங்கிரிகலித்துறை அந்தாதி, 14 பரங்கிரிபதிற்றுப்பத்தந்தாதி, 15 பரங்கிரிவெண்பா அந்தாதி, 16 பரங்கிரிஅலங்காரம் 17. பரங்கிரி மும்மணிக்கோவை, 18 பரங்கிரி அநுபூதி, 19 பரங்கிரி கோவை, 20 குமரகுருதாசசுவாமிகள் பிரபந்தம் 21 முருகன் அருள் வேட்டல் 22 முருகன்வரப்பிரசாதமாலை, 23 சிவாட்சரதீபம் 24 தேவாரச்சந்தப் பாமாலை, 25 திருவருள்விலாசம் 26 திருப்பரங்கிரி மும்மணிக்கோவை என்பன.

இக்கோயிலில் கல்வெட்டுக்களும் உள்ளன.

---

* இத்திருவுருவம் "ஜ்யேஷ்டா" தேவி என்பாரும் உளர்.



**கோடிக்கரை குழகர்கோயில்**

(ஒருமுகம் ஆறுகரங்களுடன்)

கோடுமுக வானைபிற கானதுணை வாகுழகர்
கோடிநகர் மேவிவளர் பெருமாளே
காதலுடன் ஓதும்அடி யார்களுடன் நாடிஒரு
கால்முருக வேளெனவும் அருள்தாராய்.



மதுரை (கூடல் குமாரர்)

கனகமி கும்பதி மதுரைவ ளப்பதி
அதனில்வ ளர்ந்தருள் பெருமாளே
வளமொடு செந்தமிழ் உரைசெய அன்பரும்
மகிழவ ரங்களும் அருள்வாயே.



**தேவசேனைக்கல்யாணம் திருப்பரங்குன்றம்**

சுரர்கள் நாய கன்பயந்ததிருவை மாமணம்புணர்ந்து
சுடரு மோக னம்மிகுந்த மயில்பாகா
கடிய பாதகந்த விர்ந்து கழலை நாடொ றுங்கி ளர்ந்து
கருது வார்ம னம்பு குந்த பெருமாளே.

(அளகபாரம்...பொது)

நன்றி: French Institute of Indology Pondicherry.



பழநி.

பணியும்அடி யார்சிந்தை மெய்ப்பொருள தாகநவில்
சரவணப வாவொன்று வற்கரமு மாகிவளர்
பழநிமலை மேனின்ற கற்பமணி யாஅமரர் பெருமானே.

சிபிச்சக்கரவர்த்தி பூதானம் செய்தார். பூதானம் பெற ஒருவர் குறைந்தது கண்டுமனங்கலங்கினார். பரங்கிரிப்பெருமானே மனித உருக் கொண்டு மன்னரிடம் தானம்பெற்று அருள் புரிந்தார். தொழுநோயுற்ற ஒரு மன்னன் பிரம்மதீர்த்தத்தில் நீராடி நோய் நீங்கப் பெற்றான்.

இத்தலத்தில் சிவன், முருகன், விநாயகர் மூவரும் எழுந்தருளியுள்ளனர். ஆதலின் பலிபீடத்தருகில் நந்தி, மயில் மூஷிகம் ஆகிய மூன்றும் உள்ளன. இது இக்கோயிலில் உள்ள ஓர் சிறப்பு. இங்கே நவக்கிரகங்கள் இல்லை; சனிபகவான்மட்டும் இடம் பெற்றுள்ளார். நான்முகன், திருமால், நாரணர் முதலியோர்சூழ விநயகர், முருகன், சிவன், அம்பிகை விளங்கும் இத்தலம் கயிலைக்கு அடுத்த முக்கியத்தலம் என்பர். திருப்பரங் குன்றத்தில்உள்ள 300அடி உயரமுள்ள மலையின் உச்சியில் காசி விசுவநாதர் கோயில் உள்ளது. படிகளும் உள்ளன. இத்தலத்தில் சுந்தரர் வழிபட்டபோது சேர சோழ பாண்டிய மன்னர் மூவரும் ஒன்றாக அவருடன் வழிபட்டதைப் பெரியபுராணம் பேசுகின்றது.

இங்கே நாடோறும் ஆறுகால வழிபாடு நிகழ்கின்றது. திருவிழாக்களுக்குக் குறைவில்லை. வைகாசியில் 11 நாட்கள் வசந்த விழாவும் ஆனியில் 10 நாட்கள் ஊஞ்சல் திருவிழாவும்' புரட்டாசியில் நவராத்திரி விழாவும், ஐப்பசியில் கந்தசஷ்டி விழாவும், கார்த்திகையில் திருக்கார்த்திகை விழாவும், தையில் தெப்பவிழாவும்,பங்குனியில் பிரம்மோத்ஸவமும் சிறப்பானவை.

திருவிழாக்காலங்களில் பெருமான் தங்கமயில், தங்கக் குதிரை, தங்கச்சப்பரம், தங்க ரிஷபம். வெள்ளிசிம்மாசனம், வெள்ளியானை, வெள்ளி ஆடு, ஆனந்தராயர் தந்தப்பல்லக்கு முதலிய வாகனங்களில் தங்க, வைர அணிகலன்கள் பூண்டு அழகொழுக எழுந்துஉலாவருவது கண்கொள்ளாக்காட்சியாகும்.

இவ்வளவு சிறப்புமிக்க இப்பதியில் நம் அருணகிரிநாதர் "வரி அளி நறை தெவிட்ட அன்பொடு பருகு உயர் பொழில் திகழ் திருப்பரங்கிரி தனில் உறை சரவணப்பெருமாளே' "கனகந்திரள்கின்ற பெருங்கிரிதனில் வந்து தகன்தகன் என்றிடு கதிர் மிஞ்சிய செண்டை எறிந்திடு கதியோனே" "அயனையும் புடைத்துக் சினந்து உலகமும் படைத்துப் பரிந்து அருள் பரங்கிரிக்குட் சிறந்த பெருமாளே" என்றெல்லாம் போற்றுவது உணர்ந்து நாமும் வழிபட்டு உய்வோம்.

# திருமலிவான பழமுதிர் சோலை

காரணம தாகவந்து புவிமீதே
காலனணு காதிசைந்து கதிகாண
நாரணனும் வேதன் முன்பு தெரியாத
ஞானநட மேபு ரிந்து வருவாயே
ஆரமுத மான தந்தி மணவாளா
ஆறுமுகம் ஆறிரண்டு விழியோனே
சூரர்கிளை மாளவென்ற கதிர்வேலா
சோலைமலை மேவிநின்ற பெருமாளே!

—அருணகிரிநாத சுவாமிகள்.

மதுரைக்குப் பன்னிரண்டுமைல் தொலைவில் அமைந்த அழகர்கோவில் திருமாலிருஞ்சோலை என்றழைக்கப்படும். அங்கே மலைமீது பழமுதிர் சோலைமலை கிழவோனாக முருகப்பெருமான் விளங்குகின்றார். திருச்செந்தூரில் மருகனாகிய முருகன் தயவில் மாமனாகிய திருமால் கோயில் அமைந்துள்ளது. இங்கே மாமன் தயவில் மருகன் கோயில் கொண்டுள்ளார் என்பர்.

சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகள் இம்மலையில் உள்ள நூபுரகங்கைச்சுனையின் மாதவி மண்டபத்தில் அமர்ந்து சிலப்பதிகாரத்தை இயற்றினார் என்பர். "பலவுடன் வேறு பல் துகிலின் நுடங்கி அகில் சுமந்து......இழுமென இழிதரும் அருவிப், பழமுதிர் சோலை மலைகிழவோனே' (திருமுருகாற்றுப்படை 296-317)என நக்கீரர் வருணித்துள்ள இயற்கைக்காட்சிகளை இன்றும் இங்கே நாம் கண்டு இன்புறலாம்.

மதுரையிலிருந்து இத்தலத்திற்குவருவோர் கள்ளழகர் கோயிலுக்கருகில் பஸ்ஸில் வரலாம். கள்ளழகர் கோயிலிலிருந்து

மலைமீது நூபுரகங்கை வரை (2மைல்) செல்ல நல்ல தார் சாலை உள்ளது. அதில் 1 மைல் 6 பர்லாங் சென்றால் பழமுதிர் சோலை முருகன் திருக்கோயிலை அடைகின்றோம்.

மலையின் நீளம் கிழக்கு மேற்கில் 10 மைலுக்கு உள்ளது. எழில்மிகும் இயற்கை இன்பம் கண்ணையும் கருத்தையும் கவர்கின்றது.

இத்தலம் இடபகிரி (விருஷபகிரி) எனவும் அழைக்கப் படுகின்றது. இயமன் இத்தலத்தில் இடபமாகிய தரும வடிவுடன் தவமியற்றித் தன் பெயரால் இம்மலை விளங்கவேண்டுமென இறைஞ்சி இறைவனருள் பெற்றதால் இம்மலை இடபகிரி (விருஷபாத்ரி) என்றும் அமைவதாயிற்று.

தொன்மையான தலமாயிருப்பினும் அண்மைக் காலக் கோயிலாக அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இங்கு வேல் மூலவராக உள்ளது- முருகப்பெருமான் ஒரு திருமுகமும் நான்கு திருக்கரங்களுங்கொண்டு. இருபுறமும் வள்ளி, தெய்வகுஞ்சரி விளங்க நின்ற திருக்கோலத்தில் காட்சியளிக்கின்றார்.

இத்தலத்தீர்த்தமாக நூபுரகங்கை (திருச்சிலம்பாறு) என்ற சுனை உள்ளது. திருமாலின் திருச்சிலம்பிலிருந்து உற்பத்தியாகி வருவதாகக் கூறுவர். இச்சுனை மலைஉச்சியிலிருந்து வரும் போது சூரிய ஒளியால் பலவிதங்களில் ஒளிரும். நவரத்தின ஒளியும் இதில் தெரியும். திருமாலின் (அழகரின்) திருவடியை இச்சுனை வருடிக் கொண்டு பாய்வதால், திருமாலின் திருவடிக்குப் பணிசெய்யும் திருமகளைப் போன்றுள்ளது. இதில் அனைவரது எண்ணங்களும் பூர்த்தியாவதால் இஷ்டசித்தி எனவும் இதனை அழைப்பர்.

தலவிருட்சம்: நாவல்மரம். ஏனைய நாவல் மரங்கள் விநாயக சதுர்த்தியின்போது பழுக்கும். இம்மரமோ ஸ்கந்தசஷ்டியின் போது பழுக்கும் இயல்புடையது என்பர்.

சங்ககாலத்திலும் அருணகிரிநாதர் காலத்திலும் விளங்கிய கோயில் தற்போது இல்லை. இன்று காணப்படும் அண்மைக் காலக் கோயிலே பழமுதிர் சோலையாகத் திகழ்கின்றது. தினமும் காலை 11 மணிக்கு மட்டுமே ஒருகால வழிபாடு நிகழ்கின்றது.

ஆனால் காலை 8 மணிமுதல் மாலை 5 மணிவரையில் கோயில் திறந்திருக்கும். தீபாராதனை, அர்ச்சனை முதலியவற்றை அடியார்களே செய்யலாம்.

கந்தசஷ்டி விழாச் சிறப்புடையது. அப்போது லட்சார்ச்சனை நிகழ்கின்றது.

பழமுதிர் சோலைத் திருக்கோயிலுக்குச் செல்லும் வழியில் அழகர் கோயில் உள்ளது. கள்ளழகர் என்று போற்றப் பெறும் அருள்மிகு சுந்தரராஜப் பெருமாள் இருதேவியர் சூழ இங்கே விளங்குகின்றார். இக்கோயிலில் பதினெட்டாம் படி கோபுரம் உள்ளது இங்கேகருப்பண்ணசுவாமிவிளக்கம். இதுவும்திருமாலே. இக்கோபுரவாயில் ஆடிமாதத்தில் திறக்கப்படுகிறது. ஒரு நாள் மட்டுமே இங்கு விபூதி கொடுக்கப்படுகிறது.

அழகர் கோயிலுக்கருகில் உணவு விடுதிகள் உள்ளன மலையில் முருகன் கோயிலுக்கருகில் ஒரு சிற்றுண்டிச் சாலையும் உண்டு.

கள்ளழகர் கோயில் நிர்வாகத்திலுள்ள பழமுதிர் சோலைப் பைந்தமிழ் முருகன் கோயில் முருகப் பெருமானிடம்அடியார்களை ஆற்றுப் படுத்திய நக்கீரர் ஆறுவதாகக் காட்டித் தனது முருகாற்றுப்படையை முடிக்கின்றார்.

அருணகிரிநாதர் இத்தலத்தில் பாடிய 16 திருப்புகழ்ப் பாடல்கள் நமக்குக்கிடைத்துள்ளன.

*"சோதி யுணர்கின்ற வாழ்வு சிவம் என்ற*
*சோகமது தந்து எனையாள்வாய்"*

**(வர்தினைபடர்ந்த ..)**

*"அகரமுமாகி அதிபனுமாகி அதிகமுமாகி அகமாகி*
*அயனெனவாகி அரியெனவாகி அரனெனவாகி*
*அவர்மேலாய்*
*இகரமுமாகி எவைகளுமாகி இனிமையுமாகி வருவோனே*
*இருநில மீதில் எளியனும் வாழஎனது முனோடி*
*வரவேணும்"*

"கொல்லிப்புரி காளிசூலி வயிரவி நீலிமோடி
குலிச குடாரியாயி மகமாயி
குமரியராகி மோகி பகவதி யாதிசோதி
குணவதி யாலவுணி அபிராமி
பலிகொள்க பாலியோகி பரமகல்யாணி லோக
பதிவ்ரதை வேத ஞானி புதல்வோனே"

(—இருவீரற் கோதி...)

"நாரணனும் வேதன் முன்பு தெரியாத
ஞானநட மேபுரிந்து வருவாயே"

(—காரணமதாக ...)

"வாழுமயில் மீதுவந்து தாளிணைகள் தாழுமென்றன்
மாயவினை தீரஅன்பு புரிவாயே"

—(நீலமுகதாயர்...)

"பாகம்வர சேரஅன்பு நீபமலர் சூடுதண்டை
பாதமலர் நாடியென்று பணிவேனோ"

(வீரமதனும்...)

"ஊமையேனை ஒளிர்வித்துனது முத்திபெற
மூலவாசல் வெளி விட்டெனது சத்திலொளிர்
யோகபேத வகை யெட்டுமிதி லொட்டும்வகை
இன்று தாராய்"

(ஆனைநாலு ...)

"சதுராய்உன தாளிணையைத் தொழ
அறியாத நிர்மூடனை நிற்புகழ்
துனையோதி மெய்ஞ்ஞான முறச்செய்வ தொருநாளே"

—(கருவாகி....)

"உருவிலாத பாழில் வெட்ட
வெளியி லாடுநாத நிர்த்த
உனது ஞானபாதபத்மம் உறுவேனோ"

—(நுடிகொள்நோய்...)

"திகழ்புகழ் கற்றுச் சொற்கள் பயிற்றித்
திருவடி யைப்பற் றித்தொழு துற்றுச்
செனனம றுக்கைக் குப்பர முத்திக் கருள்தாராய்"

(நிலையாதி)

எனவரும் பழமுதிர் சோலைத் திருப்புகழ் அடிகள் அருணகிரி நாதர் இத்தலத்து முருகனிடம் கோரியவற்றை இனிது காட்டும்.

## அரியபுகழை அமைத்த பெரிய பழநிமலை

வசனமிக வேற்றி மறவாதே
மனதுதுய ராற்றில் உழலாதே
இசைபயில் சடாட்சர மதாலே
இகபர சௌபாக்கியம் அருள்வாயே
பசுபதி சிவாக்கியம் உணர்வோனே
பழனி மலைவீற்று அருளும் வேலா
அசுரர் கிளைவாட்டி மிகவாழ
அமரர் சிறைமீட்ட பெருமாளே.

—ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள்.

"முழவுறழ் திணிதோள் நெடுவேளாவி, பொன்னுடை நெடுநகர்ப் பொதினி", (அகநானூறு: 61). "முருகன் நற்போர் நெடுவேளாவி அறுகோட்டியானைப் பொதினி யாங்கண்" (அகநானூறு: 1) என்று வரும் பகுதிகளில் பொதினி என்று குறிப்பிடப் பெறுவது பழனிப் பதியாகும். சேரர் கொங்கு–வைகாவூர் நாட்டுப் பழம்பதியாகிய இதனைத் தென் பழனுபுரி, சித்தன் வாழ்வு என்றெல்லாம் போற்றுவர். சித்தர் போகரின் அருள் திருவிளையாடல்கள் நிகழ்ந்த இத்தலத்தில் அவரது கருணையால் எடுப்பிக்கப் பெற்ற ஞான தண்டாயுதபாணியே பழனி ஆண்டவராகப் பார் முழுதும் போற்றப்படுகிறார்.

உமாதேவியாரும் சிவபிரானும் இளங் குழவியாகிய முருகனை "ஞானப் பழம் நீ" எனக் காதலோடு அழைத்த தலம் ஆதலின் "பழம் நீ" என வழங்கப் பெற்று-பழநி என்று மருவியது என்பர்.

கயிலாயத்திலிருந்த சிவகிரி, சத்திகிரி என்ற இரு மலைகளைச் சிவபெருமான் அகத்தியருக்குக் கொடுக்க, அவற்றைப் பொதிகைக்கு எடுத்துச் செல்லுமாறு அகத்தியர் இடும்பனுக்கு ஆணையிட்டார். எடுத்து வந்த இடும்பன் களைப்படைந்து அவற்றை இங்கே இறக்கி வைத்திட, அம்மலைகள் இரண்டும் இங்கேயே நிலைபெற்று விட்டன. சிவகிரியின்மீது கனிவாய்ச் சிறுவனாகக் குமாரக் கடவுள் குராமரத்தின்கீழ் நிற்பது கண்டு யாரோ சிறுவனென வெகுண்டு இடும்பன் அவருடன் போரிட்டு இறந்தான். இடும்பியின் துயர் போக்க மீண்டும் இடும்பன் உயிர் பெற்று எழுமாறு இறைவன் அருளினன். இடும்பன் பெற்ற இரு வரங்களில் ஒன்றினால் இடும்பன் சந்நிதி என்ற இடத்தில் வாயில் காவலனாக இடும்பன் விளங்கவும், தான் இரு மலைகளையும் எடுத்து வந்தது போன்றே காவடியுடன் தமது பிரார்த்தனைகளைக் கொண்டு வரும் அடியார்களுக்கு முருகன் அருள் வழங்கவும் இசைந்தனன். சிவகிரியே பழநி மலையாக வும், சக்திகிரியே இடும்பன் மலையாகவும் இன்று திகழ்கின்றன.

450 அடி உயரமுடைய பழநி மலையினை 697 படிகள் ஏறி அடைகின்றோம்.

முதலில் அடிவாரத்திலுள்ள பாத விநாயகர் பதம் பரவி, கிரிவீதி வலம் வந்து, மலைக்கோயிலின் மேற்குத் திருவாயிலை அடைகின்றோம். சட்டைக் கோபுர வாயிலைக் கடந்து, அணித்தாக உள்ள சுப்பிரமணிய விநாயகரை வழிபட்டு, நாயக்கர் மண்டபம் வைசியர் மண்டபம், கடந்து இராஜகோபுரத்தை அடைகின்றோம். உள்ளே இரண்டாம் பிராகாரம் வலம் வருகிறோம். தட்சிணாமூர்த்தியையும் மலைக்கொழுந்து சிவனையும் அம்பிகையையும் வணங்குகின்றோம். திருமலையின் இப்பாகமே இம்மலையின் சிகரம் என்பர்.

அடுத்த திருவாயில் துவார பாலகர் காப்புடையது. உள் நுழைந்ததும் இடப்பால் ஆடல்வல்லான், சிவகாம சுந்தரி சந்நிதியில் வழிபட்டு, பள்ளியறை, சண்முகநாதர் சந்நிதிகளையும் வணங்கி, திருவுலா வரும் சின்னக் குமாரர் திருமுன் வழிபட்டு, ஆண்டவனை அணுகும் அணிதிகழ் அர்த்த மண்டபத்தை அடைகின்றோம்.

பீடர் பீடந்த புன்குஞ்சியும் பெருகிய கருணைக்
கடலலம்பு கண்களுங் கவினெழுகிய முகமும்
வடிவுநூலு மார்புங்கை ஒண்கோலும் வயங்க
நெடியகோ வணவுடையுடன் நின்றது கண்டான்.

என்றபடி ஸ்ரீ தண்டாயுதபாணியை-மேற்கு நோக்கி விளங்கும் பழனியாண்டவனின் இளம்பரிதி நாறுயிரங் கோடி போல வளந்தரு தெய்வீக வடிவத்தினை-போக முனிவரது ரசக்கட்டால் செய்யப் பெற்ற நவ பாஷாண மென்னும் ரச மூர்த்தத்தினை-பக்திப் பரவசத்துடன் பாடிப் பரவுகின்றோம்.

மலைமீது உட்பிராகாரத் தென்மேற்கு மூலையில் போகர் சந்நிதி உள்ளது. போகரின் மாணவராகிய புலிப்பாணி வகையினரே போகர் சந்நிதியை இன்றும் பூசித்து வருகின்றனர். போகர் பூசித்த புவனேஸ்வரி அம்பிகையை வழிபடுகின்றோம் இங்குதான் போகர் சமாதியிருந்தார் என்று கூறுவர்.

பழனிமலையாண்டவர் நாளும்திருவிழாக் கோலங்கொண்டு அருளுகின்றார். அவரது திருமேனியில் அபிஷேகமாகும் பொருள்களைச் சிறிது பருகினும் பல நோய்கள் நீங்குவது இன்றும் நிகழும் அற்புதமாகும். பிறவிப் பிணியையே அறுத்தருளும் ஆண்டவன் நமது உடற்பிணிகளை அகற்றுவது வியப்போ!

சித்திரைத் திருவிழா, அக்கினி நட்சத்திரத் திருவிழா, வைகாசி விசாகம், ஆனி அன்னபிஷேகம், ஆடிப்பெருக்கு இலட்சார்ச்சனை, கந்தசஷ்டி விழா, திருக்கார்த்திகை விழா மார்கழி விழா, தைப்பூசம், பங்குனிப் பெருவிழா-என மாதந் தோறும் முருகப் பெருமான் விழாக்கள் விரிக்கிற் பெருகும்.

இங்கே வெள்ளிரதம், தங்கரதம், வீதியுலாக்கள் தனிச் சிறப்பு. மாதந்தோறும் திருக்கார்த்திகை, விசாகம், சஷ்டி, மாதப் பிறப்பு, அமாவாசை, நாட்களிலும் விசேஷ விழாக்களிலும் 'மலைமீது சின்னக்' குமாரர் பவனி வந்து விழாக் காட்சியருள்கின்றார்.

அருளாளர்கள் பழநி வேறு திருவாவினன்குடி வேறு என்று காணுமல் பிரபந்தங்களை-இரு தலங்களையும் இணைத்தே பாடியுள்ளனர். பழநிக்கு அருணகிரி நாதர் அருளிய 83 திருப்புகழ்ப் பாக்கள் கிடைத்துள்ளன. பழநி பற்றிய நூல்கள் அளவில.

மலைக் கோயில் காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை தொடர்ந்தாற் போன்று திறந்திருக்கும். பகல் நேரங்களில் திருக்கோயில் காப்பிடுவதில்லை. பழநி யாண்டவரை அகமகிழ அன்பர்கள் பஞ்சாமிர்தம், பால், பன்னீர், தீர்த்த அபிடேகங்களால் தொடர்ந்து வழிபட்டுக் கொண்டிருக்கும் அற்புதக் காட்சியை எப்படி விவரிக்க இயலும்! குமார தந்திரம் காமிக ஆகமப்படி இங்கு பூசை நிகழ்கின்றது.

சரவணப்பொய்கை, வரதமாநதி, சண்முகநதி, வையாபுரிக் குளம், நாகல் நாய்க்கன் தெப்பக்குளம், திரிமூர்த்தி தீர்த்தம், மலைமீது வள்ளிசுனை ஆகியன பழநியின் புனிதத் தீர்த்தங்களாகும். தலவிருட்சம்: நெல்லி.

சங்ககாலந் தொட்டு இன்று வரை எண்ணற்ற புலவர் பெருமக்கள் பாடிப் பரவிய நூல்கள் பல உள்ளன. இத்தலத்தில் மடங்கள், அறக்கட்டளைகள், திருமண மண்டபங்கள் பல உள்ளன.

ஆண்டிற்கு ரூபாய் ஒரு கோடிக்குமேல் வருவாய் உள்ள இத்தலத்தின் அறநிலையத் துறையின் ஆலய நிர்வாகத்தில் பல கல்லூரிகளும், சமய, சமூகப்பணி நிறுவனங்களும் செயல்படுகின்றன. பழநித் திருக்கோயிலின் சார்புக் கோயில்களாகக் கீழ்வரும் கோயில்கள் உள்ளன.

மலையின்மீது : 1. ஸ்ரீதண்டாயுதபாணிசுவாமி கோயில்,
: 2. மலைக்கொழுந்துசிவன், அம்பிகை,
: 3. புவனேஸ்வரி அம்மை, போகசித்தர்
: 4. கயிலாயநாதர், அம்பிகை.
: 5. சப்தகன்னிகை (மலைநாச்சிமார்.)
: 6. சண்டேசர்

மலைப்படிகளில் : 1. இடும்பன்
: 2. குராவடிவேலவர்
: 3. வையாபுரித்துரை
: 4, பதினெட்டாம்படிக் கன்னிமார்
: 5. வள்ளியம்மன்,

| | | |
|---|---|---|
| அடிவாரத்தில் | : 1. | திருவாவினன்குடி ஸ்ரீகுழந்தை வேலாயுதசுவாமி, |
| | : 2. | வேளீசுரர் |
| | : 3. | அங்கிலி பரமேஸ்வரர் |
| | : 4. | மீனாட்சி சுந்தரேசுவரர் |
| | : 5. | பாதவிநாயகர் |
| பழநியூர்க் கோவில்கள் | : 1. | பெரியநாயகியம்மன் (பிரஹந்நாயகி) |
| | : 2. | கோசல விநாயகர் |
| | : 3. | உத்தரவிநாயகர் |
| | : 4. | அபரஞ்சி விநாயகர் |
| | : 5. | லட்சுமிநாராயணப் பெருமாள் |
| | : 6. | வேணுகோபாலப் பெருமாள் |
| வையாபுரிக்குளம் | : | பாதிரிவிநாயகர் |
| சண்முகநதிக்கரை | : 1. | பெரியாவுடையார் (பிரகதீஸ்வரர்) |
| | : 2. | தூர்நாச்சியம்மன். |
| | : 3. | நவக்கிரகம். |
| | : 4. | விநாயகர் |
| இடும்பன்மலை | : | கலிங்கன் பாறை: சுப்பிரமணிய சுவாமி |
| பாலசமுத்திரம் | : | அகோபில வரதராஜப்பெருமாள் |
| கீரனூர் | : | வாகீசுவரசுவாமி |
| புது ஆயக்குடி | : | சோழீஸ்வரர். |
| கொடைக்கானல் | : | அருள்மிகு குறிஞ்சியாண்டவர் கோயில் முதலியன. |

பழநிமலையைச் சுற்றிப் பல முருகன் திருத்தலங்கள் உள்ளன. ஒட்டன் சத்திரம் குழந்தை வேலப்பர் கோயிலும் ஊதியூர் சுப்பிரமணியசுவாமி கோயிலும் குறிப்பிடத்தக்கவை.

சென்னிமலை, சிவன்மலை, வட்டமலை, மருதமலை, முதலிய கோயில்களையும் இத்தலத்தைச் சுற்றி அமைந்த சிறப்பினைக் கண்டு மகிழலாம்.

பழநியின் காவடிச் சிறப்புகளும், ஆண்டவரின் சந்நியாசிக் கோலம், வேடக்கோலம், மன்னர் கோலம், வைதிகப் பிராமணக் கோலங்களில் திருஅலங்காரங்களும் விரிக்கிற் பெருகும்.

இத்தகு சிறப்புகள் பல கொண்ட பழநியாண்டவரி அருணகிரிநாதப் பெருமானை எப்படியெல்லாம் பாடிப் பரவச் செய்துள்ளார் என்பதைத் திருப்புகழ்ப் பாடல்கள் இனிது காட்டுகின்றன.

*பலவின் முதுபழம் விழைவுசெய் தொழுகிய*
*நறவு நிறைவயல் கமுகடர் பொழில்திகழ்*
*பழநிமலை வருபுரவல! அமரர்கள் பெருமானே.*

(தகரநறுமலர்....)

*பவளத் தவளக் கனகப் புரிசைப்*
*பழநிக் குமரப் பெருமானே.* (அணிபட்ட...)

*பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்*
*பழநிக் குமரப் பெருமானே* (இருசெப்பென... )

*பவளக் கொடி சுற்றியபொற் கமுகிற்*
*றலையிற் குலையிற் பலமுத்துதிர் செய்ப்*
*பழநிப் பதிவெற் பினில்நிற் குமரப் பெருமானே,*

(கடலைச்சிறை...)

*பவனப் புவனச் செறிவுற் றுயர்மெய்ப்*
*பழநிக் குமரப் பெருமானே* (தனகனகத்...)

*பழனக் கரையிற் கழைமுத் துகுநற்*
*பழநிக் குமரப் பெருமானே* (புடைசெப்...)

*பழன முழவர் தொழுவி லெழுது*
*பழைய பழநி யமர்வோனே* (கரியபெரிய...)

*குமர சமர முருக பரம*
*குலவு பழநி மலையோனே* (தமருமமரு...)

*மிடறு கரியர் குமர பழநி*
*விரவு மமரர் பெருமானே* (திமிரவுத்தி...)

பரம் குருபர எனுமுனை பரசொடு
பரவி யடியவர் துதிசெய மகிதவழ்
பழநி மலேதனி லினிதுறை யமரர்கள் பெருமாளே
(முருகுசெறி...)

செருக்கொடு நற்றவக் கமலத்
தயற் குமரிக் கருட் புரிசைத்
திருப்பழ நிக்கிரிக் குமரப் பெருமாளே (களந்திறுக்கி...)

படல வுடுபதியை யிதழி யணிசடில
பசுபதி வரநதி அழகான
பழநி மலேயருள் செய்மழலை மொழிமதலை
பழநி மலேயில்வரு பெருமாளே (கடலேபொரி...)

பணியு மடியார் சிந்தை மெய்ப்பொருளா தாகநவில்
சரவணபவா வென்று வற்கர முமாகிவளர்
பழநிமலே மேய்ந்ன்ற சுப்பிரமணியா அமரர்
பெருமாளே (சுருதிமுடிமோன...)

என்று இன்னோரன்ன பல அற்புதத் திருப்புகழ்ப் பாடல்கள் பழனித் தல மாண்பினை விளக்கி நிற்கின்றன. பலகாலம் இங்கு தங்கி, பரமனைப் பாடி அருள் பெற்றார் அருணகிரிநாதர் என்பது அவர் தம் எண்ணற்ற பாடல்களால் புலப்படும்.

படிக்கின்றிலே! பழநித் திருநாமம்! படிப்பவர்தாள்
முடிக்கின்றிலே! முருகா என்கிலே! முசியாமலிட்டு
மிடிக்கின்றிலே! பரமானந்தம் மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின்றிலே! நெஞ்சமே தஞ்சமேது நமக்கினியே!

—கந்தரலங்காரம்.

கையால் உனைத்தொழச் சென்னியினால் உன்கழல் வணங்க
மெய்யாய் அடிக்கடி வாக்கால் துதிக்க விதித்து மனம்
நையா இயற்கையும் நல்கிஇனி என்னை நழுவவிடேல்
ஐயா உனக்கு அபயம் பழனுபுரி ஆண்டவனே!

— பழனுபுரிமாலை: மாம்பழக்கவிச்சிங்கநாவலர்

## பூம்பறையின் மேவு புலவன்

*மாந்தளிர்கள் போல வேய்ந்தவுடல் மாதர்*
*வாந்தவிய மாக முறைபேசி*
*வாஞ்சைபெரு மோகசாந்தி தரநாடி*
*வாழ்ந்த மணிதேடி உறவாடி*
*ஏந்துமுலை மீது சாந்துபல பூசி*
*ஏங்கு மிடை வாட விளையாடி*
*ஈங்கிசைகள் மேவ லாஞ்சனையிலாமல்*
*ஏய்ந்தவிலை மாதர் உறவாமோ*
*பார்தண்முடி மீது தாந்ததிமி தோதி*
*தாஞ்செகண சேசெ எனவோசை*
*பாங்குபெறு தாள மேங்கநடமாடு*
*பாண்டவர் சகாயன் மருகோனே*
*பூந்தளிர்கள் வீறு வேங்கைகள் பலாச*
*பூங்கதலி கோடி திகழ்சோலை*
*பூந்தடமு லாவு கோம்பைகள் குலாவு*
*பூம்பறையில் மேவு பெருமாளே.*

அருணகிரிவள்ளல் பரவிய தலங்களுள் ஒன்றான பூம்பறை, தற் போது பூம்பாறை என்றழைக்கப் படுகின்றது. கொடைக் கானலுக்கு அண்மையிலுள்ள இத்தலத்திற்குக் கொடைக் கானலிலிருந்து பஸ்வசதி உள்ளது. பூம்புறை என்றும் இவ்வூரை அழைக்கின்றனர்.

ஸ்ரீகுழந்தை வேலப்பர் என்று இத்தலப்பெருமான் வழிபடப்பெறுகின்றார். கோயில்-மலையடிவாரத்தில் சமவெளியில் உள்ளது. மேற்குவாசல் சிறப்பாக உள்ளது. சிவலிங்கம் அமைந்த சன்னிதியும் உள்ளது.

முருகப் பெருமான் தண்டாயுதபாணியாக இங்கு விளங்குகின்றார். நவபாஷாணத்தால் உருவாக்கப்பட்ட மூர்த்தம் எனக் கூறுவர். மேற்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் பெருமான் காட்சியருளுகின்றார்.

உற்சவமூர்த்தி-வள்ளி, தெய்வயானையுடன் விளங்கு கின்றார். ஒரு முகம்-நான்கு கரங்கள், இடது கரம் வரதம், வலது கரம் அபயம். மற்றொரு வலது கரத்தில் வேல். மற்றொரு இடது கரத்தில் செண்டு. அருணகிரிநாதர் திருவுருவம் சிறப்பாக உள்ளது.

வித்தனூத்து என்று அருகில் ஒரு சுனை உள்ளது. தல விருட்சம்: மகிழ். நாடோறும் மூன்றுகால வழிபாடு நிகழ்கின்றது.

தமிழ்ப் புத்தாண்டு தினம், வைகாசி அக்கினிக்கழிவு தீபாவளி, கார்த்திகைத் திருநாள், மார்கழி திருநாள், தைத்திரு நாள்விழாக்கள் சிறப்புடையன.தை மாதம் கேட்டை நாட்களில் இரதஉற்சவம். சிவராத்திரி, பங்குனி உத்திரப் பெருவிழாக்கள். இவ்விழாக்களில் இராஜா அலங்காரம், பண்டார வடிவ அலங்காரம் மிகச் சிறப்பு.

வார நாட்களில் செவ்வாய், வெள்ளி தனிச்சிறப்பாகும்.

இத்திருக்கோயிலுக்கு அண்மையில் உணவு விடுதிகள் உள்ளன. வழிபடுவோர் விடுதி, திருக்கல்யாண மண்டபம் முதலியன இல்லை.

இவ்வூருக்கருகில் குரும்பூர் வேலப்பர்சுவாமி கோயிலும், வில்பட்டி - வெற்றிவேல் கோயிலும், கொடைக்கானல் ஸ்ரீகுறிஞ்சியாண்டவர் கோயிலும் உள்ளன.

அறநிலைய ஆட்சித் துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது.

அற்புதமான இயற்கைச் சூழலில் அருமையான திருக் கோயிலில் எழுந்தருளியுள்ள குழந்தை வேலப்பர் தரிசனம் அனைவருக்கும் கிட்டுவதாக.

# ஜபமாலைதந்த திருஆவினங்குடி

*அபகார நிந்தைபட் டுழலாதே*
*அறியாத வஞ்சரைக் குறியாதே*
*உபதேச மந்திரப் பொருளாலே*
*உனைநான் நினைந்தருள் பெறுவேனோ*
*இபமாமுகன் தனக்கு இளையோனே*
*இமவான் மடந்தைஉத் தமிபாலா*
*ஜபமாலை தந்தசற் குருநாதா*
*திருவாவி னன்குடிப் பெருமாளே.*

— அருணகிரிநாதசுவாமிகள்

பழநியை அறியாதவர் இலர். ஆனால் பழநிமலை அடிவாரத்தில்தான் திருவாவினன்குடித் திருக்கோயில் உள்ளது என்பதைச் சிலரே அறிவர். பழனியும் திருவாவினன்குடியும் அருகருகே அமைந்துள்ளன. திருவாவினன்குடிக்குப் பன்னிரண்டு திருப்புகழ்ப் பாடல்கள் கிடைத்துள்ளன. "நாதவிந்து கலாதி நமோ நம", "போதகந்தரு கோவே நமோ நம" எனத் தொடங்கும் திருப்புகழ்ப் பாடல்கள் இத்தலத்திற்கே உரியன என்பதைக் காணும் போது மூன்றுவது படை வீடாகிய திருஆவினன்குடிபால் அருணகிரிநாதர் கொண்டிருந்த ஈடுபாடு இனிது புலப்படும்.

திரு+ஆ+ இனன் +கு +டி = திருமகள் + காமதேனு + சூரியன் + பூமி + அக்கினி ஆகியோர் வழிபட்ட தலமாதலின் இப்பெயர் கொண்டது என்பர். பழநிக்கருகில் அமைந்த திருஆவினன்குடியாதலின் பழநித் திருஆவினன்குடி என்று சேர்த்தே அழைப்பது வழக்கமாயிற்று. அருணகிரிநாதரும்

''அமரர்க்கிறைறயே வணங்கிய பழநித் திருவாவினன்குடி அதனிற் குடியாயிருந்தருள் பெருமாளே'' (பகர்தற்கரி... ...) என்று பரவினார்.

வயல்கள் சூழ்ந்த தலம் இது. பழனம் – வயல்கள் பழனம், பழனி என மருவியது. ''ஆலையும் பழனச் சோலையும் புடைசுற்(று) ஆவினன்குடியிற் பெருமாளே'' என்றார் அருணகிரி வள்ளலும் (காரணிந்த..... ).

ஆவினன்குடி திருக்கோயில் அழகொழுகும் கலைக்கோயிலாகும். இங்கே முருகப்பெருமான் குழந்தைக் கோலத்தில் குழந்தை வேலாயுதசுவாமியாக விளங்கியருளுகின்றார். ஒரு முகமுடன் நான்கு கரங்கள் கொண்டு இடது காலை மடித்து வைத்து வலது காலைத் தொங்கவிட்டு மயில்மீது அமர்ந்துள்ளார். மேற்கு நோக்கிய சன்னிதி. மயிலின் முகம் இடப்புறத்திலும் தோகை வலப்புறத்திலும் உள்ளது. உத்ஸவமூர்த்தியும் மூலவர் போன்றே சிறப்பாக விளங்குகின்றது.

முருகனே பிரதான மூர்த்தியாக விளங்கிய போதிலும், இத்தலத்தில் அண்ணாமலையார், உண்ணாமுலைநாயகி, சொக்கநாதர், மீனாட்சியம்மை, அருணகிரிநாதர், நக்கீரர், துர்க்கை, தட்சிணா மூர்த்தி, சனீஸ்வரபகவான் சன்னிதிகளும் உள்ளன.

நாள்தோறும் இங்கு ஆறுகால வழிபாடு நிகழ்கின்றது. குமாரதந்திரத்தில் காரணஆகம முறையில் பூசைகள் நிகழ்கின்றன.

காவடி எடுத்தல், முடிக்காணிக்கை, பால், பஞ்சாமிர்த அபிடேகம் செய்தல் முதலியன பிரார்த்தனைச் சிறப்பு.

மாதக்கார்த்திகை, சஷ்டி, விசாகம், அமாவாசை, சோமவாரம், சுக்கிர வாரங்களில் சிறப்பான வழிபாடுகள் நிகழ்கின்றன. வைகாசி விசாகம், ஸ்கந்தசஷ்டி, கார்த்திகைத் திருநாள், தைப்பூசம், பங்குனி பிரம்மோத்ஸவம் சிறப்பான விழாக்களாகும். இவ்விழாக்களில் தங்கக்கவசம், வெள்ளிக்கவசம், சந்தனக்காப்பு, திருநீற்று அலங்காரங்கள், மலர் அலங்காரம் முதலியன ஏற்றுப் பெருமான் காட்சியருளுகின்றார்.

இங்கே சண்முகநதி, வரதமாநதி, வையாபுரிக் குளம், சரவணப்பொய்கை (கிணறு) முதலியப் புண்ணியப் புனல்கள் உள்ளன. தலவிருட்சம்; நெல்லி.



கழுகுமலை

வேண்டும் அடியார் புலவர் வேண்ட அரிய பொருளை
வேண்டும் அளவில் உதவும் கழுகுமலைக் குமரன்.



ஆயிக்குடி

ஆய்க்குடிக் காவலஉ தநிமிதே
ஆர்க்குமத் தானவரை வேற்கரத் தால்வரையை
ஆர்ப்பெழச் சாடவல பெருமானே.



குளந்தைநகர் (பெரியகுளம்)

குளந்தை மாநகர்த் தளியுறை பெருமானே
வரந்த ராவிடிற் பிறரெவர் தருவாரே!

நன்றி: *French Institute of Indology Pondicherry.*



குன்றக்குடி

குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்
குடிவளர் கந்தப் பெருமான்.

இத்தலத்தைநக்கீரர், அருணகிரிநாதர், பாலசுப்பிரமணியக் கவிராயர், மாம்பழக் கவிச்சிங்க நாவலர் முதலியோர் பாடிப் பரவியுள்ளனர். பாலசுப்பிரமணியக் கவிராயரின் பழநித் தலபுராணம், வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகளின் பழனிப் பிள்ளைத்தமிழ், விசயகிரி வேலச்சின்னோவையனின் பழனிப் பிள்ளைத்தமிழ், மாம்பழக் கவிச்சிங்க நாவலரின் பழனுபுரிமாலை, அண்ணாமலைக் கவிராயரின் பழனிப்பதிற்றுப் பத்தந்தாதி, பழனிமலை வடிவேலர் சந்நிதிமுறை, முதலிய நூல்கள் இத்தலப் பெருமையைச் சாற்றுவன.

பழநித் திருக்கோயில் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது. ஏராளமான வழிபடுவோர் விடுதிகள், திருமணக் கூடங்கள், உணவு விடுதிகள் உள்ளன. தினமும் திருவிழாக் கோலம் பூண்டிருக்கும் தலம் இது.

இத் தலத்திற்கருகே கொடைக்கானல் ஸ்ரீகுறிஞ்சி யாண்டவர் கோயிலும், பூம்பாறை ஸ்ரீவேலாயுத சுவாமி கோயிலும், ஒட்டன் சத்திரம் ஸ்ரீகுழந்தைவேலப்பர் கோயிலும் உள்ளன.

அருணகிரிநாதருக்கு ஜெபமாலை தந்தருளினன் பெருமான். இதனை இத்தலத்திருப்புகழில் அருணகிரிநாதரின் வாக்கே மெய்ப்பிக்கின்றது. இத்தலத் திருப்புகழ்ப் பாக்கள் தித்திக்கும் திறத்தன.

ஆதவன் கதிரோவாது லாவிய
கோபுரங்கிளர் மாமாது மேவிய
ஆவினன் குடியோனே சுராதிபர் பெருமானே.

(வாரணந்தனை....)

ஆசணம் பயில்ஞான புங்கவ
சேவலங் கொடியான பைங்கர
ஆவினன்குடி வாழ்வு கொண்டருள் பெருமானே.

(முமனந்திர...)

ஆலமுண்டரனார் இறைஞ்சவொர்
போத கந்தனை யேயுகந்தருள்
ஆவினன்குடி மீதிலங்கிய பெருமானே. (கேயினந்...)

ஆடகம்புனை பொற்குடம் வைக்குங்
 கோபுரங்களி னுச்சியுடுத்தங்
 காவினன்குடி வெற்பினில் நிற்கும் பெருமாளே.

(கோலகுங்கும...)

சிவலோக சங்கரிக் கிறைபால பைங்கயத்
 திருவாவினன்குடிப் பெருமாளே.

(கனமாயெழுந்து...)

திருவாவி னன்குடியில் வருவேள்சவுந்தரிக
 செகமேல்மெய் கண்டவிறல் பெருமாளே

(சிவனார்மனங்...)

கொந்தவி ழுந்தட மேறி ரம்பிய
 பண்புத ருந்திரு வாவினன்குடி
 குன்றுக ளெங்கினுமே வளர்ந்தருள் பெருமாளே.

(வஞ்சனை ...)

எனவரும் திருப்புகழ் அடிகள் சிந்தித்தற்குரியன.

காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
ஆவினன் குடிவரும் அமலற் போற்றுவாம்.

— கந்தபுராணம்

# குளந்தை மாநகர் தனிலுறை குமரன்

*தரங்க வார்குழற் றநுநுதல் விழியாலம்*
*தகைந்த மாமுலைத் துடியிடை மடமாதர்*
*பரந்த மாலிருட் படுகுழி வசமாகிப்*
*பயந்து காலனுக் குயிர்கொடு தவியாமல்*
*வரந்த ராவிடில் பிறர்எவர் தருவாரே*
*மகிழ்ந்து தோகையிற் புவிவலம் வருவோனே*
*குரும்பை மாமுலைக் குறமகள் மணவாளா*
*குளந்தை மாநகர் தனியுறை பெருமாளே.*

தற்காலத்தில் பெரியகுளம் என்று வழங்கும் தலமே குளந்தை மாநகர் என்று ஸ்ரீ அருணகிரிநாதரால் பாடப்பட்டதாகும். மதுரையிலிருந்து தேனி செல்லும் பஸ் வழியில் 60 கல் தொலைவில் அமைந்துள்ளது இத்தலம். மதுரை–போடிநாயக்கனூர் இரயில் பிரிவில் ஆண்டிப்பட்டி அல்லது தேனி நிலையத்திலிருந்து டவுன் பஸ் மூலமும் இவ்வூரை அடையலாம். பஸ் ஸ்டாண்டிலிருந்து கோயில் ஒரு கல் தொலைவிலுள்ளது. சிவன்கோயில் தொன்மையாக விளங்குகின்றது. இக்கோயிலுள் ஸ்ரீபாலசுப்பிரமணிய சுவாமி சன்னிதி தனிச்சிறப்புடையது. சிவபெருமான் இங்கு ஸ்ரீராஜேந்திர சோழேஸ்வரர் எனவும், இறைவி அறம் வளர்த்த நாயகி எனவும் வழிபடப் பெறுகின்றனர். இராஜேந்திர சோழன் நிறுவியகோயில் என்பர்.

இத்தலத்தில் ஸ்ரீபாலசுப்பிரமணிய சுவாமி ஆறுமுகங்களும் பன்னிருகரங்களும் கொண்டு மயிலின் மீது அமர்ந்து விளங்குகின்றார். மயிலின் முகம் வடபுறம் நோக்கி உள்ளது.

அருகே வள்ளியம்மையும் தெய்வயானையம்மையும் விளங்கு கின்றனர். உற்சவமூர்த்தியும் ஆறுமுகப் பெருமானாக வள்ளி தேவயானையுடன் எழில்மிகு அருட்கோலத்துடன் விளங்கு கின்றார்.

காலை 6 மணி முதல் 11 மணி வரையிலும், மாலை 6 மணி முதல் 8 மணி வரையிலும் இங்கே வழிபடலாம்.

வைகாசி விசாகம், கார்த்திகை, பங்குனி உத்திரப் பெருவிழாக்கள் சிறப்பாகக் கொண்டாடப்பெறுகின்றன. மாதக்கார்த்திகை தோறும் ஸ்ரீபாலசுப்பிரமணிய சுவாமிக்கு விசேட வழிபாடு நிகழ்கின்றது.

புண்ணியப்புனல்; வராகநதி. தலவிருட்சம்; நெய்க் கொட்டாமரம்.

ஒரு பன்றி இறக்க-அதன் குட்டிகள் வருந்துவது கண்டு முருகவேள் இங்கு, பன்றியாக வந்து பால்கொடுத்துக் காப்பாற்றியதாகத் தலமான்மியம் கூறுகின்றது. மலை அடி வாரத்தில் இருபுறமும் நின்ற கோலத்தில் வராகங்கள் (பன்றி கள்) செதுக்கப்பட்டுள்ளன. முகம் மட்டும் பன்றி-உடல் மனித உருவாக உள்ள அப்பன்றிகள் முனிவர்களாக மாறியதை இக் கோயிலிலுள்ள சுதை காட்டுகின்றது. நின்ற கோலத்தில் மலை மீது வள்ளி தேவயானையுடன் முருகன் விளங்க அவருக்கு இரு புறமும் நான்கு முனிவர்கள் அமர்ந்துள்ளனர். பன்றி நலம் பெற்ற தலமாதலின் புண்ணியப் புனல் வராகநதி என்று பெயர் பெற்றது.

மூலத்தானத்தில் அறுமுகப்பெருமானுக்கு இடப்புறம் நவவீரர்கள் உள்ளனர். நடுநாயகமாக வீரவாகு தேவர் விளங்குகிறார்.

கோயிலுக்குப் பின்னணியாகக் கொடைக்கானல் மலை அழகு செய்கின்றது. இக்கோயிலில் உள்ள எல்லா திருவுருவங் களும் அழகு மிக்கவை-சோழர் காலத்தவை. சண்முகக் காளி, வீரபத்திரர், இரதி, மன்மதன், ஊர்த்துவதாண்டவம் முதலியவை.

இவ்வூரில் ஸ்ரீவரதராஜப்பெருமான் கோயில், காளத்தீசர் கோயில், கௌமாரியம்மன் கோயில் முதலியன உள்ளன.

மதுரையிலிருந்து பஸ்ஸில் புறப்பட்டால் இரண்டு மணி நேரத்தில் பெரியகுளத்தை அடைந்து விடலாம்.

இவ்வூரில் உணவு விடுதிகள் உள்ளன.

அறநிலைய ஆட்சித்துறையின் கீழ் இக்கோயில் அமைந்துள்ளது.

இத்தலத்தில் அருணகிரிநாதர் ஒரு அற்புதமான உண்மையைப் புலப்படுத்துவதை இத்தலத் திருப்புகழ் சான்று பகருகின்றது.

''தவியாமல், வரந்தராவிடில் பிறரீ எவர் தருவாரே' கந்தவேளையன்றி எந்த வேளும் நமக்கு வரந்தரமாட்டார்கள் என்ற பேருண்மையை இத்தலத்தில் அருணகிரிநாதர் அழகாகக் காட்டுகின்றார்.

# இராமநாதபுரம் மாவட்டம்

1. குன்றக்குடி
2. திருப்புத்தூர்
3. பிரான்மலை
4. திருவாடானை
5. திருஉத்தரகோசமங்கை
6. இராமேசுவரம்

## குன்றக்குடி வளர் குமரப்பெருமான்

தவள மதிய மெறிக்குந் தணலாலே
சரச மதனன் விடுக்குங் கணையாலே
கவன மிகவு முரைக்குங் குயிலாலே
கருதி மிகவு மயக்கம் படவோநான்
பவள நிகரு மிதழ்ப்பைங் குறமானின்
பரிய வரையை நிகர்க்குந் தனமேவும்
திவளு மணிகள் கிடக்குந் திருமார்பா
திகழு மயிலின் மலைக்கண் பெருமாளே.

முருகவேளின் வாகனம் மயில்; கொடி சேவல். சூரனும் பதுமனும் முருகனது மயிலாகவும் சேவலாகவும் திகழவேண்டித் தவமியற்றினர். இதுபோன்றே சிங்கன் அம்பிகையின் சிங்கமாகவும், தாரகன் ஐயனாரின் யானை வாகனமாகவும் விரும்பித் தவமியற்றினர். தனது பதவிக்கு ஆபத்து வந்ததறிந்த மயில், சிவபெருமானைப் பணிந்து, இந்நால்வரையும் சிவகணங்களாக மாறச் செய்துவிட்டது. தமது தவங் கெடக்காரணமாயிருந்தது மயில் என்றறிந்த அந்நால்வரும் மயில்மீது பகைகொண்டனர். மயிலுக்குத் தகவலளித்த கருடனையும் அன்னத்தையும் ஒறுக்க எண்ணினர். பகைவனின் குடியை உறவாடிக் கெடுப்பதே போன்று, மயில், கருடன், அன்னம் ஆகிய மூவருடனும் பழகி அவர்களிடையே பகையைத் தோற்றுவித்துவிட்டனர். மயில், கருடனையும் அன்னத்தையும் பெரிதும் துன்புறுத்தலாயிற்று. அவை இரண்டும் முருகனிடம் முறையிட்டன. மயிலின் அடாத செயல் கண்ட கந்தவேள், மயிலைக்குன்றாக மாறும்படிச்சபித்தார். மயில்குன்றாகமாறிய தலமே மயூரகிரி-மயூராசலம் மயில்மலை என்னும்குன்றக்குடியாகும். சூரசம்ஹாரத்திற்குப் பிறகு முருகன்

இத்தலம்வந்து, மயிலின் ஒரு பாகத்தைச் சாரூபியமளித்து மற்றொருபகுதியை மலையாகவே இருக்க அருள் புரிந்து, தானும் அதன்மேலே எழுந்தருளினார்.

காரைக்குடியிலிருந்து 7கல் மேற்கிலுள்ள இத்தலத்திற்குக் காரைக்குடியிலிருந்து பஸ் வசதி மிகுதி.

நிமிர்ந்து நிற்கும் மயிலின் தோற்றமுடையதாகக் குன்றக்குடிமலை விளங்குகின்றது. மலையின்தென்பாகம் மயிலின் தோகை அமைப்புடையது. மலை ஊரின் நடுவில் உள்ளது. மலையின் மீது கோயில் பரவசமூட்டும் பக்திச் சூழ்நிலை. ஊரின் பல பகுதிகளில் சத்திரங்களும் மடங்களும் அமைந்துள்ளன கோயிலின் தென் மேற்கில் வேல் கொண்டு தோற்றுவித்த சரவணப்பொய்கை விளங்குகின்றது.

மலையின் அடி வாரத்தில் படிகள் தொடங்குமிடத்தில் தோகையடி விநாயகர் சந்நிதி உள்ளது. மலையின் ஒருபகுதி மலைக் கோயிலாகவும், மற்றொருபகுதி கீழ்க் கோயிலாகவும் உள்ளது. 144 படிகளேறிச் சென்று மலைக்கோயிலை அடைகிறோம்.

கீழ்க்கோயிலின் பெரும் பகுதியும் மலையைக் குடைந்த அமைப்பு, அதனுள் தேனாற்றுநாதர், அழகம்மை, அகத்தியர் கோயில்கள் உள்ளன. மலையைக் குடைந்தமைத்த ஐந்து இலிங்கங்கள் உள்ளன. அவற்றுள்ளும் மலைக்கொழுந்தீசர் சந்நிதியில் துவாரபாலகர்கள், வலம்புரிவிநாயகர், திருமால், பிரமன், சிவபெருமான், துர்க்கை,சங்கரநாராயணர் சிற்பங்களைக்காணும் போது சிற்பக்கலைக் கூடத்துள் நிற்கும் உணர்வுதான் ஏற்படுகின்றது. இங்கு பல கல்வெட்டுக்கள் உள்ளன.

மலைக்கோயிலுக்குச் செல்லும் படிக்கட்டுகளிடையே மண்டபங்கள் உள்ளன படிக்கட்டுகளின் உச்சியில் வல்லப விநாயகரும், இடும்பனும் விளங்குகின்றனர். மலைக் கோயில் வாயிலில் வீரவாகுதேவர் சந்நிதி உள்ளது. கோயிலின் தெற்கு வாயில் இராஜ கோபுரத்துடன் வரவேற்கிறது.

ஒரே பிராகாரமுடையதாய் விளங்கும் மலைக்கோயிலில் அலங்காரமண்டபமும், விசாலாட்சி, சோமாஸ்கந்தர், ஆறுமுகப் பெருமான் சந்நிதிகளும் உள்ளன. நால்வர், சொர்ணகணபதி. குழந்தை வடிவேலர், நடராசர் சந்நிதிகளைக் காணலாம்.

அலங்காரமண்டபத்தில் உற்சவமூர்த்தி எழுந்தருளியுள்ளார். இம்மண்டபத்தில் மருது சகோதரர்களின் சிற்பம் சிறப்பாக உள்ளது.

உள்ளே கருவறையில் மயில்மீது பன்னிருகை வேலனும் தனித்தனி மயில்கள் மீது வள்ளியும் தெய்வயானையும் எழுந் தருளியுள்ளது இத்தலத்தின் தனிச்சிறப்பாகும். இது போன்ற அமைப்பு திண்ணியம் கோயிலிலும் காணலாம். கிழக்குநோக்கிய சந்நிதி.

இத்தல முருகனைத் திருமால், நான்முகன், இந்திரன் சூரியன், காமன், கருடன், வசிட்டர், நாரதர், பாண்டவர் ஆகியோர் வழிபட்டனர் என்று தலமான்மியம் பேசுகின்றது. கிருஷ்ணர், இப்பெருமானைப் பரவும்படிப் பாண்டவரிடம் கூறிய தால் இத்தலம் கிருஷ்ண நகரம் எனப்படும்.

மலையின் மேற்குப் பகுதியில் விளங்கும் பாண்டவர் தீர்த்த மும், பாண்டவர் (பாறைப்) படுக்கைகளும் பாண்டவர் இங்கு வந்ததைக் குறிப்பனவாக உள்ளன.

குமாரதந்திர முறையில் தினமும் ஐந்து கால வழிபாடு இங்கு நிகழ்கின்றது.

மாதக் கார்த்திகை சிறப்பு மிக்கது.

வைகாசி விசாகம், கந்தசஷ்டி, தைப்பூசம், பங்குனி உத்திரவிழாக்கள் சிறப்புடையன.

சரவணபுட்கரணி, மதுபுட்கரணி, மயில்தீர்த்தம், சக்தி தீர்த்தம், பாண்டவர்தீர்த்தம், தேனாறு, சண்முகநதி முதலிய புண்ணியப்புனல்கள் உள்ளன. தலவிருட்சம் அரசமரம்.

புத்தாண்டு நாளும், மலைதீபமும் காணவேண்டியதாகும்

இங்கே பால்காவடி, சந்தனக்காவடி, புஷ்பக்காவடி, சர்ப்பக்காவடி பன்னீர்க்காவடிகள் அடியார்களால் அர்ப்பணிக்கப்படுகின்றன.

மருதுபாண்டியர் தம் வயிற்றுவலியை இங்கு வழிபட்டே போக்கிக் கொண்டார். காரியம் கைகூட வேண்டுமானால் குன்றக்குடிக்குத்தான் காவடி எடுக்க வேண்டும் என்பது முது மொழி, இத்தலத்தில் வீரமாகாளி அம்மன் கோயில் உள்ளது.

அருணகிரிநாத சுவாமிகள்இத்தலத்திற்குஏழு திருப்புகழ்ப் பாடல்களைப்பாடிப்பரவியுள்ளார். ("அழகெறிந்த", "கருபறியலெ", "கடினதட", "நேசாசாரா", "பிறசேபுகழின்," "தவளமதிப்,"

"நாமேவு" எனத்தொடங்குவன). கருப்பந்தில என்று தொடங்கும் திருப்புகழில்,

> தகுகுதகு தகுதகுகு திகுகுதிகு திகுதிகுகு
> தங்குத் தகுத்தகுகு திங்குத் திகுத்திகுகு
> சகணசக சகசகண செகணசெக செகசெகண
> சங்கச் சகச்சகண செங்கச்செ கச்செகண
> தனனதன தனதனன தெனனதென தெனதெனன
> தந்தத் னத்தனன தெந்தத்தெ னத்தெனன தனனா
> தகுத்தகு தகுதகுதி திகுதிதிகு திகுதிகுதி
> தங்குத் தகுத்தகுகு திங்குத் திகுத்திகுகு
> டணணடண டணடணண டிணிணிடிணி டிணிடிணிணி
> டண்டட்ட டட்டடண டிண்டிட்டி டிட்டிடிணி
> தரரதர தரதரர திரிரிதிரி திரிதிரிரி
> தன்றத் தரத்தரர தின்றித் திரித்திரிரி எனதாளம்

என வரும் பகுதிகளை நமது திருப்பணிச் சக்கரவர்த்தி திருமுருக கிருபானந்தவாரியார் சுவாமிகள் பாடும் போது படைகள் அணிவகுத்து வருவது போலவும் பல்வேறு போர்க் கருவிகள் முழங்குவது போலும் தோன்றும்.

தேனாறு புடைசூழும் தலம் குன்றக்குடி (தேனாறேசூழ் துங்க மலைப்பதிமாயூரா வாழ்குன்றை தழைத்தருள் பெருமாளே; தேனாறு புடைசூழ மாயூரகிரிமேவு பெருமாளே) என்று அருணகிரிநாதர் குறிப்பதைக் கொண்டு "ஊனேதானா" என்று தொடங்கும் திருப்புகழில் 'தேனீள்காணாறாய் வீழ் தேசார் சாரற்கிரி' என்று வருவது குன்றக்குடியையே குறிக்கும் என்று கொண்டால் இத்திருப்புகழையும் இத்தலத்திற்குரிய தெனவே கொள்ளலாம்

குன்றக்குடி திருவண்ணாமலை யாதீனத்தின் நிர்வாகத்தில் அமைந்துள்ள ஐந்து திருக் கோயில்களில் இதுவும் ஒன்று. அண்மையில் திருப்பணி செய்யப் பெற்றுக் குடமுழுக்கு பெரு விழா நிகழ்ந்து புதுப்பொலிவோடு விளங்குகின்றது.

> குறுமுநி யின்பப் பொருள்பெற அன்றுறுற்
> பனமது வுஞ்சொற் குருநாதா
> குலகிரி துங்கக் கிரியுயர் குன்றக்
> குடிவளர் கந்தப் பெருமாளே.

இத்தலப் பெருமான் புகழ் கூறும் மயூரகிரிக்கலம்பகம், மயூரகிரிக்காதல், சண்முகநாதர் உலா, மயூரகிரிக் கோவை, மயூரகிரி பிள்ளைத்தமிழ் முதலிய நூல்கள் சிறப்புடையன.

# திருப்புத்தூருறை மருவிய குமரன்

*ஏடேறு மலர்க்கமலத் தயனுமாலு மிந்திரனும் பணிந்தேத்த*
*இருக்கின்றான் காண்*
*தோடேறு மலர்க்கடுக்கை வன்னிமத்தந் துன்னிய செஞ்சடை*
*யான்காண் துகடீர்சங்க*
*மாடேறி முத்தீனுங் கானல்வேலி மறைக்காட்டு மாமணிகாண்*
*வளங்கொள் மேதி*
*சேடேறி மடுப்படியுந் திருப்புத்தூரிற் றிருத்தளியான் காண்*
*அவனென் சிந்தையானே!*

—திருநாவுக்கரசர்.

தமிழ் நாட்டில் பைரவர் திருக்கோலச் சிறப்புடையதலம் எது என்று வினவினால் திருப்புத்தூர் என்று பதில் கிடைக்கும். இராமநாதபுரம்மாவட்டத்தில் காரைக்குடிக்கு 12கல்தொலைவில் அமைந்துள்ள இத்தலம் வரலாற்றுத் தொன்மையுடையது. மதுரை, காரைக்குடி, தேவகோட்டை, புதுக்கோட்டை, திருச்சி ஆகிய ஊர்களிலிருந்து பஸ்வசதி கொண்ட பெருநகரம் இது.

கொன்றை வனம் (சம்யாலறவனம்), பிரம்மதேசம், ஸ்ரீலட்சுமி புரம், கௌரிபுரம், ஸ்ரீமன்நவபுரம் என்றெல்லாம் அழைக்கப்படும் இத்தலத்தில் சிவபெருமான் திருத்தளிநாதர், புத்தூர்நாதர் எனவும், இறைவி: சிவகாமி அம்பிகை எனவும் வழிப்படப் பெறுகின்றனர்.

இரண்டாவது பிராகாரத்தில் முருகன் சந்நிதிவிளங்குகிறது. ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு மயில் முன் நின்றக் திருக்கோலத்தில் வடக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். அருகில் வள்ளி, தேவயானை விளங்குகின்றனர்.

தினமும் நான்குகால வழிபாடு-காரணாகம முறையில் நிகழ்கின்றது. கார்த்திகை, உத்திரவிழாக்கள் நிகழ்கின்றன. தைப்பூச விழாவும் குறிப்பிடத்தக்கது.

இத்தலத்தில் திருத்தளிதீர்த்தம் (ஸ்ரீதேவிதீர்த்தம்) சிவகங்கை தீர்த்தம் என்னும் இருபுண்ணியப் புனல்கள் உள்ளன. சரக்கொன்றை தலவிருட்சமாகும்.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் பாடிப் பரவிய இத்தலத்தில் பைரவர் சிறப்புடன் திகழ்கின்றார். முருகனை இத்தலத்தில் பரவிய அருணகிரிநாதர் இப்பைரவரையும் குறிப்பிட்டுப் போற்றுகிறார்.

"இருட்டுப் பாரில் மறலி தனதுடல்
பதைக்கக் கால் கொடுதை செய்தவன்விழ
எயிற்றுப் போவியமர ருடலவர் தலைமாலை
எலும்புக் கோவையணியு மவர்மிக
அதிர்த்துக் காளி வெருவ நொடியினில்
எதிர்த்திட் டாடும் வயிரபயிரவர்

(கருப்புச்சாப— )

இத்தலத்தில் சபாபதியும், சிவகாமியும் சிலாவிக்ரகங்களாயுள்ளன. இங்கே நடராஜர் கவுரிதாண்டவமூர்த்தியாக விளங்குவது தனிச்சிறப்பாகும். விஷ்ணுவுக்குத்தனிச் சந்நிதி உள்ளது.

அருணகிரிநாதர் இருதிருப்புகழ்ப் பாடல்களால்(கருப்புச் சாப..., வேலைதோற்க...) இத்தலமுருகனைப் பரவினார். இங்கே வழிபடுவோர் வசதியும்,உணவுச்சாலைகளும் உள்ளன. குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனத்தின்கீழ் இக்கோயில் நிர்வகிக்கப்படுகின்றது.

இத்தலத்தைச் சுற்றிகுன்றக்குடி (7கல்), பிள்ளையார்பட்டி, பிரான்மலை (கொடுங்குன்றம்-15கல்) முதலியதலங்கள் உள்ளன.

சேலருக்கயல் தந்தச் சூழ்வய
லூர வேற்கர விப்ரர்க் காதர
தீரதீர்த்த திருப்புத்தூருறை பெருமாளே

(வேலைதோற்க...)

# சுத்தக் கொடுங்கிரியில் நிர்த்தச் சரண்

*அனங்க னம்பொன் றஞ்சந் தங்குங் கண்களாலே*
*அடர்ந்தெழும் பொன் குன்றங் கும்பங் கொங்கையாலே*
*முனிந்து மன்றங் கண்டுந் தண்டும் பெண்களாலே*
*முடங்கு மென்றன் தொண்டுங் கண்டின் றின்புறுதோ*
*தெனந்தெ னந்தெந் தெந்தெந் தெந்தெந் தெந்தெனுனு*
*செறிந்த டர்ந்துஞ் சென்றும் பண்பின் தும்பிபாடக்*
*குனிந்தி லங்குங் கொம்புங் கொந்துந் துன்றுசோலை*
*கொழுங்கொ டுந்திண் குன்றந் தங்கும் தம்பிரானே*

— அருணகிரிநாத சுவாமிகள்.

கடையெழு வள்ளல்களுள் ஒருவரான பாரி ஆண்ட பகுதியான பிரான்மலை என்ற தலமே தேவாரத் திருப்புகழ்ப் பாக்களைப் பெற்ற திருக்கொடுங்குன்றம் என்னும் தலமாகும். முல்லைக்குத் தேரளித்த பாரியின் கொடை வளத்தைச் சங்க நூல்களில் பரக்கக் காண்கின்றோம். பாரிக்குப்பின் வள்ளல் இல்லை என்பது பழமொழியாகிவிட்டது. "பாரி மட்டும் தான் உண்டோ? இவ்வுலகத்தில் உலகம் புரக்க மாரி (மழை)யும் உண்டே!" என்று புலவர்கள் பாராட்டினர்.

பாரியின் பறம்புமலை - பிரான்மலை, திண்டுக்கல்-திருப்பத்தூர் பஸ் வழியில் – திருப்பத்தூரிலிருந்து 24 கல் தொலைவிலுள்ளது. மதுரை, சிவகங்கை, திருப்பத்தூர் புதுக்கோட்டை முதலிய ஊர்களிலிருந்து பஸ் வசதி உள்ளது. இது பாண்டிய நாட்டிலுள்ள தேவாரத் தலங்களுள் ஒன்றாகும்.

ஒருமுறை ஆதிசேஷனுக்கும் வாயுவுக்குமிடையே யார் பெரியவர் என்ற சண்டை மூண்டது. மேருமலையை ஆதிசேஷன் நன்றாகச் சுருட்டிக் கொண்டான். வாயு தனது பலங் கொண்ட மட்டும் அம்மலையை மோத-அது தூள் தூளாகச் சிதறிப் பல இடங்களிலும் சென்று விழுந்தது. அவ்வாறு அம்மலை சிதறிய இடங்களுள் பிரான் மலையும் ஒன்று. இங்கே அம்மலைப் பகுதி இலிங்கமாக உருப் பெற்றுள்ளது. வாயுவினால் உருவானதால் இத்தலம் பிரசண்டகிரி, கடோரகிரி எனவும் வழங்கலாயிற்று.

இங்கு மலையடிவாரத்தில் 30 ஏக்கர் பரப்பில் அமைந்துள்ள மாபெருங் கோயில் பல்விதச் சிறப்புக்களுடன் விளங்குகின்றது. மருது சகோதரர்களும் இராமநாதபுரம் சேதுபதிகளும் பல திருப்பணிகள் செய்துள்ள இக்கோயில் மூன்று பிராகாரங்களைக் கொண்டுள்ளது. இங்குள்ள சிவபெருமான் மங்கை நாயகரும் அம்பிகை தேனம்பிகையும் திருமணக் கோலத்தில் விளங்குகின்றனர். பொதுவாகச் சிவாலயங்களில் கருவறையில் இலிங்க மூர்த்தமாக இறைவன் விளங்குவது கண்கூடு. ஆனால் இங்கு அதற்கு மாறாக-உருவத் திருமேனியுடன் அம்மையும் அப்பனும் எழுந்தருளியிருப்பதை இத்தலம் ஒன்றில்தான் காணலாம். கருவறையில் சிவலிங்கம் இல்லை. இலிங்கத் திருமேனியாகத் திருக்கொடுங்குன்ற நாதர் தனிச் சந்நிதியில் விளங்குகின்றார். அவரது அம்பிகை அமுதேசுவரி அல்லது குயிலமுத நாயகி. காசி விசுவநாதர், விசாலாட்சி, தட்சிணாமூர்த்தி, விநாயகர், சுப்பிரமணியர், சொக்கலிங்கர், மீனாட்சி, நடராஜர், சிவகாம சுந்தரி, சண்டேசர், சண்டேசுவரி, அறுபத்துமூவர், நவக்கிரக சந்நிதிகளும் உள்ளன. இங்கே பைரவருக்குத் தனிக் கோயில் சிறப்பாக உள்ளது. உக்கிரக மூர்த்தியாக அவர் விளங்குகின்றார். இவருக்குத் தைமாதத்தில் பெருவிழா நிகழ்கின்றது.

அகத்தியருக்குத் திருமணக் கோலத்தில் காட்சி நல்கியருளிய இத்தலப் பெருமான், பிரமன், சரஸ்வதி, சுப்பிரமணியர் நந்திதேவர், உபமன்யு, மகோதரமுனி, நாகராஜன் ஆகியோருக்கும் அருள் செய்ததாக இத்தல மான்மியம் பேசுகின்றது. திருஞான சம்பந்தர் பாடிப் பரவிய தேவாரப் பதிகம் இத்தலத்திறைவன் பெருமைகளைச் சாற்றுகின்றது.

இங்கே முருகப் பெருமான் சந்நிதி மிகச் சிறப்புடையது. தம்மை ஆண்ட பிரானைத்-தித்திக்கும் அமுதை-அருணகிரிநாதர் கண்டார், தொழுதார், ஆடினார், பாடினார். சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குச் சிவபெருமான் திருப்பனையூரில் திருக்கூத்தொடு தரிசனம் தந்தது போன்று சிவகுமாரரும் இத்தலத்தில் அருணகிரி நாதருக்குத் தமது நடனக் காட்சியைத் தந்தருளினார். அந்த நிர்த்தத்திற்கு ஏற்ற வண்ணம் பெரியதொரு சந்தத் திருப் புகழை "எதிர் பொருது கவிகடின கச்சுக்களும் பொருது குத்தித் திறந்து" எனத் தொடங்கி அதில் மட்டற்ற இந்திரிய சட்டைக் குரம்பையழி பொழுதினிலும் அருள் முருக, "சுத்தக் கொடுங் கிரியில் நிர்த்தச் சரணங்களை மறந்திடேனே" என வாழ்த்தி வணங்கினர்.

இங்கே முருகன் சந்நிதியில் மயிலுக்குப் பதிலாக யானை விளங்குகின்றது. ஒரு முகமும் இரண்டு கரங்களும் கொண்டு இருபுறம் தேவிமாருடன் நின்ற கோலத்தில் முருகன் விளங்குகிறார்.

இத்தலத்தில் ஐந்து புண்ணியப் புனல்கள் உள்ளன.

தினமும் ஆறுகால வழிபாடு சிறப்பாக நடைபெறுகின்றது.

மாதக் கிருத்திகை சிறப்புடையது.

சித்திரை பிரம்மோற்சவம் இத்தலத்தில் புகழ் மிக்கது. கந்த சஷ்டி, கார்த்திகை தீப விழாக்கள் கொண்டாடப் படுகின்றன.

குன்றக்குடி திருவண்ணாமலையாதீன ஐந்து கோயில்களுள் இதுவும் ஒன்று.

நல்லமங்கை பாகசுவாமியின் நல்லருள் பெற இத்தலத்தினை அனைவரும் சென்று வழிபட்டு இன்புறுக.

## ஞானகமத்தை அருள் ஆடானை

*ஊனாரும் உட்பிணியு மானாக வித்தவுடல்*
*ஊதாரி பட்டொழிய உயிர்போனால்*
*ஊரார் குவித்துவர ஆவா எனக்குறுகி*
*ஓயா முழக்கமெழ அழுதோய*
*நானாவிதச் சிவிகை மேலே கிடத்தியது*
*நாறு தெடுத்தடவி யெரியூடே*
*நாணாமல் வைத்துவிட நீறாமெ னிப்பிறவி*
*நாடா தெனக்குனருள் புரிவாயே*
*மானாக துத்திமுடி மீதே நிருத்தமிடு*
*மாயோனு மட்டொழுகு மலர்மீதே*
*வாழ்வா யிருக்குமொரு வேதாவு மெட்டிசையும்*
*வானோரு மட்டகுல கிரியாவும்*
*ஆனா வரக்கருடன் வானோர் பிழைக்கவரும்*
*ஆலால முற்றஅமு தயில்வோன்முன்*
*ஆசார பக்தியுடன் ஞானாக மத்தையருள்*
*ஆடானை நித்தமுறை பெருமாளே.*

**அருணகிரிநாதர்.**

இராமநாதபுரம் மாவட்டத்தில் காரைக்குடியடுத்த தேவகோட்டையிலிருந்து 25 கல் தொலைவில் திருவாடானை என்ற தலம் உள்ளது. தேவகோட்டையிலிருந்து பஸ் வசதி உள்ளது. இது பாண்டிய நாட்டுத் தேவாரத் தலங்கள் பதினான்கில் ஒன்றாகும். திருஞான சம்பந்தர் இத்தலப் பெருமானை பாடிப் பரவியுள்ளார்.

இங்கே சிவபெருமான் திருஆடானை நாதர் எனவும் அம்பிகை சிநேகவல்லி (அன்பாயி அம்மை) எனவும் போற்றப் பெறுகின்றனர். வருணனின் மகன் வாருணி. துர்வாச முனிவர்

சாபத்தால் வாருணி—ஆட்டுத்தலையும் ஆனையின் உடலும் இணைந்த உருவம் பெற்றான். தனக்குச் சாபம் நீங்கி உய்யும் பொருட்டு இத்தலத்தில் நீலரத்தினத்தால் சிவலிங்கம் அமைத்து வழிபட்டுத் தன் ஆடு ஆனை இணைந்த வடிவம் நீங்கப் பெற்றான். ஆதிரத்தினேசர் என்ற பெயரும் இங்கு இறைவனுக்கு உண்டு. பிருகு முனிவரும் இங்கு வழிபட்டதாகத் தலமான்மியம் கூறுகின்றது

தொன்மையான பெரிய கோயில்; கோபுர வாயிலில் தண்டபாணி திருக்கோயில் கொண்டுள்ளார். மாதக் கார்த்திகை தோறும் இப்பெருமானுக்குப் பழனிப் பாதயாத்திரைக் குழுவினரால் அபிடேகம் நிகழ்த்தப் பெறுகிறது.

உள்ளே சிவபெருமான் சந்நிதிக்குப் பின்னால் முருகன் சந்நிதி விளங்குகின்றது. ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு முருகவேள் வேடமங்கையும் வேழமங்கையும் உடன் விளங்க-மயிலுடன் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். மயிலின் முகம் தெற்கு நோக்கி உள்ளது. இம்முருகன் சுமார் 5 அடி உயரமுடன் கம்பீரமாகத் திகழுகின்றார்.

தினமும் நான்கு கால வழிபாடு நிகழ்கின்றது.

மாதக்கார்த்திகை சிறப்பு வழிபாடு நிகழ்கின்றது. கந்த சஷ்டிப்பெருவிழா சிறப்பாக நடைபெறுகின்றது.

இங்கு தங்கும் விடுதிகளும் உணவு விடுதிகளும் உள்ளன. தேவக்கோட்டைச் சிவாலயத்தில் கந்தசஷ்டிவிழாதமிழகமெங்கும் புகழ்மிக்கதாக நகரத்தார்களால் கொண்டாடப்பெறுகின்றது.

அருணகிரிநாதர் தனித்திருப்புகழ்ப்பாடியதோடு இத் தலத்தைத் தனது க்ஷேத்திரக்கோவை பின்னைத்தமிழிலும் போற்றியுள்ளது குறிப்பிடத்தக்கது.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளது.

# உத்தரகோசத்தலமுறை கந்தன்

*கடையவ னேனைக் கருணையி னாற்கலந் தாண்டு கொண்ட*
*விடையவ னேவிட் டிடுதிகண் டாய்விறல் வேங்கையின் தோல்*
*உடையவனே மன்னும் உத்தர கோசமங் கைக்கரசே*
*சடையவ னேதளர்ந்தேன்எம்பி ரான்என்னைத் தாங்கிக் கொள்ளே*

திருவாசகம்.

மணிவாசகப் பெருமான் தனது ஒப்பற்ற திருவாசகத்துள் போற்றிப்பரவும் திப்பிய தலங்களில் திருஉத்தரகோசமங்கையும் ஒன்று. இராமநாதபுரம் இரயில் நிலையத்திற்குத் தென் மேற்கே ஐந்து கல் தொலைவில் இத்தலம் உள்ளது. இராமநாதபுரத்திலிருந்து பஸ் வசதி உண்டு. இங்கே நடராசப் பெருமான் சந்நிதி மிகச்சிறப்புடையது. இங்கே சிவபெருமானை மங்களநாதர், உத்தரகோசமங்கைநாதர் எனவும், அம்பிகையை மங்களாம்பிகை எனவும் வழிபடுகின்றனர். மிகவும் தொன்மையான கோயில் இது.

கோயிலை அடைந்தவுடன் இராஜகோபுரத்தின் முன் வலப்புறம் முருகனும் இடப்புறம் விநாயகரும் கோயில் கொண்டிருப்பதைக் காண்கின்றோம். பொதுவாக எல்லாத் தலங்களிலும் வலப்பால் விநாயகரும் இடப்பால் முருகவேளுமே இடம் பெற்றிருப்பர். இங்கே இது மாறியிருப்பதோடு முருகப் பெருமானுக்கு முன் பொதுவாகக் காணப்பெறும் மயிலுக்குப் பதிலாக இங்கே தேவேந்திரனது ஐராவதம் நின்று கொண்டிருப்பது மற்றொரு அதிசயமாகும். முருகவேளுக்குத் தனி

அன்பின் கையுறையாகத் தனது ஐராவதத்தை இந்திரன் இத் தலத்தில் வழிபட்டு அளித்தான் என்று இத்தலமான்மியமான ஆதிசிதம்பர மகாத்மியம் கூறுகின்றது. மயிலின் மீது சாய்ந்து நிற்கும் முருகனது அற்புதக் கோலத்தைக் கண்டு முதல் பிராகாரத்தின் வாயுமூலையில் உள்ள முருகனைக் காணச் செல்கின்றோம், மயில் வாகனத்துடன் வேடமங்கை வேழமங்கை யுடன் நின்ற திருக்கோலத்தில் இங்கே கந்தவேள் காட்சி யருளுகின்றார்.

இரண்டாவது பிராகாரத்தில் வாயு மூலையில் ஆறுமுகப் பெருமான் சந்நிதி சிறப்பாக உள்ளது. ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்து இருதேவியருடனும் இங்கே சண்முகப்பெருமான் விளங்குகின்றார்.

இத்தலத்தில் அருணகிரிநாத சுவாமிகள் போற்றிப் பரவிய திருப்புகழ் ஒப்பற்றதாக விளங்குகின்றது. பொதுவாக இளமை நிலையாமை, பொது மகளிர் இழிவு போன்றவற்றை விளக்கியருள வேண்டுமெனப் பாடும் சுவாமிகள் இங்கே முருகப் பெருமான் புகழ்பாடி நிவேதனம் செய்து அமுதமுண்ண விழைகின்றார்.

கற்பக ஞானக் கடவுள் முனண்டத்
திற்புத சேனைக் கதிபதி யின்பக்
கட்கழை பாகப் பமுது வெண்சர்க் கரைபால்தேன்
கட்டிள நீர்முக் கனிபய றம்பொற்
றெப்பையி னேறிட் டருளிய தந்திக்
கட்டினை யாய்பொற் பதமதிறைஞ்சிப் பரியாய

பொற்சிகி யாய்கொத் துண்மணி தண்டைப்
பொற்சரி நாதப் பரிபுர என்றுப்
பொற்புற வோதிக் கசிவொடு சிந்தித் தினிதேயான்
பொற்புகழ் பாடிச் சிவபத மும்பொற்
றுப்பொருள் ஞானப் பெருவெளி யும்பொற்
றுப்புக லாகத் தமுதையு முண்டிட் டிடுவேனோ

தெற்ப முள்ளாகத் திரள்பரி யும்பற்
குப்பை களாகத் தசுரர் பிணந்திக்
கொட்டையு மூடிக் குருதிகள் மங்குற் செவையாகித்
திக்கய மாடச் சிலசில பம்பைத்
தத்தன தானத் தடுடு வென்கச்
செப்பறை தாளத் தகுதொகு வென்கச் சிலபேரி
உற்பன மாகத் தடிபடு சம்பத்
தற்புதமாகத் தமரர் புரம்பெற்
றுட்செல்வ மேவிக் கணமலர் சிந்தத் தொடுவேலா
உட்பொருள் ஞானக் குறமக ளும்பற்
சித்திரை நீடப் பரிமயில் முன்பெற்
றுத்தர கோசத் தலமுறை கந்தப் பெருமாளே.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் விளங்குகின்றது.

## வீறுபெற்றிலகு இராமேசுரம்

*ஒலமிடு தாடகைசுசு வாகுவள ரேழுமரம்*
*வாலியொடு நீலிபக ரேடொருவி ராதனெழு*
*மோத கடலோடு விறல்ராவண குழாமமரில்*
*பொடியாக*
*ஒகைதழல் வாளிவிடு முரிதநு நேமிவளை*
*பாணிதிரு மார்பனரி கேசன்மரு காஎனவெ*
*யோதமறை ராமெசுர மேவுகுமரா அமரர் பெருமாளே*

—அருணகிரிநாதசுவாமிகள் (வாலைப...)

தாடகை முதல் இராவணன் ஈருக வதம் செய்தருளிய இராமபிரான் தாபித்து வழிபட்ட சிவபெருமான் விளங்கும் தலமே இராமேசுவரம் என்று புகழ் பெற்றுத் திகழ்கின்றது. காசி முதல் இராமேசுவரம் வரை என்று நமது நாட்டில் ஒரு முதுமொழி உண்டு. காசி விசுவநாதரை வழிபட்ட பலன் இராமேசுவரத்திலுள்ள இராமநாதரை வழிபட்டால் தான் கிட்டும் என்பது இன்றும் அனுபவத்திலுள்ள சமய நெறியாகும். நம் பாரத நாட்டின் ஒருமைப்பாட்டிற்கு ஆணிவேராக உள்ள தலங்களில் முதன்மையானதாக விளங்குவது இராமேசுவரம்.

இராமநாதபுரம் மாவட்டத்தில் மண்டபம் வரையில் பஸ்ஸில் சென்று. மண்டபத்திலிருந்து இராமேஸ்வரத்திற்கு இரயில் மார்க்கமாக அடையலாம். அல்லது நேராக இரயில் மார்க்கமாகவேஇராமேஸ்வரத்தைஅடையலாம். இராமேசுவரம் ஒரு தீவு. இராவணனுதியவரைக் கொன்ற பாவம் நீங்கச் சீதை அமைத்துக் கொடுத்த இலிங்கத்தை இராமபிரான் இங்கே

பூசித்தார். அனுமான் கொணர்ந்த இலிங்கம் காசிவிசுவநாதர் என்ற பெயரோடு முதற் பூசை ஏற்றுக் கொள்ளும் மூர்த்தமாக விளங்குகின்றது.

மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற மூன்றும் சிறந்த திருத்தலம் இது. 'தேவை' என்று ஒரு பெயரும் இதற்கு உண்டு. நமக்குத் தேவையும் இராமநாதன் அருள்தானே! திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் வழிபட்டுத் தேவாரப் பதிகம் பாடிப்பரவிய தலம் சிவபெருமான்: இராமநாதேசுவரர். இறைவி: மலைவளர்காதலி. பர்வதவர்த்தினி என்று போற்றப் படுகிறாள்.

இத்தகுதியில்-நான்குபுறமும்கடல்சூழ-பிரம்மாண்டமான கருங்கற்கோயில் நம்மை வியப்பில் ஆழ்த்துகின்றது. இக் கோயிலின் மூன்றும் பிராகாரம் உலகப் புகழ் பெற்ற சிற்பக் கட்டிட அமைப்புடையது.

இங்கே-மேலவாயில் கோபுரத்தின் முன் முருகன் திருக் கோயில் சிறப்பாக உள்ளது. மேலவாசல் சுப்பிரமணிய சுவாமி என்று இவர் வழிபடப்பெறுகிறார். ஒரு முகமும் நான்கு திருக் கரங்களும் கொண்டு தனியே மேற்கு நோக்கி மயிலுடன் வேல் கொண்டு இவர் விளங்குகின்றார்.

கருவறையைச் சுற்றிய பிராகாரத்தில்பரிவார மூர்த்தமாக விளங்கும் முருகன் வள்ளி தெய்வயானையுடன் விளங்குகின்றார். உத்ஸவ மூர்த்தமும் வள்ளி தெய்வயானையுடனேயே விளங்கு கின்றது.

காரணாகமத்தைத் தழுவிய மகுடாகம முறையில் தினமும் இரண்டுகால வழிபாடு முருகனுக்கு நிகழ்கின்றது. மாதக் கார்த்திகை சிறப்புடையது. வைகாசி விசாகம், கந்த சஷ்டி, பங்குனி உத்திரவிழாக்கள் குறிப்பிடத்தக்கவை. காவடிஎடுத்தல், முடிகாணிக்கை சிறப்பு.

இத்தலத்தில் 22 புனித தீர்த்தங்கள் உள்ளன. அருணகிரி நாதரும், தாயுமானசுவாமிகளும், பாம்பன் சுவாமிகளும் இங்கே பரவிப் பாடியுள்ளனர். அருணகிரிநாதரது இரு திருப்புகழ்ப் பாடல்கள் இத்தலத்திற்குள்ளன. அவற்றுள் வாலவயதாகி என்று தொடங்கும் திருப்புகழ் மனித வாழ்வை அப்படியே பிறப்பு

முதல் இறப்பு வரைப் படம் பிடித்துக் காட்டி விடுகின்றது. "வானோர் வழுத்துனது" என்ற திருப்புகழ் இளமையின்ப நிலையாமையைக் குறிப்பிட்டு,

*ஞான பரற்கினிய வேதாக மப்பொருளை*
*நாண துரைக்குமொரு பெரியோனே*
*நாராயணற்கு மருகாவீறு பெற்றிலகு*
*ராமே சுரத்திலுறை பெருமாளே*

என்று போற்றுகின்றது.

இத்தலத்தில் தங்கி வழிபட விடுதிகள், உணவு விடுதிகள் உள்ளன. இராமேச்சுரத்திலிருந்து தெற்கே 12 கல் தொலைவில் தனுஷ்கோடி என்ற இடம் "சேது" என்று போற்றப்படுவது. இராமர் இலங்கைக்குப் பாலம் அமைத்த இடம் இது. 1964 புயலில் இத்தீவு மூழ்கிவிட்டது. தற்போது ஸ்நானகட்டமாகவே சேது உள்ளது. இங்கு சமுத்திர ஸ்நானம் செய்ய யாத்ரிகர்கள் தனியார் வாகன வசதிகளைக் கொண்டு சென்று வருகிறார்கள். இராமேசுவரத்திலிருந்து நேரடியாக தனுஷ்கோடி முந்திய பியர் வரையில் தார்ரோடு உள்ளது. போக்குவரத்து வசதி செய்து கொடுத்தால் அதிக யாத்திரிகர்கள் தனுஷ்கோடி சென்று கடலாடிவர அதிகவாய்ப்பு ஏற்படும். அரசு கவனிக்க வேண்டிய பணி இது.

தனுஷ்கோடியில் புராதனமாக இருந்த சித்திவிநாயகர் கோயிலும் முருகன் திருவுருவும் புயலில் சேதமுறவே அவை தற்போது இராமேச்சரம் கோயிலுக்குக் கொண்டு வரப்பட்டு பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளன. இராமேச்சரம் கோயில் கீழவாசல் அனுப்பு மண்டபத்தில் மயிலுடன் வேல் கொண்டு கிழக்கு நோக்கி தனுஷ்கோடி முருகன் நின்று நமக்கு அருள் செய்கிறார். பழனித் திருப்புகழான ' உயிர்கூடு விடுமளவும்'' என்று தொடங்கும் பாடலில்,

*தமிழ்க்காழி மருதவன மறைக்காடு திருமருகல்*
*தனுக்கோடி வருகுழகர் தருவாழ்வே*

என்று அருணகிரிநாதர் இத்தனுஷ்க்கோடி முருகனை வைப்புத் தலமாக வைத்துப் பாடுகின்றார்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் விளங்குகின்றது.

# திருநெல்வேலி

1. கழுகுமலை
2. ஆய்க்குடி
3. இலஞ்சி
4. திருக்குற்றாலம்
5. பொதியமலை
6. ஸ்ரீ புருஷமங்கை
7. வள்ளியூர்
8. திருச்செந்தூர்


திருநெல்வேலி மாவட்டம்
இராமநாதபுரம்
கேரளம்
பொதியமலை
கன்னியாகுமரி
மன்னார் வளைகுடா
ஸ்ரீவைகுண்டம்
ஸ்ரீபுருடமங்கை
திருச்செந்தூர்
வள்ளியூர்
ஒட்டப்பிடாரம்
குறிப்பு

## கழுகுமலைக்குட் சிறக்க மேவிய கந்தன்

ஒங்கலணைய பெரிய சோங்கு தகரமகர
மோங்கு ததியின் முழுகும் பொருதரும்
ஒய்ந்து பிரமன் வெருவ வாய்ந்த குருகு மலையில்
ஊர்ந்து மயில துலவும் தனிவேலா
வேங்கை யடவி மறவர் ஏங்க வனிதையுருக
வேங்கை வடிவு மருவுங் குமரேசா
வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரியபொருளை
வேண்டு மளவில் உதவும் பெருமாளே

அருணகிரிநாதர் திருப்புகழ்.

திருநெல்வேலி மாவட்டம் கோவில்பட்டி வட்டத்தில் விளங்கும் கழுகுமலை கந்தவேள் விரும்பியமர்ந்த அருட்கோயிலா கும். கோயில்பட்டியிலிருந்து சங்கரன் கோயில் செல்லும் பஸ் வழியில் இத்தலம் உள்ளது. கோயில் பட்டியிலிருந்து டவுன் பஸ் உள்ளது.

கழுகாசலம், குருகுமலை, கிருத்ரகிரி என்று வழங்கும் இத்தலம் அக்காலத்தில் அரைமலை என அழைக்கப்பட்டது.

சம்பாதி (கழுகு) முனிவரால் பிரதிட்டை செய்யப்பட்டுப் பூசிக்கப்பட்ட முருகன் கோயில் இங்கே மலையில் குகைக் கோயிலாக (குடவரைத் தனிக்கோயில்) உள்ளது. ஆதலின் கழுகாசல மூர்த்தி என்று இங்கே முருகன் போற்றப் படுகிறார். இம்முருகன் கோயிலின் ஒரு பகுதியாக ஜம்புநாதரும் அகிலாண்டேசுவரியும் எழுந்தருளியுள்ளனர்.

இங்குள்ள முருகவேள் ஒரு முகமும் ஆறு கரங்களும் கொண்டு மயில் மீதமர்ந்து பொதிய மலையை நோக்கி விளங்குகின்றார். அகத்திய முனிவருக்கு முருகன் உபதேசித்ததாகத் தலமான்மியம் கூறும். மயிலின் முகம் சுவாமிக்கு இடப்புறம் உள்ளது சிறப்பு. சுவாமிக்குச் சற்று எதிரில் நின்ற கோலத்தில் இருபுறமும் வள்ளி தேவயானையம்மையார் விளங்குகின்றனர் சுவாமிக்கு எதிரே நின்று பார்த்தால் இருதேவியரும் இருப்பது தெரியாது; பக்கவாட்டில் நின்று பார்த்தால்தான் தெரியும். மூலவர் அருகில் அர்த்த மண்டபத்துவார மூர்த்தமாக சுவாமிக்கு வலப்புறம் வீரவாகு தேவரும், இடப்புறம் வீரமகேந்திரரும் கம்பீரமாகக் காட்சியருளுகின்றனர். இக்காட்சி வேறெந்தத் தலத்திலும் இல்லாத தனிச் சிறப்பாகும்.

உற்சவ மூர்த்தி ஒரு முகமும் ஆறு கரங்களும் கொண்டு வள்ளி, தெய்வயானையுடன் நின்ற திருக்கோலத்தில் உள்ளார்.

கிழக்கு வாசலருகே வடுக மூர்த்தியும் தெற்கு வாசலில் இடும்பனும் விளங்குகின்றனர்.

தினமும் நான்குகால வழிபாடு குமார தந்திர ஆகம முறைப்படி நடைபெறுகின்றது.

சஷ்டி, கார்த்திகை சிறப்பு நாட்கள்.

வைகாசி விசாகம், கந்த சஷ்டி, தைப்பூசம், பங்குனி உத்திரப் பெருவிழாக்கள் நடைபெறுகின்றன.

இரத்தினவேல், இரத்தின கிரீடம், தங்கக் கவசங்கள் பெருவிழா நாட்களில் அலங்கரிக்கப் படுகின்றன.

ஆம்பல் ஊருணியும், ஸ்கந்த புஷ்கரணி (குமார தீர்த்தம்) யும் புண்ணியப் புனல்களாகும். ஸ்கந்த புஷ்கரணியில் அப்ரக சத்து உள்ளது. இக்குள நீராடுவோர் பல நோய்களும் நீங்குவர். குளத்தில் இறங்கி யாரும் குளிக்கக் கூடாது. தனியே பாத்திரத்தில் எடுத்து வந்து வெளியில்தான் குளிக்க வேண்டும். இது இவ்வூரின் குடி தண்ணீருமாகும்.

காவடி எடுத்தல், திருமணம் செய்தல், முடிஎடுத்தல் போன்ற பிரார்த்தனைகள் சிறப்பாக நிகழ்கின்றன.

பல்லவர் காலக் கட்டிடக் கலையை இங்கே காண்கிறோம். எட்டையபுரம் சமஸ்தானமும் அறநிலைய ஆட்சித் துறையும் இக்கோயிலை நிர்வகிக்கின்றனர்.

அருணகிரி நாதர் இத்தல முருகனை மூன்று திருப்புகழ் பாக்களால் பாடிப் பரவினார். ("குதலை மொழியினார்"..., "முலையை மறைத்துத் ..", "கோங்க முகையும்"...)

இங்கு மூலவரைத் தனியே வலம்வர முடியாது. மூலவரை வலம்வர கிரிபிரதட்சிணம்தான் செய்ய வேண்டும். மயில் உயிருள்ளது போலவே முருகன் முன்பு விளங்குகின்றது.

நாயுடு, அந்தணர், ரெட்டியார் சமூகத்தினர்க்குரிய சத்திரங்களும் எட்டையபுரம் சமஸ்தான சத்திரமும் உள்ளன உணவு விடுதி கோயில்பட்டியில்தான் உள்ளது.

இவ்வூரில் வெட்டுவான் கோயிலும், சமணர் பள்ளியும் தமிழ்நாடு தொல்பொருள் ஆய்வுத் துறையின் பாதுகாப்பில் உள்ளன.

வெட்டுவான் கோயில் ஒரே கல்லால் செதுக்கப்பட்ட கோபுரத்துடன் கூடிய அழகிய அமைப்புடையது. தட்சிணா மூர்த்தி, நரசிம்மர், அழகு மங்கையர், யானைகள் போன்ற சிற்பங்கள் சிறப்பாக உள்ளன. கழுகுமலைக் கந்தனை வழிபட்ட பின் மலைமீது ஏறி இக்கோபுரத்தைக் காணலாம். கருவறையில் விநாயகர் விளங்குகிறார். சமணப் பள்ளி, மலைமீதுள்ள ஐயனார் கோயிலருகில் உள்ளது.

சென்னிகுளம் அண்ணாமலை ரெட்டியார் காவடிச் சிந்தும் இங்கு பாடப் பெறுகிறது.

சிவகிரி முருகன் கோயில் இத்தலத்திற்கருகிலுள்ளது.

## ஆய்க்குடிக் காவலன்

தென் காசியிலிருந்து மதுரை செல்லும் நெடுஞ்சாலையில் தென் காசியிலிருந்து 4 வது மைலில் கிழக்காகச் செல்லும் நாலு முக்குச் சாலையில் 3 வது மைலில் இத்தலம் உள்ளது. தென்காசி, செங்கோட்டையிலிருந்து பஸ்வசதி உள்ளது. செங்கோட்டையிலிருந்து கிழக்கில் 8 கல் தொலைவிலுள்ளது இத்தலம்.

முற்காலத்தில் ஆய் என்ற வள்ளல் ஆண்டுவந்த இடமாதலின் இவ்வூர் ஆய்க்குடி என்ற பெயர் கொண்டது என்பர்.

அனுமான் நதிக்கரையில் முருகனுக்குத் தனிக்கோயில், முருகன் கோயிலுக்குத் தெற்கில் 2 பர்லாங் தொலைவில் சிவன் கோயில் உள்ளது; காளகண்டேசுவரர், சௌந்தரநாயகி அம்மன் சந்நதிகள் அதில் உள்ளன.

முருகன் கோயிலில் பாலசுப்பிரமணியராக-குழந்தையாக கிழக்கு நோக்கி மூலவர் விளங்குகிறார். பூமியிலிருந்து மல்லன் என்பார் கண்டெடுத்த இம் முருகன் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு விளங்குகின்றார். 1941ஆம் ஆண்டு வரையில் மூலஸ்தானம் ஓலைக்குடிசையாகவே இருந்து பின்பு தற்போது விளங்கும் திருக்கோயில் எழுப்பப்பட்டுள்ளது.

உற்சவர் முத்துக்குமாரசுவாமி நின்ற கோலத்தில் மயில் வாகனத்தில் விளங்குகிறார். வீரவாகுதேவரும் விளங்குகிறார்.

தினமும் ஆறுகால வழிபாடு நிகழ்கின்றது.

வெள்ளிக்கிழமை, கார்த்திகை, விசாகம் சிறப்பானவை.

சித்திரைவிஷு, வைகாசிவிசாகம், கந்தசஷ்டி, தைப்பூசம் முதலிய விழாக்கள் நடைபெறுகின்றன.

இத்தலத்தில் படிப்பாயச நிவேதனம் சிறப்பு. இங்கே குழந்தைகளுடன் முருகனும் சேர்ந்து பாயசம் சாப்பிடுவதாகத் தலமான்மியம் கூறுகிறது. ஒரு படிமுதல் 12படி வரையில் அரிசி பாயாசம் செய்வது இங்கு பிரார்த்தனைகளில் முக்கியமான தாகும். பால்குடம், காவடிப் பிரார்த்தனைகளும் செலுத்தப் படுகின்றன.

அனுமன்நதி-புண்ணியப்புனல்; அரசமரம் தல விருட்சமாகும்.

இத்தலமுருகனை "வாழ்பட சேனைப்பட" என்ற திருப் புகழால் அருணகிரிநாதர் பரவியுள்ளார்.

தற்போது கன்னியாகுமரி தேவஸ்தானம் போர்டில் இக் கோயில் நிர்வகிக்கப்படுகிறது.

குழந்தையில்லாதவர்கள் இங்குள்ள பால முருகனிடம் விரதம் இருப்பதும், மணமாகாதவர் விரதம் இருப்பதும் இங்கு சிறப்பு.

மதுரையைச் சார்ந்த பட்டு வணிகர் ஒருவர் மகப்பேறு வேண்டி பல தலங்களையும் வழிபட்டு, ஆய்க்குடி முருகனிடமும் வந்துவேண்டிக் கொண்டார். தனக்குக் குழந்தை பிறந்தால் பாலமுருகனுக்கு அரைச் சலங்கைபண்ணி அணிவிப்பதாகப் பிரார்த்தனை செய்து கொண்டார். குழந்தையும் பிறந்தது. பல தலங்களுக்கும்செய்ய வேண்டியநேர்த்திக் கடன்களைநிறைவேற்றி விட்டார். ஆய்க்குடி பாலமுருகனுக்குரிய பிரார்த்தனையை மறந்து விட்டார் போலும். குழந்தையின் இடுப்பில் புண்வந்து வட்டமாகப் பொரிந்து கொண்டு அவதியுற்றது. தங்க அரைஞாண் சலங்கையைப் போட முடியவில்லை. மருத்துவர் பலர் முயன்றும் குணமடையவில்லை, கருணை மிக்க கந்தவேள் அவ்வணிகரின் மனைவியின் கனவில் தோன்றி 'எனக்குள்ள அரைச் சலங்கையை தந்துவிட்டுஉன் குழந்தைக்கு வேறுசெய்து கொள்' என்றருளியது கேட்டுத்தான் பத்தாண்டுகட்கு முன்பு ஆய்க்குடி முருகனிடம் வேண்டிக் கொண்டதை நிறைவேற்றத் தவறிவிட்டதை எண்ணி வருந்தி, வணிகர், குழந்தையுடன்

ஆய்க்குடிவந்து, அந்தத் தங்க அரைச் சலங்கையை முருகனுக்கு அர்ப்பணித்து வேண்டிப் பணிந்தனர். குழந்தைபுண் குணமாகி விட்டது. வருடாவருடம் படிப்பாயசம் வைக்கப் பிரார்த்தித்தும் கொண்டனர். பாலமுருகன் இவ்வாறு பக்தர்களிடம் பல அருளாடல்கள் புரிந்து வருவது கண்கூடு.

இத்தலத்திற்கருகில் இலஞ்சி, திருமலை, முருகன் கோயில்கள் உள்ளன.

இங்கு வழிபடுவோர் விடுதிகள், உணவு விடுதிகள் இல்லை.

செய்குதம்பிபாவலர் இயற்றியஆய்க்குடி முருகன்பிள்ளைத் தமிழ் இத்தல முருகன் புகழ் பாடுவதாம்.

"தாட்பட கோபவிஷ பாப்பினிற் பாலன்மிசை
சாய்த்தொடுப் பராவுநீள் கழல்தாவிச்
சாற்றுமக் கோரவுரு கூற்றுதைத் தார்மவுலி
தாழ்க்கவஜ் ராயுதனும் இமையோரும்
ஆட்படச் சாமபர மேட்டியைக் காவலிடும்
ஆய்க்குடிக் காவல உததிமீதே
ஆர்க்குமத் தானவரை வேற்கரத் தால்வரையை
ஆர்ப்பெழச் சாடவல பெருமாளே!

(வாட்படச்...திருப்புகழ்)

# தமிழ் விளங்கவரு திருஇலஞ்சி

காலன் நடுங்க வேலது கொண்டு
கானில் நடந்த முருகோனே
கான மடந்தை நாண மொழிந்து
காத லிரங்கு குமரேசா
சோலை வளைந்து சாலி விளைந்து
சூழும் இலஞ்சி . மகிழ்வோனே
சூரியன் அஞ்ச வாரியில் வந்த
சூரனை வென்ற பெருமாளே

—அருணகிரி வள்ளல்

ஏரி, குளம், மடு பொய்கை, மதில், மகிழமரம் இவை யனைத்தையும் இலஞ்சி என்ற சொல் குறிப்பிடுகின்றது. இவை யனைத்தும் ஒருதலத்தில் காணப்பெறவே அதனை இலஞ்சி என்று அழைக்கலாயினர் இத்தகையசிறப்புடைய இலஞ்சிஎன்றமுருகன் தலம் திருக்குற்ருலத்திலிருந்து 3 கி. மீ. தொலைவில் மதுரை பஸ் சாலையில்அமைந்துள்ளது. தென்காசியிலிருந்துசெங்கோட்டை—புளியரை செல்லும் பஸ்களிலும் செல்லலாம். தென்காசி செங்கோட்டை இரயில் நிலையங்களிலிருந்து 5 கி. மீ. தொலை விலுள்ளது இத்தலம்.

பொன் இலஞ்சி, தென்இலஞ்சி என்றெல்லாம் போற்றப் பெறும் இத்தலத்தை 'இலங்குதரதமிழ் விளங்கவரு திருஇலஞ்சி, இஞ்சியளாவும் இலஞ்சி,' 'இலஞ்சியில் வந்த இலஞ்சியம் என்று இலஞ்சியமர்ந்த பெருமாள்' 'சோலை வளைந்து சாலி விளைந்து சூழும் இலஞ்சி' என்று பலபட அருணகிரிநாத சுவாமிகள் போற்றிப் பரவுகின்றார்.

நான்குபுறமும் வயல்களும்சோலைகளும் சூழஅமைந்துள்ள இத்தலக் கோயிலில் சிவபெருமான் இருவாலுக ஈசன் எனவும் இறைவி மதுரவாணி (குழல் வாய் மொழி) எனவும் போற்றப் பெறுகின்றனர். இங்கே வரதராஜ குமாரர் என முருகப் பெருமான் இலஞ்சிக்குமரனாக விளங்குகின்றார்.

இப்பகுதியில் இலஞ்சி முத்துக்குமாரசுவாமி கண்கண்ட தெய்வமாக விளங்குகின்றார். மூலவர் ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு மயிலின் அருகில் நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். அருகே வேழமங்கையும் வேடமங்கையும் நிற்கின்றனர்.

உற்சவ மூர்த்தி ஒரு முழ உயரமே இருக்கிறார். தங்க வேலுடனும் தேவியருடனும் வெள்ளி மயிலிலும் குதிரையிலும் பவனி வருவது கண்கொள்ளாக் காட்சியாகும்.

தினமும் ஆறுகால பூசை நடைபெறுகின்றது. மகுடாகம முறையில் இங்கே வழிபாடு நிகழ்கின்றது. அடிக்கடி ஷண்முகார்ச்சனை, லட்சார்ச்சனைகள் நிகழ்கின்றன. வெள்ளிக் கிழமைகளில் ஏராளமானோர் வந்து வழிபடுகின்றனர்.

வைகாசி விசாகம், ஆடிக்கார்த்திகை, கந்தசஷ்டி கார்த்திகை சோமவாரம்மாசிப்பெருவிழாசிறப்புவிழாக்களாகும்.

கோயிலிலுள்ள ஒருசுனையே அபிடேகத்திற்குரிய புண்ணியப் புனலாகும். தலவிருட்சம்: மகிழமரம் (இலஞ்சி)

காசிபர், துர்வாசர், கபிலர், முதலிய முனிவர்கள் வழிபட்டதலம்இது. இவர்கள் மூவருக்குள்ளும் ஒருசமயம் முதற் கடவுள்யார் என்ற சர்ச்சை எழுந்தது. துர்வாசர் முருகப் பெருமானைவழிபட, குமரன்தோன்றி, மெய்ப்பொருள் சிவனே என்று உணர்த்தியருளினார். முனிவர்கள் மனம் தெளிந்து குமரவேளை இத்தலத்திலேயே தங்கிடவேண்டினர். அவர்களது வேண்டுகோளுக்கிசைந்து இலஞ்சி முத்துக்குமரன் விளங்கி யருளுகின்றார்.

மாதுளை விதையால் வேலும் சேவற் கொடியும் கட்டி முருகனுக்குச் சமர்ப்பிப்பது இங்கு தனிச்சிறப்பாகும். 1008 செண்பகப் பூமாலை, 108 எலுமிச்சம்பழ மாலை முதலியன முருகனுக்கு அர்ப்பணித்தலும் இங்கு வழக்கமாகும்.

இங்குள்ள வாகனங்கள் சிறப்பானவை. வெள்ளி மயில் வாகனத்தில்-மயிலின் வாயில்பாம்பும், பாம்பின் வாயில் நாக்கில் ஆடும் பச்சைக்கல்லும் கண்ணையும் கருத்தையும் கவர்வன.

தொன்மையான இத்தல முருகவேளுக்கு அருணகிரி நாதர் அர்ப்பணித்த திருப்புகழ்ப் பாக்கள் நான்கு உள்ளன பண்டாரக்கவிராயர் இங்கே பாடினர் என்பர்.

வழிபடுவோர் விடுதி, உணவு விடுதிகள் இல்லை.

இத்தலத்திற்கருகில் தென்காசி பழனியாண்டவர் கோயில் பாலமுருகன் கோயில், குலசேகரநாதர் கோயிலில் விளங்கும் குமரன் ஆகிய மூர்த்தங்கள் வழிபடற்குரியன.

அறநிலைய ஆட்சியினரால் நிர்வகிக்கப்படுகிறது இக் கோயில்.

இலஞ்சி முருகன் பிள்ளைத்தமிழ், இலஞ்சி முருகன் உலா, செவ்வேள்கலிப்பாமாலை முதலிய நூல்கள் இலஞ்சி முருகனின் கருணையை உணர்த்தும் நூல்களாகும்.

* மன்னிலஞ்சி சூழும் மலரிஞ்சியும் சூழ்ந்த
தென்னிலஞ்சி வாழும் திருக்குமரன் திருவடிபோற்றுவோம்

---

* இலஞ்சிமுருகன் உலா-74

இலஞ்சி-குளம், மகிழமரம். இலஞ்சியம்—குளத்தில் உற்பவித்தவன்.

# கோலக்குற்றாலம் உலாவிய பெருமாள்

தென்காசிக்கருகில் தென்மேற்கில் 5 கி. மீட்டர் தொலைவி லுள்ள திருக்குற்றாலத்தை அறியாதவர் யார்! மதுரை, ஸ்ரீவில்லிபுத்தூர், இராஜபாளையம், தென்காசி, சிவகிரி, புளியங்குடி, திருநெல்வேலி, திருச்செந்தூர், அம்பாசமுத்திரம், நாகர்கோயில், பாபநாசம், செங்கோட்டை முதலிய நகரங்களி லிருந்து இத்தலத்திற்கு பஸ்கள் உள்ளன.

தென்காசி இரயில் நிலையத்திலிருந்தும் பஸ்வசதி உள்ளது.

மதுஉண்டான் உயிர்மீட்டபுரம். பிதிர்கண்டம்தீர்த்த புரம், வேழம்பசித்தபுரம், வேடன்வலம்செய்தபுரம், சிவத் துரோகம்தீர்த்தபுரம், வசந்தப்பேரூர், கங்கைவந்தபுரம், நதி மூன்றில்மாநகரம், முனிக்குருகும்பேரூர், குறும்பலா, வேதசக்தி படபுரம், ஞானப்பாக்கம், நன்னகரம், திருநகரம், விசேடபுரம், சிவமுந்தபுரம், முத்துவேலி, புடார்சுனபுரம், தேவகூடபுரம் முதலிய சிறப்புப்பெயர்களையுடைய இத்தலம் திரிகூடாசலம், திரிகூடமலை எனவும் போற்றப்பெறுகிறது. இம்மலையின் உச்சியில் மூன்று சிகரங்கள் உள்ளதால் திரிகூடமலை எனப்பேர் வந்தது.

இங்கே ஆதியில் திருமால் கோயிலாக இருந்தது. அகத்தியர் முருகனருளால் இத்திருமாலைச் சிவனுக்கிவிட்டார். ஆதலால் இலஞ்சிக்குமரனின்றி இங்கு எந்தத்திருவிழாவும் செய்வதில்லை. இங்கே சிவபெருமான் குற்றாலநாதர் எனவும், இறைவி குழல்வாய்மொழி எனவும் போற்றப்பெறுகிறார்கள்.

இத்தல முருகன் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் பின்புறம் மயில் விளங்க வள்ளி,

தேவயானையுடன் கிழக்குநோக்கி விளங்குகின்றார். முருகனுக்கு முன்பு காசிவிசுவநாதரும்விசாலாட்சியும் எழுந்தருளியுள்ளனர்.

உற்சவமுருகன் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு, வள்ளி, தெய்வயானையுடன் விளங்குகின்றார்.

மகுடாகமப்படி தினமும் மூன்றுகால வழிபாடு நிகழ்கிறது.

கந்தசஷ்டிப்பெருவிழாச் சிறப்பாக நடைப்பெறுகிறது.

தீர்த்தம்: வடஅருவி, தலவிருட்சம்: குறும்பலா இதற்கு திருஞானசம்பந்தர் தனியே பதிகம் பாடியுள்ளார்.

அகத்தியர், அர்ஜுனன், கபிலர், பட்டினத்தார் பரவிய தலம் இது.

நடராஜரின் ஐந்துசபைகளுள் ஒன்றான சித்திரசபை இது.

இத்தலத்துமுருகனை அருணகிரிநாதர் 3 திருப்புகழ்ப் பாக்களில்பரவினார் ("ஏடுக்கொத்தாரலர்,"..., "வேதத்திற் கேள்வி"..., "முத்தோலைத்"....)

திரிகூடராசப்பக்கவிராயர் இயற்றிய திருக்குற்றாலத்தல புராணம் (2070 பாடல்கள்). திருக்குற்றாலக்குறவஞ்சி, திருக்குற்றாலயமகவந்தாதி, திருக்குற்றாலநாதர்உலா, திருக் குற்றால சிலேடைவெண்பா, திருக்குற்றாலமாலை, திருக்குற்றாலக் கோவை, திருக்குற்றாலஊடல், திருக்குற்றாலப்பரம்பொருள் மாலை, குழல்வாய்மொழி கலிப்பா, கோமளமாலை, வெண்பா அந்தாதி, பிள்ளைத்தமிழ், நன்னகர்வெண்பா ஆகிய 14 நூல்களும் சொக்கன்பட்டியமைச்சர் பிச்சைப்பிள்ளை இயற்றிய திருக் குற்றால அந்தாதியும் இத்தல சம்பந்தமான நூல்களாகும்.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்திலுள்ள இத் தலத்தில் வழிபடுவோர் விடுதிகளும் உணவு விடுதிகளும் உள்ளன.

இலஞ்சி: 3 கி. மீ. தொலைவிலும், திருமலை: 15 கி. மீ. தொலைவிலும் உள்ளன.

ஊமையினைப்பேசவைத்த பராசக்தி பீடம் இங்குள்ளது.

ஜூன் முதல் செப்டம்பர் வரை குற்றாலசீசன் என்று சுற்றுலாப்பயணிகள் இங்கே வந்து நீராடி வழிபடுவர். மார்கழி யில் சபரிமலை பக்தர்கள் இங்கே வழிபட்டுச்செல்வர்.

இத்தலச்சிற்பச்சிறப்புகள்மிகுதி. கோயில் சங்குவடிவிலும் சிகரம் சக்கரவடிவிலும் இருப்பது. முன்பு இது திருமால் தலம் என்பதைக்காட்டும். மார்கழி திருவாதிரை 10 நாட்களிலும் தாண்டவ தீபாராதனை வழிபடவேண்டியதொன்று.

"கூடற்கச் சாலைசிராமலை
காவைப் பொற்காழிவெ ணூர்திகழ்
கோடைக் கச்சூர் கருவூரிலும் உயர்வான
கோதிற்பத் தாரொடு மாதவ
சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக் குற்றால முலாவிய பெருமாளே'

(ஏடுக்கொத்....)

"கோதைப் பித்தாயொரு வேடுவ
ருபைப் பெற்றேவன வேடுவர்
கூடத்துக்கே குடியாய்வரு முருகோனே
கோதிற் பத்தாரொடு மாதவ
சீலச்சித் தாதியர் சூழ்தரு
கோலக்குற்றால முலாவிய பெருமாளே"

(வேதந்திற்...)

"கொத்தார் கதலிப் பழக்குலை
வித்தார வருக்கை யிற்சுளை
கொத்தோடு திரக்குதித்தெழு கயலாரங்
கொட்டா சுழியிற் கொழித்தெறி
சிற்றாறு துனிற் களித்திடு
குற்றாலரிடத்தி லுற்றருள் பெருமாளே!

(முத்தேரவ—)

தீக்கு மிக்க வாளி யூடு
புக்கவிக்க மூடு சூர்
திக்குமுட்டி யாடுதீர வடிவேலா
செச்சை பிச்சிமாலை மார்ப
விச்சை கொச்சை மாதினோடு
செப்பு வெற்பில் சேயதான பெருமானே
(மைக்கணிக்கண்... திருப்புகழ்)

# செப்பு வெற்பின் சேய்

அம்பாசமுத்திரம் வட்டத்தில் பழைய பாவநாசம் என்றழைக்கப்படும் இத்தலம் பொதியமலை, பாவநாசம் எனவும் போற்றப்படும், அம்பாசமுத்திரத்திலிருந்து 7 கல் தொலைவிலுள்ளது இத்தலம். இங்கே முருகனுக்குத் தனிக்கோயில் உள்ளது. அகத்தியரும் கோயில் கொண்டு விளங்குகிறார். மலையடிவாரத்தில் கோயில் அமைந்திருக்கிறது.

முருகப்பெருமான் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் வள்ளி தெய்வயானையுடன் கிழக்கு நோக்கி எழுந்தருளியுள்ளார்.

தினமும் 3 கால வழிபாடு காரணாகமமுறையில் நடைபெறுகிறது.

மாதக்கார்த்திகை, மாதக்கடைசிவெள்ளி சிறப்பான நாட்களாகும்.

கார்த்திகைவிழா, கந்தசஷ்டி சிறப்பு.

கல்யாணதீர்த்தம் என்ற புண்ணியப்புனல் உள்ளது. இத்தலத்தைக் கல்லாடம் "செப்புவெற்பு" என்று குறிப்பிடும். அருணகிரிநாதரும் இத்தலத்தை 'செப்புவெற்பு' என்றே பாடுகிறார். இத்தலத்திற்கு 'மைக்கணிக்'... 'வெடித்தவார்'... என்ற இரு திருப்புகழ்ப்பாடல்கள் உள்ளன.

அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்தில் இக்கோயில் உள்ளன. தங்குவதற்கு விடுதிகள் உள்ளன.

... ... ... உம்பராரை
அடைத்த மாசிறை விடுத்து வானுல
களிக்கு மாயிர திருக்கணாயர
களித்து நாளுமென் உளத்திலே மகிழுங்குமாரா
அளித்த தாதையு மிகுந்த மாமனும்
அனைத்து ளோர்களும் மதிக்கவே மகிழ்
அகத்யமாமுனி பொருப்பின் மேவிய பெருமாளே!
(வெடித்தவார்... திருப்புகழ்)

வானவர் புகழ்ந்த கானவர் பயந்த
மானொடு விளங்கு மணிமார்பா
மாமறை முழங்கு ஸ்ரீ புருடமங்கை
மாநகரமர்ந்த பெருமாளே!

# மாமறை முழங்கு ஸ்ரீ புருடமங்கை

திருநெல்வேலி மாவட்டம்-நாங்குனேரி நகரிலுள்ள திருக் கோயில் ஸ்ரீ புருஷமங்கை என்று அழைக்கப் படுகின்றது. திருநெல்வேலியிலிருந்து பஸ் வசதி உள்ளது. வானமாமலை, தோதாத்திரி என்ற பெயர்களும் இதற்கு உண்டு. இங்குள்ள சிவாலயம் வானமாமலைப் பெருமாள் கோயிலின் உப ஆலயமாக விளங்குகின்றது.

சிவபெருமான்: திருநாகேசுவரர். இறைவி; சிவகாமி அம்மாள்.

இவ்வூரில் நான்கு புறமும் ஏரிகள் இருந்தமையால் நான்கு நகர் ஏரி என ஆகி நான்குனேரி என மருவி வந்தது என்பர்.

மூலவர் முருகன் ஒரு முகமும் நான்கு கரங்களும் உடையவர்; மயிலுடன் நின்ற திருக்கோலத்தில் வேழ மங்கை யும் வேட மங்கையும் உடன் விளங்குபவர். கிழக்கு நோக்கிய சந்நிதி.

உற்சவ முருகனும் மூலவர் போன்றே விளங்குகிறார். தினமும் 4 கால வழிபாடு. காமிகாகம முறையில் நடைபெறு கிறது. கோவில் முன்பு திருக்குளம் உள்ளது.

மாத விசாகம், கார்த்திகை சிறப்பாக உள்ளது.

வைகாசி விசாகம், கந்த சஷ்டிப் பெருவிழா மிகச் சிறப் பாக நடைபெறுகிறது.

அருணகிரி நாதர் அருளிய "ஆடல்மத", "கார்குழல்" "வேலின்மத" என்னும் 3 திருப்புகழ்ப் பாக்கள் கொண்டது

இத்தலம் வேனின் மதனைந்து என்னும் இத்தலத் திருப்புகழில் மாமறை முழங்கு ஸ்ரீ புருடமங்கை என்பதால்

"தெருள்கொள் நான்மறை வல்லவர் பலர் வாழ் சிரீவர மங்கலநகர்", "வேத வேள்வியருச் சிரீவர மங்கலநகர்", "திரு நான்மறை வல்லவர் மலி தண் சிரீவர மங்கை" என்னும் திருவாய் மொழிப் பகுதிகள் நினைவிற்கு வருகின்றன.

இத்தலத்தில் வானமாமலைப் பெருமாள் மூலவரும் முருகவேளைப் போன்று அழகொழுகத் திகழ்கிறார்.

வானமாமலை ஜீயர் மடத்தின் நிர்வாகத்தில் இத்தலம் உள்ளது. அருகிலுள்ள வள்ளியூர் முருகன் தலமாகும்.

உணவு விடுதி உள்ளது தங்கும் விடுதிகள் இல்லை

"சேடன் முடியுங் கலங்கிட
வாடைமுழு தும்பரந் தெழு
தேவர்கள் மகிழ்ந்து பொங்கிட நடமாடுஞ்
சீர்மயில மஞ்சு துஞ்சிய
சோலைவளர் செம்பொனுந்திய
ஸ்ரீ புருட மங்கை தங்கிய பெருமானே.

—(சேடன்முத...)

# வள்ளியூர் வள்ளல்

அல்லில் நேருமி னதுதானும்
அல்லதாகிய உடல்மாயை
கல்லி னேரஅ வழிதோறுங்
கையு நானுமு லையலாமோ
சொல்லி நேர்படு முதுசூர்
தொய்ய ஓர்கெட விடும்வேலா
வல்லிமாரிரு புறமாக
வள்ளியூருறை பெருமாளே

—அருணகிரிநாதர்.

நான்குநேரி வட்டத்தில் உள்ள வள்ளியூர் வள்ளி மணாளனுக்கு உகந்ததோர் தலமாகும். இங்கே மலையடிவாரத்தில் மலைக்குகையில் முருகன் விளங்குகின்றார் அனந்த கல்யாண சுப்பிரமணியர் என்று இங்கு முருகன் வழிபடப் பெறுகிறார். இக்கோயிலில் மேற்கு நோக்கி சிவனும் உமையும் விளங்குகின்றனர்: ஜெயந்தீசுவரர், சௌந்தரிய நாயகி.

முருகன் தந்தைக்கு உபதேசம் செய்த திருக்கோலத்தை இங்கே காண்கிறோம்.

ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு உத்திராட்சம் பூண்டு, நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி முருகன் விளங்குகிறார். வள்ளி. தெய்வயானை உடன் விளங்குகின்றனர். வள்ளிநாயகிக்குத் தனிக்கோயில் உள்ளது.

உற்சவ முருகன் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இரு தேவியர் சூழ விளங்குகிறார். வள்ளிக்குத் தனி உற்சவ மூர்த்தி உள்ளது.

தினமும் 6 கால வழிபாடு நிகழ்கின்றது. இங்கு படிப் பாயசம் நிவேதனச் சிறப்பு.

பிரார்த்தனைத் தலம் இது.

சித்திரைப் பெருவிழா, கந்த சஷ்டி விழாக்கள் சிறப்பாக நடைபெறுகின்றன.

சரவணப் பொய்கையும், தெப்பக்குளமும் புண்ணியப் புனல்களாகும் படிப்பாயாசம் வைத்துச் சரவணப் பொய்கை படித்துறையில் குழந்தைகளுக்கு அளிப்பர்.

அகத்தியர் வழிபட்ட இத்தலத்தை அருணகிரிநாதர் திருப்புகழ் பாடிப் பரவியுள்ளார். இக்காலத்தில் கவிஞர் ஜயந்திசுவரன் பாடிய திருப்பள்ளி எழுச்சி அச்சாகியுள்ளது.

தொன்மையான கோயில். பல கட்டளைகள் உள்ளன. அவற்றுள் திருவாவடுதுறையாதீனக் கட்டளையும் உண்டு. தல புராணம் இருப்பதாகக் கூறுவர்.

உணவு விடுதி, தங்கும் விடுதி இல்லை.

அருகில் திருப்புருடமங்கை (நான்குனேரி) முருகன் தலம் உள்ளது.

அறநிலைய ஆட்சித்துறையால் இத்தலம் நிர்வாகம் செய்யப்படுகிறது.

இத்தலத்தருகே சொக்கநாதர் கோயில், சுந்தர பரிபூரணப் பெருமாள் கோயில், பணகுடி ராமலிங்க சுவாமி கோயில் முதலியன உள்ளன.

"வரம்பலதரும் வள்ளியூர் முருகப் பெருமான்" வான் கருணையால் வையம் வளம்பெற வாழ்த்துவோம்.

# சிந்தை மகிழ அன்பர் புகழும் செந்தில்

*இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி*
*இரவுபகல் மனது சிந்தித் துழலாதே*
*உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி*
*உனையெனது ளறியு மன்பைத் தருள்வாயே*
*மயில் தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்*
*வசனகுற மகளை வந்தித் தணைவோனே*
*கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே*
*கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே.*

(அருணகிரிநாதர் திருப்புகழ்)

திருநெல்வேலிக்குத் தென்கிழக்கில் 36 கல்தொலைவிலுள்ள இத்தலத்தினைத் திருநெல்வேலியிலிருந்து இருப்புப் பாதை வழியாகவும், பஸ் மூலமாகவும் அடையலாம். முருக பக்தர்கள் திருச்செந்தூரை உணர்ந்து உணர்ந்து பேரின்பமுறுவர்.

ஆறுமுகன் உவந்து வீற்றருளும் இரண்டாவது படைவீடாகிய இத்தலம் திருச்சீரலைவாய், ஜெயந்திபுரம், செந்தில் கந்தமாதனம், காந்தமலை என்றெல்லாம் போற்றப்பெறுகின்றது. "நம் செந்தில் மேய வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்" என்று உரிமையுடன் உவந்து போற்றுவார் திருநாவுக்கரசு சுவாமிகள். ஆதிசங்கரர் சுப்பிரமணிய புஜங்கத்தினால் துதித்துப் போற்றிய தலம் இது. சங்கப் புலவர்கள் போற்றிய பதி இது.

சிறப்பு மிக்க அலைகள் முருகன் திருவடியில் வந்து வருடுவதால் திருச்சீரலைவாய் எனவும், சூரபன்மனை வெற்றி கொண்ட இடமாதலின் ஜயந்திபுரம் எனவும், சிந்து—கடல்; கடல் உள்ள ஊராதலின் செந்தில், திருச்செந்தூர் எனவும், போற்றப் பெறுவதாயிற்று.

"தாழ்நீள் வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில் நெடுவேள்" என்று மருதன் இளநாகனாரும் (புறநானூறு)

"சீர்கெழு செந்தில்" இன்று சிலம்பொலித்த இளங்கோவடிகளும், நக்கீரர் திருமுருகாற்றுப் படையும் பரவிடும் இத்தலம் அருணகிரிநாதரை அழைத்ததில் வியப்பேது! செந்திலாண்டவனை காணாத கண், கேளாத செவி, பாடாத வாய், வலம் வராத கால், நினையாத நெஞ்சம், பெற்றவரும் மண்ணுலகில் உளரோ!

*பாடாத நாவும் பணியாத சென்னியும் பாவித்தன்பால்*
*நாடாத உள்ளமும் நான்படைத்தால் நரகேழுஞ்சென்று*
*கூடாதுயர்கதி கூடவேறு குன்றெறிந்த வைவேல்*
*சேடார்மதிழ் செந்திலாய் என்கொலோ நின்திருவருளே.*

(திருச்செந்திற் கலம்பகம்: சுவாமிநாத தேசிகர்)

இத்தகு தலங்காணத் தமிழராய்ப் பிறக்க-நாம் முன்னைய பிறவிகளில் எத்தகு தவம் இயற்றியிருக்க வேண்டும்! இத்திருத் தலத்தை அருணகிரி வள்ளல் கண்குளிர-உள்ளங் குளிரக் கண்டார்: தோள் குளிரத் தொழுதார்; கடற்கரையோரத்தில் திருக்கோயில் பொலியும் அழகினைக் கண்டார்; ஆனந்தங் கொண்டார்; ஊரின் அழகையும், கோயிலின் வனப்பையும் தலத்தின் பெருமையையும் "ஜலநிதி தழுவு செந்தில்", "செஞ்சொற் புலவர்க்கு அன்புற்ற திருச்செந்தில்", "திருவளர் செந்தூர்", "தென்திசைத் தென்றல் வீசும் பொழிற் செந்தில்" "முத்துலவு வேலை நகர்", "மனோகர செந்தில்", "கயிலை மலையனைய செந்திற்பதி", "முன்றிலின்புறம் அலைபொருத செந்தில்", "தெருவிலேயு நித்தி லமெறி அலைவாய்", "சம்புபுகழ் செந்தில்", "வாரிதி நீர் பரந்த சீரலைவாய்", "செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ் தெரி செந்திற்பதி", "சுந்தரமான செந்தில்" எனப் பலவாறு புகழ்ந்தார்.

அருணகிரி நாதர் இத்தலத்தில் திருவடி தீட்சை தர வேண்டுமென்று செந்திலாண்டவனை வேண்டிப் பாடினர். பழனிக்கு அடுத்தபடியாகத் திருச்செந்தூருக்குத்தான் பாடல்கள் அதிகம். (83 பாடல்கள்)

நினைத்தால் முத்தியளிக்கும் தலமாகியதிருஅண்ணாமலையைப் போலவே திருச்செந்தூரும் தன்னைக் கருதுவார்க்கு முத்தியளிக்கும் எவ்வாறெனில் திருஅண்ணாமலைத் தலம் 'யான்பரம் என ஆணவங் கொண்ட பிரமவிஷ்ணுக்களுக்கு எட்டாத தலமாதலால் அது ஆணவம் அற்றோர்க்கே சிவம் விளங்கும் என்பதைக் குறிப்பாற் காட்டி ஆன்மாக்களை உய்விக்கின்றது. அதுபோன்றே திருச்செந்தூர்த் தலமும்-அலைகள் மோதி ஓயுங் கடற்கரையில் உள்ள தலமாதலின் (புறத்தே அலை ஓயும் இடத்தில் முருகன் திருக்கோயில் கொண்டுள்ளது போல்) அகத்தே எங்கு எப்போது மனஅலை ஓய்கின்றதோ அங்கு அப்போது ஜோதி முருகன் விளங்கிக் கோயில் கொள்வான் என்பதைப் புலப்படுத்துகின்றது.

இக்காரணம் பற்றியே அருணகிரிநாத சுவாமிகளும் "செந்திலை உணர்ந்து உணர்ந்து உணர்வுற" என்றும், "செந்தில் என்று அவிழ உளம் உருகி வரும் அன்பிலன்" என்றும், "திருச் செந்திலை உரைத்து உய்ந்திட" என்றும், கந்தரந்தாதியில் "செந்தூர எண்ணத் தெளிதருமே" "செந்தூர் கருது" என்றும் உபதேசித்துள்ளார்.

திருச்செந்திலாண்டவன் பாலசுப்பிரமணியனாக ஒருமுகமும் நான்கு திருக்கரங்களுங் கொண்டு நின்ற திருக்கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார்.

உற்சவ மூர்த்தியான ஷண்முகர்–ஆறுமுகப் பெருமான் பன்னிரு கரங்களுடன் வள்ளி தெய்வயானையம்மையார் உடன் விளங்க நின்ற திருக்கோலத்தில் விளங்குகின்றார். வீரவாகு தேவரைத் தூது விட்டதலமாதலின் வீரவாகு, வீரமகேந்திரர் சந்நிதிகள் உள்ளன.

சிவபெருமான் ஜயந்தி நாதராக விளங்குகிறார். உமை விநாயகர் திருமால் சந்நிதிகள் உள்ளன.

நாளென் செயும்? கோள் என்செயும்? குமரேசர் இரு தாளும் தண்டையும் சண்முகமும் தோளும் கடம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே? என்ற அருணகிரியார் வாக்கிற்கிணங்க இங்கே நவக்கிரக சந்நிதி இல்லை.

மூலவருக்குக் குமார தந்திர முறையிலும், உற்சவர் ஷண்முகருக்குச் சிவாகம முறையிலும் தினசரி வழிபாடுகள் நிகழ்கின்றன. தினமும் 9 கால வழிபாடு நிகழ்கின்றது. காலை 5 மணி முதல் முற்பகல் 12 மணி வரையிலும் பிற்பகல் 5 மணி முதல் இரவு 10–30 மணி வரையிலும் இக்கோயிலில் வழிபடலாம். மார்கழி மாதத்தில் காலை 3 மணி முதல் 8–30 மணி வரையிலும் மாலை 3 மணி முதல் இரவு 8–30 மணி வரையிலும் கோயில் திறந்திருக்கும்.

நாழிக் கிணறு (ஸ்கந்த புஷ்கரணி), சமுத்திரம் (வதனாரம்பம்) ஆகிய இரண்டும் இங்குள்ள புண்ணியப் புனல்களாகும்.

மாதக் கார்த்திகை, சஷ்டி, விசாகம் முக்கியமானவை.

வைகாசி விசாகம், ஆவணித்திருவிழா, கந்தசஷ்டி, மாசிப்பெருவிழா, முக்கிய திருவிழாக்களாகும்.

சாதாரண உற்சவ நாட்களில் குமார விடங்கர், ஜயந்திநாதர், அலைவாயமர்ந்த பெருமான் ஆகியோர் வீதி உலா வருவார். ஆவணிப் பெருவிழாவிலும் மாசிப் பெருவிழாவிலும் 7-ஆம் நாள் மட்டும் ஷண்முகர் வீதி உலா வருவர்.

ஆவணி மற்றும் மாசிப்பெருவிழாக்களில் அலங்கார விவரம் பின் வருமாறு:

| காட்சி | மலர் ஆடை | கோலம் | தொழில் | முகம் |
|---|---|---|---|---|
| 1. உருகு பலகைக் காட்சி | மஞ்சள் மலர் பட்டாடை | நான்முகன் | ஆக்கல்தொழில் | சத்யோஜாதம் |
| 2. வெட்டி வேர்ச் சப்பரம் | நீல மலர் நீல ஆடை | திருமால் | காத்தல் | வாமதேவம் |
| 3. நடராஜர் அலங்காரம் தங்கச்சப்பரம் | சிவப்புமலர் சிவப்புப்பட்டு | அரன் | அழித்தல் | அகோரம் |
| 4. வெள்ளைச் சப்பரம் | வெள்ளைமாலை வெண்பட்டு | மகேசன் | மறைத்தல் | தத்புருஷம் |
| 5. பச்சைச் சப்பரம் (8-ஆம் நாள் அதிகாலை விடியும்போது) | பச்சைசாத்தி பச்சைப்பட்டு | சதாசிவன் | அருளல் | ஈசனம் |

குமரவிடங்கப்பெருமான்:

செந்திலில் விளங்கும் இவரை ஆறுமுகப்பெருமானின் பிரதி பிம்பம் எனலாம். இவரை வில்லேந்திய வேலன் என அழைப்பாரும் உளர். வலக்கரங்களுள் முன் கையில் அம்பும் பின்கையில் சக்தி வேலும், இடக்கரங்களில் முன்கை வில்லும் பின்கை வச்சிரப்படையும் கொண்டு இப்பெருமான் திகழ்கிறார். வள்ளி, தெய்வானையம்மை திருமணங்கட்கு இவர் எழுந்தருளுவதால் இவரை மாப்பிள்ளைச்சாமி என்றழைப்பர். இத்திரு உருவம் கி. பி. 1623க்குப் பின்னரே அமைந்திருக்க வேண்டும் என்பர். முன்பிருந்த குமரவிடங்கர் சிலையை கி. பி. 1648-இல் கொள்ளையிட்ட உலாந்தர்கள் பூம்புகார்க் கடற்கரையில் போட்டுவிட்டனர். காவிரிப்பூம்பட்டினத் தருகிலுள்ள திருச் சாய்க்காட்டில் அத்திருவுருவம் 'திருச்செந்திலாண்டவன்' என்னும் பெயரோடு இன்றும் அங்கே விளங்குகிறது. (ஆதாரம்: திருச்செந்தூர் முருகன் கோயில் வரலாறு-டாக்டர் ந. கல்யாணசுந்தரம். M. A. Ph. D.)

அலைவாயு கந்தபெருமான்:

ஆதியில் அமைந்த மூலவரின் பிரதிபிம்பமான இவர் உற்சவமூர்த்தியாய்த் திகழ்கிறார். தற்போதுள்ள மூலவரின் மாறுபட்ட அமைப்புடையவர். (கி. பி. 1648-உலாந்தர்களால் சிதைக்கப்பெற்ற மூலவர் தோற்றம் இவர் போன்று இருந்திருக்கக் கூடும்) இவரது வலக்கரங்களில் முன்கையில் அபய முத்திரையும் பின்கையில் சத்தியாயுதமும், இடக்கரங்களில் முன் கையில் வரத முத்திரையும், பின் கையில் வச்சிரப் படையும் உள்ளன. மூலவருக்குப் பக்கத்தில் நாச்சிமார் இல்லாதது போலவே இவருக்கும் தேவியர் இல்லை. இவரைத் தோழன் சாமி என அழைப்பர்.

கந்தபுராண அடிப்படையில் இப்போதுள்ள மூலவர் திருவுருவம் அமைக்கப் பெற்ற பின்னரே அலைவாயுகந்த பெருமான் சிலை உலாந்தரிடமிருந்து மீட்கப் பெற்றிருக்கலாம். இவரது தோற்றம் மூலவர் சிலாவுருவினின்றும் மாறுபட்டிருந்ததால் ஜெயந்தி நாதர் திருவடிவம் செய்யப்பட்டிருக்கலாம்.

அலைவாயுகந்தபெருமான் நவராத்திரி விழாவில் நாளொரு கோலம் கொள்கிறார். பரிவேட்டை, சிறுத்தொண்டர் திருநாள், தைப்புனர்ப்பூசம், பூச நாட்களில் இவர் எழுந்தருளுவார்,

"விறல்மாறன்", "விதிபோலு" எனத்தொடங்கும் இரு திருப்புகழ்ப் பாக்களும் அலைவாயுகந்தபெருமாளே என முடிவதால் அவை இரண்டும் இப்பெருமானையே அருணகிரிநாதர் போற்றிப்பாடியவை எனக் கருதலாம்.

இத்தலப்பெருமானைப் பல அருளாளர்கள் பரவி அருள் பெற்ற நூல்கள் பல உள்ளன.

நக்கீரர் : திருமுருகாற்றுப்படை 78-125 வரிகள்.

அருணகிரிநாதர்: திருப்புகழ் 83 பாடல்கள்
திருச்செந்தில் வகுப்பு
கந்தரந்தாதி 26 பாடல்கள்
கந்தரலங்காரம் 5 பாடல்கள்

குமரகுருபரர் : ஐந்து வயது வரையில் ஊமையாயிருந்து செந்திலாண்டவன் சந்நிதியில் பேசிய முதற் பேச்சுதான் – கந்தர் கலிவெண்பா.

பகழிக்கூத்தர் : வைணவராயிருந்த இவர் தனது வயிற்றுவலி நீங்கப்பாடியநூல்: திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ்: சிறைவிடு அந்தாதி.

வென்றிமாலைக்கவிராயர் : திருச்செந்தூர்ப் புராணம்

சுவாமிநாததேசிகர் : திருச்செந்தில் கலம்பகம்.

திருச்சிற்றம்பலநாடிகள் : திருச்செந்தூர் அகவல்.

அண்ணாமலைரெட்டியார் : காவடிச்சிந்து

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் : திருச்செந்தூர்ப் பிரபந்தம்
திருச்செந்தூர் வள்ளிநாயகி பிள்ளைத்தமிழ்

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் : திருச்செந்தூர் நிரோட்டக யமகஅந்தாதி.

ஸ்ரீ தாலங்குறிச்சி கந்தசாமிப்
புலவர் : திருச்செந்தூர் நொண்டி நாடகம்.

பாம்பன் குமரகுருதாச சுவாமிகள்: பஞ்சாமிர்த வண்ணம்; இது செந்திலாண்டவனே உவந்து கேட்டு ஒருமுதிய அம்மையாரிடம் இதை ராகத்துடன் பாடும்படி கூறியது.

தேவராய சுவாமிகள் : கந்தர் சஷ்டிக்கவசம்.

## அருணகிரிநாதரும் திருச்செந்திலும்

அருணகிரிநாதர் செந்திலாண்டவன் திருவடி இன்ப வெள்ளத்தில் திளைத்துப் பல நாட்கள் தங்கி வழிபட்டிருக்க வேண்டும் என்று அவரது திருப்புகழ்ப் பாக்கள் புலப் படுத்துகின்றன.

என்னையும் ஒரு பொருளாக எண்ணி ஈடேறவைத்த பெருமானே! உன் திருப்புகழையே நான் பாடவும் என் நாட்கள் எல்லாம் பயன்படவும் அருள்வாய்!

*"என்றனை ஈடேற வாழ்வருள் பெருமாளே,*
*நமோ-நம—என நாளும் உன்புகழே பாடி நான் இனி*
*அன்புடன் ஆசார பூசை செய்து உய்ந்திட*
*வீணாள் படாதருள் புரிவாயே"* (கொம்பனை)

என வேண்டினார்.

'அடியேற்கு யோக மார்க்கங்களையெல்லாம் உபதேசித்த தேசிக மூர்த்தியே!' (யோகத்தாறு உபதேசத் தேசிக) எனவும், சகலகலா வல்லவனாகிய முருகவேளின் முன் ஏனைத் தேவர்கள் எல்லாரும் ஊமர்கள் (ஊமைத் தேவர்கள் தம்பிரானே) எனவும் துதித்து வாழ்த்தினர். (சேமக்......திருப்புகழ்.)

மெய்யடியார்கள் வாழும் இடத்தைத் தேடிவந்து அவர்களுடன் எம்பெருமான் விளையாடுவார் என்று குறிக்க,

*மாசிலடியார்கள் வாழ்கின்ற ஊர் சென்று*
*தேடி விளையாடியே யங்ஙனே நின்று*
*வாழ மயில்கள் வீரனே செந்தில் வாழ்கின்ற*
*பெருமாளே* (முளும்வினை...)

என்று போற்றினர்.



இலஞ்சி

இலஞ்சியில் வந்த இலஞ்சியம் என்று
இலஞ்சி அமர்ந்த பெருமானே
விளங்கு கடம்பு விழைத்தணி தண்டை
விதங்கொள் சதங்கை யடிதாராய்.



**அலைவாயு கந்தபெருமான் (திருச்செந்தூர்)**

அறிவால் அறிந்துன் இருதாள் இறைஞ்சும்
அடியார் இடைஞ்சல் களைவோனே
அழகான செம்பொன் மயில்மேல் அமர்ந்து
**அலைவாய் உகந்த பெருமானே.**

**(வீரமாறன்......திருச்செந்தூர்)**



**குமரவிடங்கர் (திருச்செந்தூர்)**

விருதணி மரகத மயில்வரு குமரவி
டங்க பெருமானே
நினதிரு வடிமலர் இணைமன தினில்உற
நின்பற் றடைவேனே.

(கொம்பமத திருச்செந்தூர்)



**காவிரிபூம்பட்டினம் (பல்லவனீஸ்வரம்)**

..............................திருவான
சங்கரி மனங் குழைந்துருக முத்
தந்தர வருஞ் செழுந் தளர்நடைச்
சந்ததிச கந்தொழும் சரவணப் பெருமானே.

(அந்தகன் வரும்............)

நன்றி: *French Institute of Indology, Pondicherry.*

"ஆறு திரு எழுத்தும் கூறு நிலைகண்டு
நின்தாள் புகழுநர் கண்ணுட்பொலிந்தோய்"

எனக் கல்லாடம் கூறியது போல, அருணகிரிநாதரும் இத்தலத்தில்,

எந்தனுளேக செஞ்சுடராகி என் கணிலாடு
தழல்வேணி எந்தையர்

என்று கூறுவது ஓர் அனுபவ உண்மையைக் காட்டுகின்றது.

அருணகிரிநாதர் செந்திலாண்டவரை நித்தம் தரிசித்து அருமையான பலவித சந்தச்செந்தமிழாற் போற்றி மகிழ்ந்து இன்புற்றுத் திளைத்திருக்கும் நாளில்-ஒருநாள்,

"தஞ்சந் தஞ்சஞ் சிறியேன் மதி கொஞ்சங் கொஞ்சந்
துரையே யருள் தந்தென்றின்பந்தரு வீடது தருவாயே"

என்றும்,

"மெய்ச்சிந்தை வர என்று நின் தெரிசனைப் படுவேனோ"

என்றும் இரங்கி வேண்டினார்.

"வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்ட வெருதுதவு பெருமாள்" ஆகிய கந்தவேள் தமது மணங்கமழ் தெய்வத்திள நலங்காட்டி, அருணகிரி வள்ளலின் எதிரே குழந்தைத் திருக் கோலத்துடன் கொஞ்சிக் கொஞ்சி நடன தரிசனம் அருளினார். ("செந்திலிலும் என்றன் முன் கொஞ்சிநடனங் கொளும் கந்தவேளே") இவ்வழகிய நடனத்தைக் கண்ட அருணகிரி வள்ளல்,

தண்டையணி வெண்டையம் கிண்கிணி சதங்கையும்
தண்கழல் சிலம்புடன் கொஞ்சவே
கடம்புடன் சந்த மகுடங்களும் கஞ்சமலர் செங்கையும்
சிந்துவேலும் கணகளும் முகங்களும்
சந்திர நிறங்களும் கண்குளிர என்றன் முன்சந்தியாவோ!

முருகா! கடம்பும், மகுடமும், செங்கையும், வேலும், ஆறுமுகமும், பன்னிருகண்ணும், குளிர்ந்த பேரொளியும் விளங்குவதும், தண்டை, வெண்டையம், கிண்கிணி, சதங்கை, கழல், சிலம்பு என்னும் ஆறு ஆபரணங்களும் திருவடிகளிற் கண கணென்று ஒலிப்பதுமான இந்த நினது குழந்தைக்கோலம் -நடனக்கோலம்-என் கண் குளிர (எந்த வேளையும்) சந்தித்தல் வேண்டும் என்று உள்ளம் நெகிழ்ந்து வேண்டினார்.

இவ்வாறு பத்தித்துறையிற் படிந்து ஆனந்த நீராட்டிற் றிளைத்திருந்து அருணகிரிநாதர் செந்திலில் பாடி இன்புறும் நாளில் ஸ்ரீவில்லிப்புத்தூரார் என்னும் புலவர் வாழ்ந்து வந்தார் என்பர். தம்மோடு வாது செய்து தோற்றவர்களது காதைக் குறடுகொண்டு குடைந்து தோண்டும் வழக்கம் கொண்ட கல்விச் செருக்குடையவர். வில்லிப்புத்தூராருடன் அருணகிரிநாதசுவாமிகள் வாது செய்ய நேர்ந்தபோது, ஆசுகவியாக அவர் பாடிய நூல் தான் கந்தரந்தாதி என்றும், அந்நூலுக்கு வில்லிப்புத்தூராரே உரை செய்தார் என்றும் அதில் 'திதத்த' என்று வரும் (54-வது) பாடலுக்கு அவர்உரை செய்ய மாட்டாது திகைத்து தோற்றனர் என்றும், அச்செய்யுளுக்கு அருணகிரிநாதரே உரை செய்தார் என்றும்,வாதில் தோல்வியுற்றவருடைய காதை அறுக்கவேண்டும் என்ற ஏற்பாட்டின்படி வில்லிபுத்தூராரது காதை அறுக்காது 'இனிக்கருணைக்கு விரோதமான இவ்வழக்கத்தை நீங்கள் விட்டு விட வேண்டும்.' என அவருக்குப் புத்தி சொல்லி அவர் கையி லிருந்த குறடை எறியச் செய்தனர் என்றும் கூறுவர்.

இவ்வரலாற்றை,

*... ... ... அக்கிளிதான்*
*வில்லிபுத்தூரான் செவியில் மேலரிவாள் பூட்டி அன்று*
*வல்லபத்தின் வாது வென்று வந்தது காண்*

(தணிகையுலா)

எனவும்,

*எதிரும் புலவன் வில்லி தொழ*
*எந்தை யுனக்கந்தாதி சொ(ல்)லி*
*ஏழைப் புலவர் செவிக் குருத்தோ*
*டெறியுங் கருவி பறித்தெறிந்தே*

(திருமலைமுருகன்பிள்ளைத்தமிழ்)

எனவும் வரும் இலக்கியச்சான்றுகள் இனிது காட்டுகின்றன.

இக்காரணத்தால் 'கருணைக்கு அருணகிரி' என்று அனைவரும் போற்றினர்.

இனி, வில்லிபுத்தூராரது ஆடம்பரங்களைக்கண்டோ அக்காலத்துப் புலவர்களது படாடோபங்களைப் பார்த்தோ அருணகிரிநாதர் மிகவும் அஞ்சி அத்தகைய ஆணவ அழுக்கு தம்மை மாசுபடுத்தாதிருக்க வேண்டுமென்று அஞ்சியே,

பாடர் புவியின் மீதுமீறி வஞ்சகர்கள்
வியனினுரை பானுவாய் வியந்துரை
பழுதில் பெருசீல நூல்களும் தெரி சங்கபாடல்
பனுவல் கதை காவ்யமாம் எணெண்கலை
திருவளுவ தேவர் வாய்மை என்கிற
பழமொழியை ஓதியே உணர்ந்துபல் சந்தமாலை
மடல்பரணி கோவையார் கலம்பகம்
முதலுளது கோடிகோள் ப்ரபந்தமும்
வகை வகையில் ஆசுசேர் பெருங்கவி சண்டவாயு
மதுரகவி ராஜன் நானென் வெண்குடை
விருது கொடிதாள மேள தண்டிகை
வரிசையொடு லாவுமால் அகந்தை தவிர்ந்திடாதோ?
... .... ... ... ... ...
செந்திலில்
உரிய அடியேனை யாள வந்தருள் தம்பிரானே!

எனச் செந்திலாண்டவனிடம் வேண்டிப் பணிந்தனர்.

வில்லிபுத்தூராரோடு செய்தவாதம் திருச்செந்தூரிலேயோ திருச்செந்தூர் தரிசனத்தையடுத்தோ நடந்திருக்க வேண்டும் என்பது கந்தரந்தாதியில் சொல்லப்பட்ட தலங்களும் செந்தூரே (26பாடல்கள்) அதிகமாகக் கூறப்பட்டுள்ளதால் ஒருவாறு பெறப்படும்.

பாரதம்பாடிய வில்லிபுத்தூரார் காலம் கி. பி. 1216-1240 என்றுகூறும் வரலாற்றறிஞர் கருத்துப்படி நோக்குமிடத்து கி. பி. 1422-29 ஆண்டுகளில் ஆட்சி செய்த இரண்டாவது தேவராயர் காலத்து வாழ்ந்த அருணகிரிநாதர் எப்படி அவரோடு வாதம் செய்திருக்க முடியும் என்ற ஐயமும் ஏற்படாமலில்லை.

தொன்மைப் புகழ் மிக்கதும் கந்தவேல் பாசறை அமைத்துச் சூரசம்ஹாரம் செய்ததுமான இத்தலம் இன்று கந்தராஜதானியாகத் திகழ்கின்றது. இங்கே வழிபடுவோருக்கு ஏராளமான வசதிகள் உள்ளன. திருக்கோயில் சார்பில் ஆறுமுக விலாஸ் விடுதி, தேவஸ்தான விடுதிகள், சண்முக விலாஸ் விடுதிகள், செந்திலாண்டவன் விடுதி, வீரவாகு தேவ விலாசம், வழிபடுவோர் பொருள்வைப்பு அறை, காட்டேஜுகள் உள்ளன. இவற்றையன்றி தனியார் விடுதிகளும், ஒவ்வொரு இனத்தாருக்குமுரிய மடங்களும் உள்ளன.

விழா நாட்களில் யாத்ரீகர்கள் சண்முகவிலாச மண்டபத்திலும், கோயிலைச் சுற்றியுள்ள மண்டபங்களிலும் திறந்த வெளியிலும் தங்கிக் கடற்காற்றும் வாங்கி இன்புறுகின்றனர்.

இக்கோயிலில் அன்றுமுதல் இன்று வரை நிகழ்ந்து வரும் அற்புதங்கள் எண்ணிறந்தன.

கந்தசாமிப்புலவர் என்பவர் வாய்நிறைய வெற்றிலையைச் சுவைத்தவாறு செந்திலாண்டவன் சந்நிதியில் பாடினார். அவரது எச்சில் ஆண்டவன் திருமேனியில் தெறித்தது. மறு நாட்காலையில் இறைவன் மீது எச்சில் காணப்பட்டது கண்டு அர்ச்சகர் திடுக்கிட்ட போது பெருமானும், 'கந்தசாமி கவி பாடும் போது தெறித்த எச்சில் இது' என்று அருளிச்செய்தார்

திருச்செந்தூருக்கு 8 கல் தொலைவிலுள்ள குலசேகரன் பட்டினத்தில் கல்வி கேள்விகளில் சிறந்த பண்பாளரான முத்தணைந்த பெருமாள் பிள்ளை என்பார் வசித்துவந்தார். செந்திலாண்டவன் மீது ஆழ்ந்த பக்தியுடையவர். செந்தில் காத்த மூப்பனாரிடம் அமைச்சராக இருந்தவர். பிள்ளையவர் களின் பண்புகளைக் கண்டு அவ்வூர் மக்கள் 'ஞானியார்' என்றே அவரை அழைக்கலாயினர். ஞானியார் நாடோறும் இரவில் நடந்து வந்து செந்தில் அடைந்து அர்த்தயாம பூசையைக் கண்டு வழிபட்டு ஊர் திரும்புவது வழக்கம். முதியவரான அவர் மழைக் காலத்தில் ஓர் நாள் இரவில்-இருட்டில் வழி தவறித் திகைப்புற்றார். அப்போது விளக்கும், ஜெயகண்டியும் கொண்டிருந்த ஒரு ஆள் அவர் முன்னே தோன்றி "ஐயா! நான் திருச்செந்தூர் செல்கிறேன், என்னுடன் வாருங்கள் என்று கூறி அவரை அழைத்துக் கொண்டு திருக்கோயிலடைந்து சண்முக விலாசத்தருகே விட்டு மறைந்துவிட்டார். ஞானியரின் மூப்புக்காலத்தில் செந்திலாண்டவன், ஞானியரின் வீட்டையே தனது பள்ளியறையாக்கிக் கொண்டிருந்தார் என்பர்.

தூத்துக்குடியில் சங்கரராமேசர் என்ற புலவர் இருந்தார். செந்திலாண்டவனிடம் மிகுந்த பக்தியுடையவர். அவருடைய மருமகன் வியாபார நிமித்தம் வெளிநாடுசென்று ஆண்டுகள் பல ஆகியும் திரும்பிவரவில்லை. புலவர் தம் குடும்பத் துடன் திருச்செந்தூர் அடைந்து வழிபட்டு "நீயே போவாயோ,

உன் தம்பிமாரை அனுப்புவாயோ, வேலை அனுப்புவாயோ, மயிலை அனுப்புவாயோ எனக்குத் தெரியாது. எனக்கு என் மருமகன் வந்தாக வேண்டும். இல்லையேல் பெண்பாவம் பொல்லாதது'' என்று அச்சுறுத்தி வேண்டினார் உரிமையுடன். செந்திலாண்டவனும் 'நமக்கேன் இந்த வம்பு' என்று வீரவாகுவை அனுப்பித் தன் பக்தனின் மருமகனை வரவழைத்துக் கொடுத்தருளினார்.

அண்மைக் காலத்தில் நடந்த அற்புதங்களுள் இரண்டினை மட்டும் ஈண்டு குறிப்பிடலாம்.

டாக்டர் ஒருவரது குழந்தை ஊமையாகவே இருந்து, பலவித வைத்தியங்களாலும் பேச்சு வரவில்லை. செந்திலாண்டவன் கோயிலடைந்து விரதமிருந்ததும் அக்குழந்தை பேசத்தொடங்கி விட்டது. அக்காலத்தில் குமரகுருபரசுவாமிகள் வரலாற்றை இது மெய்ப்பித்துவிட்டது.

திருச்செந்தூர் வழிபடக் காரில் சிலர் வந்தனர். அப்போது ஏற்பட்ட விபத்தில் ஒருவரது கால் முறிந்து குணமாகவில்லை. தன் கால் குணமாகி மீண்டும் பழையபடி நடக்குமாறு அருள் வேண்டிச் செந்திலாண்டவனிடம் முறையிட்டார். குணமடைந்த பின்தான் நடந்தே வந்து செந்திற்கந்தனை வழிபடுவதாகவும் வேண்டிக்கொண்டார். என்ன ஆச்சரியம்! அவர்கால் குணமாகிவிட்டது. தான் வேண்டிக்கொண்டபடியே திருச்செந்தூருக்கு நடந்தே வந்து தன் பிரார்த்தனையைச் செலுத்தி வழிபட்டார். வீடு திரும்பும்போதும் நடந்தே செல்லுமாறு கந்தன் கட்டளையிட அவ்வாறே நடந்து சென்றார்.

இவ்வாறு இக்கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாய், பிணியகற்றி ஆன்மாக்களை உய்விக்கும் திருச்செந்தூர் திருக்கோயில் தமிழக அரசு அற நிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்திலுள்ளது. வழிபடுவோர்க்கு வேண்டிய வசதிகள் நிறைந்துள்ள இத்தலம் கந்தலோகமே என்றால் மிகையில்லை.

முதலில் தூண்டுகை விநாயகரை வலம் வந்து செந்திலாண்டவன் கோயிலை வலம் வந்து சண்முகவிலாசத்துக்குள் நுழைந்தால் ஓங்கார வடிவம் போலாகும். கோயிலின் வடபுறம் கடலோரத்தில் வள்ளி ஓடி ஒளிந்து கொண்ட இடம் உள்ளது

கோயிலுள் மலைப்பாறை உள்ளது. அது கந்தமாதனம் என்பதை மெய்ப்பிக்கின்றது.

திருச்செந்தூரை வழிபட்டு, நாகர்கோயில், சுசீந்திரம், கன்னியாகுமரி ஆகிய தலங்களையும் வழிபட பஸ் வசதி உள்ளது. ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார்திருநகரி, கழுகுமலை, போன்ற தலங்களும் திருச்செந்தூருக்கு அருகிலேயே உள்ளன.

வேண்டுவோர்க்கு வேண்டுவன அளிக்கும் செந்திலாண்டவன் நம்மைக் காத்தருள்வானாக.

*வரியார் கருங்கண் மடமாதர்*
*மகவாசை தொந்த மதுவாகி*
*இருபோது நைந்து மெலியாதே*
*இருதாளினன்பு தருவாயே*
*பரிபாலனஞ்செய் தருள்வோனே*
*பரமேசுரன்றன் அருள்பாலா*
*அரிகேசவன்றன் மருகோனே*
*அலைவாயமர்ந்த பெருமாளே!*

— அருணகிரி வள்ளல்

## பிறமாநிலத் தலங்கள் மற்றும் ஸ்ரீலங்காவிலுள்ள தலங்கள்

பாண்டிச்சேரி

1. திருநள்ளாறு
2. வடுகூர்

ஆந்திரமாநிலம்

1. திருமலை (ஸ்ரீசைலம்)
2. திருக்காளத்தி
3. திருவேங்கடமலை
4. வடவிஜயபுரம்

கர்நாடக மாநிலம்

1. நிம்பபுரம்

கேரளமாநிலம்

1. கொடும்பை

உத்திரப்பிரதேசம்

1. காசி
2. மாயாபுரி (ஹரித்வார்)

வட இந்தியா

1. வயிரவிவனம்
2. கயிலைமலை

## ஸ்ரீலங்காவிலுள்ள தலங்கள்

1. கதிர்காமம்
2. திருக்கோணமலை
3. அருக்கொணுமலை.

## பாண்டிச்சேரி மாநிலம்

# திருநள்ளாறுறை தேவர்கள் பெருமாள்

போகமார்த்த பூண்முலையா டன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள்ளேற் றண்ணல் பரமேட்டி
ஆகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே.

திருஞான சம்பந்த சுவாமிகள்.

பாண்டியன் தலைநகரான மதுரைமாநகரில் திருஞானசம்பந்தர் தங்கியிருக்கிறார். நாடு முழுதும் சமண சமயத்தைத் தழுவ, பாண்டியன் சமண குருமார்களின் கைப்பாவையாகி, அவர்கள் சொற்படி வாழ்ந்து வரும் காலம் அது. பாண்டிய நாட்டில் இரண்டே பேர்கள்தாம் சைவர்கள்! மங்கையர்க்கரசி (பாண்டி மாதேவி) யும், அமைச்சர் குலச்சிறையாரும் அவ்விருவர். அவர்களது வேண்டுகோளின் வண்ணம் மதுரைக்கு வந்த திருஞானசம்பந்தர் தங்கியிருந்த திருமடத்திற்குச் சமணர்கள் தீ வைக்கின்றனர். அவர்கள் அஹிம்சை நெறியுடையவர்களாயிருந்தும் ஏனோ சம்பந்தர்பால் சீற்றம் கொண்டனர்! திருமடம் தீப்பற்றியது கண்டு திருஞானசம்பந்தர் சீற்றம் அடையாமல், அத் தீ பையவே சென்று பாண்டியனைப் பற்றுமாறு வேண்டினார். பாண்டியமன்னர் வெப்புநோயால் வெந்துழன்றார். சமணரது மயிற்பீலி நோயை மிகுவித்தது. மங்கையர்க்கரசியின் வேண்டுகோளை ஏற்று பாண்டியமன்னர் திருஞானசம்பந்தரை வரவழைக்கின்றார். திருநீறுபூசி, நோய் நீக்கி மன்னர் உள்ளத்தில் இருந்த மயக்கம் தெளியச் செய்கிறார். சமணர் வாதுக்கழைக்கின்றனர். அனல்வாதம் தொடங்குகிறது. சமணரிட்ட ஏடு எரிந்து போகின்றது. திருஞானசம்பந்தர்

தமது திருப்பாடல் சுவடிகளிலிருந்து ஒரு பதிகத்தை எடுத்து அனலில் இடுகிறார். அந்தப்பதிகம் திருநள்ளாற்றுப் பதிகமாக அமைந்தது தனிச் சிறப்பாகும். ''போகமார்த்த'' என்று தொடங்கும் அப்பதிகம் அனலில் பச்சையாகவே இருந்தது. வேகவில்லை. அது பச்சைப் பதிகமாயிற்று. இதனை மனதுட் கொண்டுதான் அருணகிரிவள்ளல் திருநள்ளாற்று முருகப் பெருமானைப் பரவத் தொடங்கும்போது ''பச்சை யொண்கிரி'' என்று தம் திருப்புகழை தொடங்குகிறார் போலும்!

திருநள்ளாறு என்றவுடனேயே நளன் வரலாறும், சனீஸ்வரன் வழிபாடும் நம் மனக்கண் முன் வருகின்றன. தர்ப்பாரணியம், நளேஸ்வரம், விடங்கபுரம், ஆதிபுரம் என்றெல்லாம் சிறப்புப்பெயர் கொண்ட இத்தலம், நள் + ஆறு = ஆறுகளின் நடுவிலுள்ளதால் நள்ளாறு என வந்தது என்பர். காரைக்காலுக்கு மேற்கில் 3 கல் தொலைவிலுள்ள இத்தலத்திற்குக் கும்பகோணம், தஞ்சை முதலிய ஊர்களிலிருந்து பஸ் வசதி உண்டு. பேரளம்-காரைக்கால் ரயில்வழியில் திருநள்ளாறு நிலையமும் உள்ளது. தல விருட்சம் தருப்பை யாதலின் தர்ப்பாரணியம் என்பர். நளன் பூசித்ததால் நளேச்சரம், நள்ளாறு எனவும், சப்தவிடங்கத் தலங்களுள் நகவிடங்கத்தலம் இதுவாதலின் நகவிடங்கபுரம் எனவும், பிரமன் பூசித்த தலமாதலின் ஆதிபுரம் எனவும் இது பெயர்கொண்டது.

இங்கே நளவிநாயகர், சொர்ணவிநாயகர் சந்நிதிகள் உள்ளன. பெட்டகத்தில் மரகதவிடங்கர் (லிங்கம்) விளங்குகின்றார். அவருக்கு ஐந்து கால அபிடேக ஆராதனைகள் நிகழ்கின்றன. இறைவன்: தர்ப்பாரண்யேஸ்வரர்; இறைவி: பிராணேச்வரி. இத்தலத்தில் மேற்குப் பிராகாரத்தில் கல்யாணசுப்பிரமணிய சுவாமி சந்நிதி விளங்குகின்றது. ஒரு திருமுகமும் இருகரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்த முருகவேள் பாதங்களில் காலணிகளணிந்து விளங்குகின்றார். ஒரு கையில் பழமும், மற்றொருகை அபயமும் கொண்டு அவர் திகழ்கின்றார். அருகில் இருதேவியரும் விளங்குகின்றனர். இக் காட்சியை நம் அருணகிரிநாதர் இத்தலத்திருப்புகழில் அற்புதமாகக் காட்டுவார்.

> ''நற்புனந்தனில் வாழ்வளி நாயகி
> யிச்சை கொண்டொரு வாரணமாதொடு
> நத்தி வந்து நளாறுறை தேவர்கள் பெருமாளே''

இப்பாடலில் மற்றொரு சிறப்பும் உண்டு. ''சபாஷ்'' என்ற சொல்லை அருணகிரிநாதர் பயன் படுத்தும் திருப்புகழ் இது ஒன்றேயாம். அவுணரை அழித்து அமரரை உய்விக்க வேலை விய முருகனைப் பார்த்துச் சித்தரும், விஞ்சையரும், மாகரும் ''சபாஷ்'' என்கின்றனராம்;

*''கற்பகந்திரு நாடுய்ர் வாழ்வுற*
*சித்தர் விஞ்சையர் மாகர் சபாசென*
*கட்ட வெங்கொடு சூர்கிளை வேரற விடும்வேலா''*

மூர்த்திச் சிறப்புடைய இத்தலம் தீர்த்தச்சிறப்பும் மிக்கது. நளதீர்த்தம், பிரமதீர்த்தம், சரஸ்வதி தீர்த்தம், அகத்திய தீர்த்தம், ஹம்சதீர்த்தம் முதலியன குறிப்பிடத்தக்கவை. இடையன் கணக்கனுக்குத் தியாகேசர் காட்சி வழங்கிய சிறப்பும் இங்கு உள்ளது திருமால், பிரமன், இந்திரன், அஷ்டதிக்குப் பாலகர், அகத்தியர், புலத்தியர், அருச்சுனன், நளன், கலிங்கன், அன்னப்பறவை முதலியோர் வழிபட்டுய்ந்த இச்சிவதலம் இன்று சனீஸ்வர க்ஷேத்திரம் என்றளவிலேயே புகழ் பெற்றுள்ளது.

திருஞானசம்பந்தர் நான்கு பதிகங்களும், திருநாவுக்கரசர் இருபதிகங்களும், சுந்தரர் ஒருபதிகமும் இத்தலத்திற்கு உள்ளன.

தினமும் ஆறுகால வழிபாடு நிகழும் இத்தலம், பாண்டிச்சேரி அரசு நிர்வாகத்திலுள்ளது. தருமபுர ஆதீனக் கட்டளை உள்ளது. இத்தலத்தில் வழிபடுவோர் விடுதிகளும் உள்ளன.

இத்தலத்தைச் சுற்றி தக்களூர் (அப்பர்வைப்புத்தலம்), திருத்தருமபுரம், (யாழ்மூரிப்பண் — திருஞான சம்பந்தர்). காரைக்கால், திருத்தெளிச்சேரி, இளையான்குடி, அம்பகரத்தூர், நெடுங்காடு, திருமலைராயன் பட்டினம், திருக்கண்ணபுரம் முதலிய தலங்கள் உள்ளன.

*உள்ளா றுததோர் புண்டரீ கத்திரள்*
*தொள்ளா றுச்சிவச் சோதித்திரளினைக்*
*கள்ளா றுதபொற் கொன்றை கமழ்சடை*
*நள்ளா றுவென நம்வினை நாசமே.* — திருநாவுக்கரசர்,

## வடுகூர் வேலன்

சுடுகூடெரி மாலை யணிவர் சுடர் வேலர்
கொடுகூர் மழுவாளொன் றுடையர் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்
வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூரடிகளே.

(திருஞானசம்பந்தர்)

பைரவர் பூசித்த சிவஸ்தலம் வடுகூர், (வடுகன்—பைரவர்). பாண்டிச்சேரி-விழுப்புரம் பஸ் வழியில் நடுவில் உள்ளது வடுகூர். பாண்டிச்சேரியிலிருந்து 22 கி. மீ. விழுப்புரத்திலிருந்து 22 கி. மீ. சின்னபாபு சமுத்திரம் ரயில் நிலையத்திலிருந்து மேற்கு. 2 கல் தொலைவில் அடையலாம். இத்தலம் தற்போது திருவாண்டார்கோயில் என அழைக்கப்படுகின்றது. இறைவன்: திருவடுகூர்நாதர்; இறைவி: வடுவகிர்க்கண்ணியம்மை.

இத்திருக்கோயிலில் முருகப்பெருமான் ஆறுமுகங்களும், பன்னிருகரங்களும் கொண்டு மயில்மீது அமர்ந்த கோலத்தில் விளங்குகிறார். முன்னர் தேவயானை மட்டும் விளங்கிடவும், தற்போது வள்ளியின் திருவுருவமும் அமைக்கப்பட்டுள்ளது. பல்லவர் காலச் சிற்பமாதலின் முருகவேள் சிறப்பாக விளங்குகின்றார்.

தினமும் இரு கால வழிபாடுகள் நிகழ்கின்றன. கார்த்திகை நாட்களில் சிறப்பு வழிபாடு.

புண்ணியப்புனல்: வாமதேவதீர்த்தம்.

தலவிருட்சம்: வன்னி,

நடுநாட்டுச் சிவஸ்தலங்கள் 22-இல் இது 16-வது தலமென்பர். திருஞானசம்பந்தர் ஒரு பதிகமுடையது இத்தலம் இங்கு முருகவேளை அருணகிரிநாதர் "அரியயனறியா" எனத் தொடங்கும் அற்புதத் திருப்புகழால் பரவியுள்ளார். கல்வெட்டுக்கள் இங்கு அதிகம் உள்ளன.

வழிபடுவோர் விடுதிகள் இல்லை. உணவு வசதியும் குறைவு. தற்போது பாண்டிச்சேரி அரசின் நிர்வாகத்தில் இக்கோயில் அமைந்துள்ளது.

வடுகூருக்கு 12 கி. மீ. தொலைவில் விழுப்புரம் செல்லும் வழியில் குமரக்குப்பம் என்ற முருகன் தலம் உள்ளது. இத்தலத்தின் நான்கு திக்குகளிலும் நான்கு ஞானிகள் சமாதி பெற்றுள்ளனர் என்பர். இங்கே சுப்பிரமணியர் தனிக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ளார். ஆறு முகமும் 12 கரங்களும் கொண்டு மயில்மீதமர்ந்து, வள்ளி தேவயானையுடன் விளங்குகிறார். இக்கோயிலில் நின்ற கோல ஆறுமுகன், ஏகமுக முருகன், சிறிய பழனியாண்டவர், மயில் மீதமர்ந்த ஆறுமுகப் பெருமான், முத்துக்குமாரசுவாமி, பெரியபழனியாண்டவர் என்னும் ஆறு உற்சவமூர்த்திகள் உள்ளன. இக்கோயிலில் குமாரதந்திரப்படி 2 கால வழிபாடு நிகழ்கிறது. மாதக் கார்த்திகை, சஷ்டி சிறப்பு. வண்ணச்சரபம் மகான் தண்டபாணி சுவாமிகள் இம்முருகனைப் பாடியுள்ளார். தமிழ்நாடு அறநிலைய ஆட்சித்துறை நிர்வாகத்தில் உள்ளது. வடுகூர் வழிபடுவோர் குமரக்குப்பத்தையும் வழிபடலாம்.

"வசிசையொ டொருமா தினைதருவனமே
மருவியொர் குறமா தணைவேடா
மலைகளில் மகிழ்வாய் மருவிநல் வடுகூர்
வருதவ முனிவோர் பெருமாளே.

(அரியயனறி... திருப்புகழ்)

# தரிசனம் அருளும் திருமலை முருகன்

*ஒருபது மிருபது மறுபது முடனறு*
*முணர்வுற இருபத முளநாடி*
*உருகிட முழுமதி தழலென வொளிதிகழ்*
*வெளியொடு வொளிபெற விரவாதே*
*தெருவினில் மரமென எவரொடு முரைசெய்து*
*திரிதொழி லவமது புரியாதே*
*திருமகள் மருவிய திரள்புய அறுமுக*
*தெரிசனை பெறஅருள் புரிவாயே*
*பரிவுட னழகிய பழமொடு கடலைகள்*
*பயறொடு சிலவகை பணியாரம்*
*பருகிடு பெருவயி றுடையவர் பழமொழி*
*எழுதிய கணபதி யிளையோனே*
*பெருமலை யுருவிட அடியவ ருருகிட*
*பிணிகெட அருள்தரு குமரேசா*
*பிடியொடு களிறுகள் நடையிட கலைதிரள்*
*பிணையமர் திருமலை பெருமாளே!*

(திருப்புகழ்)

பன்னிரண்டு ஜ்யோதிர்லிங்கத் தலங்களுள் ஒன்றான ஸ்ரீசைலம் மல்லிகார்ஜுனபுரம் என்றழைக்கப்படுகிறது; திருப்பருப்பதம், ரிஷபகிரி என்றும் போற்றப்படும். ஆந்திரப்பிரதேசத்தில் கர்னூல் மாவட்டத்தில் நந்தியால் இரயில் நிலையத்திற்கு வடகிழக்கில் 104 கி. மீ தொலைவிலுள்ள இத்தலத்திற்கு டோர்னல் ரோடிலிருந்தும் செல்லலாம். பஸ் வழியுள்ளது

கோயில் வரையில் கார் செல்லும். இங்கே நந்திதேவர் மலை வடிவாகநின்று சிவபெருமானைத் தாங்கிநிற்பதாகத் தலமான்மியம் கூறும். இறைவன்: மல்லிகார்ச்சுனர் (பருபப்தநாதர்): இறைவி பிரமராம்பாள் (பருப்பதநாயகி) சிவாகமமுறையில் நாளும் வழிபாடியற்றும் இத்தலத்தில் பக்தர்கள் தாமே இறைவனுக்கு அபிஷேகம் செய்தும் வணங்கலாம்.

சிவபெருமான் சந்நிதிக்குப் பின்னால், அம்பிகை சந்நிதிக்கு முன்புள்ள பிற ஜோதிர்லிங்கங்களுடன் முருகவேள் சந்நிதி உள்ளது. மலைமீதமைந்த ஸ்ரீசைலம் அற்புத எழிலுடன் அமைந்த அருள் நிலையமாக விளங்குகிறது.

இங்கே முருகவேள் ஆறுமுகங்களும் பன்னிருகரங்களும் கொண்டு மயில் மீதமர்ந்து கிழக்குநோக்கி எழுந்தருளியுள்ளார். அருகில் தேவியர் இல்லை.

தேவார ஆசிரியர்கள் பதிகம் பாடிப் போற்றிய திருப்பருப்பதமாம். இத்தலத்தில் பாதாளகங்கை என்னும் கிருஷ்ணா நதி புண்ணியப் புனலாகும். எட்டு சுனைகள் உள்ளன. மருதமரம் (அர்ச்சுனம்) தலவிருட்சமாகும். அத்தி ஆல் அரசு மரங்களும் உள்ளன.

அருணகிரிநாத சுவாமிகள் திருமலை என்று இத்தலத்தைப் போற்றிப் பாடுகின்றார். ஆதிசங்கரர் இத்தலத்தில்தான் சிவானந்தலஹரி பாடியருளினர் என்பர். சிவராத்திரி திருவிழா மிகச்சிறப்புடையது.

ஸ்ரீசைலம் கோயிலுக்கு 8 கி. மீ. தொலைவில் சிகரம் உள்ளது. சிகரத்தைத் தரிசித்தவருக்கு மறுபிறப்பில்லை என்பர்.

ஓங்கோல், குண்டூர், குண்டக்கல், கர்நூல், திருப்பதி ஆகிய இடங்களிலிருந்து ஸ்ரீசைலத்திற்குப் பஸ் வசதி உள்ளது.

ஆந்திர அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்திலுள்ள இக்கோயிலில் வழிபடுவோர் விடுதியும் உணவு விடுதியும் உள்ளன.

## தமிழகத்திருமலை

திருமலை என்ற தலம் தமிழ்நாட்டில் தென்காசி அருகிலுள்ள பண்மொழி கிராமத்தில் மலைமீது விளங்கும் திருமலை குமாரசுவாமி திருக்கோயிலே என்பாரும் உளர். தென்காசியிலிருந்து பஸ் வசதி உள்ளது. 626 படிகள் ஏறி மலைக் கோயிலை அடைகிறோம். முருகனுக்குத் தனிச் சிறப்புடைய இக்கோயிலில் மூலவர் ஒரு முகமும் நான்கு திருக்கரங்களும் கொண்டு மயிலுடன் நின்ற கோலத்தில் கிழக்கு நோக்கி விளங்குகின்றார். உற்சவர் ஆறுமுகமுடையவர். கோயில் 500 ஆண்டுகட்குட்பட்டதாகத் தெரிகிறது. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அருள் பெற்றத் தலம் இது. செங்கோட்டைப் பண்டாரத்தையா பாடிய திருமலை முருகன் பிள்ளைத்தமிழும், முருகதாச கவிராசர் சிவராமலிங்கம்பிள்ளை பாடிய தலபுராணமும், சிங்கார ரச சிந்தும், வள்ளியப்பன் பாடிய சோடசபதிகம், அலங்காரப் பிரபந்தம், திருமணிமாலை முதலியனவும் இப்பெருமான் புகழ்பேசுவன.

இக்கோயில் தமிழ்நாடு அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்திலுள்ளது. தங்கும் விடுதிகளும் உணவு விடுதிகளும் உள்ளன. அருகில் இலஞ்சிக்குமரன் கோயில் சிறப்புடையது.

# முத்தர்களுக்கு அருளும் திருக்காளத்தி

*சிரத்தா னத்திற் பணியாதே*
*செகத்தோர் பற்றைக் குறியாதே*
*வருத்தா மற்றொப் பிலதான*
*மலர்த்தாள் வைத்தெத் தெனையாள்வாய்*
*நிருத்தா கர்த்தத் துவநேசா*
*நினைத்தார் சித்தத் துறைவோனே*
*திருத்தாள் முத்தர்க் கருள்வோனே*
*திருக்கா ளத்திப் பெருமாளே.*

(திருப்புகழ்)

பஞ்ச பூதத் தலங்களுள் வாயுத் தலமாகத் திகழும் திருக் காளத்தியை நினைக்கும் தோறும் உள்ளம் இனிக்கும். அங்கே கும்பிட்டார் பயன் கண்டாற் போன்று காளத்தியப்பரின் வலப்பால் கண்ணப்ப நாயனாரைக் கும்பிடும் பேறு நமக்குக் கிட்டுகிறது. சீ-சிலந்தி; களம்-பாம்பு; ஹஸ்தி யானை. சிலந்தியும் பாம்பும் யானையும் சிவபெருமானை வழிபட்ட திருத்தலம் திருக்காளத்தியாகும். சிவபெருமான் காளத்தியப்பராகத் திகழ் கின்றார். இறைவி: ஞானப்பூங்கோதை. கயிலைபாதி காளத்தி பாதி அந்தாதிபாடி நக்கீரர் உய்வு பெற்றதை நாம அறிவோம்.

திருப்பதி-கூடூர் இரயில் வழியில் உள்ள திருக்காளத்தி ஆந்திரப்பிரதேசத்தின் முக்கிய சிவத்தலங்களுள் ஒன்று. நமக்கும் அது தொலைவிலில்லை. விராட்புருடனது விசுத்தித் தலமாகிய இங்கு மலைமீதுள்ள கோயிலில்தான் கண்ணப்பர் கண்ணிடந்தப்பிய குடுமித்தேவர் எழுந்தருளியிருக்கிறார்.



வடவேங்கடமலை

வேந்தகு மாரகுக சேந்தம யூரவட
வேங்கட மாமலையில் உறைவோனே
வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டவெ றுதவு பெருமாளே.
(சாந்தமில்......)

நன்றி: French Institute of Indology, Pondicherry.

மூவர் தேவாரமும் பெற்ற இத்தலம் தென்கயிலையாகும். பொன்முகலியாறு புண்ணியப் புனலாகும். இத்தலப்பெருமையைச் சேக்கிழார் சுவாமிகள் கண்ணப்ப நாயனார் புராணத்தில் விளக்கியுள்ளார்.

இத்தலத்தில் முருகன் செங்கல்வராயன் என்ற பெயர் கொண்டு விளங்குகின்றார். ஆறுமுகங்களும் பன்னிருகரங்களும் கொண்டு மயில்மீதமர்ந்து மேற்கு நோக்கி எழுந்தருளியுள்ளார். தேவியர் இருவரும் அருகில் விளங்குகின்றனர். கோயில் நுழைவாயிலில் ஒரு தனிமுருகன் சந்நிதி உள்ளது. ஐந்து அடி உயரம். இருதேவியரும் உள்ளனர். ஆனால் இம்மூர்த்திக்குப் பூசை நிகழவில்லை.

தினமும் நான்கு கால வழிபாடுகள் நிகழ்கின்றன. சஷ்டி, கார்த்திகை சிறப்பு நாட்கள். கந்த சஷ்டிவிழா நிகழ்கிறது.

இத்தலத்தில் அருணகிரிநாதர் நிறையப்பாடியிருக்க வேண்டும். மூன்று திருப்புகழ்ப் பாக்களே இத்தலத்திற்கு நமக்குக் கிடைத்துள்ளன. "சிரத்தானத்திற்", "சரக்கேறித்" "பங்கமானூர்" என்று அவை தொடங்குகின்றன. இம் மூன்றிலும் கண்ணப்பர் வரலாறுஇல்லையே என்று ஐயுறத் தேவையில்லை. அருணகிரிநாதர் கண்ணப்பரை மறக்கவில்லை.

"பொக்கணத்து நீற்றை யிட்டொருத் தனூர்க்கு
புத்திமெத்த காட்டு புனவேடன்
பச்சிலைக்கும் வாய்க்குள் எச்சிலுக்கும் வீக்கு
பைச்சிலைக்கும் ஆட்கொள் அரன் வாழ்வே!

(மச்சமெச்சு...சிதம்பரம்)

"இதவிய காணிவை தகையென வேடுவ னெய்திடும்
எச்சில் தின்று
லிலாசல மாடும் தூயவன் மைந்த"

(வந்தனசரோருக...வெள்ளிநகர்)

"கூசாது வேடனுமிழ் தருநீராடி யூனுணெனூமுரை
கூருமனிய அவனுகர் தருசேடம்
கோதாமெனு மலமுது செய்வேதாகமாதி...

(ஆசாரவீனன: பொது)

எனவரும் திருப்புகழ்ப் பகுதிகள் கண்ணப்பர் வரலாற்றைக் கவினுறப் பேசும்.

அற்புதமான திருக்கோயில் ஆன்மீக வளமும் இலக்கிய வளமும் கலைவளமும் மிக்கது. தங்கும் விடுதிகள் உணவுச் சாலைகள் உள்ளன.

ஆந்திரப்பிரதேச அறநிலையத்துறை நிர்வாகத்தில் உள்ளது.

"சிவப்பேறுக்குக் கடையேன் வந்துட்
புகச்சீர் வைத்துக் கொளுஞானம் பொற்
றிருக்காளத்திப் பதிவாழ் கந்தப் பெருமானே!"

# வேண்டுவதளிக்கும் வேங்கடமலை வள்ளல்

*கரிவாம்பரி தேர்திரள் சேனையு*
*முடனுந்துரி யோதன னுதிகள்*
*களமாண்டிட வேயொரு பாரத மதிலேகிக்*
*கனபாண்டவர் தேர்தனி லேயெழு*
*பரிதூண்டிய சாரதியாகிய*
*கதிரோங்கிய நேமியனுபுரி ரகுராமன்*
*திரை நீண்டிரை வாரியும் வாலியும்*
*நெடிதோங்கும ராமர மேழொடு*
*தெசமாஞ்சிர ராவணனுர்முடி பொடியாகச்*
*சிலைவாங்கிய நாரணனுர்மரு*
*மகனுங்குகனே பொழில் சூழ்தரு*
*திருவேங்கட மாமலை மேவிய பெருமாளே!*

(வரிசேர்ந்திடு திருப்புகழ்)

திருவேங்கடம் என்றவுடன் வேங்கடாசலபதிப்பெருமாள் நம் மனக்கண் முன் விளங்கித் தோன்றுவதைக் காண்கிறோம். திருவேங்கடவனை முருகனேஎன்பாரும், அம்பிகையே என்பாரும், திருமாலே என்பாரும் உளர். வேங்கடசுப்பிரமணியன் என்ற பெயர் பலரும் வைத்துக்கொண்டிருப்பதும், மலைக்கடவுள் முருகன் என்பதும், திருவேங்கடமலையானை அருணகிரிநாதர் நான்கு திருப்புகழ்ப் பாக்களால் துதிப்பதும், திருவேங்கட முடையான் முருகனே என்று கருதுவார்க்கு ஆதாரமாகின்றன. மாமனுயிருந்தாலென்ன? மருமகனுயிருந்தாலென்ன; இருவருமே இரு தேவியருடன் கூடியவர்கள்; பெருமாள் என்ற பட்டம் உடையவர்கள்; கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாக விளங்குகிறவர்கள்; என்று சமரச பாவத்துடன் வழிபடுகின்றவர்களும் உள்ளனர். எப்படியாயினும் திருவேங்கட முருகனை நாம்

அருணகிரிநாதர் வழியில் காணத்தானே வேண்டும்? அதற்கு முருகன் திருவடிவமே வேங்கடமலையில் விளங்கும் போது நாம் ஏன் வீணான தர்க்கவாதங்களில் இறங்கவேண்டும்?

அருணகிரி வள்ளல் திருவாஞ்சியம் திருப்புகழில்,

"உலகீன்ற பச்சையுமை யணன் வடவேங்கடத்தில் உறைபவன் மருகன்" என்று வேங்கடசுப்பனைக் காட்டுவார்.

திருப்பதி மலைக்கோயிலுக்குச் செல்லும் பாதையில் கபிலேஸ்வரர் கோயில் என்ற சிவாலயம் விளங்குகின்றது. திருப்பதி பஸ்நிலையத்திலிருந்து சுமார் 3 கி. மீ. தொலைவில் மலையடிவாரத்திலுள்ள இத்தலத்தைக் கபிலதீர்த்தம் எனவும் அழைப்பர். இங்கு சிவபெருமான்: கபிலேஸ்வரர்; இறைவி: காமாட்சியம்மை. முருகனை சுப்பிரமணியசுவாமிவாரு என அழைப்பர். இக்கோயில் பிராகாரத்தில் விநாயகர், தட்சிணாமூர்த்தி, காசிவிசுவலிங்கம், இராமலிங்கம் உமாமகேஸ்வரி, சூரியநாராயணர், பைரவர், நவக்கிரகம், நரசிம்மமூர்த்தி, இலட்சுமிநரசிம்மர், வேணுகோபாலன், நம்மாழ்வார், ஆஞ்சநேயர் சந்நிதிகள் உள்ளன. இங்கே ஆறுமுகமும் பன்னிருகரங்களும் கொண்டு அற்புதமான மயில்மீதமர்ந்த முருகவேளைப் பணிகின்றோம். அருகில் இருதேவியரும் விளங்குகின்றனர். தினமும் இரண்டு கால வழிபாடுகளும் சிறப்பாக நடைபெறுகின்றன.

இக்கோயிலில் விநாயகசதுர்த்தி, நவராத்திரி, கந்தசஷ்டி, கார்த்திகைவிழா, திருவாதிரைத்திருவிழா சிவராத்திரி முதலியன கொண்டாடப் பெறுகின்றன.

திருவேங்கடவன் திருக்கோயிலே குகஸ்தலம் என்பாரும் உளர். (சுப்பிரமணிய பராக்கிரமம்-பக்-56) திருவேங்கடவன் அணிந்துள்ள நாகாபரணமும், சடாதாரணமும், வில்வார்ச்சனையும், சஷ்டி உற்சவமும், தேவிமார் இன்றிப்பெருமான் தனியே விளங்குவதும், வேங்கடசுப்பராயன் என்ற பெயர் கொண்டிருப்பதும் சிந்தித்தற்குறியன என்பர். வேங்கட குகஸ்தல நிருபணம் என்ற நூலும் உள்ளது.

திருப்பதி திருக்கோயில் நிர்வாகத்திலேயே இத்தலமும் அமைந்துள்ளது. திருப்பதி செல்லும் முருக பக்தர்கள் கபிலேஸ்வரர் கோயிலில் உள்ள ஆறுமுகப்பெருமானைப் பரவி முருக வழிபாட்டை அருணகிரிநாதர் திருப்புகழோதி இன்புறலாமே!

திருவேங்கடத் திருப்புகழ்ப் பாக்களில் திருமால் வருணனை கள் ஒவ்வொரு பாட்டிலும் இடம் பெற்றுள்ளது கருதத்தக்கது.

*சிறுத்தசலு வதனு ளிருந்து*
*பெருத்த திரையுததி கரந்து*
*செறித்தமறை கொணர நிவந்த ஜெயமாலே*
*செறித்தவளை கடலில் வரம்பு*
*புதுக்கியிளை யவனொ டறிந்து*
*செயிர்த்த அநுமனையு முகந்து படையோடி*
*மறப்புரிசை வளையும் இலங்கை*
*யரக்கனொரு பதுமுடி சிந்த*
*வளைத்தசிலை விஜய முகுந்தன் மருகோனே*
*மலர்க்கமல வடிவுள செங்கை*
*அயிற்குமர குகைவழி வந்த*
*மலைச்சிகர வடமலை நின்ற பெருமாளே!*

(கறுந்தநிலை... திருப்புகழ்)

என்ற பகுதியில் இராமாயணச் செய்தியைச் சுவைபடக் காட்டுகின்றார் அருணகிரிவள்ளல். இத்திருப்புகழில் மலர்க்கமல வடிவுள...பெருமாளேஎனவரும்பகுதிக்குத் தணிகைமணியவர்கள் ஓர் விளக்கம் அளித்துள்ளார். "பார்வதியுடன் மாறுபட்டு முருகவேள் கந்தகிரியைவிட்டுப் பாதலம் சென்று அங்கிருந்து ஒரு குகை வழியே வந்து திருவேங்கடமலையில் எழுந்தருளினர்" என ஓர் வரலாறு உள்ளது. இதனை

*அண்ட மன்னுயிரீன்ற வளுடன் முனிவாராகித்*
*தொண்ட கங்கெழு சுவாமிதன் மால்வரை துறந்து*
*மண்டு தேகியே யோர்குகைவழியே*
*பண்டு தான்வரு வேங்கடகிரியையும் பார்த்தான்.*

என்று கந்தபுராணம் வழிநடைப்படலப் பாடல் கூறும்.

'கோங்கிள' எனத் தொடங்கும் இத்தலத் திருப்புகழில்:

*"பாண்டவர் தேர்கடவும் நீண்டபிரான் மருக"*

என்று பாரதச் செய்தியை நினைப்பூட்டி இராமனையும் கிருஷ்ணனையும் நினைக்கச்செய்கிறார். இன்று திருவேங்கடமாமலை யானுயிருப்பது முருகனே என்று எண்ணும்படி அவரது திருப் புகழ் நம்மை மெய்சிலிர்க்கச் செய்துவிடுகிறது:

*வேந்த! குமார! குக! சேந்த! மயூர! வட*
*வேங்கட மாமலையில் உறைவோனே*
*வேண்டிய போதடியார் வேண்டிய போகமது*
*வேண்ட வெருதுதவு பெருமாளே!*

(சாந்நாமில்...திருப்புகழ்)

# வடவிஜயபுரத்து வேந்தன்

*குடல்நிண மென்புபு லால்கமழ்குரு திநரம்பிவை தோலிடை*
*குளுகுளெ னும்படி மூடிய மலமாசு*
*குதிகொளு மொன்பது வாசலை யுடையகு ரம்பையை நீரெழு*
*குமிழியி னுங்கடி தாகியெ யழிமாய*
*அடலையு டம்பைய வாவியெ அநவர தஞ்சில சாரமி*
*லவுடத மும்பல யோகமு முயலாநின்*
*றலமரு சிந்தையி னுகுல மலமல மென்றினி யானுநி*
*னழகிய தண்டைவி டாமல ரடைவேனோ*
*இடமற மண்டு நிசாசர ரடைய மடிந்தெழு பூதர*
*மிடிபட இன்ப மகோததி வறிதாக*
*இமையவ ருஞ்சிறை போயவர் பதியு ளிலங்கவிடாதர*
*எழில்பட மொன்று மொராயிர முகமான*
*விடதர கஞ்சுகி மேருவில் வளைவதன் முன்புர நீறெழ*
*வெயில் நகைதந்த புராரிம தனகோபர்*
*விழியினில் வந்து பகீரதி மிசைவள ருஞ்சிறுவா வட*
*விஜய புரந்தனில் மேவிய பெருமாளே!*

"வடவிஜயபுரம்" என்று அருணகிரிநாதர் பரவிய தலம் எது? திருவாரூரின் ஒரு பகுதி விஜயபுரம் என்றழைக்கப்படுகிறது. ஆனால் அங்கு முருகன் கோயில் தொன்மையானது ஏதும் இல்லை. அதுவும் வடவிஜயபுரம் என்று வடக்குத்திசையை வேறு கருத்தில் கொண்டு பார்க்கும்போது இந்திர சைலாத்ரி என்ற தலம் நம் கண்ணில்படுகிறது. ஆம் விஜயவாடா மாவட்டத்தில் (ஆந்திரப் பிரதேசத்தில்தான்!) கொத்தபேட்டை வட்டத்தில் இந்திர சைலாத்ரி உள்ளது. இத்தலமே வடவிஜயபுரம் என்று கருத இடமளிக்கின்றது.

விஜயவாடாவிலிருந்து பஸ், இரயில் வசதி பெற்ற இத் தலத்தில் மலைமீது தனிமுருகன் கோயில் விளங்குகின்றது. 236 படிகளேறி மலைக்கோயிலை அடைகிறோம். மலை மீது பாலசுப்பிரமணியர் சுயம்பு மூர்த்தியாக ஒரு சந்நிதியும் வள்ளி தேவயானையுடன் விளங்கும் முருகன் சந்நிதியும் உள்ளன. ஒரு முகமும் இரு கரங்களும் கொண்டு மயில் முன் நின்ற கோலமாய் வள்ளி குஞ்சரி மணாளன் விளங்குகின்றார். விநாயகர், நடராஜர், அன்னபூரணி, சரஸ்வதி, லட்சுமி, ஆஞ்சநேயர், மற்றும் நவக்கிரக சந்நிதிகளும் இங்கு உள்ளன.

காமிகாகம முறையில் இருகால வழிபாடு நிகழ்கிறது. மாத சஷ்டி, கார்த்திகை சிறப்பு நாட்கள். சந்தசஷ்டி விழாவும், பங்குனி உத்திர விழாவும் நடைபெறுகின்றன.

கோயிலுக்கருகில் கோனேரி சுனை உள்ளது. சத்ய நாராயணர் என்பவர் பரம்பரை தர்மகர்த்தா ஆவார். தனியார் நிர்வாகத்தில் இக்கோயில் சிறப்பாக அமைந்துள்ளது.

## கர்நாடகம்

# விம்ப மதில் சூழும் நிம்பபுரம்

*அஞ்சுவிதபூத முங்கரண நாலும்*
*அந்தி பகல் யாது மறியாத*
*அந்தநடு வாதியொன்று மிலதான*
*அந்தவொரு வீடு பெறுமாறு*
*மஞ்சுதவழ் சாரலஞ்சயில வேடர்*
*மங்கை தனைநாடி வனமீது*
*வந்தசர ணாரவிந்தமது பாட*
*வண்டமிழ் விநோதம் அருள்வாயே*
*குஞ்சரகலாப வஞ்சியபிராம*
*குங்கும படீர வதிரேகக்*
*கும்பதனமீது சென்றணையு மார்ப*
*குன்று தடுமாற இகல்கோப*
*வெஞ்சமர சூர னெஞ்சுபக வீர*
*வென்றி வடிவேலை விடுவோனே*
*விம்பமதில் சூழு நிம்பபுரவாண*
*விண்டல மகிபர் பெருமாளே!*

—(திருப்புகழ்)

அருணகிரிநாதசுவாமிகள் "நிம்பபுரம்" என்று போற்றிய தலம் எது என்பது பற்றி ஆராய்ச்சியாளர்கள் முடிவேதும் எடுக்க இயலவில்லை. அண்மையில் அதற்கொரு அற்புதமான குறிப்பு அறுமுகன் அருளால் கிட்டியது கர்னாடக மாநிலத்தில். பெல்லாரி -ஹோஸ்பெட் - ஹம்ப்ளி இரயில் வழியில் ஹோஸ்பெட்டி லிருந்து பஸ் மூலம் ஹம்பியை அடைகிறோம். அருணகிரிநாதர் காலத்தில் விளங்கிய ஹிந்துப் பேரரசான விஜய நகரத்தின் இடிபாடுகளை இங்கே நாம் காண்கின்றோம். கமலாபுரம் வழியே

தளவாரி கட்டாவை அடைந்து துங்கபத்திரையாற்றின் தென் கரைக்கு வருகிறோம். தற்போது வாழைத் தோட்டங்களாகக் காணப்பெறும் இடம் முன்பு நிம்பபுரம் (நிம்பபுரா) என்று அழைக்கப்பட்டது. இதற்கருகில் காம்பீலி நகரம் உள்ளது. துங்கபத்திரையின் வடகரையில் ஆனே குந்தி உள்ளது. (இது இராகவேந்திர சுவாமிகள் தொடர்புடையது). ஆகவே இன்றைய ஹம்பி இடிபாடுகள் நிறைந்த சின்னங்களின் ஒரு பகுதியே நிம்பபுரம் என்பது தெளிவாகின்றது.

எண்பது ஆண்டுகளுக்கு முன்பு துங்க பத்திரையில் ஏற்பட்ட வெள்ளத்தால் நிம்பபுரம் அடித்துச்செல்லப்பட்டது. அங்கிருந்த மக்கள் தற்காலத்தில் ஆனேகுந்தியில் வாழ்கிறார் கள். இங்குள்ள வாழைத்தோட்டங்களைச் செப்பனிடும் போது கோயில்களின் சின்னங்கள் கிடைக்கின்றன. சில விக்ரகங்களும் கிடைத்தன. சில களவு செய்யப்பட்டன. ஒரு சில இடங் களில் சிவலிங்கங்கள் உள்ளன. ஆகவே நன்கு விளங்கி இருந்த ஒரு கோயில் இன்று அடையாளம் தெரியாத வண்ணம் சிதைந்து விட்ட கால வெள்ளத்தின் கொடுமையை நாம் எண்ணிப் பார்க்கும்போது வேதனையாக உள்ளது. இருக்கும் கோயில்களையே நன்கு பராமரிக்காத நம் மக்களா நிம்பபுரம் கோயிலை மீண்டும் எழுப்பப்போகிறார்கள்! முருகன் திருவுள்ளம் எப்படியோ! ஹம்பியை வரலாற்றுச் சின்னமாக நன்கு பேணிக்காக்கும் முயற்சியில் நிம்பபுரம் கோயிலின் சின்னங் களையும் கண்டறியவேண்டும்.

ஹோஸ்பெட் MMTC அன்பர் V. வேணுகோபால் இத்தலச் சான்றுகளை நேரில் கண்டு வரைபடத்துடன் உதவி யுள்ளமை போற்றற்குரியது.

# கொடும்பையின் பேராளன்

*கலைஞரெனுங் கற்புக் கலியுகபந் தத்துக்*
*கடனபயம் பட்டுக் கசடாகுங்*
*கருமசடங் கச்சட் சமயிகள்பங் கிட்டுக்*
*கலகலெனுங் கொட்புற் றுடன்மோதும்*
*அலகில்பெருந் தர்க்கப் பலகலையின் பற்றற்*
*றரவியிடந் தப்பிக் குறியாத*
*அறிவையறிந் தப்பற் றதனினெனுஞ் சற்றுற்*
*றருள் வசனங் கிட்டப் பெறலாமோ*
*கொலைஞரெனுங் கொச்சைக் குறவரிளம் பச்சைக்*
*கொடி மருவுஞ் செச்சைப் புயமார்பா*
*கொடிய நெடுங் கொக்குக் குறுகவுணன் பட்டுக்*
*குரைகடல்செம் பச்சக் கரவாளச்*
*சிலைபக எண்டிக்குத் திகிரிகளும் பத்துத்*
*திசைகளினுந் தத்தச் செகமேழுந்*
*திருகுசிகண் டிப்பொற் குதிரைவிடுஞ் செட்டித்*
*திறலகொடும்பைக்குட் பெருமாளே.* (திருப்புகழ்)

கல்யாணம் ஆக வேண்டுமா? புத்திரப்பேறு கிட்ட வேண்டுமா? இவ்விரு பிரார்த்தனைகளையே யன்றி நினைத்த காரியம் கை கூடுமா கூடாதா என்று அருள் விடைபெறவும் அமைந்த அற்புதமான முருகன் திருக்கோயில் கொடும்பை என்னும் தலமாகும். தற்காலத்தில் கொடும்பு என்று இது அழைக்கப் படுகிறது. கேரள மாநிலத்தில் பாலக்காடு மாவட்டத்தில் பாலக்காட்டிற்குத் தென்கிழக்கில் 6 கி. மீ. தொலைவிலுள்ள இத்தலத்திற்குப் பாலக்காட்டிலிருந்து சித்தூர், பொள்ளாச்சி செல்லும் பஸ்களில் சென்று அடையலாம். இது வரையில்

அருணகிரிநாதர் பாடிய கொடும்பை என்ற தலம் கொடும்பாளூர் என்று கருதப்பட்டு வந்தது. ஆனால் முருகனருள் கூட்ட இப்போது நாம் உண்மையான கொடும்பையே கண்ட றிந்து அங்கே செல்கிறோம்.

நினைத்த காரியம் வெற்றி பெற வேண்டி பூப்போட்டு —பூ கொடு-கொடு-பூ என்று பிரார்த்திப்பதால் இத்தலம் கொடுபூ-கொடும்பூ என்று வழங்கப்படுகிறது என்று கூறுவர்.

இங்கே கல்யாண சுப்பிரமணியசுவாமி கோயில் சிறப்பாக உள்ளது, ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு நின்ற திருக்கோலத்தில் வனவல்லியும் கஜவல்லியும் உடனிற்கக் கிழக்கு நோக்கி முருகவேள் விளங்குகின்றார். துவஜஸ்தம்பத்தில் சேவற்கொடி சிறப்பாக உள்ளது. பாலசுப்பிரமணியர் வடிவமும் உற்சவ மூர்த்தத்தில் உள்ளது. இங்கே சிவபெருமான்: கோஷ்டேசுவரர் எனவும், அம்பிகை: மரகதாம்பாள் எனவும் வழிபடப்பெறுகின்றனர்.

தினமும் மூன்றுகால வழிபாடுகள் இங்கே நிகழ்கின்றன. புத்திரப்பேறு வேண்டுவோர் சஷ்டி விரதமிருக்கிறார்கள். சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும்! தங்கத்தால் சர்ப்பமும் முட்டையும் செய்து மூன்று வருஷகாலம் விரத மிருந்துவழிபடுகின்றனர். திருமணமாகாதவர்கள்பிரார்த்தித்துத் திருமணம் நிகழப்பெறுகின்றனர்.

மாதப்பிரதோஷம், சஷ்டி, கார்த்திகை சிறப்பு நாட்கள் கார்த்திகை மண்டல பூஜை, கந்த சஷ்டி, தைப்பூசம், சித்திரை விஷு முதலியன கொண்டாடப் பெறும். 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை நிகழும் மஹாமகம் இங்கு சிறப்புடையது. நவராத்திரி ஒன்பது நாட்களிலும் முருகவேளுக்கு விதவித அலங்கார வழிபாடு நடைபெறுகிறது.

பாரதப்புழை-சோகநாசினி-கண்ணாடிப்புழை புண்ணியப் புனலாகும். மஹாமகத்தின் போது வெள்ளம் பொங்கி வருகிறது. ஐப்பசி அமாவாசையில் இதில் நீராடற் சிறப்பாகும். தலவிருட்சம்: செண்பகம்.

இத்தலத்தில் பகவதிகளைக் கூட்டிக்கொண்டு செல்லும் மந்திரவாதி ஒருவர் வேலவனைத் துணைக்கழைக்க அவர் வேலா யுதத்தாற் கொல்லப்பட்டார். இன்றும் அவர் மரபினர் குத்த காணிக்கை (படிப்பணம்) கட்டுகிறார்கள்.

செங்குந்த மரபினர் திருப்பணி கொண்ட இத்தலம் கேரளா தேவஸ்வம் போர்டு நிர்வாகத்தில் உள்ளது. இக் கோயில் பெருவிழாவில் கோவை கூனம்பட்டி மாணிக்கவாசகர் மடாதிபதிகள் துவஜாரோகணம் செய்து வைப்பர் என்பர்.

பாலக்காட்டில் முருகன் கோயிலுள்ளது. கொடும்புக்குத் தென்கிழக்கில் 10 கி. மீ. தொலைவில் சேனம் புள்ளிமலை முருகன் கோயில் சிறப்புடையது

கொடும்பைக் கோயிலில் 36 கால்மண்டபத்தில் 8 தூண்களில் உள்ள சிற்பங்கள் கண்ணையும் கருத்தையும் கவர்வன. நாகலிங்க கணபதி, தண்டபாணி, ஊர்த்துவ தாண்டவம், வீரவாகு, ஆனையுரித்த கோலம், சதுர்ப்புஜமுருகன் மயில்மீது விளங்கும் கோலம், காளி, ருக்மிணி சத்யபாமாவுடன் வேணு கோபாலன் சிற்பங்கள் சிறப்புடையன.

இத்தலத்தில் அருணகிரிநாதர் பாடிய "கலைஞரெனும்" என்று தொடங்கும் திருப்புகழேயன்றி, "விழைந்தமதி" என்று தொடங்கும் ஒரு பாடலும் உள்ளது. அது அருணகிரிநாதர் பாடலில்லை என்று ஆன்றோர் கருதுகின்றனர்

*ஆரணமும் ஆகமும் அருந்தமிழும் துதிபாட அமைந்த அண்ணல்*
*சீரணவும் நூல்வாங்க மன்பரிடம் நானுமங்கு செல்வேனென்று*
*நாரணவச் சொல்லி எழுந்தருளிய வேலவன் அந்த நான்முகத்தோன்*
*ஓர்கிலனுயிருப்பது கண்டே தகைந்தான் கொடும்புநகர் உள்ளோன் அம்மா!*

*கேரளத்திற் பாலக்காட்டருகினிலே கொடும்பெனும் பேர் கிளத்துகின்ற*
*பேரெழிலுற்றிடு பதியாம் பாலபுரியினில் வாழும் பெம்மான் அன்பர்*
*யாருரினும் அவர்கவலை போக்குகின்ற பேராளன் இணையில் சோதி*
*காரணைய கருணையினன் கல்யாண சுப்ரமண்யன் கழல்கள் போற்றி!*

*ஏகநாயகனே எம்குலமுழுதும் ஆளவந்த யெம்பிரானே*
*சோக நாசினிக்கரையில் கொடும்புலவர் ஆலயத்தில் தோற்றம் கொண்டோய்*
*வேகமாகிய மயில்மேல் உலாவரும் செவ்வேட் பெருமான் விழைந்தவள்ளி*
*பாகமுரு மொழிக்குருகும் திருமுருகா நின்னுடைய பாதம்போற்றி!*

கி. வா. ஜ.

# காசிகங்கையில் மேவிய பெருமாள்

வேழ முண்ட விளாகனி யதுபோல
மேனி கொண்டு வியாபக மயலூறி
நாளு மிண்டர்கள் போல்மிக அயர்வாகி
நானு நைந்து விடாதருள் புரிவாயே
மாள அன்றம ணீசர்கள் கழுவேற
வாதில் வென்ற சிகாமணி மயில்வீரா
காள கண்டன் உமாபதி தருபாலா
காசி கங்கையில் மேவிய பெருமாளே!

கங்கையில் வளர்ந்த காங்கேயனும் சண்முகன் காசியில் விளங்கியருள்புரிகின்றான். ஹிந்துக்களுக்கு மிகப்புனிதமான இத்தலம் வடஇந்தியாவில் உத்திரபிரதேசமாநிலத்தில் உள்ளது. கங்கைக் கரையிலமைந்த இத்தலத்திற்கு பஸ், இரயில் வசதிகள் மிகுதி.

காசி, ஆனந்தவனம், மகாஸ்மசானம் என்றெல்லாம் அழைக்கப்படும் வாரணாசி நகரில் கேதாரகட்டம் சிறப்புடையது இங்கே கேதாரீசுவரர் திருக்கோயில் திகழ்கின்றது. இறைவன்: கேதாரநாதர். இறைவி: கௌரி.

இத்தலத்தில் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு தென் திசை நோக்கி முருகவேள் எழுந்தருளியுள்ளார்.

கணபதி, தண்டபாணி, பைரவர், பத்ரிநாராயணர் சந்நிதிகளும் உள்ளன.

தினமும் நான்கு கால வழிபாடு நிகழ்கின்றது. திருவோணம், சோமவாரம்(திங்கட்கிழமை)சிறப்பு. பிரதோஷம்,

கிர்த்திகை, சோமவாரம், அஷ்டமி, பௌர்ணமி, சிவராத்திரி, நவராத்திரி, கந்த சஷ்டி, வைகாசி விசாகம் விழாக்களில் சிறப்பு வழிபாடு நிகழ்கின்றது.

புண்ணியப்புனல்: கங்கை (கௌரி தீர்த்தம்). மாந்தாதா முனிவர் வழிபட்டதை காசிகேதார மான்மியம் பேசுகின்றது. இத்தலம் திருப்பனந்தாள் மடத்தின் காசிகுமாரசாமி மடத்தின் நிர்வாகத்தில் உள்ளது.

அருணகிரிநாதர் காசியில் கந்தனைப் போற்றிய மூன்று திருப்புகழ்ப் பாக்கள் கிடைத்துள்ளன. "வேழமுண்ட", "தாரணிக்", "மங்கைக்கணவ" என்றுஅவை தொடங்குகின்றன.

காசியில் சேதுபதிமன்னர் பிரதிஷ்டை செய்த சேதுமடம் திருக்கோயிலும் மிகச்சிறப்புடையது. இச்சிவாலயத்தில் ஆறு முகங்களும் பன்னிருகரங்களும் கொண்டு சண்முகப் பெருமான் மயிலுடன் நின்ற கோலத்தில் இருதேவியருடன் கிழக்கு நோக்கி விளங்குகிறார். கடம்பன், இடும்பன், விளங்குகின்றனர். 40 ஆண்டுகட்கு முன்பு கந்த சஷ்டி விழா இங்கே சிறப்பாக நடைபெற்றதென அறிகிறோம்.

காசிவிசுவநாதர், விசாலாட்சியம்பிகையை வழிபடும் போது கேதாரீசர் கோயிலில் வழிபட்டு முருகவேள் கருணையைப் போற்றி சேதுமடம் ஆறுமுகனையும் வழிபட்டு அருள்பெற வேண்டும்.

# மாயாபுரி மயில்வாகனன்

மாயாபுரி என்னும் வடஇந்திய திருப்புகழ்த்தலம் ஹரித்வார் என்று கூறுவார். இங்கே தட்சிணேஸ்வரர் கோயில் உள்ளது. இக்கோயிலில் முருகன் திருவுருவம் இல்லை. அருணகிரிநாதர் பரவிய திருப்புகழ் கொண்டு இத்தல முருகனை அருவவடிவில் பணிவோமாக;

*சிகர மருந்த வாழ்வது சிவஞானம்*
*சிதறி அலைந்து போவது செயலாசை*
*மகர நெருங்க வீழ்வது மகமாய*
*மருவி நினைந்திடாவருள் புரிவாயே*
*அகர நெருங்கினுமய முறவாகி*
*அவச மொடுங் கையாறொடு முனமேகிக்*
*ககன மிசைந்த சூரியர் புகமாயை*
*கருணை பொழிந்து மேவிய பெருமாளே!*

மாயை என்று வருவதைக் கொண்டு மாயாபுரி என நம் தணிகைமணியவர்கள் இத்தலத்தைச் சுட்டி அது ஹரித்வார் என்று கூறிச் சென்றுர்கள். இப்பாடல் அற்புதமான சிவ ஞானத்தைத் தருவதோடு மாயை வலையினின்றும் நம்மை மீட்டு இறையருளில் செலுத்தும் அருமையான கவசமாகவும் துலங்குகின்றது.

## வைரவி வனத்தில் மேவும் பெருமாள்

வைரவி வனம் என்பது பஞ்சாப் மாநிலத்தில் அமைந்த ஒரு தலம் என்பர் தணிகைமணியவர்கள். இத்தலம் சரஸ்வதி நதிக்கரையில் இருப்பதாகத் திருப்புகழ் வரிகள் காட்டுகின்றன. அம்பிகையின் அறுபத்துநான்கு பீடங்களில் ஒன்றாக இத்தலம் இருக்கலாம் என இதன் பெயரைக்கொண்டு கருத இடமளிக்கின்றது. எப்படியாயினும் வடஇந்தியத் தலமே இது என்பதில் ஐயமில்லை. தமிழகத்தில் நம் ஆய்வு சென்ற வரையில் இப்பெயருடைய தலம் இல்லை என்று கூறலாம். அருணகிரிநாதர் இத்தலத்தில் பாடிய அருமைமிகும் திருப்புகழைக் காண்போம்:

*அருவரை யெடுத்த வீரன் எரிபட விரற்க ளூனும்*
*அரனிட மிருக்குமாயி அருள்வோனே*
*அலைகட லடைத்த ராமன் மிகமன மகிழ்ச்சிகூரும்*
*அணிமயில் நடத்தும் ஆசை மருகோனே*
*பருதியி னொளிக்கண் வீறும் அறுமுக நிரைத்த தோள்ப*
*னிருகர மிகுத்த பார முருகாநின்*
*பதமலர் உளத்தில் நாளும் நினைவுறு கருத்தர் தாள்கள்*
*பணியவும் எனக்கு ஞானம் அருள்வாயே!*
*சுருதிகள் உறைத்த வேதன் உரைமொழி தனக்குளாதி*
*சொலுவென உரைத்தஞான குருநாதா!*
*சுரர்பதி தழைத்து வாழ அமர்சிறை யனைத்துமீள*
*துணிபட அரக்கர் மாள விடும்வேலா!*
*மருமலர் மணக்கும் வாச நிறைதரு தருக்கள்சூழும்*
*வயல்புடை கிடக்குநீல மலர்வாவி*
*வளமுறு தடத்தினோடு சரஸ்வதி நதிக்கண்வீறு*
*வயிரவி வனத்தில்மேவு பெருமாளே!*

**இத்தலம் இது என விளக்குமாறு இபமாமுருகன் இளையோன் நமக்கருள் வேண்டுவோமாக.**

## கயிலைமலை

*புமியதனிற் ப்ரபுவான      புகலியில் வித்தகர்போல*
*அமிர்தகவித்தொடைபாட      அடிமைதனக் கருள்வாயே!*
*சமரிலெதிர்த்த சுரர்மாளத்  தனியயில்விட் டருள் வோனே*
*நமசிவயப் பொருளானே          ரசததிரிப் பெருமாளே!*

**(திருப்புகழ்)**

கயிலைமலை, வெள்ளிவெற்பு, ரசதகிரி, கயிலாயம் என்றெல்லாம் போற்றப்பெறும் திருக்கயிலைமலை இமயமலைச் சிகரங்களுள் ஒப்பற்ற சிகரமாகும். இங்கே விநாயகர், முருகன், சிவபெருமான், உமையவள் ஆகியோர் என்றும் விளங்கி இவ்வுலகைப் புரக்கிறார்கள் என்பது சைவப் பேருண்மையாகும். கயிலைமலைச்சிகரம் கடல்மட்டத்திற்கு மேல் 22028 அடிஉயரமும், 32 மைல் சுற்றளவும் கொண்டது. கயிலாயமும் மானசசரோவரமும் சேர்ந்து கௌரி சங்கரம் என்று கூறப்படும். கயிலாயம் சிவவடிவமாகவும் மானசசரோவரம் சக்திவடிவமாகவும் காட்சியளிக்கின்றன. திபெத்தை சார்ந்த பகுதியில் இம்மலை அமைந்துள்ளது. அல்மோராவிலிருந்து புறப்பட்டு லிப்புத்தடாகக் கணவாய் வழியே கயிலாயமலையை அடையலாம். ஆனி, ஆடி, ஆவணி மாதங்களே யாத்திரைக்கு ஏற்றது.

குன்றுதோறாடலில் கயிலையை முதலாவதாக வைத்துப் போற்றுகிறார் அருணகிரிவள்ளல். ஆறுதிருப்புகழ்ப் பாக்களால் கயிலாயமலையில் அருபமாக விளங்கும் கந்தனைப் பரவுகின்றார். சிவபெருமானும் சகதியாகிய உமையம்மையும் விளங்கும் இப்பகுதியில் கணபதியும் முருகனும் விளங்கத்தானே வேண்டும். அருமையாக வருகிறது திருக்கயிலையின் முதல்திருப்புகழ்:

"பரிபுர கழலெட் டாசை செவிடுகள் படமுத் தேவர்
பழமறை பணியச் சூல மழுமானும்
பரிவொடு சுழலச் சேடன் முடிநெறு நெறெனக்கோவு
பரியினைமலர் விட்டாடி அடியோர்கள்
அரஹர உருகிச் சேசெயெனதிரு நடனக்கோலம்
அருள் செயும் உமையிற்பாகர் அருள்பாலா
அலரணி குழல்பொற் பாவை திருமகள் அமளிப்போரொ
டடியவர் கயிலைக் கான பெருமாளே!

(திருநிலை — திருப்புகழ்)

அடுத்து "தேனுந்து" என்று தொடங்கும் கயிலைத் திருப்புகழ் முந்தியதை விஞ்சி நிற்கிறது.

தேனுந்து முக்கனிகள் பால்செங் கருப்பிளநீர்
சீரும்பழித்தசிவ மருளூறத்
தீதும் பிடித்தவினை யேதும் பொடித்துவிழ
சீவன் சிவச் சொருப மெனதேறி
நானென்ப தற்றுயிரொ டேனென்ப தற்றுவெளி
நாதம்பரப்பிரம வொளிமீதே
ஞானஞ் சுரப்ப மகிழாநந்த சித்தியொடெ
நாளுங் களிக்கபதம் அருள்வாயே!

சிவகுடும்பத்தையே காண்கிறார் "பனியின் விந்துளி" எனத் தொடங்கும் திருப்புகழில் அருணகிரிவள்ளல்.

"சிவன் மகிழ்ந்தருளானைமா முகன் மருவி
மனமகிழ்ந் தருள் கூரவொர் கயிலைமகிழ்
திகழ் குறிஞ்சியின் மாதுமால் பரவு புகழ் பெருமாளே.

இராவணனுக்கு அருளிய சிவனருளை யாரே மறக்க முடியும்? அருணகிரிவள்ளலும் அதை நினைவுபடுத்துகிறார். 'முகத்தை" என்று தொடங்கும் திருப்புகழில்!

மிசைத்துத் தொடுற்று அசைத்துப் பொறுத்தரக்கன்
மிகுத்துப் பெயர்த்தெடுத்த கயிலாய
மிசைக் குற்றடுத்து மற்ற பொருப்பைப் பொடித்திடித்து
மிதித்துத் துகைத்து விட்ட பெருமாளே!

# கதிர் காமக் கந்தன்

*இறவாமற் பிறவாமல் எனையாள் சற்குருவாகிப்*
*பிறவாகித் திரமான பெருவாழ்வைத் தருவாயே*
*குறமாதைப் புணர்வோனே குகனேசொற் குமரேசா*
*கறையானைக் கிளையோனே கதிர்காமப் பெருமாளே!*

கி. மு. மூன்றும் நூற்றுண்டில் ஸ்ரீலங்காவில் பௌத்த மதத்தை மகிந்தரவும் சங்கமித்தையும் அறிமுகப்படுத்திய காலத்தில், ஸ்ரீலங்கா மக்கள் சைவநன்னெறியிலேயே வாழ்ந்து கொண்டிருந்தனர் என்பதை ஆரம்பகால இலங்கையின் சமூக வரலாற்று நூலில் பேராசிரியர் எல்லவலா கூறுகின்றுர். கி. மு. இரண்டாம் நூற்றுண்டில் ஈழ அரசர் துதுகெமுனு என்பவர் கதிர்காமத்தில் விளங்கும் கந்தன் கோயிலில் பல நிவந்தங்களை நிறுவினுர்என்று வரலாறுகாட்டுகின்றது. இவ்வாறு இலங்கையில் வாழ்ந்த ஹிந்துக்களும் பௌத்தர்களும் பரவியதால் தேசியக் கடவுளாக விளங்குகிறுர் கதிர்காமக்கந்தன்.

இலங்கையின் எழில்மிகு அம்பாந்தோட்டைமாவட்டத்தில் திசமகாரகமவட்டத்தில் விளக்கும் கதிர்காமம் வரலாற்றுப் புகழ் பெற்ற கந்தன் திருப்பதியாகும். கொழும்பிலிருந்து மாத்தறை வரை இரயில் வழியில் சென்று அங்கிருந்து பஸ் மூலம் இத்தலத்தை அடையலாம். இங்கே பிள்ளையார் ஆலயம், முருகன் ஆலயம், தெய்வானை அம்மன் ஆலயம், வள்ளியம்மன் ஆலயம், ஆகியவற்றேடு முத்திலிங்கசுவாமி கோயிலும்வழிபடற் குரியது.

கயிலைமலை, திருக்கோணமலை ஆகியவற்றுடன் நேராக வைத்து எண்ணத்தக்கது கதிர்காமமலை. இது கதிரமலை எனப்படும்

கதிர்காமமலையே முருகனது திருவடிவாக வணங்கப் பெறுவதும் உண்டு கதிர்காமத்தில் கந்தவேள் ஒளி (ஜோதி) வடிவில் வணங்கப் பெறுகிறார். இங்கே அருவ வழிபாடு நிகழ்கிறது. உருவத்திருமேனிகள் இல்லை. இத்தலத்தில் பன்னிரண்டு ஆண்டுகள் இருந்து முருகனைப் பூசித்து முருகனடி சேர்ந்த முத்துலிங்க சுவாமிகளால் வணங்கப்பட்ட சடாட்சர மந்திரவடிவாக அமைக்கப்பட்ட முருகவேளது இயந்திரப் பொற்றகடு உள்ள பெட்டியே இப்பொழுது திரைச் சீலையால் மறைக்கப் பட்டிருக்கும் கதிர்காமக்கந்தன் ஆலயத்து மூலத்தானத்தில் வைக்கப்பட்டுள்ளது எனக்கூறுவர். மலையின் உச்சியிலும் வேல் நாட்டிவணங்குகிறார்கள்

தட்சிண கயிலாயமான்மியப்படி இக்கதிர்காமம்–ஒளியும் அன்பும் நிறைந்த மலையாகும். (கதிர்-ஒளி; காமம்-அன்பு) இங்கே பிள்ளையார்மலை, வள்ளிமலை, தெய்வயானையம் மன்மலைகள உள்ளன. இம்மலைகளிலேறி, நதியில் நீராடி, அங்கப்பிரதட்சிணம் செய்து அருள் பெறுதல் மரபு. மாணிக்கக் கங்கைநதி மனநோய்களையும் போக்கவல்லது இத்தலத்தில் தவமுனிவர்கள் பலர் தவமியற்றி அருள் பெற்றுள்ளார்கள்.

கந்தவேள் சூரபன்மனை வதைத்தபின் கதிர்காமத்தில் தங்கியிருக்கத் தீர்மானித்தார். விஸ்வகர்மா கந்தனுக்கு அற்புத ஆலயம் ஒன்றை அமைத்தான். அது சிந்தாமணி ஆலயம் எனத தலமான்மியம்கூறும இம்மலையில ஒன்பது புண்ணியப புனல்கள் உளளன. இவற்றைத்தவிரச் சிறப்பாக விளங்குவது மாணிக்க கங்கையாகும.

ஈழமண்டலசதகம், கதிர்மலைப்பள்ளு ஆகியன இத் தலமான்மியத்தைப் பேசும் நூல்களாகும்.

கதிர்காமக் கந்தனுக்குப் பூசைபுரிபவர் வாயைச் சீலையால் கட்டிக் கொண்டு மௌனமாக நின்றுப்பூசிப்பதே வழக்கமாகும். இத்தலத் திருவிழாக்கள்: ஆடித்திருவிழா, ஆடித்தீர்த்த திருவிழா (திருவோணம்) திருக்கார்த்திகை விழா, சித்திரைச் சிறப்புவிழா முதலியன. ஸ்ரீலங்கா அறநிலைய ஆட்சித்துறையினரால் இக்கோயில் நிர்வகிக்கப்படுகிறது.

நம் அருணைமுனிவராம் அருணகிரிநாதசுவாமிகள் தம் திருப்புகழ்ப்பாக்களில் 25 பாடல்களில் கதிர்காமக்கந்தன் புகழைப் போற்றுகின்றார்.

1. வண்முறைவேடன் அருளிய பூசை
மகிழ் கதிர்காமம் உடையோனே. (அகரமுமாகி)

2. தீரவேல் வீரகதிருகாம மூதூரில் உறைவோனே
(அடைபடாது)

3. கலகவாரி போல் மோதி வடவை ஆறு சூழ்சீத
கதிர காமமூதூரில் இளையோனே (அலகின்மாறு)

4. அருட்பொற் றிருவாழி மோதிர
மளித்துற்றவர் மேல் மனோகர
மளித்துக் கதிர்காம மேவிய பெருமாளே.
(உடுக்கத்துகில்)

5. கதிரகாம வெற்பிலுறைவோனே (எதிரிலாத)

6. கதிர் காமத்தரங்க மலை வீரா (நடகட வருவிகள்)

7. உலகனே மிக்க கதிருகாமத்தில் ஒருவனே
(கலைவிலேமைக்கண்)

8 பழநியும் தெற்குச் சற்குரு வெற்புங்
கதிரையுஞ் சொற்குட் பட்ட திருச்செந்திலும் வேலும்
(கனிதரும்)

9. கதிர்விடுவேலைக் கதிரினில் மேவிக்
கலை பல தேர்முத் தமிழ்நாடா (சூடமிடை)

10 கதிர்காம முற்று வளர் சிவசமய அறுமுகவ (குமரகுரு)

11 சொந்தக் குறமகள் கணவா திறல் சேர் கதிர்காமா
(கொந்துத்)

12. அயிற்குக கதிர் காமமாலையிற் (கோமள)

13. அரிய கதிர் காமத்தில் உரியாபிராமனே (சமரமுக)

14. கதிர்க்காமமுற்றூர் முருகோனே (சாந்தே உதித்தாய்)

15. கதிலிசூழ் தெற்றிசைப் பயிலும் ஈழத்தினிற்
கதிர்காமகிரி பெருமாளே (சரியையாளர்)

16. மணிதரளம் வீசி அணியருவி சூழ
மருவுகதிர்காமத் பெருமாள்காண் (திருமகளுலாவு)

17. அத்யுக்ர யாகோபடும் ரத்நத்ரி கோண
சயிலத்துக்ர கதிர்காம (பாரவிதழுந்தும்)

18. கதிர்வேலும், கதிரையுஞ்சக்ரப் பொற்றையுமற்றும்
பதிகளும் பொற்புக் கச்சியு முற்றுங்
கனவிலுஞ் சித்தத்திற் கருதிக் கொண்டடைடவேனே
(புரைபடுஞ்)

19. குன்றகிகதிரை பூப்பரம் (பொங்குங்கொடிய)

20. கனகமாணிக்க வடிவனே மிக்க
கதிரகாமத்தில் உறைவோனே (மருவருவெற்றி)

21. கதிருகாம சிராமஸேகச்சியில்
திருவையாருடன் மேவுதலத்துறை பெருமாளே
(மருவிலாவிடு)

22. தோமில்கதிர்காமப் பெருமாளே (மாதர்வசமாய்)

23. கதிரகாம மாநகர்க்குள் எதிரிலாதவேல்தரித்த
கடவுளே கலாபசுத்ரமயில் வீரா (முதிருமா)

24. பதமடியர்காண வந்த கதிர்காமா (வருபவர்கள்)

# திருக்கோணமலை அநுகூலப்பெருமான்

"...............................................

*மலைக்கு நாயக சிவகாமி நாயகர்*
*திருக்கு மாரென முகத்தாறு தேசிக*
*வடிப்ப மாதொரு குறப்பாவை யாள்மகிழ் தருவேளே*
*வசிட்டர் காசிபர் தவத்தான யோகியர்*
*அகத்ய மாமுனி யிடைக்காடர் கீரனும்*
*வகுத்த பாவினில் பொருட்கோல மாய்வரு*
*முருகோனே.*
*நிலைக்கு நான்மறை மகத்தான பூசுரர்*
*திருக்கொணமலை தலத்தாரு கோபுர*
*நிலைக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில்*
*வருவோனே*
*நிகழ்த்து மேழ்பவ கடற்துறை யாகவெ*
*யெடுத்த வேல்கொடு பொடித்தூள தாளறி*
*நினைத்த காரியம் அநுக்கூலமேபுரி பெருமாளே.*
*(விலைக்குமேனி...)*

ஸ்ரீலங்காவில் தட்சிணகயிலாயம் என்றழைக்கப்படும் திருக்கோணமலை திருக்கோயில்-தேவாரக்கோயில் ஸ்ரீமாதுமையம்பாள் சமேததிருக்கோணேசப்பெருமான் ஆலயமாகும். தம்பலகாமம் ஸ்ரீஹம்சகமனாம்பிகாதேவி சமேத அருள்மிகு ஸ்ரீ ஆதிகோணநாயகசுவாமி திருக்கோயிலும் உள்ளது. இதுபுதியது. இலங்கையில் விளங்கும் இருதேவாரத் தலங்களுள் ஒன்று கோணேசர் ஆலயமாகும்; மற்றொன்று திருக்கேதீச்சரம் ஆகும்.

போர்த்துகீசியரால் தரைமட்டமாக்கப்பட்ட திருக்கோணமலைதிருக்கோயில், மீண்டும் எடுக்கப்பட்டு 28—1—1980 ல் குடமுழுக்குவிழாச் சிறப்பாக நடந்தேறியது.

இலங்கையின் கீழ்ப்பால் மூன்றுபுறமும் கடல்சூழப்பட்ட திரிகோணமலை கோணநாதர் ஆலயம் கண்ணையும் கருத்தையும் கவரும் சூழலில் அற்புதமாகத் திகழ்கிறது. திருக்கோணமலை மாவட்டத்தில் தம்பலகாமம் நெற்களஞ்சியமாகும். மருத நிலத்திற்கோர் எடுத்துக்காட்டாகத்திகழும் தம்பலகாமத்தின் சிரோரத்தினமாய் இத்தலம் விளங்குகிறது.

அருணகிரிநாதசுவாமிகள் பாடிப்போற்றிய பண்டைய திருக்கோணமலைக்கோயிலை நாம் இழந்தாலும், அதே இடத்தில் அக்காலத்தில் விளங்கிய மூர்த்தங்களை மீண்டும் பிரதிட்டை செய்யப்பெற்ற புதிய கோயிலில் வழிபடும் பேறுபெற்றதற்கு இலங்கைவாழ் சைவப்பெருமக்களைப் போற்றிப் பணியவேண்டும். இங்குள்ள முருகன் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு இருதேவியருடன் திகழ்கின்றார். தினமும் நான்குகாலவழிபாடு நிகழ்கிறது.

திருக்கோணமலையில் வெள்ளைவில்வபத்திரகோணேசுவரர் ஆலயம் ஒன்றும் உண்டு. இதுவும் பழமையானது. இறைவன் தான்தோன்றீஸ்வரர் ஆவார்.

திருக்கோணமலை திருக்கோயிலுக்குத் தேவாரப்பதிகங்களும் கோணேசுவரமான்மியம், திருக்கோணேசர் திருவூஞ்சற் பதிகம், முதலிய நூல்களும் உள்ளன.

சித்திராபூர்ணிமை, திருவெம்பாவை, சிவராத்திரி விழாக்கள் சிறப்புடையவை. பாபநாசதீர்த்தம் புண்ணியப் புனலாகும்.

சபைமூலம் இத்திருக்கோயில் நிர்வகிக்கப்படுகிறது.

# அருக்கொணுமலை தருக்குலாவிய பெருமாள்,

... "வெடுத்த தாடகை சினத்தை யோர்கணை
விடுத்து யாகமும் நடத்தி யேயொரு
மிகுத்த வார்சிலை முறித்த மாயவன் முருகோனே
விதித்து ஞாலம தளித்த வேதனை
யதிர்த்து வோர்முடி கரத்து லாயனல்
விழித்து காமனை யெரித்த தாதையர் குருநாதா
அடுத்த ஆயிர விடப்ப ணுமுடி
நடுக்க மாமலை பிளக்க வேகவ
டரக்கர் மாமுடி பதைக்க வேபொரு மயில்வீரா
அறத்தில் வாழுமை சிறக்க வேயறு
முகத்தி னேடணி குறத்தி யானையொடு
அருக்கொணுமலை தருக்குலாவிய பெருமாளே!"

(தொடுத்த...)

ஸ்ரீலங்காவில் யாழ்ப்பாணம் மாவட்டம் தெல்லிப்பழை வட்டத்தில் காங்கேயன் துறையிலிருந்து 3 கல் தொலைவிலுள்ள நகுலேஸ்வரம் என்ற தலம் உள்ளது. முதற்சிங்கள மன்னனுகக் கருதப்படும் விஜயன் தனது ஆட்சியை ஏற்படுத்துதற்குப் பூர்வாங்கமாகக் கிழ்திசைக்குத் தம்பலகாமத்துக்கோணேசர் ஆலயத்தை நிறுத்தி, மேற்றிசைக்கு மாந்தோட்டத்திற்கு பழுது பட்டுக்கிடந்த திருக்கேதீச்சரச் சிவாலயத்தைப் புதுப்பித்து தென்திசைக்கு மாத்தறையில் சந்திரசேகரர் கோயிலை எழுப்பி வடதிசைக்குக் கீரிமலைச்சாரிவில் திருத்தம்பலேசுவரர் கோவில்களைக் கட்டுவித்தான் என யாழ்ப்பாண வைபவமாலை கூறும்.

திருத்தம்பலேசுவரர் கோவிலில் கீரிமுகமுற்ற ஜமதக்கினி முனிவர் வழிபட்டுக் சாபம் நீங்கப்பெற்றதால் இத்தலம் கீரிமலை

எனவும் பெயர் கொண்டது. ஜமதக்கினி முனிவர் நகுலமுனிவர் எனவும் அழைக்கப்பட்டதால், அவர் வழிபட்ட இத்தலமும் நகுலேசுவரம் எனப்பெயர் கொண்டதாயிற்று. போர்த்துகீசியர் களால்பாழ்பட்ட இத்தலம் 1859ல், திருப்பணி செய்யப்பெற்றது.

தட்சிண கயிலாய புராணம், கயிலாயமாலை, நகுலாசல புராணம், நகுலமலைக்குறவஞ்சி, நகுலமலைச்சதகம், நகுலகிரி புராணம், நகுலேசுவரர் விநோதவித்தியா கவிப்பூங்கொத்து முதலியன இத்தலச்சிறப்பு கூறுவனவாம்.

இங்கே கந்தசுவாமி, காங்கேயன் என்று போற்றப்பெறும் முருகவேள் இங்கே ஒரு திருமுகத்துடன் வள்ளி, தெய்வயானை யுடன் விளங்குகிறார். உற்சவர் ஆறுமுகப்பெருமான். தினமும் ஆறுகால வழிபாடு நிகழ்கிறது. ஆடி அமாவாசை தீர்த்தவாரியும், கந்தசஷ்டி, திருவெம்பாவை, திருக்கார்த்திகைத் திருநாட்களும் சிறப்பாகக் கொண்டாடப்பெறுகின்றன.

கிரிமலைத்தீர்த்தம் புண்ணியப்புனலாகும்.

மாருதப்புர வீரவல்லி, குமாரசாமிப்புலவர், முத்துக்குமாரசாமிப்புலவர் முதலியோர் வழிபட்டுப்பாடியதலம் இது.

தொன்மையான இத்தலம் தனியார் நிர்வாகத்தி லுள்ளது.

இத்தலமே அருணகிரிநாத சுவாமிகளால் பாடப்பெறும் அருக்கொணமலை என்பர் ஆன்றோர்.

இத்தலத்தீர்த்தக்கரைச்சூழலில் பல அநுபூதிமான்களது சமாதிகள் உள்ளன. இவ்வாலயத்தைச்சுற்றிப் பல திருமடங்களும் யாத்திரிகர் வசதிக்கேற்ப உள்ளன. கதிரவேலுச் சிறுப்பர்மடம். சித்தங்கேணி வைத்தியலிங்கமடம், தொல்புரம் கிருஷ்ண பிள்ளைமடம் போன்றவை குறிப்பிடத்தக்கன.

## வைப்புத் தலங்கள்

### க்ஷேத்திரக்கோவை—திருப்புகழ்

கும்பகோணமொ(டு) ஆரூர் சிதம்பரம்
உம்பர் வாழ்வுறு சீகாழி நின்றிடு
கொன்றை வேணியர் மாயூரம் அம்பெறு சிவகாசி
கொந்து வாவிய ராமே சுரந்தனில்
வந்து பூஜைசெய் நால்வேத தந்திரர்
கும்பு கூடிய வேளூர் பரங்கிரி தனில்வாழ்வே
செம்பு கேசுரம் ஆடானை இன்புறு
செந்தில் ஏடகம் வாழ்சோலையங்கிரி
தென்றன் மாகிரி நாடாள வந்தவ செகநாதன்
செஞ்சொல் ஏரகம் மாவாவினன்குடி
குன்று தோறுடன மூதூர் விரிஞ்சைநல்
செம்பொன் மேனிய சோணாடு வஞ்சியில் வருதேவே
கம்பை மாவடி மீதேய சுந்தர
கம்பு லாவிய காவேரி சங்கமு
கஞ்சிராமலை வாழ்தேவ தந்திர வயலூரா
கந்த மேவிய போரூர் நடம்புரி
தென்சிவாயமு மேயாய கம்படு
கண்டியூர் வருசாமீ கடம்பணி மணிமார்பா
எம்பிரானொடு வாதாடு மங்கையர்
உம்பர் வாணி பொனீள்மால் சவுந்தரி
எந்த நாள்தொறு மேர்பாக நின்றுறு துதியோதும்
இந்திராணி தன்மாதோடு நன்குற
மங்கை மானையு மாலாய் மணந்துஉல
கெங்கு மேவிய தேவாலயந் தொறு பெருமாளே

தேவாரம் அருளிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்திசுவாமிகளைப்போலவே அருணகிரிநாத சுவாமிகளும் தலங்கள்தோறும் சென்று திருப்புகழ் பாடிப்பரவியதோடு, தம் திருப்புகழ்ப்பாக்களில் வைப்புத்தலங்களாகச் சிலவற்றையும் குறித்துச்சென்றுள்ளார். அவற்றுள் தெளிவாகப் புலப்படும் தலங்களையும் அங்கே எழுந்தருளியுள்ள கந்தவேள் சிறப்புக்களையும் இப்பகுதியுள் தொகுத்துக்கூறுவோம்.

| வ. எண் | மாவட்டம். | வைப்புத்தலம். | எத்தலத்திருப்புகழில் குறிப்பு. | அத்திருப்புகழ் முதலடி. |
|---|---|---|---|---|
| 1. | செங்கற்பட்டு. | திருக்கச்சூர் | திருக்குற்றாலம் | ஏடுக்கொத் |
| 2. | தஞ்சாவூர் | காவிரிப்பூம்பட்டினம் | க்ஷேத்திரக்கோவை | கும்பகோணமொ |
| | | கைச்சினம் | காஞ்சிபுரம் | முத்துரத்ன |
| | | தண்டலைநீள்நெறி | திருச்செந்தூர் | நிறுக்குஞ் |
| | | திருக்களர் | திருச்செந்தூர் | நிறுக்குஞ் |
| | | திருப்பறியலூர் | பழமுதிர்சோலை | ஆசைநாலு |
| | | திருப்புறம்பயம் | திருச்செந்தூர் | நிறுக்குஞ் |
| | | திருமருகல் | பழனி | உயிர்க்கூடு |
| | | தேலூர் | பழமுதிர்சோலை | ஆசைநாலு |
| 3. | திருச்சிராப்பள்ளி | உறையூர் | திருச்சிராப்பள்ளி | பொருளின்மேற் |
| 4 | மதுரை | திருஏடகம் | க்ஷேத்திரக்கோவை | கும்பகோணமொ |
| | | திருவாதவூர் | விராலிமலை | மோதியிறுகி |
| 5. | திருநெல்வேலி | திருநெல்வேலி | கோடிக்கரை | நீலமுகிலான |
| 6. | இராமநாதபுரம் | சிவகாசி | க்ஷேத்திரக்கோவை | கும்பகோணமொ |
| | | தனுக்கோடி | பழனி | உயிர்க்கூடு |
| 7. | ஒரிஸ்ஸாமாநிலம் | செகநாதம் | க்ஷேத்திரக்கோவை | கும்பகோணமொ |
| 8. | ஸ்ரீலங்கா. | கண்டி | திருப்பரங்குன்றம் | சந்ததம்பந்தத் |

**திருக்கச்சூர்**

மேலை விதியே வினையின் பயனே
விரவார் புரமூன் றெறிசெய்தாய்
காலை யெழுந்து தொழுவார் தங்கள்
கவலை களைவாய் கறைக்கண்டா
மாலை மதியே மலைமேல் மருந்தே
மறவேன் அடியேன் வயல் சூழ்ந்த
ஆலைக் கழனிப் பழனக் கச்சூர்
ஆலக்கோயில் அம்மானே! (சுந்தரர்)

செங்கற்பட்டுக்கு வடக்கில் உள்ள சிங்கப் பெருமாள் கோயில் ரயில் நிலையத்திற்கு வடமேற்கில் 2 கி.மீ. தொலைவில் உள்ள திருக்கச்சூர் புகழ் பெற்ற தேவாரத் தலமாகும். சுந்தரமூர்த்தி சுவாமிகள் பசியால் வருந்தி இத்தலத்துக்கு வந்த போது இறைவன் வீடுகள் தோறும் சென்று உணவு யாசித்துப் பெற்றுத் தந்தருளிய தலம் இது. இக்கோயில் ஆலக்கோயில் எனப்படும். தலவிருட்சம—ஆலமரம். அமுதம் திரண்டு வருவதற்காகத் திருமால் கச்சபம் (ஆமை) வடிவேற்றுச் சிவபெருமானை பூசித்ததால் கச்சூர் எனப்பெயா வந்தது என்பர். இறைவன், விருந்திட்டநாதா, தாழக்கோயில் இறைவா:கச்சபேசர் இறைவி: அஞ்சனுட்சியம்மை. பிராகாரத்தில் விருந்திட்டநாதா சந்நிதி உள்ளது. அமுதத்தியாகேசர் சிறப்பு. இங்கே முருகன் ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவியருடன் விளஙகுகிறுர். இவரை நம் அருணகிரிநாதர் திருக்குற்ருலத் திருப்புகழில் (ஏடுக்கொத்...) வைத்துப போற்றுகிருர். இவ்வாலயத்திற்கு மேற்கே 2 பர்லாங்தொலைவில் ஔஷதகிரிமலையில் (ஆலக்கோயில்) மருந்திசர் ஆலயம் உள்ளது. இறைவி: இருணீக்கித்தாயார் இவ்வாலயத்திற்குப் போகும் வழியில் தாலமூலவிநாயகர் (தருக்கடிவிநாயகர்) கோயில் உள்ளது. அதற்கும் மேற்கில் இரந்திட்ட ஈசுரர் விளங்கும் கோயிலும் உள்ளது.

திருக்கச்சூரில் பைரவர் சந்நிதி சிறப்புடையது. சித்ரா பூர்ணமியன்று நடன உற்சவம் நிகழும். திருக்கச்சூர் நடனம் என்று இது போற்றப்பெறும்.

(1) காவிரிப்பூம்பட்டினம்

''கும்பகோணமொடாரூர்'' என்றுதொடங்கும்க்ஷேத்திரக் கோவை திருப்புகழில் ''கம்புலாவிய காவேரி சங்கமுகம்'' என்று அருணகிரிநாதர் இத்தலத்தைக் குறிப்பிடுகிறார். ''காவேரி சங்கமுகம்'' என்பது காவிரி கடலுடன் கலக்கும் தலமாகிய காவிரிப்பூம்பட்டினத்தைக் குறிக்கும். தற்போது இது பூம்புகார் எனவும் அழைக்கப்பட்டு மாயூரம், சீர்காழி முதலிய ஊர் களிலிருந்து நிறைய பஸ் வசதி பெற்றுள்ளது இத்தலத்தில் பல்லவனீச்சரம், சாயாவனம் என்ற இரு கோயில்கள் உள்ளன.

பல்லவனீச்சரத்தில் அருள்மிகு சௌந்தரநாயகி உடனுகிய அருள்மிகும் பல்லவநாதர் கோயில் உள்ளது. இது பட்டினத்தார் வரலாற்றுத் தொடர்புடையது. திருஞானசம்பந்தர் பதிகம் கொண்டதலம் இது. இத்தலத்தில்ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவியருடன் நின்ற திருக்கோலத்தில் முருகவேள் எழுந்தருளியுள்ளார், இங்கே அம்பிகையுடன் அமர்ந்த கந்தனின் பஞ்சலோகவிக்ரகம் பார்ப்போரைப் பரவசமூட்டுவதாகும். சங்ககாலத்தில் சிறப்புற்று விளங்கிய சோழர்தலைநகரமாகிய இத்தலத்தின் ஒருபகுதியில் சம்பாதி கோயில் (சிலப்பதிகாரத்தில் பேசப்படுவது) உள்ளது.

சாயாவனம் திருக்கோயிலில் அருள்மிகு குயிலினும் இன்மொழியம்பிகை உடனுய அருள்மிகு இரத்தின சாயாவனேசர் திகழ்கின்றார். இங்கே வில்லேந்திய வேலவனும் பாலசுப்பிரமணி யரும் (செந்திலாண்டவன் கோலம்) எழுந்தருளியுள்ளனர். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், ஐயடிகள்காடவர்கோன் நாயனர் முதலியோர் பாடிப்பரவிய இத்தலம் இயற்பகை நாயனர் வரலாற்றுத் தொடர்புடையது. கோச்செங்கட் சோழ நாயனர் அமைத்த இம்மாடக் கோயில் அற்புதமானது.

இக்கோயில்கள் அறநிலையஆட்சித்துறையின் நிர்வாகத்தில் உள்ளன. உணவு வசதியும் தங்கும் விடுதிகளும் பூம்புகாரில் உள்ளன. அரசு கலைக்கூடம் ஒன்றும் காணத்தக்கது.

2. கைச்சினம்

திருவாரூர்-திருத்துறைப்பூண்டி பேருந்து வழியில் 12வது கல்லில் அமைந்துள்ளது இத்தலம். இந்திரன் கைவிரல்களின்

சின்னம் இங்குள்ள சிவபெருமான் திருமேனியில் அடையாள்மாக அமைந்திருப்பதால் திருக்கைசின்னம், திருக்கரச்சின்னம் என்ற பெயர் பெற்ற இத்தலம் தற்காலத்தில் கச்சனம் எனவழங்கப் படுகிறது. மாடக்கோயில் இது அருள்மிகு வெள்வளைநாயகி உடனுறைய அருள்தரு கைச்சினநாதர் இங்கே எழுந்தருளியுள்ளார். இங்கே ஆறுமுகப்பெருமான் பன்னிருகரங்களுடன் இருதேவியர் சூழ எழில்பெற எழுந்தருளியுள்ளார். அருணகிரிநாதசுவாமிகள் இப்பெருமானை 'முத்துரத்ன' எனத்தொடங்கும் காஞ்சிபுரத் திருப்புகழில் வைத்துப் போற்றுகின்றார். மதுரை திருஞான சம்பந்தர் ஆதீனநிர்வாகத்தில் இத்தலம் உள்ளது.

### 3. தண்டலை நீநெறி

திருத்துறைப்பூண்டியருகிலுள்ள மணலியில் அமைந்துள்ள தண்டலைச்சேரியில் அழகாகத்திகழும் இத்திருக்கோயில் தண்டலை நீணெறி என அழைக்கப்படுகிறது. இங்கே சிவபெருமான் நீணெறியப்பர் என்ற திருப்பெயர்கொண்டு திகழ்கிறார். அறுபத்து மூவருள் அரிவாட்டாயநாயனார் வழிபட்டு உய்வடைந்த திருத் தலம் இது. இங்கே ஆறுமுகப் பெருமான் பன்னிருகரங்களுடன் இருதேவியர்சூழ விளங்குகிறார். "நிறுக்குஞ்சூதன" எனத் தொடங்கும் திருச்செந்தூர்த் திருப்புகழில் அருணகிரிநாதர் இத் தலத்தை "தண்டலை" என்று வைத்துப் போற்றுகிறார். இக் கோயில் அறநிலைய ஆட்சித்துறையின் நிர்வாகத்திலுள்ளது. இங்கே ஆண்டு தோறும் அரிவாட்டாயர் வரலாறு நாடகமாக நடிக்கப்படுகிறது.

### 4. திருக்களர்

தண்டலை நீணெறியை நினைத்த அருணகிரிநாதர் அதே திருச்செந்தூர்த் திருப்புகழில் திருக்களரையும் வைத்துப் போற்று கின்றார். திருத்துறைப்பூண்டி அருகிலேயே திருக்களரும் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. திருத்துறைப்பூண்டி மன்னார்குடி பேருந்து வழியில் சங்கந்தியருகே இத்தலம் உள்ளது. மன்னார்குடியிலிருந்து 13 கல். தருவனம், கற்பக வனம், பாரிஜாத வனம் முதலிய சிறப்புப் பெயர் கொண்ட இத்தலத்தில்அருள்மிகு அமுதவல்லியம்பிகை உடனுறைய அருள்மிகு பாரிஜாதவனேசர் திருக்கோயில்திகழ்கிறது. திருஞானசம்பந்தரும்திருநாவுக்கரசரும் பதிகம் பாடிப் பரவிய தலம் இது. இங்கே ஆறுமுகப்பெருமான் பன்னிருகரங்களுடன்மயில்மீதமர்ந்து விளங்குகிறார். அண்மையில்

குடமுழுக்குச் செய்விக்கப் பெற்று இத்தலம் புதுப்பொலிவோடு திகழ்கிறது இத்தலத்தில் 70ஆண்டுகட்கு முன்னர் விளங்கிய ஸ்ரீலஸ்ரீ வீரசேகரஞான தேசிக சுவாமிகள் அற்புதங்கள் பல நிகழ்த்தினார். அவர் திருமடமும் உள்ளது.

## 5. திருப்பறியலூர்

பழமுதிர்சோலையைப் பரவும்போது அருணகிரிநாதருக்குப் ''பறியல்'' என்றழைக்கப்படும் திருப்பறியலூர் நினைவிற்கு வருகிறது. ''ஆசைநாலு'' எனத்தொடங்கும் பழமுதிர்சோலைத் திருப்புகழில் ''பறியல்'' என்று இத்தலத்தை வைத்துப் போற்று கின்றார். திருப்பறியலூர் சிவபெருமான் அருளாடல்புரிந்த அட்ட வீரட்டத் தலங்களுள் ஒன்று. மாயூரத்திலிருந்து செம்பொனார் கோயில் அடைந்து அங்கிருந்து 2 கி–மீ சென்றால் இக்காலத்தில் பரசலூர் என அழைக்கப்படும் இத்தலத்தை அடையலாம் திருஞானசம்பந்தர் பதிகம்பாடிப் பரவிய தலம் இங்கேஅருள்மிகு இளங்கொம்பனையாள் உடனுறை அருள்மிகு தட்சபுரீசர் (வீரட்டேசர்) திருக்கோயில் திகழ்கின்றது. தக்கனைச்சங்கரித்த தலம். இங்கே எட்டுத்திருக்கரங்களுடன் வீரபத்திரர் விளங்கு கிறார். இத்தலத்தில் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு முருகவேள் விளங்குகிறார். இக்கோயில் தருமையாதீன நிர்வாகத்திலுள்ளது. இத்தலத்தருகே திருச்சம்பள்ளி குமரக் கோயிலும் திருவிடைக்கழி பாலசுப்பிரமணியசுவாமிகோயிலும் உள்ளன.

## 6. திருப்புறம்பயம்

'நிறுக்குஞ்சூதன' எனத்தொடங்கும் திருப்புகழில் ''புறம் பயம் அமர்வோனே'' என்று அருணகிரிநாதர் போற்றும் திருப்புறம்பயம் என்னும் இத்தலம் கும்கோணத்திற்கு வட மேற்கில் 8 கி. மீ. தொலைவில் உள்ளது. டவுன்பஸ் வசதிஉள்ளது. மண்ணியாற்றங்கரையில் இத்தலம் விளங்குகிறது. அருள்மிகு கரும்படு சொல்லி உடனுறைய அருள்மிகு சாட்சிநாதர் திருக் கோயில் இங்கு மாண்புடன் திகழ்கின்றது. இங்குள்ள பிரளயங்காத்த விநாயகருக்கு ஆண்டுதோறும் ஒரு ஆடம் தேனபிஷேகம் நிகழ்கிறது. தேவார ஆசிரியர்கள் போற்றிப் பரவிய இத்தலத்தில் பஞ்சமூர்த்தி மண்டபத்தில் முருகனைக் கையில்ஏந்தியநிலையில் அம்பிகை குகாம்பிகையாகத் திகழ்கிறாள். ஒரு முகமும் நான்கு கரங்களும் கொண்டு இருதேவியருடன்

நின்ற திருக்கோலத்தில் இங்கேமுருகவேள் எழுந்தருளியுள்ளார். திருவிளையாடற்புராணத்தில் இத்தலம் போற்றப்படுகிறது. வன்னியும், கிணறும் மடைப்பள்ளியும் சாட்சியாகக் கொண்டு வணிகப்பெண் ஒருத்திக்கு அவளுரிமை நாயகனுக்கு இத்தலத்தில் சிவபெருமான் திருமணம் செய்வித்ததைத் தலமான்மியம்பேசும். அதனால்தான் அவர் சாட்சிநாதர் என்று பெயர் கொண்டார். தல புராணம், உலா மாலை முதலிய பிரபந்தங்கள் உள்ளன. மதுரை திருஞானசம்பந்தர் ஆதீன நிர்வாகத்தில் இக்கோயில் அமைந்துள்ளது.

## 7. திருமருகல்

"உயிர்க்கூடு" எனத்தொடங்கும் பழனித்திருப்புகழில் 'திருமருகலை வைத்துப் போற்றுகிறார் அருணகிரிநாத சுவாமிகள். ஒரு பெண் அவளுக்கு முறையுள்ள மணமகனை மணக்கவிரும்பி அவனுடன் திருமருகல் வருகிறாள். ஆங்கே அரவுதீண்டி அவன் இறக்கவும திருமணம் ஆகாமையால் அவனைத் தீண்டாது புலம்பும் அப்பேதையைக்கண்டு இரங்கி, அத்தலத்திறகு வழிபட வந்த அருள் திருஞானசம்பந்தர், மருகலான் மலரடியைப்பாடி அவனை உயிர்ப்பித்து அப்பெண் திருமணத்தையும் முடித்து வைக்கிறார். இவ்வளவும் அருணகிரிநாதர் மனக்கண்முன் வருகின்றன போலும்!

"தமிழ்க்காழி மருதவனம் மறைக்காடு திருமருகல்" என்ற திருப்புகழில் தொடர்பாகக் காட்டுகிறார். நன்னிலத்தருகே கல் தொலைவில் திருமருகல் உள்ளது. திருவாரூரிலிருந்து டவுன்பஸ் வசதி உள்ளது. இத்தலத்தில் அருள்மிகுவண்டுவார்குழலியம்பிகை யுடனுய அருள்மிகு மாணிக்கவண்ணராகச் சிவபெருமான் திகழ் கிறா. சிறுத்தொண்டா மகன் சீராளன் பயின்ற பள்ளி இத் திருமருகலல் இருந்தது. இத்தலத்தில ஒருமுகமும் இரண்டுகரங் களும் கொணடு இருதேவியருடன் விளங்குகிறார் கந்தவேள். உற்சவர் வலலைநதிய வேலனாகத் திகழ்கிறார். விஷம்தீர்த்த விநாயகர் சந்நிதி உள்ளது. தேவாரச் சிறப்புடன் நகரத்தார் திருப்பணியும் கொண்ட சிறப்புடைய இத்தலத்தில் திருஞான சம்பந்தர் செட்டிப் பெண் திருமணத்தை நிகழ்த்துவித்தபோது வன்னி, வாழை, கிணறுஇவை சாட்சியாகநின்றன என்று இத்தல மான்மியம் கூறுகிறது. இத்தலத்தருகே திருச்செங்காட்டாஙகுடி, திருக்கண்ணபுரம் திருபபுகலூர் முதலிய தலங்கள் உள்ளன. அறநிலைய ஆட்சித்துறையின நிர்வாகத்தில் இக்கோயில் அமைந்துள்ளது.

8. தேவூர்

பழமுதிர்சோலைத் திருப்புகழில் ("ஆசைநாலு"....) "தெவூர்" என்று அருணகிரிநாதர் வைத்துப் போற்றும் தலம் தேவூர் ஆகும். கீழ்வேளூருக்குத் தெற்கே 3 கல் தொலைவிலுள்ள இத்தலத்திற்குத் திருவாரூரிலிருந்து டவுன் பஸ் வசதி உள்ளது. பஞ்சபாண்டவர் அஞ்ஞாதவாசம்செய்த தலம்இது. கோச் செங்கட் சோழர் கட்டிய மாடக்கோயில். இங்கே அருள்மிகு தேன்மொழியம்பிகை உடனுறை தேவபுரீசர் திகழ்கின்றார் கட்டு மலையில் வாழை தலவிருட்சமாகத் திகழ்வது அற்புதமாகும். இத்தலம் திருஞானசம்பந்தரும் மணிவாசகரும் போற்றிப்பரவிய பெற்றியது. ஒருமுகமும் நான்கு கரங்களும் கொண்டு மயிலுடன் நின்ற திருக்கோலத்தில் முருகவேள் எழிலுடன் இலங்குகின்றார். அறநிலைய ஆட்சித் துறையைச் சார்ந்த திருக்கோயில் இது.

இத்தலத்தருகே "கேடிலியை நாடுவர் கேடிலாரே" என்று திருநாவுக்கரசர் போற்றிய கேடிலியப்பர் கோயில் விளங்கும் கீழ்வேளூர் உள்ளது. இது முருகன் சிவபெருமானை வழிபட்ட தலமாகும். அஞ்சுவட்டத்து நாயகியின் அருட் கோயிலும் இங்கு உள்ளது. மற்றும் சிக்கல், எட்டுகுடி முதலிய முருகன் தலங்களும் இதனருகே தான் அமைந்துள்ளன.

தஞ்சை மாவட்டத்திலுள்ள ஏனைய திருப்புகழ் வைப்புத் தலங்களான திருக்கண்டியூர், திருச்சோற்றுத்துறை திருப்பழனம், திருவேதிகுடி ஆகியன "ஏழுதிருப்பதி" (சப்தஸ்தானம்) என்று அருணகிரிநாதர் போற்றிய திருப்புகழ்த்தலங்களுள் அடங்கும். அவற்றைத் "திருவையாறு" என்னும் தலத்துள் விரிவாக முன்னரே குறித்துள்ளோம். அங்கே கண்டுகொள்க.

## திருச்சிராப்பள்ளி மாவட்டம்

உறையூர்

சோழர் தலைநகரங்களில் ஒன்றாகத்திகழ்ந்த உறையூர் தற்போது திருச்சி நகரின் ஒரு பகுதியாக விளங்குகிறது. இங்கே திருமுக்கீச்சரம் என்று போற்றப்படும் அருள்மிகு காந்திமதி அம்பிகை உடனாகிய, அருள்மிகு பஞ்சவர்ணேசர் திருக்கோயில் உள்ளது. திருஞானசம்பந்தர் பாடியபதிகமும்மகாவித்வான் திரிசிரபுரம் மீனாட்சி சுந்தரம் பிள்ளைபாடிய தலபுராணமும் கொண்டதுஇத்தலம். இங்கேஒரு முகமும்இருகரங்களும்கொண்டு

இருதேவியருடன் விளங்குகிறார் திருமுருகன். திருச்சிராப்பள்ளிக்குரிய "பொருளின் மேற்பிரிய" எனத்தொடங்கும் திருப்புகழில் இத்தல முருகனைக் குருக்ஷேத்ரபுரேசா என்று வைத்து அருணை வள்ளல் போற்றுகிறார். குருகு = கோழி. குருக்ஷேத்ரம் = கோழியூர் = உறையூர். உதங்க முனிவருக்குப் பஞ்சவர்ணம் காட்டிய சிவபெருமான் விளங்கும் இத்தலம் சிறப்புச் சிறப்பு மிகுந்தது. சிவபெருமான் அருள்பெற்றகோழி, யானையைத் தாக்கும் சிற்பம் அற்புதமானது. அறநிலைய ஆட்சித் துறையினரால் இக் கோயில் நிர்வகிக்கப்படுகிறது. அருகில் நாச்சியார்கோயில் என்ற வைணவ திருத்தலம் உள்ளது. எல்லா இன்பங்களும் உறைந்து விளங்கும் இத்தலத்துள் உறையும் கந்தவேள் நம் உள்ளத்திலும் உறையவாழ்த்துவோம்.

## மதுரை மாவட்டம்

### 1. திருஏடகம்

நாளும் இன்னிசையால் தமிழ்பரப்பிய திருஞானசம்பந்தர் மதுரையில் தங்கி சொக்கலிங்கப் பெருமானை வழிபட்டுக் கொண்டிருக்கிறார். பாண்டிய மன்னன் சமண சமயச் சார்பு கொண்டு, சமணர் சூழ்ச்சிக்கு இறையாகி, திருஞானசம்பந்தர் திருமடத்திற்குச் சமணர் தீவைப்பதற்கும் உடந்தையாகிறான். திருமடத்தில் தீ பரவும் செய்தி கேட்ட திருஞானசம்பந்தர் "அத்தீ பையவே சென்று பாண்டியற்காகவே" என்று ஆணையிடப் பாண்டியன் வயிற்றில் வெப்புநோய் மிகுகின்றது. சமணரது குண்டிகைநீரும் மயில் தோகை மந்திரமும் நோயை மிகுவிக்கின்றது. மெதுவாக சைவச் சார்புடைய பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியார் திருஞானசம்பந்தரை வரவழைத்துமன்னன் உடலினின்றும் திருநீற்றுச் சிறப்பால் நோயகற்றியபின் சமணர்கள் திருஞானசம்பந்தரை வாதுக்கழைக்கின்றனர். முதலில் அனல் வாதம் நடைபெறுகின்றது. சமணர்கள் அஸ்திநாஸ்தி என்று எழுதிட்ட ஏடு அனலில் சாம்பலாகின்றது. திருஞானசம்பந்தர் தம் தேவாரச் சுவடியிலிருந்து திருநள்ளாற்றுத் திருப்பதிகமான "போகமார்த்த பூண்முலையாள்" எனத்தொடங்கும் பதிகத்தை அனலில் இட அது பச்சையாகவே பரமனருளால் சைவமே மெய்ச்சமயம் என நாட்டிநின்றது. அடுத்துச் சமணர் புனல் வாதத்திற்கு அழைத்தனர்.

சமணர்கள் வைகைக் கரையில் கூடினர். பாண்டியனும் அவையோரும் வந்து சேர்ந்தனர். சிவஞானமுண்ட புகலி வேந்தரான திருஞானசம்பந்தப் பிள்ளையாரும் அடியார்சூழ எழுந்தருளினர். சமணர் 'அஸ்திநாஸ்தி' என்று எழுதி வைகையில் இட்டனர். அவ்வோலை அவர்களை நட்டாற்றில் விட்டுவிட்டு விரைந்து வைகையால் அடித்துச் செல்லப்பட்டது. திருஞான சம்பந்தர், 'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்,' என்று தொடங்கும் திருப்பாசுரத்தை அருளிச்செய்து அதனை வைகையில் இட்டனர்.

"திருவுடைப் பிள்ளையார்தந் திருக்கையால் இட்டஏடு
மருவுறும் பிறவியாற்றில் மாதவர் மனஞ்சென்றுற்போல்
பொருபுனல் வைகை யாற்றில் எதிர்ந்துநீர் கிழித்துப்போகும்
இருநிலத் தோர்கட்கெல்லாம் 'இதுபொருள்' என்று காட்டி"

எம்பிரான் சிவனே எல்லாப் பொருளும் என்றெழுதும்ஏட்டில்
தம்பிரான் அருளால் வேந்தன் தன்னைமுன் ஓங்கப்பாட
அம்புய மலராள் மார்பன்அநபாயன் என்னுஞ் சீர்த்திச்
செம்பியன் செங்கோ லென்னத் தென்னன்கூன் நிமிர்ந்ததன்றே

பெரியபுராணம்: திருஞானசம்பந்தர் புராணம் 846-47.

ஏடு வைகையில் எதிர்த்துச் சென்றது. மன்னன் கூனும் (உடற்கூனும் உளக்கூனும்) நிமிர்ந்தது. கூன்பாண்டியன் நின்றசீர்நெடுமாறநாயனர் ஆயினர். எதிர்த்துச் சென்ற ஏடு மதுரையிலிருந்து 12 கல் தொலைவில் சென்று ஆற்றின் ஓரம் நின்றது. குலச்சிறையார் குதிரைமீது விரைந்து சென்று அதனைப் பணிந்து எடுத்து வந்தார். திருஞானசம்பந்தர் விட்ட ஏடு இவ்வாறு நின்ற இடமே-புனிதத்தலமாகி 'திருஏடகம்' என்ற பெயர் பெறுவதாய்றறு. சிவபெருமானது பெருங்கருணையைக் காட்டும் இத்தலத்தில் இறைவன் ஏடகநாதர் என்ற திருப் பெயருடன் கோயில் கொண்டுள்ளார். வடமொழியில் 'பத்திரிகா பரமேஸ்வரர்' என்றழைக்கின்றனர். இறைவி: ஏலவார்குழலி (சுகந்தகுந்தளாம்பாள்)

மதுரையிலிருந்து சோழவந்தான் செல்லும் சாலையில் இத் தலம் உள்ளது. திருச்சி மதுரை இரயில்பாதையில் சோழவந்தான் ரயில் நிலையத்திலிருந்து 3 கல் தொலைவில் இத்தலம் அடைதற் குரியது.

விஜயநகரமன்னர் திருப்பணி கொண்ட இக்கோயில் கவின்மிகு கலையழகுடன் திகழ்கின்றது. சுவாமி கோயில் பிராகாரத்தில் வடமேற்கு மூலையில் மயில்மீது அமர்ந்து வள்ளி தெய்வானையுடன் ஷண்முகநாதர் திருக்கோயில் கொண்டுள்ளார் மூலவர் அருள் கொழிக்கும் அற்புதத்திருவுருவமாகும். மயிலின் முகம் வடக்கு நோக்கி உள்ளது.

உற்சவ முருகனே ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு வள்ளி தெய்வானையுடன் நின்ற கோலத்தில் விளங்குகின்றார். திருக்கோயில் காலை 6-30 மணிமுதல் 12 மணிவரையிலும் பிற்பகல் 5 மணி முதல் 8-30 மணி வரையிலும் திறந்துள்ளது.

இத்திருக்கோயிலில் ஆண்டு முழுதும் திருவிழாப்பொலிவு தனிச்சிறப்பாகும். குறிப்பாக முருகப் பெருமானுக்கு மாதக் கார்த்திகைகளில் மயில்மீது வீதியுலாவும், வைகாசிவிசாகம் ஸ்கந்தசஷ்டி, கார்த்திகை திருவிழாக்களும் மிகச்சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றது.

'ஏடு எதிர்ஏறிய திருவிழா' ஆவணிபௌர்ணமியன்று கொண்டாடப்பெறுகின்றது

இத்தலத்தில் பிரம்மதீர்த்தம் என்ற திருக்குளம் உள்ளது. இதில்மூழ்கிநியமமுடன் ஏடகநாதரைவழிபடுவோர் சித்தபிரமை நீங்கி இன்புறுவது இன்றும் கண்கூடு. வைகைநதியும் இங்கு ஓர் புண்ணியப்புனலாகும். பிரம்மன், வியாசர், பராசுரர், குசகேது திருஞானசம்பந்தர் ஆகியோர் இத்தலத்தை வழிபட்டதாகத் தலமான்மியம் பேசும். தலவிருட்சம்: வன்னி

இக்கோயில் திருஞானசம்பந்தர் வரலாற்றுத் தொடர்பு டையது. திருஞானசம்பந்தரை முருகனாகவே கண்டு பாடிய ஸ்ரீ அருணகிரிநாதர் இத்தலத்தையும் குறிப்பிட்டுப் பாடியுள்ளதில் வியப்பில்லை. நமக்குக்கிடைத்துள்ள திருப்புகழ்களில் இத் தலத்தினை வைப்புத்தலமாகப்பாடிய திருப்புகழே கிடைத் துள்ளது. க்ஷேத்திரக்கோவை திருப்புகழில்

"செந்தில் ஏடகம் வாழ் சோலையங்கிரி"

(கும்பகோண...)

எனவரும் தொடர் செந்திலையடுத்து ஏடகம் வைத்திருப்பதையும் ஏடகத்தையடுத்து அதனருகே விளங்கும் பழமுதிர்சோலை

(அழகர் கோயில்) குறிப்பிடப்பெறுவதையும் கண்டுணர்தல் வேண்டும். ஏடகமுருகனை அருணகிரிநாதர் பாடிப்பரவிய திருப்புகழ்ப்பாக்கள் நமக்குக்கிட்டாமல் போனது துர்ப்பாக்கியமே, கிடைத்த பாடல்களைத்தான் நாம் படிக்கின்றோமா? அது வேறு விஷயம்.

திருஏடகம் ஊர் சிறியது. கோயிலுக்கருகில் உணவுச்சாலை ஒன்றுண்டு. கோயில் அறநிலையத்துறை ஆட்சியின் கீழ் உள்ளது. கலையழகும் கல்வெட்டுச்சிறப்பும் வரலாற்றுச்சிரும் மிக்க திருஏடகம் நம்மை வணங்கி இன்புற அழைக்கின்றது.

## 2. திருவாதவூர்

திருவாசகத்துக்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார் என்பது ஆன்றோர் அனுபவம். திருவாசகத்தை அருளிய மணிவாசகப் பெருந்தகை அவதரித்த தலம் திருவாதவூர் ஆகும். ஆகையால்தான் மணிவாசகரைத் திருவாதவூரர் என்றே அழைக்கலாயினர். வரகுண பாண்டியனின் முதலமைச்சரா யிருந்து, திருப்பெருந்துறையில் சிவபெருமானால் நூல் காட்டி ஆட்கொள்ளப் பெற்று, சிவப்பணியில் தன்னை மறந்து, மன்னன் ஆணையின்படி குதிரை வாங்கச் சென்ற பணியை மறந்து பின்பு பெருமான் திருவருளால் நரிகளெல்லாம் பரிகளாக்கி மதுரை அடைய வைகையில் வெள்ளம் வர பெருமான் பிட்டுக்கு மண் சுமந்து, பாண்டியனால் பிரம்படி பட்டு, இறுதியில் மணிவாசகராகி மாண்புடன் இவ்வையகம் உய்யத் திருவாசகமும் திருக்கோவையாரும் அருளி தில்லையம்பலவன் திருவடி சேர்ந்த பரம ஞானியான அப்பெருந்தகை பிறந்த மண்ணை நாம் தொழ வேண்டுமல்லவா!

மதுரையிலிருந்து 23 கி. மீ. தொலைவிலுள்ள இத்தலத்தை அடைய பஸ் வசதிகள் உண்டு. மதுரை–மேலூர் பஸ் சில திருவாதவூர் வழியே செல்கின்றன. மதுரையிலிருந்து சிம்மக்கல் சென்று அங்கிருந்தும் திருவாதவூரை அடையலாம்.

வாதபுரம், சமீரணபுரம், பாண்டிய பட்டினம், வயிரவபுரம், சம்யாககானம் என்றெல்லாம் பெயர் கொண்ட இத்தலத்தில் சிவபெருமான் திருக்கோயில் மிகப் பெரியதாக விளங்குகின்றது. இறைவன் திருமறை நாயகர் எனவும், இறைவி ஆரணவல்லி எனவும் வழிபடப் பெறுகின்றனர்.

கோயிலின் வடக்குப் பிராகாரத்தில் வள்ளி, தெய்வயானை யுடன் மயில்மீது அமர்ந்து ஒரு முகமும் நான்கு கரமும் கொண்டு முருகவேள் தனி சந்நிதியுடன் விளங்குகின்றார். சுவாமி கோயிலுக்குச்செல்லும்போது ராஜகோபுரத்தை அடுத்து முதல் வாயிலில் ஒருமுருகன் விளங்குகின்றார். ஒருமுகமும் நான்குதிருக் கரங்களும் கொண்டு தனியே விளங்குகின்றார். மஹாமண்டபம் செல்லும்வாயிலில் இறைவனின் இடப்புறம்-வள்ளி தெய்வயானை யுடன் ஒருமுகமும் நான்குகரங்களும் கொண்டு முருகவேள் விளங்குகின்றார்.

வடக்குப்பிராகாரத்தில் எழுந்தருளியுள்ள சுப்பிரமணிய சுவாமியே பிரதானமுருகனாக இங்கு சிறப்பிடம் பெறுகிறார். கலையழகுடன் சிரித்த முகங்கொண்டு-மயிலின்தோகை அவருக்கு வலப்புறமும், மயிலின்முகம் அவருக்கு இடப்புறமும் அமைய அற்புதமாகத் திகழ்கின்றார். "மோதியிறுகி" எனத்தொடங்கும் விராலிமலைத் திருப்புகழில் இத்தலத்தை வைத்துப்பாடுகிறார் அருணகிரிவள்ளல். திருக்கோயில் காலை 6 மணிமுதல் 12 மணி வரையிலும் மாலை 5 மணிமுதல்8 மணிவரையிலும்'வழிபடுவோரை அழைக்கின்றது.

பிரம்மதீர்த்தம்- பிரம்மாவினால் உண்டாக்கப்பட்டது: பைரவரால் ஏற்படுத்தப்பட்ட பைரவதீர்த்தமும், கபிலரால் ஏற்படுத்தப்பட்ட கபிலதீர்த்தம் என்ற கிணறும்-ஆக இம் மூன்றும் இத்தலத்தின் புண்ணியப்புனல்கள். இவையன்றி சிவ தீர்த்தம், விஷ்ணுதீர்த்தம், வாயுதீர்த்தம், அக்னிதீர்த்தம் என்ற நான்கும் சேர்த்து ஏழுதீர்த்தங்கள் இங்கே குறிப்பிடப் பெறுகின்றன. தலவிருட்சம்; மகிழமரம்.

திருமால், பிரமன், அக்னி, வாயு, கௌதமர், கபிலர் பைரவர். இயமன், சனி, அரஜை, நாதசர்மா ஆகியோர் இங்கு வழிபட்டுப் பேறுபெற்றனர்.

கபிலரைப்பற்றியிருந்த வீரஹத்திதோஷம் இவ்வாதவூர் எல்லையை அணுகியதும் விலகி ஓடியது.

மணிவாசகர் பிறந்த இடத்தில் அவருக்கெனத் தனிக் கோயில் உள்ளது. மூலவர் அழகுமிக்கத் திருவுருவம்.

ஆவணிமூலம் பிட்டுத்திருவிழாவிற்கு இங்கிருந்து மணிவாசகர் மதுரைக்கு எழுந்தருளுகின்றார்.

இத்தலப்பெருமானை வழிபட்ட திருமால் அருகிலுள்ள திருமோகூரில் காளமேகப்பெருமாளாக எழுந்தருளியுள்ளார்.

இவ்வூரில் உணவுவிடுதி உள்ளது. கலியாணமண்டபம் உள்ளது. சிறுகிராமமாக இன்று விளங்கியபோதிலும் அன்று வாதவூரரை வழங்கிய வள்ளன்மைமிக்கது. இத்தகு சிறந்த தலத்தினை அருணகிரிநாதசுவாமிகளின் திருப்புகழில் வைப்புத் தலமாக நாம் காண்கின்றோம். இத்தலத்திற்கு அவர்பாடியருளிய திருப்புகழ்ப்பாக்கள் நமக்குக்கிடைக்காமற் போயிருக்கக்கூடும் எனவும் எண்ணத்தோன்றுகின்றது.

மதுரை திருக்கோயிலின் நிர்வாகத்தின் கீழ் இத்தலம் விளங்குகின்றது.

## திருநெல்வேலி மாவட்டம்

### திருநெல்வேலி

திருநெல்வேலி மாநகரில் விளங்கும் அருள்மிகு காந்திமதி அம்பிகை உடனுறையும் சுவாமி நெல்லையப்பர் திருக்கோயில் தொன்மைச் சிறப்புடைய பெருந்தலமாகும். தாமிரவருணிக் கரையிலமைந்த இத்தலம் ஐந்து (நடராசர்) சபைகளில் ஒன்றான தாமிரசபையாகும். தம் நிவேதனத்துக்காக அந்தணர் ஒருவர் பிச்சையேற்றுக்கொண்டுவந்த நெல்லை வெயிலில் உலர்த்த பெருமழையால் வெள்ளம் வந்தபோது இறைவன் வேலிக்கட்டிக் காத்தருளியதலம்; ஆதலின் திருநெல்வேலி என்றபெயர் வந்தது.

இறைவன்: நெல்லையப்பர், வேணுவனநாதர், இறைவி: காந்திமதியம்மை. அகத்தியர், திருமால், பிரமன் பூசித்ததலம்.

பாண்டிநாட்டில் திருஞானசம்பந்தர் பதிகம் பெற்றதலம் இது.

இங்கே ஆறுமுகநயினார் என்ற திருப்பெயருடன் முருகன் விளங்குகின்றார். இவர் மயில்மீது எழுந்தருளி வீற்றிருப்பதை நாற்புறமும் சுற்றிவந்து தரிசனம் செய்யலாம் ஒரேகல்லில் ஆறுமுகமும் பன்னிருகரங்களும் கொண்டு மயில்மீதமர்ந்த அற்புதத்திருக்கோலம் இது. இருபுறமும் வேடமங்கையும் வேழ மங்கையும் விளங்குகின்றனர். தெற்குபார்த்த சந்நிதி.

உற்சவர் ஆறுமுகநாயனார் அம்பாள் கோயில் உள் பிராகாரத்தில் விளங்குகிறார்.

காமிகாகமமுறையில் ஆறுகால வழிபாடு தினமும் நடைபெறுகிறது.

ஆண்டுமுழுவதும் திருவிழாக்கோலம் பூண்டுள்ளது இக்கோயில்.

தாமிரபரணி ஆற்றில் சிந்து பூந்துறை, கருவுறுமாறிகுளம் (அம்பாள் கோயில் பின்புறம்) பொற்றுமரைக்குளம் முதலியன புண்ணியப்புனல்களாகும்.

மூங்கில் தலவிருட்சமாகும்.

திருப்புகழ் வைப்புத்தலம் இது. தலபுராணம் உள்ளது.

அறநிலைய ஆட்சித்துறையினரால் நிர்வாகம் செய்யப் படுகிறது.

உணவுவிடுதிகள், தங்கும் விடுதிகள் இவ்வூரில் உள்ளன.

திருக்குருக்குத்துறை முருகன் கோயிலும், ஜங்ஷன் சாலைக் குமரன் கோயிலும் இத்தலத்தருகிலுள்ள பிறமுருகன் கோயில்களாகும்.

இக்கோயில் சிற்பச்சிறப்பும், கல்வெட்டுச்சிறப்பும் மிக்கது கண்டுகளிக்கவேண்டிய ஒன்று.

## இராமநாதபுரம் மாவட்டம்

*சிவகாசி:* இத்தலம் க்ஷேத்திரக்கோவை திருப்புகழில் குறிப்பிடப்பெறுகிறது.

தனுக்கோடி: தனுஷ்கோடி என்னும் இத்தலம் இராமேஸ்வரம் அருகிலிருந்த தீவு. சில ஆண்டுகட்கு முன்பு கடலால் கொள்ளப்பட்டது. இதிலிருந்த திருவுருவங்கள் இராமேஸ்வரம் கோயிலில் உள்ளன. ''உயிர்கட்கு'' என்று தொடங்கும் பழனித்திருப்புகழில் இத்தலத்தை வைத்துப் பாடுகிறார் அருணகிரிவள்ளல்.

## ஜெகநாதம்

ஒரிஸ்ஸா மாவட்டத்திலுள்ள பூரி ஜெகன்னாதம் என அழைக்கப்படும் ஜெகன்னாதம் திருப்புகழ் வைப்புத்தலமாகும். க்ஷேத்திரக்கோவை திருப்புகழில் இத்தலத்தை வைத்து அருணகிரிநாதர் போற்றுவார்.

**கண்டி**

ஸ்ரீலங்காவில் கண்டி மாவட்டத்தில் கண்டியில் (நாத தேவாலே) சிவன்கோயில் உள்ளது. கண்டிப்பெரகராவில் பங்கு கொள்கின்ற நாததேவாலே என்பது சிவன்கோயிலே ஆகும். கண்டிப்பெரகராவில் பங்குகொள்கின்ற ஏனைய திருக்கோயில்கள் வருமாறு: (1) நாததேவாலே; (2) விநாயகர் தேவாலயம் (3) பத்தினிதேவாலயம் (4) கதிர்காம தேவாலயம் (5) விஷ்ணு தேவாலயம்.

கண்டி: கண்டின்புறத்தக்க நகரங்களில் ஒன்று. இது பௌத்த சமயத்தவர்களுக்குப் புனிதயாத்திரைத் தலமாகத் திகழ்வதுபோன்றே சைவர்களுக்கும் புனிதமானது. திருப்பரங் குன்றத்திருப்புகழில் ("சந்ததம்பந்த் ..") அருணகிரிவள்ளல் பாடும்போது

"செந்திலங் கண்டிக் கதிர்வேலா
தென்பரங் குன்றில் பெருமாளே"

என்று வைப்புத்தலமாகக் கண்டியைப் அழகு நகரமாக போற்றுவது கருதத்தக்கது.

ஸ்ரீலங்காவிலுள்ள சிவாலயங்கள் பற்றிய அரிய குறிப்பு கொண்ட "சிவராத்திரிச்சிறப்பு" என்ற தமிழ்நூல் இலங்கை இந்துசமயத்திணைக்களம் (பிரதேச அபிவிருத்தி அமைச்சு) சார்பில் 1981ல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இது, ஈழத்துத்திருப்பதிகளை வழிபட விழைவோர்க்குப் பெருந்துணை புரியும்.

# நன்றியுரை

"அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்" சென்று அருமையான திருப்புகழ்த் தலப்பயணம் செய்து இன்புற்ற உங்கள் அனைவரையும் முருகன் திருவருள் முன்னின்று காத்தருள வேண்டுகின்றோம்.

இவ்வரிய தொகுப்புநூல் இனிதே உருவாக உதவிய அனைத்து அன்பர்களுக்கும் நன்றியுடையேம். பெரும்பாலான திருப்புகழ்த் தலங்களை நேரில் சென்று வழிபட்டுத் தகவல் சேகரிக்கப் பெற்றுள்ளது. அன்பர் பலர் முன்வந்து பல திருப்புகழ்த் தலச் செய்திகளைத் தந்துதவினர். மதுரை மாவட்டத் தலங்கள் அனைத்தையும் பற்றிய அரிய செய்திகளை செந்திலடிமை திரு. C. குமாரசுவாமி அவர்களும் நன்னிலம் வட்டத் தலச்சிறப்புகளைத் திரு. S. சந்திரசேகரன் (ஸ்டேட் பாங்க் அலுவலர்) அவர்களும், குடந்தை சுற்றிய தலங்களைப் பற்றி வலையப்பேட்டை திரு. R. விஜயராகவன் அவர்களும், அனுப்பிய மாண்பினை என்னென்பது! திருவிடைக்கழி தொண்டர் பேராசிரியர் ஆ. மங்கலமுடையார் பல நல்லுதவிகள் புரிந்துள்ளார். நம் தலப் பயணங்களில் உடன்வந்த திரு S. நாராயணசுவாமிக்கும், செய்திகளை வகைப்படுத்துவதில் உதவிய திருமதி. சுந்தரவல்லி கிருஷ்ணன் B. A., அவர்களுக்கும் நாம் கடப்பாடுடையேம். கீழ்வரும் பெருமக்கள் ஒல்லும்வகையால் இந்நூலுக்குச் செய்திகளைத் தந்துதவியுள்ளனர்.

திருவாளர்கள் அருணாசலம் M. S. சென்னை V. இரகுநாதன்-நெய்வேலி: சி. இராமச்சந்திரன்பிள்ளை-வேதாரணியம்; M. R. இளங்கோவன்-மருத்துவக்குடி: 2. ஜெ. கணபதிசுந்தரக் குருக்கள்-உத்திரமேரூர்; S கணேசக் குருக்கள்-எருக்கத்தம்புலியூர்; V. கணேசக் குருக்கள்-வழுவூர் கந்தசாமிக் குருக்கள்-சிறுவாபுரி; V. கல்யாணசுந்தரம்-காசி: கருணாகரன்-ஓலவக்கோடு; N. கிருஷ்ணமூர்த்தி-திருவையாறு; C. குமாரசுவாமி-வண்டலூர்! S. கோதண்டராமன்-திருநள்ளாறு; A. சண்முகம்-குறட்டி S. சந்திரசேகரன்-விராலிமலை; P. சந்திரசேகரன்-திருவண்ணாமலை

உ. சந்திரசேகரக் குருக்கள்-நெடியமலை; J. சந்திரசேகரக் குருக்கள்-திருவாமாத்தூர்; A. சந்திரசேகர சிவாச்சாரியார்-திருவக்கரை; சந்தானக் குருக்கள்-மாயூரம்; S. சங்கர்-மாயூரம்; தி. சுவாமிநாதக் குருக்கள்-வல்லக்கோட்டை; T. சபாபதி தேசிகர்-திருவாலங்காடு; சித்சபாநாதப் பிள்ளை-திருக்கூடலையாற்றூர்; R. சுப்பிரமணியக் குருக்கள்-வலிவலம்; C. A. சுப்பிரமணிய ஐயர்-சிதம்பரம் M. சுப்பிரமணியஐயர்-ஒரத்தநாடு; சுப்பிரமணிய குருக்கள்-புகழிமலை; சுந்தரேஸ்வரக் குருக்கள்-இலுப்பைப்பட்டு; N. சுந்தரக் குருக்கள்-கன்னபுரம்; A K சுப்பராயகவுண்டர்; A. D முத்துக்குமாரகிருஷ்ணன் வட்டமலை; சுப்பிரமணிய சிவாச்சாரியார்-ஸ்ரீ முஷ்ணம்; சுந்தர ஜயந்தீசுவரன்-வள்ளியூர்; N. செந்தில் நாதன்-இரும்பறை; K. சேனாபதிக் குருக்கள்-பாக்கம்; சோமாஸ்கந்த குருக்கள்-கடம்பர் கோயில்; S. சேகர்-அண்டக்குடி; செல்வவிநாயகன்-ஐயம்பேட்டை; K. S. தட்சிணாமூர்த்தி குருக்கள்-திருக்கோவிலூர்; சு. தண்டபாணிக் குருக்கள்-திருப்பழுவூர்) அ. தேவசேனாபதி குருக்கள்-தேவிகாபுரம்; நடராஜ குருக்கள்-மாடம்பாக்கம்; K. S. நடராஜ கவுண்டர்-ஊதியூர்; S. K. நடராஜ குருக்கள்-தென்சேரிகிரி; M. நடராஜ குருக்கள்-உத்தரகோசமங்கை; M. பலராமன்-தேவனூர்; J. பாலசுப்பிரமணியம்-சேயூர்; N. பொன்னையாப்பிள்ளை-திருநெல்வேலி; V. பொன்னுசாமி-வெள்ளிகரம்; A V. S மணிக்குருக்கள்-திருவத்திபுரம்; K. மணி-சென்னை 39; மணிக்குருக்கள்-திருவாண்டார் கோயில்; T. மார்க்கபந்து குருக்கள் - திருத்தணிகை; சு. முத்து மாசிலாமணி பட்டாரகர்-வேதாரணியம்; N. முத்தையா-ஆத்மஜோதி-நாவல்பட்டி-ஸ்ரீ லங்கா, S. முருகன்-கம்பம்; N. மூர்த்தி-சேலம்; D. ரமணிக் குருக்கள்-காவனூர்; V. ராஜகோபாலன்-வாய்மேடு; K. S. லெட்சுமிநாராயணன் கீழ்வேளூர்; P. S. லெட்சுமண முதலியார்-பூம்பறை; யோகவனக் குருக்கள்-திருவையாறு; K. P. வேல்முருகன்-கடலூர்; விசூர் மாணிக்கம்-மாகும்பாதி; V. வேங்கடராமன்-சென்னை 5; தா. பா. வேங்கட சுப்பிரமணியம்-திருவாடுதுறை: V. விசுவநாதன்-சேலம்; T. S. வாசுதேவன்-சென்னை 5; விசுவநாதக் குருக்கள்-வள்ளுவக்குடி; வைத்தியநாதக் குருக்கள்-திருப்பூந்துருத்தி; K. S. வைத்தியநாத சிவாச்சாரியார்-கொண்டல்: T. S. ஜம்புநாதக் குருக்கள்-குமாரவயலூர்; ஜயசீலன்-சென்னை; ஜானகிராமன்-சிக்கல்; P. S. சீனிவாசன்-கரூர்; V. ஸ்ரீராம்-கொல்லம்: திருமதி. ஜானகி ராமகிருஷ்ணன்-இலஞ்சி.

இவர்களுக்கெல்லாம் வள்ளி காந்தன் வான் கருணை சுரக்க வேண்டுகின்றோம்,

சில தலங்களை உறுதி செய்வதில் அஞ்சலக அலுவலர்கள் பெரிதும் உதவினர். திருக்கோயில் நிர்வாக அதிகாரிகள் இந்நூல் வெளிவரப் பெருந்துணை புரிந்ததோடு நிழற்படங்களும் தந்துதவி யுள்ளனர். அறநிலையத்துறை அலுவலர்கள் அனைவரது பூரண ஒத்துழைப்பும் இந்நூல் மலரக் காரணமாயிற்று என்றால் மிகையில்லை அவர்கள் திருவடிகட்கு எம் பணிவார்ந்த நன்றி.

அரிய சில நிழற்படங்களை இந்நூலுள் சேர்க்குமாறு தந்துதவிய பாண்டிச்சேரி பிரெஞ்சு இன்ஸ்டிடியூட் ஆல் இண்டாலஜி நிர்வாகிகளுக்கு நம் நன்றி உரித்தாகும்.

இந்நூல் உருவாகும்போது ஊக்கமளித்த அன்பர்கள் பலருள்ளும் திரு. T. A. கிருஷ்ணமூர்த்தியை நினைவு கூர்கின்றோம். அறிஞர்களும் அருளாளர்களும் இந்நூல் உருவாவது கண்டு ஆசியும் பாராட்டும் தெரிவித்து உற்சாகப்படுத்தி வந்தனர். இவ்வாறு இந்நூல் உருவாகி வெளிவர உதவிய தமிழ் உள்ளங்கள் அனைத்திற்கும் எம் மனம் மொழி மெய்களால் பணிவுடன் நன்றியஞ்சலி செலுத்துகின்றோம்.

இந்நூல் எழுதும்போது உதவிய நூலகங்கள், நூல்கள்—அவற்றின் ஆசிரியர்கள் அனைவருக்கும் நம் நன்றி என்றும் உரியது. பட்டியல் தனியே இணைக்கப்பட்டுள்ளது.

இந்நூல் அச்சியற்றி வருங்காலை படிவங்களைத் திருத்தும் போது பேருதவி புரிந்த திருமதி லட்சுமி ராமசேஷனுக்கு எம் நன்றி.

இந்நூலைச் சிறப்பாக வெளிக்கொணர முன்னின்று ஆற்றுப் படுத்திய நம அறநிலையத்துறை ஆணையா திருமிகு. U. சுப்பிரமணியன் I. A. S. அவாகளுக்கு மீண்டும் நன்றிகூறி திருஏரகப்பெருமான் (சுவாமிமலை) திருக்கோயில் நிர்வாகிகள் மிகுந்த ஆர்வத்தோடு இந் நூலைத் தமிழ்கூறும் நல்லுலகத்திற்கு தலையாய முருகனருளுக்குத் நிலையாய மகுடமாகச் சூட்டி மகிழ முன்வநத பெற்றியை நன்றியுடன் போற்றுகின்றோம்.

செந்தமிழ்க் கந்தன் தண்ணருளால் தரணியெங்கும் அன்பும் அமைதியும், இன்பமும பெருகி—அனைத்து மக்களும் சகலசெல்வ யோகமிக்கப் பெருவாழ்வில் சுகித்திருக்க வள்ளி குஞ்சரி மணாளன் திருவடிகளைச் சிந்தித்து வந்தித்துப் பணிகின்றோம்.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே!

— கந்தரநுபூதி

முருகா சரணம்! ஆக்கியோன்

# உதவிய நூல்கள்-நூலகங்கள்

## தமிழ் நூல்கள்


1. அகில இந்திய ஆலய வழிகாட்டி (1956)-காஞ்சிபுரம்.
2. அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்-தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை.
3. அருணகிரிநாதர் 600-வது ஜயந்திமலர்-புதுடெல்லி.
4. ஆலய தரிசனம்-பரணீதரன்.
5. ஆறுமுகன் அருள்கொழிக்கும் தலங்கள் அறுபத்தாறு-புலவர் P. R. நடராஜன். இலங்கைக் காட்சிகள்-கி. வா. ஜகந்நாதன்.
6. ஊரும் பேரும்-பேராசிரியர் ரா. பி. சேதுபிள்ளை.
7. கலைக்களஞ்சியம்-தொகுதிகள்.
8. கும்பாபிஷேக மலர்கள்.
9. கொங்குநாடு-புலவர் குழந்தை.
10. கொங்குநாட்டுக் கோயில்கள்-சிவகலை-மு. சுப்பையா
11. சிவஸ்தல மஞ்சரி-வ. த. சுப்பிரமணிய பிள்ளை.
12. தமிழ் இலக்கிய வரலாறு-தொகுதிகள்-மு. அருணசலம்.
13. தமிழ்நாடு கிராமங்கள் அகரவரிசைப் பட்டியல்-தமிழ்நாடு அரசு.
14. திருக்கோயில் வரலாறுகள்.
15. திருப்புகழ் உரைநூல்-தொகுதிகள்-திருமுருக. கிருபானந்த வாரியார்.
16. திருப்புகழமிர்தம் தொகுதிகள்-திருமுருககிருபானந்த வாரியார்.
17. தினமணிசுடர்-அனுபந்தங்கள்.
18. தென்னிந்தியகோயில்சாசனங்கள்-சை. சி. நூ. கழகம்.
19. மாவட்ட வரலாறு-தொகுதிகள்-சோமலெ.
20. முருகவேள் பன்னிரு திருமுறை-6 தொகுதிகள்-தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை.
21. வேங்கட முதல் குமரி வரை-தொகுதிகள்-தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான். பன்னிரு திருமுறை தொகுதிகள்.

## ஆங்கில நூல்கள்

1. *EpigraPhica India-Volumes.*
2. *Post office guide-Tamilnadu, Pondicherry and Kerala-P. & T Dept*
3. *Saint Arunagirinatha-Swami Anwanandha.*
4. *South Indian Inscriptions- Volumes.*
5. *Temples of Tamilnadu-(Census of India:*1961 *vol. ix)-9 Books.*

## நூலகங்கள்

1. கீழ்த்திசைச் சுவடிகள் நூல்நிலையம்-சென்னை.
2. சரஸ்வதி மஹால் நூல்நிலையம்-தஞ்சாவூர்.
3. சென்னைப் பல்கலைக்கழக நூல்நிலையம்-சென்னை.
4. சிவகுருநாதன்செந்தமிழ்நூல்நிலையம்-கும்பகோணம்.
5. தமிழ்நாடு ஆவணக் காப்பகம்-சென்னை.
6. மறைமலையடிகள் நூல்நிலையம்-சென்னை.
7. மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சா. நூல் நிலையம்-திருவான்மியூர்-சென்னை.
8. *Dar Hammarshjots Library* - வலையப்பேட்டை-கும்பகோணம்.

# இடம் விளங்காத தலங்கள்

1. அத்திக்கரை: இதனைத் தணிகைமணியவர்கள் கந்தர்வக்கோட்டை அருகிலமைந்தது என்பார். நாம் ஆய்வு செய்தவரையிலும் இது தெரியவரவில்லை. இத்தலம் கேரளாவில் இருக்க வாய்ப்புள்ளது.

2. இந்தம்பலம்;

3. எழுகரைநாடு: இதனைக் கி. வா. ஜ - திருச்செங்கோடு என்பார். இதுவும் ஆய்வுக்குரியது. நாமக்கல் அருகிலுள்ள தேவார வைப்புத்தலமான ஏழூர் இது என்பாருமுளர்.

4 ஞானமலை: சென்னைக் கீழ்த்திசைச்சுவடிகள் நூலகத்தின் ஞானகிரீசுரர் வண்ணம், ஞானம்பிகைமாலை என்னும் சுவடிகள் உள்ளன ஆனால் அதற்குரிய தலம் புலப்பட்டிலது.

5. தனிச்சயம்: தணிகைமணி இதனை மதுரைக்கருகிலுள்ள தனிச்சயம் என்பார். ஆனால் இத்தலத்திருப்புகழில் (1) பச்சிமதிசைக்குள் உத்தமத்தனிச்சயத்தினில் (2) கொங்கிற் தனிச்சயம் என வருபவை. இத்தலம் கொங்குநாடு அல்லது கேரளத்திலோ இருக்கக்கூடும்.

6. பிள்ளையார்பட்டி: தணிகைமணி இதனைக் குன்றக்குடியருகிலுள்ள பிள்ளையார்பட்டி என்பார். ஆனால் அதுமலைத்தலம் அன்று. கர்நாடகத்தில் இத்தலம் இருக்க வாய்ப்புள்ளது.

7. மாதானை: "கோடான" என்னும் பொதுத்திருப்புகழில் "மாதானையாறுமுகப்பெருமாளே" எனவருவது கண்டு மாதானை என்பது ஒரு தலமாக இருக்க வாய்ப்புள்ளது. உஞ்சேனைமாகாளம் எனவரும் தாண்டகத்தில் திருநாவுக்கரசர் மாதானம் என்னும் தலத்தைக் குறிப்பிடுகிறார். இருப்பினும் இடம் விளங்கவில்லை.

8. வைரவிவனம்:

மேற்கண்ட தலங்கள் பற்றிய இருப்பிட விவரங்களைத் தெரிவித்துதவினால் அடுத்தபதிப்பில் நன்றியுடன் இணைக்கப் பெறும்.

# அருள்மிகு சுவாமிநாத சுவாமி திருக்கோயில் சுவாமிமலை.

## வழிபடுவோர் வசதிகளும் கட்டணங்களும்.

### கட்டணங்கள்

தங்கரதப் புறப்பாடு. ரூ. 350.

நித்தியபூசைக் கட்டளை ரூ. 2500.

சிறப்பு விருந்தினர் குடில்கள் 3.

ஒவ்வொன்றுக்கும் நாள் வாடகை. ரூ. 50.

சிறப்பு விருந்தினர் அறைகள் 9.

ஒவ்வொன்றுக்கும் நாள் வாடகை ரூ. 10.

திருமணக் கட்டணம் ரூ. 50.

திருமணக் கூடங்கள் 3.

ஒவ்வொன்றுக்கும் நாள் வாடகை. ரூ. 100.

### மேற்கொள்ளப்பட்டுள்ள திட்டங்கள்

1. வழிபடுவோர் வசதிக்கென, நான்கு வீதிகளையும் ஆலய நிதியிலிருந்து ரூ 2½ லட்சம் செலவில் செப்பனிட்டுத் தார்ச்சாலைபோட அரசு ஆதரவுடன் வேலை துவக்கப்பட்டுள்ளது.

2. வழிபடுவோர் வசதிக்கென, நான்கு வீதிகளிலும் ரூ. 20,000 செலவில் சோடியம் ஆவி விளக்குகள் நான்கு பொருத்தப்பட உள்ளன.

3. ரூ. 27,000 செலவில் முடியிறக்கு மிடத்தருகே குளியலறைகள் கழி வறைகள் கட்டப்பட உள்ளன.

4. ரூபாய் இரண்டு லட்சம் செலவில் புதிய திருமண மண்டபமும் கட்ட ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது.

### சமுதாயப் பணிகள்

இத்திருக் கோயிலின் சார்பில் கீழ்க்கண்ட நிறுவனங்கள் இயங்குகின்றன.

1. அன்பு இல்லம் (55 மாணவர்கள்)

2. நாதசுர, தவில் பயிற்சிக்கல்லூரி, (40 மாணவர்கள்)

3. தேவாரப் பாடசாலை (20 மாணவர்கள்)

இத்திருக்கோயிற்பணிகளில் பங்குகொள்ள விரும்புவோர்: செயல் அலுவலர், அருள்மிகு சுவாமிநாத சுவாமி திருக்கோயில், சுவாமிமலை, கும்பகோணம் வட்டம். 612302. என்ற முகவரியில் தொடர்புகொள்ள வேண்டுகிறோம். தொலைபேசி எண்: 21. (சுவாமி மலை.)

இங்ஙனம்,

குழ. இரத்தின சபாபதி,
மேலாளும் அறங்காவலர்,

K. கல்யாணம் M. A.,
செயல் அலுவலர்.

தங்க. இராஜேந்திரன்,
கிருஷ்ண மூர்த்திப் பிள்ளை,
பொன். தங்கராசு.
அறங்காவலர்கள்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 29 | வடமொழிப் புலமையுடையவராயினும் | இருமொழிப் புலமையுடைய வராயிருந்து |
| 469 | 1 | அருணகிரிநாதர் பரவிய ஆறுமுகன் தலங்கள் என்றவரியை நீக்கிவிடவும் | |

உ

# அருணகிரிநாதர் அடிச்சுவட்டில்

## பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| 7 | 29 | வடமொழிப் | இருமொழிப் |
| 22 | 28 | பெருமாளோ | பெருமாளே |
| 25 | 19 | அனல் | ஆனல் |
| 36 | 32 | திருருக்கோலத்தில் | திருக்கோலத்தில் |
| 64 | 5 | பச்சைத்திரிவுமை | பச்சைத்திருவுமை |
| 71 | 13 | விருதம் | விரதம் |
| 117 | 14 | செய்யார் | திருவத்திபுரம் |
| 120 | 16 | ஒடுக்கட்துச் | ஒடுக்கத்துச் |
| 131 | 20 | பிராத்தனைகள் | பிரார்த்தனைகள் |
| 132 | 9 | குற்றா றக் | குற்றமறக் |
| 147 | 22 | ளராக | உளராக |
| 163 | 8 | தொவிலுள்ளது | தொலைவிலுள்ளது. |
| 172 | 4 | திருவரவத்துறை | திருவரத்துறை |
| 186 | 2 | மொழீக்குத் | மொழிக்குத் |
| 233 | 21 | சுகுந்த | சுகந்த |
| 235 | 31 | சினவ | சிவை |
| 243 | 33 | உய்யக் கொண்டான்) | (உய்யக் கொண்டான்) |
| 279 | 28 | இனியது | இனியக |
| 280 | 5 | விமோட்சனம் | விமோசனம் |
| 308 | 7 | அர்க்த | அர்த்த |
| 311 | 21 | தில்லையாளி | தில்லையாடி |
| 322 | 10 | அல்வாளினைப் | அவ்வாளினைப் |
| 453 | 1 | பாாதாரய்ரயா | பாராய்தாராய் |
| 449 | 23 | பெறுகினர் | பெறுகின்றனர். |

